# நூல் முகம்

உலகம் உய்யும்பொருட்டுப் பரம்பொருளாகிய பகவான் "சாதுக்களைக் காப்பாற்றுவதற்கும், துஷ்டர்களைச் சிட்சிப்பதற்கும்; தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்" என்று உறுதி கூறியுள்ளார். அந்தப் பிரதிக்ஞையின்படி கம்ஸன் முதலியவர்களை நாசஞ்செய்யவும், பாகவதர்களைப் பாதுகாக்கவும் ஸ்ரீ மகாவிஷ்ணு யதுகுலத்தில் ஸ்ரீகிருஷ்ணன் என்ற திவ்ய நாமதேயத்துடன் அவதரித்துச் செய்த அற்புத லீலைகளையும், பகவானுடைய அனந்த கல்யாண குணங்களையும் வர்ணிப்பது ஸ்ரீமத் பாகவதம். இந்தப் புராண காவியத்தில் ஸகல உபநிஷத்துக்களாலும் நிரூபிக்கப்படும் பரமாத்மா, புண்ணியக் கதைகள் மூலம் வர்ணிக்கப்பட்டிருக்கிறார். பக்தியின் உச்சநிலையையும், அதனால் பெறப்படும் பேரின்பத்தின் தன்மையையும் இதில் அழகுபெறக் கூறப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீமத் பாகவதம் வியாஸ மகரிஷியினால் சுகருக்கு உபதேசிக்கப்பட்டது. சுகர் பரீக்ஷித்து மகாராஜனுக்குச் சொன்னார். அப்பொழுது ஸூதர் இக்கதையைச் சுகருடைய அநுமதியின்பேரில் தெரிந்துகொண்டார். பிறகு அவர் நைமிசாரண்யத்தில் வசிக்கும் சௌனகர் முதலிய மகரிஷிகளுக்குக் கூறினார்.

ஸ்ரீமத் பாகவத கிரந்தம் ஸம்ஸ்கிருதத்திலிருப்பதால் அனைவருக்கும் பயன்படத்தக்கதாக இல்லை. அம்மொழி தெரியாத ஆண் பெண் இருபாலரும்

இலகுவாய்ப் படித்தறியும்பொருட்டு இம்மொழி பெயர்ப்பு எளிய, இனிய வசன நடையில் வெளியிடப் படுகிறது.

வடமொழிச் சுலோகங்களின் எண்கள் ஒவ்வொரு அத்தியாயத்திலும் கொடுக்கப்பட்டு, அந்தச் சுலோகங்களின் பிரதிபதப் பொருள் தமிழில் அளிக்கப்பட்டிருப்பது இம்மொழிபெயர்ப்பின் தனிச் சிறப்பாகும்.

ஆஸ்திகர் அனைவரும் இந்தப் பாகவத நூலை வாங்கி வாசித்து, இம்மை மறுமைப் பயன்களைப் பரிபூர்ணமாகப் பெறுவார்களாக !

கும்பகோணம்,
ஸர்வதாரி-ஹு
வைகாசி மீ 17உ

S. சிவராமகிருஷ்ணன்

தசம ஸ்கந்தத்தின் மகிமை

ஸ்ரீமத் பாகவதம் 12 ஸ்கந்தங்கள் கொண்டது. இவற்றுள் சிரோமணியாக விளங்குவது பத்தாவது ஸ்கந்தமே. இந்த ஸ்கந்தத்தில்தான் ஸ்ரீ கிருஷ்ண னுடைய அவதாரம், மாயா லீலைகள், கோபிகளின் உத்தம பக்தி முதலியன விவரிக்கப்படுகின்றன. ஆதலால் இந்தத் தசம ஸ்கந்தம் ஒவ்வொரு குடும்பத் திலும் இருக்கவேண்டியது அவசியமாகும்.

காந்த சக்தி வாய்ந்த கண்ணனின் திவ்விய சரிதத்தைப் படிப்பதால் மனதுக்கு மகிழ்ச்சி விளைவ துடன் இம்மையில் சந்தானம், சம்பத்து முதலிய அஷ்ட ஐசுவரியங்களும் ஏற்படுமென்பதும், மறுமை யில் பேரின்பம் கிட்டுமென்பதும் பெரியோர்க துணிபு.

பிரசுரகர்த்தர்

## யோகி சுத்தானந்த பாரதியார் அருளிய

# முன்னுரை

—()—

தேனூறு பாலும் கண்டும், தீங்கனி ரசமுங் கூட்டி
வானவர் அமுதும் பெய்து, வானிலாத் தென்றல் வீச,
மேனகை அரம்பை மாதர் மென்கரம் உதவ நாளும்
பானஞ்செய் சுகமும் தெய்வ பக்தியின் சுகம தாமோ ?

—பாரத சக்தி

மானிட வாழ்க்கையின் இரண்டு பயன்கள் பக்தி, பரோபகாரம். எந்தப் பரமாத்மனில்லாமல் இந்த உடலும் உலகும் வாழ்வும் உயிர்ப்பும் நடக்காதோ, அந்தப் பரமாத்மனை உள்ளத்தில் அன்பு செய்யும் பக்திதான் உலகில் மிகச் சிறந்த இன்பமாகும். ஆத்ம உன்னதிக்கு, பக்தியே உள்ளம்; ஞானமே மூளை; கைங்கரியமே உடல்போலும். மனிதன் முதலில் அடையவேண்டியது அன்புச் செல்வம்; அன்பினால் அருளும், அருளினால் அறிவும், அறிவினால் இன்பமும் படிப்படியாக உண்டாகும். உலகில் பேரின்பமடைந்த நாரத, வால்மீக, வியாச, சுகமுனிவர்களெல்லாரும் பக்தி ஸாதனத்தையேகொண்டு பரமானந்தம் அடைந்தார்கள்.

நமது நாட்டு மகான்களும் மகா கவிகளும் பக்தி ஸாதனத்திற்காக அற்புதமான கலைக் கோயில்களை எழுப்பினார்கள். அவை அழியா அமரானந்தக் கோயில்கள்— ஸ்ரீமத் ராமாயணம், பாரதம், பாகவதம் ஆகிய மூன்று மாபெரு நூல்களும் ஒப்புயர்வற்ற அருட் செல்வங்கள். இவை மூன்றையும் படித்தால் வேத ஆகம புராண இதிஹாஸ கலா ஞானங்களெல்லாம்,

தர்மார்த்த காமமோக்ஷ புருஷார்த்தங்களெல்லாம் [illegible] அடையலாம். இவற்றுள் ஸ்ரீமத் பாகவதம் தனிச் சிறப்புடையது:

மகவினைத் தந்தை கூவ, மரமெலாம் "ஏன் ஏன்" என்ன
அகண்டபரம் மைக்கி யத்தில் அதுமய மாக வாழ்ந்த
சுகமுனி பரீட்சித் திற்குச் சொல்லிய கண்ணன் காதை
தகவுடன் கேட்டார் உள்ளம் சச்சிதா னந்த மாமே.

—பாரத சக்தி

வரிக்கு வரி பக்தி ரசம் பொழியும் ஸ்ரீமத் பாகவதம் சுதாசாகரம், கலைக் கற்பகம், கவிச் சோலை. பாகவதத்தில் எல்லாப் புராணங்களும், எல்லா தர்ம சாஸ்திரங்களும், எல்லா யோக மார்க்கங்களும் அடங்கும். அதன் வாக்கிற்கு மந்திர சக்தி யுண்டு. ஸப்தாகம் நடக்கும் இடங்களில் அமர்ந்தாலே மனம் நிம்மதி பெறும்.

ஸ்ரீ ராமன், கண்ணன் ஆகிய இருவரும் வேதக் கலையின் உயிர்வடிவாக விளங்கிய ஆதர்ச புருஷோத்தமர்கள். ஸ்ரீ ராமன் தர்ம வீரன்; கண்ணன் பூர்ண யோகி. இந்த இருவரைவிடப் பெரிய அவதார புருஷர்களை உலகம் இதுகாறும் கண்டதில்லை; இனியும் காணமுடியாது. பாரதநாட்டுக் கவிவரர்கள் அனைவரும் இந்த இருவருக்கே கலைமுடி சூட்டினர். வால்மீகி, வியாசர், காளிதாஸன், கம்பர், துளஸீதாஸர், ஆழ்வார்கள், கபீர், மீரா, துகாராம், நரஸீமேதா, ரவிதாஸ் போன்ற அருட்கவிகள் ஸ்ரீ ராம கிருஷ்ண வைபவங்களையே மனமுருகப் பாடினர். ஸ்ரீ கிருஷ்ணனை நினைத்தாலே மனதில் இன்ப அலைகள் பொங்கி எழுகின்றன:

மண்ணிலம் வாழ யோக மாயையால் அவதரித்துப்
புண்ணியங் காத்துத் தீய புல்லுருவிகளைப் போக்கி,
எண்ணரும் அன்பர்க் கின்பம் ஈந்தவன், உலகம் போற்றும்
கண்ணனும்; அவன்செயல்கள் கரும்பினும் இனியதாமே!

--பாரத சக்தி

பாரத தர்மம் சீர்குலைந்து, நமது சமுதாயம் தீயரின் சத்திக்குத்திற்கு உள்ளாகி இரத்தக் கண்ணீர் வடிக்கும் இந்தக் காலத்தில், பாகவதம் ஒரு புதிய சக்தியைத் தரும். முற்காலத்தில் உலகை அதர்ம வாளால் அடக்கிக் கொடுமை செய்த கம்ஸ துரியோதனாதிகளைவிடக் கொடிய அரக்கர் இந்தக் காலத்தில் முளைத்திருக்கிறார்கள். அக்காலம் பூதேவி பசுவுருக் கொண்டு பரந்தாமனுக்கு எப்படி முறையிட்டாளோ, அதேமாதிரியே இந்தக் காலத்திலும் முறையிடுகிறாள். மறுபடியும் மனித சமுதாயம் பக்தியும் பரோபகாரமுமாக வாழ்ந்து, புருஷார்த்த சித்தி பெறும் வழி பாகவதத்தில் நிரம்பி நிலவுகிறது. நமது நாடு மறுபடியும் பிருந்தாவனம்போல் அழகும், துவாரகாபுரிபோல் சாந்த கம்பீரமும் பொலியவேண்டுமானால், சுகர் பரீக்ஷித்திற்கு அருளிய பாகவதத்தைப் படித்து நடக்கவேண்டும். பாகவதத்திலேயே ராமாயணம், பாரதம் முதலிய மற்ற புராணக் கதைகளும் வருகின்றன. ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மனை ராஜஸூய யாகத்திற்கு வரவேற்று தர்மபுத்திரன் துதித்தான்.

"வீரம் பூத்திடும் வெற்றி கனிந்திடும்
கூர வெம்பகை கோத்துடன் வீழ்ந்திடும்;
பார மைதிப் பயனுறும் உன்னருள்
கோரின் எங்கள் குறைகள் விலகுமே."

--பாரத சக்தி

கண்ணனை அன்புசெய்து, அவனது திருவிளையாடல்களை உள்ளூன்றிக் கற்று, கருத்தறிந்து நடந்தால், பாரத தர்மமும், பாரத குலமும் மறுபடியும் வீர தீர பராக்ரம சங்கமாக எழுந்து நிற்கும். இன்று நாம் பெற்ற சுதந்திரம் வேற்றுமைச் சுதந்திரம், பிரிவினைச் சுதந்திரம். கண்ணன் திருவுளத்தைப் பின்பற்றினால் ஒற்றுமைச் சுதந்தரம், உலகளாவிய சக்தி பெற்ற திவ்ய சுத்த சமத்துவ சுதந்திரத்தைக் காணலாம். "நமே பக்த ப்ரணச்யத்" (என் அன்பர் அழியார்) என்று கண்ணன் தந்த அபய வசனம் இன்றும் நம்மைத் தைரியப்படுத்துகிறது :

'வானிலே அடங்கும் வெளி போலே
வையம் வாழுயிர் என்னில் அடங்கும்.
யானென் மாயையால் ஆக்கி யளிப்பேன்;
யானி லாதிலை யாங்கணும் எஃதும்;
ஈனப் பாவியும் உய்வனென் அன்பால்
எனை நினைந் தெனக்கே யனைத்தும் செய்,
ஆணை! அன்பன் அழிவுற மாட்டான்;
அன்பனின் பொறுப் பென்பொறுப் பாகும்.'

—பாரத சக்தி

என்று கண்ணன் பாகவதோத்தமருள் பேசுகிறான். பாகவதத்தை ஓதும் பக்தன் பகவத் கிருபையால் ஸ்வராஜ்ய ஸாம்ராஜ்ய சித்திகளை அடைவான்.

இத்தகைய பாகவதம் பிரம்மஞானத்திலிருந்தெழுந்த கற்பகம் போன்றது; பன்னிரண்டு ஸ்கந்தங்களைக் கிளைகளாகக்கொண்டது; முன்னூற்றுமுப்பத்தைந்து அத்தியாயங்களைக் கவடுகளாகக்கொண்டது. பதினெட்டாயிரம் சுலோகங்களை இலைகளாகக் கொண்டது; ஸாது சுப சரித்திரங்களை மலர்களாகக்

கொண்டது; சச்சிதானந்தத்தையே கனிகளாகக் கொண்டது. ஆத்மானந்தத்தையே கனிரசமாகக் கொண்டது.

இத்தகைய அற்புதமான புண்ணிய நூலை எல்லா பாஷைகளிலும் மொழிபெயர்த்து உலகம் ஓதிப் பயன் பெறுகிறது. தமிழில் நல்ல மொழிபெயர்ப்பு வேண்டுமென்பதைத் தமிழர் அறிவர். அந்தத் தேவையை வித்வன்மணியான இஞ்சிக்கொல்லை, ஸ்ரீ ரா. சிவராம சாஸ்திரிகள் நிறைவேற்றியிருக்கிறார். இவர் புகழ் பெற்ற வடமொழிப் புலவர்; தெளிவான தமிழும் எழுத வல்லவர். பாகவதத்தைப் பாராயணம் செய்தவர்; பரம பக்தர். அவர் மொழிபெயர்த்துள்ள பாகவதம் தசம ஸ்கந்தத்தைப் படித்துப் பெருமகிழ்ச்சியடைந்தேன். தசம ஸ்கந்தம் பூர்வார்த்தம் உத்தரார்த்தம் ஆகிய அனைத்தையும் இப்புலவர் தெள்ளிய நீரோடைபோன்ற தமிழில், உள்ளத்தை அள்ளும் உருக்கமுடன் தந்திருக்கிறார். இவர் உடல் இப்போது இல்லை; எனினும், இந்த பாகவதத் தமிழ் மூலம் இவர் நம்முன் சிரஞ்ஜீவியாக வாழுகிறார்.

இத்தகைய பாகவதத்தைச் சிரத்தையுடன் வெளியிட்டுத் தமிழுலகிற்கு அளிக்க முன்வந்துள்ள ஸ்ரீ மஹாபாரதம் அச்சகத்தாருக்கு உலகம் நன்றிசெய்யக் கடமைப்பட்டிருக்கிறது. சித்த சுத்தி உண்டாக வேண்டுமானால், ஆத்ம சக்தியும் அருளுணர்ச்சியும் ஒற்றுமையும் வளரவேண்டுமானால் நம்மவர் ஸ்ரீமத் பாகவதம் போன்ற ஸத் க்ரந்தங்களை மிகுதியாக வாங்கிப் படிப்பது கடமையாகும்.

“𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌗𑌵𑌤𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌤𑌿𑌲𑌕𑌂 𑌯𑌦𑍍𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌾𑌨𑌾𑌂 𑌧𑌨𑌮𑍍”

“ஸ்ரீமத்பாகவதம் புராண திலகம்; யத்வைஷ்ண வாளும் தனம்”

“...... 𑌪𑍁𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌗𑌵𑌤𑌂 𑌶𑍁𑌭𑌮𑍍 । 𑌧𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌸𑌾𑌧𑌕𑌂 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃

“புராணஸ்து ஸ்ரீமத் பாகவதம் சுபம். தர்மார்த்த காம மோக்ஷாணாம் ஸாதனஸ்யான் ந ஸம்சயஃ”

“பாகவதமே புராண திலகம்; விஷ்ணு பக்தர்களுக்குப் பெருஞ்செல்வம்,” “சுப க்ரந்தம், தர்மார்த்த காம மோக்ஷ சித்தி தரக்கூடியது என்பதிற் சந்தேகமில்லை” என்று பெரியோர் புகழ்கிறார்கள்.

இத்தகைய பாகவதம் தசம ஸ்கந்தத்தை வாங்கிப் படிப்பவர்கள், மற்ற ஸ்கந்தங்களையும் ஆவலாக எதிர் பார்த்து வாங்கிப்படிப்பார்களாக!

இந்த அச்சகத்தார் மஹாமஹோபாத்யாய ஸ்ரீமத் ம. வீ. இராமானுஜாசாரியார் மொழிபெயர்த்த மஹா பாரதத்தையும் வெளியிட்டு வருவதைக் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

ஈசன் திருமொழியை எவ்வினர்தாம் சொன்னாலும்
ஆசையுடன் கேட்ப தறிவு.

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே
[ஹரே.

ஓம் தத்ஸத்!

புது யுக நிலையம்,
புதுச்சேரி,
ஸர்வதாரி௵ வைகாசி௴ 2௳
15—5—'48

சுத்தானந்த பாரதி.

# பொருளடக்கம்

## பாகம் 1

# பாகம் 2



ராஸக்ரீடை

# ஸ்ரீமத் பாகவதம்

## ஸ்கந்தம் - 10

### அத்யாயம்—1

### கம்ஸன் தேவகியின் குழந்தைகளைக் கொன்றது

1—13. அதனைக் கேட்ட பரீக்ஷித்து மஹாராஜன், சுகரை நோக்கி, "ஓ முனிகளுக்குள் சிறந்தவரே! சந்திர வம்சம், ஸூர்ய வம்சம் ஆகிய இவைகளின் விஸ்தாரத்தையும், அந்த வம்சங்களில் பிறந்த அரசர்களுடைய மிகவும் அற்புதமான சரிதத்தையும் வர்ணித்தீர். பின்னும் தர்ம ஸ்வபாவமுள்ள யதுவின் வம்சத்தையும், அவருடைய சரிதத்தையும் விசேஷமாகச் சொன்னீர். அந்த யதுவின் குலத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு பூர்ணாம்சமாக அவதரித்துச் செய்த லீலைகளைச் சொல்லவேண்டும். ஸகல ஜகத் ஸ்வரூபியும் அந்தர்யாமியாக இருப்பவருமான பகவான், யதுவின் வம்சத்தில் அவதரித்து எந்த எந்த லீலைகளைச் செய்தாரோ, அந்த அந்த லீலைகள் எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்லவேண்டும். அந்த பகவானுடைய சரிதத்தை ஒன்றிலும் பற்றுதலில்லாத முக்தர்களும் கானஞ் செய்கிறார்கள். அந்தச் சரிதமானது கேட்பவர்களுக்கு ஸம்ஸார துக்கத்தை நிவர்த்திக்கக்கூடிய மேலான மருந்தாக இருப்பதால், மோக்ஷத்தை யடையவேண்டுமென்ற விருப்பமுள்ள ஜனங்களும் அதனை ஆதரிக்கிறார்கள். பின்னும் அந்தச் சரிதமானது

கேட்பவர்களுடைய காதிற்கு இனிமையாக இருப்பதால் ஸம்ஸாரிகளான ஸாமான்ய ஜனங்களும் அதனை விரும்புகிறார்கள். உத்தமச் சுலோகராகிய பகவானுடைய சரிதத்தைக் கேட்கவேண்டுமென்ற விருப்பம் எவனுக்குத்தான் உண்டாகமாட்டாது? பசுக்களைக் கொல்லும் குரூரமான நடையுள்ள மிருகத மூடனுக்கு ஒருகால் பகவானுடைய குணங்களைக் கேட்க விருப்ப முண்டாகாம லிருக்கலாம். மேலும், என்னுடைய பிதாமஹர்களாகிய (பிதாவின் பிதா) பாண்டவர்கள் திமிங்கலம் முதலிய ஜல ஜந்துக்களால் பயங்கரமான ஸமுத்திரம்போல பீஷ்மர் முதலிய சூரர்களால் நிறைந்த கௌரவ ஸைன்யத்தை சிரமமின்றி எந்த ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய ஸஹாயத்தால் ஜயித்தார்களோ, என் மாதாவின் கற்பத்திலிருக்கும் எனது சரீரம் அச்வத்தாமாவின் அஸ்திரத்தால் எரிக்கப்படும்பொழுது, சரணமடைந்த என் மாதாவின் வேண்டுகோளின்படி எந்த பகவான் சக்ராயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு கற்பத்திலிருக்கும் என்னை காப்பாற்றினாரோ, அவருடைய சரிதங்களைச் சொல்லவேண்டும். (பகவானுடைய சரிதத்தைக் கேட்பதில் மற்ற ஜனங்களைவிட எனக்கு விசேஷ பாத்தியம் உண்டு என்று கருத்து.) அந்தப் பகவான் ஸகலப் பிராணிகளுடைய ஹிருதயத்தில் அந்தர்யாமியாக வசிக்கிறார். மேலும், அவர் அந்தர்முகர்களான யோகிகளுக்கு மோக்ஷத்தையும், விஷயங்களில் ஆசையுள்ள ஜனங்களுக்கு காலஸ்வரூபியாக இருந்து ஸம்ஸாரத்தையும் கொடுக்கிறார். அவர் மாயையால் மனிதனாக அவதரித்தவரே யன்றி, உண்மையில் மனிதனல்ல. நீர் ஆத்மாவின் உண்மையை உள்ளபடி அறிந்தவராகையால், அதனைச் சொல்வதற்கு நீரே வல்லவர். ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சரிதம் சுருக்கமாக முன்பு

ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டது. பின்னும் அதில், பலராமன் ரோஹிணிதேவியின் புத்திரன் என்றும், ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஸஹோதரனென்றும் சொல்லப்பட்டது. ஒரு புருஷன் ஒரே ஜன்மத்தில் இரண்டு ஸ்திரீகளின் கர்ப்பத்திலுண்டானான் என்பது எப்படிப் பொருந்தும்? ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவதரித்தவுடன் வஸுதேவருடைய கிருஹத்தை விட்டு ஏன் நந்தகோகுலஞ் சென்றார்? பக்தர்களிடத்தில் பிரீதியுள்ள அந்தப் பகவான் தம்முடைய பந்துக்களுடன் எவ்விடத்தில் வாஸஞ் செய்தார்? கோகுலத்தில் வஸிக்கும் பொழுதும், மதுரா நகரத்திலிருக்கும்பொழுதும் எதைச் செய்தார்? மாதாவின் ஸஹோதரனாகிய (அம்மான்) கம்ஸனை எதற்காகக் கொன்றார்? அம்மானை வதஞ் செய்வது உசிதமல்லவே. பின்னும் அந்தப் பகவான் எவ்வளவு ஸ்திரீகளைக் கல்யாணம் செய்துகொண்டார்? மனுஷ்ய தேகத்துடன் எவ்வளவு வருஷங்கள் பூமியில் வஸித்தார்? ஓ மஹரிஷியே! என்னால் கேட்கப்பட்டதும் கேட்கப்படாததுமான கிருஷ்ணனுடைய சரிதம் எல்லாவற்றையும், விஸ்தாரமாகச் சொல்லவேண்டும். நீர் எல்லாவற்றையும் அறிந்தவராகையால் உம்மைக் கேட்கிறேன். உம்முடைய தாமரை மலர் போன்ற முகத்திலிருந்து இடைவிடாமல் பெருகிவரும் ஸ்ரீ கிருஷ்ண கதையாகிய அமிருதத்தை நான் பானஞ் செய்துகொண்டு இருப்பதால் ஸஹிக்க முடியாத பசியும், தாஹமும் என்னை உபத்ரவிக்கவில்லை” என்று கேட்டார்.

14—26. ஓ சௌனகரே! இம்மாதிரியான அரசனுடைய நல்வார்த்தையை பாகவதர்களுக்குள் சிறந்தவரான சுகர் கேட்டு, அரசனைக் கொண்டாடி ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார். அது கலியின் தோஷத்தை

நிவர்த்திக்கக்கூடியது. எப்படியென்றால்,—"ராஜ ரிஷிகளுக்குள் சிறந்தவரான ஓ பரீக்ஷித் மஹாராஜ! ஸ்ரீ வாஸுதேவருடைய கதையைக் கேட்கவேண்டுமென்று த்ருடமான நிச்சயம் உமக்கு உண்டாகியிருப்பது மிகவும் மேலானது. அந்தப் பகவானுடைய கதையைச் சொல்லும்படி என்னைத் தூண்டின நீர், சொல்லுகிறவனாகிய நான், கேட்பவர்கள் ஆகிய மூன்று பெயர்களும் சுத்தர்களாகிவிடுகிறார்கள். அந்தப் பகவானுடைய பாதத்திலிருந்து உண்டான கங்கா ஜலமானது தன்னை தரிசிப்பவனையும், ஸ்நானஞ் செய்பவனையும், ஆசமனஞ் செய்பவனையும் பரிசுத்தப்படுத்தவில்லையா? முன்னொருகால் பூமியில் கர்வமுள்ள அனேக அரசர்கள் நிறைந்து இருந்தார்கள். அவர்கள் முன் ஜன்மத்தில் அஸுரர்கள். அவர்கள் பூமிக்கு விசேஷ பாரமாக இருந்தார்கள். அதனால் பூமி மிகவும் சிரமத்தை அடைந்து, பசு வேஷம் தரித்துக் கண்ணீரைப் பெருக்கி ப்ரம்மதேவரிடம் சென்று அவரைச் சரணமடைந்து தனக்கு நேர்ந்த துக்கத்தைத் தெரிவித்து அவருடைய பக்கத்தில் நின்றாள். அதனைக் கேட்ட ப்ரம்மதேவர் மற்ற தேவர்களுடனும் பரமசிவனுடனும் பூமி தேவியுடனும் திருப்பாற்கடல் சென்றார். அவ்விடத்தில் புருஷஸூக்தமென்ற மந்திரத்தைச் சொல்லி, ஸ்ரீ மஹாவிஷ்ணுவை ஸ்தோத்திரஞ் செய்தார். அந்த மஹாவிஷ்ணு ஸகல பிராணிகளுடைய சரீரத்தில் ஜீவஸ்வரூபியாகவிருந்து கர்மங்களைச் செய்பவர்; எல்லாவற்றையும் அடைந்தவராகையால் பூர்ணர். அப்படிப்பட்ட பகவானைத் துதித்து உத்திரவை எதிர்பார்த்து ஸாவதானராக நிற்கும் ப்ரம்ம தேவர், ஆகாசவாணியைக் கேட்டு தேவர்களை நோக்கி, "ஓ தேவர்களே, நான் சொல்வதைக் கேட்டு அந்தப்படி சீக்கிரமாகச் செய்யவேண்டும். பூமிக்கு நேர்ந்த

தாபத்தை பகவான் முன்னமேயே தெரிந்துகொண்டிருக்கிறார். அந்தப் பரமபுருஷன் வஸுதேவருடைய கிருஹத்தில் அவதரிக்கப் போகிறார். அவர் அவதரிப்பதற்கு முன்னமேயே, யது வம்சத்தில் நீங்கள் ஸ்திரீகளாக ஜனிக்கவேண்டும். தேவர்களுக்கும் தேவராகிய அந்தப் பகவான் தம்முடைய கால சக்தியால் பூமியின் பாரத்தைப் போக்கடித்துக் கொண்டு, எவ்வளவு காலம் பூமியில் வஸிக்கிறாரோ, அவ்வளவு காலம் நீங்களும் பூமியிலிருந்து அவரை பூஜிக்கவேண்டும். மேலும், அந்தப் பகவானுக்கு பிரியத்தைச் செய்யவேண்டி நாராயணனுடைய அம்சரும், ஸ்வதந்திரரும், ஆயிரம் முகங்கள் உள்ளவருமான ஆதிசேஷன், பகவானுக்குத் தமையனாக அவதரிக்கப் போகிறார். எந்த மாயையின் மஹிமையால் இந்த ஜகத் முழுவதும் மோகமடைந்து இருக்கிறதோ, அந்த விஷ்ணுவின் மாயையானது அவருடைய உத்தரவின்படி ஏதோ ஒரு காரிய நிமித்தம் பூமியில் அவதரிக்கப்போகிறாள்" என்று தேவர்களுக்கு ஆஜ்ஞாபனம் செய்து, பூமி தேவிக்கு ஸமாதான வார்த்தைகளைச் சொல்லி, தமது உலகம் சென்றார்.

27—55. அந்த ஸமயத்தில் சூரஸேனரென்ற அரசன் மதுரா நகரத்தில் வஸித்து அதைச் சார்ந்த தேசங்களையும், சூரஸேன தேசத்தையும் பரிபாலித்து வந்தார். அந்த மதுரா நகரமானது யதுவின் வம்சத்தில் பிறந்த அரசர்களுக்கு வாசஸ்தலமாக (ராஜதானி) இருந்தது. அந்தப் பட்டணத்தில் ஸ்ரீமந் நாராயணன் எப்பொழுதும் ஸான்னித்தியஞ் செய்துகொண்டிருக்கிறார். அந்த மதுரா நகரத்தில் ஒரு கால் சூரருடைய புத்திரராகிய வஸுதேவரென்பவர்

தேவகி யென்னும் பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொண்டு வதூகிருஹப்ரவேசத்திற்காக அவளுடன் ரதத்திலேறினர். அப்பொழுது உக்கிரஸேனருடைய புத்ரனுகிய கம்ஸனென்பவன் ஸஹோதரியான தேவகியி னிடம் பிரியத்தால் (சிறிய தகப்பன் பெண்) குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்து ஸாரத்யஞ் செய்தான். அந்த ரதத்தைச் சுற்றி சுவர்ண மயமான அநேக ரதங்கள் சென்றன. தேவகியின் பிதாவாகிய தேவகரென்பவர் பெண்ணிடத்தில் மிகுந்த அன்புள்ளவராகையால் சுவர்ண மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட நானூறு யானைகளையும், ஒன்றரை லக்ஷம் குதிரைகளையும், ஆயிரத்தெண்ணூறு ரதங்களையும் ஸ்திரீதனமாகக் கொடுத்ததுமின்றி, இருநூறு வேலைக்காரிகளையும் கொடுத்தார். அந்த வேலைக்காரிகள் யௌவன வயது உள்ளவர்கள்; நன்முக அலங்கரிக்கப்பட்டவர்கள்; அவர்களுக்கு வாஹனங் களும் கொடுக்கப்பட்டன. சங்கம், தூர்யம், மிருதங்கம், துந்துபி முதலிய மங்கள வாத்யங்கள் முழங்கின. இப்படி வஸுதேவர் தேவகியுடன் வீதியில் ஊர்வலம் வரும்பொழுது குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்து ரதத்தை நடத்தும் கம்ஸனை நோக்கி, அசரீரி வாக்கானது "ஓ மூடா! எவளை ஸஹோதரியென்று ப்ரீதியுடன் அழைத்துப்போகிருயோ, அந்தத் தேவகியின் எட்டாவது கர்ப்பமானது உன்னைக் கொல்லும்" என்று சொன்னது. கம்ஸனே இயற்கையில் துஷ்டன்; பாப கர்மத்தில் நோக்கமுள்ளவன்; போஜ குலத்தில் பிறந்தவர்களுக்குள் அதமன்; அப்படிப்பட்ட சுவபாவமுள்ள கம்ஸன் ஆகாச வாணியைக் கேட்டு, ஸஹோதரியான தேவகியின் தலை மயிரை ஒரு கையால் பிடித்து, மற்றொரு கையில் கத்தியை

யெடுத்துக்கொண்டு கொல்ல முயற்சித்தான். எல்லாராலும் வெறுக்கக்கூடிய காரியத்தைச் செய்பவனும், கொல்லும் சுவபாவமுள்ளவனும், வெட்கமில்லாதவனுமாகிய கம்ஸனை நோக்கி, மிகுந்த பாக்கியசாலியாகிய வஸுதேவர் நல்வார்த்தை சொல்ல ஆரம்பித்தார். எப்படியெனில்:— "நீர் சூரர்களால் சிலாகிக்கக்கூடிய குணங்களுள்ளவர்; போஜ வம்சத்தில் ஜனித்தவர்களுக்குக் கீர்த்தியை யுண்டு பண்ணுகிறவர்; அப்படிப்பட்ட நீர் ஸ்திரீவதஞ் செய்யலாமா? இவள் உமக்கு ஸஹோதரியல்லவா? அதிலும் இது விவாஹ காலமல்லவா? ஓ சூர! ஸகல பிராணிகளுக்கும் சரீரமுண்டாகும்பொழுதே மரணமும் உண்டாகிறது. ஆதலால் அந்த மரணம் இன்றைக்கு வருமோ, நூறு வருஷங்களுக்குப் பிறகு வருமோ தெரியவில்லை. எப்பொழுதாகிலும் மரணம் வருமென்பது நிச்சயம். (மரணம் வருமே யென்று பயந்து இவளைக் கொல்லுகிறேனென்று சொல்வது சரியல்ல. மரணம் நிவர்த்திக்கக்கூடியதல்லவென்று கருத்து.) ஜீவன் இந்த சரீரத்தை விடவேண்டிய ஸமயம் (மரணம்) நேரும்பொழுது, அவனுடைய கர்மத்திற்குக் கட்டுப்பட்டு, கர்மத்திற்கு அனுகுணமான வேறு சரீரத்தைப் பிடித்துக்கொண்டே, பழைய சரீரத்தை விடுகிறான். (இந்த சரீரம் போனபிறகு வேறு சரீரம் கிடைக்கிறதில்லையென்றால் பாபத்தைச் செய்தாவது, இந்த சரீரத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். இவன் விரும்பாமலிருந்தாலும், அவனுடைய கர்மத்திற்குத் தக்கபடி அவசியம் சரீரமுண்டாகிறதென்பது நிச்சயமாகையால், இந்த சரீர நிமித்தம் பாபத்தைச் செய்வது உசிதமில்லை யென்று கருத்து.) மனிதன் எப்படி ஒரு காலை பூமியில் ஊன்றிக் கொண்டு மற்றொரு காலை யெடுத்துவைத்து நடக்கிறானோ

அட்டையானது ஒரு திருணத்திலிருந்து மற்றொன்றுக்குச் செல்லும்பொழுது மற்றொரு திருணத்தைப் பிடித்துக் கொண்டே எப்படி முந்தியதை விடுகிறதோ, அதுபோலவே ஜீவன் வேறு சரீரத்தை அடைந்தே, முந்திய சரீரத்தை விடுகிறான். ஜீவன் அரசன் முதலியவர்களுடைய மேலான சரீரத்தை நேரில் பார்த்தும், இந்திரன் முதலிய தேவர்களுடைய சரீரத்தை சாஸ்திரங்களைக் கேட்பதாலும் தெரிந்துகொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட மனிதன் அந்த மேலான சரீரத்தை அடைய விரும்பி, அதன் ஸம்ஸ்காரமுள்ள மனத்தால், அதனையே தியானஞ்செய்கிறான். அப்பொழுது தன்மயனாகி (தேவ சரீரத்தை யடைந்தவன் போல் எண்ணிக்கொண்டு) இந்த சரீர ஞாபகமில்லாமலிருக்கிறான். இதுபோலவே, ஜாக்ரதவஸ்தையில் மேற்சொல்லியபடி பார்த்தும் கேட்டும் தெரிந்துகொண்டபடி அந்த சரீரத்தை ஸ்வப்னத்தில் பார்க்கிறான்; அதனைத் தன்னதாக பாவிக்கிறான்; அதன்பின் ஜாக்ரதவஸ்தையின் ஞாபகம் மாறிவிடுகிறது. பிராணிகள் வேறு சரீரத்தை அடைந்து முந்திய சரீரத்தை விடுவது மேற்காட்டியது போன்றதேயாம். மரணமடையும் ஜீவனுடைய மனமானது அதிருஷ்டத்தால் (கர்மத்தால்) தூண்டப்பட்டு எந்த சரீரத்தை விரும்புகிறதோ, ஐந்து பூதங்களாலேற்பட்ட அந்த சரீரத்தை ஜீவன் அடைகிறான். குளம் முதலியவைகளிலிருக்கும் ஜலத்திலும், எண்ணெய் முதலியவைகளிலும் சந்திரன், ஸூர்யன் முதலிய தேஜஸுகள் ப்ரதிபலிக்கின்றன. அவை அசையாமலிருக்கும்பொழுது, காற்றினால் ஜலம் அசைவதால் அசைவதுபோல எப்படித் தோன்றுகிறதோ, அப்படி ஜீவனும் இயற்கையில் ஜனன மரண மற்றவனாயினும், தன்னுடைய அவித்யையால் ஏற்பட்ட

சரீரங்களில் அபிமானம் வைத்து மோஹிக்கிறான். ஆன தால் ஒருவருக்கும் துரோஹஞ்செய்யக்கூடாது. அப்படிச் செய்தால் இவ்வுலகத்திலும் அரசன் தண்டிப்பான்; பர லோகத்தில் யமன் தண்டிப்பார். பிறருக்குக் கெடுதி செய்யாமலிருப்பவன் க்ஷேமமாக இருப்பான். ஓ தீனர்க ளிடத்தில் ப்ரீதியுள்ளவரே! இவள் உம்முடைய ஸஹோதரி; சிறு பெண்; தயை செய்யத்தக்கவள்; பெண்ணுக்கொப் பானவள்; ஆனதால் நல்ல ஸ்வபாவமுள்ள இவளைக் கொல்வது உசிதமில்லை" என்று ஸாமபேதங்களடங்கிய வார்த்தைகளைச் சொன்னார். அதைக் கேட்டும், மிகவும் கொடியவனாகிய அந்தக் கம்ஸன் அஸுரர்களை அனுஸரித்த வனாகையால், வஸுதேவருடைய வார்த்தையை ஒப்புக் கொள்ளவில்லை. அப்பொழுது கம்ஸனுடைய எண் ணத்தைத் தெரிந்துகொண்ட வஸுதேவர், அந்த ஸமயத் திற்குத் தக்கபடி செய்யவேண்டியதை, தனக்குள் பின் வருமாறு யோசிக்கலானார். எப்படியெனில்:—"மிருத்யு போன்ற இந்தக் கம்ஸனுக்கு நம்முடைய புத்திக்குத் தக்க படி உபதேசித்து, தேவகியை வதஞ்செய்யாமலிருக்கும் படி செய்கிறேன். அதையும் இவன் கேட்காவிடில் நம்மிடத்தில் குற்றமில்லை. இவளிடத்தில் பிறக்கும் புத்திரர்களை கம்ஸனிடம் கொடுப்பதாகச் சொல்லி இவளைக் காப்பாற்றுகிறேன். (இப்பொழுது உபேக்ஷிக்கக்கூடா தென்று கருத்து.) அப்படிச் செய்வது நியாயமாவென்றால் எனக்கு புத்திரர்கள் பிறந்து, அதுவரையில் இவனும் ஜீவித் திருந்தால், அப்படியே செய்வேன். வரும் காரியம் யாரால் அறியக்கூடியது! (எது நடக்கவேண்டியதோ அது நடக்கும்; எனக்குப் புத்திரர்கள் பிறக்குமுன் இவன் இறந்தால் ஒருவருக்கும் ஒன்றுமில்லை யென்று கருத்து.)

தெய்வத்தின் கதியை மீறுவதற்கு ஒருவராலும் முடியாது; ஸமீபத்தில் வந்த மிருத்யு (கம்ஸன்) திரும்பிப்போவான்; போனவன் சிலகாலங் கழித்து திரும்பியும் வரலாம். அதெப்படியெனில், காட்டில் தீப்பற்றிக்கொண்டு எரியும் பொழுது ஸமீபத்திலிருக்கும் மரங்களைவிட்டு வெகு தூரத்திலிருக்கும் மரங்களில் தீப்பிடித்துக் கொள்ளுகிறது. ஸமீபத்திலிருக்கும் மரங்களில் தீப்பிடிக்காமலிருப்பதற்கும், தூரத்திலிருக்கும் மரங்களை அக்னி எரிப்பதற்கும் அதிருஷ்டமே காரணம். வேறொன்றையும் காரணமாகச் சொல்ல முடியாது. அதுபோல ஸகல பிராணிகளும் ஜனிப்பதற்கும் (சரீரத்தை அடைவதற்கும்), மரிப்பதற்கும் (சரீரத்தை விழுப்பது) அவர் அவர்களுடைய அதிருஷ்டமே காரணம். ஆதலால் பிறக்கும் பிள்ளைகளைக் கொடுப்பதாக ப்ரதிஜ்ஞை செய்து இவளைக் காப்பாற்றுவதே, இந்த ஸமயத்திற்குத் தகுதியானது" என்று தம்முடைய புத்திக்கெட்டியபடி யோசித்து நிச்சயித்தார். பின்னுமவர் மனத்தில் கவலை உள்ளவரானாலும் சிரித்தமுகமுள்ளவராகி பாபியும், கொடிய சுவபாவமுள்ளவனும், வெட்கமில்லாதவனுமாகிய கம்ஸனை நோக்கி சிலாகித்து, "ஓ நல்ல ஸ்வபாவமுள்ளவரே! அசரீரி வாக்கானது தேவகி உம்மைக் கொல்வாளென்று சொல்லவில்லையே. இவளிடத்தில் எனக்குப் பிறக்கும் பிள்ளையால் உமக்கு மரணமுண்டாகும் என்றல்லவோ சொல்லிற்று. ஆதலால் பிறக்கும் குழந்தைகளை உம்மிடம் ஸமர்ப்பிக்கிறேன்; இவளைக் கொல்லவேண்டாம்" என்று ஸமாதானஞ்செய்தார். அதனைக் கேட்ட கம்ஸன் அவருடைய வார்த்தையின் ஸாரத்தை யறிந்து, தேவகியைக் கொல்லாமல் விட்டுவிட்டான். (பிறக்கும் பிள்ளைகளைக் கொன்றுவிடுவோம். ஸ்திரீவதஞ்செய்து, அதனால்

தோஷத்தை ஸம்பாதிக்க வேண்டாமென்று நினைத்தா னென்று கருத்து.) வஸுதேவரும் தம்முடைய வார்த்தையை அங்கீகரித்த கம்ஸனைக் கொண்டாடி, தம்முடைய கிருஹஞ் சென்றார்.

56—61. பின்பு பகவானையே முக்கிய தெய்வமாகக் கொண்ட தேவகியானவள், ஒவ்வொரு வருஷத்திலும் பிரஸவகாலத்தில் முறையே எட்டுப் புத்திரர்களையும் ஒரு பெண்ணையும் பெற்றாள். அவள் முதல் சிசுவை பிரஸவித்தவுடன், பொய் சொல்வதில் பயமுள்ளவராகிய வஸுதேவர், மிகுந்த துக்கத்துடன் கீர்த்திமானென்ற அந்தப் புத்திரனை கம்ஸனிடங் கொடுத்தார். ஸத்யமான ப்ரதிஞ்ஞையுள்ளவர்கள் எதைத் தான் ஸஹிக்கமாட்டார்கள்? பகவானே உண்மையான வஸ்து, அதனைவிட வேறொன்று மில்லையென்ற ஆத்ம தத்வத்தை யறிந்தவர்கள் எதைத்தான் விரும்புவார்கள் (அந்த உண்மையை அறிந்தவராகையால், புத்திர ஸுகத்தை விரும்பவில்லை யென்று கருத்து.) "கம்ஸன் துஷ்டனானாலும் முன் பிரதிஞ்ஞை செய்தபடி வஸுதேவர் புத்திரனைக் கொடுத்தார்" என்று ஸந்தோஷித்துக் கொல்லாமல் விட்டுவிடுவான் என்று எண்ணி, வஸுதேவர் கம்ஸனிடத்தில் குழந்தையைக் கொடுக்கவில்லை. துஷ்டர்கள் எதைத் தான் செய்யமாட்டார்கள்? "கம்ஸன் துஷ்டனாகையால் குழந்தையைக் கொன்று விடுவான்" என்று தெரிந்தே கொடுத்தார். ஸ்ரீபகவானையே மனத்தில் தியானஞ் செய்பவர்கள் எதைத்தான் விடமாட்டார்கள்? (தேவகி, பகவானையே ஹிருதயத்தில் தியானஞ் செய்தவளாகையால் புத்திரனிடத்தில் பிரீதியை விட்டா ளென்று கருத்து.) வஸுதேவர் ஸுக துக்கங்களில் ஸம

புத்தியுள்ளவராக இருப்பதையும் ஸத்யவாதியாக இருப்பதையும் கண்டு, கம்ஸன் மனமகிழ்ந்து சிரித்துக்கொண்டு வஸுதேவரை நோக்கி, "உங்களிருவர்களுக்கும் பிறக்கும் எட்டாவது கர்ப்பத்தால், எனக்கு மரணமென்று ஆகாச வாணியால் சொல்லப்பட்டது. இவன் முதல் குமாரன்; இவனால் எனக்குப் பயமில்லை; இவனை யெடுத்துப் போகலாம்" என்றான். அதனைக் கேட்ட வஸுதேவர், அப்படியே செய்கிறேனென்று சொல்லி, அந்தக் குழந்தையை யெடுத்துச் சென்றார். ஆனாலும் ஸ்திர புத்தியில்லாதவனும் அஸத்தாகவிருக்கும் அந்தக் கம்ஸனுடைய வார்த்தையை நம்பவில்லை.

62—69. பின்பு நாரத மஹரிஷி கம்ஸனிடம் வந்து, கம்ஸனை நோக்கி "நந்தன் முதலிய கோகுலத்திலிருக்கும் கோபர்களும், அவர்களுடைய ஸ்திரீகளும், வஸுதேவர் முதலிய விருஷ்ணிகளும், தேவகி முதலிய யாதவ ஸ்திரீகளும், வஸுதேவர், நந்தர் இவர்களுடைய பந்துக்களும் தேவர்கள். உன்னை ஸேவித்துக்கொண்டிருப்பவர்களெல்லோரும் அஸுரர்கள். பூமிக்குச் சுமையாக விருக்கும் அஸுராம்சமுள்ள அரசர்களைக் கொல்வதற்காக பகவான் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டு, வஸுதேவரிடம் அவதரிக்கப் போகிறார்" என்று சொல்லி ஆகாச மார்க்கமாகச் சென்றார். அதனைக் கேட்ட கம்ஸன், "யாதவர்கள் தேவாம்சமுள்ளவர்கள்; தான் முன்ஜன்மத்தில் காலநேமி யென்ற அஸுரனாக இருந்தவன்; ஸ்ரீமஹாவிஷ்ணுவினால் கொல்லப்பட்டு கம்ஸனாக ஜனித்தவன்; தன்னைக் கொல்வதற்காக ஸ்ரீமஹாவிஷ்ணு தேவகியின் கர்ப்பத்தில் அவதரிக்கப் போகிறார்" என்ற உண்மையைத் தெரிந்து

கொண்டு, தேவகிக்கும், வஸுதேவருக்கும் விலங்கு போட்டு, அவ்விருவர்களையும் காராகிருஹத்தில் அடைத்தான். பின்னும் தேவகி பிரஸவித்தவுடன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அம்சமான புத்ரன் இவன் தானோ என்று ஸந்தேஹித்து, ஒவ்வொரு குழந்தையையும், அப்போதைக்கப்போது கொன்றான். தங்கள் உயிரையே பெரியதாக நினைத்த லுப்தர்களான அரசர்கள், பெரும்பாலும் மாதா, பிதா, ப்ராதா, புத்ரர்கள், தோழர்கள், பந்துக்கள் ஆகிய இவர்களைக் கொல்வார்கள். ஆனதால், மிக்க பலசாலியான கம்ஸன் யதுக்களை விரோதித்துக் கொண்டது மல்லாமல், யாதவர்களுக்கும் அதிபதியாகிய உக்கிரஸேனரென்ற தன்னுடைய பிதாவையும் நிக்ரஹித்து, சூரஸேனதேசத்தைத் தானே பரிபாலித்தான்.

## நோட்டு

பசுக்களைக் கொல்லும் :—இயற்கையில் துக்கமற்றவனாகிய ஆத்மாவை ஸுக துக்க ஸம்பந்தமுள்ளவனென்று நினைத்து ஆத்ம ஸ்வரூபத்தை யறியாமலிருப்பவன் பசுக்னன் எனப்படுகிறான். அந்த மூடனைத் தவிர்த்து வேறு யார்தான் பகவத் கதையில் பிரியப்படமாட்டான்? ஸ்ரீத. பகவானுடைய கதையாகிய அமிருதமானது லோகத்தில் பிரஸித்தமான அமிருதத்தைவிட மேலானதென்று மூன்று விசேஷணங்களால் காட்டப்பட்டது. அமிருதத்தை விஷய ஆசையுள்ளவர்கள் விரும்புவார்கள். கதாமிருதத்தை விஷயங்களில் ஆசையற்ற யோகிகளும் விரும்புகிறார்கள். அமிருதமானது ஸம்ஸார ரோகத்தை விருத்திபண்ணக்கூடியது ; கதாமிருதம் ஸம்ஸார ரோகத்தை நிவர்த்திப்பது. அமிருதம் ரஸனேந்திரியத்திற்கு மாத்திரம் (நாக்கு) ருசியைத் தரக்கூடியது ; கதாமிருதமானது காதிற்கும், மனத்திற்கும் திருப்தியை யுண்டுபண்ணுகிறது. அப்படிப்பட்ட கதாமிருதத்தில் பசுபோன்ற நடையுள்ள மூடன் தவிர யார்தான் பிரியப்படமாட்டான்? (பசுவென்றால் நல்லது ;

அபச—கெட்டது. க்ன — தெரிந்து கொள்வது) நல்லதை யறியாதவன் என்று அர்த்தம். வீரராகவீயம். ஸகல ஜீவர்களும் பரமாத்மாவிற்கு தாஸர்கள் (சேஷர்கள்); பரமாத்மா ஒருவனுக்கும் சேஷனல்ல. அப்படிப்பட்ட பரமாத்மாவைப் பிறருக்கு சேஷனென்று நினைப்பதாகிய நாசத்தைச் செய்பவன் அபசக்னனெனப் படுகிறான். "வேறு வகையாக விருக்கும் ஆத்மாவை, வேறு வகையாக எவன் தெரிந்துகொள்ளுகிறானோ, ஆத்மாவை மறைத்தவனும், திருடனுமாகிய அவனால் எவ்வித பாபந்தான் செய்யப்படவில்லை?" அப்படிப்பட்ட பாபி தவிர வேறொருவனும் பகவத் கதையில் வைராக்கியத்தை யடையமாட்டான். முனிபாவ பிரகாசிகா. வாஹனங்களும்:—மூலத்தில் "யாநே" என்னும் ஒரு பாடமுண்டு. அதற்கு கிருஹப்ரவேச பிரயாண காலத்தில் என்று அர்த்தம். நல்வார்த்தை சொல்வது (ஸாமோபாயம்) ஐந்து வகை. ஸ்திரீ வதஞ் செய்யாமலிருந்தால் கீர்த்தி லாபம் உண்டாகுமென்றும், குலவிருத்தி யுண்டாவதால் உபகாரஞ் செய்ததாகுமென்றும், ஸஹோதரி யென்பதால் ஸம்பந்தமும் (பந்துத்வம்), உன்னுடைய பெண்ணுக்குச் சமமானவளென்பதால் உனக்கும் அவளுக்கும் பேதமில்லை என்றதாகிய அபேதமும், சூரர்களால் கொண்டாடக்கூடியவன் என்றதால் குணத்தைச் சொல்வதுமாகிய ஐந்து வகை ஸாமோபாயமும் செய்யப்பட்டது என்று கருத்து. ஸ்ரீத.

## அத்யாயம்—2

## கர்ப்ப ஸ்துதி

1—5. ப்ரலம்பன், பகன், சாணூரன், த்ருணாவர்த்தன், மஹாசனன், முஷ்டிகன், அரிஷ்டன், த்விதன், பூதனா, கேசி, தேனுகன் முதலிய அஸுரர்கள், பாணன், பௌமன், ஜராஸந்தன் முதலிய அஸுராம்சமுள்ள அரசர்கள் ஆகிய இவர்களுடன் பலிஷ்டனாகிய கம்ஸன் யாதவர்களுக்கு உபத்திரவம் செய்தான். அந்த யாதவர்கள், கம்ஸனுடைய உபத்திரவத்தை ஸஹியாமல், குரு, பாஞ்சாலம், கேகயம், நிஷதம், விதேஹம், கோஸலம் முதலிய தேசங்களுக்குச் சென்றார்கள். சில பந்துக்கள் கம்ஸனையே அனுசரித்துக்கொண்டிருந்தார்கள். தேவகியின் ஆறு குழந்தைகளும் உக்ரஸேனருடைய புத்ரனை கம்ஸனால் அப்போதைக் கப்போது கொல்லப்பட்டன. ஏழாவது தடவை தேவகி கர்ப்பத்தைத் தரித்தாள். அந்தக் கர்ப்பமானது அனந்தனென்று சொல்லப்படும் ஆதிசேஷனுடைய அம்சம். அந்த கர்ப்பமானது தேவகிக்கு ஸந்தோஷத்தையும் துக்கத்தையும் விருத்தி செய்தது.

6—14. அப்பொழுது ஸகல ஜகத்ஸ்வரூபியாக இருக்கும் பகவான், தம்மையே தெய்வமாகக்கொண்ட பக்தர்களான யாதவர்களுக்குக் கம்ஸனால் நேர்ந்திருக்கும் பயத்தை அறிந்து, தம்முடைய யோகமாயையை நோக்கி, "ஓ தேவி! கோபர்களாலும் கோபிகைகளாலும் அலங்கரிக்கப்பட்ட கோகுலத்திற்கு நீ போகவேண்டும். அவ்விடத்தில் வஸுதேவருடைய பத்தினியான ரோஹிணீ என்பவள் வஸிக்கிறாள். இன்னும் மற்றவர்களும் கம்ஸனி

டத்தில் பயந்து, ரஹஸ்யமான இடங்களில் ஒளிந்திருக்கிறார்கள். இப்போது தேவகியின் வயிற்றிலிருக்கும் சேஷனென்ற பெயருள்ள என்னுடைய தேஜஸ்ஸை எடுத்து, ரோஹிணியின் வயிற்றில் கொண்டு வைத்துவிடு. பின்பு நான் பூர்ணம்சமாக தேவகியினிடத்தில் புத்ரனாக அவதரிப்பேன். நந்தனுடைய பத்தினியாகிய யசோதையென்பவளிடம் நீ அவதரிக்கவேண்டும். மனிதர்கள் உனக்கு ஆலயங்களைக் கட்டுவித்து, அவைகளில் உன்னை பிரதிஷ்டை செய்விப்பார்கள். மேலும் உனக்கு துர்க்கா, பத்திரகாளீ, விஜயா, வைஷ்ணவீ, குமுதா, சண்டிகா, கிருஷ்ணா, மாதவீ, கன்னிகா மாயா, நாராயணீ, ஈசானா, சாரதா, அம்பிகா என்று பெயர்களுண்டாகும். உன்னைப் பிரார்த்திக்கும் ஜனங்களுக்கும் ஸகல இஷ்டத்தைக் கொடுப்பவளாக இருப்பாய். அதனால் தூபம் தீபம் பலவகையான உபஹாரங்கள் ஆகிய இவைகளைக்கொண்டு ஜனங்கள் உன்னைப் பூஜிக்கப்போகிறார்கள். ஒரு வயிற்றிலிருந்து மற்றொருவனுடைய வயிற்றில் இழுத்து வைக்கப்பட்டபடியால், அந்த குழந்தைக்கு ஸங்கர்ஷணனென்றும், மிக்க பலசாலியாகையால் பலபத்ரனென்றும், ஜனங்களை ரமிக்க (ஸந்தோஷிக்க)ச் செய்வதால் ராமனென்றும் பெயருண்டாகும்" என்று ஆஜ்ஞாபித்தார்.

15—26. அதனை சிரஸால் வஹித்த யோகமாயை, பகவானுக்கு பிரதக்ஷிணஞ் செய்து, பூமிக்கு வந்து, பகவானுடைய உத்திரவின்படி செய்தாள். தேவகியினுடைய கர்ப்பமானது ரோஹிணியினிடஞ் சென்றபொழுது "கர்ப்பமானது ஸ்ரவித்துவிட்டது" என்று பட்டணத்திய ஜனங்கள் அழுதார்கள். பின்பு ஸ்ரீமஹாவிஷ்ணுவானவர், பூமியின் பாரத்தை நிவர்த்திப்பதற்காகத் தம்முடைய அம்சமாக

வசுதேவருடைய மனத்தில் பிரவேசித்தார். மகாபுருஷ னுடைய அம்சத்தைத் தரித்த அந்த வசுதேவர் சூரியன் போல் பிரகாசித்தார். ஜனங்களால் நெருங்கமுடியாதவராக இருந்தார்; பின்பு வசுதேவரிடமிருந்து அழிவற்ற மங்கள மான பகவதம்சமானது தேவகியினிடம் வந்தது. அந்த அம்சமானது எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பது; கிழக்கு திக்கானது ஆனந்தகரமாகிய சந்திரனைத் தரிப்பது போல், தேவகி அந்த பகவதம்சத்தை மனத்தால் தரித் தாள். சகல ஜகத்திற்கும் இருப்பிடமான பகவானைக் கர்ப் பத்தில் தரித்தவளும், கம்ஸனுடைய காராகிருகத்தில் வசிப்பவளுமான தேவகியானவள், குடத்தில் ஏற்றிவைக் கப்பட்ட தீபம் போலவும், பிறருக்கு உபதேசிக்க மன மில்லாதவனிடத்திலிருக்கும் நல்ல வித்தைபோலவும் பிர காசிக்கவில்லை. பகவான் தேவகியின் கர்ப்பத்திலிருப்பதால், அவள் மிக்க தேஜஸ் உள்ளவளாக இருந்தாள்; அவளுடைய காந்தியால் அந்த கிருகமானது பிரகாசித்தது. அப்படிப் பட்ட தேவகியைப் பார்த்துக் கம்ஸன், "இவளுடைய வயிற்றில் என்னுடைய பிராணனை அபகரிக்கும் ஸ்ரீமந் நாராயணன் வந்துவிட்டார். இந்தக் கர்ப்பமானது முன் போலில்லை. இப்போது என்ன செய்யவேண்டும்? மனிதன் தன் காரியத்திலேயே முக்கிய நோக்கமுள்ளவனாலும், கீர்த்தி முதலியவைகளை நாசஞ் செய்துகொள்ளக்கூடாது. இப்பொழுதே தேவகியைக் கொல்வோமென்றால் அதுவும் உசிதமல்ல. ஏனென்றால், தேவகியை வதஞ்செய்தால் ஸ்திரீ வதம், சகோதரி வதம், கர்ப்பிணி வதம் ஆகிய இவைகளா லுண்டாகும் பாபம் நேரிடும். அதனால் கீர்த்தியும், ஐசுவரிய மும், ஆயுசும் நாசமாகிவிடும். பிறரால் அடையமுடி யாத விசேஷ கீர்த்தியை வெகுநாளாக ஸம்பாதித்திருக்கிறே

னல்லவா? அந்தக் கீர்த்தி நாசமாகிவிடும். கீர்த்தியற்ற மனி தனை சாதுக்கள் ஆச்ரயிக்கமாட்டார்கள். சாதுக்களால் ஒப்புக்கொள்ளப்படாமல் மிகவும் கொடியவனாக ஜீவித் திருப்பது மரணமடைவதற்குச் சமமானதேயாம். ஜீவித்தி ருக்கும்பொழுதும் எல்லாரும் நிந்திப்பார்கள்; மரண மடைந்த பிறகும், மிக்க பாபியாகவிருந்த இவன் நரகத்தை அடைவான் என்று மனிதர்கள் நிந்திப்பார்கள்" என்று பலவகையாக யோசித்து, அவன் கொடிய எண்ணத்தை யொழித்து, தேவகியின் பிரசவ காலத்தை எதிர்பார்த்திருந் தான். பின்னுமவன் ஸ்ரீமந் நாராயணனிடத்தில் விரோத புத்தி வைத்து உட்கார்ந்திருக்கும்பொழுதும், படுத்திருக் கும் பொழுதும், நிற்கும்பொழுதும், புசிக்கும்பொழுதும், சஞ்சரிக்கும்பொழுதும், ஜலம் முதலியவைகளைக் குடிக்கும் பொழுதும் பகவானையே தியானஞ்செய்து கொண்டிருந் தான். அதனால் அவனுக்கு ஜகத் முழுவதும் மகாவிஷ்ணு வின் சுரூபமாகத் தோன்றியது.

27—44. அந்தச் சமயத்தில் பிரும்மா, பரமசிவன், நாரதர் முதலிய மகரிஷிகள், மற்ற தேவர்கள் ஆகிய இவர் கள் தேவகியிருக்குமிடம் வந்து, தங்களுடைய இஷ்டத் தைப் பூர்த்திசெய்பவரான ஸ்ரீ பகவானை இனிமையான வார்த்தைகளால் பின்வருமாறு தோத்திரஞ்செய்தார்கள். எப்படியெனில்—"ஓ பகவன்! நீர் சத்யசங்கல்பர்; (பூமியில் அவதரித்து, துஷ்டர்களைச் சிட்சிப்பதாக வாக்களித்தபடி அவதரித்தீரென்று கருத்து.) உம்மை அடைவதற்கு சத்தியமே முக்கிய சாதனமாக விருக்கிறது. நீர் சிருஷ்டிக்கு முந்தியும், சிருஷ்டிகாலத்திலும், பிரளயகாலத்திலும் இருப் பவர்; பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய

ஐந்து பூதங்களுக்கும் காரணமாக விருப்பவர்; (சிருஷ்டிக்கு முன்னிருப்பவரென்று காட்டப்பட்டது.) ஜகத்தில் அந்தர் யாமியாக இருப்பவர்; (ஜகத்திருக்கும்பொழுது மிருப்பவ ரென்று காட்டப்பட்டது.) ஜகத்தானது நசித்தாலும் எஞ்சியிருப்பவர் நீர் ஒருவரேயாம். மேலும், நீர் ரிதம் (நல்வார்த்தை), சத்தியம் (சமமாகப் பார்ப்பது) இவைகளை உலகத்தில் பரவச்செய்பவர்; மேற்சொல்லியபடி சகல வகையிலும் சத்திய சுரூபியாகவிருக்கும் உம்மைச் சரண மடைகிறோம். இந்த ஜகத்தானது ஒரு விருட்சம்போலிருக் கிறது; (நாசமுள்ளதாகையால் விருட்சம் உதாரணமாகக் காட்டப்பட்டது.) இது ஆதியானது; இந்தப் பிரபஞ்ச மாகிய விருட்சத்திற்கு பிரகிருதியே முக்கியமான ஸ்தானம்; சுகதுக்கங்களிரண்டும் பழங்களாக இருக்கின்றன; ஸத் வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களே வேர்களாக இருக்கின்றன. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய நான்கு புருஷார்த்தங்களும் ரசங்களாக இருக்கின்றன. ஞானேந்திரியங்கள் ஐந்தும் விழுதுகளாக இருக்கின்றன; பிராணனுடைய தர்மங்களான பசி, தாகங்கள், மனத்தின் தர்மங்களான சோக மோகங்கள், சரீரதர்மங்களான ஜரா, மரணங்கள் ஆகிய ஆறும் சுபாவங்களாக இருக்கின்றன. ஏழு தாதுக்களும் தோல் (பட்டை)களாக இருக்கின்றன; ஐந்து பூதங்கள், மனம், புத்தி, அகங்காரம் என்று எட்டு கிளைகளிருக்கின்றன; மேலுமந்த விருட்சத்திற்கு ஒன்பது துவாரங்களே பொந்துகளாக இருக்கின்றன; பத்து பிராணன்களே இலைகளாக இருக்கின்றன. பின்னும் அந்த விருட்சத்தில் ஜீவாத்மா பரமாத்மா வென்ற பட்சிகள் வசிக்கின்றன. அப்படிப்பட்ட ஜகத்தாகிய விருட்சத்திற்கு நீர் ஒருவரே காரணம்; (அதனைப் படைப்பவரென்று

கருத்து.) அதனைக் காப்பாற்றுகிறவரும் நீர் ஒருவரே; அதனைப் பிரளயகாலத்தில் அழிப்பவரும் நீரே. உம்முடைய மாயையால் மோகித்த ஜனங்கள், பிரும்மா சிருஷ்டிக்கிருரென்றும், ஸ்ரீமகாவிஷ்ணு காப்பாற்றுகிருரென்றும், ருத்திரன் ஸம்ஹரிக்கிருரென்றும் சொல்வார்கள். உம்முடைய உண்மையை அறிந்த வித்துவான்கள் அப்படிச்சொல்லமாட்டார்கள். ஓ பரமாத்மாவே! ஞானசுரூபியே! தாவர ஜங்கமங்களடங்கிய ஜகத்திற்கு க்ஷேமத்தைச் செய்ய வேண்டி, சாதுக்களுக்கு சுகத்தைக் கொடுக்கக்கூடியவைகளும், துஷ்டர்களைச் சிட்சிக்கக்கூடியவைகளுமான சரீரங்களை எடுத்துக்கொள்ளுகிறீர். (ஸ்ரீராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைச் செய்கிறீர் என்று கருத்து.) ஓ தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! தாண்ட முடியாத ஸம்ஸார சமுத்திரத்தைத் தாண்ட விரும்பிய விவேகிகள் சகல ஜகத்திற்கும் இருப்பிடமான உம்மைத் தியானஞ் செய்தார்கள். மேலும் அவர்கள், ஸம்ஸார சமுத்திரத்தைத்தாண்டுவதற்கு ஓடமாகப் பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டிருந்த உம்முடைய பாதத்தை ஆச்ரயித்து, அதன் சகாயத்தால் கன்றின் குளம்படியைப்போல் அந்தப் பெரிய சமுத்திரத்தை இலகுவாகத் தாண்டி, அக்கரை சென்ருர்கள். (உம்முடைய அவதாரமானது பக்தர்களுக்கு மோக்ஷத்தையும் கொடுக்கக்கூடியதென்று காட்டப்பட்டது.) ஓ தாமாகப் பிரகாசிப்பவரே! நீர் பக்தர்களை அநுக்கிரகிப்பவர்; உம்முடைய பாதத்தை ஆச்ரயித்து, தாண்டமுடியாத ஸம்ஸார சமுத்திரத்தைக் கடந்து அக்கரைக்குச் சென்ற விவேகிகள், தங்களுக்குப் பிந்தியவர்களான ஜனங்களிடத்தில் விசேஷ பிரீதி வைத்து, உம்முடைய பாதமாகிய ஓடத்தை இந்தக் கரையிலேயே

வைத்துச் சென்றார்கள். (உம்முடைய பாதத்தை ஸ்மரித்த மாத்திரத்தில் பெரிதாகிய சமுத்திரம் கன்றின் குளம்படி போல் சிறிதாகிவிட்டபடியால், ஓடத்தை அபேக்ஷியாம லேயே அக்கரை சென்றார்கள் என்றும், பகவானுடைய பாதத்தின் மகிமை அப்படிப்பட்டதாகையால், எவ்விதத் திலாவது பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தவேண்டு மென்றும் கருத்து.) ஓ தாமரை மலர்போன்ற கண்க ளுள்ளவரே! எவர்கள் 'நாம் முக்தர்கள்' என்று நினைத்து உம்மிடத்தில் பக்தி செய்யவில்லையோ, அவர்கள் உம்மு டைய பாதாரவிந்தத்தை ஆச்ரயிக்காமலிருப்பதால் சித்த சுத்தியை அடைகிறதில்லை. ஆனதால் அவர்கள் அநேக ஜன்மங்களில் தவஞ் செய்து, மோக்ஷத்தை அடைவதற்குத் தகுதியான பதத்தை (மேலான குலத்தில் பிறப்பது, தவம், வேதாத்தியயனம் முதலியவை) அடைந்திருந்தாலும் கீழே விழுகிறார்கள். (விக்கினங்களால் கெடுக்கப்படுகிறார்கள்.) ஓ பிரபுவே! உம்மிடத்திலேயே மனத்தைச் செலுத்தி ஏகாந்தமாகப் பக்தி செய்பவர்கள் ஒருபொழுதும் நல்மார்க் கத்திலிருந்து தவறமாட்டார்கள். மேலும் அவர்கள் உம்மால் காப்பாற்றப்பட்டுப் பயமில்லாமல் விக்கின சமூகத்தின் தலையில் சஞ்சரிப்பார்கள். (விக்கினங்களை ஜயிப்பார்கள்). சகல ஜனங்களும் உம்மைப் பூஜித்துக் கர்ம பலத்தை யடைவதற்கு உபயோகமாக நீர் சுத்த ஸத்வ மயமான சரீரத்தை யெடுத்துக்கொள்ளுகிறீர். (அவதரிக் கிறீர்.) அந்தச் சரீரத்தை, பிரம்மசாரி வேதாத்தியயனத்தா லும், கிருகஸ்தன் கர்மயோகத்தாலும், வானப்ரஸ்தன் தவத்தினாலும், சன்னியாசி சமாதியாலும் பூஜிக்கிறார்கள். (அவதரிக்காவிடில் உம்முடைய சுரூபம் ஜனங்களுக்கு எப்படித் தெரியுமென்று கருத்து.) எல்லா லோகத்தையும்

படைப்பவரே! நீர் இம்மாதிரி பூமியில் அவதரிக்காவிடில், அஞ்ஞானம், அதனாலுண்டாகிய பேதபுத்தி ஆகிய இவைகளை நிவர்த்திக்கும் அபரோக்ஷ ஞானமில்லாமல்போய் விடும். எவருடைய சம்பந்தத்தால் புத்தி முதலிய குணங்கள் பிரகாசிக்கின்றனவோ, பரமாத்மாவாகிய எவரால் பாஹ்யமான குணம் பிரகாசிக்கிறதோ, அவர் பரமாத்மா வென்று அனுமானத்தால் அறியப்படுகிறீர். (சுத்த ஸத்வ சுரூபமாகிய உம்முடைய சுரூபத்தை உபாசித்து, அந்தக்கரணம் தன்மயமானால் அபரோக்ஷ ஸாக்ஷாத்கார முண்டாகிறதென்று தாத்பர்யம்.) நீர் எல்லாவற்றிற்கும் சாட்சிபூதராகையால், உம்முடைய மார்க்கம் மனத்தாலும், வாக்கினாலும் ஊஹிக்கக்கூடியதே யொழிய, புலன்களுக்குப் புலப்படாதது. ஆனதால் உம்முடைய நாமதேயங்களும் குணங்களும் நிரூபிக்க முடியாதவைகள். (அனந்தங்களாகையால்.) ஓ தேவ! ஆனாலும் உபாசகர்கள் உம்மை நேரில் பார்க்கிறார்கள். (பக்தியே மேலானதென்று கருத்து.) தேவார்ச்சனம் முதலிய எதைச் செய்தாலும், அப்பொழுது உம்முடைய திவ்ய நாமதேயங்களையும் மங்களமான சுரூபங்களையும் தியானித்துக்கொண்டும், அவைகளைச் சிரவணஞ் செய்துகொண்டும், வாக்கினால் உச்சரித்துக்கொண்டும், பிறரை ஸ்மரிக்கச்செய்து கொண்டும், தர்மங்களைச் செய்பவன் ஸம்ஸாரத்தை அடையமாட்டான். ஓ பாபங்களை நிவர்த்திப்பவரே! உம்முடைய பாதமாகிய பூமிக்கு நேர்ந்த சுமையானது நீர் அவதரித்ததாலேயே நிவர்த்திக்கப்பட்டது. அழகான உம்முடைய பாதத்தின் அடிவைப்பினால், பூமியும் சுவர்க்கமும் அடையாளமிடப் பட்டது; உம்மால் அனுக்கிரகிக்கப்பட்ட பூமி முதலியவைகளைப் பார்த்த நாங்கள் கிருதார்த்தர்களாகிறோம். ஓ ஈச!

ஸம்ஸாரமற்றவராகிய உமக்கு ஜனனமேது? நீர் விளை யாட்டாகச் சரீரத்தை யெடுத்துக்கொண்டவரே யொழிய கர்மாதீனமான சரீரமுள்ளவரல்ல. ஓ நித்தியமுக்தரே! உம்முடைய உண்மையை அறியாதவர்கள், அவித்தையால் ஜீவனுக்கு ஜனன மரணம் முதலியவைகளுண்டென்று சொல்லுகிறார்கள். (உண்மையில் அவைகளில்லையென்று தாத்பர்யம்). மேலும், நீர் மத்ஸ்யமாகவும், அசுவமாகவும் (ஹயக்ரீவர்), ஆமையாகவும் (கூர்மம்), வராஹமாகவும் (பன்றி), நரசிம்மராகவும், ஹம்ஸமாகவும், க்ஷத்திரிய ராகவும், பிராமணராகவும், உபேந்திரராகவும் அவதரித்து எங்களைக் காப்பாற்றியதுபோல் இப்பொழுதும் மூவுலகத்தையும், எங்களையும் காப்பாற்றும். பூமியின் பாரத்தை நிவர்த்தியும். ஓ யாதவர்களுக்குட் சிறந்தவரே! உமக்கு நமஸ்காரம்" என்று தேவர்கள் பகவானைத் துதித்து, தேவகியை நோக்கி, "ஓ அம்ம! நமக்கெல்லா ருக்கும் க்ஷேமத்தைச் செய்வதற்காக, பகவானாகிய பரம புருஷன் உமக்குப் புத்திரராக அவதரித்திருக்கிறார். கம்ஸனுக்கு மரணம் சமீபித்து விட்டது; ஆனதால் அவனிடம் பயப்பட வேண்டாம். உம்முடைய புத்திர ராகிய இவர் யாதவர்களைக் காப்பாற்றுவார்" என்று சிலாகித்து, பகவானுடைய மனுஷிய சுரூபத்தை ஜனன மரணங்களற்ற திவ்ய சுரூபமென்றும், சகல ஜகத்தின் சிருஷ்டி பரிபாலனம், சம்ஹாரம் ஆகிய இவைகளுக்குக் காரணமானதென்றும் துதித்து, பிரும்மா, பரமசிவன் ஆகிய இவ்விருவர்களையும் முன்னிட்டு, சுவர்க்கஞ் சென்றார்கள்.

## நோட்டு

உம்மை அடைவதற்கு :—மூலத்தில் ஸத்யபரம் என்றிருப்பதால், "தேவர்களைக் காட்டிலும், பிராணங்களைக் காட்டிலும் எது வேறானதோ அது ஸத், தேவர்களும், பிராணங்களும் சத்தியம்" என்ற சுருதியின்படி ஜகத்தைவிட விலக்ஷணமானவர். திரிஸத்யம் என்றால் பிரகிருதி, புருஷன், காலம் ஆகிய இவைகளின் சுரூபமாக இருப்பவர். பிரகிருதி முதலியவைகளின் சுரூபமாகிய சகல ஜகத்தும் பகவானுக்கு சுவாதீனப்பட்டதாகையால், ஸத்ய ஸங்கல்பரென்று கருத்து. ஸத்யஸ்ய யோனிம் என்பதற்கு ஜகத்திற்குக் காரணமாக இருப்பவரென்று அர்த்தம். இதனால் பகவானுடைய லீலாவிபூதி இப்படிப்பட்டதென்று காட்டப்பட்டது. சத்தியத்தி லிருப்பவரென்றால், தம்முடைய மகிமையிலிருப்பவரென்று அர்த்தம். இதனால் பகவான் நித்யவிபூதியுள்ளவரென்று காட்டப்பட்டது. ஸத்தியத்தீர்த்தம் ஸத்யரென்றால் ஜீவர்களைக் காட்டிலும் ஸத்யரென்று அர்த்தம். ரிதஸத்யநேத்திரமென்றால் சந்திரன், சூரியன் ஆகிய இவர்களை நேத்திரங்களாக உடையவர், அல்லது சந்திர சூரியர்களுக்கு அதிபதி, அல்லது செய்யப்படும் புண்யகர்மங்களையும், வாக்கினால் உச்சரிக்கப்படும் தர்மத்தையும் உலகத்தில் பரவச் செய்பவரென்றும் அர்த்தம். ஸத்யாத்மகமென்றால் விகாரமற்ற சுரூபமுள்ளவரென்று அர்த்தம். பிரதான (மாயை)மல்லவென்று காட்டப்பட்டது வீராகவீயம்.

ஹம்ஸமாகவும்—11-வது ஸ்கந்தத்தின் 12-வது அத்தியாயத்தில் ஹம்ஸாவதாரம் கண்டு கொள்க.

க்ஷத்திரிய—ஸ்ரீராமன். பிராமண—பரசுராமன்.

## அத்தியாயம்—3

# ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்

1—11. பின்பு தேவகிக்கு பிரசவ காலம் நேர்ந்தது. அப்பொழுது காலத்தின் குணங்கள் யாவும் சேர்ந்திருந்தன. அப்பொழுது அசுவினி முதலிய நட்சத்திரங்களும், கிரகங்களும், மற்ற தாரைகளும் சாந்தங்களாக இருந்தன. (யுத்தம் முதலியவைகள் இல்லாமலிருந்தன) பிரம்மதேவதாகமான ரோகிணீ நட்சத்திரத்தில் சந்திரனிருந்தார். திக்குகள் தெளிந்திருந்தன. ஆகாயத்தில் நட்சத்திரங்கள் சுத்தங்களாக உதயமாயின. பூமியிலுள்ள பட்டணங்கள், கிராமங்கள், கோகுலங்கள், ரத்தினம் விளையும் ஸ்தலங்கள் ஆகிய இவைகளில் மங்கள காரியங்கள் நடந்து வந்தன. நதியின் ஜலம் தெளிந்தது; மடுக்களில் தாமரை மலர்கள் மலர்ந்தன. வனங்களில் எல்லா விருட்சங்களும் புஷ்பித்தன; அப்பூங்கொத்தில் வண்டுகள் சப்தித்தன; பறவைகள் இனிமையாகக் கத்தின; நல்வாசனையுள்ள காற்று சுககரமாக வீசிற்று. யாகத்தில் ஓமஞ் செய்யப்பட்டவைகளான அக்னிகள் சாந்தங்களாக (கடுமையன்னியில்) பிரகாசித்தன; சாதுக்கள், தேவர்கள் ஆகிய இவர்களுடைய மனம் பிரசன்னமாயிற்று. மேலும், பகவானுடைய அவதார காலத்தில் சுவர்க்கத்தில் தேவ

துந்துபிகள் முழங்கின. கின்னரர்களும், கந்தர்வர்களும் பாடினார்கள். சித்தர்களும், சாரணர்களும் துதித்தார்கள். வித்யாதர ஸ்திரீகளும், அப்ஸரஸ்களும் சந்தோஷமாக நர்த்தனஞ் செய்தார்கள். மகரிஷிகளும், தேவர்களும் ஆனந்தத்தை அடைந்து, புஷ்பமாரி பொழிந்தார்கள். மேகங்கள் சமுத்திரத்தில் மெதுவாகக் கர்ஜித்தன. மிகுந்த இருட்டுள்ள நிசீதகாலமும் நேர்ந்தது. அப்படிப்பட்ட திவ்யமான காலத்தில் சகல பிராணிகளின் இருதயத்தில் வசிப்பவராகிய பகவான், தேவ ரூபியான தேவகியினிடத்தில் ஆவிர்ப்பவித்தார். (அவதரித்தார்.) அது கிழக்குத் திக்கில் பூர்ணசந்திரன் உதயமானது போலிருந்தது; அந்த அப்ராக்ருத சிசுவை வசுதேவர் தரிசித்தார். அந்தச் சிசுவானது ஆச்சரியமானது; தாமரை மலர்போன்ற கண்களுள்ளது; நான்கு கைகளுள்ளது; சங்கம், கதை முதலிய ஸன்னத்தமான ஆயுதங்களுள்ளது; ஸ்ரீவத்ஸமென்ற அடையாளமுள்ளது; பீதாம்பரமுள்ளது; நீருண்ட மேகம்போன்ற திருமேனியுள்ளது; மேலும் அந்தச் சிசு அணிந்திருக்கும் கௌஸ்துப மாலையானது, அதன் கழுத்தினால் பிரகாசிக்கிறது. (ஆபரணத்திற்கும் அலங்காரத்தையுண்டு பண்ணக்கூடியது பகவானுடைய சரீரமென்று கருத்து.) மேலும், விலையுயர்ந்த வைடூரியங்கள் இழைத்த கிரீடம், குண்டலம் ஆகிய இவைகளின் காந்தியால் தலைமயிர்கள் அழகாக இருந்தன. பின்னும் அந்தச் சிசு உத்தமமான காஞ்சி, வளை முதலிய ஆபரணங்களைத் தரித்துப் பிரகாசித்தது. இப்படியாக உலகத்திய குழந்தைகளைவிட விலட்சணமாக அவதரித்த ஸ்ரீ பகவத் சுரூபத்தைத் தரிசித்து, வசுதேவர் மிக்க ஆச்சரியமடைந்து மலர்ந்த கண்களுள்ளவராகி, சந்தோஷத்தில் மூழ்கி

(ஸ்நானஞ் செய்து) லட்சம் பசுக்களைப் பிராமணர்களுக்குத் தானஞ் செய்தார். (மனத்தால் சங்கல்பித்தாரென்று கருத்து.)

12—22. அந்தக் குழந்தையின் தேக காந்தியால் அந்தப் பிரசவ கிருஹம் பிரகாசித்தது. அவரைத் தரிசித்த வசுதேவர் அக்குழந்தையைப் 'பரம புருஷனென்று நிச்சயித்து, அவருடைய மகிமையை அறிந்தவராகையால், பயமற்றவராகிக் கைகூப்பி வணங்கிப் பின் வருமாறு துதிக்கலானார்: "சகல பிராணிகளுடைய புத்திக்குச் சாட்சியும், கேவலம் அநுபவ சுரூபியும், ஆனந்தசுரூபியும், பிரகிருதியைவிட மேலானவருமாகிய உம்மை நேரில் பார்த்தேன். (பரமாத்மாவென்று தெரிந்து கொண்டேன்). அப்படிப்பட்ட பரப்ரம்மமாகிய நீரே, உம்முடைய பிரகிருதியைக் கொண்டு முக்குண சுரூபமான ஜகத்தைப் படைத்து, அதில் பிரவேசிக்காமலேயே பிரவேசித்தவர் போல் தோன்றுகிறீர். (அப்படிப்பட்ட நீர் தேவகியின் கர்ப்பத்தில் அவதரிப்பது என்ன ஆச்சரியம்?) மகத் தத்வம் முதலியவைகள் தனியே பலவிதமான வீரியமுள்ளவைகளானாலும், பதினாறு விகாரங்களுடன் சேர்ந்து விராட்டை உண்டு பண்ணுகின்றன. பிறகு அதில் பிரவேசித்தவை போலும் தோன்றுகின்றன; உண்மையில் அவைகள் பிரவேசிக்கவில்லை. அவைகள் அண்டம் உண்டாவதற்கு முன்னமேயே அண்டத்திற்குக் காரணங்களாக இருந்தன அல்லவா? அதுபோல பகவானாகிய நீர் ஜகத்திற்குக் காரணராக ஜகத்தின் உற்பத்திக்கு முந்தியே இருப்பவராகையால், நீர் அதில் உண்மையில் பிரவேசிக்கிறதில்லை. பிரவேசித்தவர் போலத் தோன்றுகிறீர். உம்முடைய

சுரூபமானது புத்தியினால் ஊகிக்கக்கூடியது; கண்ணினால் பழத்தைக் கிரகிக்கும்பொழுது (பார்க்கும்பொழுது) அத்துடனிருக்கும் ரசம் எப்படி கிரகிக்கப்படுகிறதில்லை யோ, அப்படி நீர் இந்திரியங்களுக்குப் புலப்படுகிறதில்லை. நீர் ஒன்றினாலும் மறைக்கப்படாதவராகையால் ஜகத்தில் பிரவேசிக்காதவர்; உமக்கு உள், வெளியென்ற பேத மில்லை. மேலும், நீர் எல்லா சுரூபியாக இருப்பதால், உம்மை எதனால் மறைக்க முடியும்? பின்னும் எல்லாவற் றிற்கும் ஆத்மாவாகவும் இருக்கிறீர். (ஒன்றால் மறைக்கப் பட்டவன் அதற்கு ஆத்மாவாக இருக்க முடியாதென்று கருத்து). வியாபகராகவும் இருக்கிறீர். (அதனாலும் உம்மை மற்றொன்றால் மறைக்க முடியாதென்று கருத்து). பின்னும் நீர் வஸ்துவாகவும் (ஸத்யர்) இருக்கிறீர். (சத்திய மான வஸ்துவை அஸத்தியமானவைகள் மறைக்க முடியுமா வென்று கருத்து). தேகம் முதலியவை யெல்லாம் ஸத்ய மல்ல; அப்படிப்பட்ட தேகம் முதலியவைகளைத் தன்னை விட வேறாக இருக்கும் ஸத்ய வஸ்துவாக எவன் நினைக் கிறானோ, அவன் அறியாதவனேயாம். அவைகளைப்பற்றி விசாரித்தால் அஸத்யமானவைகளென்றே முடியும். (வாசாரம்பணம்). அஸத்யமானவைகளை ஸத்யங்களென்று நினைப்பவன் அஞ்ஞானனென்பதில் என்ன சந்தேகம்? (பரமாத்மாவை விட்டு, ஜகத் தனியே சத்தியமாக இருக்க வில்லை). ஓ பிரபுவே! ஆசையற்றவரும், குணங்களற்றவரு மான உம்மால் இந்த ஜகத் உண்டு பண்ணப்பட்டது; பரிபாலிக்கப்படுகிறது; சம்ஹரிக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். நீர் பரப்ரம்மமானாலும், உம்மை ஆச்ரயித்த மாயா குணங்களால் செய்யப்படும் ஜகத் சிருஷ்டி முதலியவைகளை நீர் செய்கிறதாகவே சொல்லப்

படுகிறது. அது உபசாரமேயாம். (வேலைக்காரர்களால் ஏற்படும் ஜயம் முதலியவை அரசனை அடைகின்றன அல்லவா?) அப்படிப்பட்ட நீர் உம்முடைய மாயையால் மூன்று லோகங்களைப் பரிபாலிப்பதற்காக சத்வ குணத்தையும், சிருஷ்டிக்காக ரஜோ குணத்தையும், பிரளயத்தில் தமோ குணத்தையும் ஆச்ரயிக்கிறீர். ஓ, எல்லாவற்றிற்கும் அதிபதியே! இந்த லோகத்தைக் காப்பாற்றுவதற்காக என்னுடைய கிரகத்தில் நீர் அவதரித்திருக்கிறீர். அரசர்களாகப் பிறந்திருக்கும் அநேக அசுர சேனைபதிகளை வதஞ் செய்யப் போகிறீர். ஆனாலும் உம்முடைய ஜ்யேஷ்ட சகோதரர்களைக் கம்ஸன் கொன்றான். அதனால் என்னுடைய கிரகத்தில் நீர் அவதரித்தது உசிதமல்ல; உம்முடைய அவதாரத்தைச் சேவகர்கள் முகமாகக் கேள்விப்பட்டு, கம்ஸன் இப்பொழுதே ஆயுதத்தை எடுத்துக்கொண்டு வருவான்" என்று சொன்னார்.

23—31. பின்பு கம்ஸனிடம் பயந்தவளான தேவகியானவள் மகாபுருஷ லட்சணமுள்ள தன்னுடைய புத்திரனைப் பார்த்து, புன்சிரிப்புடன், "புத்தி முதலிய காரிய காரணங்களைப் பிரகாசிக்கச் செய்யும் விஷ்ணு நீரேயாம். வேதங்கள், எதனை சத்தியமென்றும், அவ்யக்தமென்றும், காரணமென்றும், பெரிதென்றும் (பிரம்மம்), சேதனமென்றும், குணங்களற்றதென்றும், விகாரமற்றதென்றும், ஸத்தா மாத்திரமென்றும், விசேஷமற்றதென்றும், சன்னிதி மாத்திரத்தால் சகல காரியங்களையும் சாதிப்பதென்றும் சொல்லுகின்றனவோ, அவர் நீரே. இரண்டு பரார்த்தங்கள் சென்றபின் (பிரம்மதேவருடைய ஆயுசு) லோகங்கள் நாசத்தை அடைகின்றன. அதன்பின் மகாபூதங்கள் பூத

சூட்சுமத்தில் லயிக்கின்றன. வியக்தமாகிய பூதசூட்சும மானது காலத்தின் மகிமையால் பிராதனத்தில் லயிக்கிறது. அப்பொழுது சேஷரென்ற பெயருடன் பாக்கியாக இருப்பவர் நீர் ஒருவரேயாம். பிரகிருதிக்கும் அதிபதியாக இருப்பவரே! நிமிஷம் முதல் வருஷம் வரையிலாகக் கணக்கிடப்பட்ட காலமானது, எவருடைய லீலையை அனுசரிக்கிறதோ, (பட்சம், மாசம், வருஷம் என்று அடிக் கடி மாறிக் கொண்டே இருக்கிறது. அந்தக் காலமும் பகவானுடைய சேஷ்டை என்று கருத்து) எவரால் இந்த ஜகத்தானது சேஷ்டிக்கிறதோ, க்ஷேமத்திற்கு இருப் பிடமும், எல்லாவற்றிற்கும் ஈசுவரனுமாகிய அந்த உம்மைச் சரணமடைகிறேன். ஓ, எல்லாவற்றிற்கும் முந்தியவரே! மனிதன் ஸம்ஸாரமாகிய துஷ்ட யானையைக் கண்டு பயந்து சகல லோகங்களில் அலைந்தும், பயமற்ற இடம் கிடைக் காமல் தெய்வச் செயலாக உம்முடைய பாதாரவிந்தத்தை அடைந்து, மிருத்யு பயமின்றி ஸ்வஸ்தனாகத் தூங்குகிறான். (பகவானுடைய பாதத்தை சேவித்தவர்களுக்கு ஸம்ஸார பயமில்லை யென்று கருத்து). உக்கிரசேனருடைய புத்திர னாகிய கம்ஸனிடம் பயந்தவர்களான எங்களை நீர் காப் பாற்றும். பக்தர்களுக்குப் பயத்தை நிவர்த்திக்கக் கூடிய தும், தியானத்தால் அறியக்கூடிய ஈசுவரனுடையதுமான இந்த சுரூபத்தை சர்ம சக்ஷுஸ்ஸிற்கு விஷயமாகச் செய்ய வேண்டாம். (ஞானக் கண்ணால் பார்க்கக் கூடிய சுரூப மானது, தோற்கண்ணிற்குப் புலப்படவேண்டா மென்று கருத்து). தைரியமில்லாதவளாகிய நான், 'பாபியாகிய கம்ஸன் உம்முடைய அவதாரத்தை அறியாமலிருக்க வேண்டுமே' என்று பயப்படுகிறேன். ஓ, சகல ஜகத் சுரூபியான பகவன்! சங்கம், சக்கிரம், கதை, தாமரை

மலர் ஆகிய இவைகளுடைய காந்தியுள்ளதும், நான்கு கைகளுள்ளதும், திவ்யமுமான இந்த சுரூபத்தை மறைத்துக் கொள்ளும். (லோகத்திலுள்ள சிசுக்களைப் போலிருக்க வேண்டுமென்று கருத்து.) பிரளய காலத்தில் இந்த ஜகத்தானது எவருடைய சரீரத்தில் நெருக்கமில்லாமல் சுகமாக வசிக்கிறதோ, அப்படிப்பட்ட பரம புருஷனாகிய நீர் என்னிடம் அவதரித்திருக்கிறீர். இது மனுஷிய பாவனையை அங்கீகரித்ததே யொழிய வேறில்லை; இது மிகவும் ஆச்சரியம்" என்று தோத்திரஞ் செய்தாள்.

32—48. அதனைக் கேட்ட பகவான், தேவகியை நோக்கி, "ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில், முன் ஜன்மத்தில் நீ ப்ரச்னியென்ற பெயருள்ளவளாக இருந்தாய். அப்பொழுது இந்த வசுதேவர், ஸுதபஸ் என்ற பிரஜாபதியாக இருந்தார். பிரம்மதேவர் உங்கள் இருவரையும் நோக்கி, பிரஜைகளை சிருஷ்டிக்கும்படி ஆஞ்ஞாபித்தார். அப்பொழுது நீங்கள் இருவரும் இந்திரியங்களை ஜயித்து, மிகவும் கடுமையாகத் தவஞ் செய்தீர்கள். மழை, காற்று, வெயில், பனி, உஷ்ணம் ஆகிய ருதுக்களின் குணங்களைச் சகித்துக் கொண்டும், சுவாச நிரோதம் (மூச்சையடக்குவது) செய்தும், மனத்தின் மலத்தை நிவர்த்தித்துக் கொண்டும், உலர்ந்த இலைகளைப் புசித்துக் கொண்டும், சாந்த சித்தமுள்ளவர்களாகி, என்னிடத்திலிருந்து வரத்தை அடைய விரும்பி, என்னைப் பூசித்தீர்கள். இப்படி என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தி, மிகக் கடுமையாகத் தவஞ் செய்து கொண்டே, தேவ மானத்தால் பன்னிரண்டு ஆயிரம் வருஷங்களைக் கழித்தீர்கள். இப்படித் தவத்தினாலும், சிரத்தையாலும், பக்தியாலும் இருதயத்தில் என்னை

ஆராதித்தபடியால், உங்களிடத்தில் நான் சந்தோஷத்தை அடைந்து, உங்களுக்கு இஷ்டமான வரத்தைக் கொடுக்க விரும்பி, இந்த சுரூபத்துடன் தரிசனங் கொடுத்தேன். மேலும் நான், 'வேண்டிய வரத்தைக் கேட்கலாம்' என்றும் சொன்னேன். அதனைக் கேட்ட நீங்கள், கிராம்ய போகங்களை அனுபவிக்காதவர்களாகையாலும், அபுத்திரர்களாக இருந்தபடியாலும், நீங்கள் என்னுடைய மாயையால் மோகித்து மோட்சத்தைக் கொடுக்க வேண்டுமென்று கேட்கவில்லை; உம்மைப் போன்ற (பகவானைப் போல்) புத்திரன் பிறக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தீர்கள். அதன்படியே உங்களுக்கு அநுக்கிரகஞ் செய்து மறைந்தேன். பின்பு நீங்கள் கவலையற்றவர்களாகி, கிராம்யமான விஷய போகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தீர்கள். பின்பு சுபாவம், ஔதார்யம் முதலிய குணங்களில், எனக்குச் சமானன் ஒருவனுமில்லாததினால், நானே பிரச்னிகர்ப்பரென்ற பெயருடன் உங்களுக்குப் புத்திரனாகப் பிறந்தேன். மறு ஜன்மத்தில் நீங்கள் அதிதி கச்யபர்களாகப் பிறந்தீர்கள். அந்த ஜன்மத்திலும், உபேந்திரனென்ற பெயருடன் உங்களுக்குப் புத்திரனாகப் பிறந்தேன். வாமனராக (குள்ளன்) இருந்தபடியால், வாமனரென்ற பெயரை அடைந்தேன். மூன்றாவதாகிய இந்த ஜன்மத்திலும், அதே சுரூபத்துடன் உங்களுக்குப் புத்திரனானேன்; சொன்னபடி செய்தேன். முன் ஜன்மத்திய சமாசாரத்தை ஞாபகப் படுத்துவதற்காக, இந்த சுரூபத்தைக் காண்பித்தேன். மனுஷ்ய சிசுப்போலிருந்தால் என்னுடைய ஞாபகம் உங்களுக்கு உண்டாகாது. (இனி இந்த சுரூபத்தை மறைத்துக் கொள்ளுகிறேன் என்று தாத்பர்யம்). நீங்களிருவரும் என்னைப் புத்திரனாகவும் பரப்ரம்மமாகவும் தியானித்து,

என்னிடத்தில் பிரீதி செய்தீர்களாகில், என்னுடைய உத்தம கதியை அடைவீர்கள். கம்ஸனிடத்தில் நீங்கள் பயப் படுவதானால், என்னைக் கோகுலத்திற்கு அனுப்புங்கள். அவ்விடத்திலிருக்கும் என்னுடைய மாயையாகிய யசோதையின் கன்னிகையைச் சீக்கிரம் இவ்விடத்திற்கு எடுத்து வாருங்கள்; வாயிற்படிக் கதவுகள் தாமாகத் திறந்துவிடும்; தாண்ட முடியாத யமுனா நதியும் மார்க்கத் தைக் கொடுக்கும்" என்று அநுக்ரகித்து, பகவான் தம் முடைய மாயையால், தாய் தகப்பனார் பார்த்திருக்கும் பொழுதே, லோகத்திய குழந்தை போலானார்.

49—55. பின்பு பகவானுடைய உத்தரவின்படி வசு தேவர் புத்திரனை யெடுத்துக் கொண்டு, பிரசவ கிரகத்தி லிருந்து கோகுலஞ் செல்ல யத்தனப்பட்டார். அப் பொழுது கோகுலத்தில் நந்தனுடைய பத்தினியாகிய யசோதையினிடம் மாயை பெண்ணாகப் பிறந்தாள். அந்த மாயையின் மகிமையால் வாயிற் காவலாட்களும் பட்ட ணத்து ஜனங்களும் மோகித்துப் படுத்துத் தூங்கினார்கள். மேலும், அவர்களுடைய சகல இந்திரிய விருத்திகளும் அடங்கின. பருத்த சங்கிலிகள் மாட்டிப் பூட்டப்பட் டிருந்த கதவுகள் யாவும் ஸ்ரீ கிருஷ்ணனை எடுத்துக்கொண்டு வசுதேவர் வந்தவுடன், சூரியனைக் கண்டு இருட்டு விலகு வது போல் திறந்து கொண்டன. மேகமானது மெது வாகக் கர்ஜித்துக் கொண்டு வருஷித்தது. ஆதிசேஷன் அந்த ஜலத்துளி ஸ்ரீ கிருஷ்ணன்மீது விழாமல் படங்களைக் குடையாகப் பிடித்துக் கொண்டு பின் சென்றார். மிகுந்த ஆழமுள்ளதும், மிக்க வேகமுள்ள அலைகளுள்ளதும், நுரைகளுள்ளதும், பயங்கரமான சுழிகளுள்ளதுமான

யமுனை நதியானது ஸ்ரீ ராமனுக்கு சமுத்திரம் வழிவிட்டது போல, மார்க்கத்தைக் கொடுத்தது. வசுதேவர் கோகுலஞ் சென்றார். கோபர்கள் எல்லாரும் நித்திரை செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனை யசோதையின் படுக்கையில் வைத்து, அந்தக் கன்னிகையை யெடுத்துக் கொண்டு திரும்பவும் தம்முடைய கிரகத்திற்கு வந்து, தேவகியின் படுக்கையில் அக்குழந்தையை வைத்துத் தம்முடைய பாதங்களில் விலங்கைத் தரித்து முன் போலிருந்தார். நந்தனுடைய பத்தினியாகிய யசோதைக்குப் பிரசவித்தது தெரியுமேயன்றி, அக்குழந்தை ஆண் என்றாவது, பெண் என்றாவது தெரியாது. மிகுந்த சிரமத்தால் நித்திரை செய்து கொண்டிருந்தாள்.

## அத்தியாயம்—4

## தேசத்துக் குழந்தைகளைக் கம்ஸன் கொல்ல முயன்றது

1—24. பின்பு வெளியிலுள்ள வாயிற்படிக் கதவுகளும், உள்ளிருக்கும் வாயிற்படிக் கதவுகளும் முன்போலச் சாத்திக் கொண்டன. அப்பொழுது குழந்தையின் அழுகைச் சப்தத்தைக் கேட்டுக் காவலாட்கள் விழித்துக் கொண்டார்கள். பின்னுமவர்கள் சீக்கிரமாகக் கம்ஸனிடஞ் சென்று, 'தேவகி பிரசவித்தாள்' என்று தெரிவித்தார்கள். அந்தக் கம்ஸன் மிகவும் பயந்து தேவகியின் பிரசவ காலத்தை எதிர்பார்த்திருந்தவனாகையால், அதனைக் கேட்டவுடன் சீக்கிரமாகப் படுக்கையிலிருந்து எழுந்து 'இதுதான் சமயம்' என்று சொல்லிக் கொண்டு அவிழ்ந்த தலைமயிரைக் கட்டிக் கொள்ளாமல் சீக்கிரமாகத் தேவகியிருக்குமிடம் வந்தான். அதனைக் கண்ட தேவகியானவள், "ஓ நல்ல சுபாவமுள்ளவரே! அக்னி போன்ற தேஜஸ் உள்ள அநேக சிசுக்களைக் கொன்றீர். இதுவோ பெண் குழந்தை; ஆண் குழந்தையல்ல. இவள் உமக்கு நாட்டுப் பெண்ணாவாள். இவளைக் கொல்ல வேண்டாம். இந்த ஒரு பெண்ணை எனக்குக் கொடுக்கும்படி பகவான் உம்மைத் தூண்ட வேண்டும். உமக்கு நான் சகோதரியல்லவா? என்னுடைய குழந்தைகள் எல்லாம் உம்மால் கொல்லப்பட்டபடியால், புத்திர சோகத்தை அடைந்த தீனயாக இருக்கிறேன். இது தான் எனக்குக் கடைசியான குழந்தை. இதை எனக்குக் கொடுக்க வேண்டும்" என்று சொல்லி அந்தக் குழந்தையை மார்பில் அணைத்துக் கொண்டு, மிகவும் தீனமாகப் பிரார்த்தித்தாள். அதனைக் கேட்ட துஷ்டனாகிய கம்ஸன் அவளை அதட்டி, அவளுடைய கையிலிருக்கும் குழந்தையைப் பலாத்காரமாகப்

பிடுங்கிக் கொண்டான். பின்னுமவன் அந்தக் குழந்தையின் இரண்டு கால்களைப் பிடித்துச் சுழற்றி, சகோதரியின் பெண் என்ற பிரீதியை யொழித்துக் கல்லில் அடித்தான். அந்தக் குழந்தை அவனுடைய கையிலிருந்து உயரக் கிளம்பி, ஆகாயத்தில் எட்டுக் கைகளுடன் திவ்வியமான புஷ்ப மாலை, வஸ்திரம், சந்தனம், ரத்நாபரணங்கள் ஆகிய இவைகளால் அலங்கரிக்கப்பட்ட திவ்ய ஸ்திரீயாகப் பிரகாசித்தாள். மேலும் அவளுடைய கைகளில், வில், சூலம், பாணம், கேடகம், கத்தி, சங்கம், சக்கிரம், கதை ஆகிய ஆயுதங்கள் விளங்கின. மேலும், சித்தர்கள், சாரணர்கள், கின்னரர்கள், உரகர்கள், அப்ஸரஸ்கள் ஆகிய இவர்கள் காணிக்கைகளுடன் அந்த தேவியைத் தரிசித்து தோத்திரஞ் செய்தார்கள். அப்படிப்பட்ட யோக மாயையானது கம்ஸனை நோக்கி, "ஓ மூட, என்னைக் கொன்றதால் உனக்கென்ன லாபம்? உனக்குப் பூர்வ சத்துருவாக விருப்பவர் ஏதோ ஒருவிடத்தில் ஜனித்திருக்கிறார்; தீனையான என்னை வீணாக இம்சித்தாய்" என்று சொன்னாள். பின்பு அவள் அநேக க்ஷேத்ரங்களில் அநேக பெயர்களுள்ளவளாகி ஜனங்களால் பூஜிக்கப்பட்டாள். (பத்திரகாளி முதலிய சுரூபத்தை அடைந்தாள்.) அதனைக் கேட்ட கம்ஸன் மிகவும் ஆச்சரியமடைந்து, தேவகிக்கும் வசுதேவருக்கும் விலங்கைக் கழற்றி அவர்களை நோக்கி, "ஓ சகோதரியான தேவகியே! ஓ பாவ! (சகோதரியின் புருஷனுக்குப் பாவரென்று பெயர்.) பாபியாகிய நான் ராட்சதன்போல உங்களுடைய குழந்தைகளைக் கொன்றேன். நான் ஜீவித்திருக்கும்பொழுது பிராணிகளிடத்தில் கருணையில்லாமலும், மித்திரர்களிடத்திலும் பந்துக்களிடத்திலும் பிரீதியில்லாமலும், துஷ்டனாகவும், பிரும்மஹத்தி

யைச் செய்தவன் போலு மிருக்கிறேன். மரணமடைந்த பின் என்ன கதியை அடைவேனே! (தெரியவில்லை.) மனிதர்கள் பொய் சொல்வதுண்டு; தெய்வமும் பொய் சொன்னதே. அதன் வார்த்தையை நம்பி, சகோதரியின் குழந்தைகளைக் கொன்று மகா பாபியானேன். ஓ, மிகுந்த அதிருஷ்டமுள்ளவர்களே! இறந்த குழந்தைகளைப் பற்றித் துக்கிக்க வேண்டாம். அவைகள் செய்த கருமத்தால், அவைகள் மரணமடைந்தன. எப்பொழுதும் பிராணிகள் ஒரே இடத்தில் வசிக்கிறதில்லை. (புத்திரமித்திர களத்திராதிகளான பந்துக்களை விட்டுப் பிரியாமல் எப்பொழுதும் சேர்ந்திருப்பதில்லை.) அவரவர்களுடைய கருமத்திற்குத் தக்கபடி சில காலஞ் சேர்ந்திருப்பதும், பிரிகிறதுமாக இருக்கிறது. மேலும், எப்படிப் பூமியின் விகாரமான குடம் முதலியவை உண்டாகின்றனவோ, அப்படி தேகம் உண்டாகிறது; நசிக்கிறது. குடம் முதலியன உண்டாகும் பொழுதும், அவை நசித்த பின்னும் அவைகளுக்குக் காரணமாகிய மண் சத்தியமாக இருப்பதுபோல் ஆத்மா எப்பொழுது மிருக்கிறார். அவருக்கு விகாரமில்லை; அதனால் துக்கப்பட நியாயமில்லை. இதன் உண்மையை அறியாதவர்கள் தேகத்தையே ஆத்மாவென்று நினைக்கிறார்கள்; அது பிரம்மமேயாம். அதனால் நான், நீ என்ற பேதபுத்தி உண்டாகிறது. அதனால் புத்திரன் முதலியவர்களுடைய தேகத்துடன் சேர்க்கையும், பிரிவும் உண்டாகின்றன. அதனால் ஸம்ஸாரமுண்டாகிறது; அஞ்ஞானம் நிவர்த்தியாகிறதில்லை. ஆனதால் உங்களுடைய குழந்தைகள் என்னால் கொல்லப்பட்டிருந்தாலும், உண்மையில் அவர்களுடைய கருமத்தின் பயனை அடைந்தவர்களாகையால், அவர்களைப்பற்றி நீங்கள் துக்கிக்க வேண்டாம்.

சுரூபத்தின் உண்மையை அறியாமல், எவன், 'நான் கொல்லப்பட்டேன்' என்றும், 'நான் கொன்றேன்' என்றும் நினைக்கிறனோ, அவன் சரீரத்தில் அபிமான முள்ளவன்; அஞ்ஞன்; அந்த மித்யாஞ்ஞானம் நிவர்த்தி யாகும் வரையில், அவனுக்கு அந்தப் புத்தி மாறுகிறதில்லை. (உண்மையில் இவன் கொன்றவனுமல்ல, கொல்லப் பட்டவனுமல்ல. ஆத்மா நித்தியராகையால் அவருக்கு நாசமில்லை. அவர் தேகம் முதலியவைகளைக் காட்டிலும் விலட்சணரென்று தெரிந்து கொண்டால்தான், அந்த அஞ்ஞானம் விலகுமென்று தாத்பரியம்.) பந்துக்களிடத் தில் வாத்ஸல்யமுள்ள சாதுக்களே! என்னுடைய கெட்ட நடையைச் சகிக்க வேண்டும்" என்று சொல்லிக் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு தேவகியின் பாதத்தை யும் வசுதேவருடைய காலையும் பிடித்துக் கொண்டான். இப்படி யோக மாயையின் வார்த்தையை நம்பிக் கம்ஸன், தேவகியையும் வசுதேவரையும் விலங்கிலிருந்து விடுவித்து, அதிகப் பிரீதியைக் காட்டி, பச்சாத்தாபமடைந்தான்.

25—28. அதனைக் கண்ட தேவகி, வசுதேவர் ஆகிய இருவர்களும் அவனுடைய குற்றத்தை மன்னித்து, அவனிடமிருந்த கோபத்தைத் தணித்துக் கொண்டார்கள். பின்னும், வசுதேவர் சிரித்துக்கொண்டு, கம்ஸனை நோக்கி, "மகாராஜ! உம்மால் சொல்லப்பட்டது யாவும் உண்மையே. 'நான்' என்ற அகங்காரமானது அஞ்ஞானத் தாலுண்டானது. அதனால் தான் 'பிறர்' என்ற பேதம் ஏற்படுகிறது. சோகம், சந்தோஷம், பயம், த்வேஷம், லோபம், மோகம், மதம் ஆகிய இவைகளுள்ள அகங்காரி கள், சரீரம் முதலியவைகளைக் கொண்டு, 'சரீரம் முதலிய வைகளை ஈசுவரன் வதஞ் செய்கிறார்' என்பதைத் தெரிந்து

கொள்ளுகிறதில்லை. பகவான் சரீரம் முதலியவைகளைக் கொண்டு, மற்றொரு சரீரம் முதலியவைகளை நாசஞ் செய்கிறார்; தாம் சாட்சியாகவிருக்கிறார்" (அதனால் கொல்பவனுமில்லையென்று தாத்பரியம்) என்று சுத்தமான மனதுடன் சொன்னார். இப்படிக் கோபமற்றவர்களான தேவகி வசுதேவர்களிடத்தில், கம்ஸன் விடைபெற்றுத் தன்னுடைய அரண்மனை சென்றான்.

29—47. மறுநாள் உதயத்தில், கம்ஸன் மந்திரிகளை வரவழைத்து, அவர்களை நோக்கி, யோக மாயையால் சொல்லப்பட்ட சமாசாரத்தைத் தெரிவித்தான். அதனைக் கேட்ட தேவ சத்துருக்களான அற்பயோசனையுள்ள அசுரர்கள் (பிரத்யட்சத்தையே உண்மையாக நினைத்தவர்கள்.) தேவர்களிடத்தில் மிகுந்த கோபங்கொண்டு, கம்ஸனை நோக்கி, "போஜர்களுக்கரசே! நீர் சொல்வது உண்மையானால், (உன்னைக் கொல்வதற்காக ஜனித்தவன் எவ்விடத்திலோ இருக்கிறான் என்று மாயை சொன்னது) பட்டணங்கள், கிராமங்கள், கோகுலங்கள் முதலிய இடங்களிலிருக்கும், ஜனித்துப் பத்து நாட்களுக்குட்பட்ட குழந்தைகளையும் பத்து நாட்களுக்கு அதிகமான குழந்தைகளையும் கொன்றுவிடுவோம். தேவர்களுடைய யத்தனம் பலிக்குமா? எப்பொழுதும் தேவர்கள் யுத்தமென்றால் பயப்படுவார்கள். உம்முடைய வில்லின் நாணொசையைக் கேட்டு அவர்களுடைய மனம் நடுங்குகிறது. நீர் பாணங்களைப் பிரயோகிக்கும் பொழுது, அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்டு உயிர் பிழைக்கவேண்டிப் பல திக்குகளிலும் ஓடி ஒளிந்து கொள்கிறார்கள். சிலர் பயந்து ஆயுதங்களை எறிந்து கைகூப்பி, அவிழ்ந்த கச்சை, தலைமயிர் இவைகளைக் கட்டிக்கொள்ளாமலேயே 'ஜயிக்கப்பட்டோம்'

என்று சொல்லுகிறார்கள். ஆயுதமில்லாதவர்களையும், அஸ்திரமில்லாதவர்களையும், ரதமில்லாதவர்களையும், பயந்து வணங்கினவர்களையும், பிறருடன் யுத்தஞ்செய்பவர்களையும், யுத்தத்தில் விருப்பமில்லாதவர்களையும், எதிர்த்து யுத்தஞ் செய்யாதவர்களையும் நீர் அடிக்கிறதில்லை. மேலும், தேவர்கள் யுத்தமில்லாத சமயத்தில் தங்களைப் புகழ்ந்து கொள்வார்கள்.(யுத்தமென்றால் பயந்து ஓடுவார்கள் என்று தாத்பரியம்) க்ஷேமகாலத்தில் சூரர்களாக இருப்பார்கள். அப்படிப்பட்ட தேவர்களால் என்ன செய்யமுடியும்? மகா விஷ்ணுவோ, ஒருவருடைய கண்ணுக்கும் புலப்படாமல் ரகசியமான இடத்திலேயே வசிப்பவர். ஆனதால் அவரால் என்ன செய்யக்கூடும்? பரமசிவனோ ஸ்திரீகளால் நிறைந்த இளாவிருதத்திலேயே வசிக்கிறார். (அவ்விடத்தில் புருஷர்களே இல்லை) அவரால் என்ன செய்யக்கூடும்? எதனைச் செய்யப்போகிறார்? பிரம்மதேவர் எப்போதும் தபசு (த்யானம்) செய்பவர்; அவரால்தான் என்ன செய்ய முடியும்? ஆனதால் தேவர்களால் கெடுதி செய்யமுடியாது. ஆனாலும், அவர்கள் நமக்கு விரோதிகளாகையால், அவர்களை உபேக்ஷித்திருப்பது சரியல்ல. சரீரத்தில் உண்டான வியாதி விருத்தியடைந்த பிறகு வைத்தியஞ்செய்வது எப்படிப் பிரயோசனமற்றதோ, இந்திரியங்கள் விஷயங்களில் சென்ற பிறகு அவைகளை யடக்குவது எப்படி அசாத்தியமோ, அப்படி சத்துரு விருத்தியாகிவிட்டால், பிறகு அவனை ஜயிப்பது சிரமசாத்தியமான காரியம். ஆனதால் உம்முடைய சேவகர்களான எங்களுக்கு உத்தரவு கொடும். சத்துருக்களை நாசஞ்செய்கிறோம். சகல தேவர்களுக்கும் மகாவிஷ்ணுவே மூலம். அவரிடத்தில் ஸனாதனமாகிய தருமமிருக்கிறது. அந்த விஷ்ணுவிற்குப்

பசுக்களும், பிராம்மணர்களும், தபசும் பூர்ணமான தக்ஷிணையுள்ள யாகங்களும் மூலங்களாக இருக்கின்றன. ஆனதால், ஓ மகாராஜ! வேதாத்தியயனஞ் செய்த பிராம் மணர்களையும், தபஸ்விகளையும், யாகஞ்செய்பவர்களையும், ஆஜ்யம் முதலிய ஹவிஸ்ஸைக் கொடுக்கும் பசுக்களையும் நாசஞ்செய்வோம்; பிராமணர்கள், பசுக்கள், வேதங்கள், தபஸ், ஸத்யம், மனத்தையடக்குவது, இந்திரியங்களை ஜயிப்பது, சிரத்தை, தயா, பொறுமை, யாகம் ஆகிய இவைகள் ஸ்ரீ மகாவிஷ்ணுவிற்குச் சரீரங்களாக இருக் கின்றன. அந்த மகாவிஷ்ணு அசுரர்களுக்கு விரோதி; பிரம்மா முதலிய சகல தேவர்களுக்கும் மூலமாக இருப் பவர்; மகரிஷிகளைக் கொல்வதே அவரைக் கொல்லும் உபாயமாகிறது. ஆனதால் நீர் உத்தரவு கொடுத்தால், பசுக் களையும் பிராம்மணர்களையும் நாசஞ்செய்கிறோம்" என் றார்கள். இப்படித் துஷ்டர்களான மந்திரிகளுடன் கம்ஸன் யோசனைசெய்து, காலம் குறுகிவிட்டபடியால் பிராம்மணர் களைக் கொல்வதே தனக்கு இதமென்று நிச்சயித்தான். பின்னுமவன், பிறரை உபத்திரவிப்பதிலேயே பிரியமுள்ள வர்களும், இஷ்டப்படி சரீர மெடுத்துக்கொள்ளும் சக்தி உள்ளவர்களுமான அசுரர்களை நோக்கி, லோகத்தை உபத் திரவிக்கும்படி ஆஞ்ஞாபித்து, தன்னுடைய அரண்மனை சென்றான். அதனைக் கேட்ட அசுரர்கள் ரஜோகுண சுபாவ முள்ளவராகையாலும், அவர்களுக்கு மரணம் சமீபித்தபடி யாலும், தமோகுணத்தால் புத்தி மயக்கத்தை அடைந்து, சாதுக்களுக்கு விரோதமானதைச் செய்தார்கள். பெரியோர் களுக்கு அபராதஞ்செய்தால், அது ஆயுசு, ஐசுவர்யம், கீர்த்தி, தர்மம், உத்தம லோகம், மற்ற காமனை முதலிய சகல க்ஷேமத்தையும் நாசஞ்செய்யும்.

## அத்தியாயம்—5

## நந்தன் வசுதேவரைச் சந்தித்தது

1—18. கோகுலத்தில் நந்தர் தமக்கு புத்திரன் ஜனித்ததைக்கண்டு மிக்க ஆனந்தமடைந்து, கம்பீர மனமுள்ளவராகி, ஸ்நானஞ் செய்து சுத்தராகி, அலங்காரஞ் செய்து கொண்டு, வேதங்களை யறிந்தவர்களான பிராம்மணர்களை அழைப்பித்து, பிறந்த குழந்தைக்கு ஜாதகர்மஞ் செய்வித்து, ஸ்வஸ்திவாசனஞ் செய்வித்தார். மேலும் அவர் பித்ருக்கள், தேவர்கள் இவர்களுடைய பூஜையை நடத்தினார். பின்னுமவர் சுவர்ணத்தாலும், வஸ்திரத்தாலும் அலங்கிருதங்களான இரண்டு லட்சம் பசுக்களைப் பிராம்மணர்களுக்குத் தானஞ் செய்தார். ரத்தினங்கள், தங்கம், வஸ்திரம் ஆகிய இவைகளுள்ள ஏழு தில பர்வதங்களையும் தானஞ்செய்தார். (எள்ளை மலைபோல் குவித்து அதில் ரத்தினங்களையும், சுவர்ணங்களையும் போட்டு, அதன் மீது உயர்ந்த வஸ்திரங்களைச் சுற்றி மலைபோன்ற இவைகளைத் தானஞ் செய்வது தில பர்வத தானமெனப்படும்.) காலத்தால் பூமி முதலியவைகளும், ஸ்நானத்தால் தேகம் முதலியவைகளும், சௌசத்தால் சில வஸ்துக்களும், ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களால் குழந்தையும், தபஸினால் இந்திரியங்களும், யாகத்தால் பிராம்மணன் முதலியவர்களும், தானத்தால் திரவ்யங்களும், சந்தோஷத்தால் மனதும், ஆத்ம வித்தையால் ஆத்மாவும் சுத்தியடைகின்றன. பிராம்மணர்கள் ஸ்வஸ்திவாசனஞ் செய்தார்கள். சூதர்கள், மாகதர்கள், வந்திகள் ஆகிய இவர்கள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள்; பாடகர்கள் கானஞ்செய்தார்கள்; பேரிகளும், துந்துபிகளும் முழங்கின. கோகுலத்

தில் ஒவ்வொரு வீட்டிலும், வாயிற்படியும், வீட்டின் உள் பிரதேசங்களும் மெழுகிச் சுத்தஞ் செய்யப்பட்டன. மேலும் அவைகள் பலவகையான துவஜங்களாலும், பதாகைகளாலும், பட்டுத் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டன. பசுக்களும், கன்றுகளும் அதிகச் சந்தோஷமுள்ளவைகளாக இருந்தன. மேலும், அவைகள் மஞ்சள், எண்ணெய், பலவகையான தாதுக்கள், மயில் தோகை, புஷ்பமாலை, வஸ்திரம், சுவர்ணமாலை ஆகிய இவைகளால் அலங்கரிக்கப்பட்டன. கோபர்களெல்லோரும் விலை உயர்ந்த வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டும், உத்தமமான ஆபரணங்களை யணிந்தும், கவசம் (சட்டை), தலைப்பாகை இவைகளைத் தரித்தும், பலவகையான காணிக்கை வஸ்துக்களை எடுத்துக்கொண்டும், நந்தருடைய கிருகத்திற்கு வந்தார்கள். கோபிகைகளும், யசோதைக்குப் புத்திரன் பிறந்ததை கேள்விப்பட்டு, உயர்ந்த வஸ்திரம், ஆபரணங்கள், மை ஆகிய இவைகளால் தங்கள் சரீரத்தை அலங்கரித்துக் கொண்டார்கள். அவர்களுடைய முகமானது குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்டு, தாதுக்களால் பிரகாசிக்கும் தாமரை மலர்போல விளங்கிற்று. பின்னுமவர்கள் காணிக்கைகளாகப் பல வஸ்துக்களை யெடுத்துக்கொண்டு நந்தருடைய கிருகத்திற்குச் சென்றார்கள். அவர்கள் பெரிதான முன்பாகமுள்ளவர்கள்; அவர்கள் நடக்கும் பொழுது ஸ்தனங்கள் அசைகின்றன; மேலும் அவர்கள் உத்தமமான ரத்தினங்களிழைத்த குண்டலங்களைத் தரித்தவர்கள்; அவர்களுடைய கண்டத்தில் ஹாரங்கள் பிரகாசிக்கின்றன; அவர்கள் பல வர்ணமுள்ள வஸ்திரத்தை யுடுத்திக் கொண்டவர்கள்; அவர்கள் விளையாட்டாக நடக்கும் பொழுது தலையில் வைத்துக்கொண்டிருந்த மாலைகள்

நழுவிக் கீழே விழுகின்றன; வளைகள் சப்திக்கின்றன; தலைமயிர்களும், ஸ்தனங்களும் அசைகின்றன; இப்படிக் கோபிகைகள் நந்தருடைய கிருகம் சென்று, அவ்விடத்தில் குழந்தையாக அவதரித்திருக்கும் ஸ்ரீ மகாவிஷ்ணுவை நோக்கி, “வெகு காலம் எங்களைக் காப்பாற்று” என்று ஆசீர்வதித்து, மஞ்சள் பொடி, எண்ணெய், ஜலம், ஆகிய இவைகளால் புரோக்ஷித்தார்கள். சகல ஜகத்திற்கும் அதிபதியும், அனந்தருமாகிய ஸ்ரீ மகாவிஷ்ணு கோகுலத்தில் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரிக்கும்பொழுது பலவகையான வாத்தியங்கள் முழக்கப்பட்டன. கோபர்கள் மிகவும் சந்தோஷத்தை அடைந்து தயிர், நெய், பால், ஜலம், வெண்ணெய் ஆகிய இவைகளை ஒருவர்மீது மற்றொருவர் விட்டெறிந்து கொண்டும், சரீரத்தில் பூசிக் கொண்டும் விளையாடினார்கள். மிக்க விசால மனமுள்ளவராகிய நந்தர், புத்திரன் பிறந்ததால் ஆனந்தத்தை அடைந்து, கோபர்களுக்கு வஸ்திரம், ஆபரணம், பசுக்கள் ஆகிய இவைகளைக் கொடுத்தார். பின்னும், சூதர்கள், மாகதர்கள், வந்திகள், வித்தையைக்கொண்டு ஜீவிக்கும் மற்றவர்கள் ஆகிய இவர்களுக்கு இஷ்டமான வஸ்துக்களைக் கொடுத்தார். இப்படி நந்தர், புத்திரனுடைய க்ஷேமத்திற்காக ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பூஜிப்பதற்காகவும் எல்லாரையும் தக்கபடி பூஜித்தார். (விஷ்ணுவாக பாவித்து அர்ச்சித்தார் என்று தாத்பரியம்). மிகுந்த அதிருஷ்டமுள்ளவளாகிய (பலராமனைப் பெற்றதால்) ரோகிணி தேவியும் நந்தகோபரால் ஆதரிக்கப்பட்டு, திவ்வியமான மாலை, சந்தனம், ஹாரம் முதலிய ஆபரணங்கள் ஆகிய இவைகளால் அலங்கரிக்கப்பட்டு, ஆனந்தமாக சஞ்சரித்தாள். அந்த கோகுலத்தில் பகவான் அவதரித்ததுமுதல், கோகுலமானது மிகுந்த

ஐசுவரியமுள்ளதும், லக்ஷ்மிதேவி விளையாடும் ஸ்தலமாகவு மிருந்தது.

19—28. இப்படிச் சில நாள் சென்றபின், நந்தர் கோகுலத்தை சாவதானமாக சம்ரட்சிக்கும்படி கோபர்களை ஆஞ்ஞாபித்து, கம்ஸனுக்கு வருஷ வரி செலுத்துவதற்காக மதுரா நகரஞ் சென்றார். அப்பொழுது வசுதேவர், நந்தர் வந்திருக்கிறார் என்பதையும், வரி செலுத்தியாகிவிட்ட தென்பதையும் கேள்விப்பட்டு நந்தருடைய இருப்பிடத்துக்கு வந்தார். பிராணனைக் கண்ட தேகம்போல, நந்தர் வசுதேவரைக் கண்டு எழுந்திருந்து, மிகுந்த பிரியத்துடன் இரு கைகளாலும் ஆலிங்கனஞ் செய்துகொண்டார். பின்னும் வசுதேவரைப் பூஜித்தார். வசுதேவர் சுகமாக ஆசனத்தில் உட்கார்ந்து, மிகுந்த ஆதரவுடன் க்ஷேமம் விசாரித்து, (வியாதியில்லாமலிருக்கிறீரா?) தம்முடைய புத்திரர்களான பலராமன், கிருஷ்ணன் ஆகிய இவர்களுடைய ஞாபகமுள்ளவராகி, நந்தரை நோக்கி, "ஓ பிராதாவே! வயது சென்றவரும், இனி நமக்குப் புத்திரன் பிறக்கப் போகிறதில்லையென்று ஆசையொழிந்தவருமாகிய உமக்குப் பிள்ளை பிறந்தது தெய்வச் செயலேயாம். ஸம்ஸார சக்ரத்தில் சுழன்று கொண்டிருக்கும் ஜனங்களுக்கு மித்திரருடைய தரிசனங் கிடைப்பது அரிது. ஆனதால், புனர்ஜனனத்தை (திரும்பவும் பிறப்பை) அடைந்தவன்போல, நான் உம்மைத் தரிசித்தேன். இதுவும் தெய்வச் செயலேயாம். நதியின் ஜலத்தில் மிதக்கும் கட்டைகள், எப்படி எப்பொழுதும் ஓரேவிடத்தில் சேர்ந்திருப்பதில்லையோ, அப்படியே ஜனங்களும் ஒரேவிடத்தில் சேர்ந்து வசிப்பதில்லை. அவர்

களுடைய கர்மமானது பலவகையானதாகையால், கர்மத்திற்குத் தக்கபடி பிரிவை அடைகிறார்கள். (ஆனதால் மித்திரனைப் பார்ப்பது துர்லபமென்று கருத்து.) பசுக்களுக்கு அநுகூலமான பூமி, ஜலம், புல், கொடி முதலியவைகள் க்ஷேமமாக இருக்கின்றனவா? எவ்விடத்தில் நீர் பந்துக்களுடன் வசிக்கிறீரோ, அந்த பிருகத் வனம் குறைவற்றதாக இருக்கிறதா? ஓ, ப்ராதாவே! உம்மையே பிதாவாக நினைத்துக் கொண்டவனும், உங்களால் (நந்தன், யசோதை இருவர்கள்) போஷிக்கப்பட்டவனுமான என்னுடைய புத்திரன் பலராமன் கோகுலத்தில் மாதாவுடன் வசிக்கிறானல்லவா? அவன் க்ஷேமமாக இருக்கிறானா? பந்துக்களை ரக்ஷிப்பதற்காகவே புருஷனுக்குத் தர்மம், அர்த்தம், காமம் ஆகிய இவைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆனதால் பந்துக்கள் கஷ்டப்பட்டால், அம்மூன்றும் பிரயோசனமற்றவைகளாகின்றன" என்றார்.

29—30. அதனைக் கேட்ட நந்தர், வசுதேவரை நோக்கி, "தேவகிக்கு அநேக குழந்தைகள் பிறந்தும், அவைகள் கம்ஸனால் நாசஞ் செய்யப்பட்டன. கஷ்டம்! ஒரு பெண் மிஞ்சியது; அதுவும் ஆகாயஞ் சென்றது. இந்த லோகமானது அதிருஷ்டத்தையே முடிவாகவுடையது; மேலும், ஜனங்கள் அதிருஷ்டத்தை முக்கியமாகக் கொண்டவர்கள்; தனக்கு சுகத்தையும், துக்கத்தையும் கொடுப்பது அதிருஷ்டமேயாம். இதனைத் தெரிந்து கொண்டவன் மோகத்தை அடையான் என்றார். (புத்திரனைக் கொடுக்கும் அதிருஷ்டமானது குறையும்பொழுது, புத்திரனுக்குக் கெடுதி யுண்டாகிறது; விட்டுப் பிரிந்த ஜ்ரன் முதலியவர்களைச் சேர்த்து வைப்பதும்

அதிருஷ்டமே. சுகதுக்கங்கள் அதிருஷ்டத்தால் உண்டாகின்றனவானதால் மரணமடைந்த புத்திரர்களைப்பற்றி துக்கிக்கவேண்டாமென்று கருத்து.)

31—32. அதனைக் கேட்ட வசுதேவர், "அரசனுக்கு வருஷ வரி செலுத்தியாகி விட்டது; என்னையும் பார்த்தீர்; கோகுலத்தில் உத்பாதங்கள் (அபசகுனங்கள்) உண்டாகின்றன. இவ்விடத்தில் அதிக நாள் வசிக்கவேண்டாம்; கோகுலத்திற்குப் போகலாம்" என்று சொன்னார். அதனைக் கேட்ட நந்தன் முதலிய கோபர்கள், வசுதேவரிடம் விடைபெற்று, எருதுகள் கட்டிய வண்டிகளில் ஏறிக்கொண்டு கோகுலஞ் சென்றார்கள்.

## அத்தியாயம்—6

## ஸ்ரீ கிருஷ்ணன் பூதனையை ஸம்ஹரித்தது

1. நந்தர் மதுரா நகரத்திலிருந்து கோகுலத்திற்குப் போகும் வழியில் உத்பாதங்களைக் கண்டு, 'வசுதேவர் சொன்னது உண்மையாக இருக்கலாம்' என்று யோசித்து, 'ஸ்ரீமந் நாராயணன் நமக்கு க்ஷேமத்தைச் செய்யட்டும்' என்று பகவானைச் சரணமடைந்தார்.

2—10. கம்ஸனுல் சிசுக்களைக் கொல்லும்படி ஆஞ்ஞாபிக்கப்பட்ட பூதனையென்ற ராட்சஸி, பட்டணங் களிலும், கிராமங்களிலும், கோகுலங்களிலும் சென்று, குழந்தைகளை வதஞ் செய்துவந்தாள். எவ்விடத்தில் ராட்சதர்களை வரவொட்டாமல் தடுக்கும் ஸ்ரீபகவானுடைய திவ்ய நாமங்கள் உச்சரிக்கப்படவில்லையோ, அவ்விடத்தில் ராட்சதர்களுடைய சக்தி பயன்படும். (ஸ்ரீ பகவானே நேரில் வசிக்கும் கோகுலத்தில் ராட்சதர்களுடைய சக்தி பிரயோசனப்படுமா) அந்தப் பூதனை யென்ற ராட்சஸி, நந்தர் மதுரா சென்றிருந்த சமயத்தில் கோகுலத்திற்குள் புகுந்தாள். அவள் இஷ்டப்படி சுரூபமெடுத்துக் கொள்ளும் சக்தியுள்ளவளாகையால், மாயையால் உத்தம ஸ்திரீயாக வேஷந் தரித்துக்கொண்டாள். அவள் தலைமயிர் மல்லிகைப் புஷ்பத்தினுல் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பின் பக்கம், ஸ்தனம் ஆகிய இவைகள் பருத்திருந்தன; இடுப்பு சிறிதாக இருந்தது. நல்ல வஸ்திரத்தைத் தரித்திருந்தாள். காதில் அணிந்திருக்கும் குண்டலங்களுடைய காந்தியால் அவளுடைய முகம் விளங்கிற்று. மேலும், மனோகரமாகிய மந்தஸ்மித முள்ளவளும், கோகுலத்திலுள்ளவர்க

ளெல்லோருடைய மனத்தை அபகரிக்கக்கூடிய சரீரமுள்ள வளுமாக இருந்தாள். அவளைக் கண்ட கோபிகைகள், 'லக்ஷ்மீதேவி தன்னுடைய பர்த்தாவைத் தரிசிப்பதற்காக, மனித வடிவத்துடன் கையில் தாமரை மலரைத் தரித்து வருகிறாள்' என்று நினைத்தார்கள். சிசுக்களைக் கொல்லும் பாலகிரஹமாகிய பூதனை குழந்தைகளைத் தேடிக்கொண்டு, தெய்வச்செயலாக நந்தருடைய கிருகத்திற்குள் வந்தாள். அவ்விடத்தில் அசத்துக்களை நாசஞ்செய்பவரான குழந்தையைக் கண்டாள். அந்தக் குழந்தை தன்னுடைய தேஜஸ்ஸை மறைத்துக்கொண்டு, சாம்பலால் மூடப்பட்ட நெருப்புத் தணல் போலிருந்தது. அப்பொழுது அசையும் பொருள் அசையாப்பொருளாகிய இவைகளின் சுரூபியும், இயற்கையில் ஜகத்தின் சகல வியாபாரங்களையும் அறிந்த வருமாகிய பகவான் 'இவள் சிசுக்களைக் கொல்பவள்; வருகிறாள்' என்று அறிந்திருந்தும், கண்களை மூடிக் கொண்டு, தாம் மகேசுவரராலும் மனுஷிய சுபாவத்தை யனுசரித்து மௌனமாக இருந்தார். அப்படிப்பட்ட அனந்தரும், தனக்கு யமனுமாகிய பகவானை, மடியில் தூக்கி வைத்துக்கொண்டாள். அது தூங்கும் சர்ப்பத்தைக் கயிறு என்று பிரமித்து, மடியில் வைத்துக்கொண்டது போலிருந்தது. அழகான உறைக் குள்ளிருக்கும் கத்தி போலக் கொடிய மனமுள்ளவளும், அழகான நடையுள்ள வளுமான அந்த உத்தம ஸ்திரீ ரூபமுள்ள பூதனையைக் கண்டு அவளுடைய காந்தியால் பிரமித்து, (இந்தக் குழந்தைக்குத் தாய் இவளோ, நாமோவென்று) ரோகிணியும், யசோதையும் 'குழந்தையை எடுக்கவேண்டாம்' என்று தடைசெய்யாம லேயே பார்த்திருந்தார்கள்.

11—18. கொடியவளாகிய அந்தப் பூதனை, விஷப் பாலுள்ள ஸ்தனத்தை ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தாள். அதன் பால் குரூரமான வீரியமுள்ளது. பகவான் அந்த ஸ்தனத்தை இரு கைகளாலும் பிடித்துக்கொண்டு, கோபத்துடன் அவளுடைய பிராணனையும் சேர்த்துப் பானஞ் செய்தார். (இவளுடைய பால் விஷமானதால் இது அபத்திய மென்று நினைத்துப் பிராணனையும் புசித்தார்). அப்பொழுது அவளுக்கு சகல மர்மங்களிலும் வலி யுண்டாயிற்று. கால்களை நீட்டினாள்; கைகளைப் பூமியில் கிடத்தினாள். கண்கள் பிதுங்கிப் போயின; தேகத்தில் வியர்வை யுண்டாயிற்று. 'போதும்; விடு, விடு' என்று சொல்லிக் கதறினாள். அவளுடைய சப்தத்தால் பர்வதங்களும் பூமியும் அசைந்தன. சூரியன் முதலிய கிருகங்களுடன் ஆகாயம் சலித்தது; பாதாளம் அசைந்தது. ஜனங்கள் இடி விழுமோ வென்று பயந்து பூமியில் விழுந்தார்கள். திக்குகளிலிருந்து எதிரொலி யுண்டாயிற்று. அந்த ராக்ஷஸியானவள், தன்னுடைய ராட்சத சுரூபத்தை அடைந்து உயிரை இழந்தாள்; அவள் வாய் திறந்தது; கைகளும் தலைமயிர்களும் பரப்பப்பட்டன. அவளுடைய தேகமானது வச்சிரத்தால் அடிக்கப்பட்ட விருத்ரனுடைய சரீரம்போல பூமியில் விழுந்தது. அப்படி விழுந்த அவளுடைய சரீரத்தால் ஆறு குரோசத்திற்குட்பட்ட பூமியிலிருக்கும் விருட்சங்கள் பொடியாக்கப்பட்டன. அது மிக்க ஆச்சரியகரமாக இருந்தது. மேலும் அவளுடைய முகம் ஏர்க்கால் போன்ற பயங்கரமான சிங்கப் பற்களுள்ளதாகவும், மலையின் குகை போன்ற மூக்குள்ளதாகவு மிருந்தது. ஸ்தனங்களோ குண்டுக்கற்கள் போலிருந்தன. மயிர்கள் விரிந்தும் சிவந்த நிறமுள்ளவையுமாக இருந்தன. கண்கள் பாழுங் கிணறு

போல் ஆழமாக இருந்தன. நிதம்பமானது (இடுப்பின் பின்பக்கம்) மணல்திட்டுப்போலப் பயங்கரமாக இருந்தது. கைகளும் கால்களும் அணைக்கட்டுகள் போலிருந்தன. வயிறு ஜலமற்ற மடுவைப்போலிருந்தது. அந்த சரீரத்தைப் பார்த்துக் கோபர்களும், கோபிகைகளும் முந்தி அவளுடைய சப்தத்தைக் கேட்டு நடுங்கினவர்களானாலும் விசேஷமாகப் பயந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அந்த சரீரத்தின்மீது பயமற்று விளையாடினார்.

19—31. அதனைக் கண்ட கோபிகைகள் வேகமாக ஓடிக்குழந்தையை எடுத்தார்கள். பின்னும் அந்தக் கோபிகைகள் யசோதை, ரோகிணி ஆகிய இவர்களுடன் அந்தக் குழந்தைக்குக் கோ புச்சப்ராமணம் (பசுவின் வாலைக் கையில் வைத்துக்கொண்டு நான்கு புறத்திலும் சுற்றுதல்) செய்து கோமூத்திரத்தால் குழந்தைக்கு ஸ்நானம் செய்வித்து, கோதூளியைப் பூசி கோமயத்தால் (சாணம்) நெற்றி முதலிய பன்னிரண்டு அவயவங்களில் கேசவ முதலிய திவ்யநாமங்களை உச்சரித்து ரட்சைசெய்தார்கள். மேற்சொல்லியபடி கோபிகைகள், பரபரப்பினால் ஆசமனஞ் செய்யாமலேயே ரட்சையைச்செய்து பிந்தி ஆசமனஞ் செய்து அங்கன்யாஸம் (வைப்பு) கரன்யாஸம் இவைகளைச் செய்து அக்குழந்தைக்கும் அவைகளைச் செய்தார்கள். எப்படியெனில், 'ஓ குழந்தாய்! உன்னுடைய பாதத்தை அஜரென்ற திவ்ய நாமதேயமுள்ள பகவான் ரட்சிக்கட்டும். உன்னுடைய முழங்கால்களை சூட்சும ரூபியான பகவான் காப்பாற்றட்டும். தொடைகளை யக்ஞ சுரூபியான ஈசுவரன் ரட்சிக்கட்டும். இடுப்பை அச்சுதர் ரட்சிக்கட்டும். வயிற்றை ஹயக்ரீவர் ரட்சிக்கட்டும். இருதயத்தைக்

கேசவரும், உன்னுடைய மார்பை ஈசுவரனும், (ஸர்வ நியந்தா), கழுத்தை இனரும் (சூரியன்),கையை விஷ்ணுவும், முகத்தை உருக்ரமரும் (த்ரிவிக்ரமாவதாரஞ் செய்தவர்), சிரசை ஈசுவரரும் ரட்சிக்கட்டும். மேலும் சக்ராயுதமுள்ள பகவான் முன்னும், கதாயுதம் தரித்த பகவான் பிந்தியும், வில்லைத்தரித்த மதுஸூதனர், கத்தியைத் தரித்தவராகிய அஜனர் ஆகிய இவர்கள் இருபக்கங்களிலும், சங்கத்தைத் தரித்த பகவான் கோணங்களிலும், உருகாயரான பகவான் (பெரியோர்களால் கானஞ் செய்யக்கூடியவர்) உயரவும் இருந்து காப்பாற்றட்டும். கருடன் கீழிருந்து ரட்சிக்கட்டும். ஹலதரரான பகவான் (கலப்பையைத் தரித்த) எங்குமிருந்து ரட்சிக்கட்டும். மேலும் உன்னுடைய இந்திரியங்களை ஹிருஷீகேசர் (இந்திரியங்களுக்கு அதிபதி) ரட்சிக்கட்டும். ஸ்ரீமந் நாராயணன் பிராணனைக் காப்பாற்றட்டும். சுவேத த்வீபத்திற்கு அதிபதியான பகவான் சித்தத்தைக் காப்பாற்றட்டும். யோகேசராகிய பகவான் மனத்தை ரட்சிக்கட்டும். பிரச்னி கர்ப்பர் உன்னுடைய புத்தியை ரட்சிக்கட்டும். பரராகிய பகவான் அகங்காரத்தை ரட்சிக்கட்டும். விளையாடுகிற உன்னைக் கோவிந்தர் காப்பாற்றட்டும். படுத்துக் கொண்டிருக்கும் உன்னை மாதவர் ரட்சிக்கட்டும். நடந்துகொண்டிருக்கிற உன்னை வைகுண்டர் சம்ரட்சிக்கட்டும். உட்கார்ந்திருக்கும் உன்னை லக்ஷ்மீபதியாகிய பகவான் ரட்சிக்கட்டும். சகல கிருகங்களுக்கும் பயங்கரரும், யக்ஞத்தை அநுபவிப்பவருமாகிய பகவான் அன்னம் முதலியவைகளைப் புசிக்கும் உன்னை சம்ரட்சிக்கட்டும். மேலும் டாகினிகள், ராக்ஷஸிகள், கூச்மாண்டர்கள், குழந்தைகளுக்கு விரோதிகளான கிருகங்கள், பூதங்கள், பிரேதங்கள், பிசாசங்கள்,யக்ஷர்கள்,

ராட்சதர்கள், விநாயகர்கள், கோடரா, ரேவதி, ஜ்யேஷ்டா, பூதனை, மாதிருகா முதலியவர்கள் சரீரத்தையும், பிராணனையும் இந்திரியங்களையும் கெடுக்கக்கூடிய அபஸ்மாரங்கள், சொப்பனத்தில் காணப்பட்ட பெரிதான உத்பாதங்கள், விருத்த கிருகங்கள், பால கிருகங்கள் ஆகிய எல்லாம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் திவ்ய நாமதேயத்தை உச்சரித்தால் நாசத்தை அடையட்டும்" என்று கோபிகைகள் மிக்கப் பிரியத்துடன் ரட்சை செய்தார்கள். பின்பு யசோதை குழந்தையை யெடுத்துப் பால் கொடுத்துத் தொட்டிலில் படுக்கவைத்தாள்.

32—41. அந்தச் சமயத்தில் நந்தர் முதலிய கோபர்கள் மதுரையிலிருந்து கோகுலம் வந்தார்கள். பூதனையின் சரீரத்தைக் கண்டார்கள். மிகவும் ஆச்சரியத்தை அடைந்தார்கள். அப்பொழுது நந்தர் "வசுதேவர் மகரிஷியாகவாவது, ஞானியாகவாவது, சிறந்த யோகியாகவாவது இருக்க வேண்டும். அவர் எவ்விதம் உத்பாதங்கள் உண்டாகின்றன என்று சொன்னரோ, அதன் பயன் அவ்விதமே காணப்பட்டது" என்று சொல்லி ஆச்சரியப்பட்டார். பின்பு கோகுலத்தில் வசிக்கும் கோபர்கள் அந்தப் பூதனையின் சரீரத்தைக் கோடரிகளால் பிளந்து அப்புறப்படுத்தி, கட்டைகளில் வைத்து எரித்தார்கள். அதிலிருந்து கிளம்பிய புகையானது அகில் கட்டையின் வாசனைபோல் வீசிற்று. ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவளுடைய ஸ்தன்யத்தைப் பானஞ் செய்ததனல் அவள் சத்தையானள். இப்படி லோகத்திலுள்ள குழந்தைகளைக் கொன்றவளும், ரத்தபானஞ் செய்தவளும், ராக்ஷஸியுமான பூதனை ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்ல வேண்டுமென்ற விருப்பத்தால் அவருக்கு ஸ்தன்யத்தை கொடுத்ததனல் நல்ல கதியை அடைந்தாள். இப்படியிருக்க,

ஸ்ரீ கிருஷ்ணனுடைய தாய்கள் அவரிடத்தில் பிரியம் வைத்திருப்பதுபோல் மிக்க சிரத்தையுடனும், பக்தியுடனும் பரமாத்மாவாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்குப் பிரியமான வைகளை அர்ப்பணஞ் செய்தவர்கள் மேலான கதியை அடைவார்கள் என்பதில் என்ன சந்தேகம்? பகவானுடைய பாதங்கள் பக்தர்களுடைய இருதயத்திலிருப்பவைகள்; பெரியோர்களாலும் நமஸ்கரிக்கக்கூடியவைகள்; அப்படிப் பட்ட பாதங்களால் பகவான் பூதனையின் சரீரத்தில் சஞ்சரித்து அவளுடைய ஸ்தன்யத்தைப் பானஞ் செய்த தினால் அந்த ராக்ஷஸி கிருஷ்ணனுடைய தாய்களால் அடையக்கூடிய உத்தம கதியான சுவர்க்கத்தை அடைந் தாள். இப்படியிருக்க, கிருஷ்ணனால் எவர்களுடைய ஸ்தன்யம் (பால்) குடிக்கப்பட்டதோ, எத்தப் பசுக் களுடைய பால் குடிக்கப்பட்டதோ, அந்தத் தாய்களுக்கும், பசுக்களுக்கும் சுவர்க்கங் கிடைக்குமென்பதில் என்ன சந்தேகம்! மோக்ஷம்வரையிலுள்ள சகல புருஷார்த்தங்களை யும் கொடுக்கக்கூடிய பகவானாகிய ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் புத்திர ஸ்நேகம் வைத்த எந்தக் கோபிகைகளின் ஸ்தன்யத் தைப் பகவான் பானஞ் செய்தாரோ, எந்த யசோதை முதலியவர்கள் பகவானைப் புத்திரனாகப் பாவித்து, எப்போ தும் அவரையே தரிசித்துக்கொண்டிருந்தார்களோ, அவர் களுக்கு மறுபடியும் ஸம்ஸார சம்பந்தம் உண்டாகிறதில்லை. (ஸம்ஸாரம் அஞ்ஞானத்தால் உண்டாகக்கூடியது.)

42—45. அந்தப் பூதனையின் சரீரம் எரியும்பொழுது உண்டாகிய வாசனையை யுணர்ந்த கோபர்கள் இது என்ன, எங்கிருந்து உண்டாயிற்று என்று சொல்லிக்கொண்டு கோகுலத்தில் பிரவேசித்தார்கள். அவ்விடத்திலிருந்த

கோபர்களும், கோபிகைகளும் பூதனை கோகுலத்திற்கு வந்தது முதலியவைகளைச் சொன்னார்கள். அதனைக் கேட்ட கோபர்கள் குழந்தை ஸ்தன்யபானஞ் செய்ததால் ராக்ஷஸி மரணமடைந்ததையும், குழந்தை க்ஷேமமாக இருப்பதையும் யோசித்து மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். மேலான புத்தியுள்ளவராகிய நந்தர் மதுரா நகரத்திலிருந்து வந்து தம்முடைய புத்திரனை யெடுத்து உச்சியில் முகர்ந்து விசேஷ சந்தோஷத்தை யடைந்தார். பூதனைக்கு மோக்ஷத்தை யுண்டுபண்ணிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய அற்புதமான இந்த பாலிய சரிதத்தை எவன் சிரத்தையுடன் கேட்கிறானோ அவனுக்கு ஸ்ரீ கோவிந்தராகிய பகவானிடத்தில் பக்தி யுண்டாகும்.

# அத்தியாயம்—7

## திருணாவர்த்த வதம்

1—3. அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஈசுவரனாகிய ஹரியானவர் எந்தெந்த அவதாரங்களைச் செய்து காதுக்கு இனிமையானவைகளும், மனோகரங்களுமான கிரீடைகளைச் செய்தாரோ, அவைகளை எனக்குச் சொல்லவேண்டும். அவைகளைக் கேட்பவர் களுக்கு மனச் சலிப்பு உண்டாகிறதில்லை; அசிரத்தை யுண்டாகிறதில்லை; அந்தக்கரணம் சுத்தமாகிறது. ஸ்ரீ பகவா னிடத்தில் பக்தி யுண்டாகிறது; பக்தர்களிடத்தில் சிநேக முண்டாகிறது. மேலும், ஸ்ரீ கிருஷ்ணன் மனுஷ்ய சரீரத்தை யெடுத்துக்கொண்டு கோபர்களின் ஜாதியை அனுசரித்து எந்த பாலிய கிரீடைகளைச் செய்தாரோ, அந்த அத்புதமான ஹரியின் சரிதத்தை எனக்குச் சொல்லக்கூடுமானால் சொல் லும்" என்று கேட்டார்.

4—17. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "மல்லாக்கப் படுத்துக்கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணன் மூன்றாவது மாதத்தில் குப்புறத்திக்கொள்ள ஆரம்பித்தார். அப்போது செய்யவேண்டிய ஸ்நான மகோற்சவ தினத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஜன்ம நக்ஷத்திரமும் சேர்ந்தது. அன்றைய தினத்தில் யசோதை அநேக ஸ்திரீகளை வரவழைத்து, ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஸ்நானஞ் செய்வித்தாள். அப்பொழுது வாத்தியங்கள் முழங்கின; பாடகர்கள் பாடினார்கள்; பிராம்மணர்கள் ஸ்வஸ்தி

வாசனஞ் செய்தார்கள். மேலும், யசோதை அன்னம், வஸ்திரம், புஷ்பம், பசு ஆகிய இவைகளைக் கொடுத்து பிராமணர்களைப் பூசித்தாள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்தவுடன், குழந்தை தூங்குவதைக் கண்டு வண்டியின் கீழிருக்கும் தொட்டிலில் படுக்கவைத்தாள். பின்பு அவள் அன்றைய உற்சவத்தில் நோக்கமுள்ளவளாகித் தன்னுடைய கிருகத்திற்கு வந்த கோகுலவாசிகளுக்கு மரியாதை செய்துகொண்டிருந்தாள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்தன்யத்திற்காக (பால் குடிக்க விரும்பி) அழுது, கால்களை உயரத் தூக்கி உதைத்துக்கொண்டார். குழந்தை அழுத சப்தம் அவள் காதில் விழவில்லை. குழந்தை காலை உயரத் தூக்கி உதறும்பொழுது தொட்டிலுக்குமேலிருக்கும் வண்டியின்மீது தளிர்போல மிருதுவும், அற்பமுமான குழந்தையின் கால் பட்டு அதனால் அந்த வண்டியின் பித்தளை, வெண்கலம் முதலிய ஸாமக்ரிகள் உடைந்துபோயின. அச்சும் சக்கரங்களும் மாறின; ஏர்க்கால் நொருங்கிப்போயிற்று. இப்படி அந்த வண்டி உடைந்து மாறிப் பூமியில் விழுந்தது. அதனைக் கண்டு அந்த உற்சவத்திற்காக வந்திருந்த கோபர்களும், கோபிகைகளும், நந்தரும், யசோதையும் மிக்க ஆச்சரியத்தை அடைந்து, 'இந்த வண்டி எப்படித் தானுக மாறி விழுந்தது' என்று பேசிக்கொண்டு கவலைப்பட்டு மன வருத்தத்துடன் குழந்தையைச் சுற்றிக்கொண்டார்கள். இப்படி சந்தேகத்தை அடைந்திருக்கும் அவர்களை நோக்கி, அருகிலுள்ள குழந்தைகள், "அழுதுகொண்டிருந்த இந்தக் குழந்தை காலால் உதைத்து இந்தச் சகடத்தைத் தள்ளியது; சந்தேகமில்லை" என்று சொன்னார்கள். அதைக் கேட்ட கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அளவற்ற பலத்தை அறியாதவர்களா

கையால் குழந்தைகள் சொல்வதை நம்பவில்லை. (குழந்தையால் இந்தச் சகடத்தை உதைத்துக் கீழே தள்ள முடியாது; இந்தப் பையன்கள் ஏதோ சொல்லுகிறார்கள் என்று நினைத்தார்கள்.) பின்பு யசோதையானவள் அழுது கொண்டிருக்கும் குழந்தையை யெடுத்து, பாலக்கிருகம் உபத்திரவிக்கிறதோ என்ற சந்தேகமுள்ளவளாகிப் பிராமணர்களைக் கொண்டு ஆசீர்வதிக்கச்செய்து ஸ்தன்ய பானஞ் செய்வித்தாள். பிறகு மிக்க பலிஷ்டர்களான கோபர்கள் வண்டியை முன்போல் வைத்து, அதற்கு எட்டு திக்குகளிலும் கலசங்களை அதற்கு வேண்டிய ஸாமக்கிரிகளுடன் வைத்தார்கள். பிராம்மணர்கள் அதனைத் தயிர், அக்ஷதை, தர்ப்பம், ஜலம் ஆகிய இவைகளால் பூசித்து விதிப்படி அக்னியில் ஹோமஞ்செய்து சாந்தி செய்தார்கள். எவர்கள் அசூயை, பொய், தம்பம், ஈர்ஷ்யை, இம்சை, மானம் ஆகிய இவைகளற்றவர்களோ, அந்த சத்தியவாதிகளாகிய பிராம்மணர்களால் செய்யப்படும் ஆசீர்வாதம் வீணாகாது என்று நந்தகோபர் நினைத்து, ஸாமம், ரிக், யஜுஸ் ஆகிய மந்திரங்களால் மந்திரிக்கப் பட்டதும், பரிசுத்தமான ஓஷதிகளுள்ளதுமான நீர்க்கங்களால் பிராம்மணர்களைக்கொண்டு குழந்தைக்கு ஸ்நானஞ் செய்வித்து ஸ்வஸ்திவாசனம் நடத்தி, ஹோமத்தால் அக்கினியைப் பூசித்து பிராம்மணர்களுக்கு போஜனஞ் செய்வித்தார். மேலும் நந்தகோபர், குழந்தையின் க்ஷேமத்தை உத்தேசித்து, வஸ்திரத்தாலும், புஷ்பத்தாலும், சுவர்ண மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட சகல நற்குணங்கள் பொருந்திய பசுக்களைப் பிராமணர்களுக்குத் தானஞ் செய்தார். அந்தப் பிராம்மணர்களும் ஆசீர்வாதஞ் செய்தார்கள். மந்திரங்களை அறிந்தவர்களும், யோகிகளுமாகிய

பிராம்மணர்களால் செய்யப்படும் ஆசீர்வாதங்கள் ஒரு பொழுதும் பயனற்றனவாக ஆகிறதில்லை.

18—33. பின்பு ஒருகால் யசோதை தன்னுடைய மடியில் குழந்தையை வைத்துக் கொஞ்சிக்கொண்டிருந்தாள். அப்பொழுது குழந்தை மலையின் சிகரம்போலப் பாரமுள்ளதாக இருந்தபடியால் அதனைத் தூக்க முடியாதவளாகிக் குழந்தையைப் பூமியில் வைத்து ஆச்சரியத்தை அடைந்து (குழந்தைக்கு அரிஷ்டம் நேரிடாமலிருப்பதற்காக), மஹாபுருஷனைத் தியானஞ் செய்து, வீட்டு வேலைகளில் நோக்கமுள்ளவளாக இருந்தாள். (ஸ்ரீ கிருஷ்ணனுடைய வயிற்றில் ஜகத்து இருக்கிறதென்பதை அறியவில்லையென்று தாத்பரியம்.) அந்தச் சமயத்தில் கம்ஸனுடைய வேலைக்காரனும், கம்ஸனால் தூண்டப்பட்டவனுமான திருணாவர்த்தன் என்ற அசுரன் சுழல்காற்றின் சுரூபத்தையெடுத்துக்கொண்டு பூமியில் உட்கார்ந்திருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனாகிய குழந்தையைத் தூக்கிக்கொண்டு போனான். அந்தக் காற்றின் கோரமான சப்தத்தால் திக்குகளிலும், விதிக்குகளிலும் எதிரொலி யுண்டாயிற்று. மேலும், ஒரு முகூர்த்த காலம் கோகுலம் முழுவதும் இருள் மூடியது போலத் தூளியால் மறைக்கப்பட்டது. அந்தத் தூளியால் கோகுலத்தில் வசிப்பவர்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். யசோதை எந்த விடத்தில் குழந்தையை வைத்திருந்தாளோ, அந்த விடத்தில் குழந்தை இல்லை. மேலும், திருணாவர்த்தனால் வாரியிறைக்கப்பட்ட கற்களால் பீடிக்கப்பட்டு மயங்கி எல்லோரும் தன்னையாவது பிறரையாவது அறியவில்லை. இம்மாதிரி கொடிய காற்றினால் மண்மழை பெய்யும்பொழுது குழந்தையைக் காணாமல் தாயான

யசோதையானவள் கன்றை யிழந்த பசுப்போல மிக்க தீனமாகத் துக்கித்துப் பூமியில் விழுந்தாள். பின்பு காற்றினுலுண்டாகிய மண் மழை அடங்கியது. அப்பொழுது கோபிகைகளும் யசோதை அழுவதைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ணனைக் காணுமல் அழுதார்கள். சுழல் காற்றின் சுரூபத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் செல்லும் திருணவர்த்தன் வேகம் குறைந்தவனுகி, அதிக பாரத்தை வகித்தபடியால் கிருஷ்ணனைத் தூக்கச் சக்தியற்றவனுனன். திருணவர்த்தன் தன்னைக்காட்டிலும் அக்குழந்தை மிகுந்த பாரமுள்ளதாக இருந்ததால், 'இது கல்' என்று நினைத்துக் குழந்தையைக் கீழே தள்ள யத்தனித்தான். ஆனல் அக்குழந்தை அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டிருந்தமையால் அந்த அற்புதமான குழந்தையைத் தள்ளவும் முடியவில்லை. அசுரனுடைய கழுத்தைக் குழந்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டதால் அசுரனுடைய கண்கள் வெளியில் வந்தன. அவன் சேஷ்டையற்றவனுகிக் கதறமுடியாமல் மரண மடைந்து கழுத்தைப் பிடித்துக்கொண்டிருக்கும் குழந்தை யுடன் கோகுலத்தில் விழுந்தான். பரமசிவனுடைய பாணத்தால் அடிபட்ட திருபுரம்போல் ஆகாயத்திலிருந்து ஒரு கற்பாறையில் விழுந்து அவயவங்கள் சிதறுண்டு கிடக்கும் பயங்கரனை திருணவர்த்தனைக் கோபிகை களெல்லாரும் ஒன்றுசேர்ந்து பார்த்தார்கள். மேலும் அவர்கள் அசுரனல் ஆகாயத்திற்குக் கொண்டுபோகப் பட்டதும், மிருத்யுவின் முகத்தை அடைந்து திரும்பியதும், திருணவர்த்தனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு மார்பில் தொங்குகிறதுமான குழந்தையை யெடுத்து மிக்க ஆச்சரியத்தை அடைந்து யசோதையினிடம் கொடுத்தார்

கள். இப்படி நந்தன் முதலிய கோபர்களும், யசோதை முதலிய கோபிகைகளும் க்ஷேமமாகத் திரும்பிவந்த குழந்தையை அடைந்து மிக்க சந்தோஷத்தை அடைந்தார்கள். "இந்தக் குழந்தையை ராட்சதன் கொல்ல முயன்றும் குழந்தை க்ஷேமமாக வந்தது. இது மிகவும் அற்புதம்" என்று சிலர் பேசிக்கொண்டார்கள். மற்றுஞ் சிலர் "துஷ்டனாகிய அசுரன் தன்னுடைய பாபத்தால் கொல்லப்பட்டு மரணமடைந்தான்; சாதுவாகிய குழந்தை பிழைத்தது; இதென்ன ஆச்சரியம்" என்றார்கள். பின்னும் சிலர் "நாம் என்ன தவஞ்செய்தோம்? பகவானைப் பூசித்தோமா? குளம் வெட்டுவது முதலிய பூர்த்த தருமத்தைச் செய்தோமா? அல்லது பஞ்ச யக்ஞம், அக்னிஹோத்திரம் முதலியவைகளைச் செய்தோமா? அல்லது எல்லாப் பிராணிகளிடத்திலும் அன்பு பாராட்டிவந்தோமா? மரணமடைந்தான் என்று நினைக்கும்படியாக இருந்த குழந்தை தெய்வ வசத்தால் திரும்பிவந்தானே; பந்துக்களைச் சந்தோஷப்படுத்தினனே; இது எதனுடைய பயனோ?" என்றார்கள். நந்தகோபர் பிருகத் வனத்தில் பல உத்பாதங்கள் உண்டானதைக் கண்டு ஆச்சரியத்தை அடைந்து, வசுதேவருடைய வார்த்தையை நினைத்துச் சிலாகித்தார்.

34—38. பின்பு ஒருகால் யசோதை குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு புத்திர சிநேகத்தால் பெருகும் ஸ்தன்யத்தைக் குழந்தைக்குக் கொடுத்தாள். குழந்தை போதுமானவரையில் பால் குடித்துச் சிரித்து விளையாட, அவன் அழகான முகத்தைப் பார்த்திருந்தாள். அப்பொழுது குழந்தை கொட்டாவிவிட்டது. அதன் வாயில் ஆகாயம், பூமி, சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள், திக்குகள், அக்னி,

வாயு, சமுத்திரங்கள், த்வீபங்கள், மலைகள், நதிகள், காடுகள், தாவர ஜங்கமரூபிகளான பிராணிகள் முதலிய எல்லாம் காணப்பட்டன. இப்படிக் குழந்தையின் வயிற்றில் ஜகத்து வசிப்பதை யசோதை பார்த்து பயந்து, கண்களை மூடிக்கொண்டு மிகவும் ஆச்சரியத்தை அடைந்தாள்.

## நோட்டு

இந்த அத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் சகடத்தை உதைத்தார்; அது உடைந்து விழுந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. திருணாவர்த்தன் முதலியவர்களைப்போல் வண்டிபோல வேஷத்துடன் அசுரன் வந்தானா அல்லது ஸ்ரீ கிருஷ்ணனுடைய தொட்டிலுக்குமேல் வண்டி வைக்கப்பட்டிருந்ததா? என்று ஸம்சயமுண்டாகிறது. இது அசுரனல்ல; வண்டியென்றே சொல்வது உசிதம். ஏனென்றால், மூலத்தில் சகடம், அன: என்று சொல்லியிருக்கிறதே யொழிய, அசுர சப்தம் ஒருவிடத்திலும் பிரயோகிக்கப்படவில்லை. மற்ற பகன், வத்ஸன் முதலியவர்களைச் சொல்லுமிடத்தில் அசுர சப்தமிருக்கிறது. மேலும், உண்மையில் அசுரனாக இருந்தால் வண்டி உடைந்து விழுந்தபின் அசுர சுரூபத்துடன் விழுந்திருக்கவேண்டும். அசுரர்கள் மரிக்கும்பொழுது தங்களுடைய சுயரூபத்தை எடுத்துக்கொள்வது வழக்கம். அப்படி ராட்சதரூபத்தை யடைந்ததாகவும் சொல்லப்படவில்லை. இந்த அத்தியாயத்தின் 12-வது சுலோகத்தின் வியாக்யானத்தில் விஜயத்வஜீயத்தில் 'வண்டி முன்போல வைக்கப்பட்டது' என்று எழுதப்பட்டிருக்கிறது. மேலும், அசுரன் வண்டியாக வந்திருந்தால் பிந்தி அவ்விடம் வந்து கோபர்கள் இவ்விடத்தில் வண்டி ஏது, புதிதாக இருக்கிறதே என்று யோசித்திருக்கவேண்டும். அப்படி யோசித்ததாகச் சொல்லப்படவில்லை. 'இது எப்படி உடைந்தது' என்று

யோசித்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் மூர்த்தி அவ்விடத்தில் ஒரு சகடம் வைத்திருக்க வேண்டுமென்று தெரிய வருகிறது. மேலும் 11-வது அத்தியாயத்தில் உபநந்தருடைய வார்த்தையிலும் (அனச்சொபரிநாபதத்) வண்டியும் இவன்மீது விழவில்லை என்றிருக்கிறது. ஆனதால், வண்டி வைத்திருந்ததென்று சொல்லவேண்டுமே யல்லாமல், அசுரன் என்று சொல்வதற்கு நியாய மில்லை யென்று ஆட்சேபமுண்டாகிறது. ஆனாலும், அசுரன்தான் வண்டியாக வந்தானென்று சொல்வதற்குச் சில ஆதாரங்களிருக் கின்றன. அவைகளாவன: வீரராகவீய வியாக்யானத்தில் சகடரூப மாகிய அசுரன் வந்தானென்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக் கிறது. ஹரிவம்சத்தில் சகடத்தில் அசுரன் ஆவேசித்தான் (புகுந்தான்) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## அத்தியாயம்—8

# ஸ்ரீ கிருஷ்ணனுக்கு கர்க்கர் நாமகரணஞ் செய்தது

1—6. ஓ பரீக்ஷித்து மகாராஜ! மிகுந்த தபஸ்வியும், யாதவர்களுக்குப் புரோகிதருமான கர்க்காசாரியார் வசுதேவரால் தூண்டப்பட்டு நந்த கோகுலத்திற்கு வந்தார். நந்தர் கர்க்காசாரியரைக் கண்டு மிக்க பிரியத்துடன் எழுந்திருந்து, கைகூப்பி நமஸ்கரித்து, அவரை ஸ்ரீ மகா விஷ்ணுவாகப் பாவித்துப் பூஜித்தார். இப்படி நந்தகோபர் அவருக்கு ஆதித்யஞ் செய்து, ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்து, பிரியமான வார்த்தைகளைச் சொல்லி, அவரைச் சந்தோஷப்படுத்தி, "பிராம்மணோத்தம! எல்லாவற்றிலும் பூர்ணராகிய உமக்கு நாங்கள் எதைச் செய்வோம்? பெரியோர் தங்களிருப்பிடத்தை விட்டு மற்றொருவருடைய வீட்டிற்குச் செல்வது கிருகஸ்தர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுப்பதற்கேயாம். கிருகஸ்தர்கள் அளவற்ற குடும்பகாரிய முள்ளவர்களாகையால், அவர்கள் பெரியோர்கள் வசிக்குமிடந் தேடிப் போகச் சக்தியற்றவர்கள்; ஆனதால் கிருகஸ்தர்களைத் தேடி மகான்கள் வராதவரையில் கிருகஸ்தர்களுக்கு க்ஷேமம் எப்படிக்கிடைக்கும்? இந்திரியங்களுக்குப் புலப்படாத நவக்கிருகங்களுடைய சஞ்சாரத்தால் மனிதர்களுக்கு ஏற்படும் சுபாசுப பலத்தைத் தெரிந்து கொள்வதற்குச் சாதனமான சோதிட சாஸ்திரத்தை நீர் செய்தவர். அந்த சாஸ்திரத்தைக்கொண்டு ஜனங்கள் சுபாசுப பலனைத் தெரிந்துகொள்ளுகிறார்கள். நீர் வேத மந்திரங்களை யறிந்தவர்களுக்குட் சிறந்தவர். மனிதர்

களுக்குள் பிராம்மணன் உத்தம ஜன்மமுள்ளவனுகையால் பிராம்மணன் எல்லாருக்கும் குருவாகிறுன். ஆனதால் இவ்விரண்டு குழந்தைகளுக்கும் நாமகரணம் (பெயர் வைப்பது) முதலிய ஸம்ஸ்காரம் செய்துவைக்க நீர் தக்கவர்" என்று வேண்டிக்கொண்டார்.

7—9. அதனைக் கேட்ட கர்க்காசாரியர் நந்தரை நோக்கி, 'நான் யாதவர்களுக்கு ஆசாரியர் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். நான் இந்த குழந்தைக்கு நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களைச்செய்தால், உமக்கும் வசுதேவருக்குமுள்ள ஸ்நேகத்தை அறிந்த கெட்ட மனமுள்ள கம்ஸன் இந்தக் குழந்தையைத் தேவகியின் புத்திரன் என்றே நினைப்பான். மேலும், அவன் தேவகியின் எட்டாவது கர்ப்பம் பெண்ணுக ஜனிக்காது என்று நினைத்தும், தேவகியினுடைய புத்திரியின் வார்த்தையை நினைத்துக்கொண்டும் ஸம்சயமற்றவனுகி இவ்விடம் வந்து குழந்தையைக் கொன்றுவிடுவான். அதனுல் நமக்கு மிக்க கெடுதி சம்பவிக்கும்" என்றுர்.

10—21. அதனைக் கேட்ட நந்தகோபர் கர்க்கரை நோக்கி, 'என்னைச் சார்ந்த பந்துக்களுக்கும் தெரியாமல் இந்த நந்தகோகுலத்தில் த்விஜாதி (பிராம்மண, க்ஷத்திரிய, வைச்யர்கள்)களுக்குரிய ஸம்ஸ்காரத்தை ஸ்வஸ்தி வாசனத்தை முன்னிட்டுச் செய்யும் என்று பிரார்த்தித்தார். அதனைக் கேட்ட மகரிஷி தம்முடைய அபிப்பிராயத்தையே நந்தகோபர் பிரார்த்தித்தபடியால் அதனை ஒப்புக்கொண்டு ரகசியத்தில் அந்தக் குழந்தைகளுக்கு நாமகரணஞ் செய்தார் (பெயரிட்டார்). எப்படி யென்றுல், இந்த ரோகிணியின்

புத்திரன் தன்னுடைய குணங்களால் மித்திரர்களை சந்தோஷப்படுத்துவதால் ராமனென்ற பெயரை அடைவான். மிகுந்த பலமுள்ளவனுகையால் பலனென்றும் இவனைச் சொல்வார்கள். ஒருவருக்கொருவர் விரோதப்படும் யாதவர்களை ஒன்றுபடுத்தப் போவதால் ஸங்கர்ஷணனென்றும் சொல்வார்கள். (தேவகியின் கர்ப்பத்திலிருந்து ரோகிணியின் கர்ப்பத்திற்குக் கொண்டுவரப்பட்டமையான காரணத்தை மறைத்தார்.) கிருதயுகம் முதலிய ஒவ்வொரு யுகத்திலும் இவன் சரீரத்தை யெடுத்துக்கொள்ளுகிறான். இப்போது கிருஷ்ண (கறுப்பு) வர்ணத்தை அடைந்தான். அதனுல் இவனுக்குக் கிருஷ்ணனென்று பெயர். உம்முடைய இந்தப்புத்திரன் இதற்கு முன் ஒருகால் வசுதேவருக்குப் புத்திரனுகப் பிறந்தான். அதனுல் அவருடைய சுரூபத்தை யறிந்தவர்கள் வாசுதேவனென்று சொல்லுகிறார்கள். உம்முடைய புத்திரனுக்கு அவனுடைய குணங்களுக்கும் கர்மங்களுக்கும் ஒத்ததான அநேக திவ்விய நாமங்களும், ரூபங்களும் இருக்கின்றன. இவைகள் எனக்குத் தெரியும்; மற்ற ஜனங்களுக்குத் தெரியாது. இந்தக் குமாரன் உங்களுக்கு மிகுந்த க்ஷேமத்தை யுண்டுபண்ணுவான். கோபர்களுக்கும், கோகுலத்திற்கும் சந்தோஷத்தை யுண்டுபண்ணுவான். நீங்கள் இவனுல் சம்ரட்சிக்கப்பட்டு சகல துக்கங்களையும் (துர்க்கம்) தாண்டப்போகிறீர்கள். கோகுலத்திற்கு அதிபதியான ஓ நந்த! முன்னொருகால் அரசனில்லாத தேசத்தில் திருடர்களால் பிடிக்கப்பட்ட சாதுக்கள் இவனுல் காப்பாற்றப்பட்டுத் திருடர்களை ஜயித்தார்கள். எந்த மனிதர்கள் இவனிடத்தில் பிரீதிசெய்கிறார்களோ, அவர்களே மகாபாக்கியசாலிகள். விஷ்ணுவைச் சார்ந்தவர்

களுக்கு எப்படி அசுரர்களுடைய உபத்திரவம் ஏற்படுகிற தில்லையோ, அப்படி இவரிடத்தில் பிரீதிசெய்பவர்களுக்குச் சத்துருக்களுடைய உபத்திரவம் உண்டாகிறதில்லை. ஆனதால் இந்த உம்முடைய குழந்தை காந்தியாலும், கீர்த்தியாலும், மஹாத்மியத்தாலும், குணங்களாலும் ஸ்ரீமந்நாராயணனுக்குச் சமமானவன்; சாவதானமாக இவனைக் காப்பாற்றும்." என்று ஆஞ்ஞாபித்துத் தமது இருப்பிடஞ் சென்றார். அதனைக் கேட்ட நந்தகோபர் மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, தாம் எல்லாவற்றையும் அடைந்தவர் என்று நினைத்தார்.

22—33. இப்படிச் சில காலஞ் சென்றபின் ராமன், கிருஷ்ணன் இருவர்களும் கோகுலத்தில் தவழ்ந்து விளையாடினார்கள். சேறுகவிருந்த இடைத்தெருவில் அவ்விரண்டு குழந்தைகளும் இடுப்பில் அணிந்திருக்கும் சலங்கைகள் சப்திக்கும்படி தவழ்ந்து நடந்தார்கள். மேலும் அவர்கள் சலங்கைச் சப்தத்தைகேட்டு சந்தோஷத்தை யடைந்தார்கள். பின்னும் அவர்கள் வீதியில் போய்க்கொண்டிருப்பவர்களின் பின் இரண்டு மூன்று அடிகள் சென்று, பின்பு பயந்தவர்கள்போலத் தாய்களின் சமீபஞ் சென்றார்கள். இப்படி தேகத்தில் சேற்றைப் பூசிக்கொண்டு தங்களிடம் வந்த குழந்தைகளை எடுத்துக் கட்டிக்கொண்டு தாய்கள் ஸ்தன்யங் கொடுத்தார்கள். மேலும் அவர்கள் குழந்தை பால் குடிக்கும்பொழுது புன்சிரிப்புள்ளதும், சொற்பமான பற்களுள்ளதுமான குழந்தைகளுடைய அழகான முகத்தைப் பார்த்து ஆனந்தமடைந்தார்கள். சிலகாலஞ் சென்றபின் அந்த ராமகிருஷ்ணர்கள் இருவர்களும் கன்றுக்குட்டிகளுடைய வால்களைப் பிடித்துக்கொண்டு,

அலைகளால் இழுக்கப்பட்டு அதன் வழியே சென்று விளையாடினார்கள்; அது பார்ப்பவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியதாயிருந்தபடியால் கோபிகைகள் வீட்டு வேலைகளையும் விட்டுக் குழந்தைகளின் விளையாட்டைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு ஆனந்தமடைந்தார்கள். இப்படிச் சில காலஞ்சென்றபின், ராமனும் கிருஷ்ணனும் மாடு முதலிய கொம்புள்ளவைகள், அக்னி,* சிங்கப்பற்களுள்ள பிராணிகள், கத்தி, ஜலம், பறவை, முள் ஆகிய இவைகளுடன் விளையாட ஆரம்பித்தார்கள். அதனைக் கண்ட ரோஹிணியும், யசோதையும் குழந்தைகளுக்கு அபாயம் நேரிடுமே என்று அந்த விளையாட்டைத் தடுப்பதற்கு முயன்றும் தடுக்க முடியவில்லை. ஆனாலும் குழந்தைகளுக்கு அபாயம் வருமோ என்று பயந்து வீட்டு வேலைகளைச் செய்ய முடியாமல் கவலையடைந்திருந்தார்கள். ஓ ராஜரிஷியே! இப்படி சொற்பகாலஞ் சென்றபின் கோகுலத்தில் ராமனும் கிருஷ்ணனும் சில காலம் தவழ்ந்தும், (முழங்கால்களால் நடந்தும்,) சில சமயம் நடந்தும் விளையாடினார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ண பகவான் பலராமனுடன் தம்முடைய தோழர்களான கோபால பாலகர்களுடனும் கோபிகைகளுக்கு ஆனந்தத்தை யுண்டுபண்ணிக் கொண்டு விளையாடினார். ஸ்ரீ கிருஷ்ணனுடைய அழகான பாலக்கிரீடைகளைப் பார்த்துக் கோபிகைகளெல்லாரும் ஒன்றுசேர்ந்து யசோதையை நோக்கி, "உம்முடைய புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் மாடு கறப்பதற்கு முன்னமேயே கன்றுக்குட்டிகளை அவிழ்த்துவிடுகிறான். கன்று அவிழ்த்துவிட்டானே என்று சொன்னால் சிரிக்கிறான். திருடுவதற்கு உபயோகமான உபாயங்களைச் செய்து தயிர்

* அஹி என்றும் பாடமுண்டு. அதற்கு சர்ப்பம் என்று அர்த்தம்.

பால்களைத் திருடி அவைகள் ருசியுள்ளதானால் அவைகளைப் புசிக்கிறான். தான் புசிக்கும்பொழுது வானரங்களுக்கும் பிரித்துக் கொடுக்கிறான். (மர்க்கவென்ற பாடத்தில் வெண்ணெயைத்தான் புசித்துத் தன் தோழர்களுக்கும் கொடுக்கிறானென்று தாத்பரியம்.) அந்த வானரங்களில் ஏதாவதொன்று புசிக்காவிடில், தயிர் முதலியவை வைத்திருக்கும் சட்டியை உடைக்கிறான். தயிர் பால் முதலியவைகளொன்றும் கிடைக்காவிடில், வீட்டு யஜமானன் மீது கோபித்து, படுத்திருக்கும் குழந்தைகளை அடித்து, அழும்படி செய்து வெளியே போகிறான். தயிர் பால் வைத்திருக்கும் பாத்திரம் கைக்கு எட்டாவிடில் உரல், முக்காலி முதலியவைகளைப் போட்டு, கைக்கு எட்டும்படியான உபாயத்தைச் செய்கிறான். உறியில் வைத்திருக்கும் பாத்திரங்களில் கல் முதலியவைகளை எறிந்து துவாரஞ்செய்கிறான். அந்த உபாயங்கள் உம்முடைய புத்திரனுக்குத் தெரியும். இருட்டான இடத்தில் வைக்கப்பட்டிருந்தாலும் அவன் அணிந்திருக்கும் ரத்னாபரணங்களால் பிரகாசத்தையுண்டுபண்ணிக்கொண்டு திருடுகிறான். மேலும், அவன் கோபிகைகள் எப்பொழுது வீட்டு வேலைகளில் நோக்கமுள்ளவர்களாகி மற்றதைக் கவனிக்கமுடியாதவர்களாக இருப்பார்களோ, அந்த சமயம் பார்த்து இம்மாதிரியான திருட்டுத்தனங்களைச் செய்கிறான். பின்னுமவன், 'அட திருட' என்று அழைக்கப்பட்டால், 'நான் திருடனல்ல; நீ தான் திருடன். நான் வீட்டின் யஜமானன்' என்று தைரியமாகச் சொல்லுகிறான். தேவபூஜை முதலியவைகளுக்காகச் சுத்தஞ் செய்திருக்கும் ஸ்தலத்தில் மூத்திரம் விடுவது முதலியவைகளைச் செய்கிறான். இப்படித் திருட்டுத்தனங்களைச் செய்து உம்மிடத்தில் சாதுபோல

இருக்கிறான்" என்று ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டே சொன்னார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் பயந்தவர்போலக் கண்களை மூடியும் திறந்துகொண்டும் இருந்தார். கோபிகைகளுடைய வார்த்தையைக் கேட்ட யசோதையானவள் சிரித்துக் கொண்டு, குழந்தையைக் கண்டிக்க மனமில்லாதவளாக இருந்தாள். பின்பு ஒருகால் கோபிகைகளெல்லாரும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தடயத்துடன் பிடித்து யசோதைக்குக் காண்பிக்கவேண்டுமென்று பேசிக்கொண்டு ஒவ்வொரு வீட்டிலும் கிருஷ்ணன் தயிர் பால் முதலியவைகளைத் திருடும் சமயம் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணனைக் கெட்டியாக ஒவ்வொருவரும் தனியே பிடித்து யசோதையினிடம் அழைத்துவந்தார்கள். அவ்விடம் வந்தவுடன் கோபிகைகளால் அழைத்துவரப்பட்ட குழந்தைகள் அவர் அவர்களுடைய குழந்தையாக இருந்தன. கிருஷ்ணனும் யசோதையின் பக்கத்திலிருந்தார். அதனைக் கண்ட கோபிகைகளெல்லாரும் வெட்கமடைந்து, தங்கள் தங்கள் வீட்டிற்குச் சென்றார்கள்.

34—44. பின்பு ஒருகால் விளையாடிக்கொண்டிருந்த பலராமன் முதலிய குழந்தைகள் யசோதையினிடம் வந்து, "ஸ்ரீ கிருஷ்ணன் மண்ணைத்தின்றான்" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட யசோதையானவள் குழந்தைக்கு இதஞ்செய்ய விரும்பி, பயத்தால் பரபரப்புள்ள கண்களுடன் விழித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைக் கையில் பிடித்து அதட்டி, "ஓ துஷ்ட சுபாவமுள்ளவனே! ஏன் ரகசியமாக மண்ணைத்தின்றாய்? உன்னுடைய தோழர்களும் சொல்லுகிறார்கள். உன்னுடைய தமயனாகிய

ராமனும் சொல்லுகிறான்" என்று கேட்டாள். அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன், "ஓ அம்ம! நான் மண்ணைத் தின்ன வில்லை; எல்லோரும் பொய் சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்வது உண்மையானால் என்னுடைய வாயை நீ நேரில் பார்க்கலாம்" என்றார். அதனைக் கேட்ட யசோதை, "அப்படியானால் வாயைத் திறக்கலாம்" என்றாள். அதனைக் கேட்டுக் குறைவற்ற அணிமா முதலிய ஐசுவரியங்களுள்ளவரும், விளையாட்டாக மனித சரீரத்தை எடுத்துக்கொண்டவருமாகிய ஸ்ரீ கிருஷ்ணன் வாயைத் திறந்தார். அதில் தாவரம், ஜங்கமம் இவைகளடங்கிய ஜகத்தும், அந்தரிக்ஷமும், திக்குகள், பர்வதங்கள், த்வீபங்கள், சமுத்திரங்கள் இவைகளடங்கிய பூலோகமும், சந்திரனும் ப்ரவஹவாயுவும், மின்னலும், நட்சத்திரங்களும், சுவர்க்க லோகமும், ஜலமும், தேஜஸும், வாயுவும், ஆகாயமும், வைகாரிகங்களான இந்திரியங்களும், மனதும், பூத தன் மாத்திரைகளும், ஸத்வம் முதலிய குணங்களும் காணப் பட்டன. மேலும் யசோதை ஜீவன்காலம், சுபாவம், கர்மம், ஆசயம் ஆகிய இவைகளால் ஏற்படும் தாவர ஜங்கம சரீர பேதங்களுள்ள அற்புதமான ஜகத்தையும், கோகுலத்தையும், தன்னையும் (யசோதையையும்) குழந்தையின் வயிற்றில் கண்டாள். பின்னுமவள், "இது ஸ்வப்னமோ அல்லது தேவனுடைய மாயையோ, அல்லது நம்முடைய புத்தி மோகந்தானோ, அல்லது என் குழந்தையான ஸ்ரீ கிருஷ்ணனுடைய இயற்கையான ஐசுவரியமோ என்று சந்தேகித்தாள். பின்னுமவள் ஸ்ரீ கிருஷ்ணனை ஈசுவரனென்றே நிச்சயித்து, "எது சித்தம், மனம், கர்மம், வாக்கு ஆகிய இவைகளால் ஊகிக்க (விதர்க்கிக்க) முடியாததோ, இந்த ஜகத்தானது எதனை ஆச்ரயித்திருக்

கிறதோ, எதனால் லோகம் காப்பாற்றப்படுகிறதோ, எதனால் ஜகத் பிரகாசிக்கிறதோ, எது இப்படிரியானதென்று குறிப்பிடமுடியாததோ, அந்த பரரூபத்தை நமஸ்கரிக்கிறேன். பின்னும் இந்த நந்தர் என்னுடைய பர்த்தா. இந்தக்கிருஷ்ணன் என்னுடைய புத்திரன்; கோகுலத்திற்கு அதிபதியாகிய நந்தனுக்கு நான் பத்தினி; சகல ஐசுவரியங்களுள்ளவள்; இந்தக் கோபிகைகளும் கோபர்களும் என்னைச் சார்ந்தவர்கள் என்ற கெட்ட எண்ணமானது எவருடைய மாயையால் உண்டாகிறதோ, அவரைச் சரணமடைகிறேன்" என்று சொன்னாள்.

45—47. அப்பொழுது பகவான் தம்முடைய மாயாமகிமையால் யசோதையின் ஞானத்தை மறைத்துத் தம்மிடத்தில் முன்போல் புத்திரனென்ற ஆசையையுண்டுபண்ணினார். அதனால் அவள் முந்திய க்ஷணத்தில் அநுபவித்ததை மறந்து ஸ்ரீ கிருஷ்ணனை மடியில் வைத்து முன்போல் விசேஷ புத்திரப் பிரீதியுள்ளவளாக இருந்தாள். கர்மகாண்டங்கள் இந்திரன் முதலிய தேவர்களென்றும், உபநிஷத்துக்கள் பிரும்மமென்றும், ஸாங்கியர்கள் புருஷனென்றும், யோகிகள் பரமாத்மாவென்றும், பக்தர்கள் பகவானென்றும் எவரைத் தோத்திரஞ் செய்கிறார்களோ, அந்த ஸ்ரீ ஹரியை யசோதை தன்னுடைய புத்திரனென்று நினைத்தாள்" என்று சுகர் சொன்னார்.

48—49. அதனைக் கேட்ட அரசன், "ஓ பிராம்மணோத்தம! நந்தர் இம்மாதிரியான மிகுந்த க்ஷேமத்தை அடையத் தகுந்த என்ன புண்ணியஞ்செய்தார்? ஸ்ரீ மகாவிஷ்ணு எவளுடைய ஸ்தன்யத்தைப் பானஞ்செய்தாரோ, அந்த பாக்கியசாலியான யசோதையால் என்ன சுகிருதஞ்செய்யப்பட்டது? கிருஷ்ணனுடைய கம்பீரமான

பாலசரிதத்தை இப்பொழுதும் கவிகள் கானஞ்செய்கிறார்கள். அது ஜனங்களுடைய பாபத்தைப் போக்கக் கூடியது. அந்தப் பகவானுடைய பாலக்கிரீடைகளைத் தாய்தகப்பனார்களான வசுதேவர், தேவகி ஆகிய இவர்களும் அநுபவிக்கக்கூடவில்லை. அப்படிப்பட்ட பகவானுடைய லீலைகளை அநுபவித்த நந்தர், யசோதை இவர்கள் செய்த புண்ணியமென்ன? அதனைச் சொல்லவேண்டும்" என்றார்.

50—54. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "வசுக்களுக்குட் சிறந்தவராகிய துரோணர் என்பவர் தம்முடைய பத்நியாகிய தரையென்பவளுடன் பிரும்ம தேவருடைய ஆஜ்ஞையை (பூமியில் கோபனாக அவதரித்துப் பசுக்களை ரக்ஷிக்கவேண்டுமென்றதை) சிரசால் வகித்து பிரும்மதேவரை நோக்கி, "பூமியில் நாங்கள் ஜனித்தபின் ஜகத்பதியான ஸ்ரீமந் நாராயணனிடத்தில் மிகுந்த பக்தி எங்களுக்கு இருக்கவேண்டும்; பகவானிடத்தில் பக்தி செய்வதால், 'அஞ்ஞான ஸம்ஸாரத்தை நிவர்த்தித்துக் கொள்வான்' ஆனதால், அப்படி அநுக்கிரகிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். பிரும்ம தேவரும் அப்படியே அநுக்ரகித்தார். அந்தத் துரோணர் நந்தராக ஜனித்தார். தரையென்பவள் யசோதையாகப் பிறந்தாள். அதனால் அந்தத் தம்பதிகளுக்குப் புத்திரனாகிய ஸ்ரீமகா விஷ்ணுவினிடத்தில் மிகுந்த பிரியமுண்டாயிற்று. ஸ்ரீ கிருஷ்ணனும் பிரம்மதேவருடைய ஆஜ்ஞையை உண்மையாகச் செய்வதற்காகக் கோகுலத்தில் பலராமனுடன் வசித்து லீலைகளைச் செய்து, கோபர்களையும் கோபிகைகளையும் சந்தோஷிக்கச் செய்தார்.

# அத்தியாயம்—9

## யசோதை ஸ்ரீ கிருஷ்ணனைக் கட்டியது

1—20. நந்தருடைய பத்னியாகிய யசோதை ஒரு சமயம் வீட்டிலிருக்கும் வேலைக்காரிகளுக்கு மற்ற வேலையைக் கொடுத்துத் தான் தயிர் கடைந்தாள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பால்ய லீலைகளை நினைத்து, அவைகளையே சொல்லிக்கொண்டிருந்தாள். யசோதை வெண்பட்டை உடுத்திக்கொண்டிருந்தாள். அதன்மேல் ஒட்டியாணம் போடப்பட்டிருந்தது. புத்திரனிடத்திலிருக்கும் சிநேகத்தால் அவளுடைய ஸ்தனங்களிலிருந்து பால் பெருகியது. மேலும், அவளுடைய சரீரம் அசைந்தது. கயிற்றைப் பிடித்து இழுக்கும் சிரமத்தால் கைகளும், கரத்தில் அணிந்திருக்கும் கங்கணங்களும், காதுகளிலிருக்கும் குண்டலங்களும் அசைந்தன. முகத்தில் வியர்வை யுண்டாயிற்று. தலைமயிர்கள் அவிழ்ந்து, அதிலிருந்த மாலதி புஷ்பங்கள் உதிர்ந்தன. இப்படி யசோதை தயிர் கடையும்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் ஸ்தன்யம் (பால் குடிப்பதற்காக) யசோதையின் சமீபஞ்சென்று மத்தைப் பிடித்துக்கொண்டு தமக்குப் பால் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டார். (தயிர் கடைவதைத் தடுத்தார்.) அதனால் அவள் பிரியமடைந்தாள். இப்படி மடியில் உட்கார்ந்து பால் குடிக்க விரும்பிய குழந்தையின் புன்சிரிப்புள்ள முகத்தைப் பார்த்துக்கொண்டே யசோதை, புத்திர பிரீதியால் பால் சுரப்புள்ள ஸ்தனத்தை ஸ்ரீகிருஷ்ணனுக்குக்

கொடுத்தாள். அப்பொழுது அடுப்பில் காய்ந்து கொண்டிருந்த பால் பொங்கி வழிந்தது. அதனைக் கண்ட யசோதை ஸ்தன்யபானஞ் செய்து திருப்தியடையாத குழந்தையை கீழே விட்டுவிட்டு ஓடினாள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் கோபங்கொண்டு, சிவந்த உதடுகள் துடிக்க, பல்லைக் கடித்துக் கபடமாக கண் ஜலத்தைப் பெருக்கி, அம்மிக் குழவியினால் தயிர்ச் சட்டியை உடைத்து, அதிலிருந்த வெண்ணெயை எடுத்துக்கொண்டு வீட்டிற்குள் ஒளிந்து கொண்டார். யசோதை பாலைக் காய்ச்சி இறக்கிவைத்துத் திரும்பவும் தயிர்கடைந்த இடம் வந்தாள். தயிர்ப் பானை உடைந்திருப்பதைப் பார்த்தாள். 'இது நம்முடைய குழந்தை செய்த காரியம்' என்று நிச்சயித்தாள். ஸ்ரீ கிருஷ்ணனும் அவ்விடத்திலில்லை; அதனால் சிரித்தாள். பின்பு அவள் ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடிக் கொண்டு உள்ளே சென்றாள். அவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணன் ஒரு உரலின்மீதேறி வெண்ணெயை யெடுத்துப் பூனை முதலியவைகளுக்குக் கொடுத்து, தம்முடைய திருட்டை யாரேனும் பார்த்துவிடுவார்களோ என்ற சந்தேகத்தால் அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டும், சிரித்துக்கொண்டும் இருந்தார். அதனைக் கண்ட யசோதை, கையில் தடியை எடுத்துக்கொண்டு மெள்ள ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பின் சென்றாள். அவளைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ணன் மிக்க வேகமாக உரலை விட்டிறங்கிப் பயந்தவர்போல் ஓடினார். தவஞ்செய்து (பகவானைத் தியானித்து) ஈசுவர சுரூபமாக ஆகிய யோகிகளுடைய மனமும் எந்தப் பகவானை யடைய வில்லையோ, அந்த ஸ்ரீ கிருஷ்ணனை யசோதை பின்தொடர்ந்தாள். சிறுத்த இடையுள்ளவளும், பருத்தும் அசைவதுமான பின்பக்கமுள்ளவளுமான யசோதை ஸ்ரீ கிருஷ்ணன்

பின் ஓடமுடியாமல் மெதுவாகப் போனாள். ஆனாலும் அவள் தலைமயிர் அவிழ்ந்து, அதிலிருந்து புஷ்பங்கள் கீழே உதிரும்படி தொடர்ந்து ஸ்ரீ கிருஷ்ணனைப் பிடித்துக்கொண்டாள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தாய் குற்றஞ்செய்தவராகையால் மை தீட்டப்பட்டிருந்த கண்களைத் தன் கைகளால் கசக்கி, அழுதுகொண்டும் பயந்தவர்போலக் கலங்கி விழித்துக்கொண்டும் இருந்தார். அதனைக் கண்ட யசோதை அவர் கையைப் பிடித்துக்கொண்டு பயங்காட்டி அதட்டினாள். குழந்தையினிடத்தில் மிகுந்த பிரியமுள்ள யசோதை புத்திரன் பயந்திருக்கிறான் என்று நினைத்து, கையிலிருந்த தடியை எறிந்துவிட்டு அவனுடைய மகிமையை அறியாதவளாகையால் கயிற்றினால் அவரைக் கட்டிவிடுவோம் என்றும் நினைத்தாள். எவருக்கு உள், வெளி யென்பது இல்லையோ, எவருக்கு முன் பின் என்பது இல்லையோ, எவர் ஜகத்திற்குப் பூர்வரும் (முந்தியவரும்), அபரரும் (பிந்தியவரும்), உள்ளும் வெளியாகவும் இருக்கிறாரோ, எவர் ஜகத் சுரூபியாக இருக்கிறாரோ, மனித சரீரத்தை எடுத்துக்கொண்டிருக்கும் அந்தப் பகவானை யசோதை தன்னுடைய புத்திரன் என்று நினைத்து, பிராகிருத சிசுவைப்போல் உரலுடன் சேர்த்துக் கட்டினாள். இவ்விதம் குற்றஞ்செய்த ஸ்ரீ கிருஷ்ணனை யசோதை கயிற்றால் கட்டும்பொழுது அந்தக் கயிறு முடிச்சு போடுவதற்கு இரண்டு அங்குலம் குறைவாக இருந்தது. அதனைக் கண்ட யசோதை வேறு கயிற்றை அதில் முடிந்தாள். அதுவும் குறைவாக இருந்தது. பின்னும் இன்னொரு கயிற்றையும் முடிந்தாள். அதுவும் இரண்டு அங்குலம் குறைவாக இருந்தது. இப்படி வீட்டிலிருக்கும் கயிறுகளைச் சேர்த்து முடிந்தும் அதெல்லாம் குறைவாகவே இருந்தது. அதனைக்

கண்ட கோபிகைகளும் யசோதையும் மிகுந்த ஆச்சரியத்தை அடைந்தார்கள். அப்பொழுது யசோதையின் சரீரத்தில் வியர்வை உண்டாயிற்று; தலையயிர் அவிழ்ந்து புஷ்பங்கள் உதிர்ந்தன. இப்படி தாயார் சிரமப்படுவதைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் அவளிடத்தில் கிருபையால் ஸ்திரமாகக் கட்டுப்பட்டார். ஸ்ரீ கிருஷ்ணன் சுதந்திரர்; பிரும்மா முதலிய தேவர்களடங்கிய ஜகத் முழுவதும் அவருக்கு சுவாதீனமாக இருக்கிறது. அப்படிப்பட்ட பகவான் தாம் பக்தர்களுக்கு வசப்பட்டவரென்பதை இந்த விஷயத்தில் காண்பித்தார். மோக்ஷத்தைக் கொடுப்பவராகிய பகவானுடைய எந்த பிரகாசத்தை (அநுக்ரகத்தை) யசோதை அடைந்தாளோ, அது பிரும்மதேவருக்குங் கிடைக்கவில்லை; பரமசிவனால் அடையப்படவில்லை; எப்பொழுதும் பகவானுடைய சரீரத்தில் வசிப்பவளான லக்ஷ்மீதேவிக்கும் கிடைக்கவில்லை. யசோதையின் புத்திரனாகிய ஸ்ரீகிருஷ்ணன் பக்தர்களால் எப்படி எளிதில் அறியப்படுகிறாரோ, அப்படி தேகாபிமானமுள்ள ஸம்ஸாரிகளாலும், ஆத்ம சுரூபத்தை யறிந்த ஞானிகளாலும் அறியப்படுகிறதில்லை. இப்படி யசோதை ஸ்ரீ கிருஷ்ணனை உரலுடன் சேர்த்துக் கட்டி வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

21—22. குபேரனுடைய புத்திரர்களாகிய நளகூபரன், மணிக்கிரீவன் என்ற இரண்டு குஹ்யர்களும் நாரதருடைய சாபத்தால் அர்ச்சுன மரங்களாக (மருதமரம்) முளைத்து, சாப விமோசன காலத்தை எதிர்பார்த்திருந்தார்கள். அவர்களை (அநுக்ரகிப்பதற்கு) ஸ்ரீ கிருஷ்ணன் பார்த்தார்.

## நோட்டு

எவருக்கு உள்—அப்படி சகல சரூபியாக இருப்பவரை எப்படிக் கட்டமுடியுமென்று கருத்து—அது பிரும்ம தேவருக்கு. பிரும்மதேவர் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் புத்திரராகையாலும், பரமசிவன் தாரக பிரும்மத்தை உபாஸிப்பவராகையாலும், ஸ்ரீதேவி பத்னியாகையாலும் பகவானுடைய பிரசாதத்திற்குத் தகுதியானவர்கள். அப்படியும் அவர்களால் பகவானுக்கு நிக்ரகத்தையாவது அநுக்ரகத்தையாவது செய்ய முடியவில்லை. பகவானைக் கட்டுவது, பயங்காட்டுவது முதலியவைகளைச் செய்யும்படியான பிரசாதத்தை யசோதை அடைந்தாள்—மூலபாவ. பார்த்தார்—பகவான் தாம் கட்டுப்பட்டிருந்தாலும் பிறருடைய துக்கத்தை நிவர்த்திப்பதில் நோக்க முள்ளவரென்று தாத்பரியம்—மூனி.

## அத்தியாயம்—10

## ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுன மரங்களைப் பூமியில் தள்ளியது

1. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! இவர்களுக்குச் சாபம் நேர்ந்ததற்கு என்ன காரணம்? எதனால் தேவரிஷியாகிய நாரதருக்குக் கோப முண்டாயிற்று? அப்படித்திரியான என்ன துஷ்கிருத்தி யத்தை குஹ்யகர்கள் செய்தார்கள்? அவைகளைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

2—24. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "குபேரனுக்கு நளகூபரன், மணிக்ரீவனென்று இரண்டு குமாரர்கள். அவர்கள் பரமசிவனுக்கு வேலைக்காரர்களாக இருந்தார்கள். அதனால் அவர்கள் மிக்க கர்வங்கொண்டு, வாருணியென்ற மதுவைக் குடித்து மயக்கமடைந்து, அசையும் கண்களுள்ளவர்களாகிக் கைலாச பர்வதத்தின் உத்யான வனத்தில் பின் தொடர்ந்து கானஞ் செய்யும் ஸ்திரீகளுடன் சஞ்சரித்தார்கள். மேலும் அவர்கள் தாமரை மலர்களால் பிரகாசிக்கும் கங்கையில் பிரவேசித்து, ஸ்திரீகளுடன் சேர்ந்து இரண்டு மத யானைகள் பெண் யானைகளுடன் விளையாடினாற்போல கிரீடித்தார்கள். அப்பொழுது தேவரிஷியாகிய நாரதர் தெய்வச் செயலாக அவ்விடம் வந்தார். அவ்விடத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் குஹ்யகர்களை மதங்கொண்டவர்களென்று தெரிந்துகொண்டார். அப்பொழுது வஸ்திரமில்லாதிருந்த தேவஸ்திரீகள் நாரதரைக் கண்டு வெட்கமடைந்து, 'சபிப்பாரோ' என்று பயந்து தங்கள் தங்கள் வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டார்

கள். நளகூபரனும், மணிக்ரீவனும் வஸ்திரம் உடுத்திக் கொள்ளவில்லை. இப்படி மதுபானத்தாலும், பணத்தாலும் மதங் கொண்டவர்களான குஹ்யகர்களை அநுக்ரகிப்பதற்காகச் சாபங்கொடுக்க விரும்பி, நாரதர் அவர்களை நோக்கி, "பிரியகரங்களான விஷயங்களை அநுபவிக்கும் புருஷனுடைய புத்தியைப் பணத்தாலுண்டாகும் மதம் எப்படிக் கெடுத்து விடுகிறதோ, அப்படி நல்ல குலத்தில் பிறந்திருப்பது, ரஜோ குணத்தின் காரியங்கள் முதலியவைகளால் உண்டாகும் மதம் கெடுக்கிறதில்லை. பணத்தாலுண்டாகிய மதம் இருக்குமானால் ஸ்திரீ சங்கமம், சூதாட்டம், மதுபானம் ஆகிய இவைகளும் அவனிடத்தில் இருக்கும். மேலும், பணத்தால் கர்வங் கொண்டவர்கள் இந்தச் சரீரத்தைக் கிழத்தனமையற்றதென்றும், மரணமற்றதென்றும் நினைத்து, கருணையற்றவர்களாகி, இந்திரியங்கள் போகும் வழியில் சென்று சரீரத்தைப் போஷிப்பதற்காக ஜீவ இம்சை செய்கிறார்கள். இந்தச் சரீரம் ஜீவித்திருக்கும் பொழுது அரசனென்ற பெயருள்ளதானாலும், பசு முதலியவைகளால் பக்ஷிக்கப்பட்டால் அமேத்தியமென்ற பெயரையும் அடைகிறது. அக்னியால் எரிக்கப்பட்டால் சாம்பல் என்ற பெயரடைகிறது; புழுவென்றும் பெயரடைகிறது. (மரணமடைந்த சரீரத்தை அக்கினியில் எரிக்காவிடினும், நாய் முதலியவைகள் தின்னாவிடினும் புழுவாக ஆகிறது.) அப்படிப்பட்ட சரீரத்தைப் போஷிப்பதற்காக ஜீவஇம்சை செய்பவன் தன்னுடைய அனுகூலத்தை அறியாதவனாகிறான். பிராணிகளுக்குத் துரோகஞ் செய்பவன் நரகத்தை அடைவான். மேலும், சரீரத்தை 'நான்' என்று நினைப்பதும், 'என்னுடையது' என்று நினைப்பதும் உசிதமல்ல. ஏனென்றால், இந்தச் சரீரம்

அன்னங் கொடுத்து வளர்த்தவனுக்குச் சொந்தமானதா? அல்லது பிதாவிற்குச் சொந்தமானதா? அல்லது மாதாவி னுடையதா? அல்லது மாதாவின் தகப்பனுடையதா? (மாதா மகர்) விலைக்கு வாங்கினவனுக்குச் சொந்த மானதா? ஜயிக்கக்கூடிய பலசாலியினுடையதா? அக்னிக்குச் சொந்தமா? நாய்க்குச் சொந்தமானதா? இப்படி எல்லாருக்கும் இந்தச் சரீரத்தில் பாத்திய மிருக் கிறது. இந்தத் தேகம் அவ்யக்தத்திலிருந்து (காரணம்) உண்டானது; அதனிடத்திலேயே லயிக்கிறது; ஆனதால் இப்படிப்பட்ட சரீரத்தைத் தன்னுடையது என்று வித்வான் நினைப்பானா? அதற்காகப் பிராணிகளை இம்சிப் பானா? அப்படி இம்சிப்பவன் அஸத்தேயாம். பணத்தால் கர்வங்கொண்ட குருடனுக்குக் கண்ணை கொடுக்கும் மேலான அஞ்சனம் (மை) தாரித்திரியமேயாகும் (ஏழைத்தனம்). தரித்திரன் ஒருவனே தன்னைப்போல் மற்ற வர்களையும் நினைப்பான். முள் தைத்து அதனாலுண்டாகிய உபத்திரவத்தை யறிந்தவன் பிராணிகளெல்லாருக்கும் சுகதுக்கங்கள் சமமென்று நினைத்து, பிறருக்கும் அந்த உபத்திரவமுண்டாகாம லிருக்கவேண்டும் என்று எண்ணு வான். உபத்திரவத்தை யடையாத சுகஜீவியானவன் பிறருடைய உபத்திரவத்தை யறியான். தரித்திரனிடத்தில் அகங்காரமும், மதங்களும் இருக்கிறதில்லை. தெய்வச் செயலாகச் சரீரத்தை சோஷிக்கச்செய்வது முதலிய கஷ்டத்தை அடைவான். அதுவே அவனுக்கு மேலான தவமாகிறது. எப்பொழுதும் பசியால் இளைத்த சரீரமுள்ள வனும், யார் அன்னங் கொடுப்பார்கள் என்று அன்னத்தை எதிர்பார்ப்பவனுமாகிய தரித்திரனுடைய இந்திரியங்கள் உலர்ந்துபோகின்றன. (பலக் குறைவை அடைகின்றன.)

ஆனதால் ஜீவ இம்சை செய்யவேண்டுமென்று எண்ணம் மாறுகிறது. மேலும், எல்லாவற்றையும் சமமாகப் பார்க்கும் சாதுக்களுடைய சேர்க்கை தரித்திரனுக்குக் கிடைக்குமே யொழியப் பணக்காரனுக்குக் கிடைக்கிறதில்லை. அந்த சாது சங்கத்தால் அவனுக்கு ஆசை நிவர்த்தியாகிறது; பின்பு சுத்தனாகிறான். சூரியனைக் கண்டவுடன் கண்களுக்குப் பந்தமாயிருந்த இருள் விலகுவதுபோல் ஸ்ரீ பகவானுடைய பாதத்தையே விரும்பியவர்களும், எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பவர்களுமான சாதுக்களைத் தரிசிக்கும் வரையில் தான் புருஷனுக்கு பந்தமிருக்குமேயல்லாமல் அதற்குப் பிறகும் பந்தமிருக்கிறதில்லை. சாதுக்களால் உபேக்ஷிக்கக் கூடியவர்களும், பணத்தால் கர்வங்கொண்டவர்களும், அஸத்துக்களை ஆசிரயித்தவர்களுமான துஷ்டர்களால் என்ன பிரயோசனம்? ஆனதால் மதுபானஞ் செய்து மதி மயங்கியவர்களும், காமவெறி கொண்டவர்களும், பணத்தால் மதங்கொண்ட இந்திரியங்களை ஜயிக்காதவர்களுமான இவர்களுடைய மதத்தை, (அஞ்ஞானத்தால் உண்டாகியதை) நான் போக்கடிக்கிறேன். இவர்கள் குபேரனுடைய புத்திரர்களாக இருந்தும், மதங்கொண்டவர்களாய்த் தாங்கள் வஸ்திரமில்லாமல் இருப்பதையும் அறியவில்லை. ஆதலால் இவர்கள் விருட்ச ஜன்மத்தை அடையவேண்டும். இம்மாதிரியான அகங்காரம் இவர்களுக்கு இனி நேரிடவேண்டாம். இந்த விருட்ச ஜன்மத்திலும் என்னுடைய அனுக்கிரகத்தால் முந்திய ஞாபகம் இவர்களுக்கு இருக்கட்டும். இப்படி நூறு தேவ வருஷங்கள் சென்றபின் ஸ்ரீகிருஷ்ண பகவானைத் தரிசித்துத் தங்களுடைய சுரூபத்தை யடைந்து சுவர்க்கத்தை யடைவார்கள்'' என்று அனுக்கிரகித்து நாராயணனுடைய ஆச்சிரமம் சென்றார்.

25—39. அந்த நளகூபரன், மணிக்ரீவன் ஆகிய இருவர்களும் நந்தருடைய தோட்டத்தில் இரண்டு அர்ச்சுன விருட்சங்களாக முளைத்தார்கள். நாரத மகரிஷி பாகவதர்களுக்குட் சிறந்தவராகையால் அவருடைய வார்த்தையை உண்மையாகச் செய்வதற்காக உரலுடன் சேர்த்துக் கட்டப்பட்ட ஸ்ரீகிருஷ்ணன் அந்த மரங்களின் சமீபஞ் சென்றார். பின்பும் அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் "தேவரிஷியாகிய நாரதர் என்னுடைய பக்தராகையால் அவருடைய வார்த்தையின்படி குபேரனுடைய புத்திரர்களாகிய இவர்களை அனுக்கிரகிக்கிறேன்" என்று நினைத்து, இரட்டையாக முளைத்திருக்கும் அந்த விருட்சங்களின் நடுவில் பிரவேசித்தார். அப்படி ஸ்ரீ கிருஷ்ணன் மரங்களின் மத்தியில் புகுந்தபொழுது உரல் குறுக்காக மாட்டிக் கொண்டது. பாலரூபியாக பகவான் உரலை இழுக்க, சீக்கிரத்தில் மரங்களின் வேர் அறுந்து கிளைகளும், தளிர்களும் அசையும்படி பயங்கரமான சப்தத்துடன் அவ்விரண்டு மரங்களும் கீழே விழுந்தன. அந்த மரங்களிலிருந்து அக்னி ஜ்வலிப்பதுபோல மிக்க தேஜசுள்ளவர்களும், திக்குகளைப் பிரகாசிக்கச் செய்பவர்களுமான இரண்டு சித்தர்கள் தங்களுடைய சுரூபத்தை யடைந்து வெளிக் கிளம்பினார்கள். மேலும், அவர்கள் அஞ்சலி செய்து கொண்டு சகல ஜகத்துக்கும் அதிபதியான ஸ்ரீ கிருஷ்ண பகவானை நமஸ்கரித்துப் பின்வருமாறு தோத்திரஞ் செய்தார்கள். "ஓ கிருஷ்ண, உம்முடைய மகிமை அளவற்றது; நீர் எல்லாவற்றிற்கும் காரணராகிய பரம புருஷன்; ஸ்தூலம், சூக்ஷ்மம் ஆகிய இந்தப் பிரபஞ்சம் முழுவதும் உம்முடைய சரீரமென்று ஆத்மாவின் உண்மையை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். சகல பிராணிகளுடைய

சரீரம், பிராணன், அகங்காரம், இந்திரியம் ஆகிய இவை களுக்கு நீர் ஒருவரே அதிபதி. மேலும், நீர் காலசுரூபி யாகவும், நாசமற்றவராகிய விஷ்ணுசுரூபியாகவும் இருக் கிறீர். ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய இவைகளின் சுரூபமும், ஸூக்ஷ்மமுமான பிரகிருதியும் நீரே; சகல சரீரங் களின் விகாரத்தைச் செய்பவரும் நீரே; அவைகளுக்கு யஜமானனான புருஷனும் நீரே. மேலும் இந்திரியங்களுக்குப் புலப்படும் பிரகிருதியின் குணங்களாகிய புத்தி, அகங் காரம், இந்திரியங்கள் ஆகிய விகாரங்களால் உம்மை அறிய முடியாது. எல்லாவற்றிற்கும் முந்தியதும் ஸித்த வஸ்துவு மான உம்மை குணசம்பந்தமுள்ளவனால் அறிய முடியுமா? உம்முடைய சன்னிதானத்தால் பிரகாசிக்கும் குணங்களால் உம்முடைய மகிமை மறைக்கப்பட்டிருக்கிறது. அப்படிப் பட்ட வாசுதேவரும் (வசுதேவருடைய புத்திரர்), எல்லா வற்றையும் படைப்பவரும், பகவானும், பிரும்மமுமாகிய உமக்கு நமஸ்காரம். பிராணிகளிடத்தில் நீர் அவதரித் தாலும் உண்மையில் உமக்குச் சரீரமில்லாமையால் அந்த அந்த அவதாரங்களில் உம்மால் செய்யப்படும் ஒப்புயர் வில்லாத சரிதங்களால் நீர் ஈசுவரனென்று அறியப்படுகிறீர். அப்படிப்பட்ட நீர் இப்பொழுது ஜனங்களுக்கு க்ஷேமத் தையும், மோக்ஷத்தையும் கொடுப்பதற்காக சகல பலனையும் கொடுப்பவராகப் பூர்ணமாகிய அம்சத்துடன் அவதரித் திருக்கிறீர். மேலான க்ஷேம சுரூபியாக இருப்பவரே! ஜகத்திற்கு மங்களத்தைச் செய்பவரே! உம்மை நமஸ்கரிக் கிறேன். வசுதேவருடைய புத்திரரும், சாந்தரும், யதுக் களுக்கு அதிபதியுமான உமக்கு நமஸ்காரம். ஓ! அணிமா முதலிய ஐசுவரியங்களுள்ளவரே! நாரத மகரிஷியின் அனுக்கிரகத்தால் உம்முடைய தரிசனங் கிடைத்தது.

உம்முடைய வேலைக்காரர்களாகிய (குபேரனுடைய புத்திரர்கள்) எங்களுக்கு விடைகொடும். எங்களுடைய வாக்கானது உம்முடைய குணங்களையே சொல்லட்டும்; காதுகள் உம்முடைய கதையையே கேட்கட்டும்; கைகள் உம்மையே பூஜிக்கட்டும்; மனமானது உம்முடைய பாதங்களையே தியானஞ்செய்யட்டும்; உமக்கு வாசஸ்தலமாகிய ஜகத்தை எங்களுடைய சிரசு நமஸ்கரிக்கட்டும்; உம்முடைய சரீரமாகிய சாதுக்களை எங்களுடைய கண்கள் பார்த்துக்கொண்டே இருக்கும்படி அநுக்ரகிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

40—44. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான், "கருணையை சுபாவமாகக் கொண்ட நாரத மகரிஷி சாபங் கொடுத்து உங்களை அநுக்கிரகித்தது முந்தியே என்னால் அறியப்பட்டதேயாம். சமமான சித்தமுள்ளவர்களும், என்னிடத்தில் சித்தத்தை செலுத்தியவர்களுமான சாதுக்களைத் தரிசிக்கும் வரையில் தான் புருஷனுக்குப் பந்தமிருக்கும். சூரியனைத் தரிசித்த பிறகும் இருள் இருக்குமா? ஆனதால் ஓ நளகூபர! மணிக்ரீவ! என்னையே தியானித்துக் கொண்டு உங்களுடைய லோகத்திற்குப் போகலாம். நீங்கள் கேட்டுக்கொண்டபடி என்னிடத்தில் உங்களுக்குப் பக்தி யுண்டாயிற்று. இது திரும்பவும் ஜன்மத்தைக் கொடுக்காது" என்று அநுக்கிரகித்தார். அதனைக் கேட்ட அவ்விருவர்களும் உரலில் கட்டப்பட்டிருக்கும் ஸ்ரீகிருஷ்ணனிடம் விடைபெற்றுப் பல முறை அவருக்குப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து, வடக்கு திக்கை நோக்கிச் சென்றார்கள்.

## அத்தியாயம்—11

### ஸ்ரீ கிருஷ்ணன் வத்ஸாசுரனைக் கொன்றது

1—6. ஓ பரீக்ஷித்து மஹாராஜா! நந்தர் முதலிய கோபர்கள் மரங்கள் விழுந்த சப்தத்தைக் கேட்டு இடி விழுந்ததோ என்று பயந்து அவ்விடம் வந்தார்கள். பூமியில் விழுந்திருக்கிற மரங்களைக் கண்டு அவைகள் விழுந்ததற்குக் காரணமின்னதென்று அறியக்கூடியராயினும், அதனை யறியாமல் மோகித்தார்கள். மேலுமவர்கள் உரலுடன் சேர்த்துக் கட்டப்பட்டும், உரலை இழுத்துக் கொண்டுமிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனையும் கண்டார்கள். "இதென்ன ஆச்சரியம்! இது யாரால் செய்யப்பட்ட காரியம்! உத்பாதமாக இருக்கிறதே" என்று ஆச்சரியமடைந்தார்கள். அருகிலிருந்த குழந்தைகள் கோபர்களை நோக்கி, "இந்தக் கிருஷ்ணன் உரலை இழுத்துக்கொண்டு மரங்களின் மத்தியில் பிரவேசித்தான். அப்பொழுது உரல் குறுக்காக மாட்டிக்கொண்டது. அதனை இவன் இழுத்தான். அதனால் மரங்கள் விழுந்தன. அம்மரங்களிலிருந்து இரண்டு திவ்ய புருஷர்கள் கிளம்பினார்கள். அவர்களை நாங்கள் நேரில் பார்த்தோம்" என்றார்கள். அதனைக் கேட்ட கோபர்கள், "சிறுவனால் பருத்த மரங்களைத் தள்ளமுடியுமா?" என்று குழந்தைகளுடைய வார்த்தையை நம்பவில்லை. சிலர் "ஒருகால் இந்தக் கிருஷ்ணனால் இது செய்யப்பட்டிருக்கலாமோ" என்றும் சந்தேகித்தார்கள். அப்பொழுது நந்தர் உரலுடன் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் தம்முடைய குழந்தையைக் கண்டு சிரித்த முகத்துடன் கட்டை அவிழ்த்துவிட்டார்.

7—9. பின்பு சில சமயம் கோபிகைகள் கைகொட்டிப் பகவானை உற்சாகப்படுத்துகிறார்கள். ஸ்ரீ கிருஷ்ணன்

லோகத்திய சிறுவன்போல நர்த்தனஞ் செய்கிறார்; சில சமயம் பாடுகிறார்; இப்படி மரத்தால் செய்யப்பட்ட பொம்மை புருஷனுக்கு வசப்பட்டிருப்பதுபோல ஸ்ரீ க்ருஷ்ணன் கோபிகைகளுக்கு வசப்பட்டிருந்தார். கோபிகைகள், "ஸ்ரீ க்ருஷ்ண! பீடத்தை (ஆசனப் பலகை, முக்காலி முதலிய) கொண்டு வா; மரக்காலைக் கொண்டுவா; கட்டையை எடுத்து வா" என்று ஆஞ்ஞாபிக்கிறார்கள். அதனைக் கேட்டு, தூக்கிக்கொண்டு வரமுடியாதவர்போல அபிநயஞ்செய்து அவைகளைத் தூக்குகிறார். பின்னும், 'இதைத் தூக்க இவனால் முடியாது' என்பதை அறிந்திருக்கும் பந்துக்களுக்குப் பிரியத்தைச் செய்துகொண்டு கையை அசைத்தார். 'பகவானுடைய ஐச்வர்யம் இப்படிப்பட்டது' என்று அறிந்திருக்கும் வித்வான்களுக்கு, 'ஈச்வரன் பக்தர்களுக்கு வசப்பட்டவர்' என்பதைக் காண்பித்து, பாலக்ரீடைகளைச் செய்து, கோகுல வாசிகளுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணினார்.

10—16. ஒரு நாள் ஸ்ரீ க்ருஷ்ணன் கோபிகைகளின் சமீபத்தில் விளையாடிக் கொண்டிருக்கும்போது, தெருவில் 'பழங்களை வாங்குங்கள்' என்று பழம் விற்பவள் கூறினாள். அதைக் கேட்டு எல்லாருக்குப் சகல பலத்தையும் கொடுப்பவராகிய ஸ்ரீ க்ருஷ்ணன் இரண்டு கைகளிலும் தான்யத்தை எடுத்துக்கொண்டு ஓடினார். வெளியில் வந்து, 'அடி பழம் விற்பவளே! இவ்விடம் வா; நான் அதிகத் தான்யத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். இதை உன்னுடைய அளவினால் (படி முதலியவை) அளந்து எடுத்துக் கொண்டு பழங்களை அளந்துகொடு" என்றார். மகாத்மா

---

10-வது சுலோகம் முதல் 11 சுலோகங்களுக்கு சித்ஸுகாசாரியார் வியாக்யானஞ் செய்திருக்கிறார். இவை சில புத்தகங்களில் இல்லை.

வாகிய அந்தப் பகவானுடைய வார்த்தையைக் கேட்டுப் பழம் விற்பவள் குட்டியானைபோல நடந்துவரும், தாமரை மலர்போன்ற கண்களுள்ள பகவானைப் பார்த்து மலர்ந்த கண்களுள்ளவளாகி, அவருடைய கையிலிருக்கும் தானியத்தைக் கூடையில் போடச் சொல்லி, அவருடைய கையைப் பழங்களால் நிரம்பச் செய்தாள். கூடையைப் பார்த்தாள். கூடை ரத்தினங்களால் நிறைந்திருந்தது. சகல பலத்தையும் கொடுப்பவரான பகவான் வாங்கின பழங்களெல்லாவற்றையும் கோபஸ்திரீகளுக்குக் கொடுத்து, வீதியில் விளையாடிக்கொண்டிருக்கும் சிறுவர்களுடன் சேர்ந்து விளையாடினார். இப்படி பலராமனும், ஸ்ரீ க்ருஷ்ணனும் கோகுலத்தில் வளர்ந்து தத்தித் தத்தி நடந்து சில நாட்கள் சென்றபின் எழுந்து நடக்கச் சக்தியுள்ளவர்களானார்கள்.

17—20. பலராமனும், ஸ்ரீ க்ருஷ்ணனும் அநேக கோப குமாரர்களுடன் யமுனை தீரஞ் சென்று விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ரோகிணீதேவி அச்சமயங்களை யறிந்த ஸ்ரீ க்ருஷ்ணனையும் பலராமனையும் அழைத்தாள். அவர்கள் விளையாட்டிலேயே நோக்க முள்ளவர்களாக இருந்தபடியால் வரவில்லை. புத்திரர்களிடத்தில் பிரீதியுள்ளவளாகிய ரோகிணி, தான் கூப்பிட்டும் குழந்தைகள் வராததால், அவர்களை அழைத்துவரும்படி யசோதையை அனுப்பினாள். புத்திரர்களிடத்தில் மிகுந்த பிரீதியால் பால் சுரந்த ஸ்தனங்களுள்ள அந்த யசோதை கோப குமாரர்களுடனும், பலராமனுடனும் மிகுந்த வேகமாக விளையாடிக்கொண்டிருக்கும் ஸ்ரீ க்ருஷ்ணனை நோக்கி, "தாமரை மலர்போன்ற கண்களுள்ள ஓ க்ருஷ்ணா! க்ருஷ்ணா! இவ்விடம் வா; பால்

குடிக்கலாம். பசியால் சிரமத்தை அடைந்திருக்கிறாய். (ஆனதால்) சாப்பிடவேண்டும். விளையாடினது போதும்; குலத்திற்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணும் குழந்தாய், ராம! நீ காலையில் போஜனஞ் செய்தவனல்லவா? விளையாட்டினால் களைப்படைந்திருக்கிறாய். உன் தம்பியுடன் சீக்கிரம் வா, ஓ தாசார்ஹ! நந்தகோபர் போஜனஞ் செய்யவேண்டி உன்னை எதிர்பார்க்கிறார்; சீக்கிரம் வா. எங்களுக்குப் பிரியத்தைச்செய், ஓ கோபகுமாரர்களே! நீங்கள் உங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். ஓ கிருஷ்ண! உன்னுடைய சரீரம் புழுதியடைந்திருக்கிறது. புளிபோட்டுக் காய்ச்சின அரப்பு, தைலம் ஆகிய இவைகளை வைத்துக்கொண்டு வெகு நாழிகையாக உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நீ வெகு நேரமாக விளையாடுகிறாய். ஆனதால் ஸ்நானஞ்செய். இன்றைய தினம் உன்னுடைய ஜன்ம நக்ஷத்திரம் கூடியிருக்கிறது. நீ மங்கள ஸ்நானஞ்செய்து சுத்தனாக பிராம்மணர்களுக்குப் பசுக்களைத் தானஞ்செய். உன்னுடைய தோழர்களைப் பார். அவரவர்களுடைய தாய்கள் அவரவர்களுக்கு ஸ்நானஞ் செய்வித்திருக்கிறார்கள். ஆனதால், நீயும் போஜனஞ் செய்து அலங்காரஞ் செய்துகொண்டு விளையாடு" என்று சொல்லி யசோதை லோகநாயகனாகிய பகவானைத் தன் புத்திரனென்று நினைத்து மிக்க பிரீதியுடன் பலராமனையும் ஸ்ரீகிருஷ்ணனையும் கையில் பிடித்து அழைத்துக்கொண்டு தம்முடைய கிருகஞ் சென்று மங்கள ஸ்நானஞ் செய்வித்தாள்.

27—31. பின்பு ஒரு சமயம் நந்தர் முதலிய கோபர்கள் ஒரு கூட்டங்கூடி, பிருகத்வனத்தில் மிகுந்த உத்பாதங்களை அநுபவித்துக் கோகுலத்தின் நன்மையைப்பற்றி யோசித்தார்கள். (ஸ்ரீ கிருஷ்ணனுக்கு பிருந்தாவனஞ்

சென்று விளையாடவேண்டுமென்று சங்கல்பமுண்டானதால் ஸ்ரீ க்ருஷ்ணனே அந்தர்யாமியாகக் கோபர்களைத் தூண்டினாரென்று தாத்பரியம்.) அந்தக் கூட்டத்தில் ஞானத்தால் சிறந்தவரும், வயதில் முதிர்ந்தவரும், தேசம், காலம், காரியம் ஆகிய இவைகளின் உண்மையை அறிந்தவரும், ராமனுக்கும் ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் அநுகூலத்தைச் செய்பவருமான உபநந்தரென்ற கோபர் மற்றவர்களை நோக்கி, "கோகுலத்திற்குக் கெடுதல் வரப்போகின்றனவென்று உத்பாதங்களால் தெரியவருகிறது. ஆனதால், கோகுலத்தின் நன்மையை விரும்பிய நாம் எல்லாரும் இவ்விடத்தை விட்டு வேறு இடம் செல்லவேண்டும். குழந்தைகளைக் கொல்பவளான ராக்ஷஸியினிடமிருந்து இக்குழந்தைக்குக் கெடுதி நேராமலிருந்தது மிகவும் ப்ரயாசமான காரியம். வண்டியும் இவன்மீது விழவில்லை. இதெல்லாம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அநுக்ரஹமேயாம். மேலும், இந்தக் குழந்தையைச் சுழல்காற்றின் உருவமாக வந்த அசுரன் பறவைகள் சஞ்சரிக்கும் ஆகாயத்தில் கொண்டுபோய்க் கற்பாறையில் தள்ளினன். அப்படிப்பட்ட குழந்தையைத் தேவர்கள் காப்பாற்றினார்கள். சிறுவனாகிய இந்தக் கண்ணன் மருத்தமரங்களின் நடுவில் சென்றும் பிழைத்தானல்லவா? அது ஸ்ரீமந் நாராயணனுடைய அநுக்ரஹமேயாம். ஆனதால் இப்பொழுது காணப்படும் உத்பாதங்களின் பயனாகிய அரிஷ்டம் நேரிடுவதற்கு முன்னமேயே குழந்தைகளை எடுத்துக்கொண்டு பரிவாரங்களுடன் வேறு இடத்திற்குப் போவோம். ப்ருந்தாவனமென்ற வனமானது பசுக்களுக்கு இதமானது; கோபர்களாலும், கோபிகைகளாலும் சேவிக்கக்கூடியது; அதிலிருக்கும் மலைகளும், திருணங்களும், கொடிகளும்

புல்லியகரமானவைகள். அவ்விடத்திற்குச் சென்று சுகமாக வஸிப்போம். நான் சொல்வது உங்களுக்கும் ஸம்மதமானால் பசுக்கள் முதலில் போகட்டும். வண்டியைக் கட்டுங்கள் தாமதியாமல் பிருந்தாவனத்திற்குப் போவோம்" என்றார்.

32—47. அதனைக் கேட்ட கோபர்களெல்லோரும் ஒரே மனமுள்ளவர்களாகி, 'நீர் சொல்வதே உசிதம்' என்று ஒப்புக்கொண்டார்கள். பின்னுமவர்கள் தங்கள் தங்கள் வண்டிகளைப் பூட்டி அவைகளில் வயது முதிர்ந்தவர்களையும், சிறுவர்களையும், பண்ட முதலிய ஸாமக்ரிகளையும் ஏற்றிக்கொண்டு வில்லைக் கையிலெடுத்து சாவதானர்களாகப் பிருந்தாவனத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். பசுக்கள் முன்னர் சென்றன. கொம்புகளும், தூரிய வாத்தியங்களும் முழக்கப்பட்டன. கோபிகைகள் ஸ்தனங்களில் குங்குமங்களை அலங்கரித்துக்கொண்டும், நல்ல வஸ்திரங்களை யுடுத்துக்கொண்டும், கழுத்தில் பவுன்மாலை முதலிய ஹாரங்களைத் தரித்துக்கொண்டும் வண்டிகளில் ஏறிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய லீலைகளைக் கானஞ்செய்தார்கள். அப்பொழுது யசோதையும், ரோஹிணியும் ஸ்ரீகிருஷ்ணன், பலராமன் இவர்களுடன் ஒரு வண்டியிலேறிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன், ராமன் இவர்களுடைய கதையைக் கேட்டுக்கொண்டே பிருந்தாவனத்திற்குச் சென்றார்கள். இப்படி கோபர்கள் பிருந்தாவனஞ் சென்று வண்டிகளை அர்த்த சந்திரன் போல வட்டமாக நிறுத்திக்கொண்டு வஸித்தார்கள். அந்த ஸ்தலமானது எல்லா ருதுக்களிலும் சுகத்தைக் கொடுக்கக்கூடியது. அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனும் பலராமனும் அந்த வனத்தையும், கோவர்த்தன பர்வதத்தையும், யமுனையின் மணல் திட்டுக்களையும்,

பார்த்து அதிக சந்தோஷத்தை யடைந்தார்கள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுடையவும், பலராமனுடையவும் பாலிய கிரீடைகளாலும் இனிமையான வார்த்தைகளாலும் (மழலைச் சொல்) கோபர்களும், கோபிகைகளும் சந்தோஷத்தை அடைந்தார்கள். இப்படி சில காலஞ் சென்றபின் ஸ்ரீ கிருஷ்ணனும் ராமனும் கன்றுகளை மேய்க்கும் வயதை அடைந்தார்கள். அப்பொழுது அவர்கள் ஒரு நாள் கோகுலத்திற்குச் சமீபத்தில் பலவகையான விளையாட்டுச் சாமான்களை யெடுத்துக்கொண்டு கோபர்களுடைய குழந்தைகளுடன் கன்றுகளை மேய்த்துக்கொண்டிருந்தார்கள். சில சமயம் வேணுகானஞ் செய்தார்கள். சில வேளை வில்வக்காய் முதலியவைகளைத் தூரத்தில் எறிந்து விளையாடினார்கள். மற்றுஞ் சில வேளை காலில் சலங்கைகளை கட்டிக் கொண்டு கூத்தாடினார்கள். பின்னுமவர்களுக்குட் சிலர் கம்பளம் முதலியவைகளைப் போர்த்துக்கொண்டு விருஷபம் போலக் கத்தினார்கள். ஒரு விருஷபத்தின் சப்தத்தைக் கேட்டு மற்று விருஷபங்கள் கத்துவதுபோல மற்ற கோப குமாரர்களும் கத்தினார்கள். சிலர் பசுக்களைப் போலவும், விருஷபங்கள் போலவும் வேஷந் தரித்து ஒருவருக்கொருவர் விளையாட்டாக யுத்தஞ் செய்தார்கள். பின்னும் சகோரம், கிரௌசம், சக்கிரவாகம், பரத்வாஜம், மயில் முதலிய பட்சிகள் கத்தும்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணர்களும் அவைபோல் கத்தினார்கள். புலி, சிங்கம் இவைகள் கர்ஜிக்கும்பொழுது பயந்தவர்கள்போலிருந்து சாமானிய ஜனங்கள்போல சஞ்சரித்தார்கள்.

### வத்ஸாசுர வதம்

48—52. ஒரு நாள் ஸ்ரீ கிருஷ்ணனும் பலராமனும் தங்களுடைய சிநேகிதர்களுடன் யமுனைக்கரையில் கன்று

களை மேய்த்துக்கொண்டிருக்கும்பொழுது அவர்களைக் கொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் ஒரு அசுரன் வந்தான். மேலுமவன் கன்று வேடம் பூண்டு, கன்று களுடன் கன்றாகச் சேர்ந்து சஞ்சரித்தான். அதனை யறிந்த ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுக்கு மாத்திரம் அவனைக் குறிப்பிட்டுக் காட்டி, தாம் அறியாதவர்போல அந்த அசுரனுடைய சமீபஞ்சென்றார். பின்னுமவர், கன்று வேஷங் கொண்ட அசுரனுடைய பின்னங்கால்களையும், வாலையும் சேர்த்துப் பிடித்து உயிரை யிழக்கும்படி சுழற்றி விளாமரத்திலெறிந்தார். அதனாலடிக்கப்பட்டு விளாம்பழங்கள் உதிர்ந்தன. அந்த அசுரனும் பருத்த சரீரத்துடன் விழுந்தான். அதனைக் கண்ட சிறுவர்கள் ஆச்சரியப்பட்டு 'நல்ல காரியம்; நல்ல காரியம்' என்று கொண்டாடினார்கள். (விளாந்தோப்பில் பகவான் எறிந்தாரென்றும், அதனால் அடிக்கப்பட்டு விளாமரங்கள் விழுந்தனவென்றும் சிலர் சொல்வார்கள்.) இந்த வத்ஸ ரூபியான அசுரனுடைய வதத்தைக் கண்ணுற்ற தேவர்கள் அதிக சந்தோஷத்தை அடைந்து, ஸ்ரீ கிருஷ்ணன்மீது புஷ்பங்களை வர்ஷித்தார்கள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனும் பலராமனும் சகல லோகங்களையும் காப்பாற்றுபவர்களானாலும், கன்றுகளை மேய்த்துக்கொண்டு காலை ஆகாரத்தை யெடுத்துக்கொண்டு சஞ்சரித்தார்கள்.

### பகாசுர வதம்

53—59. ஒரு சமயத்தில் கோப குமாரர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் கன்றுகளைத் தண்ணீர் காட்டுவதற்காக ஒரு குளத்திற்கு ஓட்டிக்கொண்டு போய்த் தாங்களும் ஜலத்தைப் பானஞ்செய்தார்கள். அவ்விடத்தில் வஜ்ரத்தால் அடிக்கப்பட்டுச் சிதறின மலையின் சிகரம்போலப் பருத்த

சரீரமுள்ள ஒரு பிராணியைக் கண்டு பயந்தார்கள். அந்தப் பிராணி யாரென்றால் ஓர் அசுரன். கொக்கு வேஷந் தரித்து ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்ல விரும்பி அவ்விடத்திலிருந்தான். கூர்மையான மூக்குள்ள அந்தக் கொக்குவேஷங்கொண்ட பலசாலியான அசுரன் ஸ்ரீ கிருஷ்ணனை விழுங்கினான். அதனைக் கண்ட பலராமனைத் தவிர்த்த மற்ற சிறுவர்கள் பிராணனை விட்டுப் பிரிந்த இந்திரியங்கள்போல மூர்ச்சை யடைந்தார்கள். அந்த பகாசுரன் (பக—கொக்கு. அதன் வேஷங்கொண்ட அசுரன்) சகல ஜகத்தையும் படைத்தவராகிய பிரும்மதேவருக்குந் தந்தையாகிய ஸ்ரீ கிருஷ்ணனை விழுங்க முயன்றும், கடைவாய்களிலும், கண்டத்திலும் அக்னிபோல் எரித்ததால் விழுங்க முடியாமல் கக்கினான். பின்னுமவன் யாதொரு கெடுதியையும் அடையாமலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை மூக்கினால் கொத்திக் கொன்றுவிடுவதாக நினைத்து அவருடைய சமீபஞ் சென்றான். அதனைக் கண்ட ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய இரண்டு கைகளால் கம்ஸனுடைய தோழனாகிய அந்த அசுரனுடைய மூக்கைப் பிடித்துச் சிறுவர்கள் பார்த்திருக்கும்பொழுது வீரணமென்ற துரும்பைக் கிழிப்பதுபோல் விளையாட்டாகக் கிழித்தார். சாதுக்களைக் காப்பாற்றுகிறவராகிய பகவானுடைய அந்தச் சரித்திரத்தைப் பார்த்து தேவர்கள் சந்தோஷித்தார்கள். அப்பொழுது சுவர்க்கத்தில் வசிப்பவர்களான தேவர்கள் நந்தவனத்திலுள்ள மல்லிகை முதலிய புஷ்பங்களை வர்ஷித்தார்கள். ஆனகம், சங்கம் முதலிய வாத்தியங்களை முழக்கினார்கள். பகாசுரனைக் கொன்றவராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தோத்திரஞ் செய்தார்கள். அதனைக் கண்ட கோப குமாரர்கள் ஆச்சரியத்தை அடைந்தார்கள்.

60—66. தனது ஸ்தானத்தை யடைந்த பிராணனை இந்திரியங்கள் அடைந்தாற்போல பகாசுரனுடைய வாயி லிருந்து விடுபட்ட ஸ்ரீ கிருஷ்ணனை ராமன் முதலிய சிறுவர் கள் ஆலிங்கனஞ் செய்துகொண்டு மிகுந்த சுகத்தை அடைந்தவர்களாகிக் கன்றுகளைச் சேர்த்துக்கொண்டு கோகுலஞ்சென்று நடந்த சமாசாரத்தைத் தெரிவித்தார்கள். அதனைக் கேட்ட கோபர்களும், கோபிகைகளும் அதிகச் சந்தோஷத்தை அடைந்து, மரித்துப் பிழைத்தவனைப் பார்ப்பதுபோல ஸ்ரீ கிருஷ்ணனை அன்புடன் பார்த்தார்கள். பின்னும் நந்தர் முதலிய கோபர்கள், "ஆச்சரியம்; இந்தச் சிறுவனுக்குப் பல கெடுதிகள் நேர்ந்தன. ஆனாலும் இவன், அவைகளால் ஆபத்தை அடையாமல் பிழைத்தான். இவனைக் கொல்ல விரும்பிய அசுரர்கள் ஏற்கனவே பிறருக்கு உபத்திரவத்தைச் செய்தவர்களானதால், அக்னி யில் விழுந்த விளக்கு வெட்டுப்பூச்சிகள்போல மரணமடைந் தார்கள். அவர்கள் குரூரமான பார்வையுள்ளவர்களானாலும் இந்தக் குழந்தைக்குப் பயத்தைச்செய்ய அவர்களால் முடியவில்லை. ஆச்சரியம்; வேதத்தை அறிந்தவர்களுடைய வார்த்தை ஒருபோதும் பொய்யாகிறதில்லை. கர்க்க மகரிஷி யெப்படிச் சொன்னாரோ, அவ்விதமே நடந்தது" என்று ஸ்ரீ கிருஷ்ணன், ராமன் இவர்களுடைய கதைகளையே சொல்லிக்கொண்டு சம்ஸார துக்கமின்றி ஆனந்தமாகக் காலத்தைக் கழித்தார்கள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனும், ராமனும் கண்ணைப் பொத்திக்கொள்வது, கரைகட்டுவது, குரங்குகள்போலத் தாவுவது முதலிய விளையாட்டுகளைச் செய்துகொண்டு கௌமார வயதைக் (ஐந்து வயதை) கழித்தார்கள்.

# அத்தியாயம்—12

## அகாஸுர வதம்

1—12. ஒரு நாள் ஸ்ரீ கிருஷ்ணன் காலையில் எழுந்து, 'இன்றையதினம் வனத்தில் போஜனஞ் செய்யவேண்டும்' என்று நினைத்து, சிநேகிதர்களான கன்றுமேய்க்கும் மற்ற கோபகுமாரர்களுக்குத் தெரிவிப்பதற்காகக் கொம்பை ஊதி, தம்முடைய கன்றுகளை முன்னிட்டு கோகுலத்திலிருந்து வெளியில் புறப்பட்டார். அந்த அழகான கொம்புச் சப்தத்தைக் கேட்டு ஆயிரக்கணக்கான கோப குமாரர்களும் வெண்ணெய் உள்ள தயிரன்னம், எண்ணெய் உள்ள புளியன்னம் முதலியவைகளை உறியில் வைத்தெடுத்துக்கொண்டும், பிரம்பு, கொம்பு வாத்தியம், புல்லாங்குழல் ஆகிய இவைகளை எடுத்துக்கொண்டும், ஆயிரத்திற்கு அதிகமான தங்கள் தங்கள் கன்றுகளை முன்னிட்டுக்கொண்டும், ஸ்ரீ கிருஷ்ணனுடன் சந்தோஷமாகப் புறப்பட்டார்கள். மேலும் அவர்கள் வனஞ்சென்று தங்கள் தங்கள் கன்றுகளைக் கணக்கிட முடியாத கிருஷ்ணன் கன்றுகளுடன் சேர்த்துவிட்டு, அந்த அந்த இடங்களில் குழந்தைகள் விளையாடுகிறவண்ணம் விளையாடினார்கள். எப்படியெனில்—அந்தச் சிறுவர்களுக்கு அவர்களுடைய தாய்கள் காசம் (காக்காப்பொன் அல்லது பாசிமணி, குந்துமணி), தங்கம் ஆகிய இவைகளால் அலங்காரஞ் செய்திருந்தும், அவர்கள் பழம், தளிர், பூங்கொத்து, புஷ்பம், மயில் தோகைகள் ஆகிய இவைகளால் அலங்காரஞ் செய்துகொண்டார்கள். அவர்களில் ஒருவனுடைய உறி முதலியவைகளை மற்றொருவன் திருடுவதும், கண்டுபிடிக்கப்பட்டால் சமீபத்தில் அவைகளைப் போடுவதும், கண்டுபிடிக்காவிடில்

சாமான் யாருடையதோ அவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு மறுபடியும் திருப்பிக் கொடுத்துவிடுவதுமாக விளையாடினார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் வனத்தைப் பார்ப்பதற்காக வெகு தூரஞ் சென்றால் அப்பொழுது அந்தச் சிறுவர்கள் 'நான் முன்னே ; நான் முன்னே' யென்று சொல்லிக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனிடஞ் சென்று (அவரைத் தொட்டு) விளையாடினார்கள். பின்னும், அந்தச் சிறுவர்களில் சிலர் புல்லாங்குழலை ஊதினார்கள். மற்றுஞ் சிலர் கொம்பு வாத்தியங்களை முழக்கினார்கள். சிலர் வண்டுகள் சப்திக்கும்பொழுது தாங்களும் அவைகளுடன் பாடினார்கள். சிலர் குயில்கள் கத்தும்பொழுது தாங்களும் அவைகள் போலக் கத்தினார்கள். சிலர் பறவைகளுடைய நிழலுடன் ஓடினார்கள். சிலர் ஹம்ஸங்களுடன் நடந்தார்கள். சிலர் கொக்குகளுடன் தாங்களும் அசையாமல் உட்கார்ந்திருந்தார்கள். சிலர் மயில்கள் கூத்தாடும்பொழுது நர்த்தனஞ் செய்தார்கள். சிலர் மரத்தின் கிளைகளில் தொங்குகின்ற குரங்குகளுடைய வாலைப் பிடித்து இழுத்தார்கள். சிலர் அதை விடாமலேயே மரத்திலேறினார்கள். சிலர் அந்தக் குரங்குகளுடன் பல்லைக் காட்டுவது முதலிய விகாரங்களைச் செய்தார்கள். சிலர் குரங்குகள் தாவும்பொழுது ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குத் தாவினார்கள். சிலர் தவளைகள் தத்தும்பொழுது தாங்களும் தத்தினார்கள். சிலர் நதிகளில் நீந்தினார்கள். சிலர் ஜலத்தில் தோன்றும் பிரதிபிம்பத்தைப் பார்த்துச் சிரித்தார்கள். சிலர் எதிரொலியைக் கேட்டுத் திட்டினார்கள். அந்தச் சிறுவர்கள் புண்ணியத்தைக் குவியல் குவியலாகச் செய்தவர்களாகையால் ஸ்ரீ கிருஷ்ணனுடன் சேர்ந்து மேற்சொல்லியபடி விளையாடினார்கள். அந்த ஸ்ரீ கிருஷ்ணன் வித்வான்களுக்கு பிரும்ம

மாகவும், சுகமாகவும், அநுபவமாகவும் இருப்பவர்; பக்தர்களுக்கு முக்கிய தெய்வமாக இருப்பவர்; மாயைக்கு வசப்பட்ட ஸம்ஸாரிகளுக்கு மானிடக் குழந்தையாகத் தோன்றுகிறவர். (பிரம்மத்தை அறிந்தவர்களுக்கு அநுபவ காலத்தில் மாத்திரம் பகவானுடைய தரிசனம் கிடைக் பக்தர்கள் பகவானை விசேஷ கௌரவத்துடன் ]க்கிறார்கள். இந்தக் கோபகுமாரர்கள் கிருஷ்ணனைத் தோழனாக நினைத்து விளையாடினார்கள். அதனால் அவர்களுடைய பாக்கியம் மேலானதென்று கருத்து.) அநேக ஜன்மங்களில் கஷ்டப்பட்டு, பகவானிடத்தில் மனதைச் செலுத்திய யோகிகளுக்கும் எவருடைய பாத தூளி கிடைக்கவில்லையோ, அந்த ஸ்ரீ கிருஷ்ணனை எப்பொழுதும் நேரில் பார்க்கும் கோகுலவாசிகளுடைய பாக்கியத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

13—18. அப்பொழுது அகனென்ற அசுரன் இச்சிறுவர்களின் விளையாட்டைப் பார்த்துச் சகியாமல் அவர்களின் சமீபஞ் சென்றான். அமிருத பானஞ்செய்த தேவர்களும் எந்த அசுரனிடம் பயந்து, 'இவன் எப்பொழுது மரணமடைவான்' என்று அவனுடைய நாசத்தைத் தங்களுடைய சௌக்கியத்திற்காக எதிர்பார்த்திருக்கிறார்களோ, பூதனை, பகன் இவர்களுக்குத் தம்பியும், கம்ஸனால் அனுப்பப்பட்டவனுமான அந்த அகன் என்பவன் கிருஷ்ணன் முதலிய சிறுவர்களைப் பார்த்து, "இந்தக் கிருஷ்ணன் நம்முடைய சகோதரர்களைக் கொன்றவன்; அவ்விருவர்களையும் வதஞ்செய்ததற்குப் பதிலாக இந்தக் கிருஷ்ணனையும், ராமனையும் கொன்றுவிடுகிறேன். இவ்விருவர்களையும் என்னுடைய சகோதரர்களுக்கு

ஜலமுமாகச் செய்தால் (மரித்தவர்களுக்குத் தர்ப்பணத்தால் திருப்தியுண்டாவதுபோலப் பூதனைக்கும் பகனுக்கும் இவர்களைக் கொல்வதால் திருப்தியுண்டாகுமென்பது கருத்து.) கோகுலத்தில் வசிப்பவர்கள் மரணமடைந்தவர்களுக்குச் சமமானவர்களேயாம். லோகத்தில் பிராணிகள், குழந்தைகளைத் தங்களுடைய பிராணனாக நினைத்திருக்கிறார்கள் அல்லவா? பிராணன் போய்விட்டால் சரீரம் ஜீவிக்குமா? ஆனதால் கிருஷ்ணனை வதஞ்செய்வதால் மற்றவர்களும் மரணமடைவார்கள்" என்று நிச்சயித்து, ஒரு மலைப்பாம்பின் உருவந் தரித்து அந்தச் சிறுவர்களை விழுங்கவேண்டுமென்ற ஆசையுடன் வழியில் படுத்திருந்தான். அவனுடைய சரீரம் பத்து மைல் தூரம் பரவியிருக்கும் ஒரு மலைபோல் பருத்திருந்தது. அவனுடைய வாயானது குகைபோல் அகலமாயிருந்தது. அவனுடைய கீழ் உதடானது பூமியிலும், மேலுதடு மேகத்திலும் இருந்தன. மேலும், அவன் வாயின் உட்புறம் குகை போலவும், இருளடைந்தும், சிங்கப்பற்கள் மலையின் சிகரம்போலவும், நாக்கு வழிபோல நீண்டதாயும், மூச்சு உக்கிரமாயும், கண்கள் காட்டுத் தீ போலவும் இருந்தன. இப்படி அற்புதமாக இருக்கும் அந்தப் பாம்பின் சரீரத்தைக் கண்ட சிறுவர்கள் 'இது பிருந்தாவனத்தின் அழகு' என்று நினைத்து, மலைப்பாம்பு வாயைத் திறந்துகொண்டிருக்கிறதென்று உத்பிரேட்சித்தார்கள்.

19—35. எப்படியெனில், "ஓ நண்பர்களே! ஆச்சரியம்! நமக்கு எதிரிலிருக்கும் இது ஒரு பிராணி போலும், நம்மை விழுங்குவதற்காக வாயைத் திறந்து கொண்டிருக்கும் பாம்புபோலுமிருக்கிறதல்லவா? இதனைப்

பார்த்துச் சொல்லுங்கள். சூரியனுடைய கிரணத்தால் சிவந்த மேகயானது மேலுதடுபோலத் தோன்றுகிறது. அந்த மேகத்தின் ஒளியால் சிவந்த பூமியானது கீழுதடு போலத் தோன்றுகிறது! இரண்டு பக்கங்களிலுமிருக்கும் மலையின் குகைகள் கடைவாய்கள்போலவும், மலையின் சிகரங்கள் சிங்கப் பற்கள் போலவும் தோன்றுகின்றன. நீண்ட வழியானது நாக்குப்போலும், காட்டுத்தீயுடன் கூடிய காற்றானது சுவாசம்போலவும், காட்டுத்தீயினு லெரி பட்ட பிராணிகளின் நாற்றம் உள்ளிருக்கும் மாமிசத்தின் நாற்றம்போலவும் தோன்றுகிறதல்லவா? ஆனதால் இது நம்மெல்லோரையும் விழுங்கிவிடுமோ? அப்படி விழுங்கு மானுல் பகாசுரனைப்போல் ஸ்ரீ கிருஷ்ணன் இதனையும் ஒரு கணத்தில் நாசஞ்செய்துவிடுவார்" என்று பேசிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தைப் பார்த்துச் சிரித்து, கைகொட்டிக்கொண்டு அதனுட் சென்றார்கள். அப்பொழுது அதனுடைய உண்மையை யறியாமல் பேசிக் கொண்டிருக்கும் சிறுவர்களுடைய வார்த்தைகளைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் தாம் சகல ஜனங்களுடைய இருதயத்தில் வசிப்பவராகையால் உண்மையில் அசுரன் பாம்பின் உருவங் கொண்டு படுத்திருக்கிறான். சிறுவர்கள் அதை யறியாமல் பாம்புபோலிருக்கிறதென்று சொல்லுகிறார்கள்" என்பதைத் தெரிந்துகொண்டு அவர்களை அதன் வாயில் பிரவேசிக்காமலிருக்கும்படி தடுக்கவேண்டுமென்று நினைத்தார். அதற்குள் அந்தச் சிறுவர்கள் கன்றுகளுடன் அசுரனுடைய வாயில் பிரவேசித்தார்கள். ஆனால் அந்த அசுரன் தன்னுடைய பந்துக்களுடைய வதத்தை மனத்தில் நினைத்துக் கிருஷ்ணனுடைய வரவை எதிர்பார்த்திருந்தான். அதனால் வாயை மூடவில்லை; சிறுவர்களையும் விழுங்கவில்லை.

அப்பொழுது எல்லாருக்கும் அபயத்தைக் கொடுப்பவரான ஸ்ரீ கிருஷ்ணன் தம்மையே கதியாக நினைத்தவர்களும், தம்முடைய கையிலிருந்து நழுவினர்களும், தீனர்களும் மிருத்யு போன்ற அசுரனுடைய வயிற்றிலிருக்கும் அக்னியால் எரிக்கப்படப்போகிறவர்களுமான சிறுவர்களைப் பார்த்து, இது தெய்வச்செயலாக ஏற்பட்டதென்று ஆச்சரியமடைந்தார். மேலும், எல்லாவற்றையும் அறிந்தவராகிய அந்த ஸ்ரீ கிருஷ்ணன் சாதுக்களாகிய சிறுவர்களை நாசஞ்செய்து தான் ஜீவித்திருக்கவேண்டும் என்ற அசுரனுடைய எண்ணம் நிறைவேருமலிருப்பதற்கு என்ன உபாயஞ் செய்யலாமென்று யோசித்துத் தாமும் அசுரன் வாயில் பிரவேசித்தார். அப்பொழுது மேகத்தில் மறைந்திருந்த தேவர்கள் பயந்து, 'ஹா! ஹா!' என்று கதறினர்கள். அகாசுரனுடைய பந்துக்களான கம்ஸன் முதலிய ராக்ஷஸர்கள் சந்தோஷித்தார்கள். அந்த அசுரன் ஸ்ரீ கிருஷ்ணனையும், சிறுவர்களையும், கன்றுகளையும் பொடியாக்கவேண்டுமென்று நினைத்திருந்தான். அவனுடைய தொண்டையிலிருந்து அழிவற்றவரான ஸ்ரீ கிருஷ்ணன் தேவர்கள் துக்கிப்பதையும், ராக்ஷஸர்கள் சந்தோஷிப்பதையும் கேட்டுத் தம்முடைய சரீரத்தை விருத்திசெய்தார் (பருத்தாரென்று கருத்து). பின்பு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரீரம் பருத்து அசுரனுடைய தொண்டையை அடைத்துக் கொண்டதனுல், பருத்த சரீரமுள்ள அந்த அசுரனுடைய பிராணன் அவனுடைய சரீரத்திற்குள் அங்குமிங்கும் அலைந்து வெளியில் செல்ல மார்க்கமில்லாமல் அவனுடைய சிரஸைப் (பிரம்மரந்திரம்) பேதித்து வெளியில் சென்றது. அவனுடைய கண்கள் வெளியில் பிதுங்கின. பின்னும், அவனுடைய இந்திரியங்கள் யாவும் அந்தப் பிராணனுடன்

வெளியே சென்றன. (அசுரன் மரணமடைந்தானென்று கருத்து.) அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் மரணமடைந்த தம் தோழர்களையும், கன்றுகளையும் தம்முடைய அமிருத திருஷ்டியால் (பார்வையால்) பிழைக்கச் செய்து, அவர்களுடன் அந்தப் பாம்பின் வாயிலிருந்து வெளிப்பட்டார். அந்தச் சமயத்தில் அந்த சர்ப்பத்தின் பருத்த சரீரத்திலிருந்து ஒரு தேஜஸ்ஸானது ஆகாயத்தில் கிளம்பி, கிருஷ்ணன் எப்போது வெளியில் வருவார் என்று காத்திருந்தது. அதனுடைய காந்தியால் பத்துத் திக்குகளும் பிரகாசித்தன. பின்னும் அந்தத் தேஜஸ் ஸ்ரீ கிருஷ்ணன் வெளிவந்தவுடன் சகல தேவர்களும் பார்த்திருக்க ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பிரவேசித்தது. அதனைக் கண்ட தேவர்கள் மிகவும் சந்தோஷித்து, தங்களுடைய காரியத்தை (அசுர வதம்) செய்தவரான ஸ்ரீ கிருஷ்ணன்மீது புஷ்பமாரி பெய்தார்கள். அப்ஸரஸுகள் நர்த்தனஞ் செய்தார்கள். கந்தர்வர்கள் கானஞ்செய்தார்கள். வித்யாதரர்கள் வாத்தியங்களை முழக்கினார்கள். வேலைக்காரர்கள் 'ஜய' என்று சொன்னார்கள். இப்படி யெல்லாரும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜித்தார்கள். பிரம்மதேவர் அற்புதமான ஸ்துதி, வர்த்திபம், கானம், ஜய என்ற சப்தம் முதலிய அநேக மங்கள சப்தத்தைத் தம்முடைய லோகத்திற்கருகில் கேட்டு, சீக்கிரமாக வந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையைப் பார்த்து ஆச்சரியத்தை அடைந்தார்.

36—44. "ஓ பரீக்ஷித்து அரசனே! பின்பு பிருந்தாவனத்தில் அந்த சர்ப்பத்தின் சரீரம் உலர்ந்து வெகுநாள் சிறுவர்கள் விளையாடும் குகையாக இருந்தது. அப்படி ஸ்ரீ கிருஷ்ணன் கௌமாரமாகிய ஐந்தாவது வயதில் அசுர

னிடத்திலிருந்து சிறுவர்களுக்கு நேர்ந்த ஆபத்தை நிவர்த்தித்தார். அந்த அசுரனையும் ஸம்ஸார பந்தத்திலிருந்து நிவர்த்தியடையும்படி செய்தார். இந்த சமாசாரத்தை அந்தச் சிறுவர்கள் ஆறுவது வயதில் இன்றைய தினந்தான் நடந்ததென்று கோபர்களுக்குச் சொன்னார்கள். மாயையால் மானிடக் குழந்தையாக அவதரித்திருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் காரியகாரணங்களைவிட மேலானவரானதாலும், ஜகத்தைப் படைப்பவரானதாலும், அவருடைய சரீர ஸ்பரிசத்தால் அகாசுரன் பாபங்கள் நீங்கி சித்தனானான். மேலுமவன் துஷ்டர்களால்அடையமுடியாத ஸாரூப்யத்தை அடைந்தான். பகவான் இப்படிச் செய்தது ஆச்சரியமல்ல. மேலும், எந்தப் பகவானுடைய திவ்ய சரீரத்தின் பிரதிமையை மனத்தால் தியானிப்பதால் பிரஹ்லாதர் முதலியவர்கள் பரம பாகவதர்களானார்களோ, அந்தப் பகவானே நேரில் அசுரனுக்குட் புகுந்ததால் அசுரன் மோக்ஷத்தையடைந்தானென்பது என்ன ஆச்சரியம்! அந்த ஸ்ரீ கிருஷ்ணன் எல்லாவற்றிற்கும் மேலானவர்; நித்தியமான ஆத்மசுகானுபவத்தால் மாயையை விலக்கினவர்" என்று சொன்னார். அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் (மூலத்தில் தேவதத்தன் என்றிருக்கிறது) தமக்கு நாதராகிய ஸ்ரீகிருஷ்ணனுடைய அற்புதமான சரித்திரத்தைக் கேட்க ஆவலுள்ளவராகி, சுகரை நோக்கிப் பின்வருமாறு கேட்கலானார்: "ஓ பிராம்மணோத்தம! கௌமாரத்தில் (ஐந்தாவது வயதில்) நடந்த கிருஷ்ண சரிதத்தைக் கோபகுமாரர்கள் பௌகண்டத்தில் (ஆறுவது வயதில்) நடந்ததாகக் கோகுலவாசிகளுக்குச் சொன்னார்களென்று சொன்னீரல்லவா? அது எப்படிப் பொருந்தும்? வெகு நாளைக்கு முன் நடந்த சமாசாரம் அப்பொழுது நடந்ததென்று எப்படி நினைக்கப்

படும்? ஓ மகாயோகியே! குருவே! அதனைத் தெரிந்து கொள்ள மிகவும் ஆசைப்படுகிறேன். அதனைச் சொல்ல வேண்டும்; இது பகவானுடைய மாயையாக இருக்க வேண்டுமே யொழிய வேறில்லை. ஓ குருவே! நான் க்ஷத்திரியனானாலும் உம்முடைய முகமாக அடிக்கடி ஸ்ரீ கிருஷ்ண கதையாகிய அமிருதத்தைப் பானஞ்செய்வதால் (கதையைக் கேட்பதால்) மிகவும் தன்யனாகிறேன் (கிருதார்த்தன்)" என்று கேட்டார். "ஓ பாகவதோத்தமர்களுக்குட் சிறந்த சௌனகரே! மேற்காட்டியபடியுள்ள பரீக்ஷித்தின் வார்த்தையைக் கேட்ட சுகர் பகவானைத் தியானஞ்செய்து, அதனால் பரவசங்களான இந்திரியங்களுள்ளவராகித் திரும்பவும் சிரமப்பட்டு வெளிப்பார்வையை அடைந்து, அரசனை நோக்கி விடை சொல்லலானார்" என்று சுகர் சொன்னார்.

## நோட்டு

கௌமாரம்—ஐந்து வயது வரையில் கௌமார மெனப்படும். ஆறு வயது வயது முதல் பத்து வயது வரையில் பௌகண்டமெனப் படுகிறது. அதன்பின் பதினைந்து வயது வரையில் கிசோர மெனப் படும். அதன்மேல் யௌவனம்.

# அத்தியாயம் 13

## பிரம்மதேவர் கன்றுகளை அபகரித்தது

1—3. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "ஓ மிகுந்த பாக்கியமுள்ளவரே! பாகவதர்களுக்குச் சிறந்தவரே! நல்ல கேள்வியைக் கேட்டீர். ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரத்தைப் பல தடவைக் கேட்டிருந்தும் (புதியதுபோல் செய்கிறீர்). திரும்பவும் கேட்க விரும்புகிறீர். காமுகர்கள் ஸ்திரீ விஷயமான வார்த்தையைக் கேட்டுப் பின்னும் அவர்களுடைய சரிதத்தைக் கேட்க எப்படி விரும்புவார்களோ, அதுபோல பகவானுடைய கதையைக் கேட்பதையே பிரயோசனமாகக் கொண்ட வாக்கு, செவி, மனம் ஆகிய இவைகளுள்ள ஸாதுக்கள் ஒவ்வொரு க்ஷணத்திலும் அச்யுதராகிய (நித்யர்) ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதத்தைப் புதியதுபோல் கேட்க விரும்புவார்கள். இது ஸாரத்தை அறிந்த ஸாதுக்களுக்கு இயற்கையான குணமேயாம். ஓ மகாராஜ! ஆசாரியர்கள் அன்புள்ள சிஷ்யனுக்கு ரகசியமான விஷயத்தையும் உபதேசிப்பார்கள். கவனமாகக் கேளும். உமக்கு ஸ்ரீ கிருஷ்ண சரிதத்தைச் சொல்லுகிறேன்" என்று சொல்லத் தொடங்கினார்.

4—6. "இப்படி ஸ்ரீ கிருஷ்ண பகவான் மிருத்யு போன்ற அகாசுரனுடைய வாயில் புகுந்த சிறுவர்களைச் சம்ரட்சித்து யமுனையின் மணலுக்கு அவர்களை அழைத்து வந்து அவர்களை நோக்கி, "ஓ தோழர்களே! இந்த மணல் திட்டானது மிகவும் அழகாக இருக்கிறது. இது நாம் விளையாடுவதற்குத் தகுந்த மிருதுவான மணல்களுள்ளது. மேலும், சமீபத்திலுள்ள மடுவில் தாமரைகள் மலர்ந்திருப்

பதால் அவைகளின் வாசனையை முகர்ந்து மயங்கிய வண்டுகளும் பறவைகளும் ஜலத்தில் சப்திக்கின்றன. அதனால் எதிரொலி யுண்டாகிறது. அதனால் விருட்சங்கள் பிரகாசிக்கின்றன. அதனால் நாமெல்லாரும் இவ்விடத்திலேயே போஜனஞ் செய்யவேண்டும். பகலில் போஜனஞ் செய்யவேண்டிய காலம் தவறிவிட்டது. எல்லாரும் பசியால் களைப்படைந்திருக்கிறோம். கன்றுகள் தண்ணீர் குடித்துவிட்டு நமக்கு அருகில் புல் மேய்ந்துகொண்டு மெதுவாக சஞ்சரிக்கட்டும்" என்றார்.

7—27. அதனைக் கேட்ட சிறுவர்கள் அப்படியே செய்வோமென்று சொல்லிக் கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டி, அவைகளைப் புல் தரையில் மேயும்படி செய்து, தங்கள் தங்கள் உறிகளை அவிழ்த்து வைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடன் சந்தோஷமாகப் போஜனஞ் செய்தார்கள். இப்படி அந்தச் சிறுவர்கள் மண்டலமாக (வட்டமாக) வரிசை வரிசையாக ஸ்ரீ கிருஷ்ணனை நடுவில் வைத்து ஸ்ரீகிருஷ்ணனுடைய முகத்தைப் பார்த்து ஆனந்தமடைந்து மலர்ந்த கண்களுள்ளவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய வட்டமான பக்தியானது தாமரை மலரின் காயைச் சுற்றிக்கொண்டிருக்கும் இதழ்போலிருந்தது. அவர்களில் சிலர் புஷ்பங்களிலும், சிலர் இலைகளிலும், சிலர் முளைகளிலும், சிலர் பழங்களிலும், சிலர் உறிகளிலும், சிலர் பட்டைகளிலும், சிலர் பாறைகளிலும் அன்னத்தை வைத்துக்கொண்டு போஜனஞ் செய்தார்கள். இப்படி எல்லோரும் போஜனஞ் செய்யும்பொழுது தங்கள் தங்கள் அன்னத்தின் ருசியைத் தனித்தனியே ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு சிரிக்கிறார்கள்; மற்றவர்களைச் சிரிக்கச்செய்கிறார்

கள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுடன் சேர்ந்து போஜனஞ் செய்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் இடுப்பில் உடுத்திக் கொண்டிருக்கும் வஸ்திரத்திற்கும் வயிற்றிற்கும் நடுவில் வேணுவாத்தியத்தைச் (புல்லாங்குழல்) சொருகிக்கொண்டு இடது கக்கத்தில் கொம்பு, பிரம்பு இவைகளை வைத்துக் கொண்டும், இடது கையில் (வெண்ணெய் உள்ள) தயிரன்னத்தையும், அதற்கு உபயோகமான ஊறுகாய்களை விரல்களிலும் வைத்துக்கொண்டு பரிகாசமான வார்த்தை களைப் பேசித் தோழர்களை சந்தோஷப்படுத்திக்கொண்டு, தாம் யாகங்களில் ஹவிஸ்ஸைப் புசிப்பவரானாலும், அந்தச் சிறுவர்களுடைய நடுவிலிருந்து போஜனஞ் செய்து பாலக்கிரீடை செய்தார். அதனை ஆகாயத்திலிருந்து தேவர் கள் பார்த்தார்கள். ஓ பரீக்ஷித்து மஹாராஜ! இப்படி அந்தச் சிறுவர்களெல்லாரும் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலேயே மனத் தைச் செலுத்தி போஜனஞ் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் கரையில் மேய்ந்துகொண்டிருந்த கன்றுகள் திருணத்தில் (புல்) ஆசைப்பட்டு வெகு தூரஞ் சென்றன. அப்பொழுது கன்றுகளைக் காணாமல் சிறுவர்கள் பயந்து மனவருத்த மடைந்தார்கள். அப்போது ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுடைய பயத்தை நிவர்த்தித்து, "ஓ தோழர்களே! போஜனத்தை நிறுத்தவேண்டாம். நான் கன்றுகளை இவ்விடம் வரவழைக்கிறேன்" என்று சமாதானஞ் செய்து, கையில் வைத்திருந்த அன்ன கபளத்துடன் மலையின் குகை, கொடி வீடு, புதர் முதலிய இடங்களில் கன்றுகளைத் தேடிக்கொண்டு சஞ்சரித்தார். அப்பொழுது ஓ குரு வம்சத்தை வகிப்பவரே! தாமரை மலரிலிருந்து பிறந்த வரான பிரம்ம தேவர் ஸ்ரீ கிருஷ்ணன் அகாசுரனைக் கொன்றதைப் பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்து மாயை

யால் குழந்தை வேஷந் தரித்த பகவானுடைய அழகான மகிமையைப் பின்னும் பார்க்க விரும்பி, அவருடைய கன்றுகளையும், தோழர்களான சிறுவர்களையும் வேறு இடத்திற்குக் கொண்டுபோய் ஒளித்துவைத்துவிட்டுத் தாமும் மறைந்தார். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் கன்றுகளைத் தேடியும் காணமல் யமுனையின் மணலுக்கு வந்தார். அவ்விடத்தில் கோப குமாரர்களுமில்லை. பின்னுமவர் கன்று களையும், தோழர்களையும் காணமல் வனத்தில் நான்கு புறத்திலும் தேடினர். எங்குத் தேடியும் அவர்களைக் காணமையால் சகல ஜகத்தையும் பார்க்க சக்தியுள்ளவரா கிய ஸ்ரீ கிருஷ்ணன், " இது பிரம்மதேவரால் செய்யப்பட்ட காரியம் " என்று தெரிந்துகொண்டு சீக்கிரமாகத் திரும்பி வந்தார். எல்லாவற்றையும் பார்ப்பவரும், ஈசுவரனுமாகிய ஸ்ரீ கிருஷ்ணன் பிரம்மதேவருக்கும் சிறுவர்களுடைய தாய்களுக்கும் சந்தோஷத்தை யுண்டுபண்ணுவதற்காகக் கன்றுகளாகவும், கோப குமாரர்களாகவும் வேஷந் தரித்தார். (ஸ்ரீ கிருஷ்ணன் மௌனமாக இருந்துவிட்டால் சிறுவர் களைக் காணமல் கோபிகைகள் துக்கிப்பார்கள். பிரம்ம தேவரிடமிருந்து சிறுவர்களை வரவழைத்தால் பிரம்மதேவர் மோகிக்கமாட்டார். இருவர்களையும் சந்தோஷிக்கச்செய்ய வேண்டித் தாமே கன்றுகளாகவும், கோப குமாரர்களாக வும் ஆனரென்று கருத்து.) எவ்வளவு கன்றுகள் கோ குலத்திலிருந்து வனத்திற்கு வந்தனவோ, அவ்வளவு கன்று களாக ஆனர். ஒவ்வொரு கன்றினுடைய கால் முதலிய அவயவங்களும், சேஷ்டைகளும் எப்படி யிருந்தனவோ, அப்படியே இந்தக் கன்றுகளுடைய அவயவம் முதலிய வையு மிருந்தன. பின்னும் அந்தப் பகவான் எவ்வளவு சிறுவர்கள் தம்முடன் வந்தார்களோ, அவ்வளவு சிறுவர்

களானர். கைகள், கால்கள், கண்கள், சுபாவம், குணம், பெயர், ஆகிருதி, வயது, சேஷ்டை முதலியவைகளும் கோப குமாரர்களுடையவை போலவே இருந்தன. மேலும் வஸ்திரம், ஆபரணம், கொம்பு வாத்தியம், வேணு (புல்லாங்குழல்), புஷ்பத்தின் இதழ், உறி முதலியவைகளும் அவர்களுடையதுபோலவே இருந்தன. இப்படி பகவான் சகல சுரூபியாகப் பிரகாசித்ததால், "எல்லா ஜகத்தும் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் சுரூபம்" என்ற வாக்கியம் உண்மையாயிற்று. இப்படி சகல சுரூபியாகப் பிரகாசித்த பகவான் தம்முடைய சுரூபங்களான பசுங்கன்றுகளைச் சிறுவர்களின் உருவங்கொண்ட தாம் தனித்தனியே ஓட்டிக்கொண்டு அவர்களுடன் விளையாடிக்கொண்டு கோகுலத்தில் பிரவேசித்தார். பின்னும் அந்தப் பகவான் அந்த அந்தக் கன்றுகளை அந்த அந்தக் கொட்டிலில் சேரும்படிசெய்து அந்த அந்தச் சிறுவர்களாக அவர் அவர்கள் வீட்டில் பிரவேசித்தார். அவர் அவர்களுடைய தாய்கள் புல்லாங்குழலினுடைய சப்தத்தைக் கேட்டுப் பரபரப்பாய் எழுந்துவந்து பரப்பிரம்மத்தைத் தங்கள் புத்திரர்களென்று நினைத்து, கைகளால் தழுவி அவர்களிடத்திலிருக்கும் பிரீதியால் பால் சுரப்புள்ள ஸ்தனத்தின் பாலைக் கொடுத்தார்கள் (ஸ்தன்யபானஞ் செய்து வைத்தார்கள்). அந்தப் பாலானது அமிருதம்போல் ருசியுள்ளது; மத்யம் போல் மதத்தைக் கொடுக்கக்கூடியது. ஓ அரசனே! லக்ஷ்மீபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய சுரூபிகளாகிய சிறுவர்களை அந்த அந்த சமயங்களுக்கேற்ற நியமங்கள் தவறாமலிருக்கும்படியும், அவர் அவர்களுடைய தாய்களால் செய்விக்கப்படும் கைகால் பிடிப்பது, ஸ்நானம், சந்தனப்பூச்சு, அலங்காரஞ்செய்வது, ரக்ஷை, திலகம்,

போஜனம் முதலியவைகளை அநுபவிக்கும்படியும், சாயங் காலம் வீடு வந்து சேரும்படியும் நடத்திவந்தார். (கோபிகைகள் தங்களுடைய புத்திரர்களென்றே நினைத் திருந்தார்கள்.) பசுக்களும் கொட்டிலில் 'ஹம்' என்ற சப்தத்தைச் செய்து தங்கள் தங்கள் கன்றுகளை அழைக்க, அவைகள் பசுக்களிடஞ் செல்ல, அவைகளை அடிக்கடி நக்கிக் கொடுத்துத் தங்கள் மடியிலிருந்து பெருகும் பாலைக் குடிக்கச்செய்தன; தங்களுடைய கன்றுகளென்றே நினைத்திருந்தன. கோபிகைகளும் சிறுவர்களுருவங் கொண்ட பகவானைத் தங்கள் தங்களுடைய குமாரர் களென்றே நினைத்திருந்தார்கள். ஆனால் பசுக்களுக்குக் கன்றுகளிடத்திலும், கோபிகைகளுக்குக் குழந்தைகளிடத் திலும் முன்பிருந்த பிரீதியைக் காட்டிலும் அதிகப் பிரீதி யுண்டாயிற்று. ஸ்ரீ கிருஷ்ணனும் கோபிகைகளுடைய குமாரர்களாகவே பாவனை செய்துவந்தார். ஆனால் பகவானுக்கு 'நான் இவர்களுடைய குமாரன்; இவர்கள் எனக்குத் தாய்கள்' என்ற மோகம் ஏற்படவில்லை. இதற்குமுன் கோகுலத்தில் வசிப்பவர்கள் எல்லாரும் யசோதையின் புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் தங்கள் தங்கள் புத்திரர்களைக்காட்டிலும் எவ்வளவு அதிகப் பிரீதி வைத்திருந்தார்களோ, அவ்வளவு பிரியத்தை இப்பொழுது தங்கள் தங்கள் குமாரர்களிடத்தில் வைத்தார்கள். அதனால் அந்த ஸ்நேகமாகிய கொடியானது ஒரு வருஷகாலம் நாள் தோறும் அளவில்லாமல் விருத்தியடைந்தது. (அன்பு அதிகமாயிற்றென்று தாத்பரியம்.) இம்மாதிரி ஸ்ரீகிருஷ்ணன் தாமே கன்றுகளாகவும், அவைகளை மேய்க்கும் சிறுவர் களாகவுமிருந்து தம்மைத் தாம் பரிபாலித்துக்கொண்டு கோகுலத்திலும் வனத்திலும் விளையாடினார்.

28—34. இப்படி பகவான் சகல சுரூபியாக ஒரு வருஷ காலம் விளையாடினார். வருஷம் பூர்த்தியாவதற்கு ஐந்து ஆறு நாட்கள் பாக்கியிருக்கும்பொழுது ஒரு நாள் ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு வனத்திற்குச் சென்றார். அன்றைய தினம் கோவர்த்தன மலையின் சிகரத்தில் புல் மேய்ந்துகொண்டிருந்த பசுக்கள் கோகுலத்திற்கு அருகில் சஞ்சரிக்கும் கன்றுகளைக் கண்டன. அவைகளைப் பார்த்தவுடன் அவைகளிடத்திலுள்ள சிநேகத்தால் மெய்ம்மறந்து தங்களை மேய்க்கின்ற கோபர்களையும், வேலி முதலிய தடைகளையும் தாண்டிக் கழுத்தைச் சுருக்கிக்கொண்டும், முகம், வால் இவைகளைத் தூக்கிக்கொண்டும், ஹுங்காரஞ் செய்துகொண்டும், பால் பெருக்குடன் இரண்டு கால் பிராணிபோல இரண்டு கால்களால் வேகமாகக் கோகுலத்தின் சமீபஞ் சென்றன. (விருஷபம் முதலியவைகளும் சென்றனவென்று கருத்து.) அப்படி ஓடிய பசுக்கள் இளங்கன்றுகளுள்ளவைகளானாலும் முந்திய கன்றுகளான அவைகளுக்குப் பால் கொடுத்தன. தன்னுடைய உடல்களையும், பாலுள்ள மடியையும் நக்கிக்கொண்டும் இருந்தன. அவைகளை மேய்த்துக் கொண்டிருந்த கோபர்கள் பசுக்களைத் தடுக்க முயன்றும், முயற்சி பயனற்றதாக ஆனதால் வெட்கம், அதிகக் கோபம் ஆகிய இவைகளை அடைந்து, கஷ்டமான வழிகளைத் தாண்டிப் பசுக்கள் சென்ற இடம் வந்தார்கள். அவ்விடத்தில் மேய்ந்துகொண்டிருக்கும் கன்றுகளையும், அவைகளை மேய்க்கும் தங்கள் குமாரர்களையுங் கண்டார்கள். அவர்களைப் பார்த்தவுடன் மிகுந்த பிரேமையாகிய ஜலத்தில் மூழ்கின மனமுள்ளவர்களாகி, அவர்களிடத்தில் மிகுந்த அன்பு வைத்தவர்களாகி, கோபமில்லாமல் கைகளால்

சிறுவர்களைத் தழுவி (ஆலிங்கனஞ்செய்து), உச்சியில் முகர்ந்து பரமானந்தத்தை அடைந்தார்கள். இப்படி பசுக்கள் கன்றுகளைப் பார்த்தும், கோபர்கள் தங்கள் குமாரர்களை ஆலிங்கனஞ் செய்துகொண்டும் ஆனந்தத்தை அடைந்தார்கள். பின்னும், பசுக்கள் கன்றுகளை விட்டுப் பிரிய மனமில்லாமல் அவைகளை நினைத்துக் கண்ணீரைப் பெருக்கி மிகுந்த சிரமத்துடன் அந்த இடத்தை விட்டு அப்புறஞ் சென்றன. அப்படியே கோபர்களும் சிறுவர்களை விட்டுப் பிரிய மனமில்லாதவர்களாகி, அவர்களை நினைத்துக் கொண்டே கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு அப்புறஞ் சென்றார்கள்.

35—57. அதனைக் கண்ட பலராமன், பசுக்கள் ஊட்டுவதை மறந்த கன்றுகளிடத்திலும் அதிகப் பிரீதியுள்ளவைகளாக இருப்பதையும், கோபர்கள் ஸ்தன்ய பானத்தை மறந்தவர்களான குழந்தைகளிடத்திலும் விசேஷ பிரியமுள்ளவர்களாக இருப்பதையும் பார்த்து, அதன் காரணத்தை அறியாமல் பின்வருமாறு யோசிக்கலானார்: இதென்ன ஆச்சரியம்! சகல சுரூபியாக இருக்கும் ஸ்ரீ வாசுதேவரிடத்தில் ஜனங்கள் எப்படி விசேஷ பிரீதி செய்கிறார்களோ, அதுபோல் பசுக்களும், கோபர்களும் தங்கள் தங்கள் குழந்தைகளிடத்தில் அதிகப் பிரியம் வைத்திருக்கிறார்கள். இது அபூர்வமாக இருக்கிறது. (இதற்கு முன் கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் விசேஷ பிரியமுள்ளவர்களாகவும்,தங்கள் குமாரர்களிடம் சாமானிய பிரியமுள்ளவர்களாகவும் இருந்தார்களென்று கருத்து.) இது தேவர்களால் செய்யப்பட்ட மாயையா? அல்லது மனிதர்களால் செய்யப்பட்ட மாயையா? அல்லது அசுரர்

களால் பிரயோகிக்கப்பட்ட மாயையோ! இது எவ்விட மிருந்து வந்தது? இது என்னையும் மோகிக்கச் செய்வதால் எனக்குப் பிரபுவாகிய பகவானுடைய மாயைதானென்று நினைக்கிறேன். மற்றவர்களால் பிரயோகிக்கப்படும் மாயை யால் என் புத்திக்கு மயக்கம் உண்டாகாது" என்று யோசித்து, பலராமன் ஞானக்கண்ணால் பார்க்கும் பொழுது சிறுவர்களும், கன்றுகளும் ஸ்ரீ கிருஷ்ணனாகவே புலப்பட்டன. (இதுவரையில் பலராமனுக்கும் உண்மை தெரியாது.) அப்பொழுது பலராமன் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "கன்றுகள் மகரிஷிகளுடைய அம்சமுள்ளவர் களென்றும், சிறுவர்கள் தேவர்களுடைய அம்சமுள்ளவர் களென்றும் நினைத்திருந்தேன். இப்பொழுது எல்லாம் நீராகவே தோன்றுகிறீர். ஆனதால் எல்லாம் உம்முடைய சுரூபமாக எப்படி ஆயிற்று? அதனை நன்றாகச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். அதனைக் கேட்ட ஸ்ரீகிருஷ் ணன் நடந்த சமாசாரத்தைச் சுருக்கமாக உபதேசித்தார். அதனால் பலராமன் தெரிந்துகொண்டார்.

இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் கன்றுகளாகவும், கோப குமாரர்களாகவும் ஒரு வருஷ காலம் விளையாடினார். அது பிரம்மதேவருக்கு த்ருடியென்னும் கால அளவாயிற்று. அப்பொழுது பிரும்மதேவர் கோகுலத்திலிருக்கும் கன்றுகளையும், சிறுவர்களையும் பார்த்துக் கோகுலத்தி லுள்ள கன்றுகளும், கோப குமாரர்களும் என்னுடைய மாயையாகிற படுக்கையில் படுத்திருக்கிறார்கள். இன்னும் எழுந்திருக்கவில்லை. அப்படியிருக்க, அவ்வளவு கன்று களும் அவ்வளவு சிறுவர்களும் ஒரு வருஷ காலமாக ஸ்ரீ மகாவிஷ்ணுவுடன் விளையாடுகிறார்களே, இவர்கள் எவர்?

எங்கிருந்து வந்தவர்கள்?" என்று இந்த வித்தியாசத்தைப் பற்றி யோசித்தும், இவர்கள் பகவத் சுரூபிகள் என்று தெரிந்துகொள்ளவில்லை. மோகமற்றவரும், சகல ஜகத்தையும் மோகிக்கச் செய்பவருமான ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு மோகத்தை யுண்டுபண்ணவேண்டுமென்று பிரும்மதேவர் முயன்றும், அப்படிச் செய்ய முடியாமல் போனதுமின்றித் தாமே மோகித்தார். இரவிலுண்டான இருளில் பனியாலுண்டாகும் இருள் எப்படி அடங்குகிறதோ, சூரியன் பிரகாசிக்கும்பொழுது மின்மினிப்பூச்சியின் பிரகாசம் வேறாக இராமல் அந்தப் பிரகாசத்தில் எப்படி அடங்கியிருக்கிறதோ, அப்படி மகா புருஷனை மோகிக்கச்செய்ய முயன்ற பிரம்மதேவருடைய மாயை பயன்படாமல் போனதுமின்றிப் பிரம்மதேவருக்கே மோகத்தை யுண்டுபண்ணிற்று. (பகவானுடைய மாயையில் அடங்கிற்று என்று கருத்து.) அப்பொழுது கோகுலத்திலிருக்கும் கன்றுகளையும், கோபகுமாரர்களையும் பிரம்மதேவர் பார்த்தார். அவர்களெல்லோரும் மேகம்போன்ற கருத்த திருமேனியுள்ளவர்களாக இருந்தார்கள்; பீதாம்பரத்தைத் தரித்திருந்தார்கள்; சங்கம், சக்கரம், கதாயுதம், தாமரை மலர் ஆகிய இவைகளைத் தரித்த நான்கு கைகளுள்ளவர்களாக இருந்தார்கள். கிரீடம், குண்டலம், ஹாரம், வனமாலை ஆகிய இவைகளைத் தரித்திருந்தார்கள்; அவர்களுடைய தோள்வளைகள் ஸ்ரீ வத்ஸத்தின் காந்தியால் பிரகாசித்திருந்தன. பின்னும் அவர்கள் ரத்தின மயங்களான கங்கணங்களையும், மோதிரங்களையும் கையில் அணிந்தவர்களாகவும், முன் ஜன்மத்தி லிருந்த புண்ணியஞ் செய்த ஜனங்களால் பக்தியால் சமர்ப்பிக்கப்பட்ட மிருதுவான துளசிமாலையால் தலை முதல் கால்வரையில் அலங்கரிக்கப்பட்டவர்களாகவும் இருந்தார்

கள். பின்னும் அவர்கள் சந்திரிகைபோல சுத்தமான சிரிப்புள்ளவர்களாகவும், சிவந்த கடைக்கண் பார்வையுள்ளவர்களாகவும் இருந்ததால் பக்தர்களுடைய மனோரதத்தை ரஜோ குணத்தால் படைப்பவர்களும், ஸத்வ குணத்தால் காப்பாற்றுகிறவர்கள்போலவும் விளங்கினார்கள். இன்னும் பிரம்மதேவர் முதல் ஸ்தம்பம் என்ற சிறிய பூச்சி வரையிலுள்ள தாவர ஜங்கமங்களெல்லாம் சரீரமெடுத்துக் கொண்டு நர்த்தனஞ்செய்வது, பாடுவது முதலிய பல உபசாரங்களைச் செய்துகொண்டு ஒவ்வொருவரையும் உபாசித்துக்கொண்டு மிருந்தன. பின்னும் அணிமா முதலிய ஐசுவரியங்களும், மாயை முதலிய சக்திகளும் மகத் முதலிய இருபத்துநான்கு தத்வங்களும் அவர்களை உபாசித்தன. மேலும் காலம், சுபாவம் (வஸ்துக்களை வேறு வகையாக மாற்றக்கூடியது), ஸம்ஸ்காரம், காமம், கர்மம், குணம் ஆகிய இவைகள் பகவானுடைய மகிமைக்கு அடங்கினவைகளாகி, சரீரத்துடன் அவைகளை உபாசித்துக்கொண்டும் இருந்தன. பின்னுமவர்களுடைய மேலான மாகாத்மியமானது ஆத்ம ஞானமுள்ளவர்களுக்கும் புலப்படாததாக இருந்தது. மேலும், அவர்களுடைய சரீரங்கள் ஸத்ய சுரூபங்களாகவும், அனந்தங்களாகவும், ஆனந்த சுரூபங்களாகவும், ஸஜாதீயம், விஜாதீயம் முதலிய பேதமற்றவைகளாகவும், ஒரே விதங்களாகவும் பிரகாசித்தன. எவருடைய தேஜஸ்ஸால் சரம், அசரம் அடங்கிய இவ்வுலகம் முழுவதும் பிரகாசிக்கிறதோ, அந்த பரப்பிரமத்தினுடைய உருவங்களாக அவர்களெல்லோரையும் ஒரே காலத்தில் பிரம்மதேவர் தரிசித்தார். அதைக் கண்ட பிரம்மதேவர் அதிக ஆச்சரியமடைந்து, அவர்களைப் பார்க்கமுடியாமல் முகங்களைத் திருப்பிக்கொண்டு அவர்.

களுடைய காந்தியால் அடக்கப்பட்ட இந்திரியங்களுள்ள வராகி, கோகுல தேவதையின் பக்கத்தில் தங்கத்தால் செய்யப்பட்ட நான்கு முகங்களுள்ள பிரதிமைபோல மௌனமாக நின்றார். இப்படி சரஸ்வதியின் பர்த்தாவாகிய பிரம்மதேவர் பரமாத்ம சுரூபத்தைப் பார்த்து, 'இது இன்ன' தென்று தெரியாமல் மோகித்தார். அந்த சுரூபமானது யுக்திக்கு எட்டாதது; மற்றவர்களால் அடையக்கூடாத மகிமையுள்ளது; தாமாகப் பிரகாசிக்கக் கூடியது; 'இது அல்ல, இது அல்ல' என்று சொல்லும் வேதத்தால் தெரிந்துகொள்ளக்கூடியது; பிரகிருதியைக் காட்டிலும் மேலானது. (அதனால் பிரம்மதேவரும் அந்த சுரூபத்தைத் தெரிந்துகொள்ளவில்லை என்று கருத்து.) இப்படி பிரம்மதேவர் மோகத்தை யடைந்திருக்கும் பொழுது ஸ்ரீ கிருஷ்ண பகவான், "இவர் சத்தியலோகத் திற்கு அதிபதியென்ற அபிமானமுள்ளவர். ஆனதால் நம்முடைய சுரூபத்தை இவர் தரிசிக்கத் தகுந்தவரல்ல" என்று நினைத்து, எந்த மாயையால் அற்புதத்தைக் காண்பித் தாரோ, அந்த மாயையை மறைத்துக்கொண்டார். (அந்த அற்புத சுரூபம் பிரம்மதேவருடைய கண்ணுக்குப் புலப்படாமலிருக்கச் செய்தாரென்று கருத்து.)

58—64. பின்பு பிரம்மதேவர் முன்னிருந்த அறிவை மறந்து பிணம்போல் கிடந்து எழுந்திருந்து வெளிப் பார்வையை அடைந்து கஷ்டப்பட்டுக் கண்களைத் திறந்து கொண்டு, தம்மையும் திக்குகளையும் பார்த்தார். பிருந்தா வனம் அவர் கண்ணுக்குப் புலப்பட்டது. அது ஜனங்களுக்கு நிழல் முதலியவற்றைத் தரக்கூடிய மரங்

களால் நிறைந்தும், பார்க்கப் பிரியமானதுமாக இருந்தது. மேலும், அவ்விடத்தில் இயற்கையில் மிகுந்த விரோதமுள்ள மனிதர்களும், மிருகங்களும், ஒருவருக்கொருவர் சிநேகிதர்கள்போல் விரோதமின்றி வசித்தார்கள். பின்னும் அவ்விடத்தில் பகவான் வசிப்பதால் கோபம், ஆசை முதலியவை இல்லாமலிருந்தன. (அவ்விடத்திலிருக்கும் பிராணிகளுக்குக் கோபம் முதலியவைகள் இல்லை என்று கருத்து.) அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் இயற்கையில் தம்மைவிட இரண்டாவது வஸ்து இல்லாதவராக இருந்தாலும், கன்றுகளைத் தேடிக்கொண்டும், அளவற்ற ஞானமுள்ளவராலும் தோழர்களைத் தேடிக்கொண்டும், எல்லாவற்றிற்கும் மேலானவராலும் பாலவேஷத்தைத் தரித்தும், பிரம்மமானலும் கையில் அன்ன கபளத்துடன் முன்போல் கோப குமாரனாக அபிநயஞ் செய்தும் சஞ்சரித்தார். அவரைப் பிரம்மதேவர் தரிசித்தார். கண்டவுடன் ஹம்ஸத்திலிருந்து சீக்கிரமாக இறங்கி, சுவர்ணமயமான தடிபோல் விழுந்து, நான்கு தலைகளிலிருக்கும் கிரீடங்கள் படும்படி ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களில் நமஸ்கரித்து, ஆனந்தக் கண்ணீரால் அந்தப் பாதங்களுக்கு அபிஷேகஞ் செய்தார். முன்னர் தம்மால் பார்க்கப்பட்ட பகவானுடைய மகிமையை நினைத்து நினைத்து அடிக்கடி ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களில் நமஸ்காரஞ்செய்துகொண்டு மிருந்தார். பின்பு மெதுவாக எழுந்திருந்து, கண்களைத் துடைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து அஞ்சலி செய்து வணக்கத்துடன் ஐாக்கிரதையுள்ளவராகித் தலை வணங்கி, கத்கத ஸ்வரத்துடன் தோத்திரஞ் செய்யலானார்.

## நோட்டு

*பிரம்மதேவர் ஸ்ரீ கிருஷ்ணனை மோகிக்கச் செய்வதற்காகக் கன்றுகளையும், சிறுவர்களையும் அபகரித்து ஸத்யலோகஞ் சென்றார். அப்பொழுது ஸத்யலோகத்தில் நான்கு முகங்களுடன் பிரம்மதேவருடைய உருவங்கொண்டு, பகவான் பிரம்மாசனத்தில் வீற்றிருந்தபடியால் துவாரபாலகர்கள் வெளியிலிருந்து வரும் பிரம்மதேவரை 'நீ யார்' என்று தடைசெய்தார்கள். பின்பு மிகவும் சிரமப்பட்டு பட்டணத்திற்குள் புகுந்ததும், அவ்விடத்தில் உட்கார்ந்திருக்கும் மற்றொரு பிரம்மதேவரைக் கண்டு ஆச்சரியமடைந்து திரும்பிக் கோகுலம் வந்தார், என்ற அர்த்தமுள்ள ஒரு சுலோகம் வீரராகவீயத்துடன் அச்சிட்டிருக்கும் புத்தகத்தில் காணப்படுகிறது.*

# அத்தியாயம்—14

## பிரம்மதேவர் ஸ்ரீ கிருஷ்ணனைத் துதித்தது

1—41. ஓ, துதிக்கத்தக்கவரே! உம்மைச் சந்தோஷப் படுத்துவதற்காக நமஸ்கரிக்கிறேன். நீர் மேகம்போன்ற திருமேனியுள்ளவர்; மின்னல்போன்ற நிறமுள்ள வஸ்திரத்தைத் தரித்தவர்; குன்றுமணிகளால் செய்யப்பட்ட குண்டலங்களாலும், தலையில் அலங்காரமாக வைத்துக் கொள்ளப்பட்ட மயில் தோகைகளாலும் பிரகாசிக்கும் முகமுள்ளவர்; காட்டுப் புஷ்பங்களால் செய்யப்பட்ட மாலையைத் தரித்தவர்; கையிலிருக்கும் அன்ன கபளம், பிரம்பு, கொம்பு வாத்தியம், புல்லாங்குழல் ஆகிய அடையாளங்களால் பிரகாசிப்பவர்; மிருதுவான பாதங்களுள்ளவர்; கோப குமாரனாக இருப்பவர்; (பகவானுக்கு பிரம்மதேவர் அபராதஞ்செய்ததால் பயந்து நடுங்கி, பகவானுடைய மகிமையை அறியாமல் ஸ்ரீ கிருஷ்ண சுரூபத்தையே சொல்லி நமஸ்கரித்தாரென்று கருத்து.) ஓ தேவ! என்னை அநுக்கிரகிப்பதற்காக எடுத்துக்கொள்ளப்பட்டதும், உம்முடைய இஷ்டத்திற்கு ஒத்ததும், சுத்த ஸத்வ சுரூபமுமான இந்தக் கோப சரீரத்தின் மகிமையைத் தெரிந்துகொள்வதற்கே என்னால் முடியவில்லை. ஆனதால், சுரூபமும் அநுபவ சுரூபமுமாகிய உம்முடைய மகிமையைச் சாந்தமாகிய மனத்தாலும் யார் தெரிந்துகொள்வான்? (ஒருவராலும் முடியாதென்று கருத்து. அப்படியானால் மூடர்கள் எப்படி ஸம்ஸாரத்தைத் தாண்டுவார்கள் என்றால் அடுத்த சுலோகத்தால் அவர்களுக்கு உபாயஞ் சொல்லப் படுகிறது.) எவர்கள் ஞான மார்க்கத்தில் சிரமப்படாமல் தங்கள் தங்கள் இடத்திலேயே இருந்துகொண்டு

ஸாதுக்களால் சொல்லப்படும் உம்முடைய சரிதங்களைக் கேட்டுச் சரீரம், வாக்கு ஆகிய இவைகளால் உம்மைப் பூஜித்துக்கொண்டு ஜீவிக்கிறார்களோ, அவர்களால் நீர ஜயிக்கப்படுகிறீர் (ஒருவராலும் ஜயிக்கப்படாதவராயினு மென்று கருத்து). ஓ பிரபுவே, மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடிய பக்தியைவிட்டு (உம்மிடம் பக்தி செய்யாமல்) ஞானத்தை மாத்திரம் அடைவதற்கு எவர்கள் முயன்று சிரமப்படுகிறார்களோ, அவர்களுக்குச் சிரமம் மிஞ்சுமே யொழிய ஞானமுண்டாகிறதில்லை. உமியைக் குத்தி அரிசி யெடுக்க விரும்பியவனுக்குச் சிரமம் மாத்திரம் உண்டாகுமே யொழிய, அரிசி, கிடைக்குமா? (பக்தியால் தான் ஞான முண்டாகவேண்டுமென்று கருத்து.) ஓ, எங்கும் நிறைந்திருப்பவரே! இவ்வுலகத்தில் அநேக யோகிகள் (யோகத்தால் ஞானமுண்டாகாமல்) எல்லாக் கர்மங்களையும் உம்மிடத்தில் சமர்ப்பித்தும், உம்முடைய சரிதத்தைச் சிரவணஞ் செய்தும் அதனால் பக்தியை அடைந்து ஆத்ம ஞானமுள்ளவர்களாகி, சுகமாக உத்தம கதியை அடைந்தார்கள். (உம்முடைய ஸகுண சுரூபத்தை யாவது நிர்க்குண சுரூபத்தையாவது தெரிந்துகொள்வது கஷ்டமானாலும் உம்முடைய கதையைக் கேட்பதால் தான் உம்மை அடையமுடியுமென்று கருத்து.) ஓ பூமன்! குணங்களை அதிக்ரமித்தவராகிய உம்முடைய மகிமை (நிர்க்குண சுரூபம்) விகாரமற்றது; ஆத்மசுரூபத்தை யடைந்த அந்தக்கரண விருத்திக்குப் புலப்படுவது; சுயப்பிரகாசத்தால் அறியக்கூடியது; மற்ற வகையால் அறியமுடியாதது; ஆனதால், அந்த உம்முடைய நிர்க்குண ரூபம் இந்திரியங்களை அடக்கின (இந்திரியங்களை அந்தர் முகங்களாகச் செய்த) யோகிகளால் அறியக்கூடியதாகிறது.

மேலும், மிகவும் சமர்த்தர்களாக இருப்பவர்கள் அநேக நாட்களில் பூமியிலுள்ள தூளிகளையும், ஆகாயத்திலுள்ள பனித்துளிகளையும், நட்சத்திரம் முதலியவைகளுடைய கிரணங்களையும் பிரித்தெண்ணிக் கணக்கிடுவார்கள். லோகத்தின் இதத்திற்காக அவதரித்தவரும், குணங்களுக்கு அதிஷ்டாதாவுமாகிய உம்முடைய குணங்களை யாரால் கணக்கிடமுடியும்? ஆனதால் எவன் உம்முடைய கிருபை யை எதிர்பார்த்து (எப்பொழுது பகவான் நம்மிடத்தில் கிருபை செய்வாரென்று) தன்னுடைய கர்மத்தின் (புண் ணிய பாபம்) பயனை உதாசீனனாக அநுபவித்துக் கொண் டும், சரீரத்தாலும், மனத்தாலும், வாக்கினாலும் உம்மை நமஸ்கரித்துக்கொண்டும் காலத்தைக் கழிக்கிறானோ, அவன் மோக்ஷத்தில் பாகமுள்ளவனாகிறான். ஓ ஈச! நான் செய்த குற்றத்தைப் பாரும். சுரூபத்தாலும், காலத்தாலும், தேசத்தாலும் அளவிடக்கூடாதவரும், எல்லாவற்றிற்கும் காரணரும், மாயாவிகளையும் மோகிக்கச் செய்பவருமான உம்மிடத்தில் நான் மாயையைப் பிரயோகித்து என்னுடைய சாமர்த்தியத்தை (இவ்வளவென்று) அறிய விரும்பினேனல்லவா? இப்படிச் செய்வதற்கு நான் சக்தியுள்ளவனோ? அக்னியிடத்திலிருந்து உண்டான ஜ்வாலை யால் அக்னியை என்ன செய்ய முடியும்? (உம்மிடத் திலிருந்து உண்டான என்னால் உம்மை மோகிக்கச் செய்ய முடியுமாவென்று கருத்து.) ஓ நாசமற்றவரே! நான் ரஜோ குணத்தா லுண்டானவன்; ஒன்றையும் அறியாதவன்; ஜகத்தைப் படைப்பவன் என்ற கர்வத்தால் குருடான கண்ணுள்ளவன்; நானொரு லோகத்திற்கு அதிபதியென்று நினைத்தவன்; ஆனாலும் நான் உம்முடைய வேலைக்காரனான தால் அப்படிப்பட்ட என்னுடைய குற்றத்தை மன்னித்து,

என்னிடத்தில் கிருபை செய்யவேண்டும். மேலும் பிரகிருதி, மகத்தத்வம், அகங்காரம், ஆகாயம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி ஆகிய இவைகளுள்ள அண்ட கடத்தில் 84-அங்குல அளவுள்ள சரீரமுள்ளவனாக இருக்கிறேன். அப்படிப்பட்ட அண்டங்களில் அநேக அண்டங்கள் பரமாணுக்கள்போல் உம்முடைய மயிர்க்கால் வழியாகச் சஞ்சரிக்கின்றன. அப்படிப்பட்ட நம்முடைய மகிமைக்கும் எனக்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கிறது. (நான் மிகவும் அற்பனானகையால் மன்னிக்கவேண்டுமென்று கருத்து.) ஓ இந்திரியங்களுக்குப் புலப்படாதவரே! ஸ்தூலமென்றும், சூக்ஷ்மமென்றும், காரியமென்றும், காரணமென்றும், இருக்கிறதென்றும், இல்லையென்றும் சொல்லப்படும் ஜகத் முழுவதும் உம்முடைய வயிற்றிலிருக்கிறது. உமக்கு வெளியிலொன்றுமில்லை. நானும் உம்முடைய வயிற்றில் வசிக்கிறேன். ஆனதால் என்னுடைய பிழையைப் பொறுத்துக் கொள்ளும். மாதாவினுடைய கர்ப்பத்தில் வசிக்கும் குழந்தை காலால் உதைத்தால் அது குற்றமாகுமா? மேலும், “பிரளய காலத்தில் சமுத்திரம் பொங்கி எங்கும் ஜலமாக இருக்கும்போது ஸ்ரீமந் நாராயணனுடைய தொப்புளிலிருந்து பிரம்மா உண்டானார்” என்று ஜனங்கள் சொல்வது பொய்யல்ல, உண்மையே. ஆனாலும் நான் உம்மிடத்திலிருந்து உண்டானவனேயாம். ஏனென்றால், நீர் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருப்பதால் நாராயணரென்று சொல்லப்படுகிறீர். (நாரமென்றால் பிராணிகளின் கூட்டம்; அயனமென்றால் இருப்பிடம். எவருக்குப் பிராணிகளின் கூட்டம் இருப்பிடமாக இருக்கிறதோ, அவர் நாராயணர்.) எல்லாவற்றையும் சேஷ்டிக்கச் செய்வதாலும் நீரே நாராயணர்; சகல ஜகத்

தையும் தெரிந்துகொள்வதாலும் நீரே நாரணர்; மேலும் இருபத்துநான்கு தத்துவங்களும், ஜலமும் எவருக்கு இருப்பிடமோ, அவர் நாராயணரென்று பிரசித்தயானாலும் அவரும் உம்முடைய சரீரமேயாம். அளவிடக்கூடாதவரா கிய நீர் ஜலத்தில் வசித்திரென்பதும் உம்முடைய மாயையே தவிர வேறில்லை. மனத்தால் நினைக்கமுடியாத ஐசுவரிய முள்ள ஓ பகவன்! சகல ஜகத்திற்கும் ஆச்ரயமாகிய உம்முடைய சரீரம் ஜலத்தில் வசித்ததென்பது உண்மையா னால் பிரளய காலத்தில் தாமரை மலரின் தண்டு வழியாக உள்புகுந்து நூறு வருஷங்கள் தேடியும் என் கண்ணுக்குப் புலப்படவில்லையே? பின்பு தாமரை மலரில் வந்திருந்து, நூறு வருஷங்கள் தவஞ் செய்தபோது இருதயத்தில் தோன்றியது. அவ்விடத்திலும் சீக்கிரமாகத் தோன்ற வில்லை. (ஆனதால் உம்முடைய சரீரம் ஒருவிடத்தில் வசித்ததென்பது மாயையேயாம்.) ஓ மாயையைப் போக் கடிப்பவரே! இந்தக் கிருஷ்ணவதாரத்தில் வெளியில் எல்லோராலும் ஸ்பஷ்டமாகப் பார்க்கப்படுகிற பிரபஞ்சம் முழுவதையும் உம்முடைய வயிற்றிலிருப்பதாக யசோதைக் குக் காண்பித்தீரல்லவா? அதனால் பிரபஞ்சமும் மாயையே யொழிய உண்மையல்லவென்று காட்டப்பட்டது. கண்ணாடியில் அதன் முன்னிருக்கும் வஸ்து பிரதிபலிப்பது போல வெளியிலிருக்கும் பிரபஞ்சம் உம்முடைய வயிற்றில் பிரதிபலிக்கிறது. ஆனதால் பிரபஞ்சம் உண்மையானது என்று சொல்லுவதும் பொருந்தாது. ஏனென்றால், உம்முடைய வயிற்றில் இந்த ஜகத்தும் இருக்கிறது. நீரும் (கிருஷ்ணனும்) இருக்கிறீர். அப்படி வெளியிலும் ஜகத்தும் தோன்றுகிறது; நீரும் இருக்கிறீர். ஆனதால் ஜகத் உண்மை யல்ல. (வெளியிலிருப்பதின் பிரதிபிம்பமானால் அதற்கு

விபரீதமாகத் தோன்றவேண்டும். அப்படிக் காணப்பட வில்லை. மேலும், கண்ணாடியில் மற்றவை பிரதிபலிக்குமே யல்லாமல் அந்தக் கண்ணாடியும் பிரதிபலனத்தை அடையாது. உம்முடைய வயிற்றில் நீரும் காணப்படுவதால் பிரதிபிம்பமென்று சொல்வது பொருந்தாதென்று கருத்து.) மேலும், நீர் முதலில் ஒருவராக இருந்தீர். பின்பு கோகுலத்திலிருக்கும் எல்லாச் சிறுவர்களாகவும் இருந்தீர். அதன்பின் அவ்வளவு சுரூபங்களும் நான்கு கைகளுள்ளவைகளும், தத்துவம் முதலியவைகளால் உபாசிக்கப்பட்டவைகளுமாக எனக்குத் தோன்றின ; பிறகு உலகம் முழுவதும் உம்முடைய சுரூபமாகத் தோன்றியது. அதன்பின் எங்கும் வியாபித்திருக்கும் ஒப்பற்ற பரப்பிரம்மமாக இருக்கிறீர். ஆனதால், நீர் ஒருவரே ஸத்யமான வஸ்து. மற்றவை யாவும் உண்மையானதல்லவென்று உம்மால் இன்றைய தினம் எனக்குக் காட்டப்பட்டதாகிறது. மேலும், நீர் எப்பொழுது பிரகிருதியை ஆச்ரயித்து மாயையாகிய வலையை வீசுகிறீரோ, அப்பொழுது உம்முடைய உண்மையை அறியாதவர்கள் பிரம்மதேவர் லோகத்தைப் படைக்கிறாரென்றும், மகாவிஷ்ணுவாகிய நீர் காப்பாற்றுகிறீரென்றும், முக்கண்ணனாகிய பரமசிவன் நாசஞ்செய்கிறாரென்றும் நினைக்கிறார்கள். (அப்படி அவர்களுக்கு பலவகையாகத் தோன்றுகிறவரும் நீரே. அதற்கு உம்முடைய மாயையே காரணமாகிறதென்று கருத்து.) இப்படி சுதந்திரராகிய நீர் வாமனராகவும், மகரிஷியாகவும் (நாரதர் முதலியவர்கள்), ஸ்ரீ ராமன் முதலிய மனிதராகவும், ஸிம்மம் முதலிய திர்யக் ஜாதியாகவும், மத்ஸியமாகவும், கூர்மமாகவும் அவதரிப்பது துஷ்டர்களுடைய கர்வத்தை அடக்குவதற்காகவும், ஸாதுக்களைக் காப்பாற்றுகிறதற்காக

வுமே தவிர உண்மையில் உமக்கு ஜனனமில்லை. (இஷ்ட மிருந்தால் சரீரத்தை யெடுத்துக்கொள்பவரென்று கருத்து.) ஓ அளவற்ற' சுரூபியே! ஓ பகவன்! ஓ பரமாத்மாவே! யோகிகளுக்கு அதிபதியே! நீர் யோகமாயையைப் பரவச் செய்துகொண்டு கிரீடிக்கிறீர். அப்படிப்பட்ட உம்முடைய மகிமையை எவ்விடத்தில், எந்தக் காலத்தில், எப்படி, எவ்வளவு, யாரால் அறியமுடியும்? ஆனதால் கண்ணுக்குப் புலப்படும் இந்த ஜகத் முழுவதும் உண்மையானதல்ல. சொப்பனம்போன்றது; மிகுந்த துக்கத்தைக் கொடுக்கக் கூடியது; சைதன்யமற்றது; அப்படிப்பட்ட பிரபஞ்ச மானது, நித்தியரும், சுக சுரூபியும், ஞானசுரூபியும், அனந்தருமாகிய உம்மிடத்திலேயே உண்டாகிறதுபோல வும், நசிக்கிறதுபோலவும் தோன்றுகிறது. (அதிஷ்டான மாகிய உம்முடைய குணத்தால் ஜகத்தும் நித்தியம்போல வும், சுகம்போலவும், சேதனம்போலவும் தோற்றுகிறது. உண்மையில் அப்படியில்லை யென்று கருத்து.) இதற்கும் உம்முடைய மாயையே காரணம். நீர் ஒருவர்தான் ஸத்ய வஸ்து; நீர் கண்ணுக்குப் புலப்படாத ஆத்மா; (பார்க்கப்படும் வஸ்துக்கள் அஸத்தியங்கள்; நீர் அப்படிப் பட்டவரல்லவென்று கருத்து.) மேலும், விகாரமுள்ளது ஸத்யமல்ல. உமக்கு ஜனனம் முதலிய விகாரங்களில்லை. ஜகத்திற்கு முந்தியுமிருக்கும் ஆதிபுருஷன் நீரொருவரே ஸத்யர்; அழிவற்றவர்; எல்லாவற்றிற்கும் முந்தியவர்; நித்யர்; பூர்ணர்; எப்பொழுதும் சுக சுரூபி; குறைவற்றவர்; மரண தர்மமற்றவர்; தேசத்தாலும், காலத்தாலும் அளவிடக்கூடாதவர்; வஸ்துவாலும் அளவிடக்கூடாதவர்; தாமாகப் பிரகாசிப்பவர்; நிர்மலர்; உபாதியற்றவர்; எவர்கள் குருவாகிய சூரியனிடமிருந்து உபநிஷத்தாகிய

கன்னை அடைந்து, அதனுல் ஸம்ஸார சமுத்திரத்தைத் தாண்டுகிறவர்கள்போல் இருக்கிறார்களோ, அவர்கள் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருக்கும் அப்படிப்பட்ட உம்மைப் பிரத்யகாத்ம சுரூபரென்று தெரிந்துகொள்வார்கள். கயிற்றைப் பார்த்து சர்ப்பம் என்று நினைப்பது எப்படி உண்மையை அறியாததால் நேரிடுகிறதோ, அப்படி ஆத்மாவின் உண்மையை அறியாததால் (அஞ்ஞானத்தால்) பிரபஞ்சம் (ஸம்ஸாரம்) உண்டாயிருக்கிறது. அதற்குக் காரணமாகிய அஞ்ஞானம் நிவர்த்தியாகி, ஞானம் உண்டான பிறகு அந்தப் புருஷன் திரும்பவும் ஸம்ஸாரத்தை அடையமாட்டான். (ஞானத்தால் ஸம்ஸாரத்தைத் தாண்டலாமென்பது காட்டப்பட்டது.) பந்தம், மோக்ஷம் இரண்டும் அஞ்ஞானத்தால் ஏற்பட்டிருக்கின்றனவே யொழிய உண்மையில்லை. அகண்ட அநுபவ சுரூபியும், சுத்தனுமாகிய ஆத்மாவிடத்தில் அஞ்ஞானம், பந்தம், ஞானம், மோக்ஷம் இவைகள் சம்பந்திக்குமா? சுரூபத்தைக்காட்டிலும் வேறாகப் பந்தமாவது மோக்ஷமாவது இல்லை. (கட்டுப்பட்டவனுக்கு விடுதலையுண்டு; ஒரு பொழுதும் கட்டுப்படாதவனை விடப்பட்டான் என்று எப்படிச் சொல்லலாம்? ஆனதால் ஞானத்தால் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறார்கள் என்பது ஔபசாரிக மென்ற கருத்தினுல் முந்திய சுலோகத்தில் தாண்டுகிறவர்கள்போல என்று சொல்லப்பட்டது.) சூரியனை ராத்திரிக்கும் பகலுக்கும் காரணராகச் சொல்வதுபோல் ஆத்மாவிற்குப் பந்தம், மோக்ஷம் இவையுண்டென்ற விவகாரம் ஆத்ம சுரூபத்தை விசாரிக்காததால் ஏற்படுகிறது. பரமாத்மாவாகிய உம்மைச் சரீரம் முதலியவைகளென்று நினைத்தும், சரீரம் முதலியவைகளைப் பரமாத்மாவாகிய நீர் என்று

நினைத்தும், காணாமற்போன ஆத்மாவை வெளியில் தேடுகிறார்கள். (வீட்டில் காணாமற்போன வஸ்துவைக் காட்டில் தேடினால் கிடைக்குமா?) மூடர்களுடைய அறியாத்தன்மை ஆச்சரியப்படத்தக்கதாக இருக்கிறது. (பிரத்யகாத்ம சுரூபமாக அறிந்தால் ஆத்மானுபவம் உண்டாகுமென்று கருத்து.) ஓ அநந்தரே! ஸாதுக்கள் இந்தச் சரீரத்திலேயே (சித், ஜடம் இவையுள்ள சரீரத்தில்) உம்மைத் தேடி ஜடத்தை ஆத்மாவல்லவென்று தள்ளிவிட்டு உம்மைத் தெரிந்துகொள்ளுகிறார்கள். சரீரத்திலிருக்கும் ஸத்பதார்த்தத்தைத் தெரிந்துகொள்வதே போதுமானது. அஸத் பதார்த்தத்தை எதற்காகத் தெரிந்துகொள்ளவேண்டு மென்றால், கயிற்றைப் பார்த்துச் சர்ப்பம் என்று நினைத்தவனுக்குக் கயிறு என்ற ஞானமுண்டாகவேண்டு மானால், சர்ப்பம் அவ்விடத்தில் இல்லாதிருந்தாலும் அதனுடைய சுரூப ஞானமுண்டாகி, இது சர்ப்பமல்ல; இது கயிறு என்று அறியவேண்டியது அவசியமாக இருப்பதுபோல் அனாத்ம சுரூபத்தை யறிந்து, அதனை யபவதித்து (அதல்லவென்று) பின்பு ஆத்ம சுரூபத்தை அறியவேண்டும். (பிரத்யகாத்ம சுரூபமாக அறிந்ததால் தான் முக்தி கிடைக்குமென்று கருத்து.) ஓ தேவ! இப்படி விசாரித்து அனாத்மாக்களை யபவதித்து உம்முடைய சுரூபத்தை யறியவேண்டியதாக இருந்தாலும் அப்பேர்ப் பட்ட ஞானம் உம்முடைய பாதாரவிந்தங்களைச் சேவித்து அதன் சொற்ப பிரசாதத்தையாவது அடைந்தவனுக்கே உண்டாகிறது. மற்றவன் எவனானாலும், எவ்வளவு காலம், விசாரித்தாலும் உம்முடைய உண்மையை அறியமாட்டான். (முந்திய சுலோகங்களால் ஞானத்தால் மோக்ஷம் கிடைக்கு மென்று சொல்லப்பட்டாலும் அந்த ஞானமும்

பக்தியில்லாதவனுக்கு உண்டாகிறதில்லை. ஆனதால் பக்தியே மேலானதென்று கருத்து.) ஓ தேவ! எனக்கு இந்த ஜன்மத்திலும், வேறு தாழ்ந்த ஜன்மம் கிடைத்தாலும், உம்முடைய வேலைக்காரர்களுக்குள் ஒருவனுக இருந்து உம்முடைய பாதாரவிந்தத்தைச் சேவித்துக்கொண்டிருக்கும் பாக்கியத்தை அநுக்ரகிக்கவேண்டும். ஓ பிரபுவே! சகல யாகங்களும் எந்த உமக்கு இப்பொழுதும் திருப்தியுண்டுபண்ணிச் சக்தியற்றவைகளாக இருக்கின்றனவோ, அப்படிப்பட்ட நீர் கோபகுமாரர்களாக இருந்து கோபஸ்திரீகளுடைய ஸ்தன்யத்தையும் (பால்) கன்றுகளாகவிருந்து பசுக்களுடைய பாலையும் அமிருதத்தைப்போலப் பானஞ்செய்தீர் அல்லவா? அதனுல் அந்தக் கோபிகைகளும், பசுக்களும் மிகவும் மேலானவர்கள். ஆச்சரியம்! நந்தகோபர் முதலிய கோகுலத்தில் வசிப்பவர்களுக்கு ஒப்புயர்வில்லாத சுக சுரூபியும், பூர்ணரும், நித்யரும், பிரம்மமுமான நீர் மித்திரராக இருப்பதால் அவர்களுடைய பாக்கியமானது ஆச்சரியப்படக்கூடியது. ஓ அச்சுதரே! இந்தக் கோபர்களுடைய மகிமையைப்பற்றியுஞ் சொல்லவேண்டுமோ! பத்து இந்திரியங்களுக்கு அதிஷ்டான தேவதைகள், மனத்தின் தேவதையான சந்திரன், அகங்காரத்தின் அதிதேவதையான பரமசிவன், புத்தியின் தேவதையும், பிரம்மாவுமாகிய நான் ஆகிய பதின்மூன்று தேவர்களும் இந்திரியங்களாகிய பாத்திரங்களால் உம்முடைய பாதங்களாகிய தாமரை மலரின் அமிருதத்தைப் பானஞ்செய்கிறேும். ஆதலால் நாங்களே மிக்க பாக்கியசாலிகளாக இருக்கிறேும். (சகல இந்திரியங்களால் உம்முடைய சகல குணங்களையும் சேவிக்கும் கோகுலவாசிகளின் பாக்கியம் மிக்க மேலானதென்று கருத்து.)

உம்முடைய பாததூளியை வேதங்கள் எப்பொழுதும் தேடுகின்றன. அப்படிப்பட்ட உம்மைக் கோகுலத்தில் வசிப்பவர்கள் உயிராக நினைத்திருக்கிறார்கள். ஆனதால் அந்தக் கோகுலவாசிகளுக்குள் யாருடையவாவது பாததூளி கிடைக்கும்படியாகப் பூமியில், வனத்தில், கோகுலத்தில் எந்த ஜன்மம் கிடைத்தாலும் அதுவே மேலான பாக்கியம். ஓ தேவ! கோபிகைபோல வேஷந் தரித்து வந்த பூதனையும், பகன், அகன் முதலியவைகளுடன் உம்மை அடைந்தாள். அப்படியிருக்க வீடு, பணம், புத்திரர்கள், பிரியம், மனது, சரீரம், பசுக்கள், பிராணன், இந்திரியங்கள் ஆகிய எல்லாவற்றையும் உம்மிடத்தில் சமர்ப்பித்திருக்கும் கோகுலவாசிகளுக்கு நீர் எதனைக் கொடுப்பீர்? சகல பலசுரூபமான உம்முடைய சுரூபந்தான் உம்மிடத்திலிருப்பது. அதற்கு மேலான வஸ்து வேறொன்றுமில்லை. அதைப் பக்தர்களைப்போல வேஷந் தரித்த பூதனைக்குக் கொடுத்தீர். உண்மையாகப் பக்தி செய்யும் கோகுலவாசிகளுக்கு அதைக்காட்டிலும் மேலான எந்த வஸ்துவைக் கொடுக்கப்போகிறீர் என்று நான் யோசித்தும் நிச்சயமுண்டாகாமல் என் மனம் மோகிக்கிறது. வைராக்யமுள்ளவர்களான சன்னியாசிகளுக்கும் என்னை அடைவதே பலனாக இருக்கிறது. ஆசை முதலியவைகளை ஜயிக்காதவர்களான இவர்களுக்கு என்னுடைய சுருபத்தை யடைவதைக்காட்டிலும் மேலான பலன் வேண்டுமாவென்றால், ஓ கிருஷ்ண! உம்முடைய பக்தனாக ஆகிறவரையில்தான் ஆசை திருடனாக இருக்கும் (ஞானரத்தினத்தை அபகரிப்பது); வீடு ஜெயிலாக ஆகும்; கிரகமானது கால் விலங்காகும். (உம்முடைய பக்தர்களால் மேற்சொல்லிய ஆசை முதலிய

வைகள் உம்மிடத்தில் வைக்கப்பட்டனவாகையால் அவை பந்தகங்களாகிறதில்லை. ஆனதுபற்றி சன்னியாசிகளைக் காட்டிலும் கோகுலவாசிகள் மேலானவர்கள் என்று கருத்து.) நீர் பக்தஜனங்களுக்கு ஆனந்தத்தை யுண்டு பண்ணுவதற்காக லோகத்தை அநுசரித்துக்கொண்டிருக்கிறீர். உண்மையில் நீர் பிரபஞ்சத்தின் சம்பந்தமற்றவர். ஓ பிரபுவே! உம்முடைய மகிமை என்னுடைய மனத்திற்கும், சரீரத்திற்கும், வாக்குக்கும் எட்டவில்லை. பலவகையாகச் சொல்வதில் என்ன பிரயோசனம்? தெரிந்தவர்கள் தெரிந்துகொள்ளட்டும்; எனக்குத் தெரியவில்லை. (பகவானுடைய சுரூபத்தை யறிந்ததாகச் சொல்பவர்களைப் பரிகசித்தார்.) ஓ கிருஷ்ண! விருஷ்ணிகளுடைய குலமாகிய தாமரையை மலரச் செய்வதால் சூரியன் போன்றவரே! பூமி, தேவர்கள், பிராம்மணர்கள், பசுக்கள் ஆகிய சமுத்திரங்களை விருத்திசெய்வதாலும், தர்மத்திற்கு விருத்தமான பாஷண்ட தர்மமாகிய ராத்திரியின் இருளைப் போக்கடிப்பதாலும் சந்திரன் போன்றவரே! பூமியில் அரசர்களாகப் பிறந்திருக்கும் அசுரர்களான கம்ஸன் முதலியவர்களை நாசஞ் செய்பவரே! சூரியனாலும் பூஜிக்கத்தக்கவரே! ஓ பகவன்! கல்பம் வரையில் உம்மை நமஸ்கரிக்கிறேன். நீர் எல்லாவற்றையும் அறிந்தவர்; சகல ஜகத்திற்கும் அதிபதி; உம்முடைய மகிமை உம்மாலேயே அறியக்கூடியது; இந்த ஜகத்தும் உம்மிடத்திலேயே இருக்கிறது; என்னை விடைகொடுத்து அனுப்பும்" என்று சொல்லி மூன்று தடவை பிரதக்ஷிணஞ்செய்து பகவானுடைய பாதங்களை நமஸ்கரித்து, பிரம்மதேவர் தம்முடைய லோகஞ் சென்றார்.

42—48. பகவான் பிரம்மதேவருக்கு விடை கொடுத்துத் தம்முடைய தோழர்களை முன்போல் யமுனையின் மணல் திட்டில் வரவழைத்தார். அந்தக் கோப குமாரர்கள் ஒரு வருஷ காலமாகத் தங்களுடைய பிராணனாகிய கிருஷ்ணனை விட்டுப் பிரிந்திருந்தும் பகவானுடைய மாயையால் அதனை மறந்து அந்த ஒரு வருஷத்தையும் அரை க்ஷணமாக நினைத்தார்கள். பகவானுடைய மாயையால் மோகித்து இந்த ஜகத்தானது தன்னையே அடிக்கடி மறந்துவிடுகிறது. அப்படியிருக்க மாயையால் மோகித்த மனமுள்ளவர்கள் எதைத்தான் மறக்கமாட்டார்கள்? அப்பொழுது கோபகுமாரர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "நல்வரவா! வாரும். ஒரு கவளங்கூட நீர் புசிக்கவில்லையே; சாப்பிடும்" என்றார்கள். அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான் சிரித்துக்கொண்டு அந்தச் சிறுவர்களுடன் சேர்ந்து போஜனஞ்செய்து, மலைப்பாம்பின் தோலை அவர்களுக்குக் காண்பித்துக்கொண்டு கோகுலத்தை நோக்கிப் புறப்பட்டார். மேலும், பகவான் மயில் தோகை, புஷ்பங்கள், தாதுக்கள் இவைகளால் தம்முடைய சரீரத்தை அலங்கரித்துக்கொண்டும், கொம்பு வாத்தியத்தை ஊதிக்கொண்டும், கன்றுகளை ஓட்டிக் கொண்டும், கோபிகைகளுக்கு நேத்திரானந்தத்தைக் கொடுக்கத்தக்கவராகக் கோகுலஞ் சென்றார். அவருடன் செல்லும் கோபர்கள் அவருடைய சுத்தமான சரித்திரத்தைக் கானஞ்செய்தார்கள். அந்தக் கோபகுமாரர்கள் கோகுலஞ் சென்று தங்கள் பந்துக்களை நோக்கி, "யசோதைக்கும் நந்தருக்கும் புத்திரராகிய ஸ்ரீ கிருஷ்ணனால் இன்றைய தினம் பெரிதாகிய ஒரு சர்ப்பம் கொல்லப்பட்டது; நாங்களும் காப்பாற்றப்பட்டோம்"

என்று ஒரு வருஷத்திற்குமுன் நடந்த சமாசாரத்தை அன்றைக்கு நடந்ததென்று சொன்னார்கள்" என்று சுகர் சொன்னார்.

49. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி "ஓ பிராம்மண! பிறருடைய புத்திரராகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் தங்களுடைய புத்திரர்களிடத்திலுள்ள விசுவாசத்தைக்காட்டிலும் அதிகமான சிநேகம் உண்டாவதற்கு என்ன காரணம்? அதனைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

50—59. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "ஓ அரசனே! சகல பிராணிகளுக்கும் தங்களுடைய ஆத்மாவினிடத்திலேயே விசேஷ பிரியம். புத்திரன், பணம், களத்திரம் முதலியவைகள் ஆத்மாவிற்கு உபயோகிக்கப்படுவதால் அவைகளில் பிரியமே யொழிய வேறில்லை. ஓ அரசர்களுக்குட் சிறந்தவரே! ஜனங்களுக்குத் தங்கள் தங்கள் ஆத்மாவினிடத்தில் எவ்வளவு பிரியமோ, அவ்வளவு பிரியம் புத்திரன், பணம், வீடு முதலியவைகளிடத்திலில்லை. (அவைகள் நம்முடையது என்ற அபிமானமே யொழிய, நானென்ற அபிமானமில்லையென்று கருத்து.) சரீரத்தையே ஆத்மாவென்று சொல்பவர்களுடைய மனத்திலும் தேகத்தில் எவ்வளவு பிரியமோ, அவ்வளவு பிரீதி புத்திரன் முதலியவர்களிடத்திலில்லை. இந்தச் சரீரம் மரணத்தை அடையும்பொழுதும், இன்னுஞ் சிலகாலஞ் ஜீவித்திருக்கவேண்டிய ஆசை அதிகமாக இருக்கிறது. ஆனதால் சரீரத்தில் விசேஷ அபிமானம் இருந்தாலும், ஆத்மாவிடத்தில் எவ்வளவு பிரியமிருக்

கிறதோ, அவ்வளவு பிரியம் சரீரத்திலில்லை. ஆனதால் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவிடத்தில் விசேஷ பிரீதியிருக்கிறது. அதனால் புத்திரன் முதலிய சரம், வீடு முதலிய தாவரம் இவைகளடங்கிய ஜகத்தில் பிரீதி ஏற்படுகிறது. இந்த ஸ்ரீ கிருஷ்ணன் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருக்கிறார். இவர் ஜகத்திற்கு க்ஷேமத்தைச் செய்வதற்காக மாயையால் சரீரமுள்ளவர்போலத் தோன்றுகிறார். உண்மையாக விசாரித்தால், அசையும் பொருள் அசையாப் பொருளடங்கிய இந்த ஜகத்து முழுவதும் பகவானுடைய சுரூபமேயொழிய அதைக் காட்டிலும் வேறான வஸ்து ஒன்றுமில்லை. சகல பிராணிகளுக்கும் மாயையே காரணமாக இருக்கிறது. அதற்கும் ஸ்ரீ கிருஷ்ணனே காரணம். ஆனதால் கிருஷ்ணனைக் காட்டிலும் வேறான வஸ்து இருக்கிறதோ? யோசியும். புண்ணியகரமான கீர்த்தியுள்ள ஸ்ரீ பகவானுடைய தளிர் போன்ற பாதங்களாகிய மகான்களால் அடையக்கூடிய ஓடத்தை எவர்கள் ஆச்ரயித்திருக்கிறார்களோ, அவர்களுக்கு ஸம்ஸார சமுத்திரம் கன்றின் குளம்படியாக ஆகிவிடும்; மேலும், அவர்களுக்கு வைகுண்டம் வாசஸ்தலமாகிறது; ஆபத்துள்ள ஸ்தலத்தை அவர்கள் ஒருபொழுதும் அடையமாட்டார்கள். கௌமார வயதில் நடந்த கிருஷ்ணனுடைய சரித்திரத்தைக் கோப குமாரர்கள் பௌகண்ட வயதில் தங்கள் பந்துக்களுக்குச் சொன்ன விஷயமாக நீர் கேட்டதற்குப் பதில் சொன்னேன்.

60—61. ஸ்ரீகிருஷ்ணன் தம்முடைய தோழர்களுடன் சேர்ந்து புல் தரையில் போஜனஞ் செய்ததையும், அகாசுரனைக் கொன்றதையும், கன்றுகளாகவும், கோபர்

களாகவும் ஒரு வர்ஷமிருந்ததையும், பிரம்மதேவர் பகவானைத் துதித்ததையும் எவன் காதினால் கேட்கிறானோ, உச்சரிக்கிறானோ, அவன் சகல புருஷார்த்தங்களையும் அடைகிறான். இப்படி ராமகிருஷ்ணர்கள் இருவர்களும் கண் பொத்திக்கொள்வது, அணை கட்டுவது, குரங்குகளுடன் தாவிச் செல்வது முதலிய விளையாட்டுகளைச் செய்து கோகுலத்தில் கௌமார வயதைக் கழித்தார்கள்.

# அத்தியாயம்—15

## தேனுகாசுர வதம்

1—19. அந்த ராம கிருஷ்ணர்கள் இருவர்களும் பௌகண்டமென்ற வயதை யடைந்து, பசுக்களை மேய்க்கத் தகுந்தவர்களாகி, தங்களுடைய தோழர்களுடன் பிருந்தாவனத்தில் மாடுகளை மேய்த்துக்கொண்டு தங்கள் காலடிகளால் அந்த வனத்தைப் புண்ணிய பூமியாகச் செய்துகொண்டு சஞ்சரித்தார்கள். ஒரு நாள் ஸ்ரீ கிருஷ்ண பகவான் புல்லாங்குழலை ஊதி, பசுக்களை முன் நடத்திக் கொண்டு பசுக்கள் மேயத் தகுதியானதும், மிகுந்த புஷ்பங்களுள்ளதுமான காட்டில் விளையாடுவதற்காகப் பலராமனுடன் சென்றார். மற்ற கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ண னுடைய சரிதத்தைக் கானஞ்செய்துகொண்டு அவர்பின் சென்றார்கள். அந்த வனத்தில் வண்டுகளும், மிருகங்களும், பறவைகளும் காதுக்கு இனிமையாகச் சப்தித்துக் கொண்டிருந்தன. அவ்விடத்திலிருக்கும் குளத்தின் ஜலமானது ஸாதுக்களுடைய மனம்போல் தெளிந்திருந்தது. அந்த ஜலத்தின் சம்பந்தத்தால் குளிர்ச்சியுள்ளதும், தாமரை மலரில் சம்பந்தப்படுவதால் வாசனையுள்ளதுமான காற்று வீசிற்று. அதனைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ணன் அவ்விடத்தில் விளையாடவேண்டுமென்று நினைத்தார். மேலும், அந்த வனத்தில் சிவந்த தளிர்களால் பிரகாசிக்கும் மரங்கள் பழங்கள், புஷ்பங்கள் ஆகிய இவைகளின் பாரத்தால் வணங்கியிருந்தன. அவைகளைப் பார்த்து எல்லாவற்றிற்கும் முந்திய புருஷனாகிய பகவான் சிரித்துக்கொண்டு தமையனாகிய பலராமனை நோக்கி, “ஓ தேவர்களுக்குட் சிறந்தவரே! இந்த மரங்கள் தங்களுடைய பாபத்தைப்

போக்கடித்துக்கொள்வதற்காகப் புஷ்பங்களையும், பழங்களையும் காணிக்கையாக எடுத்துக்கொண்டு தேவர்களால் பூஜிக்கப்பட்ட உம்முடைய தாமரைமலர்போன்ற பாதத்தைத் தலையால் (கிளையால்) தொட்டு வணங்குகின்றன. ஆச்சரியம்! ஓ பாபமற்றவரே! எல்லா லோகங்களையும் பரிசுத்தப்படுத்தக்கூடிய உம்முடைய கீர்த்தியை இந்த வண்டுகள் கானஞ்செய்துகொண்டு ஆதிபுருஷராகிய உம்முடைய திருவடிகளை உபாசிக்கின்றன. பெரும்பாலும் இவைகள் மகரிஷிகளாக இருக்கவேண்டும். நீர் மனிதனை அவதரித்து, வனத்தில் ரகசியமாக வசித்தாலும் தங்களுக்குத் தெய்வமாகிய உம்மை மகரிஷிகள் விடுகிறதில்லை. ஓ கொண்டாடக்கூடியவரே! இந்த மயில்கள் கூத்தாடுகின்றன. கோபிகைகள் பார்ப்பதுபோலப் பெண் மான்கள் உம்மைப் பார்ப்பது உமக்குப் பிரியத்தைக் கொடுக்கிறது. இந்தக் குயில் கூட்டங்களும், வீட்டிற்கு (வனம்). வந்தவராகிய உமக்கு இனிமையான சப்தத்தால் பிரியத்தைச் செய்கின்றன; ஆனதால் காட்டில் வசிக்கும் பிராணிகளும் மிகுந்த புண்ணியம் செய்தவைகளேயாம். வீட்டிற்கு வந்தவர்களை உபசரிப்பது ஸாதுக்களுடைய இயற்கையான குணமல்லவா? இந்தப் பூமியானது இன்றைய தினம் மேலானதாக ஆயிற்று. உம்முடைய பாதங்களைத் தொடுகிற புற்பூண்டுகளும், உம்முடைய நகங்களால் தொடப்பட்ட கொடிகளும், மரங்களும், தயையுடன் உம்மால் பார்க்கப்பட்ட ஆறுகளும், மலைகளும், பறவைகளும், மிருகங்களும் புண்ணியம் பெற்றன. லக்ஷ்மிதேவியாலும் விரும்பப்பட்ட மார்பை ஆலிங்கனஞ்செய்துகொள்வதால் கோபஸ்திரீகள் மேலானவர்களானார்கள்" என்று சொல்லிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணன்

அழகுபொருந்திய பிருந்தாவனத்தைப் பார்த்து, மிகுந்த பிரீதியுடன் மலையின் சமீபத்தில் ஓடுகின்ற ஆற்றங்கரையில் தோழர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டு சஞ்சரித்தார். இப்படி பலராமனுடனும், தோழர்களுடனும் சஞ்சரிக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் மதங்கொண்ட வண்டுகள் ரீங்காரஞ் செய்யும்பொழுது தாமும் பாடுகிறார்; அவர்களுடைய தோழர்கள் அவருடைய சரிதத்தைச் சொல்லுகிறார்கள். பின்னும் அந்த ஸ்ரீ கிருஷ்ணன் சில விடங்களில் ஹம்ஸ பட்சிகள் கத்தும்பொழுது தாமும் அவைகள்போல் சப்திக்கிறார்; மயில்கள் கூத்தாடும்பொழுது தாமும் அவைகள் போல நர்த்தனஞ் செய்கிறார். அதனைக் கண்ட கோபர்கள் சந்தோஷப்படுகிறார்கள். வெகு தூரஞ் சென்ற பசுக்களை அவைகளுடைய பெயரைச் சொல்லி மேக சப்தம் போல் கம்பீரமாக அன்புடன் ஸ்ரீ கிருஷ்ணன் கூப்பிடுகிறார். அந்தச் சப்தமானது கோபர்களுக்கும், பசுக்களுக்கும் இனிமையாக இருந்தது. சகோரம், க்ரௌஞ்சம், சக்கரவாகம், பரத்வாஜம், மயில் ஆகிய இவைகள் சப்திக்கும்பொழுது தாமும் அவைகள்போலச் சப்திக்கிறார். புலி, சிங்கம் முதலியவைகளைக் கண்டு பயந்தவர்போல அபிநயஞ் செய்கிறார். சில சமயத்தில் விளையாடிக் களைப் படைந்த பலராமனைக் கோபர்களுடைய மடியைத் தலையணையாக வைத்துப் படுக்கச்செய்து, அவருக்குக் கால் பிடிப்பது முதலிய உபசாரங்களைத் தாமே செய்கிறார்; கோபர்கள் ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக் கொண்டு கூத்தாடிக்கொண்டும், பாடிக்கொண்டும், ஓடிக் கொண்டும், சண்டைசெய்துகொண்டுமிருப்பதை ராம கிருஷ்ணர்கள் பார்த்துச் சிரித்துக்கொண்டு அவர்களைக் கொண்டாடுகிறார்கள். ஒரு சமயம் ஸ்ரீ கிருஷ்ணன்

வேடிக்கையாக முஷ்டி யுத்தம் (குத்துச் சண்டை) செய்து, அதனால் களைப்படைந்து ஒரு மரத்தினடியில் தளிர்களைப் பரப்பி, ஒரு கோபனுடைய மடியில் தலையை வைத்துக் கொண்டு படுத்தார். அந்தச் சமயத்தில் மகாத்மாவாகிய அந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சில கோபர்கள் கால் பிடித்தார்கள். புண்ணியசாலிகளான மற்றுஞ் சிலர் விசிறியினால் விசிறினார்கள். ஓ மகாராஜனே! இன்னுஞ் சிலர் அவரிடத்தில் மிகுந்த அன்புள்ளவர்களாகி, அந்தச் சமயத்திற்குத் தகுதியான அவருடைய இனிமையான சரித்திரங்களை மெதுவாகப் பாடினார்கள். இப்படி லக்ஷ்மீதேவியால் பூஜிக்கப்பட்ட தளிர்போன்ற பாதங்களுள்ளவரும், மாயையால் தம்முடைய உண்மையான ரூபத்தை மறைத்துக் கொண்டவருமாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் தம்முடைய சரிதங்களால் கோப குமாரராக அபிநயஞ் செய்துகொண்டும், இடையில் மனிதரால் செய்யமுடியாதவைகளைச் செய்து தாம் ஈசுவரன் என்பதைக் காண்பித்துக்கொண்டும், சாமானிய ஜனங்களுடன் தாமும் சாமானிய மனிதன் போலவும் விளையாடினார்.

20—41. பலராமனுக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் தோழர்களான ஸ்ரீதாமா, சுபலன், ஸ்தோகன், கிருஷ்ணன் முதலிய கோபர்கள் மிகுந்த அன்புடன் பலராமனையும், கிருஷ்ணனையும் நோக்கி, "ஓ மிகுந்த பலமுள்ள ராம! துஷ்டர்களைச் சிட்சிக்கும் ஓ கிருஷ்ண! இதற்குக் கொஞ்ச தூரத்தில் அநேக பனைமரங்கள் நிறைந்த பெரிய வனமிருக்கிறது. அந்த வனத்தில் பனம்பழங்கள் ஏராளமாக விழுந்தும், விழுந்துகொண்டும் இருக்கின்றன. ஆனால் தேனுகன் என்ற ஒரு துஷ்ட அசுரன், ஒருவரும்

அவ்விடத்தில் வராதபடி அந்த வனத்தைக் காத்துக் கொண்டிருக்கிறன். அவன் கழுதையின் உருவங் கொண்டவன்; மிக்க பலமுள்ளவன்; அவனுக்குச் சமமான பலமுள்ள அநேக பந்துக்கள் அவனைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். சத்துருக்களைச் சிட்சிப்பவரான ஓ கிருஷ்ண! மனிதர்களைச் சாப்பிடும் அந்த அசுரனுடைய பயத்தால் மனிதர்களும், பசுக்களும், பறவைகளும் அவ்விடம் செல்லுகிறதில்லை. அவ்விடத்தில் எங்களால் புசிக்கப்படாதவைகளும் வாசனை யுள்ளவைகளுமான பழங்கள் இருக்கின்றன. அவைகளின் நல்வாசனை எங்கும் பரவியிருக்கிறது. அதனை முகர்ந்த மாத்திரத்தில் அந்தப் பழங்களைப் புசிக்கவேண்டுமென்று எங்களுக்கு விருப்பம் உண்டாகிறது. ஓ கிருஷ்ண! அந்தப் பழங்களை எங்களுக்குக் கொடும். ஓ பலராம! தமக்கு இஷ்டமிருந்தால் அவ்விடம் போவோம்" என்றார்கள். அதனைக் கேட்ட ராமகிருஷ்ணர் கள் இருவர்களும் தோழர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றவேண்டி, சிரித்துக்கொண்டு அவர்களுடன் அந்தப் பனங்காட்டிற்குச் சென்றார்கள். பலராமன் அந்தக் காட்டில் நுழைந்து மதயானைபோல் பனைமரங்களைக் கைகளால் அசைத்தார். பழங்கள் உதிர்ந்தன. அந்தச் சப்தத்தைக் கேட்டுக் கழுதையின் உருவங்கொண்ட அந்த அசுரன் ஓடிவந்தான். அவன் ஓடிவந்த வேகத்தால் பூமியும் மலையும் அசைந்தன. மிகுந்த பலமுள்ள அந்த அசுரன் பின்னங்கால்களால் பலராமனுடைய மார்பில் உதைத்துக் கழுதைபோல் சப்தித்துக்கொண்டு அலைந்தான். பின்னும் அந்த அசுரன் பலராமனிடம் வந்து புறங்காட்டி நின்று, பலராமனைக் கொல்வதற்காகக் கோபத்துடன் பின்னங் கால்களால் உதைத்தான். பலராமர் அந்தக் கழுதையின்

இரு கால்களையும் ஒரு கையால் பிடித்துத் தூக்கி, உயிர் துறக்கும்படி சுழற்றிப் பனை மரங்களின்மீது எறிந்தார். அந்த அசுரனுடைய சரீரத்தால் அடிக்கப்பட்ட பருத்த கனியுள்ள பனைமரம் பக்கத்திலிருந்த மரத்தின்மீது சாய்ந்து முறிந்தது; அந்த மரமும் மற்றொரு மரத்தின்மீது சாய்ந்தது; அதுவும் இன்னுமொரு மரத்தின்மீது சாய்ந்தது; இப்படி விளையாட்டாகப் பலராமனால் சுற்றி எறியப்பட்ட அசுரனுடைய சரீரத்தால் ஒரு மரம் மற்றொன்றிலும், அது இல்லொன்றிலும் சாய்ந்து, அங்குள்ள மரங்கள் யாவும் பெருங்காற்றில் அகப்பட்டவைபோல அசைந்தன. ஓ அரசனே! வஸ்திரத்தில் நூல்கள் குறுக்காகவும், நீளமாகவும் சேர்ந்திருப்பதுபோல இவ்வுலகங்கள் யாவும் எந்தப் பகவானிடத்தில் வசிக்கின்றனவோ, அந்த அனந்தராகிய ஜகதீசன் தேனுகனை வதம் செய்தது ஆச்சரியமல்ல. இந்த சமாசாரத்தைக் கேட்டு தேனுகனுடைய பந்துக்கள் ஸ்ரீ கிருஷ்ணனையும், ராமனையும் கொல்வதற்காக நரி வேஷம் தரித்து, பந்து வதத்தை நினைத்துக் கோபங்கொண்டவர்களாகி எதிர்த்துவந்தார்கள். அப்பொழுது பலராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் ஒவ்வொரு நரியின் பின்னங்கால்களைப் பிடித்துச் சுழற்றிப் பனைமரத்தின்மீது எறிந்தார்கள். அப்பொழுது அந்தக் காட்டின் பூமியானது பனம் பழங்களாலும், உயிரற்ற அசுரர்களுடைய சரீரங்களாலும் நிறைந்திருந்ததால் மேகங்களால் பூர்ணமான ஆகாயத்திற்குச் சமமாக இருந்தது. இம்மாதிரியான ராம கிருஷ்ணர்களுடைய செய்கையைக் கண்டு தேவர்கள் முதலியவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள்; வாத்தியங்களைக் கோஷித்தார்கள்; ஸ்தோத்திரம் செய்தார்கள். பின்பு அந்த அசுரன் மரணமடைந்ததால் மனிதர்கள் பயமில்லாமல் அவ்விடஞ்

சென்று பனம்பழங்களைப் புசித்தார்கள். பசுக்களும் பயமற்றவையாகிப் புற்களை மேய்ந்தன. அதன்பின் தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரும், புண்ணியத்தைக் கொடுக்கக்கூடிய சரித்திரம், நாமதேயம் ஆகிய இவை களுள்ளவருமான ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடன் வரும் கோபகுமாரர்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவராகிப் பலராமனுடன் கோகுலம் சென்றார்.

42—46. இப்படி கோகுலத்திற்கு வந்த ஸ்ரீகிருஷ்ணனைப் பார்ப்பதற்காகக் கோபஸ்திரீகள் கூட்டமாகச் சேர்ந்து எதிர்கொண்டு வந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் பசுக்கள் நடப்பதால் கிளம்பிய புழுதியடைந்த தலைமயிரில் மயில்தோகையை வைத்துக்கொண்டவரும், காட்டுப் பூக்களால் அலங்கரித்துக்கொண்டவரும், அழகான பார்வையுள்ளவரும், மனோகரமான சிரிப்புள்ளவரும், வேணுகானஞ் செய்பவருமாக இருந்தார். அவருடைய சரிதத்தைக் கோபர்கள் கானஞ்செய்தார்கள். பகலில் ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்து, துக்கித்துக் கொண்டிருந்த கோபஸ்திரீகள் சாயங்காலத்தில் பகவானுடைய முகமாகிய தேனைக் கண்களாகிய வண்டுகளால் குடித்து (நன்றாகப் பார்த்து) சந்தோஷத்தை அடைந்தார்கள். கிருஷ்ணனும் வெட்கமுள்ள சிரிப்பு, வணக்கம் ஆகிய இவைகளுடன் அவர்களுடைய கடைக்கண்களால் பார்க்கப்பட்டு (இப்படி கோபிகைகள் பகவானைப் பார்ப்பதே அவருக்குப் பூஜையென்று கருத்து.) கோகுலத்தில் பிரவேசித்தார். அப்போது புத்திரனிடத்தில் மிக்க பிரியமுள்ளவர்களாகிய யசோதையும், ரோகிணியும் அந்தக் காலத்திற்குத் தக்கபடியும், தங்களிஷ்டப்படியும்

ஆசீர்வாதஞ் செய்தார்கள். அப்பொழுது பலராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் ஸ்நானம், சரீரத்தைப் பிடிக்கச்செய்வது முதலியவைகளால் களைப்பை நிவர்த்தித்துக்கொண்டும், அழகான வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டும், திவ்யமான மாலை, சந்தனம் இவைகளைத் தரித்துக்கொண்டும், மாதாவினால் கொடுக்கப்பட்ட ருசியான அன்னத்தைப் புசித்து அவர்களால் செல்லங் கொடுக்கப்பெற்று நல்ல படுக்கையில் படுத்து சுகமாக நித்திரை செய்தார்கள்.

47—52. இப்படி பிருந்தாவனத்தில் சஞ்சரிக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஒரு நாள் பலராமனை அழைக்காமல் மற்ற கோபர்களுடன் யமுனை நதிக்குச் சென்றார். அப்பொழுது மிக்க வெயிலாக இருந்ததால் பசுக்களும், கோபர்களும் மிகுந்த தாகத்தை அடைந்து, யமுனையின் ஒரு மடுவிலிருக்கும் ஜலத்தைக் குடித்தார்கள். அது விஷங் கலந்த ஜலமானதால் தெய்வகதியாக அதைக் குடித்தவுடன் எல்லாரும் மூர்ச்சையை அடைந்து மரணமடைந்தார்கள். சிறந்த யோகிகளுக்கும் அதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணன் அதைப் பார்த்துத் தம்மையே கதியாகக்கொண்டவர்கள் மரணமடைந்ததால் அமிருதத்தை வர்ஷிக்கும் தமது பார்வையால் அவர்களைப் பிழைக்கச்செய்தார். அவர்கள் ஞாபகத்தை அடைந்து, ஜலத்தினருகிலிருந்து எழுந்து ஒருவருக்கொருவர் பார்த்து மிகவும் ஆச்சரியத்தை அடைந்தார்கள். பின்னும் விஷ ஜலத்தால் மரணமடைந்த தாம் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அநுக்கிரகம் பொருந்திய பார்வையாலேயே பிழைத்தோம் என்று நினைத்தார்கள்.

# அத்தியாயம்—16

## காளியமர்த்தனம்

1—3. "யமுனா நதி காளியமென்ற சர்ப்பத்தால் கெடுக்கப்பட்டிருந்ததைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் அந்த நதியைச் சுத்தப்படுத்துவதற்காக அந்த சர்ப்பத்தை வெளியில் துரத்தினார்" என்று சுகர் சொல்ல, அதைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "அந்தக் காளியென்ற சர்ப்பம் அநேக யுகமாக ஜலத்தில் வசித்த காரணமென்ன? (ஜலத்தில் வசிக்கும் ஜந்துவல்லவே யென்று கருத்து.) மிக்க ஆழமான ஜலத்திற்குள் வசிக்கும் அந்த சர்ப்பத்தை ஸ்ரீ கிருஷ்ண பகவான் எவ்விதமாக அடக்கினார்? ஓ பிராம்மண! தம்முடைய இஷ்டப்படி நடப்பவரும் (சுதந்திரர்) காலதேசங்களால் அளவிடக் கூடாதவருமான ஸ்ரீ கிருஷ்ண பகவான் கோபகுமாரராக இருந்து செய்த மேலான செய்கைகளாகிய அமிருதத்தைப் பானஞ்செய்து, போதுமென்ற திருப்தியுண்டாகுமா? ஆனதால் அதனைச் சொல்லவேண்டும்" என்றார்.

4—11. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "யமுனையில் ஒரு மடு இருந்தது. அதில் காளியனென்ற சர்ப்பம் வசித்துக்கொண்டிருந்தது. அந்த சர்ப்பத்தின் விஷாக்கினியால் அந்த மடுவின் ஜலம் கொதித்துக்கொண்டிருந்தமையால் ஆகாயத்தில் பறக்கும் பறவைகளும் அந்த உஷ்ணத்தால் கீழே விழுகின்றன; மேலும், அந்த விஷ ஜலத் துளிகளுடன் வீசும் அலைக்காற்றினால் அந்த மடுவின் கரையில் மரம், கொடி, செடி முதலிய தாவரங்களும், மிருகம் முதலிய ஜங்கமங்களும் நசித்துவந்தன.

அப்பொழுது துஷ்டர்களைச் சிட்சிப்பதற்காக அவதரித்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் கொடுமையான விஷவேகமுள்ள காளியனையும், அவனால் கெடுக்கப்பட்டிருக்கும் யமுனா நதியையும் பார்த்து, அருகிலிருந்த மிகவும் உயரமான கடம்ப மரத்தின்மீதேறி இடுப்பிலுள்ள வஸ்திரம் முதலிய வைகளைக் கெட்டியாக இறுக்கிக் கட்டிக்கொண்டு ஒரு கையை மற்றொரு கையால் அடித்து (கைகொட்டி), அந்த விஷஜலமுள்ள மடுவில் குதித்தார். புருஷர்களுக்குட் சிறந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் குதித்த வேகத்தால் அந்த மடுவிலிருந்த சர்ப்பங்கள் விஷவேகத்துடன் பெருமூச்சு விட்டன. அதனால் ஜலம் உயரக் கிளம்பியது; மேலும், அந்த மடுவில் விஷாக்னியால் கொதித்தும், பயங்கரமாயுள்ள அலைகளுண்டானதால் ஜலம் கரையின்மேல் நூறு விற்கடை தூரம் பரவியது; அதிகப் பலமுள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு இது பெரிதல்ல. இப்படி மதயானைபோன்ற பலமுள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவான் அந்த மடுவில் கைகளால் ஜலத்தை அடித்து நீந்திக்கொண்டு விளையாடினார். அப்பொழுது அந்தச் சப்தத்தைக் கேட்ட காளியனென்ற சர்ப்பமானது தன்னுடைய வீட்டுக்கு நேர்ந்த அவமானத்தைப் பார்த்து, அதனைச் சகியாமல் மேலே கிளம்பியது. (அப்பொழுது மிக்க அழகுள்ளவரும், மிருதுவான சரீரமுள்ளவரும், மேகம் போன்ற காந்தியுள்ளவரும், பீதாம்பரத்தை தரித்தவரும், ஸ்ரீ வத்ஸத்தால் அலங்கரிக்கப்பட்டவரும், புன்சிரிப்புள்ள அழகிய முகமுள்ளவரும், தாமரை மலரின் நடுப்போன்ற பாதங்களுள்ளவரும், பயமற்று விளையாடிக்கொண்டிருப்பவருமான ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சமீபத்தில் அந்தக் காளியனென்ற சர்ப்பஞ் சென்று, அவருடைய மர்மஸ்தானங்களில் கடித்துத்

தன்னுடலால் அவரைச் சுற்றிக்கொண்டது. இப்படி சர்ப்பத்தின் உடலால் சுற்றப்பட்டு அசையாமலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பார்த்த கோபர்கள் மிகவும் வருத்தமடைந்தார்கள். மேலுமவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனையே அந்தரங்கத் தோழனாக நினைத்தவர்களானதாலும், தங்களுடைய சரீரம், மித்திரர்கள், பொருள், களத்திரம், ஆசை ஆகிய இவைகளை ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் சமர்ப்பித்தவர்களானதாலும், துக்கத்தாலும் (மன வருத்தம்), சோகத்தாலும் (அழுவது), பயத்தாலும் புத்தி மயங்கினவர்களாகிப் பூமியில் விழுந்தார்கள். அப்பொழுது பசுக்களும், விருஷபங்களும், கன்றுகளும் துக்கத்தால் கதறிக்கொண்டு விசேஷ பயத்தை அடைந்து, ஸ்ரீ கிருஷ்ணனையே பார்த்துக் கொண்டு அழுகிறவைபோல நின்றன.

12—22. அப்பொழுது கோகுலத்தில் பூமியிலும், ஆகாயத்திலும், சரீரத்திலும் அதிபயங்கரமான மூவகையான அபசகுனங்கள் காணப்பட்டன. அந்த உத்பாதங்களால் பயம் சமீபத்தில் வரப்போகிறதென்று காட்டப்பட்டது. அப்பொழுது நந்தன் முதலிய கோபர்கள் அந்த உத்பாதங்களைக் கண்டு, "பலராமனை விட்டுத் தனியாக ஸ்ரீ கிருஷ்ணன் பசுக்களை ஓட்டிக்கொண்டு வனத்திற்குப் போயிருக்கிறார்" என்பதை யறிந்து, ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை அறியாதவர்களாகையால், 'ஸ்ரீ கிருஷ்ணன் மரணமடைந்தார்' என்று நிச்சயஞ் செய்துகொண்டார்கள். மேலும், அவர்கள் கிருஷ்ணனையே நினைத்து, அவரையே தங்கள் பிராணனாகப் பாவித்துத் துக்கம், சோகம், பயம் இவைகளை அடைந்தார்கள். பின்னும் வயது சென்றவர்கள், சிறுவர்கள், ஸ்திரீகள்

முதலிய எல்லோரும் பசுக்கள்போல ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையுடன் தீனர்களாகிக் கோகுலத்திலிருந்து புறப்பட்டார்கள். இப்படிப் பயந்து துக்கிக்கும் கோபர்களைப் பார்த்து, ரோகிணியின் புத்திரரா கிய பலராமன் தம்பியின் மகிமையை அறிந்தவராகையால் சிரித்துக்கொண்டு மௌனமாக இருந்தார். அந்தக் கோபர் கள் தங்களுக்குப் பிரதிபாத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடிக்கொண்டு உத்தம புருஷ லட்சணங்களுள்ள அவருடைய காலடிகளைப் பார்த்து, அந்த வழியாகச் சென்று யமுனையின் கரைக்குச் சென்றார்கள். பின்னுமவர்கள் அந்த மார்க்கத்தில் மற்ற கோபர்களுடைய காலடிகளுடன் இடையில் தாமரைப்பூ, யவம், அங்குசம், அசனி, துவஜம் முதலிய அடையாளங்களுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுடைய காலடிகளைக் கண்டு, அதன் வழியே சீக்கிரமாகச் சென்று காளியனுடைய மடுவிற்கு வந்தார்கள். அவ்விடத்தில் ஜலத்தில் சர்ப்பத்தின் உடலால் சுற்றப்பட்டு அசைவற்று இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனையும், அதனைப் பார்த்து மூர்ச்சை யடைந்திருக்கும் கோப குமாரர்களையும், அருகில் நின்று கதறுகின்ற பசுக்களையும் பார்த்து மிகவும் வருத்தத்தை யடைந்தார்கள். அப்பொழுது கோப ஸ்திரீகள் அனந்தனா கிய பகவானிடத்தில் பிரியமுள்ளவர்களாகையால் அவர் தங்களிடத்தில் வைத்திருக்கும் சிநேகத்தையும், அவருடைய சிரிப்பையும், பார்வையையும், வார்த்தையை யும் நினைத்து, அப்படிப்பட்ட கிருஷ்ணன் சர்ப்பத்தால் சுற்றப்பட்டிருப்பதையும் பார்த்து மிகுந்த வருத்தத்தை யடைந்து, ஸ்ரீ கிருஷ்ணனில்லாத இம்மூவுலகத்தையும் சூனியமாகப் பார்த்தார்கள். மேலுமவர்கள் ஸ்ரீ கிருஷ்ண னுக்குக் கெடுதி நேரிட்டதென்று துக்கப்படும் யசோதை

யினிடம் வந்து, அவளுக்கு சமமான வருத்தமுள்ளவர்களாகிக் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு மிகவும் பயத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தையே பார்த்துக்கொண்டு, அவருடைய சரிதத்தையே சொல்லிக்கொண்டு பிரஞ்ஞையற்றவர்களாக இருந்தார்கள். அப்பொழுது நந்தன் முதலியவர்கள் கிருஷ்ணனையே பிராணனாகப் பாவித்தவர்களாகையால் அந்த மடுவில் இறங்குவதற்கு யத்தனித்தார்கள். அதனைக் கண்ட பலராமன் கிருஷ்ணனுடைய பலத்தை அறிந்தவராகையால் மடுவில் இறங்கவேண்டாமென்று கோபர்களைத் தடுத்தார்.

23—32. அந்தச் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சிறுவர்கள், ஸ்திரீகள் முதலிய கோகுலத்தில் வசிப்பவர்கள் எல்லாரும் தமக்காகத் துக்கப்படுவதையும், தம்மையே கதியென்று நினைத்திருப்பதையும் அறிந்து, மனிதர்களின் சுபாவத்தை அநுசரித்து ஒரு முகூர்த்தம் சர்ப்பத்தால் சுற்றப்பட்டிருந்து, பின்பு தம்முடைய சரீரத்தைப் பருக்கச் செய்து, அதிலிருந்து மேலே கிளம்பினார். ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரீரமானது விருத்தியடையும்பொழுது அந்தக் காளியன் மிகுந்த சிரமத்தை யடைந்து, ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுவிட்டுக் கோபத்துடன் படங்களைத் தூக்கிக்கொண்டும், மூக்கின் வழியாக விஷத்தைக் கக்கிக்கொண்டும், மழுபோன்ற கண்களுடனும், கொள்ளிக்கட்டைபோன்ற முகத்துடனும் கிருஷ்ணனைப் பார்த்துக்கொண்டே நின்றது. இப்படி இரண்டாகப் பிளந்த நாக்கினால் இரண்டு கடைவாய்களை நக்கிக்கொண்டு உக்கிரமான விஷாக்கினியுள்ள கண்களுடன் கூடியதுமான அந்த சர்ப்பத்தின்மீது ஏறுவதற்கு சமயம் பார்த்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன்

கருடன்போல் அதனைச் சுற்றி விளையாடினார். இப்படிச் சுற்றுவதால் காளியனுக்கு தேகத்தில் பலம் குறைந்தது. அந்தச் சமயத்தில் எல்லாவற்றிற்கும் முந்தியவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் உயரமான தோள்களுள்ள அந்தக் காளியன்மீதேறி நர்த்தனஞ் செய்தார். அவருடைய தாமரை மலர்போன்ற பாதமானது காளியனுடைய தலையிலிருக்கும் ரத்தினங்களுடைய காந்தியால் மிக்க சிவப்பாக இருந்தது. எல்லா வித்தைகளுக்கும் குருவாகிய ஸ்ரீ கிருஷ்ணன் அசைந்துகொண்டிருக்கும் அந்த சர்ப்பத்தின் தலைகளிலும் நர்த்தனஞ் செய்தார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் நர்த்தனஞ் செய்ய யத்தனிக்கும்பொழுது கந்தர்வர்கள், சித்தர்கள், சாரணர்கள், மகரிஷிகள், தேவ ஸ்திரீகள் ஆகிய இவர்கள் புஷ்பமாரி பெய்து, மிருதங்கம், பணவம், ஆனகம் முதலிய வாத்தியங்களுடன், ஸ்ரீகிருஷ்ணனுடைய சமீபஞ் சென்று வாத்தியங்களை முழங்கினது மன்றிப் பாடினார்கள். துஷ்டர்களைச் சிக்ஷிப்பவரான ஸ்ரீ கிருஷ்ணன் காளியனுடைய முக்கியங்களான தலைகளிலும் ஏறி, எந்தத் தலை வணங்கவில்லையோ அதனைக் காலால் மிதித்துக்கொண்டு விளையாடினார். அப்பொழுது காளியன் வாயினாலும் மூக்கினாலும் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு உயிர் துறக்கும்படியான அவஸ்தையை யடைந்தான். பின்னும் அந்தக் காளியன் கோபத்தால் பெருமூச்சு விட்டுக் கண்களால் விஷத்தைக் கக்கிக்கொண்டு எந்தத் தலைகளை உயரத் தூக்க யத்தனித்தானோ, அந்த அந்தத் தலைகளைப் புராண புருஷராகிய ஸ்ரீ கிருஷ்ணன் புஷ்பங்களால் பூஜிக்கப்பட்டவர்போலக் காலால் உதைத்து வணக்கினார். (புஷ்பங்களால் பூஜிக்கப்பட்ட பகவான் க்ஷேமத்தைக் கொடுப்பதுபோலக் காளியனுடைய

மதத்தை யடக்கினர் என்பது கருத்து.) ஓ பரீக்ஷித்து அரசனே! இப்படி பகவான் அற்புதமாக நர்த்தனஞ் செய்ததால் குடைபோன்ற சர்ப்பத்தின் படங்கள் நசுக்கப் பட்டன. அதன் உடல் முறிந்தது. முகத்தினுல் ரத்தம் வெளிப்பட்டது. அவ்வளவு அவஸ்தையை அடைந்த சர்ப்பமானது தன் தலையில் நர்த்தனஞ் செய்பவரைப் புராண புருஷரென்றும், ஸ்தாவர ஜங்கமங்களுக்குக் காரணரென்றும், நாராயணனென்றும் நினைத்து, மனத் தால் அவரைச் சரணமடைந்து, சகல லோகங்களையும் வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாரத்தைத் தாங்காமல் வருத்தப்படுபவனும், அவருடைய காலால் மிதிக்கப்பட்டு நசுங்கிய படங்களையுடையவனு மான காளியனையும், அவன்மீதேறி நர்த்தனஞ் செய்யும் ஸ்ரீ கிருஷ்ணனையும் பார்த்து, காளியனுடைய பத்தினிகள் வஸ்திரம், ஆபரணம், தலை முடிச்சு இவைகள் நழுவியவர் களாக ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்தார்கள். பின்னுமவர்கள் மனங் கலங்கினவர்களாகித் தங்கள் குழந்தைகளை முன்னிட்டு, இரு கைகளையுங் கூப்பிக்கொண்டு தங்கள் புருஷனை விடுவித்துக்கொள்வதற்காகச் சரீரத்தைப் பூமியில் கிடத்தி, எல்லாருக்கும் அதிபதியும், காப்பாற்றுகிறவரு மான ஸ்ரீ கிருஷ்ணனைச் சரணமடைந்தார்கள்.

33—53. துஷ்டர்களைச் சிட்சிப்பதற்காக நீர் அவதரித்தவராகையால் அக்கிரமஞ் செய்த இந்தக் காளியனை நீர் சிட்சித்தது நியாயமேயாம். மேலும் நீர் சத்துருக்களையும், புத்திரர்களையும் சமமாகப் பார்ப்பவர்; அதனுல் துஷ்டர்களைச் சிட்சிப்பதே தர்மம் என்று ஆலோசித்து சிட்சிக்கிறீர். (சிட்சிப்பது பிரதிகூலமென்று

அந்தச் சமயத்தில் தோன்றினாலும், பிந்திய காலத்தில் அது இதத்தைச் செய்வதால் அதுவும் அநுகூலமென்று நினைத்தே நீர் சிட்சிக்கிறீர் என்று கருத்து.) உம்மால் செய்யப்பட்ட சிட்சையானது எங்களுக்கு அநுக்கிரகமே யொழிய வேறில்லை. நீர் யாரைச் சிட்சிக்கிறீரோ, அவனுக்குப் பாபம் நிவர்த்தியாகிறது. இந்தக் காளியனுக்கு சர்ப்ப ஜன்மத்தை யுண்டுபண்ணிய பாபமானது இப்பொழுது நிவர்த்தியாகிவிட்டது; ஆனதால் உம்முடைய கோபம் எங்களுக்கு அநுக்கிரகமாகிறது. எங்களுடைய பர்த்தாவாகிய இந்தக் காளியன் முன் ஜன்மத்தில் அகங்காரமற்றவராகி எவ்விதத் தவஞ்செய்தாரோ? அல்லது சகல பிராணிகளிடத்திலும் தயை செய்வதாகிய தர்மத்தை யநுஷ்டித்தாரோ, எல்லாவற்றையும் ஜீவிக்கச்செய்பவரான நீர் தவத்தாலும், தர்மத்தாலும் சந்தோஷத்தை அடைகிறீர். உம்முடைய பாதத்தில் ஒட்டிய தூளியின் ஸ்பரிசம் மிகவும் துர்லபம். அந்தப் பாததூளிக்காக லக்ஷ்மிதேவி மிக்க நியமங்களுடன் சகல ஆசைகளையும் ஒழித்து வெகுநாள் தவஞ்செய்தாள். அப்படிப்பட்ட உம்முடைய பாததூளி இந்தக் காளியனுக்கு எந்தப் புண்ணியத்தின் மகிமையால் கிடைத்ததோ தெரியவில்லை. மேலும், உம்முடைய பாததூளியை அடைந்தவர்கள் சக்கரவர்த்தியாக இருக்கவேண்டுமென்றாவது, சுவர்க்க ராஜ்யத்தையாவது, பிரம்ம பட்டத்தையாவது, கீழுலகங்களுக்கு அதிபதியாக இருப்பதையாவது, யோக சித்திகளையாவது, மோக்ஷத்தையாவது விரும்பமாட்டார்கள். ஸம்சார சக்கரத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் ஜீவன், உம்முடைய பாததூளியை விரும்பினானாகில் உடனே அவனுக்கு இஷ்டமான சம்பத்து கிடைக்கிறது. ஆனதால்,

இந்த சர்ப்பராஜன், தமோகுணமுள்ளவரானலும், கோப சுபாவமுள்ளவரானலும் மற்றவர்களால் அடையமுடியாத தான அந்தப் பாததூளியை அடைந்தார். சகல பிராணிக ளிடத்திலும் அந்தர்யாமியாக வசிப்பவரும், காலத்தாலும் தேசத்தாலும் அளவிடக்கூடாதவரும், ஆகாசம் முதலிய பூதங்களுக்கும் ஆச்ரயமாக இருப்பவரும், எல்லாவற்றிற் கும் முந்தியிருப்பவரும், எல்லாவற்றிற்கும் காரணரும், காரணங்களைவிட மேலானவரும், மனத்தால் எண்ண முடியாத ஐசுவரியம் முதலிய குணங்களுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். மேலும் நீர் ஞானம், சித்சக்தி ஆகிய இவைகள் நிறைந்தவர்; பிரம்மம்; குணங்களற்றவர்; விகாரமற்றவர்; பிரகிருதியைப் பிரவர்த்திக்கச் செய்பவர்; பிரகிருதி சம்பந்தமற்ற அளவில்லாத சக்தியுள்ளவர்; (குணங்களற்றிருப்பதால் பிரம்மமும், ஞானசுரூபமாகை யால் காரணரீதமும், பிரகிருதியைப் பிரவர்த்திக்கும்படி செய்யும் அனந்த சக்தியுள்ளவராகையால், காரணமாகவும் இருப்பவரென்று கருத்து.) பின்னும் நீர் காலசுரூபி; காலசக்திக்கு ஆச்ரயமாக இருப்பவர்; சிருஷ்டி முதலிய சமயங்களுக்குச் சாட்சியாக இருப்பவர்; ஜகத்சுரூபியாக இருப்பவர்; அதற்குச் சாட்சியாக இருப்பவர்; அதனைப் படைத்தவர்; அதற்குக் காரணமாக இருப்பவர்; ஐந்து பூதங்கள், தன்மாத்திரைகள், இந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி, சித்தம் இவைகளின் சுரூபமாக இருப்பவர்; முக்குணங்களின் காரியமான அகங்காரமுள்ளவர்களும், தம்முடைய அம்சமாக இருப்பவர்களுமான ஜீவர்களுடைய அநுபவமுள்ளவர்; அபிமானமற்றவர்; சூக்ஷ்மர்; கூடஸ்தர் (உபாதியின் விகாரமற்றவர்); எல்லாவற்றையும் அறிந்தவர்; இருக்கிறார், இல்லை; ஸம்ஸாரி, ஸம்ஸார

மற்றவர் ; ஒருவர், அநேகர் என்று பலவகையான வாதங்களை அனுசரிப்பவர் (மாயையால் என்று கருத்து) ; சப்தம், பொருள் ஆகிய இவைகளின் சக்தியுள்ளவர் ; இந்திரியங்களுக்கும் காரணமாக இருப்பவர் ; அவைகளைத் தாம் அபேட்சிக்காதவர் ; ரிக் வேதம் முதலிய சாஸ்திரங்களையுண்டுபண்ணினவர் ; பிரவிருத்தி தர்ம சுரூபி ; நிவிருத்தி தர்ம சுரூபி ; சகல வேதசுரூபி ; அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம். ஸ்ரீ கிருஷ்ணனும், பலராம சுரூபியும், வசுதேவருடைய புத்திரரும், பிரத்யும்ன சுரூபியும், அனிருத்தரும், பக்தர்களைக் காப்பாற்றுகிறவருமாகிய உமக்கு நமஸ்காரம். பின்னும் நீர் அந்தக்கரணம் முதலியவைகளைப் பிரகாசிக்கச் செய்பவர் ; அந்தக்கரணம் முதலியவைகளால் தம்மை மறைத்துக்கொண்டு பிரகாசிப்பவர் ; சித்தம், புத்தி முதலியவைகளின் விருத்திகளான சைதன்யம், நிச்சயம் முதலியவைகளால் காட்டக் கூடியவர் ; (அவைகளுக்குச் சாட்சியாக இருப்பவரென்று கருத்து.) ஒன்றுக்கும் விஷயமாகாதவர் ; இப்படிப்பட்டதென்று ஊகிக்கமுடியாத மகிமையுள்ளவர் ; ஆனாலும் சகல பிரபஞ்சத்திற்குக் காரணமாக இருந்து அவைகளைப் பிரகாசிக்கச் செய்வதால் ஊகிக்கக்கூடியவர் ; இந்திரியங்களைப் பிரவர்த்திக்கச் செய்பவர் ; ஆத்மாவில் ரமிப்பவர் ; ஆத்மாவில் ரமிப்பதையே சுபாவமாகக் கொண்டவர் ; (அப்படி சாதனத்தை யநுஷ்டித்தவரல்லவென்று கருத்து.) ஸ்தூல சூக்ஷ்மங்களின் சுரூபத்தை யறிந்தவர் (அவைகளில் அபிமானமற்றவரென்று கருத்து); எல்லாவற்றிற்கும் அத்யக்ஷர் ; ஜகத்தின் சம்பந்தமற்றவர் ; ஜகத்தாக மாறுகிறதற்கு அதிஷ்டானமாயுள்ளவர் ; அவர்களுக்கு சாக்ஷியாக இருப்பவர் ; காரணர் ; ஓ பிரபுவே ! இந்த

லோகத்தைப் படைப்பது, சம்ரக்ஷிப்பது, நாசஞ்செய்வது ஆகிய இவைகளை நீர் அபிமானமற்றவராகிக் காலசக்தியைத் தரித்து, மாயையால் செய்தீர். ஓ அமோகமான விளையாட்டுள்ளவரே! நீர் பார்வையால் அவரவர்களுடைய சுபாவங்களைப் பிரகாசப்படுத்திக்கொண்டு விளையாடுகிறீர். அப்படிப்பட்ட உமக்கு மூவுலகத்திலிருக்கும் ஸாதுக்களும், மூடர்களும் சரீரங்களேயாம். ஸாதுக்கள் சாந்த சரீரங்கள், மூடர்கள் அசாந்த சரீரங்கள். தர்மத்தைப் பரிபாலனம் செய்வதற்கும், ஸாதுக்களைக் காப்பாற்றுவதற்காகவும் அவதரித்தவராகிய உமக்கு சாந்தங்களான சரீரங்கள் பிரியமானவைகள். ஆனதால் எங்களுடைய பர்த்தாவாகிய காளியன் உம்முடைய பிரஜையல்லவா? ஓ சாந்தமான ரூபமுள்ளவரே? உம்முடைய சுரூபத்தை யறியாத உம்முடைய குழந்தையான இந்த சர்ப்ப ராஜனால் செய்யப்பட்ட ஒரு குற்றத்தை மன்னிக்கவேண்டும். ஓ பகவன்! இந்த சர்ப்பராஜன் பிராணவஸ்தையை அடைந்திருக்கிறார். பரிதவிக்கக்கூடிய ஸ்திரீகளான எங்களுக்குப் பிராணனாகிய பர்த்தாவைக் கொடுத்து எங்களை அநுக்ரகிக்கவேண்டும். (துஷ்டர்களை அநுக்கிரகித்தால் பிறருக்கு உபத்திரவத்தைச் செய்வார்களென்று நினைக்கவேண்டாம்.) உம்முடைய வேலைக்காரிகளான நாங்கள் எதனைச் சிரத்தையுடன் அநுஷ்டித்தால் பயமற்று சஞ்சரிப்போமோ அதனை உபதேசியும்" என்று பிரார்த்தித்தார்கள்.

54—59. இப்படி நாகபத்தினிகளால் துதிக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான் தம்முடைய பாதத்தால் மிதிக்கப்பட்டு நசுங்கியிருக்கும் தலைகளுள்ள காளியனை

விட்டுவிட்டார். அப்பொழுது காளியன் இந்திரிய பலத்தை அடைந்து பெருமூச்சு விட்டு, அஞ்சலிபந்தம் செய்து, ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "நாங்கள் துஷ்டர்கள்; தமோகுணத்தை முக்கியமாகக் கொண்டவர்கள்; பிறக்கும்போதே மிகுந்த கோபமுள்ளவர்கள்; ஆனதால் பிராணிகளுக்குச் சரீரத்தில் அபிமானத்தை உண்டு பண்ணும் சுபாவமானது கெட்டதானாலும் அது விடமுடியாதல்லவா? ஓ எல்லாவற்றையும் காப்பாற்றுபவரே! இந்த ஜகத் முழுவதும் பலவகையான சுபாவமுள்ளதானாலும், அநேக விதமான பராக்கிரமம், இருப்பிடம், காரணம், மனது இவைகளுள்ளதாகவும் மாயையால் பலவகையாக உம்மால் சிருஷ்டிக்கப்பட்டது. அந்த ஜகத்திற்குள்ளடங்கிய சர்ப்பங்களாகிய நாங்கள் மிகுந்த கோபமுள்ள ஜாதிகள்; உம்முடைய மாயையால் மோகித்தவர்கள்; ஆனதால் நிவர்த்திக்க முடியாத உம்முடைய மாயையை எங்களால் எப்படி ஜயிக்கமுடியும்? உம்முடைய அநுக்கிரகத்தால் அந்த மாயையை ஜயிக்க வேண்டும். ஆனதால் எங்களுக்கு அநுக்கிரகத்தையாவது சிக்ஷையையாவது உம்முடைய இஷ்டப்படி செய்யும்" என்று சொன்னான்.

60—63. அதனைக் கேட்ட மனித வடிவங்கொண்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான் அந்த சர்ப்பத்தை நோக்கி, "ஓ சர்ப்பமே! நீ இனி இவ்விடத்தில் வசிக்கக்கூடாது. உன்னுடைய பந்துக்கள், குழந்தைகள், ஸ்திரீகள் ஆகிய இவர்களுடன் சமுத்திரத்திற்குப் போகவேண்டும். இந்த மடுவின் ஜலமானது பசுக்களுக்கும், மனிதர்களுக்கும் உபயோகப்படட்டும். தாமதிக்கவேண்டாம். உனக்கு

என்னால் செய்யப்பட்ட இந்த உத்தரவை எவன் நினைக்கிறானோ, எவன் இரண்டு ஸந்தியாகாலங்களிலும் இதைச் சொல்லுகிறானோ, அவனுக்கு சர்ப்ப பயம் இல்லாமலிருக்கட்டும். எவன் இந்த மடுவில் ஸ்நானஞ் செய்து தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்ப்பணம் செய்கிறானோ, எவன் இதில் ஸ்நானஞ்செய்து உபவாச மிருந்து இந்தக் கதையை நினைத்துக்கொண்டு தேவர்களைப் பூஜிக்கிறானோ, அவனுடைய சகல பாபங்களும் நிவர்த்தியா கின்றன. நீ கருடனிடத்தில் பயந்து, உன்னுடைய ரமணகம் என்ற த்வீபத்தை விட்டு இந்த மடுவுக்கு வந்தவனல்லவா? இப்பொழுது என்னுடைய பாதத்தால் நீ அடையாளமிடப்பட்டவனாதலால், கருடன் உன்னைப் புசிக்கமாட்டார்" என்று சொன்னார்.

64—68. அற்புதமான சரிதங்களுள்ள ஸ்ரீ கிருஷ்ண னால் இப்படி அனுக்ரகிக்கப்பட்ட அந்த சர்ப்பராஜன் தன்னுடைய பத்நிகளுடன் மிகுந்த ஆதரவோடு சந்தோஷமாக உயர்ந்த வஸ்திரத்தாலும், மாலைகளாலும், ரத்தினங்களாலும், ஆபரணங்களாலும், சந்தனங்களாலும், தாமரை மாலையாலும் பூஜித்து, ஜகத்பதியான கிருஷ்ண னுக்கு நல்ல வார்த்தை சொல்லிப் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து, அவரிடம் விடைபெற்று ஸ்திரீகளுடனும், புத்திரர்களுடனும், சிநேகிதர்களுடனும் சமுத்திரத்தின் தீவுக்குச் சென்றான். விளையாட்டாக மனித வடிவங் கொண்ட பகவானுடைய அனுக்கிரகத்தால் அன்றைய தினமே அந்த யமுனையின் மடு விஷமில்லாத அமிருதம் போன்ற ஜலமுள்ளதாக ஆயிற்று.

## நோட்டு

கடம்ப மரத்தின்— காளியனுடைய விஷ வேகத்தால் சமீபத்திலுள்ள மரங்களும், கொடிகளும் எரிந்துபோயிருக்க, இந்தக் கடம்ப மரம் மாத்திரம் எப்படி ஜீவித்திருந்தது என்றால், ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதஸ்பரிசம் கிடைக்கத்தக்க அதிருஷ்டம் இருந்ததால் ஜீவித்திருந்தது.—ஸ்ரீத. ஸ்ரீ கருட பகவான் தேவ லோகத்திலிருந்து அமிருதக் குடத்தைக் கொண்டுவரும்பொழுது இந்த மரத்தின்மீது உட்கார்ந்தார். அந்த அமிருத சம்பந்தம் பெற்றதால் மரம் பட்டுப்போகாமலிருந்தது என்று கூறுவர் சிலர். பூமியிலும்—பூமி அசைவது முதலியவை பூமியிலுண்டாகும் உத்பாதங்கள். குறைக் கொள்ளி விழுவது முதலியவை ஆகாயத்திலிருந்து உண்டானவை. இடதுகண் துடிப்பது முதலியவை சரீரத்திலுண்டானவை.—ஸ்ரீத. பசுக்கள்போல — பசுக்களுக்குக் கன்றுகளிடத்தில் அதிகப் பிரீதியுண்டு. காலடிகளின் இடையில்— மூலத்தில் கவாம் என்ற பதமிருப்பதால் யோகிகள் வேதத்தின் மார்க்கமாகச் சென்று இதல்ல, இதல்லவென்று உபாதிகளைத் தள்ளிப் பகவானுடைய சுரூபத்தைத் தெரிந்துகொள்வதுபோலக் கோபர்களுடைய காலடிகளுடன் சேர்ந்திருக்கும் பகவானுடைய காலடிகளைப் பார்த்து அந்த லக்ஷணங்களால் இதல்ல, இதல்லவென்று கோபர்களுடைய அடிவைப்பைத் தள்ளி பகவானுடைய காலடியைத் தெரிந்துகொண்டு, அதன்வழி சென்றார்கள் என்று கருத்து.—ஸ்ரீ தரீயம்: காளியனுடைய பத்தினிகள் 33-வது சுலோகம் முதல் ஆறு சுலோகங்களால் பகவான் செய்த சிக்ஷை சரியானதென்று சொல்லி, பிந்திய 10 சுலோகங்களால் ஸ்ரீகிருஷ்ணனைத் தோத்திரஞ்செய்து, பிந்திய 5 சுலோகங்களால் பிரார்த்தித்தார்கள். சகல பிராணிகளிடத்திலும்—இதுமுதல் 10 சுலோகங்களால் யாரைச் சரணமடையக்கூடுமோ, அவருடைய குணங்கள் நிரூபிக்கப்படுகின்றன. சரண்யனுடைய குணங்கள் அண்டினவர்களுடைய காரியத்தை முடிக்கத்தக்கவைகள், ஆச்ரயிக்கத் தகுதியானவைகளென்று இரு வகைகளுள்ளன. மூலத்தில் பூதாய,

பராய பரமாத்மனே என்றிருப்பதால் எல்லாவற்றிற்கும் மேலான வராக இருப்பதாகிய பரத்வம் காட்டப்பட்டது. எவர் ஈசவரோ, எவர் அழிவற்றவரோ, எவர் மூவுலகங்களிலும் வியாபித்திருக்கிறாரோ, அவரே உத்தம புருஷன். அவரே பரமாத்மாவென்று சொல்லப்படுகிறார்; இப்படி எல்லாவற்றிற்கும் மேலானவராக இருந்தாலும் சுலபரென்பது சகல பிராணிகளிடத்திலும் வசிக்கிறார் என்பதால் காட்டப்பட்டது. இதனால் பக்தர்கள் ஆச்ரயிக்க சௌகரியமான பரத்வம், ஸௌலப்யம் முதலிய குணங்கள் பகவானிடத்திலிருக்கின்றனவென்று விளங்குகிறது. அண்டினவர்களுடைய கெடுதியை நிவர்த்திக்கும் உபாயத்தை யறிந்திருப்பதாகிய ஞானம், அவருடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்யத்தக்க உபாயத்தை யறிந்திருப்பதாகிய விஞ்ஞானம், சேர்க்கமுடியாததைச் சேர்க்கும் சாமர்த்தியமாகிய சக்தி, எல்லாருக்கும் சேஷி (யஜமானன்) யாகவிருப்பது, ஸ்ரீ, காமம் முதலிய ஆறு குணங்களுள்ளவராக இருப்பது முதலிய குணங்கள் ஞான விஞ்ஞான நிதயே என்பதால் காட்டப்பட்டது. இதனால் அண்டினவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்பவரென்று ஸ்பஷ்டமாக விளங்குகிறது. காலசக்திக்கு—எல்லாவற்றிற்கும் காலங் காரணமானாலும் தனியே காரணமல்லவென்று கருத்து. பயமற்று சஞ்சரிப்பாயோ—எதனைச் செய்வதால் கருடனுடைய பயமற்று, காளியன் சஞ்சரிப்பாயோ,—வியாக்கியானம். இந்த அத்தியாயமானது விஜயத்வஜீய வியாக்யானத்துடனிருக்கும் புஸ்தகத்தில் 14-வது அத்தியாயமாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

## அத்தியாயம்—17

## காளியன் யமுனையில் வசித்த காரணம்

1. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "சர்ப்பங்களுக்கு வாசஸ்தலமாகிய ரமணகமென்ற த்வீபத்தை விட்டுக் காளியன் யமுனையின் மடுவிற்கு வந்த காரணமென்ன? அந்த ஒரு சர்ப்பம் மாத்திரம் கருடனுக்கு என்ன அபராதஞ் செய்தது" என்று கேட்டார்.

2—18. அதைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "ஓ மிகுந்த பராக்கிரமமுள்ளவரே! கருடனால் விழுங்கக் கூடிய சர்ப்பங்கள் தங்களைக் காப்பாற்றுபவரான கருடனுக்குத் தங்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதத்திலும் பர்வதினத்தில் ஒவ்வொரு சர்ப்பத்தை ஒரு மரத்தின் அடியில் பலியாகக் கொடுக்கிறோமென்று ஒப்புக்கொண்டு நடத்திவந்தன. இந்தக் காளியனென்ற சர்ப்பம் மிகுந்த விஷவீரியமுள்ளதாகையால் அந்த மதத்தால் கருடனை லட்சியஞ் செய்யாமலும் (தான் கருடனுக்கு பலியைக் கொடுக்காமலும்), பிறரால் கொடுக்கப்படும் பலியைத் தானே புசித்தும் வந்தது. பகவானிடத்தில் பக்தியுள்ளவராகிய கருடன் அதனைக் கேட்டுக் கோபங்கொண்டு காளியனைக் கொல்வதற்கு மிகுந்த வேகமாக ஓடிவந்தார். பயங்கரமாகிய நாக்குள்ளவனும், விஷம், பற்கள் ஆகிய இவைகளை ஆயுதங்களாகக் கொண்டவனுமாகிய அந்தக் காளியன் கருடனைக் கண்டு தன்னுடைய அநேக படங்களைத் தூக்கிக்கொண்டும், கொடிய கண்களை விழித்துக்கொண்டும் கருடனை விஷப்பற்களால் கடித்தான். மிகுந்த வேகமுள்ளவரும்,

உக்கிரமான பராக்கிரமமுள்ளவரும், ஸ்ரீமந் நாராயணனுக்கு வாகனமுமாகிய கருடன் காளியனை அதட்டி, தங்க வர்ணமுள்ள தம்முடைய வலது இறக்கையால் அடித்தார். அப்படி கருடனுடைய இறக்கையால் அடிக்கப்பட்டுக் காளியன் மிக்க வருத்தமடைந்து யமுனையின் மடுவிற்கு வந்தான். இது கருடன் வரக்கூடாத ஸ்தலம். ஏனென்றால், முன்னொருகால் கருடன் இந்த மடுவிலுள்ள மீன்களில் ஒன்றை எடுத்துக்கொண்டார். அப்பொழுது ஸௌபரி யென்பவர் அந்த மத்ஸ்யத்தை விட்டுவிடும்படி சொல்லியும் கருடன் மிக்க பசியுள்ளவராக இருந்தபடியால் அவருடைய வார்த்தையை லட்சியஞ் செய்யாமல் அதனைப் புசித்தார். அப்பொழுது மத்ஸ்யங்களுக்கு அரசனாகிய மத்ஸ்யத்தை கருடன் புசித்ததால் மற்ற மத்ஸ்யங்கள் துக்கப்படுவதைக் கண்டு ஸௌபரி என்றவர் அவைகளுக்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்பி, கிருபையுடன் இனி கருடன் இந்த மடுவில் வந்து மத்ஸ்யங்களைப் புசித்தால் உடனே மரணமடைவான்; சத்தியமாகச் சொல்லுகிறேன் என்று சபித்தார். இந்தச் சமாசாரம் காளியனுக்கு மாத்திரம் தெரியும். மற்ற சர்ப்பங்களுக்குத் தெரியாது. அதனால் காளியன் கருடனிடத்தில் பயந்து யமுனையின் மடுவில் வசித்தான். அவனை ஸ்ரீ கிருஷ்ண பகவான் வெளியில் துரத்தினார். ஸ்ரீ கிருஷ்ணன் திவ்யமான மாலை, சந்தனம், வஸ்திரம், உத்தமான ரத்தினங்கள், சுவர்ணம் ஆகியவை களால் அலங்கரிக்கப்பட்டவராகி மடுவிலிருந்து கரைக்கு வந்தார். அவரைக் கண்டு எல்லாக் கோபர்களும் திரும்பிவந்த பிராணனைக் கண்ட இந்திரியங்கள்போல எழுந்திருந்து, மிகுந்த சந்தோஷத்தால் அசைவற்றவர்களாக அதிகப் பிரியத்தை அடைந்தார்கள். இப்படி யசோதை,

ரோகிணி, நந்தர், மற்ற கோபர்கள், கோபிகைகள் முதலியவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டவுடன் எழுந்திருந்து, பூர்ண மனோரதமுள்ளவர்களானார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை அறிந்த பலராமன் ஸ்ரீ கிருஷ்ணனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு சிரித்தார். பசுக்களும், விருஷபங்களும் மிகுந்த ஆனந்தத்தை அடைந்தன. முன் உலர்ந்து போயிருந்த மரங்களும் தளிர்த்தன. நந்தருடைய குருக்களான பிராம்மணர்கள் தங்கள் தங்கள் ஸ்திரீகளுடன், 'ஓ நந்த, காளியனால் பிடிக்கப்பட்ட உம்முடைய புத்திரன் தெய்வச்செயலால் க்ஷேமத்தை அடைந்தான்' என்று சொன்னார்கள். விசேஷ அதிருஷ்டமுள்ளவளான யசோதை, சர்ப்பத்தினிடமிருந்து திரும்பிவந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் தழுவி மடியில் வைத்து ஆனந்தக்கண்ணீரைப் பெருக்கினாள்.

19—25. அப்பொழுது சூரியன் அஸ்தமனத்தை அடைந்தார். அதனால் ஸ்ரீ கிருஷ்ணன் யசோதை, நந்தர், மற்ற கோபர்கள், பலராமர், பசுக்கள் ஆகிய இவைகளுடன் அன்றைய ராத்திரி அந்த யமுனையின் கரையில் வசித்தார். ஓ அரசர்களுக்குட் சிறந்தவரே! இப்படி கோபர்கள் பசியாலும், தாகத்தாலும், சிரமத்தாலும் வருத்தமடைந்து அவ்விடத்தில் வசித்தார்கள். அவர்கள் எல்லோரும் நித்திரை செய்யும்பொழுது காட்டுத்தீ பற்றிக்கொண்டு கோபர்களைச் சுற்றி எரிய ஆரம்பித்தது. அந்த அக்னியின் உஷ்ணத்தால் அவர்கள் விழித்துக்கொண்டு மாயையால் மனிதவடிவங் கொண்டவராகிய ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஓ கிருஷ்ண! கிருஷ்ண! அதிக பராக்கிரமமுள்ள ஓ பலராம! உங்களைச் சார்ந்தவர்களாகிய

எங்களை மிகக் கொடிய இந்த அக்னி புசிக்கிறது. ஓ பிரபுவே! பயமற்றதாகிய உம்முடைய பாதத்தை ஒருபொழுதும் விடமாட்டோம். ஆனதால் உமக்குத் தோழர்களாய், பந்துக்களான எங்களை இந்த மிருத்யு போன்ற அக்னியிலிருந்து காப்பாற்றும்." என்று சொல்லிச் சரணமடைந்தார்கள். ஜகத்திற்கு அதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணர் தம்முடைய பந்துக்களுக்கு நேர்ந்த ஆபத்தைப் பார்த்து, அளவிடக்கூடாத சக்தியுள்ளவரானதால் அந்த அக்னியைப் பானஞ்செய்தார் (குடித்தார்).

# அத்தியாயம்—18

## பிரலம்பாசுர வதம்

1—19. பின்பு மறுநாள் காலையில் ஸ்ரீ கிருஷ்ணன் கோகுலஞ் சென்றார். அவருடைய பந்துக்கள் சந்தோஷத்துடன் கிருஷ்ணனுடைய சரிதங்களைக் கானஞ்செய்து கொண்டும், அவரைச் சுற்றிக்கொண்டும் சென்றார்கள். பசுக்களும் பகவானைச் சுற்றிக்கொண்டு போயின. இப்படி ஸ்ரீ கிருஷ்ணனும், பலராமனும் மாயையால் கோப (இடையர்கள்) வடிவங்கொண்டு கோகுலத்தில் விளையாடினார்கள். அப்பொழுது கிரீஷ்ம (கோடைக்காலம்: ஆனி, ஆடி மாதங்கள்) என்ற ருது வந்தது. அது பிராணிகளுக்கு அதிகச் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியதல்ல. ஆனாலும் அந்தக் காலமானது ஸ்ரீ கிருஷ்ணனும் பலராமனும் அவ்விடத்தில் வசிப்பதால் அந்த பிருந்தாவனத்தின் குணங்களால் வஸந்த காலம் (சித்திரை, வைகாசி) போலிருந்தது. எப்படியென்றால், கோடைக்காலமானாலும் மலையாறுகளில் ஜலம் வற்றாமல் ஓடிக்கொண்டிருந்தமையால் அதன் சப்தத்தால் ஜல்லியென்ற பிராணிகளின் கொடிய சப்தம் அடங்கியிருந்தது. மேலும், அந்த வனமானது அந்த மலையருவிகளுடைய ஜலத்துளிகளின் சம்பந்தத்தால் கொழுத்த மரங்களால் அழகாக இருந்தது. பின்னும், அந்த வனத்தில் ஆறுகள், குளங்கள் ஆகிய இவைகளின் அலைக் காற்று தாமரை மலர், நீலோற்பலம் முதலியவைகளின் தூளியுடன் வீசிற்று. அதனாலும், எங்கும் பசும்புல் தரைகளாக இருப்பதாலும் வெயிலினுடைய தாபமும், காட்டுத்தீயின் உபத்திரவமும் உண்டாகவில்லை. அந்த வனத்திலுள்ள ஆழமான குளங்களில் ஜலம் பூரணமாக

இருப்பதால் அதன் அலைக்காற்று நான்கு பக்கங்களிலும் வீசிற்று. அதனால் அந்தப் பூமியும், மணல் திட்டுக்களும் ஈரமாகவே இருந்தன. சூரியனுடைய கிரணங்கள் (வெயில்) விஷம்போல உக்கிரமானவைகளானாலும் அந்தப் பூமியிலுள்ள ஜலத்தைக் கிரகிக்கமுடியவில்லை; புல்தரைகளைக் காயச் செய்யவில்லை. ஆனதால் பிருந்தாவனத்திலுள்ள மரங்கள் எல்லாம் புஷ்பித்திருந்தன. பலவகையான மிருகங்களும் பறவைகளும் சப்தித்துக்கொண்டிருந்தன. மயில்களும் வண்டுகளும் பாடிக்கொண்டிருந்தன. குயில்களும் ஸாரஸ பட்சிகளும் சப்தித்தன. ஆனதால் அந்த வனம் மிகவும் அழகாக இருந்தது. அப்படிப்பட்ட வனத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் விளையாடுவதற்காகப் பலராமனுடனும் கோபர்களுடனும் பசுக்களை முன் நடத்திப் புல்லாங்குழலை ஊதிக்கொண்டு பின் சென்றார். அவ்விடத்தில் ராமன், கிருஷ்ணன் முதலிய கோபர்கள் தளிர், மயில் தோகை, பூங்கொத்து, மாலைகள், தாதுக்கள் ஆகிய இவைகளால் அலங்கரித்துக்கொண்டு நர்த்தனஞ் செய்தார்கள்; யுத்தஞ் செய்தார்கள்; பாடினார்கள்; ஸ்ரீ கிருஷ்ணன் நர்த்தனஞ் செய்யும்பொழுது சிலர் பாடினார்கள்; சிலர் வாத்தியங்களை முழக்கினார்கள்; சிலர் புல்லாங்குழலை ஊதியும், சிலர் கொம்புகளை ஊதியும், சிலர் கைகொட்டியும் சிலாகித்தார்கள். இடையர்களுடைய ஜாதியில் இடையர்களாக ஜனித்திருக்கும் தேவர்கள் வேஷதாரிகள் மாறுவேஷங்கொண்டவனைத் துதித்தாற்போல் ஸ்ரீ கிருஷ்ணனையும், பலராமனையும் துதித்தார்கள். பின்னும் ஜில்பாக்களால் அலங்கரிக்கப்பட்ட அவ்விருவர்களும் சுற்றுவது, தாண்டுவது, ஒருவனையொருவன் தூக்கிப்போடுவது, தட்டிக்கொடுப்பது, ஓப்பது, முஷ்டியுத்தஞ் செய்வது ஆகிய இவைகளைச்

செய்துகொண்டு விளையாடினார்கள். இன்னும் இந்த இராமகிருஷ்ணர்களிருவர்களும், மற்றவர் நர்த்தனஞ் செய்யும்பொழுது தாங்கள் பாடிக்கொண்டும், வாத்தியங்களை முழக்கிக்கொண்டும், 'நன்றாக இருக்கிறது. நன்றாக இருக்கிறது' என்று கொண்டாடிக்கொண்டும் இருந்தார்கள். சிலசமயம் அவ்விருவரும் கும்பமென்ற மரத்தின் பழங்களாலும், வில்வப் பழங்களாலும், நெல்லிக் கனிகளாலும், முஷ்டிகளாலும், மற்றொருவன் தன்னைப் பிடிக்கமுடியாமல் ஓடுவதாலும், கண்களைக் கட்டிக்கொள்வது முதலியவைகளாலும், மிருகங்கள் போலவும், பறவைகள் போலவும் சேஷ்டிப்பதனாலும், சிலசமயம் தவளைகள்போல் தத்தி நடப்பதாலும், பரிகாசம் பண்ணிக்கொள்வதாலும், ஊஞ்சல் ஆடுவதாலும், அரசனைப்போல் நடப்பதாலும், லோகத்தில் வழங்கிவருகிறபடி ஆறுகளிலும், மலைகளிலும், காடுகளிலும், ஓடைகளிலும் விளையாடினார்கள். இப்படி ராமகிருஷ்ணர்கள் இருவர்களும் கோபர்களுடன் பசுக்களை மேய்த்து வரும்பொழுது பிரலம்பன் என்றொரு அசுரன் கோபனாக வேஷந் தரித்து, அவர்களைக் கொல்வதற்காக அந்தக் கூட்டத்தில் சேர்ந்தான். எல்லாவற்றையும் அறிந்த ஸ்ரீ கிருஷ்ணன் ராக்ஷதன் வந்திருப்பதை யறிந்திருந்தும், அவனைக் கொல்வதற்காக மற்றவர்களிடம்போல் அவனிடத்திலும் அன்பைக் காண்பித்தார். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ண பகவான் எல்லாக் கோபர்களையும் அழைத்து, "வயதிற்கும் பலத்திற்கும் தக்கபடி இரண்டு இரண்டு பேர்களாகச் சேர்ந்து விளையாடுவோம்" என்று சொன்னார். அதைக் கேட்ட கோபர்கள் பலராமனையும் கிருஷ்ணனையும் ஒவ்வொரு கட்சிக்கும் தலைவர்களாக ஏற்படுத்திக்கொண்டு, சிலர் கிருஷ்ணனுடைய பக்கத்திலும், சிலர் பலராமனுடைய

பக்கத்திலுமாக இருந்தார்கள். இப்படி இரண்டு இரண்டு பேர்களாக விளையாட்டுச் சண்டை செய்வதில் ஜயித்தவர்களை அபஜயமடைந்தவர்கள் தூக்கினார்கள். இப்படி அவர்களெல்லாரும் ஒரு சமயம் ஜயித்து வாகனத்தின் மீதேறியும், மற்றொரு சமயம் அபஜயத்தை யடைந்து தான் வாகனமாக இருந்துகொண்டும், மாடுகளை மேய்த்துக்கொண்டும் பாண்டீரகமென்ற ஆலமரத்திற்குச் சென்றார்கள். ராமனுடைய பக்கத்திலிருந்த ஸ்ரீதாமன், விருஷபன் முதலியவர்களும் அப்படியே விளையாடினார்கள். ஸ்ரீதாமா என்பவனுடன் ஸ்ரீ கிருஷ்ணன் யுத்தஞ் செய்து அபஜயமடைந்தபடியால் ஸ்ரீதாமனை ஸ்ரீ கிருஷ்ணன் தூக்கினார். •பத்ரசேனனென்பவன் விருஷபனென்பவனைத் தூக்கினான். கோப வேஷங் கொண்டிருக்கும் பிரலம்பனென்ற அசுரன் பலராமனைத் தூக்கினான். அப்பொழுது அந்தப் பிரலம்பன் எந்த எல்லை வரையில் தூக்கிக்கொண்டு போக வேண்டுமோ, அந்த இடத்தைத் தாண்டி வெகு வேகமாக பலராமனைத் தூக்கிச் சென்றான். ஏனென்றால், ஸ்ரீ கிருஷ்ணன் சமீபத்திலிருந்தால் பலராமனை ஜயிப்பது கஷ்டம். ஆனதால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கண்ணுக்குப் புலப்படாமல் வெகுதூரம் கொண்டுபோவோம் என்று வேகமாக ஓடினான்.

20—32. இப்படி அசுரன் ஓடும்பொழுது அவன் மீதிருந்த பலராமன் மலைபோலப் பாரமாக ஆனபடியால் அவனால் சுமக்க முடியாமல் அவனுடைய வேகமானது குறைந்தது. மேலும் அவன் சுவர்ணத்தால் அலங்கரிக்கப் பட்டிருக்கும் தன்னுடைய அசுர சரீரத்தை எடுத்துக் கொண்டான். அந்தச் சரீரமானது மின்னல்களுடன் கூடிய மேகம் சந்திரனைத் தூக்கினாற் போல் விளங்கிற்று.

பின்னும் அந்தச் சரீரமானது ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டும், ஜ்வலிக்கும் கண்களாலும், புருவங்களாலும், பயங்கரமான சிங்கப்பற்களாலும், பிரகாசிக்கும் தலைமயிர் களாலும், கிரீடகுண்டலங்களின் காந்தியாலும் அற்புத மாக இருந்தது. அதனைக் கண்டு பலராமன் கொஞ்சம் பயந்தார். பின்பு தம்முடைய சுவரூபத்தை நினைத்துக் கொண்டு தம்மை ஆகாய மார்க்கமாகத் தூக்கிக்கொண்டு போகும் சத்துருவை மிகுந்த கோபத்துடன் தலையில் முஷ்டியால் அடித்தார். அது இந்திரன் மலையைச் வச்சிரத் தால் அடித்ததுபோலிருந்தது. இப்படி பலராமனுடைய முஷ்டியால் அடிக்கப்பட்ட அந்த அசுரன் தலையுடைந்து, வாயினால் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, பிரக்ஞையற்றுக் கதறிக்கொண்டு பூமியில் விழுந்து உயிரை விட்டான். அது இந்திரனுடைய ஆயுதத்தால் அடிபட்டு மலை விழுந்தாற் போலிருந்தது. நல்லவன்போலக் கோப வேஷங் கொண் டிருந்த பிரலம்பாசுரனை மிக்க பலமுள்ளவராகிய பலராமன் கொன்றதைப் பார்த்துக் கோபர்கள் ஆச்சரியமடைந்து, சிலாகிக்கத்தக்கவராகிய பலராமனை மரணமடைந்து திரும்பி வந்தவராக நினைத்து, மிக்க பிரியத்துடன் ஆசீர் வதித்தார்கள். மிக்க பாபியான பிரலம்பனுடைய வதத்தைப் பார்த்துத் தேவர்கள் மிகுந்த சுகத்தை அடைந்து, பலராமன் மீது புஷ்பமாரி பெய்து, 'நல்ல காரியத்தைச் செய்தீர்; நல்ல காரியத்தைச் செய்தீர்" என்று சொன் னார்கள்.

## அத்தியாயம்—19

## ஸ்ரீ கிருஷ்ணன் பந்துக்களைக் காட்டுத் தீயிலிருந்து காப்பாற்றியது

1—5. கோபர்கள் விளையாட்டில் ஞாபகமுள்ளவர்களாக இருந்தபொழுது, பசுக்கள் புற்களின்மீது ஆசையினால் வெகுதூரம் தங்களிஷ்டப்படி சென்று புதருள்ள ஒரு காட்டிற்குச் சென்றன. அது மிஞ்சிப்புல்லுள்ள வனம் (நாணற் புற்காடு என்று சிலர் சொல்வார்கள்). அப்பொழுது அவ்விடத்தில் காட்டுத்தீ பற்றிக்கொண்டிருந்ததனால் அவ்விடஞ் சென்ற ஆடுகளும் பசுக்களும் தாகத்தை அடைந்து கதறின. பின்பு ராமன், கிருஷ்ணன் முதலிய கோபர்களெல்லோரும் பசுக்களைக் காணமல் பச்சாத்தாபமடைந்து, பசுக்கள் சென்ற விடத்தைத் தேடினார்கள். மேலும் அவர்கள், தங்களுடைய ஜீவனத்துக்குக் காரணமான பசுக்கள் காணமற் போனதால் பிரக்ஞையற்றுப் பசுக்களுடைய காலடிகளால் நசுக்கப்பட்ட புல் தரைகளாலும், பற்களால் கடிக்கப்பட்ட திருணங்களாலும் இதுதான் பசுக்கள் சென்ற மார்க்கமென்று தெரிந்துகொண்டு அந்த வழியே சென்றார்கள். ஆனாலும், மிஞ்சிப் புற்காட்டில் வழி தெரியாமல் கதறிக்கொண்டிருக்கும் பசுக்களைக் கண்டுபிடிக்காமலேயே களைப்படைந்து, தாகமுள்ளவர்களாகித் திரும்பி வராமல் அலைந்துகொண்டிருந்தார்கள். (திரும்பி வந்தார்கள் என்று சில புத்தகங்களில் காணப்படுகின்றன.)

6—11. அப்பொழுது மேகம் போன்ற கறுத்த திரு மேனியுள்ள ஸ்ரீ கிருஷ்ணன் உயரமான ஒரு மரத்தின் மீதேறி அந்தப் பசுக்களின் பெயரைச் சொல்லி உரக்க அழைத்தார். மேக கர்ஜனை போன்ற கிருஷ்ணனுடைய குரலைக் கேட்டுப் பசுக்கள் மிகுந்த சந்தோஷத்துடன் கத்தின. இந்தச் சமயத்தில் நான்கு பக்கமும் காட்டுத்தீ பற்றிக்கொண்டது. அதற்கு அனுகூலமாகக் காற்றும் வீசியது. பெரியதான அந்த அக்னியானது தாவரம், ஜங்கமம் முதலிய பிராணிகளை நாசஞ் செய்யத் தொடங்கிற்று. அதனைக் கண்டு கோபர்களும் பசுக்களும் பயந்தனர். கோபர்கள் கிருஷ்ணனை நோக்கி, "ஹே கிருஷ்ணா! கிருஷ்ணா! மிகுந்த பராக்கிரமமுள்ள பலராமா! காட்டுத் தீயினால் எரிக்கப்பட்டு உம்மைச் சரணமடையும் எங்களைக் காப்பாற்றும். சகல தர்மத்தையும் அறிந்த ஓ கிருஷ்ணா! நாங்கள் உம்மையே நாதனாகக் கொண்டவர்கள்; உம்மிடத்திலேயே பிரியமுள்ளவர்கள்; ஆனதால் உம்முடைய பந்துக்கள் நாசமடைவது தகுதியல்ல" என்று சரணமடைந்தார்கள். அது, மிருத்யு பயத்தால் ஜனங்கள் ஸ்ரீமந் நாராயணனைச் சரணமடைவது போலிருந்தது.

12—17. ஸ்ரீ கிருஷ்ண பகவான் பந்துக்களுடைய தீனமான வார்த்தையைக் கேட்டு, "பயப்படவேண்டாம்; கண்களை மூடிக்கொள்ளுங்கள்" என்று சொன்னார். அதனைக் கேட்டு எல்லோரும் கண்களை மூடிக்கொண்டார்கள். கோபிகைகளுக்கு அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணன் அந்த அக்கினியைத் தாமே பானஞ் செய்து பந்துக்களைக் காப்பாற்றினார். பிறகு அவர்கள் கண்களை விழித்துப் பார்க்கையில் பாண்டீரக வனத்தில் தாங்களிருப்பதாகத் தெரிந்து

கொண்டு, மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். பின்னுமவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய யோக மகிமையையும், யோக மாயையால் காட்டுத் தீயிலிருந்து தாங்கள் தப்பிப் பிழைத்ததையும் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணனைத் தேவனென்று நினைத்து, ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அப்படிப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் சாயங்காலத்தில் பசுக்களைத் திருப்பி ஓட்டிக் கொண்டும், வேணுகானஞ் செய்துகொண்டும் கோகுலஞ் சென்றார். கோப ஸ்திரீகள் பகலில் ஸ்ரீ கிருஷ்ணனைப் பாராமல் ஒவ்வொரு க்ஷணத்தையும் நூறு யுகங்கள் போலக் கழித்துவந்தவர்களாகையால் சாயங்காலத்தில் அந்தப் பகவானைப் பார்த்து மிகுந்த ஆனந்தத்தை அடைந்தார்கள்.

# அத்தியாயம்—20

## மழைக் காலத்தின் வருணனை

1—2. ஸ்ரீ கிருஷ்ணன் காட்டுத்தீயிலிருந்து தங்களைக் காப்பாற்றியது, பலராமன் பிரலம்பாசுரனைக் கொன்றது முதலிய அற்புதமான சமாசாரங்களைக் கோபர்கள் தங்கள் தங்கள் வீட்டில் ஸ்திரீகளுக்குச் சொன்னார்கள். அதனைக் கேட்ட வயது சென்ற கோபர்களும், ஸ்திரீகளும் ஆச்சரியப்பட்டு, சிறந்த தேவர்களே ராமகிருஷ்ணர்களாக கோகுலத்தில் அவதரித்திருக்கிறார்கள் என்று நினைத்தார்கள்.

3—31. பிறகு வர்ஷாகாலம் நேர்ந்தது. அது சகல பிராணிகளும் உண்டாகக்கூடிய காலம். ஆகாயமானது கலங்கிற்று. சந்திரன், சூரியன் இவைகளைச் சுற்றிக் கோட்டையுண்டாயிற்று; மேலும் மின்னல், கர்ஜனம் இவைகளுடன் கூடிய கருத்த மேகங்களால் இடைவிடாமல் மறைக்கப்பட்ட ஆகாயமானது ஸத்வம் முதலிய குணங்களால் மறைக்கப்பட்டு, வெளிப்படாத தேஜசுள்ள பிரம்மம்போல் விளங்கிற்று. சூரியன் எட்டுமாத காலமாகப் பூமியிலிருந்து தம்மால் எடுத்துக்கொள்ளப்பட்ட ஜலமாகிய பணத்தை ஜனங்களுக்குத் திருப்பிக்கொடுக்க வேண்டிய சமயம் வந்தபொழுது அந்த ஜலத்தைப் பூமியில் வர்ஷிப்பதற்கு ஆரம்பித்தார். இயற்கையில் கருணையுள்ள ஜனங்கள் பிறர் துக்கப்படுவதைப் பார்த்துச் சகியாமல் அவர்களுக்காகத் தங்கள் உயிரையும் எப்படி விட்டுவிடுகிறார்களோ, அப்படியே காற்று, மின்னல் இவைகளுடன் கூடிய பெரிய மேகங்கள் லோகத்திற்கு க்ஷேமத்தைச்

செய்யும் ஜலத்தை வர்ஷித்தன. ஏதோ ஒரு வஸ்துவை யடைவதற்காகத் தவஞ் செய்து இளைத்த சரீரமுள்ளவனுக்கு இஷ்டம் பூர்த்தியான பின் எப்படிச் சரீரம் பருக்குமோ, அதுபோலக் கோடைக்காலத்தால் உலர்ந்து போன பூமியானது மேகங்கள் மழை பெய்தவுடன் பருத்தது. கலியுகத்தில் விவேகத்தைக் கெடுக்கும் பாபத்தால் பாஷண்ட மதம் எப்படிப் பிரகாசிக்குமோ, வேதங்கள் பிரகாசிக்காதோ, அப்படி சாயங்காலத்தில் மின்மினிப் பூச்சிகள் இருட்டினால் பிரகாசித்தன. சந்திரன் முதலிய கிரகங்கள் பிரகாசிக்கவில்லை. ஆசாரியன் நித்ய கர்மங்களை முடித்துப் படிக்கலாமென்று சொன்னவுடன் சிஷ்யர்கள் எப்படி அத்யயனஞ் செய்கிறார்களோ, அப்படியே முன்பு மௌனமாகவிருந்த தவளைகள் மேகத்தின் சப்தத்தைக் கேட்டுக் கத்தின. இந்திரியங்களுக்குச் சுவாதீனனாகி சாஸ்திரத்தைக் கடந்த புருஷனுடைய சம்பத்துக்கள் விருத்தியடைவதுபோல, கோடைக் காலத்தில் ஜலமில்லாமலிருந்த அற்ப நதிகள் கரைபுரண்டு சென்றன (பாபிகளுடைய சம்பத்தானது நிலையற்றதென்று காட்டப்பட்டது). அரசர்களுடைய சேனையானது பச்சை நிறம், பொன்னிறம் இவைகளுள்ள வஸ்திரங்களால் எப்படி விசித்திரமாக இருக்குமோ, அதுபோல் பூமியானது இளம்புற்களால் பச்சை நிறம் உள்ளதாகவும், இந்திர கோபங்களால் (மழைக் காலத்தில் ஆகாயத்திலிருந்து விழும் சிவந்த நிறமுள்ள பட்டுப்பூச்சிகள்) சிவந்த நிறமுள்ளவைகளாகவும், நிலை வாழைப்பூக்களுடைய காந்தியுள்ளதாகவும் இருந்தது. மழையால் விருத்தியடையும் பயிர்களால் நிறைந்த வயல்கள் பயிரிட்டவர்களுக்கு சந்தோஷத்தை யுண்டுபண்ணின. (மழையில்லாதபோது

தாபத்தையும் கொடுத்தன.) மேலும், அவரவர்களுடைய அதிருஷ்டத்துக்குத் தக்கபடி பலன் கிடைக்கிறது என்பதை யறியாமல் வீணில் அகங்காரமடைந்தவர்கள் பச்சாத்தாபத்தை யடைந்தார்கள். ஸ்ரீமந்நாராயணனைச் சேவிப்பவர்கள் எப்படி அழகான சரீரத்தை யடைகிறார்களோ, அதுபோல ஜலத்தில் சஞ்சரிக்கும் பிராணிகளும், ஸ்தலத்தில் வசிக்கும் ஜந்துக்களும் புதிதான மழை ஜலத்தை யடைந்து அழகான சுரூபத்தை யடைந்தன. விஷயங்களில் மூழ்கினதும், பலவகையான காமனையுள்ளதும், குணங்களுள்ளதுமான புருஷனுடைய மனமானது யோகபரிபாகமில்லாததினால் எப்படிக் கலங்குமோ, அப்படி சமுத்திரமானது அநேக நதிகளுடன் சேர்ந்து, காற்றினால் உண்டுபண்ணப்பட்ட அலைகளுடன் மேலுங்கீழுமாகக் கலங்கிற்று. பகவானிடத்திலேயே மனத்தைச் செலுத்தியவர்கள் எவ்வளவு துக்கங்கள் நேர்ந்தாலும் எப்படி வருத்தமடையார்களோ, அதுபோல மழையினுடைய தாரைகளால் அடிக்கப்பட்டும், மலைகளும் அசையவில்லை. (பகவானிடத்தில் பக்தி செய்வதே சகல பாபத்தையும் போக்கடிக்கக்கூடியது என்பது கருத்து.) காலத்தின் மகிமையால் வேதங்களைப் பிராமணர்கள் அத்யயனஞ் செய்யாததால் அவைகள் ஒளிந்துபோனாற்போல மழைக்காலத்தில் வழி நடப்பவர்கள் இல்லாததால் வழிகள் புற்களால் மூடப்பட்டு இது வழியோ அல்லவோ என்று சந்தேகிக்கக் கூடியவைகளாக இருந்தன. (வேதத்தை அத்யயனஞ் செய்தவர்கள் எப்பொழுதும் அதைப் படித்துக்கொண்டிருக்கவேண்டுமென்பது காட்டப்பட்டது.) நற்குணங்கள் பொருந்திய புருஷர்களிடத்திலும் ஸ்திரீகள் எப்படி ஸ்திரமாகப் பிரியப்படுகிறதில்லையோ, அதுபோல

லோகோபகாரிகளான மேகங்களிடத்தில் மின்னல்கள் சொற்ப காலமிருந்தன. (ஸ்திரீகளிடத்தில் மிகுந்த பிரீதி வைக்கக்கூடாது என்பது காட்டப்பட்டது.) சப்தமாகிய குணமுள்ள ஆகாயத்தில் இந்திர வில்லானது நாண் கயிறு இல்லாமல் தோன்றியது. அது ஸத்வம் முதலிய குணங்களுடைய சம்பந்தத்தால் ஏற்பட்ட ஜகத்தில் குண சம்பந்தமில்லாத பரமாத்மா வசிப்பதுபோலிருந்தது. ஜீவன் நான் வித்துவான், கொடுப்பவன், சூரன் என்ற அகங்காரத்தைத் தன்னிடத்தில் ஏற்படுத்திக்கொண்டு, சரீரம் முதலியவைகளைத் தானென்று நினைத்து அகங்காரத்தால் மறைக்கப்பட்டு, சரீரம் முதலியவைகளைக் காட்டிலும் தாம் வேறாக எப்படிப் பிரகாசிக்கவில்லையோ, அப்படி சந்திரன் தன்னுடைய கிரணங்களால் பிரகாசிக்கும் மேகங்களால் மறைக்கப்பட்டிருந்தான். ஸம்ஸாரத்திலிருந்து கஷ்டப்பட்டு நிர்வேதத்தை யடைந்த ஜனங்கள் பகவத் பக்தர்களைக் கண்டமாத்திரத்தில் எப்படி ஆனந்தப்படுவார்களோ, அப்படி மயில்கள் மேகங்களைக் கண்டு சந்தோஷத்தை யடைந்தன. பல தாகங்களைச் சகித்துத் தவஞ் செய்தவர்கள் இஷ்டத்தை யடைந்த பிறகு எப்படிப் பருத்த சரீரமுள்ளவர்களாக ஆகிறார்களோ, அதுபோல மரங்கள் வேர்களால் மழை ஜலத்தைக் குடித்துவிட்டுத் தளிர்த்துப் புஷ்பித்துப் பலித்தன. விஷய சுகத்தில் ஆசைகொண்ட கிராமிய ஜனங்கள் ஓய்வில்லாமல் பலவகையான காரியங்களைச் செய்துகொண்டு கிருகஸ்தாச்ரமத்திலிருப்பது போல, ஸாரஸ பட்சிகள் சேறு, முள் இவைகளுள்ள குளக்கரையில் வசிக்கின்றன. (கிராமிய ஜனங்கள் விஷயத்தில் ஆசையுள்ளவர்கள்; அற்ப சுகத்தை விரும்பியவர்களென்று காட்டப்பட்டது.) கலியுகத்தில் பாஷண்டர்

களுடைய துர்வாதத்தால் ஆச்சிரம தர்மங்கள் கெட்டுப் போவதுபோல, பர்ஜன்யன் மழையைப் பெய்யும் பொழுது ஆறுகள், குளங்கள் இவைகளுடைய கரைகள் உடைந்தன. அரசர்கள் புரோகிதருடைய உபதேசத்தால் உசிதமான காலங்களில் யாசகர்களுக்கு அவரவர்கள் இஷ்டப்படும் வஸ்துக்களை எப்படிக் கொடுக்கிறார்களோ, அப்படிக் காற்றினால் தூண்டப்பட்ட மேகங்கள் பிராணி களுக்கு ஜலத்தைக் கொடுத்தன. (அரசர்கள் இப்படி நடக்கவேண்டுமென்று காட்டப்பட்டது.) அந்த மழைக் காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடனும், கோபர் களுடனும் விளையாடுவதற்காக வனத்திற்குச் சென்றார். அந்த வனமானது பேரீச்சம்பழம் முதலியவைகளால் நிறைந்திருந்தது. பருத்த மடியின் பாரத்தால் மிருதுவாக நடக்கும் பசுக்களும் ஸ்ரீ கிருஷ்ணனால் அழைக்கப்பட்டுப் பால் பெருக்குடன் வேகமாகச் சென்றன. வனத்திலுள்ள சகல பிராணிகளும் சந்தோஷமாக இருந்தன. வனங்கள் பழம், தேன் முதலியவைகளால் பூர்ணங்களாக இருந்தன. மலையில் மழை பெய்யும்பொழுது சப்தமுண்டாயிற்று. அநேக குகைகளிருந்தன. அவைகளை ஸ்ரீ கிருஷ்ணன் பார்த்தார். மேலும் அவர் மழை பெய்யும்பொழுது மரத்தி னடியிலும், குகையிலும் வசித்துக் கிழங்கு, வேர், பழம் ஆகிய இவைகளைப் புசித்துக்கொண்டு விளையாடினார். பின்னும் அவர் வீட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட தயிரன்னத் தையும், பலவகையான ஊறுகாய்களையும் ஜலக் கரையில் கற்பாறையில் வைத்துக்கொண்டு பலராமனுடனும் மற்ற கோபர்களுடன் புசித்தார். அப்பொழுது விருஷபங்களும், பருத்த கன்றுகளும், மடியின் பாரமுள்ள பசுக்களும் புற்றரையில் படுத்துக் கண்களை மூடிக்கொண்டு அசை

போட்டுக்கொண்டிருந்தன. அந்த மழைக்காலத்திய வேடிக்கை சகல பிராணிகளுக்கும் இன்பத்தைக் கொடுக்கக்கூடியதாக இருந்தது. அதனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய சங்கற்பத்தால் விருத்தியான வனத்தின் காந்தியைச் சிலாகித்தார்.

32—49. இப்படி கோகுலத்தில் ஸ்ரீ கிருஷ்ணனும், ராமனும் வசிக்கும்பொழுது சரத் காலம் (ஐப்பசி, கார்த்திகை) வந்தது. ஆகாயம் மேகங்களின் மறை வில்லாமல் சுத்தமாயிற்று; ஜலம் தெளிந்தது; கடுமையான காற்று ஒழிந்தது; யோகத்தை அப்பியசித்து நடுவில் விக்னத்தால் தடுக்கப்பட்டு யோகத்திலிருந்து நழுவியவர் களுடைய மனமானது திரும்பவும் யோகாப்பியாசஞ் செய்ததால் சுத்தமானாற் போல மழைக்காலத்தில் கலங்கி யிருந்த ஜலம் சரத் காலம் வந்ததால் தெளிந்தது. மகரிஷிகள் ஆசைகளை யொழித்துச் சாந்தர்களாகி, பாப மற்றவர்களாக எப்படிப் பிரகாசிக்கிறார்களோ, அதுபோல மேகங்கள் தங்களுடைய சொத்தாகிய ஜலம் முழுவதை யும் கொடுத்து, வெண்மை நிறத்துடன் பிரகாசித்தன. ஞானிகள் ஞானத்தை எப்படிச் சிலருக்கு உபதேசித்தும், சிலருக்கு உபதேசியாமலும் இருக்கிறார்களோ, அதுபோல மலைகள் சுத்தமான ஜலத்தைச் சிலவிடத்தில் மாத்திரம் பெருகவிட்டன. தரித்திரனும் குடும்பியும் இந்திரியங்களை ஜயிக்காதவனுமாகிய புருஷன் எப்படித் தாபத்தை யடை வானோ, அப்படி சொற்ப ஜலத்தில் சஞ்சரிக்கும் மீன் முதலிய பிராணிகள் சரத்கால வெய்யிலால் பயத்தை யடைந்தன. ஆத்ம ஞானத்தை யடைந்த புத்திமான்கள் சரீரத்திலும், புத்திரன் முதலியவர்களிடத்திலும் 'நான்,

என்னுடையது' என்ற அகங்காரத்தை எப்படி நாளடைவில் விட்டுவிடுவார்களோ, அதுபோல பூமி சேறில்லாமல் உலர்ந்தது. கொடிகளும் ஈரமில்லாமல் உலர்ந்தன. மனத்தின் வியாபாரங்கள் அடங்கியபொழுது புருஷன் முனியாகி, கர்மங்களை விட்டு எப்படி ஓய்வை யடைகிறனே, அப்படி சரத்காலம் வந்தவுடன் சமுத்திரமானது அசையாமலிருந்தது. யோகிகள் இந்திரியங்களை வெளியிற் செல்லவொட்டாமல் தடுத்து ஞானத்தை எப்படிக் காப்பாற்றிக்கொள்ளுகிறார்களோ, அப்படிப் பயிரிடுவோர்கள் கரைகளைக் கெட்டிசெய்து, வயல்களில் ஜலத்தைக் கட்டினர்கள். ஞானமானது அஞ்ஞானத்தை எப்படிப் போக்கடிக்கிறதோ, ஸ்ரீ கிருஷ்ணன் கோபஸ்திரீகளுக்கு எப்படித் தாபத்தை நிவர்த்திக்கிறரோ, அப்படி சரத்காலத்திய வெயிலின் உஷ்ணத்தைச் சந்திரன் போக்கடித்தார். ஆகாயமானது மேகங்களால் மறைக்கப்படாமல் நன்றாகப் பிரகாசிக்கும் நட்சத்திரங்களுடன் விளங்கிற்று. அது வேதங்களுடைய அர்த்தத்தை நன்றாக அறிந்து, ஸத்வ குணத்துடன் பிரகாசிக்கும் சாதுவின் மனம்போலிருந்தது. பூமியில் கிருஷ்ணன் விருஷ்ணி வம்சத்தார்களால் சுத்தப் பட்டிருப்பதுபோல ஆகாயத்தில் சந்திரன் நட்சத்திரங்களுடன் பிரகாசித்தார். கோபஸ்திரீகள் கிருஷ்ணனை மனத்தால் ஆலிங்கனம் செய்துகொண்டு சுகப்படுவதுபோல ஜனங்கள் சமமான குளிர்ச்சி, உஷ்ணம் இவைகளுள்ள காட்டுக் காற்றை அடைந்து, சுகத்தை அடைந்தார்கள். பலனை விரும்பாமல் பகவானை ஆராதித்தாலும் விரும்பாத பயன்கள் எப்படிக் கிடைக்கின்றனவோ, அப்படிப் பசுக்களும், மிருகங்களும், பறவைகளும், ஸ்திரீகளும், தங்கள் புருஷர்களை விரும்பாதிருந்தும் அவர்களால் பின்தொடரப்

பட்டு சரத்காலத்தில் சர்ப்பத்தை அடைந்தார்கள். அரசனால் ஜனங்கள் எப்படி சுகப்படுகிறார்களோ, அப்படி சூரியனைக் கண்டு தாமரைமலர்கள் மலர்ந்தன. அரசனைக் கண்டு திருடர்கள் எப்படி சந்தோஷிக்கிறதில்லையோ, அப்படி குமுதங்கள் சூரியனைக் கண்டு மலரவில்லை. பட்டணங்களிலும் கிராமங்களிலும் புதிய அன்னத்தை உண்பதற்காகச் செய்யும் ஆக்ரயணம் என்ற வைதிக கர்மங்கள் நடந்தன. லௌகிகங்களான மகோற்சவங்களும் நடந்தன. ராமகிருஷ்ணர்கள் பூமியில் வசிப்பதால் எல்லாப் பயிர்களும் பலித்து, அவைகளால் பூமி நிறைந்திருந்தது. வியாபாரிகள் சரத் காலம் வந்தவுடன் வியாபாரத்திற்கு வெளியில் சென்று லாபத்தை அடைந்தார்கள். சன்னியாசிகள் மழைக் காலத்தில் சஞ்சாரத்தை யொழித்து சாதுர்மாஸ்ய விருதத்தை யநுஷ்டித்து, சரத்காலம் வந்தவுடன் தங்களிஷ்டப்படி சஞ்சரிக்க ஆரம்பித்தார்கள். அரசர்கள் திக்விஜயத்திற்காகப் புறப்பட்டார்கள். ஸ்நாதகர்கள் தேசாந்திரஞ் சென்று வித்தையை அப்பியசித்தார்கள்.

# அத்தியாயம்—21

## கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்தை வருணித்தது

1—6. சரத்காலம் வந்ததால் ஆறு குளங்களி லிருக்கும் ஜலம் தெளிந்தது. தாமரை மலரின் வாசனை யுடன் காற்று வீசிற்று. இந்தச் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் கோபர்களுடன் பசுக்களை ஓட்டிக்கொண்டு காட்டிற்குச் சென்றார். அந்தக் காட்டில் குளக்கரை களிலும், ஆற்றங்கரைகளிலும், மற்ற விடங்களிலும் இருக்கும் மரங்களெல்லாம் புஷ்பித்திருந்தன. புஷ்பங் களின் தேனைக் குடித்து மதித்த வண்டுகளும், மற்ற பறவைகளும் சப்தித்துக்கொண்டிருந்தன. அப்பேர்ப்பட்ட வனத்தில் கோபர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண் டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் புல்லாங்குழலை ஊதினார் (வேணு கானஞ் செய்தார்). அந்த சப்தத்தைக் கோகுலத்திலிருக் கும் கோப ஸ்திரீகள் கேட்டு, காமவெறி கொண்டு தங்களுடைய தோழிகளை நோக்கி ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்தைச் சொல்ல ஆரம்பித்தார்கள். பெருமையவர்கள் மயில் தோகையைத் தலையில் வைத்துக்கொண்டவரும், கர்ணிகார புஷ்பத்தைக் காதுகளில் வைத்துக்கொண்ட வரும், தங்கச் சரிகையுள்ள வஸ்திரத்தை உடுத்திக் கொண்டவரும், வைஜயந்தி என்ற மாலையைத் தரித்தவரும், கோபர்களால் கானம் பண்ணப்பட்ட கீர்த்தியுள்ளவரும், நடன்போல வேஷந்தரித்தவரும், தம்முடைய பாதஸ்பரிசத் தால் பிருந்தாவனத்திற்கு அழகைச் செய்பவரும், புல்லாங் குழலை யெடுத்து அதன் துவாரங்களை உதட்டிலுள்ள அமிருதத்தால் பூர்த்திசெய்துகொண்டு கானஞ்செய்பவரு

பாகிய ஸ்ரீகிருஷ்ணனைத் தியானஞ் செய்தார்கள் (துதித்தார்கள்.) அதனால் அவர்களுடைய மனம் மன்மத தாபத்தால் கலங்கியது. இப்படி கோகுலத்திலுள்ள ஸ்திரீகளெல்லோரும் சகல பிராணிகளின் மனத்தை அபகரிக்கக்கூடிய வேணுகானத்தைக் கேட்டு ஸ்ரீகிருஷ்ணனுடைய லீலையைப் பின்வருமாறு ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு ஆனந்தத்தை யடைந்தார்கள். (மனத்தால் கிருஷ்ணனை ஆலிங்கனஞ் செய்துகொண்டார்களென்பது கருத்து.)

7. எப்படியென்றால், "ஓ தோழிகளே! கோபர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டும், வேணுகானஞ் செய்துகொண்டும், சினேகமுள்ள கடைக்கண் பார்வையுடனும் சஞ்சரிக்கும் ராமகிருஷ்ணர்களுடைய முகத்தைத் தரிசிப்பதே கண்களுக்குப் பயன். இதைவிட மேலான பயன் கண்களுக்கு ஒன்றுமில்லை" என்று ஒரு கோபஸ்திரீ சொன்னாள்.

8. மற்றும் சில ஸ்திரீகள், "மாந்தளிர், மயில் தோகை, பூங்கொத்து, நீலோற்பல புஷ்பம், தாமரை மலர் இவைகளின் மாலையால் அலங்கரிக்கப்பட்டவர்களும், அவைகளின் காந்தியால் கருத்தும் சிவந்தும் இருக்கும் வஸ்திரமுள்ளவர்களுமாகிய ராமகிருஷ்ணர்களிருவரும் நாட்டிய சாலையில் கானஞ்செய்துகொண்டிருக்கும் இரண்டு சிறந்த நடர்கள்போல கோபர்களுடைய நடுவில் விளங்குகிறார்கள்" என்றார்கள். (அந்தக் கோபர்களே பாக்கியசாலிகள் என்பது கருத்து.)

9. பின்னும் சில ஸ்திரீகள், "ஓ கோபிகைகளே! ஸ்ரீகிருஷ்ணனுடைய உதட்டின் அமிருதமான அது கோபிகைக்

களால் அநுபவிக்கக்கூடிய தல்லவா? அப்படியிருந்தும் இந்தப் புல்லாங்குழலானது தனதிஷ்டப்படி அந்த அமிருதத்தைத் தான் தனியே பானஞ்செய்கிறது. ஆனதால் இது எவ்விதப் புண்ணியஞ் செய்ததோ? மரங்கள் தங்கள் ஜாதியில் பிறந்த புல்லாங்குழலுடைய பாக்கியத்தைக் கண்டு ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கின. (மரங்களிலிருந்து பெருகும் புஷ்பரசம் ஆனந்தக்கண்ணீரென்று சொல்லப் பட்டிருக்கிறது.) நதிகளும் குளங்களும் தங்களுடைய ஜலத்தால் வளர்ந்த மூங்கிலிலிருந்து உண்டான இந்தப் புல்லாங்குழல் இவ்வளவு பாக்கியம் பெற்றதேயென்று மயிர்க்கூச்சலடைந்தன. (நதிகளுடைய ஜலத்தால் மூங்கில் வளருகிறபடியால் புல்லாங்குழலுக்கு நதிகள் மாதா ஆயின. புஷ்பிக்கும் தாமரை மலர்கள் அவைகளுக்கு மயிர்க்கூச்சலென்று சொல்லப்பட்டது.) பெரியோர்கள் தங்கள் வம்சத்தில் பிறந்தவன் பகவானைச் சேவித்து, பக்தனாக இருந்தால் அதனால் சந்தோஷித்து ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி மயிர்க்கூச்சலையடைவது வழக்க மல்லவா?" என்றார்கள்.

10. இன்னுஞ் சில ஸ்திரீகள், "அடி தோழி! தேவகியின் புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் பிருந்தாவனத்தில் சஞ்சரிப்பதால் அந்த வனம் மிகவும் அழகாயிருக்கிறது. மேலும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய வேணுகானத்தைக் கேட்டு அங்கிருக்கும் மயில்கள் 'இது மிருதுவாகக் கர்ஜிக்கும் கருத்த மேகம்' என்று நினைத்து நர்த்தனஞ் செய்கின்றன. அதனைக் கண்ட மலையின் தாழ்வரையிலுள்ள மற்ற மிருகங் கள் மற்ற வேலைகளை விட்டு அதையே பார்த்துக்கொண் டிருக்கின்றன. இம்மாதிரியான பாக்கியம் சுவர்க்க லோகத்

திற்கும் கிடைக்கவில்லையாதலால் இந்தப் பிருந்தாவனத்தால் பூமிக்கு விசேஷ கீர்த்தி ஏற்பட்டிருக்கின்றது" என்று சொன்னார்கள்.

11. இன்னும் சில ஸ்திரீகள், "பிருந்தாவனத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் வேணுகானம் செய்யும்பொழுது அதனைக் கேட்டும், அற்புதமான அவருடைய சுரூபத்தைத் தரிசித்துக்கொண்டிருக்கிற பெண் மான்கள் தங்களுடைய புருஷர்களுடன் பிரீதியாக ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்துப் பூஜிக்கின்றன அல்லவா? ஆனதால் மந்த புத்தியுள்ளவை யானாலும் அவைகளே மேலானவை" என்று சொன்னார்கள். (மான்களைவிடத் தாங்கள் புத்தியுள்ளவர்களானாலும் தங்களுக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கவில்லையென்பது கருத்து.)

12. பின்னுஞ் சில ஸ்திரீகள், "ஓ கோபிகைகளே! ஸ்திரீகளுக்கு ஆனந்தத்தை யுண்டுபண்ணக்கூடிய அழகு, சுபாவம் ஆகிய இவைகளுள்ள ஸ்ரீ கிருஷ்ணன் பிருந்தாவனத்தில் வேணுகானஞ் செய்யும்பொழுது விமானத்தின் மீதேறி ஆகாய மார்க்கமாகச் செல்லும் தேவ ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து அவருடைய கானத்தையுங் கேட்டு, மன்மத தாபங்கொண்டு தைரியத்தை விட்டு மோகமடைந்தார்கள். அவர்களுடைய (பர்த்தாவின் மடியிலிருக்கும்பொழுதும்) எக்கு முடிச்சு அவிழ்ந்தது; தலை முடிச்சும் அவிழ்ந்தது; அதிலிருந்த புஷ்பங்கள் கீழே நழுவின" என்றார்கள்.

13. இன்னுஞ் சில ஸ்திரீகள், "ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகமாக வெளிப்படும் வேணுகானமாகிய

அமிருதத்தைப் பசுக்கள் காதுகளை உயரத் தூக்கிக் கொண்டு பானஞ்செய்கின்றன. (தலை குனிந்திருந்தால் காதில் சென்ற மேற்கண்ட அமிருதம் சிந்திப்போய்விடு மென்றெண்ணிக் காதுகளை உயரத் தூக்கிக்கொண்டன.) கன்றுகள் ஊட்டுவதற்குச் சென்றவுடன் பகவான் கானஞ்செய்ய, அதனைக் கேட்ட அந்தக் கன்றுகள் முகத்தை உயரத் தூக்கிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்து, மனத்தில் தியானித்துக்கொண்டு ஊட்டுவதை மறந்து நிற்கின்றன. பால் பெருகி ஓடுகிறது. கன்றுகளும் பசுக்களும் கொஞ்சம் ஆனந்த பாஷ்பத்தைப் பெருக விட்டன" என்றார்கள்.

14. மற்றுஞ் சில ஸ்திரீகள், "ஓ அம்ம! இந்த பிருந்தாவனத்தில் பறவைகள், தளிர்களுள்ள மரத்தின் கிளைகளிலிருந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்து, அவருடைய மதுரமான கானத்தைக் கேட்டு, மற்ற வார்த்தைகளை விட்டுக் கண்களை மூடிக்கொண்டு ஆனந்தத்தை அடைகின்றன. ஆனதால், அவைகளை மகரிஷிகளென்றே நினைக்கிறேன். மகரிஷிகள் வேதமாகிய மரத்தின் கிளையிலேறி, பலத்தை விரும்பாமல் கர்மங்களைச் செய்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்தத்தையே கேட்கிறார்கள் அல்லவா!" என்றார்கள்.

15. இன்னுஞ் சில ஸ்திரீகள், "நதிகள் ஸ்ரீ கிருஷ்ண னுடைய வேணுகானத்தைக் கேட்டு மன்மத தாபங் கொண்டு சுழிகளால் (சுழல்கள்) வேகங் குறைந்தவை களாகி, அலைகளாகிய கைகளால் தாமரை மலர்களைக் காணிக்கைகளாக எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களைத் தொடுகின்றன" என்றார்கள்.

16. பின்னுஞ் சில கோபிகைகள், "ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடனும் கோபர்களுடனும் வெயிலில் பசுக்களை மேய்த்துக்கொண்டும், வேணுகானஞ் செய்துகொண்டும் சஞ்சரிக்கும்பொழுது மேகங்கள் கருத்த திருமேனியுள்ள ஸ்ரீ கிருஷ்ணனைத் தங்களுக்குச் சிநேகிதனென்று நினைத்து, மிகுந்த பிரியத்துடன் புஷ்பங்கள்போன்ற ஜலத்துளிகளை அவர்மீது வர்ஷித்துக் குடைபிடிப்பதுபோல வெயிலை மறைக்கின்றன" என்று சொன்னார்கள். (அசேதனங்கள் கூட பகவானை உபசரிக்கின்றன. நமக்கு அந்தப் பாக்கியங் கிடைக்கவில்லையென்று கருத்து.)

17. மற்றுஞ் சில ஸ்திரீகள், "ஸ்ரீ கிருஷ்ணன் பிருந்தாவனத்தில் சஞ்சரிக்கும்பொழுது அவருடைய பாதங்களிலிருந்த குங்குமம் புற்களில் ஒட்டிக்கொண்டது. அது கோபிகைகளுடைய ஸ்தனத்திலிருந்து பகவானுடைய பாதத்தில் சம்பந்தித்தது. அதை வேட ஸ்திரீகள் எடுத்துத் தங்களுடைய முகத்திலும், ஸ்தனங்களிலும் வைத்துக் கொண்டு, மன்மத தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டார்கள். ஆனதால், அவர்கள் மேலானவர்கள் (கிருதார்த்தர்கள்)" என்றார்கள்.

18. மற்றுஞ் சில ஸ்திரீகள், "ஓ கோபிகைகளே! இந்தக் கோவர்த்தன மலையானது ராமகிருஷ்ணர்களுடைய பாதஸ்பரிசத்தை அடைந்திருக்கிறது; ராமகிருஷ்ணர்களுக்கும் அவர்களுடன் சஞ்சரிக்கும் பசுக்களுக்கும் ஜலம், நல்ல புற்கள், குகை கிழங்கு ஆகிய இவைகளைக் கொடுத்துப் பூஜிக்கிறது. ஆனதால் இந்தப் பர்வதம் ஹரிதாஸர்களுக்குட் சிறந்தது (பக்தர்களுக்குட்சிறந்தது); ஆச்சரியம்" என்றார்கள்.

19. இன்னுஞ் சில ஸ்திரீகள், "ஓ அந்தரங்கத் தோழிகளே! ராமகிருஷ்ணர்களிருவரும் பசுக்களை அணைந்து கறக்கும் கயிறுகளைத் தோளில் வைத்துக்கொண்டும், முரட்டு மாடுகளைக் கட்டுவதற்கு போரைக்கயிறுகளைத் தலையில் சுற்றிக்கொண்டும், கோப வேஷத்துடன் பிருந்தாவனத்தில் கோபர்களுடன் வேணுகானஞ் செய்து பசுக்களை மேய்த்துவரும்பொழுது ஜங்கமங்களான பிராணிகள் அசையாமல் நின்றன. தாவரங்களான மரம் முதலியவை மயிர்க்கூச்சலை அடைந்தன; ஆச்சரியம்" என்றார்கள்.

20. இப்படி கோப ஸ்திரீகளெல்லோரும் பிருந்தாவனத்தில் சஞ்சரிக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய விளையாட்டுக்களை வருணித்துக்கொண்டு தன்மயமானார்கள்.

# அத்தியாயம்—22

## பகவான் கோபிகைகளின் வஸ்திரங்களை அபகரித்தது

1—7. நந்தகோகுலத்திலுள்ள சிறு பெண்களெல்லோரும் ஹேமந்த ருதுவின் முதல் மாதமான மார்கழி மாதத்தில் அந்த மாதம் முழுவதும் ஹவிஸ்ஸைப் புசித்துக் காத்தியாயனி விரதத்தை அனுஷ்டித்தார்கள். காலையில் யமுனையின் ஜலத்தில் ஸ்நானஞ்செய்து அருணோதய காலத்தில் ஜலக்கரையில் மணலால் காத்தியாயனியின் பிம்பஞ்செய்து அதைச் சந்தனம், வாசனையுள்ள புஷ்ப மாலைகள், தூப தீபங்கள், பலவகையான நிவேதனங்கள், பழங்கள், தளிர்கள், அட்சதங்கள் முதலியவைகளால் பூசித்து, "ஓ காத்தியாயனி! மகாமாயையே! மகாயோகினி! எல்லாவற்றிற்கும் அதிபதியாயிருப்பவளே! நந்தகோபருடைய புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் எங்களுக்குப் புருஷனாகும்படி நீ செய்யவேண்டும்" என்று ஒவ்வொரு பெண்களும் தனியே பிரார்த்தித்துப் பூஜை செய்தார்கள். இப்படி அந்தப் பெண்கள் எல்லோரும் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலேயே மனத்தைச் செலுத்தி, ஸ்ரீ கிருஷ்ணன் தங்களுக்குப் புருஷனாக ஆகவேண்டுமென்ற எண்ணத்துடன் பத்திரகாளியைப் பூசித்தார்கள். ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்திருந்து, ஒவ்வொருவருடைய பெயரையுஞ் சொல்லி அழைத்து, ஒருவர் கையை மற்றொருவர் பிடித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதத்தை உரக்கக் கானம் பண்ணிக்கொண்டு ஸ்னானத்திற்காக யமுனா நதிக்குச் செல்லுகிறது வழக்கம்.

8—12. ஒரு நாள் இந்தப் பெண்கள் யமுனையின் கரையில் தங்கள் வஸ்திரங்களை வைத்துவிட்டு ஜலத்தி லிறங்கி, ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்தைச் சொல்லிக் கொண்டு சந்தோஷமாக விளையாடினார்கள். அப்பொழுது யோகீசுவரர்களுக்கும் அதிபதியாயிருக்கும் பகவான் விருதத்தின் பலத்தை அவர்களுக்குக் கொடுப்பதற்காகத் தோழர்களுடன் அவ்விடம் வந்தார். பிறகு ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு வேக மாகக் கடம்ப மரத்தின் மேலேறி, சிரித்துக்கொண்டு அந்தப் பெண்களை நோக்கி, "ஓ பெண்களே! நீங்கள் கரையில் வந்து அவரவர்களுடைய வஸ்திரத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்; நீங்கள் விருதஞ்செய்து கஷ்டப்பட்டிருப்ப தால் உங்களைப் பரிகாசஞ் செய்யவில்லை; உண்மையாகச் சொல்லுகிறேன்; இதுவரையில் நான் பொய் சொன்ன தில்லை என்பது இந்தக் கோபகுமாரர்களுக்குத் தெரியும்; நீங்கள் தனியாகவாவது, ஒன்று சேர்ந்தாவது கரையில் வந்து வஸ்திரத்தை வாங்கிக்கொள்ளுங்கள்" என்று பரிகாசமாகச் சொன்னார்.

13—16. அவருடைய பரிகாச வார்த்தையைக் கேட்ட அந்தப் பெண்கள் மிகுந்த பிரீதியுடன் ஒருவருக் கொருவர் முகத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு வெட்கத்தால் ஜலத்திலிருந்து வெளியே வரவில்லை. ஆனாலும் கிருஷ்ணனுடைய பரிகாச வார்த்தையால் மனங் கலங்கினவர்களாகிக் குளிர்ந்த ஜலத்தில் கழுத்துவரையில் முழுகிக்கொண்டு, குளிரால் நடுக்கமடைந்து ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி, "நீர் நந்தராஜனுடைய புத்திரர்; கோகுலத்திலிருப் பவர்களுக்குச் சிறந்தவர்; எல்லோருக்கும் பிரியத்தைச்

செய்பவரென்று எங்களுக்குத் தெரியும். ஆகையால் அநியாயத்தைச் செய்யவேண்டாம். நாங்கள் குளிரால் நடுக்க மடைந்திருக்கிறோம். எங்கள் வஸ்திரத்தைக் கொடும். ஓ அழகுள்ளவரே! உமக்கு வேலைசெய்பவர்களாக இருக்கிறோம். உம்முடைய உத்தரவின்படி நடக்கிறோம்; அப்படிக் கொடுக்காவிட்டால் அரசனிடத்தில் (நந்தர் அல்லது கம்ஸன்) தெரிவிப்போம்" என்று சொன்னார்கள்.

17—20. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களை நோக்கி, "நீங்கள் எனக்குத் தாசிகளும், நான் சொல்வதைச் செய்பவர்களுமாக இருப்பது உண்மையானால், கரையில் வந்து வஸ்திரங்களை வாங்கிக்கொள்ளுங்கள்; இல்லாவிட்டால் கொடுக்கமாட்டேன். கிழவனாகிய அரசன் என்ன செய்வார்" என்று சொன்னார். அதனைக் கேட்ட அந்தப் பெண்கள் குளிரால் நடுக்கமுள்ளவர்களாகி, இரு கைகளால் ரகசிய ஸ்தானத்தை மறைத்துக் கொண்டு ஜலத்திலிருந்து கரைக்கு வந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய சுத்தமான எண்ணத்திற்கே சந்தோஷப்பட்டு வஸ்திரங்களைத் தோளில் வைத்துக்கொண்டு அந்தப் பெண்களிடத்தில் மிகுந்த பிரீதியுடன், "விருதத்தை அநுஷ்டிக்கும் நீங்கள் வஸ்திரமில்லாமல் ஜலத்தில் இறங்கியபடியால் அது தேவர்களுக்கு அபராதம் செய்ததாயிற்று. அந்தப் பாபத்தின் நிவர்த்திக்காகத் தலையில் அஞ்சலி செய்துகொண்டு நமஸ்கரித்து உங்களுடைய வஸ்திரங்களை வாங்கிக்கொள்ளுங்கள்" என்று சிரித்துக்கொண்டு சொன்னார்.

21—24. அதனைக் கேட்ட பெண்கள் மகாத்மாவா கிய கிருஷ்ணன் வார்த்தை தர்மத்திற்கு ஒத்தது என்று நினைத்து, ஒரு கையினுல் ரகசிய ஸ்தானத்தை மறைத்துக் கொண்டு, மற்றொரு கையினுல் நமஸ்கரித்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் திரும்பவும் அவர்களை நோக்கி, "எவன் பகவானை ஒரு கையால் நமஸ்கரிக் கிருனே, அவனுடைய கையை வெட்டிவிடுவது அவனுக் குச் சிட்சை என்று தர்ம சாஸ்திரக்காரர்கள் சொல்லுகிருர் கள். ஆகையால் மனிதன் இரு கைகளாலும் பகவானை நமஸ்கரிக்கவேண்டும்; நீங்கள் அப்படிச் செய்வீர்களா ஞல்,எனக்கு மிகவும் சந்தோஷகரமாக இருக்கும். வஸ்திர மில்லாமல் ஜலத்தில் பிரவேசித்ததாலும், ஒரு கையால் நமஸ்கரித்ததாலும் உண்டான இருவகைப் பாபத்தையும் நிவர்த்தித்துக்கொள்ளவேண்டுமென்ற விருப்பம் உங்களுக்கு இருக்குமானுல் இரண்டு கைகளாலும் நமஸ்கரித்து, வஸ்திரங்களைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று தர்மமான வார்த்தையைச் சொன்னுர்.

25—28. அதனைக் கேட்ட அந்தப் பெண்கள், வஸ்திரமில்லாமல் ஸ்நானஞ்செய்தது விரதத்திற்குக் குறைவைச் செய்யக்கூடியதாகையால் அதற்குப் பிராயச் சித்தத்தை அனுஷ்டிக்கவேண்டியது அவசியம் என்று நினைத்து, சகல கர்மங்களின் பலரூபியும், பாபத்தைப் போக்கடிப்பவருமான ஸ்ரீ கிருஷ்ணனை (இரு கைகளாலும்) நமஸ்கரித்தார்கள். அப்படி நமஸ்கரித்த பெண்களைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் கருணை, சிநேகம் இவைகளுள்ள வராகி, வஸ்திரங்களை அவர்களுக்குக் கொடுத்தார். இப்படி அந்தப் பெண்கள் ஸ்ரீ கிருஷ்ணனுல் ஏமாற்றப்பட்டார்கள்.

வெட்கத்தை விடும்படி செய்யப்பட்டார்கள்; பரிகாசஞ் செய்யப்பட்டார்கள்; விளையாட்டுக் கருவிகளாக்கப்பட்டார்கள்; மேலும், ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய வஸ்திரங்களையும் அபகரித்துக்கொண்டார்; ஆனாலும் அவரிடத்தில் அந்தப் பெண்கள் அருவை அடையவில்லை. அவருடைய சேர்க்கையால் சுகத்தை அடைந்தார்கள். பின்னும் அவர்கள், வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனால் சுவாதீனப்படுத்தப்பட்டவர்களாகி, ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் சித்தத்தைச் செலுத்தி, வெட்கத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்துக்கொண்டு அவ்விடத்திலேயே நின்றார்கள்.

29—33. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய பாதத்தை யடையவேண்டி விரதத்தை யனுஷ்டித்த பெண்களுடைய அபிப்பிராயத்தை யறிந்தவராகையால் அவர்களை நோக்கி, "ஓ பதிவிரதைகளான பெண்களே! என்னைச் சேவிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் விரதானுஷ்டானஞ் செய்த உங்களுடைய அபிப்பிராயம் எனக்குத் தெரியும். நானும் அதனை ஒப்புக்கொண்டதால் அது சத்தியமாகக் கூடியதேயாம். என்னிடத்தில் சித்தத்தைச் செலுத்தியவர்களுடைய காமனையானது மற்றொரு காமனையை உண்டுபண்ணுகிறதில்லை. வறுக்கப்பட்ட தானியங்களும், பக்குவமான தானியங்களும் பெரும்பாலும் முளைக்கிறதில்லை யல்லவா? ஆனதால் ஓ பெண்களே! கோகுலம் போகலாம். பூர்ண மனோரத முள்ளவர்களாக வருகிற ராத்திரிகளில் என்னுடன் ரமிக்கலாம். இதற்காகக் காத்யாயனீ விரதஞ் செய்தீர்களல்லவா?" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்ட அந்தப் பெண்கள் பூர்ண மனோரதமுள்ளவர்களாகி,

ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ் செய்து கொண்டு அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் சிரமப் பட்டுக் கோகுலத்திற்குச் சென்றார்கள்.

34—42. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன், பலராமனுடனும் கோபர்களுடனும் பிருந்தாவனத்திலிருந்து பசுக்களை மேய்த்துக்கொண்டு வெகு தூரஞ் சென்று கோபர்களை நோக்கி, "ஓ ஸ்தோக! கிருஷ்ண! அம்சுவே! ஸ்ரீதாம! ஸுபல! அர்ஜுன! விசால! விருஷப! ஓஜஸ்வியே! தேவப்ரஸ்த! வரூதப! இந்த மரங்களைப் பாருங்கள். காற்று, மழை, வெயில், பனி இவைகளைச் சகித்து, அண்டினவர்களுக்கு நிழலைக் கொடுத்துக் குடைபோல இருக்கின்றன; இவைகள் பிறருக்கு உபகாரஞ் செய்வதற்காகவே ஜீவிக்கின்றன. அவைகளுடைய பிறப்பானது சகல பிராணிகளுக்கும் உபகாரமாக இருக்கிறது; ஆச்சரியம். சாதுக்களுடைய கிருகத்திற்கு அதிதிகள் சென்றால் எப்படி அவர்களுடைய இஷ்டம் பூர்த்தியாகாம விருப்பதில்லையோ, அதுபோல் இவைகளை யடைந்தவர்கள் மன வருத்தத்துடன் திரும்புகிறதில்லை. இவைகள் இலைகளாலும், புஷ்பங்களாலும், பழங்களாலும், நிழல்களாலும், வேர்களாலும், மரவுரிகளாலும், கட்டைகளாலும், வாசனையுள்ள பிசின்களாலும், சாம்பல்களாலும், தளிர்களாலும் பிறருடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கின்றன. பிராணிகள் பணத்தாலும், பிராணனாலும், புத்தியாலும், வாக்கினாலும் பிறருக்கு க்ஷேமத்தை எப்பொழுதும் செய்துகொண்டிருப்பதே அவர்களுடைய ஜன்மத்தின் பலனாகிறது" என்று சொல்லிக்கொண்டு தளிர்கள்; பழங்கள், பூங்கொத்துகள், புஷ்பங்கள், இலைகள் ஆகிய

இலைகளின் பாரத்தால் வணங்கிய மரங்களின் நடுவில் போகும் வழியாக யமுனா நதிக்குச் சென்றார். அவ்விடத்தில் கோபர்கள் பசுக்களுக்கு யமுனையில் ஜலம் காட்டி (குளிர்ந்த ருசியுள்ள ஜலத்தைக் குடிக்கச் செய்து), தாங்களும் யமுனையின் ருசியுள்ள தீர்த்தத்தைப் பானஞ் செய்தார்கள். இப்படி யமுனையின் கரையில் பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கும் கோபர்கள் மிகவும் பசியுள்ளவர்களாகி ராமகிருஷ்ணர்களிடம் வந்து பின்வருமாறு சொன்னார்கள்.

## அத்தியாயம்—23

### தீக்ஷித பத்னிகளை அநுக்கிரகித்தது

1—2. கோபர்கள் யமுனையின் கரையில் உட்கார்ந்து பசியுள்ளவர்களாகி, ஜகத்திற்கு அதிபதிகளாகிய ராம கிருஷ்ணர்களை நோக்கி, "ஓ மிகுந்த பராக்கிரமமுள்ள ராம! ராம! துஷ்டர்களைச் சிட்சிக்கும் கிருஷ்ண! பசியால் நாங்கள் உபத்திரவிக்கப்படுகிறோம். அதை நிவர்த்திக்க வேண்டும்" என்று தெரிவித்துக்கொண்டார்கள்.

3—9. அதைக் கேட்டு ஜகதீசராகிய ஸ்ரீ கிருஷ்ணன் தம்மிடத்தில் பக்தியுள்ளவளாகிய பிராம்மண பத்தினியை அநுக்கிரகிக்க விரும்பி, கோபர்களை நோக்கி "இதோ சமீபத்தில் பிரம்மிஷ்டர்களான பிராம்மணர்கள் சுவர்க்கத்தை அடைவதற்காக ஆங்கிரசமென்ற ஸத்திரம் (யாகம்) செய்கிறார்கள். அவ்விடஞ் சென்று நாங்கள் வரச் சொன்னதாக அண்ணனின் பெயரையாவது என்னுடைய பெயரையாவது சொல்லி, அன்னங் கொடுக்கவேண்டுமென்று கேளுங்கள்" என்றார். அதைக் கேட்ட கோபர்கள் அவருடைய உத்தரவின்படி யாகசாலைக்குச் சென்று, அஞ்சலிசெய்து தண்டம்போல் பூமியில் விழுந்து, நமஸ்காரஞ் செய்து, "ஓ பிராம்மணர்களே! நாங்கள் ஸ்ரீ கிருஷ்ண ராமர்களுடைய உத்தரவினால் உங்களிடம் வந்திருக்கிறோம். உங்களுக்கு க்ஷேமமுண்டாகும். இந்த யாகசாலைக்குச் சமீபத்தில் ராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பசியுள்ளவர்களாக இருக்கிறார்கள். அதனால் ஆகாரத்தைப் புசிக்க விரும்புகிறார்கள். தர்மத்தை யறிந்தவர்களுக்குட் சிறந்தவர்களான வேதியர்களே! உங்களுக்குச் சிரத்தை

இருக்குமானால் அவர்களுக்காக அன்னத்தைக் கொடுங்கள். தீக்ஷை முதல் பசுவைக் கொல்லும் தினம் வரையிலும், ஸௌத்ராமணியிலும் தீக்ஷிதருடைய அன்னத்தைப் புசிக்கக்கூடாது. மற்ற காலத்தில் தோஷமில்லை" என்று யாசித்தார்கள்.

10—15. இம்மாதிரியான பகவானுடைய யோசனையைக் கேட்டும் அந்தப் பிராம்மணர்கள் கோபர்களுடைய வார்த்தையைக் கேட்காதவர்கள் போலவே இருந்தார்கள். அவர்கள் அற்பமான சுவர்க்கத்தை அடைவதற்காக மிகுந்த சிரமமுள்ள கர்மத்தை யநுஷ்டிப்பவர்கள்; மூடர்கள்; தங்களை ஞானிகளென்று நினைத்துக்கொண்டவர்கள்; மேலும் தேசம், காலம், சரு, புரோடாசம் முதலிய திரவியம், மந்திரம், தந்திரம், ரித்விக், அக்னி, தேவதை, யஜமானன், யாகம், தர்மம் ஆகிய இவைகள் எந்தப் பகவானுடைய சுருபமாக இருக்கின்றனவோ, அந்த பரப்பிரம்மமாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானை மனிதன் என்று நினைத்து, அவருடைய உண்மையான சுருபத்தை அவர்கள் அறியவில்லை. அவர்கள் சரீரத்தில் அபிமானமுள்ளவர்கள்; தாம் பிராம்மணர்கள் என்ற துரபிமானமுள்ளவர்கள்; ஆனதால் அவர்கள் கோபர்களுக்குக் கொடுக்கிறோம் என்றாவது, இல்லையென்றாவது பதில் சொல்லவில்லை. பின்பு கோபர்கள் ஆசையொழிந்தவர்களாகி, ராமகிருஷ்ணர்களிடம் வந்து தெரிவித்தார்கள். அதைக் கேட்ட பகவான் சிரித்துக்கொண்டு கோபர்களை நோக்கி, "நீங்கள் தீக்ஷிதர்களுடைய பத்தினிகளிருக்கும் சாலைக்குச் சென்று நான் பலராமனுடன் இவ்விடம் வந்திருப்பதைச் சொல்லுங்கள். அவர்களுக்கு என்னிடத்தில் பிரீதியுண்டு; அவர்களுடைய சரீரம் வீட்டில்

வசிக்கிறதேயொழிய அவர்களுடைய மனம் என்னிடத்திலேயே வசிக்கிறது. அவர்கள் மிகவும் அன்னத்தைக் கொடுப்பார்கள்" என்று திரும்பவும் போகச் சொன்னார். (காரியத்தில் நோக்கமுள்ளவன் ஒரு தடவை யாசித்துக் கிடைக்காவிடில் அதனால் மனவருத்தத்தை அடையக் கூடாது. யாசகர்கள் அவமானத்தை யடைவது சகஜமே என்ற உலக வழக்கத்தை இதன் மூலமாய்ப் பகவான் வெளியிட்டார்.)

16—24. பின்பு கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய உத்தரவின்படி பத்னிசாலைக்குச் சென்று, அவ்விடத்தில் அலங்கரித்த சரீரங்களுடன் உட்கார்ந்திருக்கும் பிராம்மண ஸ்திரீகளை நமஸ்கரித்து, வணக்கத்துடன் "பிராம்மண ஸ்திரீகளான உங்களுக்கு நமஸ்காரம். எங்களுடைய வார்த்தையைக் கேளுங்கள். இதற்குச் சமீபத்தில் சஞ்சரிக்கும் ஸ்ரீ கிருஷ்ணனால் உங்களிடம் அனுப்பப்பட்டு வந்தோம். ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடனும் கோபர்களுடனும் பசுக்களை மேய்த்துக்கொண்டு வெகு தூரம் வந்துவிட்டார். அதனால் அவரும் அவருடன் வந்தவர்களும் பசியுள்ளவர்களாக இருக்கிறார்கள். அன்னங் கொடுக்கவேண்டும்" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட அந்த ஸ்திரீகள் அந்தக் கிருஷ்ணனுடைய கதையை நினைத்துக்கொண்டு அவரைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பமுள்ளவர்களாக இருந்தவர்களானதால், ஸ்ரீ கிருஷ்ணன் வருகிறார் என்பதைக் கேட்டவுடன் மிகுந்த பரபரப்புள்ளவர்களாகி பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம் என்ற நான்கு வகையான ருசியுள்ள அன்னங்களைப் பாத்திரங்களில் எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் இருக்கும் இடத்தை நோக்கிப் புறப்பட்டார்

கள். அது சகல நதிகளும் சமுத்திரத்தை நோக்கிச் செல்வதுபோலிருந்தது. அப்பொழுது அவர்களுடைய புருஷர்களும், பிதாக்களும், சகோதரர்களும் யாகசாலையை விட்டுப் போகக்கூடாதென்று தடுத்தார்கள். அப்படியும் அவர்கள் அதனைக் கேட்காமல், உத்தம சுலோகராகிய பகவானிடத்தில் வெகு நாளாக மனதைச் செலுத்தினவர்களாகையால் யமுனையின் கரைக்கு வந்து, அசோக மரங்களின் தளிர்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த வனத்தில் பலராமனுடனும் கோபர்களுடனும் சஞ்சரிக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் கருத்த தேகமுள்ளவராகவும், பீதாம்பரத்தைத் தரித்தவராகவும், வனமாலையாலும், மயில் தோகையாலும், தாதுக்களாலும், தளிர்களாலும் நடன்போல் வேஷத்தைத் தரித்தவராகவும், தோழனுடைய தோளில் கையை வைத்துக்கொண்டவராகவும், மற்றொரு கையால் தாமரை மலரைச் சுற்றிக் கொண்டும், காதுகளில் நீலோத்பலத்தை வைத்துக் கொண்டும், கன்னங்களில் தொங்கும் தலைமயிர்களுள்ள சிரித்த முகமுள்ளவராகவும் இருந்தார். அந்த ஸ்திரீகள் அநேகந் தடவை ஸ்ரீ கிருஷ்ணனுடைய குணங்களைக் கேட்டுக் கிருஷ்ணனிடத்தில் மனதைச் செலுத்தியவர்களாகையால் இப்பொழுது நேரில் பார்த்தும் கிருஷ்ணனை மனத்தில் வெகு காலம் தியானம் பண்ணியும் பாபத்தை நிவர்த்தித்துக்கொண்டார்கள். அது அகங்கார விருத்திகள் பிராஞ்ஞனிடத்தில் லயத்தை யடைவதுபோலிருந்தது.

25—29. இப்படி சகல ஆசைகளையும் ஒழித்துத் தம்மைத் தரிசிப்பதற்காக வந்திருந்த ஸ்திரீகளை நோக்கி எல்லாருடைய புத்திக்கும் சாட்சியாக இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் சிரித்த முகத்துடன், "ஓ மிகுந்த பாக்கிய

முன்னவர்களே! சுகமாக வந்தீர்களா? உட்காருங்கள். நாங்கள் உங்களுக்கு என்ன செய்யவேண்டும்? நம்மைப் பார்ப்பதற்காக நீங்கள் வந்தது யுக்தமானதேயாம். தன்னுடைய இதத்தை அறிந்த வித்வான்கள் எல்லாருக்கும் ஆத்மாவாகவும், பிரியருமாக இருக்கும் என்னிடத்தில் பலனை யுத்தேசியாமல் இடைவிடாது உண்மையாகப் பக்திசெய்கிறார்கள். பிராணன், புத்தி, மனது, தேகம், களத்திரம், குழந்தைகள், பணம் முதலியவைகள் எதற்காக மிக்கப் பிரியத்துடன் காப்பாற்றப்படுகின்றனவோ, அந்த ஆத்மாவைக் காட்டிலும் பிரியமான வஸ்து வேறு இருக்கிறதா? (ஆத்மாவாகிய என்னைத் தரிசிக்கவேண்டுமென்று நீங்கள் வந்தது யுக்தம்.) யாகசாலைக்கு நீங்கள் செல்லவேண்டும். உங்களுடைய பர்த்தாக்களான பிராம்மணர்கள் உங்களை வைத்துக்கொண்டு யாகங்களை முடித்துக்கொள்வார்கள்" என்றார்.

30—31. அதனைக் கேட்ட அந்தப் பிராம்மணஸ்திரீகள் பகவானை நோக்கி, "ஓ பிரபுவே! நாங்கள் சகல பந்துக்களையும் விட்டு உம்முடைய பாதத்தை அடைந்தோம். உம்முடைய பாதத்தால் தள்ளப்பட்ட துளஸிமாலையைச் சிரசால் வகித்துத் தாஸிகளாக இருக்கிறோம். அப்படியிருக்க நீர் இப்படிச் சொல்வது உசிதமல்ல; 'உம்மை அடைந்தவன் திரும்பமாட்டான்' என்று சொல்லும் வேத வாக்கியத்தை உண்மையாகச் செய்யும். ஓ! காமம் முதலிய சத்துருக்களை நாசஞ்செய்பவரே! நாங்கள் திரும்பிச் சென்றாலும் எங்களுடைய புருஷர்களாவது, பிதாக்களாவது, புத்திரர்களாவது, சகோதரர்களாவது, பந்துக்களாவது எங்களை அங்கீகரிக்கமாட்டார்கள். மற்றவர்கள் ஆதரிப்பார்களா? ஆனதால் உம்முடைய ஸன்னிக்ஷியில்

விழுந்தவர்களான எங்களுக்கு வேறு கதியில்லை. எங்களை வேலைக்காரிகளாக அங்கீகரிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள்.

32—35. அதனைக் கேட்ட பகவான் அவர்களை நோக்கி, "உங்களுடைய புருஷர்களாவது, பிதா, சகோதரர்கள் முதலியவர்களாவது உங்களிடத்தில் அருவைப்பட மாட்டார்கள். என்னுடைய உத்தரவினால் மற்ற ஜனங்களும் தேவர்களும் இதை அநுமோதிப்பார்கள். என்னுடைய பக்தர்களுக்கு சுகத்தையும், சிநேகத்தையும் விருத்திசெய்வது சரீர சம்பந்தமல்ல (என்னுடன் சேர்ந்திருப்பதால் அவை விருத்தியாகுமென்பதில்லை யென்று கருத்து.); மனத்தை என்னிடத்தில் எப்பொழுதும் செலுத்திக்கொண்டு சீக்கிரத்தில் என்னை அடைவீர்கள். என்னைத் தியானஞ்செய்வதாலும், என்னுடைய கதைகளைக் கேட்பதாலும், கதைகளைச் சொல்வதாலும் என்னிடம் பக்தியுண்டாவதுபோல் சமீபத்திலிருப்பதால் உண்டாகிறதில்லை. ஆனதால் வீட்டிற்குப் போகலாம்" என்றார். அதனைக் கேட்ட ஸ்திரீகள் யாகசாலைக்கு வந்தார்கள். அந்தப் பிராம்மணர்களும் அருவை யன்னியில் அந்த ஸ்திரீகளை வைத்துக்கொண்டு யாகத்தை முடித்தார்கள்.

36. அந்த ஸ்திரீகளுக்குள் ஒருவள் பகவானைத் தரிசிப்பதற்காகப் புறப்படும்பொழுது அவளுடைய பர்த்தா வெளியில் போகக்கூடாதென்று தடுத்தபடியால் அவள் பகவானிடம் வரமுடியாதவளாகி வீட்டிலேயே முன் கேள்விப்பட்டிருந்த பகவானுடைய ரூபத்தைத் தியானஞ் செய்து கர்மசரீரத்தை விட்டுவிட்டாள்.

37—38. ஸ்ரீ கிருஷ்ண பகவான் நான்கு வகையான அன்னத்தைக் கோபர்களுக்குக் கொடுத்து, தானும்

புசித்தார். இப்படி பகவான் விளையாட்டாக மனித வேஷங் கொண்டு லோகத்தை யநுசரித்துக் கோபர்களையும், கோப ஸ்திரீகளையும், பசுக்களையும் தம்முடைய ரூபத்தாலும், வாக்கினாலும், சேஷ்டையாலும் சந்தோஷிக்கச் செய்து கொண்டு விளையாடினார்.

39—53. பின்பு அந்தப் பிராம்மணர்கள், " ஜகத்பதி களான ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் யாசித்ததைக் கவனிக்காமல் அவர்களை மனிதர்களாக நினைத்து அலட்சியஞ் செய்து குற்றவாளிகளானோம். ஸ்திரீகளுக்குப் பகவானிடத்தில் ஏற்பட்ட பக்தி நமக்கு இல்லையே; நம்முடைய மூவகை யான ஜன்மங்கள், நம்முடைய வித்தை, பிரம்மசரியம் முதலிய விரதம், பல விஷயங்களை அறிந்திருப்பது, மேலான குலத்தில் பிறந்திருப்பது, கர்மங்களை அநுஷ்டிப்பதில் சாமர்த்தியம் ஆகிய இவைகள் யாவும் நிந்திக்கக்கூடியவை கள் (பயனற்றவையாயின வென்று கருத்து). பகவானை அலட்சியஞ் செய்தோமே. நாம் பிறருக்கு ஆசாரியர்களாக இருந்தும் நம்முடைய விஷயத்தில் தவறினோம். பகவா னுடைய மாயை யோகிகளையும் மோகிக்கச் செய்கிறது. ஜகத்குருவாகிய பகவானிடத்தில் ஸ்திரீகளுக்கு உண்டான மேலான பக்தியைப் பாருங்கள். அந்தப் பக்தியால் ஸம்ஸாரம் நிவர்த்திக்கப்படுகிறது. இவர்களுக்கு த்விஜாதிக் குரிய ஸம்ஸ்காரங்களில்லை. இவர்கள் குருகுலவாசம், சந்தியோபாசனம் முதலியவைகளைச் செய்யவில்லை. அப்படியிருந்தும் அவர்களுக்கு உத்தம சுலோகராகிய பகவானிடத்தில் திடமான பக்தி யிருக்கிறது. மேற்கண்டவைகளுள்ளவர்களானாலும் நமக்கு அந்தப் பக்தி யுண்டாகவில்லை. மேலும், சாதுக்களுக்கு அதிபதி யான பகவான் பணம், வீடு முதலியவைகளில் ஆசை

கொண்டவர்களும், தங்களுடைய க்ஷேமத்தில் தவறினவர்களுமான நமக்கு கோபர்களைக்கொண்டு ஞாபகப்படுத்தினார். கைவல்யம் முதலியவைகளுக்கு அதிபதியான ஸ்ரீ பகவானுக்கு நம்மால் ஆகவேண்டிய காரியமென்ன இருக்கிறது? பகவானுக்கு இது ஒரு லீலையே. லக்ஷ்மீதேவியும் சஞ்சல சுபாவத்தை விட்டு எவருடைய பாதத்தைச் சேவிக்க விரும்பி எவரை அடைகிறாளோ, அந்தப் பகவான் பிறரை யாசிக்கிறார் என்பது ஜனங்களை மோஹிக்கச் செய்கிறது. மேலும் தேசம், காலம், சரு, புரோடாசம் முதலிய திரவியங்கள், மந்திரம், தந்திரம், ரித்விக்குகள், அக்னிகள், தேவதை, யஜமானன், யாகம், அதனாலுண்டாகும் அபூர்வமென்ற தர்மம் ஆகிய இவைகள் எவருடைய சுரூபமாக இருக்கின்றனவோ, அப்படிப்பட்ட யோகேசுரர்களுக்கும் அதிபதியான ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் யது வம்சத்தில் அவதரித்திருப்பதாகக் கேள்விப்பட்டோமல்லவா? அப்படியும் அதனை மறந்துவிட்டோமே என்று பச்சாத்தாபத்தை அடைந்ததுமன்றி, தடையற்ற ஞானமுள்ள ஸ்ரீ கிருஷ்ணனாகிய உமக்கு நமஸ்காரம். உம்முடைய மாயையால் புத்தி மயங்கி, கர்ம மார்க்கத்தில் சுற்றிக்கொண்டிருக்கிறோம். அந்த மகா புருஷனுடைய மாயையால் மோஹித்து (மயங்கி), அவருடைய மகிமையை அறியாமல் குற்றஞ் செய்தோம். அதனால் அந்தப் பிழையை ஆதி புருஷனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் பொறுக்கவேண்டும்" என்று சொல்லித் தாங்கள் செய்த அபராதத்தை நினைத்து ஸ்ரீ கிருஷ்ணனை நேரில் தரிசிக்கவேண்டுமென்ற அபிப்பிராயம் கொண்டார்கள். ஆனாலும், ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்ப்பதற்காகச் சென்றால் கம்ஸன் என்ன செய்வானோ என்று ஸ்ரீ கிருஷ்ணன் இருக்குமிடத்திற்குப் போகவில்லை.

# அத்தியாயம்—24

## ஸ்ரீ கிருஷ்ணன் இந்திர யாகத்தைத் தடுத்தது

1—7. இப்படி பிராம்மணர்கள் கம்ஸனிடம் பயந்து தங்களுடைய ஆசிரமங்களில் இருந்துகொண்டே பகவானை உபாசித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனும் பலராமனுடன் கோகுலத்தில் வசித்தார். ஒரு சமயம் கோபர்கள் எல்லோரும் இந்திரனைப் பூஜிக்கவேண்டி அதற்குரிய யத்தனங்களைச் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது எல்லாருக்கும் ஆத்மாவும், எல்லாவற்றையும் அறிந்தவருமான ஸ்ரீ கிருஷ்ணன் அந்த விஷயத்தை அறிந்தவரானாலும், அறியாதவர் போல நந்தர் முதலிய பெரியோர்களை நோக்கி, மிகவும் வணக்கமாக "என்ன யாகஞ் செய்யப்போகிறீர்கள்? ஏன் இவ்வளவு பரபரப்பு? இந்த யாகம் எந்தப் பலனைக் கொடுக்கக்கூடியது? இதனால் எந்தத் தேவதை ஆராதிக்கப்படுகிறது? எதனால் இந்த யாகம் முடியக்கூடியது? இதில் உங்களுக்கு எப்படி அதிகாரம் ஏற்பட்டது? அன்னை! இதைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற மிக்க ஆவலுள்ளவனாக இருக்கிறேன்; சொல்லவேண்டும். மேலும், எல்லாரையும் தாமாகப் பாவித்தவர்களும், தன்னைச் சார்ந்தவன்,பிறர் என்ற பேதபுத்தியற்றவர்களும், மித்திரன், சத்ரு, உதாசீனன் என்ற எண்ணமில்லாதவர்களுமான சாதுக்கள் ஒன்றையும் ரகசியமாக வைத்துக் கொள்ளமாட்டார்கள்; பேதபுத்தியுள்ளவர்களானாலும், உதாசீனனைச் சத்ருபோலத் தள்ளிவிடவேண்டும் (கேட்காமலிருந்தால் சொல்லவேண்டியதில்லை). மித்திரனைத் தன்னுடைய ஆத்மாவாகப் பாவிக்கவேண்டும். ஜனங்களில் சிலர் மித்திரர்களுடன் யோசித்துக் கர்மங்களின் சுரூபத்

தைத் தெரிந்துகொண்டு செய்கிறார்கள். சிலர் யோசியாமலே செய்கிறார்கள். யோசித்துக் கர்மங்களை யனுஷ்டிக்கும் வித்வானுக்குப் பயன் கிடைப்பது போல் யோசியாமல் செய்யும் மூடனுக்குப் பயன் கிடைக்கிறதில்லை. ஆனதால் உங்களால் செய்யப்படப்போகிற யாகம் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டதா? அல்லது வழக்கமாகச் செய்துவரப்படுகிறதா? காரணத்துடன் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

8—11. அதனைக் கேட்ட நந்தர் கிருஷ்ணனை நோக்கி, "பகவானாகிய இந்திரனுக்கு மேகங்கள் பிரியமான சரீரங்கள்; அந்த மேகங்கள் பிராணிகளுக்குப் பிராணனை விருத்திசெய்யக்கூடிய ஜலத்தை வர்ஷிக்கின்றன. ஆனதால் மேகங்களுக்கு அதிபதியும், ஈசுவரனுமாகிய இந்திரனை நாமும் மற்றவர்களும் அவருடைய ரேதஸ்ஸால் (மழை ஜலத்தால்) விருத்தியான தான்யம் முதலியவைகளைக் கொண்டு பூசிப்பது வழக்கம். அந்த இந்திர யாகத்திற்கு உபயோகப்பட்டு எஞ்சியதைத் தர்மம், அர்த்தம், காமம் இவைகளுக்கு மனிதர்கள் உபயோகப்படுத்துகிறார்கள். புருஷப் பிரயத்தனமுள்ளவர்களுக்குப் பர்ஜன்யன் பலத்தைக் கொடுக்கிறார். (மழையில்லாவிடில் பயிர்கள் பலிக்காவென்று கருத்து.) இந்தத் தர்மமானது பரம்பரையாக நடந்துவருகிறது. காமத்தாலாவது, லோபம் முதலியவையாலாவது இந்தத் தர்மத்தைச் செய்யாமல் விடுத்தினால் அவனுக்கு க்ஷேமம் கிடைக்கிறதில்லை" என்று சொன்னார்.

12—30. இப்படி நந்தரும், மற்ற கோகுலவாசிகளும் சொல்வதைக் கேட்டு, கிருஷ்ணன் இந்திரனுக்குக்

கோபத்தை யுண்டுபண்ணுவதற்காக அவர்களை நோக்கி, "சகல பிராணிகளும் கர்மத்தாலுண்டாகின்றன; கர்மத்தாலேயே மரணமடைகின்றன. (ஜனனத்திற்கும், மரணத்திற்கும் கர்மமே காரணமாக இருக்கிறது.) சுகம், துக்கம், பயம், க்ஷேமம் ஆகிய இவைகளும் கர்மத்தாலேயே உண்டாகின்றன. (கர்மம் ஜடமல்லவா? அது எப்படிப் பலனைக் கொடுக்கும்? ஆனதால் கர்மத்திற்குப் பரதந்திரனாகிய ஈசுவரன் [தேவதை] பலத்தைக் கொடுக்கிறான் என்ற மதத்தை நிந்திக்கிறார்.) மற்ற ஜீவர்கள் செய்யும் கர்மத்திற்குப் பலனை ஈசுவரன் கொடுக்கிறானென்றாலும் அவரும் கர்மத்தைச் செய்பவனையே அடைகிறார். கர்மத்தைச் செய்யாதவனுக்கு அவர் பிரபுவாகிறதில்லை. ஆனதால் அவரவர்களுடைய கர்மத்திற்குத் தக்கபடி பலனை ஜனங்கள் அனுபவிக்கிறார்கள். ஆனதால் ஜனங்களுக்கு இந்திரனால் என்ன பிரயோஜனம்? மேலும் பிராணிகளுக்கு அவரவர்களுடைய சுபாவத்திற்குத் தக்கபடி ஏற்பட்டிருக்கும் சுபத்தையாவது, அசுபத்தையாவது இந்திரனால் மாற்ற முடியுமா? எல்லா ஜனங்களும் சுபாவத்திற்கு வசப்பட்டவர்களாகையால் அதனையே அனுசரித்திருக்கிறார்கள். தேவர்கள், மனிதர்கள் அடங்கிய இந்த ஜகத் முழுவதும் சுபாவத்திலேயே இருக்கிறது. ஆனதால் ஜீவன் கர்மத்தினால் பலவகையான சரீரத்தை யடைந்து, அவைகளை விட்டுவிடுகிறான். கர்மத்தாலேயே சத்துருவாகவும், மித்திரனாகவும், உதாசீனனாகவும் ஆகிறான். ஆனதால் கர்மமே மேலானது. அதுவே ஈசுவரன். ஆனதால் சுபாவத்திற்கு வசப்பட்டு, தனக்குரிய கர்மத்தைச் செய்பவன் கர்மத்தையே மேலானதென்று நினைக்கவேண்டும். எதை ஆச்ரயித்து ஜீவிக்கிறானோ, அதுவே அவனுக்குத் தெய்வம். ஒன்றை ஆச்

சிரயித்து ஜீவிப்பவன் அதனை விட்டு மற்றொன்றைப் பூஜிப்பானுகில் அவனுக்கு க்ஷேமம் கிடைக்கிறதில்லை. பரபுருஷனிடத்தில் ஆசையுள்ள வியபசாரிக்கு க்ஷேமம் கிடைக்குமா? பிராம்மணன் வேதத்தை அத்தியயனஞ் செய்வது முதலியவைகளால் ஜீவிக்கவேண்டும். க்ஷத்திரியன் பூமியைக் காப்பாற்றுவதால் ஜீவிக்கவேண்டும். வைசியன் வார்த்தை என்ற விருத்தியைச் செய்து ஜீவிக்கவேண்டும். சூத்திரன் மூன்று வர்ணங்களைச் சேவித்து ஜீவிக்கவேண்டும். வைசியனுடைய விருத்தியாகிய வார்த்தையென்பது பயிரிடுவது, மாடு மேய்ப்பது, வியாபாரஞ் செய்வது, வட்டி வாங்குவது ஆகிய நான்கு வகையுள்ளது. அவ்வகையில் நாம் பசுக்களைக்கொண்டு ஜீவிப்பவர்கள். இந்த ஜகத் உண்டாவதற்கும், க்ஷேமமாயிருப்பதற்கும், நாசமடைவதற்கும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் முறையே காரணங்களாக இருக்கின்றன. அவைகளில் ரஜோ குணத்தால் பலவகையான இந்த ஜகத்து உண்டாகிறது. ஆனதால் மேகங்களும் ரஜோகுணத்தால் உண்டாகி, ஜலத்தை எங்கும் வர்ஷிக்கின்றன. அந்த ஜலங்களால் சகல தானியங்களும் விருத்தியடைகின்றன. அவைகளை ஜனங்கள் உபயோகித்துக்கொள்ளுகிறார்கள். இந்திரன் எதைச் செய்யப் போகிறான்? நமக்குத் தேசமாவது, பட்டணமாவது, கிராமமாவது, வீடாவது இல்லை. நாம் காட்டிலேயே வசிப்பவர்கள். ஆனதால் காடுகளும், மலைகளும், நமக்கு வீடாகின்றன. ஆனதுபற்றிப் பசுக்களையும், பிராம்மணர்களையும், மலையையும் நாம் பூஜிக்கவேண்டும். இந்திரனுடைய யாகத்திற்காகச் சேர்க்கப்பட்ட சாமான்களைக் கொண்டு இந்த யாகத்தை முடிக்கவேண்டும். பாயசம் முதல் பருப்புவரையிலுள்ள பலவகையான பதார்த்தங்கள்

சமைக்கப்படட்டும், கோதுமை முதலியவைகளால் செய்யக்கூடிய பக்ஷ்யங்களும், அதிரசம், முறுக்கு முதலியவைகளும் செய்யப்படட்டும். வேதத்தை யறிந்தவர்களான பிராம்மணர்கள் அக்னியில் ஹோமஞ்செய்யட்டும். அவர்களுக்குப் பலவகையான அன்னங்களைக் கொடுத்து, போஜனம் செய்விக்கவேண்டும். பசுக்களைத் தட்சிணையாகக் கொடுங்கள். நாய், சண்டாளன், பதிதர்கள் முதலியவல்லோருக்கும் அவரவர்களுக்குத் தக்கபடி வஸ்துக்களைக் கொடுங்கள். மேலும் பசுக்களுக்குப் புற்களைக்கொடுங்கள். மலைக்குப் பலி போடுங்கள். பின்பு நீங்கள் நல்ல வஸ்திரம் முதலியவைகளால் அலங்கரித்துக்கொண்டு போஜனஞ் செய்துவிட்டு, பசுக்களையும், பிராம்மணர்களையும், அக்னியையும், பர்வதத்தையும் பிரதக்ஷிணம் செய்யுங்கள். இப்படிச் செய்வது யுக்தமென்று எனக்குத் தோன்றுகிறது. இந்த யாகமே எனக்கும், பசுக்களுக்கும், பிராம்மணர்களுக்கும் பிரீதிகரமானது" என்று சொன்னார்.

31—38. இப்படி காலசுரூபியாகிய பகவான் இந்திரனுடைய கர்வத்தை யடக்குவதற்காக நந்தன் முதலியவர்களை நோக்கிச் சொன்ன வார்த்தையைக் கேட்டு, அவர்கள் யுக்தமென்று அதை ஒப்புக்கொண்டார்கள். பின்னுமவர்கள் ஸ்ரீ கிருஷ்ணன் சொன்னபடி எல்லாவற்றையும் செய்து, அந்தச் சாமான்களைக்கொண்டு பிராம்மணர்களையும், மலையையும் பூஜித்து, ஸ்வஸ்திவாசனம் செய்வித்து மிகுந்த ஆதரவுடன் பசுக்களைக் கொடுத்து, பர்வதத்திற்குப் பலியையும் போட்டார்கள். பின்னுமவர்கள் பசுக்களை முன் நடத்திக்கொண்டு, பர்வதத்தைப் பிரதக்ஷிணஞ் செய்தார்கள். அப்பொழுது கோப ஸ்திரீகளும் பிராம்மணர்

களால் ஆசிர்வதிக்கப்பட்டு எருதுகள் கட்டிய வண்டியின் மீதேறி, ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதங்களைக் கானம் பண்ணிக்கொண்டு பர்வதத்தைச் சுற்றி வந்தார்கள். அந்தச் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணனும் கோபர்களுக்கு நம்பிக்கை யுண்டுபண்ணுவதற்காகப் பெரிதான வேறு சுரூபத்தை எடுத்துக்கொண்டு, 'நான் பர்வதம்' என்று சொல்லிக் கொண்டு பர்வதத்திற்கு என்று போடப்பட்ட பலியைப் புசித்தார். பிறகு கோபர்கள் பர்வதத்தை நமஸ்கரிக்கும் பொழுது தாமும், "ஓ கோபர்களே! பாருங்கள். இந்த மலையானது தன்னுடைய சுரூபத்துடன் நமக்கு அநுக்ரகத் தைச் செய்தது. இது தனது இஷ்டப்படி ரூபத்தை எடுத்துக்கொள்ளச் சக்தியுள்ளது. இதனை யார் அலட்சியம் செய்கிறார்களோ, அவர்களை இந்த மலையானது புலி, சிங்கம் முதலிய துஷ்ட மிருகங்களாக இருந்து கொல்லுகிறது. ஆனதால் நமக்கும், பசுக்களுக்கும் க்ஷேமம் உண்டாவதற் காக இதற்கு நமஸ்காரம் செய்வோம்" என்று சொல்லிக் கொண்டு நமஸ்காரம் செய்தார். இப்படி கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ணனால் தூண்டப்பட்டு, பர்வதத்திற்கும், பசுக்களுக் கும், பிராம்மணர்களுக்கும் பூஜை செய்து, ஸ்ரீ கிருஷ்ண னுடன் கோகுலஞ் சென்றார்கள்.

## அத்தியாயம்—25

## ஸ்ரீ கிருஷ்ணன் கோவர்த்தன மலையைத் தூக்கினது

1—7. பரீக்ஷித்து மகாராஜனே! இந்திரன், 'கோபர்களால் தனக்குச் செய்யப்படும் பூஜையை ஸ்ரீ கிருஷ்ணன் தடுத்துவிட்டார்' என்பதைத் தெரிந்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ணனையே தெய்வமாகக்கொண்ட கோபர்களிடத்தில் கோபங்கொண்டான். மேலுமவன் தன்னையே மூன்று லோகத்திற்கும் அதிபதியென்று நினைத்துக்கொண்டு, ஸம்வர்த்தம் என்ற பெயருள்ள மேகங்களுடைய கணத்தை (கூட்டம்) வரவழைத்து மழை பெய்யும்படி தூண்டியதுமன்றி, "வனவாசிகளான கோபர்களுக்கு எவ்வளவு தன கர்வமிருக்கிறது. ஆச்சரியம்! மனிதனாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய வார்த்தையைக் கேட்டு, தேவனாகிய என்னை அலட்சியஞ் செய்தார்கள். ஆத்மவிசாரஞ் செய்யாமல் கர்மங்களைச் செய்து, அவைகளாகிய ஓடத்தால் ஸம்ஸார சமுத்திரத்தைத் தாண்ட விரும்பிய மூடர்களைப் போல மனிதனாகிய ஸ்ரீ கிருஷ்ணனை ஆச்ரயித்துக் கோபர்கள் எனக்கு அபராதஞ் செய்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனோ சிறுவன்; அதிகமாகப் பேசக்கூடியவன்; வணக்கமில்லாதவன்; தன்னைப் பண்டிதன் என்று நினைத்துக்கொண்டவன்; கோபர்களோ பணத்தால் கர்வங்கொண்டவர்கள்; மதித்தவர்கள்; பருத்த சரீரமுள்ளவர்கள்; அவர்களுடைய பணக்கொழுப்பை நீங்கள் போக்கடியுங்கள். பசுக்களை நாசஞ் செய்யுங்கள். நானும் ஐராவதத்தின் மீதேறிக்கொண்டு தேவர்களுடன் நந்தகோகுலத்தை நாசஞ் செய்வதற்காக உங்கள்பின் வருகிறேன்" என்று சொன்னான்.

8—14. இம்மாதிரி இந்திரனால் உத்தரவு செய்து கட்டியிருந்து அவிழ்த்துவிடப்பட்டவையான மேகங்கள் மழையைப் பெய்து, கோகுலத்தை உபத்திரவித்தன. அவைகள் மின்னல்களால் பிரகாசித்தன; இடிகளால் சப்தித்தன; கடுமையான காற்றுக் கூட்டங்களால் தூண்டப்பட்டு ஜலமாகிய கற்களை (ஆலங்கட்டி) வர்ஷித்தன; இப்படி மேகங்கள் தூண்களைப்போலப் பெரிதாகிய தாரைகளுடன் இடைவிடாது மழை பெய்யும்பொழுது பூமி முழுவதும் ஜலத்தால் மறைக்கப்பட்டு, மேடுபள்ளம் தெரியாதிருந்தது. அப்பொழுது அதிக மழையாலும், அதிகக் காற்றினாலும் நடுக்கமடைந்து, கோபர்களும் கோபஸ்திரீகளும் குளிரால் வருத்தமடைந்து ஸ்ரீ கிருஷ்ணனைச் சரணமடைந்தார்கள். பசுக்களும் மழையால் உபத்திரவமடைந்து தங்கள் தலைகளையும், கன்றுகளையும் சரீரத்தால் மறைத்துக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதத்தை யடைந்தன. "ஓ கிருஷ்ண! பக்தர்களிடத்தில் ப்ரீதியுள்ளவரே! நம்மிடத்தில் கோபங்கொண்டு இந்திரன் மழை பெய்யச் செய்திருப்பதால் உம்மையே நாதனாகக்கொண்ட கோகுலத்தை நீர் காப்பாற்றவேண்டும்" என்று கோபர்களும் ப்ரார்த்தித்தார்கள்.

15—23. அதனைக் கேட்ட பகவான் கல் மழையால் அடிபட்டுப் ப்ரஜ்ஞையில்லாமலிருக்கும் கோகுலத்தைப் பார்த்து, இது இந்திரன் செய்த காரியம்; இந்திரனுடைய யாகத்தை நாம் கெடுத்துவிட்டபடியால் அவன் கோபங்கொண்டு அகாலத்தில் மிகுந்த காற்றுடன் கல் மழை பெய்யச் செய்து கோகுலத்தை நாசஞ் செய்கிறான். இதற்குத் தகுந்ததை என்னுடைய மகிமையால் நான்

செய்வேன். தான் ஒரு லோகத்திற்கு அதிபதியென்ற அகங்காரங்கொண்ட மூடனாகிய இந்திரனுடைய கர்வத்தைப் போக்கடிக்கிறேன். ஸத்வகுணமுள்ள தேவர்களுக்குத் தாங்கள் லோகாதிபதிகள் என்ற கர்வம் உண்டாகிறதில்லை. மேலும், அஸத்துக்களுடைய அகங்காரத்தை நிவர்த்திப்பதும் அவர்களுக்கு அநுக்ரகமாக ஆகிறது. ஆனதால் என்னையே சரணமடைந்ததும், என்னையே நாதனாகக்கொண்டதும், என்னால் அங்கீகரிக்கப்பட்டதுமான கோகுலத்தை என்னுடைய மகிமையால் காப்பாற்றுகிறேன். இதுவே என்னுடைய விரதம் என்று சொல்லிக் கோவர்த்தன பர்வதத்தை ஒரு கையால் தூக்கிக் குழந்தைகள் நாய்க்குடையை எடுத்துக் குடையாகப் பிடித்தாற்போல விளையாட்டாய்க் குடையாகப் பிடித்தார். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் கோபர்களை நோக்கி, 'ஓ அம்ம, ஓ அண்ண, ஓ கோகுலத்தில் வசிப்பவர்களே! பசுக்களுடன் இந்த மலையின் பள்ளத்தில் சுகமாக வசியுங்கள். என்னுடைய கையிலிருக்கும் மலை விழுமோவென்று நீங்கள் கவலைப்படவேண்டாம். காற்றுக்கும், மழைக்கும் பயப்படவேண்டாம். அதற்குரிய உபாயஞ் செய்திருக்கிறேன்" என்றார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனால் சமாதானஞ் செய்யப்பட்ட கோபர்கள் தங்கள் குழந்தைகளுடனும், வேலைக்காரர்களுடனும், சாமான்களுடனும் நெருக்கமில்லாமல் சுகமாக அந்தப் பள்ளத்தில் வசித்தார்கள். மேலும், ஸ்ரீ கிருஷ்ணனையே பார்த்துக்கொண்டிருந்த அவர்களுக்குப் பசி, தாகம் இவைகளாலுண்டாகும் வருத்தமாவது, சுகத்தில் விருப்பமாவது உண்டாகவில்லை. இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக்கொண்டு ஏழு நாள் வைத்த அடி மாறாமல் நின்றார்.

24—33. பின்பு இந்திரன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய யோக மகிமையைப் பார்த்து அதிக ஆச்சரியமடைந்து கர்வமற்றவனாகித் தனது எண்ணம் பூர்த்தியாகாமல் தானாக மழையை நிறுத்தினன். ஆகாயம் மேகங்களால் மறைக்கப்படாமல் சுத்தமாயிற்று. சூரியன் பிரகாசித்தார். கடுமையான காற்றும் மழையும் அடங்கின. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் கோபர்களை நோக்கி, "காற்றும் மழையும் அடங்கின. நதிகளில் பெரும்பாலும் ஜலம் வற்றிப் போயின. நீங்கள் பயமற்று ஸ்திரீகளுடனும், குழந்தைகளுடனும், சாமான்களுடனும் வெளியில் வரலாம்" என்றார். அதனைக் கேட்ட கோபர்கள் தங்கள் தங்கள் பசுக்களை ஓட்டிக்கொண்டு, ஸ்திரீகளையும், குழந்தைகளையும், வயது முதிர்ந்தவர்களையும் அழைத்துக்கொண்டு சாமான்களை வண்டியிலேற்றிக்கொண்டு வெளியில் வந்தார்கள். பிரபுவாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானும் எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது விளையாட்டாக அந்த மலையை முன்னிருந்த இடத்தில் வைத்தார். அதனைக் கண்ட கோகுலவாசிகளெல்லோரும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து, அவரவர்கள் யோக்கியதைக்குத் தக்கபடி ஆலிங்கனஞ் செய்துகொள்வது, அஞ்சலி செய்வது முதலியவைகளால் பூஜித்தார்கள். கோபஸ்திரீகளும் தயிர், அக்ஷதங்கள், ஜலம் ஆகிய இவைகளால் பூஜித்து ஆசீர்வதித்தார்கள். யசோதை, ரோஹிணி தேவி, நந்தர், பலிஷ்டரான பலராமன் ஆகிய இவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனைத் தழுவி அவரிடத்திலிருக்கும் பிரீதியால் பயந்து (குழந்தைக்குக் கெடுதி சேராமலிருக்கவேண்டுமே என்று பயந்து) ஆசீர்வாதஞ் செய்தார்கள். ஆகாயத்திலுள்ள தேவ கணங்கள், ஸாத்யர்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், சாரணர்கள் ஆகிய இவர்கள்

14

ஸ்தோத்திரஞ் செய்தார்கள்; புஷ்பங்களை வர்ஷித்தார்கள். தேவர்களால் தூண்டப்பட்டு, சங்கம் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன. தும்புரு முதலிய சிறந்த கந்தர்வர்கள் கானஞ் செய்தார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் கோவர்த்தன மலையிலிருந்து பலராமனுடன் கோகுலத்திற்கு வந்தார். கோபர்களும் அவரிடத்தில் மிகுந்த பிரியத்துடன் அவர் பின் சென்றார்கள். கோப ஸ்திரீகளும் தங்களுக்கு மிக்க இஷ்டமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதங்களைச் சொல்லிக்கொண்டு சந்தோஷமாகச் சென்றார்கள்.

## அத்தியாயம்—26

### ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை நந்தர் சொல்லியது

1—14. *கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை அறியாதவர்களானதால் கோவர்த்தனத்தைத் தூக்கியது முதலிய அற்புதமான செய்கைகளைப் பார்த்து ஆச்சரிய மடைந்து நந்தரை நோக்கி, " இந்தக் குழந்தையின் செய்கைகள் அற்புதங்களாக இருக்கின்றன. இவன் கிராமியர்களான நம்மிடத்தில் ஜனிப்பதற்கு நியாயமில்லையே. ஒரு பெரிதான யானை தாமரை மலரைத் தூக்கினாற்போல ஏழு வயதுள்ள இந்தச் சிறுவன் விளையாட்டாக ஒரு கையால் பெரிதான மலையை எப்படித் தூக்கிப்பிடித்தான்! மேலும், காலத்தால் வயது அபகரிக்கப்படுவதுபோல இவன் குழந்தையாக இருக்கும்போது கண்களை மூடிக் கொண்டு மிக்க பலமுள்ள பூதனையின் பிராணனைப் பால் குடிக்கிற வியாஜமாக அபகரித்தான். பின்னும் இவன் மூன்று மாதக் குழந்தையாக இருக்கும்பொழுது வண்டியின் கீழே படுத்திருந்தான். காலைத் தூக்கி உதைத்தான். நுனிக்காலால் அடிபட்டு அந்த வண்டி உடைந்து தலை கீழாக மாறி விழுந்தது. இவன் ஒரு வயதுக் குழந்தையாக இருக்கும்பொழுது திருணாவர்த்தனென்ற அசுரன் இவனைத் தூக்கிக்கொண்டு ஆகாயஞ் சென்றான். அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அவனைக் கொன்றான். ஒரு நாள் வெண்ணெய் திருடியதற்காக யசோதை இவனை உரலுடன் சேர்த்துக் கட்டினாள். அத்துடன் மருத மரங்களுக்கு நடுவில் சென்று அவைகளையும் தள்ளினான். பின்னொரு*

சமயம் பலராமனுடனும், கோப குமாரர்களுடனும் வனத்தில் பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கும்பொழுது இவனைக் கொல்வதற்காக வந்த பகனென்ற அசுரனைக் கிழித்துக் கொன்ருன். இன்னும் கழுதை யுருவங்கொண்ட அசுரனையும், அவனுடைய பந்துக்களையும் கொன்று பனங் காட்டில் எல்லோருஞ் சென்று அதிலிருக்கும் பக்குவமான பழங்களைப் புசிக்கும்படி செய்தான். பின்னும் இவன் பலசாலியான பலராமனைக்கொண்டு பிரலம்பனென்ற அசுரனைக் கொன்ருன். கோபர்களுக்கும் பசுக்களுக்கும் சேர்ந்த காட்டுத் தீயின் விபத்தை நிவர்த்தித்தான். கொடிய விஷ வேகமுள்ள காளிய சர்ப்பத்தின் கர்வத்தை அடக்கி, யமுனையின் மடுவிலிருந்து அதைத் துரத்தி, அந்த ஜலத்தை விஷமற்றதாகச் செய்தான். ஓ நந்த! உன்னுடைய புத்திரனுகிய இவனிடத்தில் எங்களெல்லாருக்கும் அதிகப் பிரியமிருக்கிறது. அது விடமுடியாதது (மாருதது என்று தாத்பரியம்). இது இவனுக்கு இயற்கையானதா? என்ன, ஏழு வயதுச் சிறுவனுல் பெரிதான மலையைத் தூக்க முடியுமா? ஓ கோகுலத்திற்கு அதிபதியே! உம்முடைய குழந்தையைப்பற்றி எங்களுக்குச் சந்தேகமிருக்கிறது" என்ருர்கள்.

15—23. அதனைக் கேட்ட நந்தர் அவர்களை நோக்கி, "ஓ கோபர்களே! என் குழந்தையைப்பற்றி நீங்கள் சந்தேகப்படவேண்டாம். இந்தக் குமாரனைப்பற்றி கர்க்காசாரியர் எதனைச் சொன்னுரோ, அதைச் சொல்லுகிறேன், கேளுங்கள். எப்படியென்ருல், "இவர் ஒவ்வொரு யுகத்திலும் பூமியில் அவதரிக்கிருர். இவருக்கு சுக்லம், ரக்தம், பீதம் என்று சென்ற மூன்று

யுகங்களிலும் வர்ணம் ஏற்பட்டிருந்தது. இந்த யுகத்தில் ஸ்ரீகிருஷ்ணனாக ஆகியிருக்கிறார். உன்னுடைய குழந்தையாக இருக்கும் இவர் முன்னொருகால் வசுதேவருக்குப் பிறந்தார். அதனால் அதன் உண்மையை அறிந்தவர்கள் இவரை வாசுதேவரென்றுஞ் சொல்லுகிறார்கள். உன்னுடைய புத்திரனுக்கு அவருடைய குணங்களுக்கும், சரிதங்களுக்கும் தக்கபடி அநேக நாமதேயங்களும் ரூபங்களும் இருக்கின்றன. இவைகள் எனக்குத் தெரியுமேயல்லாமல் பிறருக்குத் தெரியாது. இவர் உங்களுக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணுவார். கோபர்களையும் கோகுலத்தையும் சந்தோஷிக்கச் செய்வார். இவரைக் கொண்டு நீங்கள் வெகு ஆபத்தைத் தாண்டுவீர்கள். ஓ கோகுலத்திற்கு அதிபதியான நந்த! முன்னொருகால் அரசனில்லாத தேசத்தில் சாதுக்கள் திருடர்களால் உபத்திரவிக்கப்பட்டிருந்தார்கள். இவருடைய சகாயத்தால் அந்த சாதுக்கள் திருடர்களை ஜயித்தார்கள். விஷ்ணுவைச் சார்ந்தவர்களை எப்படி அசுரர்கள் உபத்திரவிக்கமாட்டார்களோ, அப்படியிருந்த அதிருஷ்டமுள்ள இவரிடத்தில் பக்திசெய்பவர்களை (பிரீதி வைப்பவர்களைச்) சத்துருக்கள் உபத்திரவிக்கமாட்டார்கள் (சத்துரு பயமில்லையென்று கருத்து). ஆனதால் இந்தக் குமாரன் குணத்திலும், கீர்த்தியிலும், சாந்தியிலும், மாகாத்மியத்திலும் நாராயணருக்கு ஒப்பானவன்; இவருடைய செய்கையைப்பற்றி ஆச்சரியப்படவேண்டியதில்லை" என்று கர்க்காசாரியர் எனக்குச் சொல்லித் தமது இருப்பிடஞ் சென்றார். அதுமுதல் அசாத்தியமானவைகளை விளையாட்டாகச் செய்யும் ஸ்ரீ கிருஷ்ணனை நாராயணனுடைய அம்சமென்றே நினைத்திருக்கிறேன்" என்று சொன்னார்.

24—25. அதனைக் கேட்ட கோபர்கள் மிகவும் சந்தோஷமடைந்து ஆச்சரியமற்றவர்களாகி நந்தனையும் ஸ்ரீகிருஷ்ணனையும் பூஜித்தார்கள். இப்படி மகேந்திரனுடைய யாகத்தை ஸ்ரீ கிருஷ்ணன் தடுத்ததால் இந்திரன் கோபங் கொண்டு இடி முழக்கத்துடனும் மிகுந்த காற்றுடனும் அதிக மழை பெய்யச் செய்தான். அதனால் பசுக்களும், பாலர்களும், ஸ்திரீகளும் சிரமப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனைச் சரணமடைந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ பகவான் சிரித்துக் கொண்டு குழந்தை வடிவங்கொண்டவரானாலும் ஒரு கையால் கோவர்த்தன மலையை விளையாட்டாக நாய்க் குடையைத் தூக்குவதுபோலக் குடையாகப் பிடித்து, கோகுலத்தைச் சம்ரட்சித்தார். அதனால் இந்திரனுடைய மதம் குறைந்தது. அந்தப் பசுக்களுக்கு அதிபதியான பகவான் நம்மிடத்தில் சந்தோஷத்தை யடையட்டும்.

# அத்தியாயம்—27

## பகவானுடைய கோவிந்த பட்டாபிஷேகம்

1—13. இப்படிக் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் கோகுலத்தைப் பகவான் காப்பாற்றிய பின் கோலோகத்திலிருந்து காமதேனுவும், இந்திரனும் பூமிக்கு வந்து ரகஸியத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்தார்கள். அப்பொழுது இந்திரன் பகவானிடத்தில் அபராதஞ் செய்தவனானதால் வெட்கமடைந்து சூரியன் போலப் பிரகாசிக்கும் கிரீடம் படும்படி மிகுந்த தேஜஸுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுடைய இரண்டு பாதங்களில் நமஸ்கரித்தான். மேலும் அவருடைய மாகாத்மியத்தைக் கேட்டும் நேரில் பார்த்துமிருப்பதால் தான் மூவுலகங்களுக்கும் அதிபதியென்ற மதமற்றவனாகி, கைகளைக் கூப்பிக்கொண்டு, "உம்முடைய சுரூபம் சுத்த ஸத்வமுள்ளது ஒரே வகையானது; விசேஷ ஞானமுள்ளது; (எல்லாவற்றையும் அறிந்ததென்று கருத்து); ரஜஸ், தமஸ் ஆகிய இவைகளின் சம்பந்தமற்றது; அப்படிப்பட்ட உமக்கு மாயையின் காரியமாகிய ஸம்ஸார சம்பந்தமில்லை; ஸம்ஸார சம்பந்தம் அஞ்ஞானத்தால் உண்டாகக்கூடியது. (ஸர்வஞ்ஞராகிய உமக்கு அஞ்ஞானத்தாலுண்டாகும் ஸம்ஸாரமில்லையென்று தாத்பரியம்.) ஓ ஈச! உமக்கு அஞ்ஞானம், சரீர சம்பந்தம் ஆகிய இவைகளில்லை. அப்படியிருக்க, தேக சம்பந்தத்தாலுண்டாகும் லோபம் முதலியவைகள் உமக்கில்லையென்பதில்லை யென்பதில் என்ன சந்தேகம்! அவைகள் மற்றொரு சரீரத்திற்குக் காரணங்களாக

இருப்பவைகள்; அப்படிப்பட்ட கோபம், லோபம் முதலிய கெட்ட குணங்கள் உம்மிடத்திலில்லாமலிருந்தாலும், துஷ்டர்களைச் சிட்சித்துத் தர்மத்தை காப்பாற்றுவதற்காக நீர் அகங்காரிகளைத் தண்டிக்கிறீர். மேலும், நீர் இந்த லோகத்திற்குப் பிதாவாக இருப்பவர்; இதத்தை உபதேசிப்பவர்; அதிபதியாக இருப்பவர்; தான் லோகாதிபதி யென்று அகங்காரமுள்ளவர்களுடைய துரபிமானத்தைப் போக்கடிப்பதற்காக இஷ்டப்படி விளையாட்டாக அவதரித்து விளையாடுகிறீர். நீர் காலசுரூபியாகையால், உம்மை ஜயிக்க ஒருவராலும் முடியாது. மிகுந்த மழை பெய்யும் காலத்திலும் பயப்படாமலிருந்த உம்மைப் பார்த்து மூடனும், லோகாதிபதியென்ற கர்வமுள்ளவனுமான என்னைப்போன்றவர்கள் கர்வத்தை விட்டுப் பெரியோர்களால் அடையக்கூடிய பக்தி மார்க்கத்தை அடைகிறார்கள். ஆனதால் உம்முடைய விளையாட்டே மூடர்களுக்குச் சிட்சையாக ஆகிறது. ஓ ஈச! உம்முடைய மகிமையை அறியாதவனும், ஐசுவரிய மதத்தில் மூழ்கினவனும், மூடனுமாகிய நான் உமக்கு அபராதம் செய்தேன். அதனை நீர் பொறுக்கவேண்டும். இம்மாதிரியான கெட்ட புத்தி இனி எனக்கு உண்டாகாமலிருக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும். பூமிக்குச் சுமையாக இருக்கும் துஷ்டர்களான அசுரர்களைக் கொல்வதற்காகவும், உம்முடைய பாதங்களைச் சேவிப்பவர்களைக் காப்பாற்றுவதற்காகவும் நீர் பூமியில் அவதரித்தவரல்லவா! ஆனதால் நான் அதிக அபராதம் செய்திருந்தாலும் அதனைப் பொறுக்கவேண்டும். சகலப் பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக வசிப்பவரும், காலதேசங்களால் அளவிடக்கூடாதவரும், எல்லாவற்றிற்கும் வாசஸ்தலமும், யாதவர்களுக்கு அதிபதியாயும் தமது

இஷ்டப்படி சரீரத்தை எடுத்துக்கொண்டவரும், சுத்தமான ஞானசுரூபியும், சகல சுரூபியும், சகலத்திற்கும் காரணரும், சகல பூதசுரூபியுமான் உமக்கு நமஸ்காரம். ஓ பகவன்! என்னை உத்தேசித்துக் கோபர்களால் செய்யப் படும் யாகத்தை நீர் தடுத்ததால் நான் மிகவுங் கோபங் கொண்டு, காற்றையும் மழையையும் உண்டுபண்ணிக் கோகுலத்தை நாசஞ்செய்ய முயன்றேன். ஓ ஈச! என்னுடைய முயற்சியையும், மதத்தையும் நீர் நாசஞ் செய்ததால் அனுக்கிரகிக்கப்பட்டவனாக ஆகின்றேன். இப்பொழுது உம்மை ஈசுவரனாகவும், குருவாகவும். ஆத்மாவாகவும் நினைத்துச் சரணமடைந்தேன்" என்று பிரார்த்தித்தான்.

14—17. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான், "ஓ மகேந்திர! நீ இந்திர பதத்தை யடைந்து, ஐசுவரிய மதமுள்ளவனாகி, என்னை நினைக்காமலிருந்ததனால் உனக்கு அனுக்கிரகம் செய்வதற்காகவே யாகத்தைத் தடுத்தேன். ஐசுவரிய மதமுள்ளவன் என்னை நினைக்கிறதேயில்லை. ஆனதால் எவனை அனுக்கிரகிக்க விரும்புகிறேனோ, அவனுடைய சம்பத்தை அபகரிப்பேன்; ஆனதால் நீ சுவர்க்கத்துக்குப் போகலாம். என்னுடைய உத்தரவினால் முன்போல் உன்னுடைய அதிகாரத்தை நடத்திவரலாம். உனக்கு க்ஷேமமுண்டாகும்" என்று சிரித்துக்கொண்டு மேகம் கர்ஜிப்பதுபோல உரக்கச் சொன்னார்.

18—28. பிறகு காமதேனுவானது தன்னுடைய சந்ததியாகிய பசுக்களுடன் கோப வேஷங் கொண்ட பகவானுடைய சமீபம் வந்து, "ஓ கிருஷ்ண! கிருஷ்ண!

மகாயோகியே! ஜகத் சுரூபியே! ஜகத்தை நடத்துபவரே! எல்லா லோகத்திற்கும் அதிபதியான உம்மால் காப்பாற்றப் பட்டு நாங்கள் நாதனுள்ளவர்களாக இருக்கிறோம். (இந்திரன் பசுக்களைக் கொல்ல முயன்றாலும் உம்மால் காப்பாற்றப்பட்டோம்.) எங்களுக்கு நீர்தான் முக்கிய தெய்வம். நீரே இந்திரன்; ஓ ஜகத்திற்கு அதிபதியே! பசுக் களுக்கும், பிராம்மணர்களுக்கும், தேவர்களுக்கும், சாதுக் களுக்கும் க்ஷேமத்தைச் செய்வதற்காக நீர் இந்திரனாக இருக்கவேண்டும். பூமியின் பாரத்தை நிவர்த்திப்பதற் காகப் பூமியில் அவதரித்திருக்கிறீர்; பிரம்ம தேவரால் தூண்டப்பட்டு இவ்விடம் வந்திருக்கும் நாங்கள் உம்மை இந்திரனாக அபிஷேகம் செய்யப்போகிறோம்" என்று சொல்லி, அந்தக் காமதேனு தன்னுடைய பாலினால் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அபிஷேகஞ் செய்தாள். அப்பொழுது இந்திரனும் தேவ மாதாக்களால் தூண்டப்பட்டு, தேவர் களுடன் ஐராவதத்தால் ஆகாய கங்கையிலிருந்து கொண்டு வரப்பட்ட தீர்த்தத்தால் பகவானுக்கு அபிஷேகஞ் செய்தான். கோவிந்தனென்றும் பகவானுக்குப் பெயரிட்டான் (பசுக்களுக்கு அதிபதி). அப்பொழுது தும்புரு, நாரதர் முதலியவர்களும், கந்தர்வர்களும், வித்தியாதரர்களும், சித்தர்களும், சாரணர்களும் ஜனங் களுடைய பாபத்தை நிவர்த்திக்கும் பகவானுடைய சரிதத் தைக் கானஞ் செய்தார்கள். தேவ ஸ்திரீகள் சந்தோஷமாக நர்த்தனஞ் செய்தார்கள். சிறந்த தேவர்கள் தோத்திரஞ் செய்தார்கள்; புஷ்பமாரி பெய்தார்கள். மூவுலகங்களும் மிகுந்த சுகத்தை யடைந்தன. பசுக்கள் பாலால் பூமியை நனைத்தன; நதிகள் பால் முதலிய பிரவாகமுள்ளவைகளாக இருந்தன. மரங்கள் தேனைப் பெருகவிட்டன. நெல்

முதலியவை உழாமல் விளைந்துப் பலித்தன. மலைகளில் ரத்தினங்கள் பிரகாசித்தன. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அபிஷேகஞ் செய்தவுடன் இயற்கையில் கொடியவை களான மிருகங்களும் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல் இருந்தன. இப்படி மகேந்திரன் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு (பசுக்களுக்கதிபதியாக) அபிஷேகஞ் செய்து கோவிந்த னென்ற பெயரைக் கொடுத்து, பகவானிடம் விடை பெற்று, தேவதை முதலியவர்களுடன் சுவர்க்க லோகஞ் சென்றான்.

## அத்தியாயம்—28

## வருணலோகஞ் சென்ற நந்தரை ஸ்ரீ கிருஷ்ணன் திருப்பிக் கொண்டுவந்தது

1—8. ஒரு நாள் நந்தர் ஏகாதசி தினத்தில் உபவாச மிருந்து ஸ்ரீமந் நாராயணனைப் பூஜித்து, மறுநாள் துவாதசி தினத்தில் ஸ்நானஞ் செய்வதற்காக யமுனா தீரம் சென்று, அருணோதயத்திற்கு முந்தி அசுரர்களுடைய காலத்தில் இது அசுரர்களுடைய காலமென்று அறியாமல் ஜலத்தில் இறங்கினார். அப்பொழுது ஒரு அசுரன் சமயத்தை யறியாமல் ஜலத்தில் இறங்கிய நந்தரைத் தூக்கிக்கொண்டு வருணனுடைய சமீபஞ் சென்றான். பின்பு ஸ்நானத்திற் காக ஜலத்திலிறங்கிய நந்தரைக் காணாமல் கோபிகைகள், "ஓ கிருஷ்ணா! ஓ ராம!" என்று கதறினார்கள். அதைக் கேட்ட பகவான், தம்முடைய பிதா வருணனிடமிருப்ப தாகத் தெரிந்துகொண்டு, தன்னுடைய பந்துக்களைப் பயப் படவேண்டாமென்று சமாதானஞ் செய்து வருண லோகஞ் சென்றார். அப்பொழுது வருணன் தன்னுடைய லோகத்திற்கு வந்த பகவானைத் தரிசித்து, அவரைப் பூஜித்து அதிக சந்தோஷத்துடன், "என்னுடைய சரீரமானது இப்பொழுது பயனுள்ளதாக ஆயிற்று. இப்பொழுதுதான் என்னுடைய மனோரதம் பூர்ணமாயிற்று. உம்முடைய பாதத்தை யடைந்தவர்கள் ஸம்ஸாரத்தைத் தாண்டி மோக்ஷத்தை அடைந்தார்கள். ஒப்புயர்வில்லாத ஐசுவரிய முள்ளவரும், பூர்ணரும், சகல ஜீவர்களுக்கு அதிபதியுமான உம்மை நமஸ்கரிக்கிறேன். லோகத்தைப் படைப்பதற்குக் காரணமாகிய மாயையானது உம்மிடத்தில் இல்லை (இல்லாததுபோலிருக்கிறது). ஓ பிரபுவே! ஜகத்குருவே!

உம்முடைய மகிமையை அறியாதவனாகிய என்னுடைய வேலைக்காரன் உம்முடைய தகப்பனாரை இவ்விடம் அழைத்து வந்தான். அந்த அபராதத்தை மன்னிக்க வேண்டும். உம்முடைய தகப்பனாரை இவ்விடத்தில் கொண்டுவந்ததால் உம்முடைய பாதாரவிந்த தரிசனம் எனக்குக் கிடைத்தது. என்னுடைய வேலைக்காரனால் கொண்டுவரப்பட்ட நந்தர் இதோ இருக்கிறார்; அழைத்துப் போகலாம். ஓ பிரபுவே! நாங்கள் உம்மைச் சார்ந்த பிரஜைகளாகையால் எங்களுடைய அபராதத்தை மன்னித்து அனுக்கிரகிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

9—17. சகல ஜகத்பதியான ஸ்ரீ வருணனுடைய வார்த்தையினால் சந்தோஷித்து, தன்னுடைய பிதாவை யழைத்துக்கொண்டு கோகுலத்திற்கு வந்தார். அவரைக் கண்டு பந்துக்கள் சந்தோஷித்தார்கள். நந்தர் இதற்குமுன் பார்க்கப்படாத லோகபாலனுடைய ஐசுவரியத்தையும், அங்கிருப்பவர்கள் ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் வணங்கியிருப்பதையும் பார்த்து ஆச்சரியமடைந்து, தங்களுடைய பந்துக்களுக்கு அந்த விஷயத்தைத் தெரிவித்தார். அந்தக் கோபர்கள் அதனைக் கேட்டு மிகுந்த ஆசையுடன் ஸ்ரீ கிருஷ்ணனை ஈசுவரனென்று நினைத்து, நம்மெல்லோருக்கும் பகவான் மோக்ஷத்தைக் கொடுப்பாரோ என்றும் நினைத்தார்கள். எல்லாவற்றையும் அறிந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணன், பந்துக்களுடைய அபிப்பிராயத்தை யறிந்து, அவர்களுடைய மனோரதத்தை நிறைவேற்றுவதற்காக, " இந்த லோகத்திலுள்ள ஜனங்கள் அவித்தை (தேகத்தை 'நான்' என்று நினைத்திருப்பது),

காமம், கர்மம் இவைகளால் தேவ சரீரம், பசு, பட்சி முதலியவைகளின் சரீரம் இவைகளை யடைந்து தன்னுடைய உண்மையான சுரூபத்தை அறியவில்லை" என்று மிகுந்த கிருபையால் பிரகிருதியைக் காட்டும் மேலான பிரம்ம சுரூபத்தைப் பக்தர்களுக்குக் காண்பித்தார். அந்த சுரூபம் சத்தியமானது (பாதிக்கமுடியாதது); ஞான சுரூபம் (ஜடமல்ல) காலதேசத்தால் அளவிடக் கூடாதது; தாமாகப் பிரகாசிப்பது; சாசுவதமானது; மகரிஷிகள் குணசம்பந்தமற்றபோது அதனை அறிவார்கள். இப்படி அந்தக் கோபர்கள் பிரம்மமாகிற மடுவில் மூழ்கி, ஸ்ரீ கிருஷ்ணனால் தூக்கப்பட்டு அந்தப் பிரம்மத்தின் லோகத்தைக் கண்டார்கள். அது ஸ்ரீ கிருஷ்ணனுடைய கிருபையால் அக்ரூரால் பார்க்கப்பட்டது. நந்தன் முதலிய கோபர்கள் அதனைக் கண்டு மிகுந்த ஆனந்த சுகத்தை யடைந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் தோத்திரம் செய்து, அவரிடத்தில் கௌரவ புத்தியை வைத்து மிகவும் ஆச்சரிய மடைந்தார்கள்.

## அத்தியாயம்—29

## ராஸக்ரீடையின் ஆரம்பம்

1—8. ஸ்ரீ கிருஷ்ண பகவானும் யோக மாயையை ?த்து, அந்த சரத் கால ராத்திரிகளில் ராஸக்ரீடை செய்ய விரும்பினார். மல்லிகைகள் புஷ்பித்தன; தேசாந்தரம் சென்றிருந்த புருஷன் வெகு நாள் கழித்துவந்து, பத்தினியின் முகத்தில் குங்குமத்தை வைத்துச் சிவப்பாகச் செய்தாற்போல சந்திரன் சுககரங்களான கிரணங்களால் கிழக்குத் திக்கைச் சிவக்கச் செய்துகொண்டு உதயமானார். அதனால் ஓஷதிகளும், ஜனங்களும் தாபமற்றவர்களானார்கள். (பகலில் சூரியனுடைய வெயிலாலுண்டான உஷ்ணம் அடங்கியதென்று கருத்து.) அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ண பகவான் லக்ஷ்மிதேவியின் முகம்போலச் சிவந்த காந்தியுடன் பூர்ணமாக உதயமான சந்திர மண்டலத்தையும், அந்தச் சந்திரனுடைய கிரணங்களால் வனம் பிரகாசிப்பதையும் பார்த்து ஸ்திரீகள் ஆசைப்படும்படி இனிமையாகக் கானஞ்செய்தார். அந்தக் கானமானது மன்மதனை விருத்திசெய்யக்கூடியதாக இருந்தது. அதனைக் கேட்ட கோப ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மனத்தைச் செலுத்தியவர்களாகி, ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளாமலேயே காதிலணிந்திருக்கும் குண்டலங்கள் அசைய ஸ்ரீ கிருஷ்ணன் இருக்குமிடத்திற்கு வேகமாக வந்தார்கள். சில ஸ்திரீகள் மாடு கறந்துகொண்டிருக்கும் போது பகவானுடைய கானத்தைக் கேட்டு, அதை நிறுத்திவிட்டு ஸ்ரீ கிருஷ்ணனிடஞ் சென்றார்கள். சிலர் அடுப்பில் பாலை வைத்துவிட்டும், சிலர் அடுப்பில் பக்குவமாகிக்கொண்டிருக்கும் கோதுமை முதலிய

அன்னத்தைக் கீழே இறக்காமலும், பறிமாறிக்கொண்டிருந்த சில ஸ்திரீகள் அதை விட்டும், குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக்கொண்டிருந்த சில ஸ்திரீகள் அதனை விட்டும், புருஷனுக்குச் சிசுருஷை செய்துகொண்டிருந்தவர்கள் அதனை லட்சியஞ் செய்யாமலும், ஆகாரத்தைப் புசித்துக்கொண்டிருந்த ஸ்திரீகள் போஜனத்தை லட்சியஞ் செய்யாமலும் ஸ்ரீ கிருஷ்ணனிடஞ் சென்றார்கள். மேலும், சந்தனம் முதலியவைகளைப் பூசிக்கொண்டிருந்தவர்களும், உடம்பு துடைத்துக்கொண்டிருந்தவர்களும், கண்களுக்கு மையிட்டுக்கொண்டிருந்தவர்களுமான சில கோபிகைகள் அவைகளை முடித்துக்கொள்ளாமலேயே பகவானுடைய சமீபஞ் சென்றார்கள். பின்னுஞ் சிலர் இடுப்பு வஸ்திரத்தை மேல் வஸ்திரமாகவும் மாற்றித் தரித்துக் கொண்டும், ஆபரணங்களை மாற்றித் தரித்துக்கொண்டும் ஸ்ரீ கிருஷ்ணனிடஞ் சென்றார்கள். இப்படி அந்த அந்த வேலைகளை முடிக்காமலேயே வெளியில் செல்லும் ஸ்திரீகளை அவர்களுடைய பிதா, பர்த்தா, சகோதரர்கள், பந்துக்கள் ஆகிய எல்லாரும் தடுத்தார்கள். அப்படியும் அவர்களில் சில ஸ்திரீகளின் மனம் ஸ்ரீ கிருஷ்ணனால் அபகரிக்கப்பட்டிருந்தமையால், திரும்பாமலேயே ஸ்ரீ கிருஷ்ணனிடஞ் சென்றார்கள்.

9—11. சில கோபிகைகள் வீட்டிற்குள்ளிருந்து வெளிவர முடியாமல் வீட்டிலேயே வசித்தார்கள். ஆனாலும் அவர்கள் கண்களை மூடிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனையே தியானஞ் செய்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்திருந்தால் உண்டான சகிக்கமுடியாத விரகதாபத்தை அநுபவித்தார்கள். அதனால் அவர்களுக்குப் பாப கர்மம்

நிவர்த்தியாயிற்று. பகவானை ஆலிங்கனஞ் செய்து கொண்டதுபோல் தியானஞ் செய்ததால் உண்டான சுகத்தை அநுபவித்தார்கள். அதனால் புண்ணிய கர்மம் நிவர்த்தியாயிற்று. இப்படிப் புண்ணியம், பாபம் ஆகிய பந்தகமான கர்மங்கள் நாசமடைந்தன. அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனைப் பரப்பிரம்மமென்று தியானஞ் செய்யாமல் ஜாரனென்று (அன்னிய புருஷன்) நினைத்தும் முக்குணங்களாலேற்பட்ட இந்தச் சரீரத்தை விட்டு விட்டார்கள் (மோக்ஷத்தை அடைந்தார்களென்று கருத்து) என்று சுகர் சொன்னார்.

12. அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ முனியே! கோப ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனை அழகான மனிதன்; தங்களுக்கு பர்த்தா என்று நினைத்தார்களே யொழிய, பரப்பிரம்மம் என்று நினைக்கவில்லையே; குணசம்பந்தமுள்ள புத்தியால் ஸம்ஸாரம் எப்படி நிவர்த்தியாயிற்று! அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

13—16. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "சிசுபாலன் பகவானிடத்தில் விரோத புத்தியை வைத்தும் முக்தி யடைந்தானென்று முன்னமேயே சொல்லியிருக்கிறேன். அப்படியிருக்க, பகவானிடத்தில் பிரியம் வைத்தவர்கள் மோக்ஷத்தை அடைவதற்கு என்ன சந்தேகம்! நாசமற்றவரும், அளவிடக்கூடாதவரும், குண சம்பந்தமற்றவரும், குணங்களுக்கு அதிபதியுமான பகவான் ஜனங்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகவே அவதரிக்கிறார். அப்படிப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண

ளிடத்தில் காமத்தை (மன்மத விஷயமான ஆசை) யாவது, கோபத்தையாவது, பயத்தையாவது, ஸ்நேகத்தையாவது (பகவானைத் தானாகப் பாவிப்பது), பக்தியையாவது எப்பொழுதும் பகவானிடத்தில் எவர்கள் செலுத்துகிறார் களோ அவர்கள் தன்மயமாக ஆகிறார்கள் (மோக்ஷத்தை அடைவார்கள்). அசையாப் பொருளாகிய ஸ்தாவரங்களும் ஸ்ரீ கிருஷ்ணனை ஆச்ரயித்து மோக்ஷத்தை அடைகின்றன. அப்படிப்பட்ட யோகீசர்களுக்கு அதிபதியும் ஜனனமற்ற வருமாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானை எவ்விதமாகவாவது ஆச்ரயித்தவர்கள் மோக்ஷத்தை அடைந்தார்களென்பது

17—27. இப்படித் தம்முடைய கானத்தைக் கேட்டு வந்த கோபிகைகளைக் கண்ட பகவான், "ஓ மிகுந்த பாக்கியமுள்ளவர்களே! நல்வரவா? உங்களுக்குப் பிரியமான எதனைச் செய்வோம்? கோகுலத்திலுள்ளவர் கள் க்ஷேமமாக இருக்கிறார்களா? வந்த காரியமென்ன? இந்த ராத்திரி பயங்கரமாக இருக்கிறது. கொடிய பிராணி கள் சஞ்சரிக்கின்றன. உங்களுடைய புருஷர்களும், தாய்களும், தந்தைகளும், சகோதரர்களும் தேடுகிறார்கள். பந்துக்களுக்கு பயத்தை உண்டுபண்ணவேண்டாம். இவ்விடத்தில் இருக்கக்கூடாது. கோகுலத்திற்குப் போகலாம். சந்திரனுடைய காந்தியால் பிரகாசிக்கும் இந்த வனத்தைப் பார்த்தீர்கள். யமுனையின் ஜலக் காற்றினால் அசையும் மரங்களுடைய தளிர்கள் அழகாக இருக்கின்றன. ஆனதால் தாமதியாமல் கோகுலஞ் சென்று, புருஷர்களுக்கு நீங்கள் சிசுருஷை செய்யுங்கள்; உங்களுடைய குழந்தைகளும் கன்றுகளும் அழுகின்றன.

அவைகளுக்குப் பாலைக் கொடுங்கள். பசுக்களைக் கறக்க வேண்டும். ஆனால் என்னிடத்தில் இருக்கும் ப்ரீதியினால் என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தி, நீங்கள் என்னிடத்தில் வந்தது யுக்தமேயாம். ப்ராணிகள் என்னிடத்தில் ப்ரியப்படுவார்கள். கபடமில்லாமல் புருஷர்களுக்குச் சிசுருஷை செய்வதும், குழந்தைகளைக் காப்பாற்றுவதும், மாமனார் மாமியார் முதலிய பந்துக்களுக்குச் சிசுருஷை செய்வதும் ஸ்திரீகளுக்கு முக்கியமான தர்மம். மேலும், புருஷன் கெட்ட நடையுள்ளவனானாலும், அதிருஷ்டமில்லாதவனானாலும், வயது முதிர்ந்தவனானாலும், ரோகமுள்ளவனானாலும், ஏழையானாலும் ஸ்திரீகள் அவனுக்குச் சிசுருஷை செய்யவேண்டும். அவனை விடக்கூடாது. அதனால் அந்த ஸ்திரீகளுக்கு உத்தம லோகம் கிடைக்கும். புருஷன் மகா பாபியானால் அவனை விட்டுவிடலாம். குல ஸ்திரீகள் ஜார புருஷனை ஆசைப்படுவதால் சுவர்க்கம் கிடைக்கிறதில்லை; அபகீர்த்தி உண்டாகிறது; அது அற்பமானது; கஷ்டப்பட்டு அடையக்கூடியது; எல்லோராலும் வெறுக்கக்கூடியது. மேலும், என்னுடைய குணங்களைக் கேட்பதாலும், என்னுடைய சரிதங்களைச் சொல்வதாலும், என்னைத் தியானிப்பதாலும், என்னைத் தரிசிப்பதாலும் என்னிடத்தில் எப்படிப் பக்தி உண்டாகிறதோ, அப்படி சமீபத்திலிருப்பதால் உண்டாகிறதில்லை. ஆனதால் அவரவர்கள் வீட்டுக்குச் செல்லுங்கள்" என்றார்.

28—41. இப்படிக் கோவிந்தரால் சொல்லப்பட்ட அப்பிரியமான வார்த்தையைக் கேட்ட கோபிகைகள் தங்களுடைய மனோரதம் நிறைவேறாததனால் துக்கித்து, மிகுந்த கவலையை அடைந்தார்கள். யெளவனமவர்கள் துக்கத்

தால் உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டு, அதனால் உலர்ந்து போன உதடுகளுடன் கூடிய முகங்களுள்ளவர்களாகித் தலை குனிந்து, கால் கட்டைவிரலால் பூமியைக் கீறிக் கொண்டு, கண்களிலுள்ள மையைக் கரைத்துக்கொண்டு, பெருகும் கண்ணீர்களால் ஸ்தனத்திலுள்ள குங்குமங்களை அலம்புகிறவர்களாகி மௌனமாக இருந்தார்கள். அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை அடையவேண்டுமென்ற எண்ணத்தால் எல்லா பந்துக்களையும் விட்டவர்கள்; எல்லா ஆசைகளையும் ஒழித்தவர்கள்; ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் அதிகப் பிரீதியுள்ளவர்கள்; அப்படிப்பட்ட அந்தக் கோபிகைகள் விரோதி போலப் பேசுகின்ற ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கிக் கண்களைத் துடைத்துக்கொண்டு, கோபத்தால் தழுதழுத்த கண்ட சுரத்துடன், "பிரபுவே! இப்படி நீர் கொடிய வார்த்தையைச் சொல்லக்கூடாது. சகல ஆசைகளையும் ஒழித்து, உம்முடைய பாதத்தை அடைந்தவர்களான எங்களை நீர் அங்கீகரிக்கவேண்டும்; விடக்கூடாது! மோக்ஷத்தை யடைய விரும்பித் தம்மை உபாசிக்கும் பக்தர்களை ஸ்ரீமந் நாராயணன் அங்கீகரியாமல் விட்டுவிடுவாரா? எல்லாத் தர்மத்தையும் அறிந்தவரான நீர் 'புருஷர்களையும், குழந்தைகளையும், பந்துக்களையும் அனுசரித்திருப்பதே ஸ்திரீகளுடைய தர்மம்' என்று சொன்னீர். நீர் பிராணிகளுக்குப் பிரியரும், பந்துவும், ஆத்மாவுமாக இருக்கிறீர். ஆனதால் உமக்குச் சிசுருஷை செய்வதாலேயே பர்த்தா முதலிய பந்துக்களை அனுசரித்ததாகிறது. ஓ! தாமரை மலர் போன்ற கண்களுள்ளவரே! எல்லாருக்கும் ஆத்மாவாக இருக்கும் உம்மிடத்தில் வித்வான்கள் பக்தி செய்கிறார்கள். பர்த்தா, புத்திரன் முதலிய பந்துக்களால் உபத்திரவமே யொழிய சுகமில்லை. அவர்களால் என்ன

ப்ரயோசனம்? ஓ பரமேசுவர! எங்களிடத்தில் தயை செய்யவேண்டும். வெகுகாளாக உம்மிடத்தில் வைத்திருக் கும் ஆசையைக் கெடுக்கவேண்டாம். இதுவரையில் கிருக கிருத்தியங்களில் சுகமாகப் ப்ரவேசித்திருந்த எங்களுடைய மனத்தையும், கைகளையும் நீர் அபகரித்தீர். எங்களுடைய கால்கள் உம்முடைய பாதங்களை விட்டு ஒரு அடிகூடச் செல்லவில்லை. நாங்கள் எப்படி வீட்டிற்குப் போவோம்! எப்படி வீட்டு வேலைகளைச் செய்வோம்? ஓ தோழரே! உம்முடைய புன்சிரிப்புள்ள பார்வையாலும், இனிமையான கானத்தாலும் எங்களுக்கு மன்மதாக்கினி உண்டாயிருக் கிறது. அதனை உம்முடைய உதட்டிலுள்ள அமிருதப் ப்ரவாகத்தால் அணைத்துவிடும். அப்படிச் செய்யாவிடில் உம்மை விட்டுப் பிரிந்ததாலுண்டான அக்கினிக்கு எங்கள் சரீரத்தை உபயோகித்து, தியானஞ் செய்து உம்மை அடைவோம். மேலும், லக்ஷ்மீ தேவிக்கு சந்தோஷத்தைக் கொடுத்ததான உம்முடைய பாதத்தை எப்பொழுது ஸ்பரிசித்தோமோ, உம்மால் சந்தோஷப்படுத்தப்பட்டோ மோ, அது முதல் வேறு ஜனங்களுடைய முன்னிருப்பதற் கும் பிடிக்கவில்லை. (பர்த்தா முதலிய பந்துக்களிடஞ் செல்லு வதற்கு இஷ்டமில்லை யென்று கருத்து.) எந்த லக்ஷ்மீ தேவியினுடைய கடாக்ஷலேசத்திற்காகப் பிரம்மா முதலிய தேவர்கள் தவஞ்செய்கிறார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீதேவி உம்முடைய மார்பில் வசிப்பவளானாலும், துளசி யால் அடையப்பட்டதும், பக்தர்களால் சேவிக்கப்பெற்றது மான உம்முடைய பாததூளியையே அடையவேண்டு மென்று விரும்புகிறாள். அதுபோல நாங்களும் அதனை யடைந்தோம். (உம்முடைய பாதத்தின் அழகு மிகவும் ஆச்சரியப்படக்கூடியதென்று தாத்பரியம்.) ஓ பாபங்களைப்

போக்கடிப்பவரே! விடுகளை விட்டு உம்மை உபாசிக்க விரும்பி, உம்முடைய பாதத்தை அடைந்தோம். (யோகிகள் போல எல்லாவற்றையும் விட்டு வந்தோமென்று கருத்து.) கிருபை செய்யவேண்டும். ஓ அழகிய புருஷரே! உம்முடைய அழகான சிரிப்பைப் பார்த்ததால் மன்மத தாபத்தை அடைந்தவர்களான எங்களை, வேலைக்காரிகளாக அங்கீகரிக்கவேண்டும். பின்னும், காதில் அணிந்திருக்கும் குண்டலங்களால் அழகான கன்னங்களுள்ளதும், அதரா மிருதமுள்ளதும், தொங்கும் தலைமயிர்களுள்ளதுமான உம்முடைய முகத்தையும், புன்சிரிப்புள்ள பார்வையையும், எல்லாருக்கும் அபயத்தைக் கொடுக்கும் இரு கைகளையும், லக்ஷ்மீதேவிக்கு முக்கியமாக சந்தோஷத்தை யுண்டுபண்ணும் மார்பையும் பார்த்து, நாங்கள் உமக்கு தாசிகளானோம். உம்முடைய வேணுகானத்தைக் கேட்டுப் பசுக்களும், பறவைகளும், மரங்களும், மிருகங்களும் மயிர்க் கூச்சலடைகின்றனவே, அப்படிப்பட்ட இனிமையான பதங்களுள்ளதும், மூர்ச்சனையுள்ளதுமான (சுவரத்தின் ஆலாப விசேஷம்) புல்லாங்குழல் சப்தத்தைக் கேட்டும், மூவுலகங்களிலும் சிறந்த அழகுள்ளதுமான உம்முடைய சரீரத்தைத் தரிசித்தும் எந்த ஸ்திரீதான் தன்னுடைய தர்மத்தைத் தவறமாட்டாள்? (ஸ்திரீகள் தங்களுடைய புருஷர்களை விடக்கூடாது; ஜார புருஷனை அடைவது யுக்தமல்லவென்று சொன்னீர். அது சரிதான். ஆனாலும் உம்முடைய கானத்தைக் கேட்டு, ரூபத்தையும் தரிசித்ததால் அவர்களுக்குரிய தர்மத்தைக்கூட விட்டுவிடும்படி நேரிடுகிறது. ஆனதால் கானத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே சுதர்மத்தை விட்டுவிடலாம். நேரில் உம்மைத் தரிசித்தபின் அதனை விடுவதற்கு என்ன ஆட்சேபமென்று தாத்பரியம்.)

ஓ! உபத்திரவமடைந்தவர்களுக்குப் பந்துவே! ஆதிபுருஷராகிய ஸ்ரீமந் நாராயணன் தேவலோகத்தை எப்படிக் காப்பாற்றுகிறரோ, அப்படி கோகுலத்தில் வசிப்பவர்களை நீர் காப்பாற்றுவதற்காக அவதரித்திருக்கிறீர். ஆனதால் உமக்குத் தாசிகளான எங்களுடைய விரகதாபமுள்ள ஸ்தனங்களிலும், தலைகளிலும் உம்முடைய தாமரைமலர் போன்ற கைகளை வைத்து சுகப்படுத்தும்" என்று பிரார்த்தித்தார்கள்.

42—48. இப்படிப் பரவசமான மனத்துடன் சொல்லிய கோபிகைகளுடைய வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான், தாம் ஆத்மாராமரானாலும், யோகீசுவரர்களுக்கு அதிபதியானாலும் அவர்களிடத்தில் கிருபைசெய்து, சிரித்து அவர்களுடன் ரமித்தார். அந்த ஸ்திரீகள் பிரியனாகிய ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, முக மலர்ச்சியுள்ளவர்களாகி, ஸ்ரீ கிருஷ்ணனைச் சுற்றிக்கொண்டார்கள். அப்படி ஸ்திரீகளுடன் கூடிய ஸ்ரீ கிருஷ்ணன் நட்சத்திரங்களால் சுற்றப்பட்ட சந்திரன்போலப் பிரகாசித்தார். மேலும், அவர்களுடைய கம்பீரமான சிரிப்பு, பற்கள் ஆகிய இவை குமுத புஷ்பங்கள் போலிருந்தன. இப்படிப் பகவான் வைஜயந்தி யென்ற மாலையைத் தரித்துக்கொண்டு, அநேக ஸ்திரீகளுடைய கூட்டத்திற்கு அதிபதியாக ஒவ்வொரு வனத்திலும் சஞ்சரித்தார்; அவரும் கானஞ்செய்தார்; ஸ்திரீகளும் அவரைக் கொண்டாடினார்கள். பின்னுமவர் அந்த ஸ்திரீகளை யமுனா நதியின் மணல் திட்டிற்கு அழைத்துச் சென்றார். அவ்விடத்திலுள்ள மணல்கள் சுவர்ணமயங்களாக இருந்தன. தாமரைப் புஷ்பம், குமுத புஷ்பம் இவைகளின் வாசனை

புள்ளதான அலைக்காற்று வீசியது. அந்த அழகான இடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் கோபஸ்திரீகளின்மீது கையை நீட்டுவது, ஆலிங்கனஞ் செய்துகொள்வது, கையைத் தொடுவது, தலைமயிரைத் தொடுவது, தொன்டைகளை ஸ்பரிசிப்பது, ஸ்தனங்களைத் தொடுவது, பரிகாசஞ் செய்வது, நகங்களால் கிள்ளுவது, விளையாட்டாகப் பார்ப்பது, சிரிப்பது முதலியவைகளைச் செய்து அவர்களுக்கு மன்மதனை விருத்திசெய்து அவர்களைச் சந்தோஷப் படுத்தினர். இப்படி அந்த ஸ்திரீகள் பகவானிடத்திலிருந்து மானத்தை அடைந்து, ஒவ்வொருவரும் லோகத்திலுள்ள ஸ்திரீகளுக்குள் தாங்கள் மேலானவர்களென்று நினைத்துக் கர்வங்கொண்டார்கள். அப்பொழுது கேசவராகிய (பிரம்ம தேவரையும் பரமசிவனையும் சுவாதீனப்படுத்திக்கொண்டவர்) பகவான், அந்தக் கோபிகைகளுடைய கர்வத்தைப் (நாம் மிகுந்த அழகுள்ளவர்கள்; கிருஷ்ணன் நமக்கு சுவாதீனமாக இருக்கிறார் என்ற கர்வம்) போக்கடித்து அவர்களை அனுக்கிரகிப்பதற்காக அவ்விடத்திலேயே மறைந்தார்.

# அத்தியாயம்—30

## கோபிகள் ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடியது

1—36. *பகவான் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்தபொழுது கோப ஸ்திரீகள் அவரைக் காணுமல் பெண் யானைகள் யூதபதியான ஆண் யானையைக் காணுமல் துக்கித்தாற்போல அழுதார்கள். பின்னுமவர்கள் பகவானுடைய நடை, அன்பு பொருந்திய சிரிப்பு, விளையாட்டான பார்வை, மனோகரமான வார்த்தை, விளையாட்டு ஆகிய இவைகளை நினைத்து, மதி மயங்கித் தன்மயர்களாகி, அந்தந்தச் சேஷ்டைகளைச் (சிரிப்பு முதலியவை) செய்து விளையாடினார்கள். இப்படி அந்த ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சேஷ்டைகளை நினைத்து, தங்களை கிருஷ்ணன் என்று நினைத்துக்கொண்டு நடை, சிரிப்பு முதலிய சேஷ்டைகளைச் செய்து, 'நான் கிருஷ்ணன்' என்று ஒவ்வொருவரும் சொல்லிக்கொண்டார்கள். பின்னுமவர்கள் ஒன்று சேர்ந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய குணங்களையே சொல்லிக்கொண்டு பைத்தியங்கொண்டவர்கள் போல வனம் வனமாகச் சஞ்சரித்தார்கள். சகல பிராணிகளுடைய இருதயத்திலும், வெளியிலும், எங்கும் ஆகாசம் போல வியாபித்திருப்பவரான ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்தாயோ வென்று மரங்களைக் கேட்கிறார்கள். எப்படியென்றால், "ஓ அசுவத்த மரமே! பிலக்ஷமே (இருளி மரம்)! ஆலமரமே! நந்தருடைய புத்திரன் அன்பு பொருந்திய சிரிப்பினாலும், பார்வையாலும் எங்களுடைய மனத்தை அபகரித்துச் சென்றார். அவரைப் பார்த்தீர்களா? ஓ மருதாணியே! அசோகமே! புன்னைமரமே! காகை மரமே! சம்பக மரமே! கர்வமுள்ள ஸ்திரீகளுடைய*

கர்வத்தைப் போக்கடிக்கும் சிரிப்புள்ள ராமனுடைய சகோதரன் எவ்விடத்திற்குப் போனார்? ஓ நல்ல சுபாவமுள்ள துளசியே! கோவிந்தருடைய பாதங்களில் பிரியமுள்ளவளே! வண்டுகளுடன் உன்னைத் தரித்துக்கொண்டிருக்கும் இஷ்டரான அச்சுதரைப் பார்த்தாயா! ஓ மாலதியே! மல்லிகையே! ஓ ஜாதியே! யூதிகையே! மாதவராகிய பகவான் உங்களை ஸ்பரிசித்து அதனால் உங்களை சந்தோஷிக்கச் செய்துகொண்டு சென்றிருப்பாரே, அவரைக் கண்டதுண்டா! மேலும் மாமரம், பிரியாளு, பலா, அஸனம், கோவிதாரம், ஜம்பு, அர்க்கம், பில்வம், மகிழ மரம், ஒட்டு மாமரம், கதம்பம், நீபம் (கடம்பமரத்தின் ஜாதி பேதம்) முதலிய யமுனையின் கரையில் முளைத்துப் பிறருக்கு உபகாரஞ் செய்துகொண்டிருக்கும் மரங்கள் யாவும் ஸ்ரீ கிருஷ்ணனைக் காணாமல் துக்கிப்பவர்களான எங்களுக்கு அவர் சென்ற மார்க்கத்தைச் சொல்லட்டும். ஓ பூமி தேவியே! நீ என்ன தவஞ் செய்தாய்! பகவானுடைய பாதங்கள் உன்மீது பட்டபடியால் மயிர்க்கூச்சலை அடைந்திருக்கிறாய். இந்த மயிர்க் கூச்சல் இப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதம் பட்டதால் ஏற்பட்டதா? (பூமியில் ஒருவிடத்தில் பகவானுடைய பாதம் பட்டதால் மயிர்க்கூச்சலுண்டாயிற்றென்பது சரியல்ல) அல்லது த்ரிவிக்கிரம அவதாரஞ் செய்த பகவான் பூமி முழுவதையும் ஒரு அடியாக அளந்த சமயத்தில் உன்னுடைய சரீரம் முழுவதிலும் அவருடைய பாதம் பட்டதல்லவா? அதனாலுண்டாயிற்றா? அல்லது அதற்கும் முன் வராகாவதாரஞ் செய்த பகவானுடைய சரீரத்தை ஆலிங்கனஞ் செய்துகொண்டதாலுண்டானதா? எப்படியானாலும் பகவான் சென்றவிடம் உனக்குத் தெரிந்திருக்கும். அதனைச் சொல்.

ஓ தோழி! மானுடைய பத்தினியே! ஸ்ரீ கிருஷ்ணன் உன்னுடைய சமீபம் வந்தாரா? அழகான அவருடைய சரீரத்தைப் பார்த்து சுகத்தை அடைந்தீர்களா? ஸ்திரீயை ஆலிங்கனஞ் செய்துகொள்ளும் சமயத்தில் ஸ்திரீகளுடைய ஸ்தனங்களிலிருந்த குங்குமம் பகவானுடைய கழுத்திலிருக்கும் குந்த புஷ்பத்தின் மாலையில் சம்பந்திக்கிறது. அந்த மாலையின் வாசனைபோல வாசனையுள்ள காற்று வீசுகிறது. அதிகப் பழங்களின் சுமையால் வணங்கியிருக்கும் மரங்களைப் பார்த்து, 'இவைகள் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு வணங்கி இருக்கின்றன' என்று நினைத்துச் சில கோபிகைகள், "ஓ மரங்களே! ஸ்ரீ கிருஷ்ணன் ஒரு கையைத் தம் ஸ்திரீயின் தோளில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையால் தாமரை மலரை யெடுத்துக்கொண்டு உங்களுடைய நமஸ்காரத்தை அன்பு பொருந்திய பார்வையால் அங்கீகரித்துக் கொண்டு சென்றிருப்பாரே. அவர் அணிந்திருக்கும் துளசி மாலையின் வாசனையில் ஆசைப்பட்டு, வண்டுகளும் அவர் பின் செல்லுமே. அந்தப் பகவானைப் பார்த்தீர்களோ" என்றார்கள். இன்னுஞ் சில ஸ்திரீகள், "இந்தக் கொடிகள் மரங்களின் கிளைகளை (கைகளை) ஆலிங்கனஞ் செய்து கொண்டிருக்கின்றன. ஆனதால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கையின் நகங்கள் இவைகளில் பட்டிருக்கவேண்டும். ஆனதால் இவைகளைக் கேளுங்கள்" என்றார்கள். (கொடிகளை ஸ்திரீகளாகவும், மரங்களைப் புருஷர்களாகவும் வர்ணிக்கிற வழக்கம். அந்தக் கொடிகள் புஷ்பித்திருப்பதால் மயிர்க்கூச்சலுள்ளவைகளாகச் சொல்லப்பட்டிருக்கிறது.) இப்படிக் கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடிக்கொண்டு பைத்தியங் கொண்டவர்கள் போலப் பிரலாபித்து, தங்களை ஸ்ரீ கிருஷ்ணனாகப் பாவித்து, பகவான் செய்த அந்த லீலை

களைச் செய்ய ஆரம்பித்தார்கள். எப்படியெனில், ஒரு கோபிகை பூதனை வேடந் தரித்தாள். மற்றொரு ஸ்திரீ ஸ்ரீ கிருஷ்ண வேஷங் கொண்டு, பூதனையின் ஸ்தன்யத்தைக் குடித்தாள். மற்றொரு ஸ்திரீ குழந்தையாக இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தன்னைப் பாவித்துச் சகடமாக இருப்பவனை உதைத்தாள். திருணவர்த்தனாக இருந்தவள் கிருஷ்ணனாக இருப்பவனைத் தூக்கிக்கொண்டு போனாள். இரண்டு ஸ்திரீகள் ராமகிருஷ்ணர்களாக இருந்தார்கள். மற்றவர்கள் கன்றுகளாக இருந்தார்கள். கன்றுகளாக இருந்தவர்களை ராம கிருஷ்ணர்களாக இருந்தவர்கள் தூக்கிச் சுழற்றி எறிந்தார்கள். மேலும் கிருஷ்ணனாக இருந்தவள் பகனாக இருந்தவனை அடித்தாள். கிருஷ்ணன் போலிருப்பவள் வெகு தூரத்திலிருக்கும் பசுக்களைக் கிருஷ்ணன் அழைப்பது போல் அழைத்தாள். கிருஷ்ணன்போல வேணுகானஞ் செய்து விளையாடுகிறவளை மற்றொரு கோபிகை 'நல்லது, நல்லது' என்று சிலாகித்தாள். ஒருத்தியுடைய தோளில் மற்றொருத்தி கையை வைத்துக்கொண்டு, வேறொருத்தியை நோக்கி, "நான் கிருஷ்ணன்; என்னுடைய அழகான நடையைப் பார்" என்று தன்னைக் கிருஷ்ணனாக நினைத்துச் சொன்னாள். மற்றுமொருத்தி, "நீங்கள் காற்று மழைக்குப் பயப்படவேண்டாம். அதற்குத் தகுந்த உபாயஞ் செய்திருக்கிறேன்" என்று சொல்லி ஒரு கையால் வஸ்திரத்தைத் தூக்கிப் பிடித்தாள். ஒரு கோபிகை மற்றொருத்தியுடைய தலையில் காலை வைத்துக் கொண்டு, "ஓ துஷ்டனாகிய சர்ப்பமே! நான் துஷ்டர்களைச் சிட்சிப்பவன்; நீ இந்த ஸ்தலத்தை விட்டுப் போக வேண்டும்" என்றாள். மற்றொரு ஸ்திரீ, "ஓ கோபர்களே! காட்டுத் தீயைப் பார்த்தீர்களா? கண்களை மூடிக்கொள்

ளுங்கள். உங்களுக்கு க்ஷேமத்தைச் சீக்கிரத்தில் செய்கிறேன்" என்றாள். மற்றொரு கோபிகை புஷ்பமாலையால் மற்றொருத்தியைக் கட்டி, "ஓ கிருஷ்ணா! தயிர்ச்சட்டியை உடைத்து வெண்ணெய் திருடினவனாகிய உன்னை உரலுடன் சேர்த்துக் கட்டுகிறேன்" என்றாள். அதனைக் கேட்டுக் கிருஷ்ணனாக இருந்தவள் கண்களை மூடிக் கொண்டு பயந்தவள் போல அபிநயஞ் செய்தாள். இப்படிக் கோபஸ்திரீகள் கிருஷ்ண லீலைகளைச் செய்து திரும்பவும் பிருந்தாவனத்திலுள்ள மரங்களையும், கொடிகளையும் 'கிருஷ்ணனைப் பார்த்தீர்களா' என்று கேட்டுக்கொண்டு சஞ்சரிக்கும்பொழுது பகவான் நடந்து சென்ற மார்க்கத்திலுள்ள காலடிகளைக் கண்டார்கள். அவைகளைக் கண்டு அவர்கள், 'மகாத்மாவாகிய நந்தகுமாரருடைய காலடிகள் தான்; சந்தேகமில்லை. தாமரை மலர் ரேகை, துவஜ ரேகை, அங்குச ரேகை ஆகிய இவைகள் காணப்படுகின்றன" என்று சொல்லிக்கொண்டு, அதன் வழியாகச் சென்றார்கள். அவ்விடத்தில் ஒரு ஸ்திரீயினுடைய காலடியும் காணப்பட்டது. அதனைக் கண்டு கோபிகைகள் மிக்க வருத்தமடைந்து, "இது எவளுடைய காலடி? பகவான் அவளுடைய தோளில் கையை வைத்துக்கொண்டு சென்றிருக்கிறார். அவள் யானையின்பின் பெண் யானை செல்வது போல் போயிருக்கிறாள். நம்மை எல்லாரையும் விட்டு இவளிடத்தில் மிக்க பிரீதியுடன் பகவான் இவளை ரகசியமாக அழைத்துச் சென்றாரே, இவள் பகவானை நன்றாகப் பூஜித்தவளென்பது நிச்சயம். ஓ தோழிகளே! கோவிந்தனுடைய பாததூளிகள் மிகவும் புண்ணியகரமானவைகள். அவைகளைப் பிரம்ம தேவரும், பரமசிவனும், லக்ஷ்மீ தேவியும் பாப நிவர்த்திக்காக சிரசில் தரிக்கிறார்கள். (இந்தத்

தூளிகளைச் சிரசில் வைத்துக்கொண்டால் நாமும் ஸ்ரீ கிருஷ்ணனை அடையலாமென்று கருத்து.) எவள் தனியே ஸ்ரீ கிருஷ்ணனை அழைத்துக்கொண்டு சென்று, எல்லாக் கோபிகைகளுக்கும் சொந்தமாகிய கிருஷ்ணனுடைய அதரத்தை (உதட்டை) ரகசியத்தில் பானஞ்செய்கிறாளோ, அவளுடைய காலடியைப் பார்க்க எங்களுடைய மனம் புலம்புகிறது. இவ்விடத்தில் புல் தரைகளாக இருப்பதால் அவளுடைய காலடிகள் தெரியவில்லை. ஒருகால் அவளை ஸ்ரீ கிருஷ்ணன் தூக்கிக்கொண்டு சென்றாரோ? (அவளுக்கு கால் வலியுண்டாகியிருக்கலாம் என்று கருத்து.) ஸ்ரீ கிருஷ்ணன் அவளிடத்தில் ஆசைகொண்டு அவளைத் தூக்கிக்கொண்டு நடந்திருக்கிறானென்பது நிச்சயம்; இந்தக் காலடி மிகவும் அழுந்தியிருக்கிறது. ஆதலால் பகவான் சுமை தூக்கியிருக்கவேண்டும். ஓ கோபிகைகளே! பாருங்கள். இவ்விடத்தில் ஸ்திரீயைப் புஷ்பம் பறிப்பதற்காகக் கீழே இறக்கியிருக்கிறார். அவளுடைய பிரியத்திற்காக ஸ்ரீ கிருஷ்ணனால் இவ்விடத்தில் புஷ்பங்கள் பறிக்கப்பட்டன. அதனால் எல்லா அடிகளும் நுனிக்கால் அழுந்தினவைகளாக இருக்கின்றன; பாருங்கள். இவ்விடத்தில் கிருஷ்ணனுடைய மடியில் உட்கார்ந்திருந்த அடையாளங்கள் காணப்படுகின்றன. ஆனதால் இவ்விடத்தில் பறித்த புஷ்பங்களை அந்த ஸ்திரீயின் தலையில் வைத்துப் பகவான் அலங்கரித்திருக்கவேண்டும்" என்று கோபிகைகள் சொல்லிக்கொண்டு வனங்களில் சஞ்சரித்தார்கள். பகவான் இயற்கையில் எப்பொழுதும் சந்தோஷமுள்ளவர்; ஸ்திரீகளுடைய விளையாட்டிற்கு வசப்பட்டவரல்ல; ஆத்மாவிலேயே ரமிப்பவர்; அப்படியிருந்தும் பகவான் அவர்களுடன் கிரீடித்ததாக வர்ணித்தால் காமிகளுடைய

இம்மாதிரியென்றும், ஸ்திரீகளுடைய துஷ்டத்தனம் இப்படிப்பட்டதென்றும் காண்பிக்கப்பட்டது.

37—41. மற்ற ஸ்திரீகளை விட்டு எவளைப் பகவான் அழைத்துச் சென்றாரோ அவள், "தம்மிடத்தில் மிகவும் ஆசைகொண்டவர்களான எல்லாக் கோபிகைகளையும் விட்டு ஸ்ரீ கிருஷ்ணன் நம்மிடத்தில் ஆசைப்பட்டிருக்கிறார்; அதனால் எல்லா ஸ்திரீகளையும்விட நாமே மேலானவள்; அழகுள்ளவள்" என்று கர்வமடைந்தாள். பின்னும் அவள், மற்றொரு வனத்திற்குச் சென்று ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "எனக்கு நடக்கச் சக்தியில்லை. எவ்விடம் போக வேண்டுமோ அவ்விடத்திற்கு என்னைத் தூக்கிக்கொண்டு செல்லும்" என்று சொன்னாள். அதனைக் கேட்ட பகவான், "என் தோளில் ஏறிக்கொள்" என்று சொன்னார். அவளும் ஏறிக்கொள்ளத் தயாராக இருந்தாள். அந்தச் சமயத்தில் பகவான் மறைந்தார். அவள் அவரைக் காணாமல், "ஓ நாத! சந்தோஷத்தைக் கொடுப்பவரே! பிரியமானவரே! அழகான கைகளுள்ளவரே! எங்கே இருக்கிறீர்! எங்கே இருக்கிறீர்! நீரையும், உம்முடைய வேலைக்காரியுமான எனக்குத் தரிசனங் கொடும் (கண்ணுக்குப் புலப்படும்)" என்று சொல்லிப் பச்சாத்தாபத்தை அடைந்தாள்.

42—46. ஸ்ரீ கிருஷ்ணனைக் காணாமல் மதி மயங்கி, துக்கித்துக்கொண்டிருக்கும் அவளை ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடிவரும் மற்ற கோபிகைகள் கண்டார்கள். அப்பொழுது அவள் அவர்களை நோக்கி, பகவான் தன்னிடத்தில் கிருபை செய்ததையும், தன்னை அவமதித்துத் தனியே விட்டுப் போனதையும் சொன்னாள். அதனைக் கேட்ட ஸ்திரீகள் மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். பின்பு அவர்கள் சந்திரிகை யுள்ளவரையில் வனத்தில் சஞ்சரித்து, இருள் வந்தவுடன்

திரும்பினார்கள். ஆனாலும் மனத்தில் அவரையே நினைத்துக் கொண்டும், அவருடைய வார்த்தைகளையே பேசிக் கொண்டும், அவர்போல நடந்துகொண்டும், அவராகத் தங்களை பாவித்துக்கொண்டும் (தன்மயர்களாகி), அவருடைய குணங்களையே கானஞ்செய்துகொண்டு வீடு, பந்துக்கள் முதலியவைகளையும், தங்களையும் மறந்தார்கள். பின்னும் அவர்கள் திரும்பவும் யமுனையின் மணல் திட்டிற்கு வந்து, ஸ்ரீ கிருஷ்ணனைத் தியானஞ் செய்துகொண்டு எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பகவானுடைய வரவை எதிர்பார்த்து, அவருடைய குணங்களையே கானஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

## அத்தியாயம்—31

### கோபிகா கீதை

1—18. கோபிகைகள் சொல்லுகிறார்கள், "ஓ நாயக! கிருஷ்ண! உம்முடைய அவதாரத்தால் கோகுலம் சிறந்து விளங்குகிறது. லக்ஷ்மீதேவி இவ்விடத்தை அலங்கரித்துக் கொண்டு வசிக்கிறாள். உம்மையே பிராணனாகக்கொண்ட உம்மைச் சார்ந்தவர்கள் உம்மைத் தேடுகிறார்கள். தரிசனங் கொடும் (உம்மைப் பார்க்காவிடில் உயிரை விட்டுவிடுவார்களென்று கருத்து). சரத்காலத்தில் குளத்தில் மலர்ந்திருக்கும் தாமரை மலரின் நடுவில் காந்திபோன்ற காந்தியுள்ள கண்ணால் எங்களைப் பார்த்து எங்களைக் கொன்றீரே; அது வதமல்லவா? ஓ சம்போகத்திற்கு அதிபதியே! இஷ்டத்தைக் கொடுப்பவரே! விலை கொடாமல் (கூலி வாங்காமல்) வேலைக்காரிகளாகக் கொண்டிருக்கும் எங்களுக்கு

தரிசனங் கொடும். (பார்வையால் அபகரித்த எங்களுடைய பிராணனைத் திருப்பிக்கொடுமென்று கருத்து.) ஓ எல்லா வற்றிற்கும் சிறந்தவரே! விஷ ஜலமுள்ள யமுனையின் மடுவிலிருந்தும், அகாசுரனிடமிருந்தும், 'மிகுந்த மழையி லிருந்தும், காற்றிலிருந்தும், இடியிலிருந்தும், அரிஷ்டா சுரனிடத்திலிருந்தும், வியோமனிடத்திலிருந்தும், இன்னும் மற்ற பயத்திலிருந்தும் அடிக்கடி எங்களை சம்ரட்சித் தீரல்லவா? (அப்படியிருக்க, இப்பொழுது பார்வையால் மன்மதனை விருத்திசெய்து, என் உபத்திரவப்படுத்துகிறீர் என்று கருத்து). ஓ தோழரே! நீர் யசோதையின் புத்திர ரல்ல. சகல பிராணிகளுடைய புத்திக்கு சாட்சியாயிருக் கும் பரமாத்மா. ஆனாலும் பிரம்ம தேவரால் பிரார்த்திக்கப் பட்டு, லோகத்தைக் காப்பாற்றுவதற்காக சாத்வதருடைய வம்சத்தில் அவதரித்திருக்கிறீர். (ஜகத்தைக் காப்பாற்று வதற்காக அவதரித்த நீர் பக்தர்களை உபேக்ஷிப்பது யுக்த மல்ல என்று கருத்து.) ஓ விருஷ்ணி குலத்திற் பிறந்தவரே! உம்முடைய தாமரை மலர்போன்ற கையை எங்களுடைய சிரசில் வைத்து அனுக்ரகியும். அந்தக் கையானது ஸம்ஸா ரத்தைக் கண்டு பயந்து சரணமடைந்த பிராணிகளைக் காப் பாற்றும் சுபாவமுள்ளது; இஷ்டத்தைக் கொடுக்கக் கூடியது; லக்ஷ்மீதேவியின் பாணிக்கிரணஞ் செய்தது. ஓ கோகுலவாசிகளுடைய உபத்திரவத்தைப் போக்கடிப் பவரே! பராக்கிரமமுள்ளவரே! ஸ்திரீகளுடைய கர்வத் தைப் போக்கக்கூடிய சிரிப்புள்ளவரே! ஓ தோழ! வேலைக் காரிகளாக எங்களை அங்கீகரியும்; தாமரை மலர் போன்ற முகத்தைக் காண்பியும்; உம்முடைய பாதாரவிந்தத்தை எங்களுடைய ஸ்தனங்களில் வைத்து மன்மத தாபத்தைப் போக்கடியும். அந்தப் பாதமானது ஸமஸ்காரஞ் செய்தவர்

களுடைய பாபத்தை நிவர்த்திக்கிறது; பசுக்களின் பின் செல்லுகிறது; மிகுந்த அழகுள்ளது; காளியனுடைய படங்களை மிதித்தது; ஓ தாமரை மலர் போன்ற கண் களுள்ளவரே! உம்முடைய உத்தரவின்படி நடப்பவர் களும், உம்மைக் காணாமல் துக்கப்படுபவர்களுமான எங்களைக் கம்பீரமும், இனிமையுமான வார்த்தையாலும், உதட்டிலுள்ள அமிருதத்தாலும் சந்தோஷப்படுத்தும். உம்முடைய கதையாகிய அமிருதமானது தாபமுள்ளவர் களைச் சுகப்படுத்துகிறது; பிரமத்தை யறிந்தவர்களாலும் தோத்திரம் பண்ணப்பட்டது; பாபங்களை நிவர்த்திக்கக் கூடியது; கேட்பதனாலேயே சகல க்ஷேமத்தையும் கொடுக்கக்கூடியது; சாந்தியை யுண்டுபண்ணக்கூடியது; இப்படிப்பட்ட கதாமிருதத்தை எவர்கள் இடைவிடாமல் சொல்லுகிறார்களோ, அவர்களே மேலானவர்கள். அவர் கள் பிறருக்கு உயிரையுங் கொடுப்பார்கள். (எவர்கள் உம்முடைய கதையைச் சொல்லுகிறார்களோ அவர்களே மேலானவர்கள்; உம்மை நேரில் தரிசிப்பவர்களுடைய பாக்கியத்தைச் சொல்லவும் வேண்டுமோ? ஆனதால் உம்மைப் பார்க்கவேண்டுமென்று கருத்து.) ஓ கபட சுபாவமுள்ளவரே! உம்முடைய சிரிப்பும், அன்புள்ள பார்வையும், விளையாட்டும் ரகசியத்தில் சொல்லிய விளையாட் டான வார்த்தைகளும், தியானத்தாலுண்டான சுகமும் எங்களுடைய மனத்தை அபகரிக்கின்றன. ஓ நாத! நீர் எப்பொழுது பசுக்களை ஓட்டிக்கொண்டு வனத்திற்குப் போகிறீரோ, அப்பொழுது தாமரை மலர் போல் அழ கான உம்முடைய பாதங்கள் கற்களாலும், புற்களாலும் சிரமத்தை யடையுமென்று எங்களுடைய மனங் கலங்கு கிறது. (நாங்கள் உம்மிடத்தில் அவ்வளவு பிரீதியுள்ளவர்

களாக இருக்கிறோம். நீர் எங்களை ஏன் ஏமாற்றுகிறீர் என்று கருத்து.) சாயங்காலத்தில் வனத்திலிருந்து நீர் கோகுலத்திற்கு வரும்பொழுது தலைமயிர்களால் மறைக்கப் பட்டும், கோதூளிகளுள்ளதுமான தாமரை மலர் போன்ற உம்முடைய முகத்தைத் தரிசித்து நாங்கள் மன்மத தாபத்தை அடைகிறோம். (மன்மத தாபத்தை யுண்டு பண்ணுகிறீரே யொழிய சுகத்தை யுண்டுபண்ணுகிறதில்லை என்று தாத்பரியம்.) ஓ மனே துக்கத்தை நிவர்த்திப்பவரே! உம்முடைய பாதாரவிந்தமானது நமஸ்கரித்தவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கிறது; பிரம்மதேவராலும் பூஜிக்கப்பட்டது; பூமிக்கு அலங்காரமானது; அதனைத் தியானம் செய்தால் சகல ஆபத்துக்களும் நிவர்த்தியா கின்றன; மேலும், அது விசேஷ சுகத்தைக் கொடுக்கக் கூடியது; அதனை எங்களுடைய ஸ்தனங்களில் வைத்துத் தாபத்தைப் போக்கடியும். ஓ வீர! உம்முடைய உதட்டின் அமிருதத்தை எங்களுக்குக் கொடும். அது சம்போகத்தை விருத்திபண்ணக்கூடியது; துக்கத்தை நிவர்த்திக்கக்கூடி யது; வேணுகானத்தால் அழகானது; மற்ற சுகங்களை மறக்கச் செய்யக்கூடியது; நீர் பகலில் பிருந்தாவனஞ் சென்றிருக்கும்பொழுது உம்மைக் காணாமல் எங்களுக்கு அரை க்ஷணமானது யுகம் போலிருக்கிறது. சாயங்காலத் தில் வனத்திலிருந்து நீர் திரும்பிவரும்பொழுது வக்கிர மான தலைமயிர்களுள்ளதும், அழகு பொருந்தியதுமான உம்முடைய முகத்தைப் பார்க்கும் எங்களுடைய கண் களுக்கு இமைகளைச் சிருஷ்டித்த பிரம்ம தேவர் மூடரே யாம். (பகலில் உம்மைக் காணாமல் உம்மைத் தரிசிக்க வேண்டுமென்று ஆவலுடனிருந்த கண்கள் சாயங்காலத் தில் உம்மைத் தரிசிக்கும்பொழுது அவைகளுக்கு இமைக்

கொட்டல் விக்கினமாயிருப்பதால் அவைகளை யுண்டு பண்ணினவர் மூடரென்று சொல்லப்பட்டது.) ஓ அச்சுத! வஞ்சக! பர்த்தா, புத்திரன், சகோதரர்கள், குலபந்துக்கள் ஆகிய எல்லாரையும் விட்டு உம்மையே கதியாக நினைத்து வந்தவர்களும், உம்முடைய கானத்தைக் கேட்டு மோகித்தவர்களுமான ஸ்திரீகளை இரவில் எவன் வேண்டாமென்று விட்டுவிடுவான்! மேலும், ரகசியத்தில் உம்மால் செய்யப்பட்ட பிரதிக்ஞையை நினைத்தும், புன்சிரிப்புள்ள முகத்தையும், அன்பு பொருந்திய பார்வையையும், லக்ஷ்மிதேவி வசிக்கும் விசாலமான மார்பையும் பார்த்து எங்களுக்கு மிகுந்த ஆசை உண்டாகிறது. மனது மோகிக்கிறது. ஓ கிருஷ்ண! உம்முடைய அவதாரமானது கோகுலம், பிருந்தாவனம் இவைகளில் வசிப்பவர்களுடைய பயத்தை நிவர்த்திக்கின்றது. சகல மங்களத்தையும் கொடுக்கிறது. பக்தர்களாகிய எங்களுடைய மனத்தின் தாபத்தை எது போக்கடிக்குமோ, அந்த ஔஷதத்தை உம்மிடத்திலேயே ஆசைப்பட்டிருக்கும் எங்களுக்குக் கொடும். ஓ பிரியமானவரே! உம்முடைய மிருதுவான பாதாரவிந்தத்தைக் கெட்டியான எங்களுடைய ஸ்தனங்களில் மிகவும் பயந்து மெள்ள மெள்ள வைத்துக்கொள்ளுகிறோம். அந்தக் காலால் நீர் வனத்தில் சஞ்சரிக்கும்பொழுது உம்முடைய பாதங்களுக்குக் கற்களால் உபத்திரவம் உண்டாகாமல் இருக்கவேண்டுமே யென்று உம்மையே ஜீவனாகக் கொண்ட எங்களுடைய மனமானது கலங்குகிறது (விசாரத்தை யடைகிறது.)

# அத்தியாயம்—32

## கிருஷ்ணன் கோபிகைகளுக்குத் தரிசனங் கொடுத்தது

1—16. இப்படிக் கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய குணங்களைக் கானஞ் செய்துகொண்டும், பலவகையாகப் பிரலாபித்துக்கொண்டும் உரக்க அழுதார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் சிரித்த முகத்துடன் அவர்களுக்குத் தரிசனங் கொடுத்தார். மேலும் அவர் பீதாம்பரத்தைத் தரித்தவராகவும், மன்மதனுக்கும் மோகத்தை யுண்டு பண்ணக்கூடியவராகவும் இருந்தார். பிராணன் வந்தவுடன் கை, கால் முதலிய அவயவங்கள் சேஷ்டிப்பது போல ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்த கோபிகைகள் பிரியத்தால் மலர்ந்த கண்களுள்ளவர்களாய் எல்லாரும் எழுந்திருந்தார்கள். அவர்களில் ஒருத்தி இரு கைகளினால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய தாமரை மலர் போன்ற கையைப் பிடித்துக்கொண்டாள். மற்றொருத்தி சந்தனப்பூச்சுள்ள அந்தக் கையைத் தோளில் எடுத்து வைத்துக்கொண்டாள். மற்றொருத்தி ஸ்ரீ கிருஷ்ணனுடைய தாம்பூல ரசத்தை இரு கைகளால் வாங்கினாள். மற்றொருத்தி தாபமுள்ள ஸ்தனங்களில் பகவானுடைய பாதாரவிந்தத்தை வைத்துக்கொண்டாள். மற்றொருத்தி புருவ நெறித்தலுடன் உதடுகளைக் கடித்துக்கொண்டு, அன்பு பொருந்திய கோபமுள்ளவளாகி (பிரணய கோபம்) கடைக்கண்ணால் அடிப்பவள்போல ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்தாள். சாதுக்கள் பகவானுடைய பாதாரவிந்தத்தை அடிக்கடி சேவித்தும் எப்படிப் போதுமென்ற திருப்தியடைகிறதில்லையோ, அப்படி பகவானுடைய தாமரை

மலர்போன்ற முகத்தைக் கண்கொட்டாமல் பார்த்தும், இன்னுமொருத்தி போதுமென்ற திருப்தி யடையவில்லை. மற்றொருத்தி வெளியிலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண் வழியாக இருதயத்திற்குக் கொண்டுபோய்க் கண்களை மூடிக்கொண்டு சரீரத்தில் மயிர்க்கூச்சலை யடைந்து, யோகிபோல அதிக ஆனந்தமுள்ளவளாக இருந்தாள். இப்படி அந்தக் கோபிகைகள் எல்லாரும் ஸ்ரீ பகவானைத் தரிசித்து, அதனாலுண்டாகிய ஆனந்தத்தால் சுகமடைந்து ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்ததாலுண்டாகிய தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டார்கள். அது ஸம்ஸாரிகள் பிரம்ம நிஷ்டனை அடைந்து, சகல தாபங்களையும் நிவர்த்தித்துக் கொள்வதுபோலிருந்தது. இப்படியிருந்த ஆனந்தமுள்ள அந்தக் கோபிகைகள் பகவானைச் சுற்றிக்கொண்டிருந்தது ஸத்வம் முதலிய சக்திகள் பரமாத்மாவைச் சுற்றிக்கொண் டாற்போலிருந்தது. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அந்த ஸ்திரீகளை யமுனையின் மணல் திட்டுக்கு அழைத்து வந்தார். அவ்விடத்தில் குந்தம், மந்தாரம் முதலிய புஷ்பங்கள் புஷ்பித்து, அதன் வாசனையுடன் காற்று வீசிற்று; வண்டுகள் பாடின; சரத்காலமாகையால் சந்திரிகை சுத்தமாகப் பிரகாசித்தது; அதனால் இருளில்லாமலிருந்தது; யமுனா நதியின் கைகள்போன்ற அலைகளால் மிருதுவான மணல்கள் பரப்பப்பட்டிருந்தன; அது மிகவும் சுககரமாக இருந்தது; வேதங்கள் கர்மகாண்டத்தில் ஈசுவரனைக் காணாமல் ஞான காண்டத்தில் ஈசுவரனை யடைந்து எப்படி மனோரத பூர்த்தியை யடைகின்றவோ, அப்படி அந்தக் கோபிகைகள் பகவானைத் தரிசித்து, மனதில் தாபமற்றவர்களாகி, பூர்ண மனோரதமுள்ளவர்களாக ஆனார்கள். மேலுமவர்கள் ஸ்தனங்களிலுள்ள குங்குமங்களால்

அடையாளமிடப்பட்ட தங்களுடைய மேல் வஸ்திரங்களை அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஆசனமாக மணலில் விரித்தார்கள். யோகீசுவரர்களுடைய இருதயத்தில் வசிப்பவரான ஸ்ரீ கிருஷ்ணன் கோபஸ்திரீகளுடைய உத்தரீயத்தில் உட்கார்ந்து, கோபிகைகளுடைய கூட்டத்திலிருந்து பிரகாசித்தார். மூவுலகத்திலுள்ள சௌந்தரியங்கள் யாவும் ஒன்றுசேர்ந்து ஒருவிடத்தில் வசித்தாற்போல ஸ்ரீ கிருஷ்ணனுடைய தேகமானது மிக்க அழகுள்ளதாகப் பிரகாசித்தது. அப்பொழுது அந்தக் கோபிகைகள் மன்மதனை விருத்திசெய்கிற ஸ்ரீ கிருஷ்ணனைச் சிரிப்பு, விளையாட்டு இவைகளுள்ள பார்வையால் பூஜித்து, கைகால்களைப் பிடித்துக்கொண்டும், கொஞ்சம் கோபித்துக் கொண்டும், 'கிருஷ்ணா! லோகத்தில் சிலர் தங்களைச் சேவிக்கும் ஜனங்களுடைய பக்திக்குத் தக்கபடி அவர்களிடத்தில் ப்ரீதிசெய்கிறார்கள். மற்றுஞ் சிலர் தங்களைச் சேவியாமலிருந்தாலும் அவர்களுடைய சிசுருஷையை எதிர்பாராமலேயே அவர்களுடைய கார்யத்தைப் பூர்த்தி செய்கிறார்கள். இன்னுஞ் சிலர் சேவிப்பவர்களிடத்திலும், சேவியாமலிருப்பவர்களிடத்திலும் ப்ரீதி செய்கிறதில்லை. இதன் காரணத்தைத் தெளிவாகச் சொல்லவேண்டும்" என்று, 'பகவான், செய்த உபகாரத்தை நினைக்காதவர்' என்பதை மனத்தில் வைத்துக்கொண்டு கேட்டார்கள்.

17—23. அதனைக் கேட்ட பகவான், கோபிகைகளை நோக்கி, "ஓ தோழிகளே! பிறர் செய்த உபகாரத்திற்காகப் பதில் உபகாரம் செய்து ஒருவருக்கொருவர் சிநேகிப்பவர்கள் தங்கள் கார்யத்திற்காக முயற்சிப்பவர்களாக ஆகிறார்கள். அந்த விஷயத்தில் உண்மையான ப்ரியமாவது சிநேகமாவது தர்மமாவது இல்லை. அது தங்களுடைய

காரியத்திற்காக ஏற்பட்டதே யொழிய வேறில்லை. (கறவை மாட்டிற்குப் புல் முதலியவைகள் கொடுத்துப் போஷிப்பது போல் ஆகிறதென்று கருத்து.) தகப்பனுர் தன் உத்தரவின்படி நடக்காத புத்திரனிடத்திலும் எப்படிப் பிரியப்படுகிருரோ, அப்படி எவர்கள் தங்களை அனுசரியாமல் இருப்பவர்களிடத்திலும் மிக்க தயவுடன் பிரீதிசெய்கிருர்களோ, அந்த விஷயத்தில் தர்மம், ஸ்நேகம் இரண்டும் சுத்தமானதாக இருக்கும். பரமாத்மாவினிடத்திலேயே ரமித்துக்கொண்டிருப்பவர்கள், விஷயங்களில் வைராக்கியமுள்ளவர்கள், செய்த உபகாரத்தை மறந்தவர்கள், உபகாரஞ் செய்பவர்களுக்கு துரோகஞ் செய்பவர்கள் ஆகிய நான்கு வகையான மனிதர்களும் தங்களைச் சேவிப்பவர்களிடத்திலும் பிரீதிசெய்ய மாட்டார்கள். சேவியாமலிருப்பவர்களிடத்தில் பிரீதி செய்வார்களா? மேற்காட்டியவைகளில் நான் ஒரு வகுப்பிலும் சேர்ந்தவனல்ல. ஓ தோழிகளே! ஆனாலும் பக்தர்களுக்கு என்னிடத்தில் இடைவிடாமல் பக்தியுண்டாவதற்காக அவர்களை நான் அனுசரிக்கிறதில்லை. நான் மிகுந்த கிருபையுள்ளவன்; தரித்திரன், கையிலிருந்த பணம் காணுமற்போனுல் அந்த விசாரத்தால் எப்படிப் பசி முதலியவைகளை மறந்துவிடுகிருனோ, அப்படி என்னுல் உபேக்ஷிக்கப்பட்ட பக்தர்கள் எப்பொழுதும் என்னையே நினைத்துக்கொண்டிருப்பார்கள். இப்பொழுது நீங்கள் 'இது யுக்தம்; இது அயுக்தம்' என்பதைக் கவனியாமல் லோகத்தை அலட்சியஞ் செய்தும், தர்மம், அதர்மம் இவைகளைக் கவனிக்காததால் வேதத்தை விட்டும், ஸ்நேகத்தைக் கவனியாமல் பந்துக்களைத் தள்ளியும், என்னையே கதியென்று நினைத்தும் வந்தவர்களாகையால் உங்களுக்கு என்னுடைய ஞாபகம்

எப்பொழுதும் இருக்கவேண்டுமென்று உங்களுடைய கண்ணுக்குப் புலப்படாமல் உங்களுடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு மறைந்திருந்தேன். ஆனதால் உங்களிடத்தில் பிரியமுள்ளவனை என்னிடத்தில் அருவைப்பட வேண்டாம். விடமுடியாத ஸம்ஸார ஆசையை ஒழித்துக் கபடமில்லாமல் என்னை நீங்கள் உபாஸித்ததால் வெகு காலம் நான் பதில் உபகாரஞ் செய்தாலும் அதற்குச் சமமாக ஆகாது. ஆனதால் நீங்கள் செய்த நல்ல காரியத்திற்கு அதுவே பதில் உபகாரஞ் செய்யவேண்டும்" என்று சொன்னார்.

---

## அத்தியாயம்—33

### ராஸக்ரீடை

1—27. "இம்மாதிரியான பகவானுடைய மனோஹரங்களான வார்த்தைகளைக் கேட்டும், அவருடைய சரீரத்தைப் பார்த்தும் கோபிகைகள் அவரை விட்டுப் பிரிந்ததாலுண்டான தாபத்தைவிட்டுச் சுகமடைந்தார்கள். அப்பொழுது கோவிந்தர் தம்மை அனுசரித்தவர்களும், தம்மிடத்தில் பிரியமுள்ளவர்களும், ஒருவருக்கொருவர் கைகோர்த்துக்கொண்டிருப்பவர்களுமான அந்த உத்தம ஸ்திரீகளுடன் ராஸக்ரீடை செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது அந்த ஸ்திரீகளை வட்டமாக நிறுத்தி, ஸ்ரீ கிருஷ்ணன் இரண்டு ஸ்திரீகளின் நடுவில் தாம் பிரவேசித்து, இரு கைகளாலும் இரண்டு ஸ்திரீகளுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டார். எல்லாக் கோபிகைகளும் தங்கள் தங்கள் சமீபத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் இருக்கிறுரென்று நினைத்திருந்தார்கள். கோபிகைகளுடைய கூட்டத்திற்கு

அலங்காரமான ராஸோத்சவத்தை யோகேசுவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் ஆரம்பித்தார். (யோகேசர் என்று சொன்னபடியால் அவருடைய யோக மகிமையால் எல்லா ஸ்திரீகளும் தங்கள் தங்கள் சமீபத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் இருப்பதாகவே நினைத்திருந்தார்கள்). இந்த மஹோத்சவத்தைத் தரிசிப்பதற்காகத் தேவர்கள் ஸ்திரீகளுடன் விமானத்தின் மீதேறிக்கொண்டு வந்தார்கள். ஆகாயத்தில் தேவ துந்துபிகள் முழங்கப்பட்டன. புஷ்பமாரி பெய்தது. சிறந்த கந்தர்வர்கள் தங்கள் ஸ்திரீகளுடன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சுத்தமான கீர்த்தியைக் கானஞ் செய்தார்கள். இப்படிப் பகவான் ராஸக்ரீடை செய்யும்பொழுது அந்த மண்டலத்திலுள்ள ஸ்திரீகளுடையவும், ஸ்ரீ கிருஷ்ணர்களுடையவும் (அநேக கிருஷ்ணனாக இருந்தபடியால் கிருஷ்ணர்களென்று சொல்லப்பட்டது) வளைகள், பாதச்சிலம்புகள், சலங்கைகள் ஆகிய இவைகளுடைய சப்தம் மிகுதியாக இருந்தது. அந்த ஸ்திரீகளுடைய மத்தியில் ஸ்ரீ கிருஷ்ணன் சுவர்ணமணிகளுடைய நடுவில் மேலான மரகத ரத்தினம் போலப் பிரகாசித்தார். மேகங்களில் மின்னல்கள் பிரகாசித்தாற்போல் அந்த ஸ்திரீகளும் பாதங்களைத் தூக்கிவைப்பதாலும், கைகளை அசைப்பதாலும், சிரிப்புடன் கூடிய புருவத்தின் விளையாட்டுகளாலும், வணங்கிய இடுப்புகளாலும், அசையும் ஸ்தன வஸ்திரங்களாலும், கன்னங்களில் அசைகின்ற குண்டலங்களாலும், தலை, ஒட்டியாணம் ஆகிய இவைகள் அவிழ்ந்து, முகத்தில் வியர்வையுள்ளவர்களாகிக் கானஞ் செய்துகொண்டு அநேகம் கிருஷ்ணர்களுடைய நடுவில் பிரகாசித்தார்கள். மேலும் நல்ல கண்டஸ்வரமுள்ளவர்களும், கானஞ் செய்பவர்களும், நர்த்தனஞ் செய்பவர்களும், ரதியில் பிரியமுள்ளவர்களுமான அந்த

ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரீர ஸ்பரிசத்தால் சந்தோஷத்தை அடைந்து உரக்கக் கானஞ்செய்தார்கள். அந்தக் கானத்தால் இந்த ஜகத் முழுவதும் வியாபரிக்கப்பட்டது. அவர்களில் ஒருத்தி ஸ்ரீ கிருஷ்ணனுடன் சேர்ந்து ஸ்வர ஜாதிகள் தனியே தெரியும்படி கானஞ்செய்தாள். அதனைக் கேட்டுப் பகவான் மிக்க ப்ரியமடைந்து, 'நல்லது, நல்லது' என்று சிலாகித்து, அந்த ஸ்வர ஜாதிகளைத் துருவ தாளத்திற்குத் தக்கபடி பாடி, அவளைக் கௌரவப்படுத்தினர். இப்படிப் பகவான் ராஸக்ரீடை செய்து ஸ்திரீகளைச் சந்தோஷப் படுத்தினர். ராஸக்ரீடை செய்து களைத்த ஒருத்தி, நழுவிய மல்லிகா புஷ்பமுள்ளவளாகித் தன் கையைப் பகவானுடைய தோளில் வைத்தாள். மற்றொருத்தி சந்தனப் பூச்சுள்ளதும், உத்பல புஷ்பத்தின் வாசனைபோன்ற வாசனையுள்ளதுமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய கையை முகர்ந்து, மயிர்க்கூச்சலுள்ளவளாகி அதனை முத்தமிட்டுக்கொண்டாள். மற்றொருத்தி நர்த்தனஞ் செய்ததால் அசைந்த குண்டலங்களுடைய காந்தியால் அழகான கன்னத்தை ஸ்ரீ கிருஷ்ணனுடைய கன்னத்துடன் சேர்த்து முத்தமிட்டுக்கொள்ளும்பொழுது பகவான் அவளுக்குத் தம்முடைய முகத்திலிருந்த தாம்பூலத்தைக் கொடுத்தார். பாதசரம், ஒட்டியாணச் சலங்கை ஆகிய இவைகள் சப்திக்கும்படி நர்த்தனஞ்செய்தும் பாடிக்கொண்டுமிருந்த மற்றொருத்தி, அதனால் களைத்துப் பகவானுடைய கையை ஸ்தனங்களில் வைத்துக்கொண்டாள். லக்ஷ்மீதேவிக்கு மாத்திரம் பர்த்தாவாக இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைக் கோபிகைகள் பர்த்தாவாக அடைந்து, அவருடைய குணங்களைக் கானஞ்செய்துகொண்டு விளையாடினர்கள். இப்படி அந்தக் கோபிகைகள் அந்த ராஸ சபையில் பகவானுடன் சேர்ந்து

கீர்த்தனம் செய்தார்கள். வண்டுகள் பாடின; காதில் வைத்துக்கொள்ளப்பட்ட நீலோத்பல புஷ்பங்களாலும், தொங்குகின்ற தலைமயிர்களாலும், வியர்வைத் துளிகளாலும் அந்த ஸ்திரீகளுடைய முகங்கள் அழகாக இருந்தன. சிறுவன் தன்னுடைய பிரதிபிம்பத்துடன் விளையாடினாற் போலப் பகவான் தம்முடைய ஆலிங்கனம், கையால் தொடுவது, அன்பு பொருந்திய பார்வை, கம்பீரமான விளையாட்டு, சிரிப்பு ஆகிய இவைகளைக் கோபிகைகளிடத்தில் பாவச் செய்து அவர்களுடன் கிரீடித்தார். அந்தக் கோபிகைகள் பகவானுடைய சரீர ஸ்பரிசத்தால் அதிக ஆனந்தத்தை அடைந்து, பரவசமான இந்திரியங்களுள்ளவர்களாகி, அவிழ்க்கும் நழுவினவைகளுமான தலைமயிர், வெண் பட்டு, ஸ்தன வஸ்திரம் (ரவிக்கை), மாலை, ஆபரணம் ஆகிய இவைகளைத் திருப்பவும் முடிந்துகொள்வதற்கும், தரிப்பதற்கும் ஞாபகமில்லாதவர்களாக இருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடைய விளையாட்டைக் கண்ணுற்ற தேவ ஸ்திரீகளும் காமவெறி கொண்டு மோகித்தார்கள். சந்திரனும், மற்ற கிரகங்களும் அந்த ராஸக்ரீடையைப் பார்த்து ஆச்சரியமடைந்தார்கள். எவ்வளவு கோபிகைகளிருந்தார்களோ, அவ்வளவு கிருஷ்ணனாக வேஷந் தரித்துப் பகவான் தாம் ஆத்மாராமரானாலும் அவர்களுடன் ரமித்தார் (ஸ்திரீகளைச் சந்தோஷப்படுத்தினார்). இப்படி விளையாடினதால் அந்த ஸ்திரீகளுடைய முகங்களில் வியர்வைத் துளி யுண்டாயிற்று. அதனைப் பகவான் கருணையுடன் மிகவும் சுகமான தம்முடைய கையால் துடைத்தார். பகவானுடைய கரத்தின் ஸ்பரிசத்தால் அதிக ஆனந்தத்தை யடைந்த கோபிகைகள் ஸ்வர்ண குண்டலங்களாலும், பிரகாசிக்கும் முகங்களாலும், அமிருதம் போன்ற

சிரிப்பு பார்வை இவைகளாலும் ஸ்ரீ கிருஷ்ணனைப் , அவருடைய புண்ணியகரமான சரிதங்களைக் கானஞ்செய்தார்கள். மேலும், அந்தப் பகவான் லோக மரியாதையையும், வேத மரியாதையையும் மீறி, அந்தச் சிரமத்தை நிவர்த்தித்துக்கொள்வதற்காக அந்த ஸ்திரீகளுடன் ஜலத்தில் பிரவேசித்தார் (ஜலக்ரீடை செய்ய ஆரம்பித்தார்). அந்த ஸ்ரீ கிருஷ்ணனால் தரிக்கப்பட்ட மாலையில் ஸ்திரீகளுடைய ஸ்தனத்திலுள்ள குங்குமம் ஒட்டியிருந்ததால் அதன் வாசனைக்காக வண்டுகள் கானஞ்செய்துகொண்டு அவர்பின் சென்றன. இப்படிப் பகவான் ஜலக்ரீடைக்காக ஜலத்தில் பிரவேசித்தது சிறந்த யானை பெண் யானைகளுடன் கரையை இடித்துக்கொண்டு ஜலத்தில் இறங்கினதுபோலிருந்தது. இப்படிப் பகவான் சிறந்த யானை போல ஜலக்ரீடை செய்யும்பொழுது கோபிகைகள் சிரித்த முகத்துடன் ஜலத்தை வாரி இறைத்துப் பகவானுக்கு அபிஷேகஞ் செய்தார்கள். தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்துத் துதித்தார்கள். இப்படி ஆத்மாராமராகிய பகவான் கிரீடித்தார். பின்னும் பகவான், ஜலத்திலுள்ள புஷ்பங்கள், கரையிலுள்ள புஷ்பங்கள் இவைகளுடைய வாசனையுள்ள காற்றினால் பிரகாசிக்கும் யமுனையின் கரையில் வண்டுகள், ஸ்திரீகள் ஆகிய இவர்களுடன் மதங்கொண்ட சிறந்த யானை பெண் யானைகளுடன் அலைவதுபோலச் சஞ்சரித்தார். இப்படி ஸத்யஸங்கல்பராகிய ஸ்ரீ கிருஷ்ணன் சரத்காலத்திய குணங்களுள்ளதும், சந்திரிகையால் பிரகாசிப்பதுமான அன்றைய ராத்திரி முழுவதும் ஸ்திரீகளுடன் கிரீடித்தார். ஆனாலும் அவர் காமனால் ஜயிக்கப்பட்டவரல்ல; காமனை ஜயித்தவர்" என்று சொன்னார்.

28—30. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "ஜகதீசராகிய பகவான் தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவும், அதர்மத்தை அடக்குவதற்காகவும் பூமியில் பூர்ணாம்சமாக அவதரித்தவரல்லவா? அவர் மேலும் தர்மத்தின் மரியாதையை ஏற்படுத்தியவர்; அதனைப் பிறருக்கு உபதேசிப்பவர்; பின்னும் அதைக் காப்பாற்றுகிறவர்; அப்படியிருக்க, அவரே தர்மத்திற்கு விரோதமாகப் பரஸ்திரீகளுடன் எப்படி ரமித்தார்? ஓ விரதங்களையநுஷ்டித்தவரே! யாதவர்களுக்கு அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணன் சகல காமனைகளையும் அடைந்தவரல்லவா? அப்படியிருந்தும், இம்மாதிரியான காரியத்தைச் செய்தாரென்றால் அதன் அபிப்பிராயம் இன்னதென்று தெரியவில்லை. இந்தச் சம்சயத்தை நிவர்த்திக்கவேண்டும்" என்று கேட்டார்.

31—41. அதனைக் கேட்ட சுகர் பரீக்ஷித்தை நோக்கி, "மேலானவர்கள் தர்மத்திற்கு விரோதமாக அநுஷ்டித்தும், பிடிவாதமான காரியங்களைச் செய்தும் இருக்கிறார்கள். (பிரம்மதேவர், இந்திரன், சந்திரன், விசுவாமித்திரர் முதலியவர்களென்று கருத்து.) எல்லாவற்றையும் புசிக்கின்ற அக்னிக்கு அபக்ஷ்ய பக்ஷணத்தால் எப்படித் தோஷமேற்படுகிறதில்லையோ, அப்படி மிக்க தேஜஸ்விகளானவர்கள் எதைச் செய்தாலும் தோஷமாக ஆகிறதில்லை. ஆனாலும், அவர்கள் செய்தார்களே என்று நினைத்து, சாமானிய ஜனங்கள் ஒருபொழுதும் அப்படிச் செய்யக்கூடாது; மூடத்தன்மையால் செய்தால் நாசத்தை அடைவான். பரமசிவன் விஷத்தைப் புசித்தாரென்று அதனை மற்றவர்கள் புசிக்கலாமா? நலவர்கள் (உத்தமர்கள்) எதைச் சொல்லியிருக்கிறார்களோ அந்த வார்த்தை சத்தியமானது. (அதன்படி அநுஷ்டிக்க

வேண்டும்.) அவர்கள் செய்த செய்கைகளில் சில ப்ரமாணங்களாகுமே யொழிய, மற்றவை ப்ரமாணங்க ளல்ல. ஆனதால் அவர்களுடைய செய்கைகளில் எவை அவர்களுடைய வார்த்தையை ஒத்திருக்குமோ அதனை புத்திமான் அநுஷ்டிக்கவேண்டும். ஆனல் மேலான ஈசுவரர்கள் ஏன் அப்படி ஸாகஸத்தைச் செய்யவேண்டும் என்றால், மேலானவர்கள் நல்ல கர்மத்தை அநுஷ்டித்ததால் புண்ணியமும் அவர்களுக்கில்லை; அதற்கு விரோதமாக நடந்ததால் அவர்களுக்கு பாத்யவாயமும் (பாபம்) இல்லை. அவர்கள் அகங்காரமற்றுக் கர்மங்களைச் செய் பவர்கள்; அப்படியிருக்க, பசு பட்சி முதலிய திர்யக் ஜந்துக்களுக்கும், மனிதர்களுக்கும், தேவர்களுக்கும் அதிபதியாகிய பகவான் அநுஷ்டித்த கர்மத்தில் நல்லது, கெட்டது என்ற பேதமுண்டா? மேலும், முனிகள் எவருடைய பாதாரவிந்த தூளியைச் சேவித்துத் திருப்தி யடைந்து யோகமகிமையால் கர்ம பந்தத்தை நிவர்த்தித்துக் கொண்டு, கட்டுப்படாமல் தங்களிஷ்டப்படி சஞ்சரிக்கிறார் களோ, அப்பேர்ப்பட்டவரும், இச்சையால் சரீரத்தை யெடுத்துக்கொண்டவருமாகிய (அவருடைய சரீரம் கர்மா தீனமல்லவென்று கருத்து) ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பந்த முண்டா? இல்லை. மேலும் கோபிகைகளுக்கும், அவர் களுடைய புருஷர்களுக்கும் எவர் உள்ளே அந்தர்யாமி யாகச் சஞ்சரிக்கிறாரோ, அவரே ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித் திருக்கிறார். அப்பேர்ப்பட்ட பகவான் மனுஷ்ய சரீரத்தை யெடுத்துக்கொண்டு எல்லா ஜனங்களையும் அநுக்ரஹிப்பதற் காக இம்மாதிரியான கிரீடைகளைச் செய்தார். அவைகளைக் கேட்ட மாத்திரத்தில் விஷயங்களில் மிக்க ஆசையுள்ள வனும் அந்தர்முகனாகிவிடுவான் (பகவானிடத்தில் பக்தி

யடைகிறான்). கோகுலவாசிகளான கோபர்கள் பகவானுடைய மாயையால் மோகித்துத் தங்கள் தங்கள் ஸ்திரீகளைப் பக்கத்திலிருப்பதாகவே நினைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் அசூயைப்படவில்லை. பிராம்ம முகூர்த்தத்தில் பகவானிடத்தில் பிரியமுள்ள அந்தக் கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிய மனமில்லாதவர்களானாலும், அவருடைய உத்தரவின்படி தங்கள் தங்கள் வீட்டிற்குச் சென்றார்கள். இப்படிப் பகவான் கோபஸ்திரீகளுடன் சேர்ந்து விளையாடின கதையை எவன் சிரத்தையுடன் சொல்லுகிறானோ, எவன் சிரத்தையுடன் கேட்கிறானோ அவன் பகவானிடத்தில் மிகுந்த பக்தியை அடைவான். சீக்கிரத்தில் சகல காமங்களையும் அடைவான் (வைராக்கியத்தை அடைவானென்று கருத்து).

## நோட்டு

ராஸக்ரீடை :—நர்த்தனஞ்செய்யும் அநேக புருஷர்களும் நர்த்தனஞ்செய்யும், அநேக ஸ்திரீகளுஞ் சேர்ந்து செய்யும் நர்த்தனம் ராஸமெனப்படுகிறது. சந்திரனும் மற்ற கிரகங்களும் :—பகவானுடைய லீலையைப் பார்த்துச் சந்திரன் ஆச்சரியமடைந்து, ஆகாயத்தில் தன்னை மறந்து நின்றார். அவர் கதி தடைப்படவே, பிந்தி வரும் கிரகங்களும் அசைவற்று நின்றன. அதனால் ராத்திரி அதி தீர்க்கமாக ஆயிற்று. ஆனதால் அன்றைய ராத்திரி முழுவதும் பகவான் விளையாடினார். கோகுலத்திலுள்ள சிறு பெண்கள் காத்தியாயனி.

PRINTED AT THE SUNDAY TIMES PRESS, MADRAS,
P/C. No.——— for SRI MAHA BHARATHAM PRESS,
QH. TR. 4—7-6-47—2,000 Copies.

# ஸ்ரீமத் பாகவதம்

## தசம ஸ்கந்தம்

## [இரண்டாம் பாகம்]

### அத்தியாயம் 34

### ஸுதர்சனனுடைய சாபமோக்ஷம்

1—10. ஒருக்கால் கோபர்கள் எல்லாரும் அம்பிகா வனஞ் சென்று அங்கிருக்கும் சர்வனை தரிசிக்க விரும்பியவர்களாகி எருதுகள் கட்டிய வண்டியின்மீதேறி அம்பிகா வனஞ்சென்றார்கள். ஓ! மஹாராஜ! அவ்விடத்தில் அவர்கள் ஸரஸ்வதி நதியில் ஸ்நானஞ் செய்து பசுபதியான மஹாதேவனையும் பார்வதியையும் பூஜாதிரவியங்களைக்கொண்டு பூஜித்தார்கள். மேலும் அவர்கள் பசுக்களையும், சுவர்ணத்தையும், வஸ்திரங்களையும், தேனையும், ருசியுள்ள அன்னத்தையும், "மஹாதேவன் எங்களிடத்தில் சந்தோஷத்தை அடையட்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்டு மிக்க ஆதரவுடன் பிராமணர்களுக்குக் கொடுத்தார்கள். மேலும் நந்தன், நந்தகன் முதலிய எல்லா கோபர்களும் அன்றைய ராத்திரி ஜலத்தைப் புசித்து மிக்க நியமத்துடன் ஸ்தல உபவாஸமிருந்தார்கள். அந்த ஸமயத்தில் ஒரு பெரிய பாம்பு மிகுந்த பசியுடன் சஞ்சரித்து அவ்விடம் வந்து படுத்திருக்கும் நந்தரை விழுங்கத் தொடங்கிற்று. அப்பொழுது நந்தர், "ஓ கிருஷ்ணா! கிருஷ்ணா! பெரியதான

ஸர்ப்பமானது என்னை விழுங்குகிறது. உன்னைச் சரண மடைந்தவனான என்னைக் காப்பாற்றும்” என்று கதறினார். அதனைக் கேட்ட கோபர்கள் சீக்கிரமாக எழுந்திருந்து பரபரப்புள்ளவர்களாகி, கொள்ளிக்கட்டைகளால் அந்த ஸர்ப்பத்தை அடித்தார்கள். அப்படி அடிக்கப் பட்டும் அந்த ஸர்ப்பம் நந்தனை விடவில்லை. அப்பொழுது ஸாத்வதர்களுக்கு அதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணன் அவ்விடம் வந்து தம்முடைய பாதத்தால் அந்த ஸர்ப்பத்தை உதைத்தார். அந்த ஸர்ப்பமானது பகவானுடைய பாதாரவிந்தம் பட்டமாத்திரத்தில் பாபங்களற்றதாகி அந்த ஸர்ப்ப சரீரத்தை விட்டு வித்யாதர ஸ்வரூபத்தை அடைந்தது. பின்னும் அந்த வித்யாதரன் சுவர்ண மாலைகளால் அலங்கரிக்க திவ்யசரீரத்துடன் பிரகாசிப்பவனாகி பகவானை நமஸ்கரித்தான்.

11-19. அதனைக் கண்ட பகவான் அவனை நோக்கி, “நீ யார்? நல்ல லக்ஷணங்களுள்ளவனாக இருக்கிறாய், மிகுந்த காந்தியுடன் பிரகாசிக்கிறாய். அப்படிப்பட்ட உனக்கு அல்பமான ஸர்ப்ப ஜன்மம் நேர்ந்த காரணமென்ன?” என்று கேட்டார். அதனைக் கேட்ட அவன் பகவானை நோக்கி, “நான் ஸுதர்சனனென்ற கந்தர்வன்; மிக்க அழகுள்ளவன்; அப்படிப்பட்ட நான் விமானத்தின்மீதேறி சஞ்சரிக்கும்பொழுது விரூபர்களான ஆங்கிரஸ மஹரிஷிகளைப் பார்த்துப் பரிஹாஸஞ்செய்தேன். ஆதலால் இயற்கையில் கருணையுள்ளவர்களான அவர்கள் ஸர்ப்ப ஜன்மத்தை அடையும்படி சாபத்தைக் கொடுத்து அநுக்கிரகித்தார்கள். அதனால் லோக குருவாகிய உம்முடைய பாதம் என்னுடைய சரீரத்தில் படும்படியும், அதனால் பாபங்கள் நிவர்த்தியாகி சுத்தனாகும்படியும் நேர்ந்தது. ஓ பாபங்களை நிவர்த்திப்பவரே! ஸம்ஸாரத்தி

லிருந்து பயந்து சரணமடைகிறேன். உம்முடைய பாத ஸ்பரிசத்தால் சாபம் விலகிற்று. ஆனதால் விடைகொடுத்தனுப்பும். ஓ மஹா யோகியே! மஹா புருஷ! ஸாதுக்களுக்கு அதிபதியே! ஸகல லோகங்களுக்கும் அதிபதிகளாகிய ப்ரம்மதேவர் முதலியவர்களுக்கும் அதிபதியே! ஓ கிருஷ்ணா! உம்மைத் தரிசித்தமாத்திரத்தில் பிராமண சாபம் நீங்கிற்று. எனக்கு விடைகொடும். எவருடைய திவ்ய நாமதேயம், கேட்பவர்களையும், உச்சரிப்பவர்களையும், கேட்கச் செய்பவர்களையும் உடனே சுத்தப்படுத்துகிறதோ, அப்பேர்ப்பட்ட உம்முடைய திவ்யமான பாதத்தால் தொடப்பட்ட எனக்குப் பாபமிருக்குமா?" என்று ஸுதர்சனன் பகவானிடம் விடைபெற்று, அவருக்குப் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து ஸ்வர்க்கஞ் சென்றான். நந்தருக்கு நேர்ந்த ஆபத்தும் நிவர்த்தியாயிற்று. கோபர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மஹிமையைப் பார்த்து ஆனந்தமடைந்து அவ்விடத்தில் செய்யவேண்டிய நியமங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதையை மிக்க ஆதரவுடன் சொல்லிக்கொண்டு கோகுலஞ் சென்றார்கள்.

**20—32.** பின்னொருநாள் அற்புதமான பராக்கிரமமுள்ள கோவிந்தரும், பலராமனும் ராத்திரியில் பசுக்கள், கோபிகைகள் ஆகிய இவர்களுடைய நடுவில் விளையாடினார்கள். சுத்த வஸ்திரத்தை உடுத்திக்கொண்டவர்களும், புஷ்பமாலையைத் தரித்தவர்களுமான அவர்களைக் கோபிகைகள் துதித்தார்கள். சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசித்தன. குமுத புஷ்பத்தின் வாஸனையுள்ள காற்று வீசிற்று. மல்லிகா புஷ்பங்களுடைய வாஸனையால் வண்டுகள் மதித்து ஸஞ்சரித்தன. அந்த ஸமயத்தில் ஸ்வர மண்டலங்களுடைய மூர்ச்சனையை ஒரே ஸமயத்தில் ராம

கிருஷ்ணர்கள் செய்துகொண்டு ஸகல பிராணிகளுடைய மனத்திற்கும், காதுகளுக்கும் இனிமையாகக் கானஞ் செய்தார்கள். அந்த கானத்தைக் கேட்ட கோபிகைகள் தங்களை மறந்தார்கள். அவர்கள் இடையில் தரித்திருந்த வஸ்திரம் நழுவியது: தலைமயிர் அவிழ்ந்தது; இப்படி ராம கிருஷ்ணர்கள் இஷ்டப்படி விளையாடிக்கொண்டும், மதங் கொண்டவர் போல கானஞ்செய்துகொண்டுமிருக்கும் ஸமயத்தில் குபேரனுடைய வேலைக்காரனாகிய சங்கசூட னென்றவன் அவ்விடம் வந்தான். மேலும், அவன் ராம கிருஷ்ணர்களால் காப்பாற்றப்படும் அந்த கோபிகை களைப் பயமின்றி வடக்கு திக்கை நோக்கித் துரத்திக் கொண்டு சென்றான். அவர்கள் "ஓ கிருஷ்ண! ராம!" என்று கதறினார்கள். அப்பொழுது ராமகிருஷ்ணர்க ளிரு வர்களும், பசுக்களைப் புலி அபகரித்தாற்போல தங்க ளுடைய ஸ்திரீகளை சங்கசூடன் அபகரிப்பதைப் பார்த்து "பயப்படவேண்டாம்" என்று சொல்லிக் கொண்டு ஸாலமரத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அவன்பின் சென்று குஹ்யகர்களுக்குள் அதமனாகிய சங்க சூடனைத் தடுத்தார்கள். அவன் காலமிருத்யுபோன்ற இவர்களைக் கண்டவுடன் பயந்து, ஸ்திரீகளை விட்டுவிட்டு, பிழைத்தால் போதுமென்ற எண்ணத்துடன் ஓடினான். ஸ்ரீ கிருஷ்ணன் அவனுடைய தலையிலுள்ள ரத்தினத்தை அபகரிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அவனைத் துரத்திக்கொண்டு அவன்பின் சென்றார். பலராமன் ஸ்திரீகளைக் காப்பாற்றிக்கொண்டு அவ்விடத்திலிருந்தார். பகவான் அந்த குஹ்யகன்பின் சென்று முஷ்டியால் அவனை அடித்துக் கொன்றார். பின்னுமவர் அவனுடைய தலையிலிருக்கும் மிக்க ஒளியுள்ள ரத்தினத்தை எடுத்து வந்து கோபிகைகள் பார்த்திருக்கும்பொழுது தமையனாகிய பலராமனிடம் கொடுத்தார்.

# அத்தியாயம் 35

## கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ண சரித்ரத்தை வர்ணித்தது

**1—26.** கிருஷ்ணன் காட்டிற்குச் சென்றிருக்கும் போது கோபிகைகள் அவரிடத்திலேயே மனத்தைச் செலுத்தி, ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதங்களைக் கானஞ் செய்துகொண்டு சிரமப்பட்டுப் பகல்களைக் கழித்தார்கள். எப்படியெனில்—"ஓ கோபிகைகளே! ஸ்ரீ கிருஷ்ணன் இடது தோளில் இடது கன்னத்தைச் சாய்த்துவைத்துக் கொண்டு, அசையும் புருவங்களுடன் உதட்டில் புல்லாங் குழலை வைத்து மிருதுவான விரல்களால் அதன் துவாரங் களை அடைத்து எப்பொழுது வேணுகானஞ் செய் கிறாரோ, அப்பொழுது ஆகாசத்தில் விமானத்தில் ஸஞ் சரிக்கும் ஸித்தர்களுடைய ஸ்திரீகள் தங்கள் புருஷர்க ளுடன் அந்தக் கானத்தைக் கேட்டு ஆச்சரிய மடைகிறார் கள். பின்பு காமவெறி கொண்டவர்களாகி, அவிழ்ந்த எக்கு முடிச்சைக் கட்டிக்கொள்ளாமலேயே வெட்கத் துடன் மோகிக்கிறார்கள். (அப்படிப்பட்ட ஸ்ரீ கிருஷ் ணனைவிட்டுப் பிரிந்து நாம் எப்படி வசிப்போம்? என்பது கருத்து.) ஓ பெண்களே! ஹாரம்போல் வெண்மையான சிரிப்புள்ளவரும், மார்பில் லக்ஷ்மீதேவியுள்ளவரும், உபத் திரவப்பட்டவர்களை சுகப்படுத்துகிறவருமான ஸ்ரீ கிருஷ்ணன் எப்பொழுது வேணுகானஞ் செய் கிறாரோ, அப்பொழுது கோகுலத்திலுள்ள விருஷபங் களும், பசுக்களும், மிருகங்களும் அந்த சப்தத்தைக் கேட்டு, பற்களால் கடித்த கவளங்களுடன் காதுகளை உயரத் தூக்கிக்கொண்டு தூங்கினவைபோலும், எழுதிய சித்திரங்கள் போலும் இருக்கின்றன. மேலும், அந்த பக வான் மயில் தோகைகளாலும், பலவகையான தாதுக்களா

லும், தளிர்களாலும் மல்லர்கள் போல வேஷங்கொண்டு கோபர்களுடன் வேணுகானஞ்செய்து எப்பொழுது பசுக்களை அழைக்கிறாரோ, அப்பொழுது நதிகள் அந்த சப்தத்தைக் கேட்டு அலைகளாகிய கைகளை நீட்டிக் காற்றினால் அசையும் பகவானுடைய பாதாரவிந்த தூளியை ஆசைப்பட்டதுபோல ஓடாமல் நிற்கின்றன. அவைகள் எங்களைப்போல் புண்ணியஞ்செய்யாதவைகள்; பின்னும் கோபர்களால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டவரும், புருஷன்போல ஸ்திரமான ஐசுவர்யமுள்ளவருமான கிருஷ்ணன் காட்டில் ஸஞ்சரித்து, மலையின் அடிவாரங்களிலிருந்து வேணுகானஞ்செய்து எப்பொழுது பசுக்களை அழைக்கிறாரோ, அப்பொழுது காட்டிலுள்ள கொடிகள், புஷ்பங்கள், பழங்கள் ஆகிய இவைகளால் பூர்ணங்களாகி, வணங்கிய கிளைகளுடன் தங்களிடத்திலும் அந்தர்யாமியாக வசிக்கும் விஷ்ணுவைக் காண்பிப்பவைபோல மதுதாரைகளை வர்ஷித்தன. மேலும், அழகான திலகமுள்ளவரான ஸ்ரீ கிருஷ்ணன் வேணுகானஞ் செய்யும் பொழுது வனமாலையின் வாசனையாலும், துளசியின் மதுவாலும் மயங்கிய வண்டுகளும் உரக்க கானஞ்செய்தன. அப்போது குளங்களில் வசிக்கும் ஸாரஸம், ஹம்ஸம் முதலிய பறவைகள் கானத்தில் ஆசைப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து ஒரே மனத்துடன் கண்களை மூடிக் கொண்டு மௌனமாக இருக்கின்றன. பின்னும், எப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணபகவான் பலராமருடன் காட்டுப் புஷ்பங்களை அலங்கரித்துக்கொண்டு மலைகளின் தாழ்வரைகளில் வேணுகானஞ்செய்து ஸகல ஜகத்தையும் சந்தோஷப்படுத்துகிறாரோ, அப்பொழுது பெரியோர்களைப் பூஜிக்காமல் செல்வது சரியல்லவென்று நினைத்து மேகமானது தனக்கு மித்திரராகிய ஸ்ரீ கிருஷ்ணன்மீது

புஷ்பங்களை வர்ஷித்துக் குடை பிடிப்பதுபோல் உண்டுபண்ணிற்று. ஓ யசோதையே! உன்னுடைய புத்திரன் பலவகையான விளையாட்டில் தேர்ந்தவராகை யாலும், வேணுகானஞ் செய்வதில் ஸ்வரம் முதலியவைகளைத் தாமாகவே கண்டுபிடித்தவராகையாலும், புல்லாங் குழலை உதட்டில் வைத்து நிஷாதம் முதலிய ஸ்வரங்களைப் பாடும்பொழுது இந்திரன், பரமசிவன், பிரம்மா முதலிய தேவர்கள் அடிக்கடி அந்த ஸ்வரங்களைக் கேட்டு கழுத்தை வணங்கிக்கொண்டு தாங்கள் மிகவுந் தெரிந்தவர்களானாலும் அந்த ஸ்வரபேதங்களை யறியாமல் மோகிக்கிறார்கள். (பரமசிவன் முதலியவர்கள் மோகிக்கும்பொழுது நாங்கள் மோகிப்பதற்கு என்ன ஆக்ஷேபம் என்பது கருத்து.) பின்னும், அந்த ஸ்ரீ கிருஷ்ணன் பசுக்களின் குளம்புகளால் பூமிக்கு நேர்ந்த உபத்திரவத்தை த்வஜ ரேகை, வஜ்ர ரேகை, தாமரஸ ரேகை, அங்குசரேகை முதலியவைகளால் விசித்திரமான தம்முடைய காலடிகளால் நிவர்த்தித்துக்கொண்டு குட்டியானைபோல் எப்பொழுது பிருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கிறாரோ, அப்போது நாங்கள் தலைமுடிச்சு அவிழ்ந்ததையும், வஸ்திரம் நழுவினதையும் அறியாமல் மரங்கள்போல அசைவற்று நிற்கிறோம். பசுக்களின் மணிகளைத் தரித்தவராகிய ஸ்ரீகிருஷ்ணன் பசுக்களை எண்ணிக்கொண்டு துளசி மாலையைத் தரித்து ஸிநேகிதனுடைய தோளில் கையை வைத்துக்கொண்டு எப்பொழுது வேணுகானஞ் செய்கிறாரோ, அப்பொழுது பெண்மான்கள் அந்தக் கானத்தைக் கேட்டு அதில் நோக்கமுள்ளவைகளாகி மிக்க குணசாலியாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய சமீபஞ் சென்று கோபிகைகள்போல எல்லா ஆசைகளையும் ஒழித்து நிற்கின்றன. ஓ! மிக்க புண்ணியம் பெற்றவளாகிய யசோதையே! உன்னுடைய குமார

ராகிய ஸ்ரீகிருஷ்ணன் குந்த புஷ்பங்களின் மாலையைத் தரித்து, கோபர்களுடனும் பசுக்களுடனும் சிநேகிதர்களுக்கு சந்தோஷத்தை யுண்டுபண்ணிக்கொண்டு யமுனா நதியில் விளையாடும்போது தென்றல்காற்றானது வீசுகிறது. தேவர்கள் வந்திகள்போல ஸ்தோத்திரம் செய்துகொண்டு காணிக்கைகளுடன் பகவானை உபாஸிக்கிறார்கள். பின்னும், தேவகியின் வயிற்றில் உதித்தவரான இந்த சந்திரன் இதோ வருகிறார்; இவர் கோகுலவாஸிகளிடத்திலும் பசுக்களிடத்திலும் பிரீதியுள்ளவர்; கோவர்த்தன மலையைத் தூக்கினவர்; இவர் பசுக்களெல்லாவற்றையும் ஓட்டிக்கொண்டு சிநேகிதர்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு சாயங்காலத்தில் கோகுலத்திற்கு வரும்பொழுது பிரம்மா முதலியவர்கள் வழியில் இவரை நமஸ்கரிக்கிறார்கள். இவர் கோதூளியுள்ள தலைமயிருள்ளவர்; நம்முடைய இஷ்டத்தை நிறைவேற்றுவதற்காக வருகிறார். மேலும் இவர் கொஞ்சம் மதத்தால் கலங்கிய கண்களுள்ளவர்; சுவர்ணமயமான குண்டலங்களுடைய காந்தியால் இவருடைய கன்னம் பிரகாசிப்பதால் பக்குவமான இலந்தைப்பழத்தின் நிறம்போன்ற காந்தியுள்ளதாக இவருடைய முகம் காணப்படுகிறது. இவர் குட்டியானைபோல் நடப்பவர்; பகலில் சூரியனுடைய வெயிலால் உண்டான தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டு இரவில் சந்திரன் உதயமானாற்போல இவர் கோகுலவாஸிகளான நம்முடைய தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டு சிரித்த முகத்துடன் வருகிறார்'' என்று கோபிகைகள் பகலில் கிருஷ்ணனுடைய லீலைகளையே கானஞ்செய்துகொண்டு அவரிடத்திலேயே மனத்தைச் செலுத்தியவர்களாகி, தங்களுடைய சங்கல்பம் முதலியவைகளை அவரிடத்திலேயே செலுத்தி மிக்க சந்தோஷத்துடன் பகல்களைக் கழித்தார்கள்.

# அத்தியாயம் 36

## கம்ஸன் கோகுலத்திற்கு அக்ரூரரை அனுப்பியது

1—15. பின்பு ஒருகால் அரிஷ்டனென்ற அசுரன் விருஷபத்தின் உருவங்கொண்டு பருத்த சரீரத்துடனும், பெரிதான கொண்டையுடனும், குளம்படிகளால் பூமியைப் பிளந்துகொண்டும், அசைத்துக்கொண்டும் கோகுலத்திற்கு வந்தான். விருஷபம்போல் கர்ஜித்தான். கால்களால் பூமியைப் பிளந்தான். மேலும் அவன் வாலைத் தூக்கிக்கொண்டும், மலையின் தாழ்வரைகளைக் கொம்புகளால் குத்திப் புரட்டிக்கொண்டும், கொஞ்சம் சிறுநீர் விட்டுக்கொண்டும், சாணத்தைப் போட்டுக்கொண்டும், கண்களை விழித்துக்கொண்டும் நின்றான். அவனுடைய கொடிய கர்ஜனையைக் கேட்டுப் பசுக்களுடையவும், மனிதர்களுடையவும் கர்ப்பமானது அகாலத்தில் சிரவித்தது. அதன் முதுகிலிருக்கும் கொண்டையை மலையென்று நினைத்து மேகங்கள் அதில் உட்கார்ந்தன. கூர்மையான கொம்புகளுள்ள அந்த விருஷபத்தைக் கண்டு கோபிகைகளும், கோபர்களும், பசுக்களும் பயந்து கோகுலத்தைவிட்டு ஓடினார்கள். மேலும் அவர்கள் 'ஓ கிருஷ்ண!'என்றுகோவிந்தரைச் சரணமடைந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணபகவான், பயந்து துக்கப்படும் கோகுலத்தைப் பார்த்து, பயப்படவேண்டாமென்று சமாதானஞ்செய்து, விருஷபாசுரனை நோக்கி, "அட மூட! பாலர்களையும் பசுக்களையும் பயப்படச் செய்வதால் என்ன பிரயோசனம்? ஓ மிக்க அலைத்தே! நான் உன்னைப்போன்ற துஷ்டர்களுடைய கர்வத்தைப் போக்கடிப்பவன்; ஆனதால் என்னிடம் வா" என்று கைகொட்டி அழைத்து, அதனால் அசுரனுக்குக்

கோபத்தை யுண்டுபண்ணித் தோழனுடைய தோளில் கையை நீட்டிக்கொண்டு நின்றார். அந்த அசுரனும் மிகுந்த கோபத்துடன் பூமியைப் பிளந்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ணனை எதிர்த்தான். உயரத் தூக்கிய அவனுடைய வாலால் அடிக்கப்பட்டு மேகங்கள் ஆகாயத்தில் சுற்றிக்கொண்டிருந்தன. மேலும் அவன் கொம்புகளை முந்தி நீட்டிக்கொண்டு அசைவற்ற சிவந்த கண்களுடன் கிருஷ்ணனைப் பார்த்து இந்திரனால் பிரயோகிக்கப்பட்ட இடிபோல ஓடிவந்தான். இப்படி ஓடிவரும் விருஷபாசுரனுடைய இரண்டு கொம்புகளையும் பிடித்து இழுத்து பதினெட்டடி தூரம் பிந்தித் தள்ளினார். அது யானையைப் பிடித்துத் தள்ளினாற்போல இருந்தது. இப்படி ஸ்ரீ கிருஷ்ணனால் தள்ளப்பட்டுப் பூமியில் விழுந்து அந்த அசுரன் மிகவும் சிரமத்தை யடைந்தான். அவனுடைய சரீரம் முழுவதும் வியர்வையுள்ளதாக ஆயிற்று. அவன் திரும்பவும் எழுந்திருந்து கோபத்தாலும், சிரமத்தாலும் பெருமூச்சுவிட்டு ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி ஓடிவந்தான். இப்படி ஓடிவரும் அசுரனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் அவனுடைய இரண்டு கொம்புகளையும் பிடித்துப் பூமியில் தள்ளி ஈரமாகிய வஸ்திரத்தைப் பிழிவதுபோலக் காலால் மிதித்தார். பின்னுமவர் அவனுடைய கொம்பை ஒடித்து, அதனால் அவனைக் கொன்றார். அவன் அப்பொழுது பூமியில் விழுந்தான். ரத்தத்தைக் கக்கினான்; சாணத்தைப் போட்டான்; கால்களை நீட்டினான்; கண்களை மிரள விழித்தான்; இவ்வளவு கஷ்டத்தை யடைந்து யமலோகஞ் சென்றான். தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்து பகவானைக் கொண்டாடினார்கள். இப்படி பகவான் விருஷபாசுரனைக் கொன்று கோபர்களால் துதிக்கப்பட்டு பலராமனுடன் கோகுலஞ்சென்றார். கோபிகைகள் அவரைப் பார்த்து மிகவும் சந்தோஷித்தார்கள்.

16—37. கோகுலத்தில் அற்புதமான செய்கையுள்ள ஸ்ரீகிருஷ்ணன் அரிஷ்டாசுரனைக் கொன்றபிறகு, தேவரிஷியாகிய நாரதர் கம்ஸனிடஞ் சென்று, "ஓ கம்ஸ! கிருஷ்ணன் தேவகியின் புத்திரன்; பலராமன் ரோஹிணியின் புத்திரன்; வசுதேவர் உன்னிடம் பயந்து அவ்விருவர்களையும் நந்த கோகுலத்தில் மித்திரனாகிய நந்தரிடம் அனுப்பியிருக்கிறார். ஆகாயத்தில் சென்ற பெண் யசோதையின் குமாரி. உன்னால் அனுப்பப்பட்ட அசுரர்கள் அந்த ராமகிருஷ்ணர்களால் கொல்லப்பட்டார்கள்" என்று சொன்னார். அதனைக் கேட்ட கம்ஸன் கோபத்தால் கலங்கின இந்திரியங்களுள்ளவனாகி வசுதேவரைக் கொல்வதற்காகக் கூர்மையான கத்தியை எடுத்துக்கொண்டான். அதனைக் கண்ட நாரதர் வசுதேவரைக் கொல்லவேண்டாமென்று தடுத்தார். அப்பொழுது கம்ஸன் தனக்கு ராமகிருஷ்ணர்களிருவர்களும் மிருத்யுவென்று நினைத்துக்கொண்டு வசுதேவரையும், தேவகியையும் காராகிருஹத்தில் அடைத்தான் (வசுதேவரைக் கொன்றால் ராமகிருஷ்ணர்கள் ஓடிப்போவார்கள். ஆனதால்கொல்லவேண்டாம். காராகிருஹத்தில் அடைத்துவிடு என்று நாரதர் சொன்னாரென்று கருத்து). இப்படி கம்ஸனுக்குச் சொல்லி நாரதர் தமது இஷ்டப்படி சென்றபின் கம்ஸன் கேசி யென்பவனை வரவழைத்து, "நீ ராமகிருஷ்ணர்களைக் கொல்லவேண்டும்" என்று உத்தரவு கொடுத்து அனுப்பினான். பின்னும் அவன் முஷ்டிகன், சாணூரன், சலன், தோஸலன் முதலியவர்களையும், மந்திரிகளையும், யானைப்பாகனையும் அழைப்பித்து, "ஓ! ஓ வீரனாகிய சாணூர! முஷ்டிக! நான் சொல்வதைக் கேளுங்ள். வஸுதேவருடைய புத்திரர்களாகிய ராமகிருஷ்ணர் நந்த கோகுலத்தில் வசிக்கிறார்கள். அவர்கள்

னைக்கு மிருத்யுக்கள் என்று நாரத மஹரிஷி சொல்லியிருக்கிறார்; அவர்களை இவ்விடம் வரவழைக்கிறேன். அவர்களுடன் விளையாட்டாக மல்ல யுத்தஞ் செய்து அவர்களைக் கொல்லவேண்டும். மல்லயுத்தஞ் செய்யும் சபையில் பலவகையான மஞ்சங்கள் செய்யப்படவேண்டும் (பார்க்க வந்த அரசர்கள் உட்காருவதற்காக.) பட்டணத்து ஜனங்களும், தேசத்து ஜனங்கள் முதலிய எல்லோரும் மல்லயுத்தத்தைப் பார்த்து ஸந்தோஷிக்கட்டும். ஓ மஹாமாத்திர! குவலயாபீடமென்ற யானையை அந்த ஸபையின் வாயிற்படியில் நிறுத்திக்கொண்டு எனக்குச் சத்துருக்களான அந்த ராம கிருஷ்ணர்களைக் கொல்லவேண்டும். சதுர்த்தசி தினத்தில் விதிப்படி தனுர் யாகமானது ஆரம்பிக்கப்படட்டும். இஷ்டமான வரத்தைக் கொடுப்பவரும், பூதங்களுக்கு அதிபதியுமான பரமசிவனை உத்தேசித்து சுத்தமானபசுக்களைக் கொல்லுங்கள்'' என்று உத்தரவுசெய்து காரியத்தின் நிச்சயத்தை அறிந்தவனாகிய கம்ஸன் யதுக்களுக்குட் சிறந்தவராகிய அக்ரூரருடைய கையைப் பிடித்துக்கொண்டு, "ஓ அக்ரூரரே! மித்திரன் செய்யவேண்டிய காரியத்தை எனக்கு நீர் செய்யவேண்டும். போஜவிருஷ்ணிகளுக்குள் உம்மைப் போல் பிரீதியுடன் எனக்கு ஹிதத்தைச் செய்பவர் ஒருவருமில்லை. இந்திரன் விஷ்ணுவை ஆச்ரயித்துத் தன்னுடைய காரியத்தை சாதித்துக்கொண்டதுபோல பெரிதாகிய காரியத்தைச் முடித்துக்கொள்வதற்காக உம்மை ஆச்ரயித்திருக்கிறேன். ஆனதால் இந்தரதத்தின்மீதேறிக்கொண்டு நந்தகோகுலஞ் சென்று, அவ்விடத்திலிருக்கும் வசுதேவருடைய புத்திரர்களான ராமகிருஷ்ணர்களை, இவ்விடம் அழைத்து வாரும். தாமதிக்கவேண்டாம். மஹாவிஷ்ணுவை ஆச்ரயித்த தேவர்கள் ராமகிருஷ்ணர்

களை எனக்கு மிருத்யுவாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்களை அழைத்து வாரும். நந்தன் முதலிய கோபர்களையும் அழைத்து வாரும். அவர்கள் காணிக்கைகளை யெடுத்துக்கொண்டு வருவார்கள். அப்பொழுது யமன் போன்ற யானையால் ராமகிருஷ்ணர்களைக் கொல்லுகிறேன். ஒருகால் யானையால் அவர்களைக் கொல்ல முடியாமற்போனால் மேக இடிக்குச் சமமான மல்லர்களால் கொன்றுவிடுகிறேன். அவர்களைக் கொன்றபின் அவர்களை ஆச்ரயித்துக் கர்வங்கொண்டிருக்கும் விருஷ்ணிகளையும், போஜர்களையும், தாசார்ஹர்களையும், வசுதேவர் முதலியவர்களையும், எனக்குப் பிதாவும், வயது முதிர்ந்தவராலும் ராஜ்யத்தில் விருப்பமுள்ளவருமான உக்ரஸேனரையும், அவருடைய சகோதரராகிய தேவகரையும், இன்னும் மற்ற சத்துருக்களையும் நாசஞ்செய்கிறேன். இதன் பிறகு இந்தப் பூமியை யாதொரு இடையூறுமின்றி நான் அனுபவிப்பேன். ஜராஸந்தன் எனக்கு ஆசார்யன். த்விதன் மிகுந்த தோழன்; சம்பரன், நரகன், பாணன் ஆகிய இவர்கள் என்னிடத்திலேயே ப்ரீதியுள்ளவர்கள். அவர்களைக்கொண்டு தேவர்களைச் சார்ந்த அரசர்களை ஜயித்து பூமியை அநுபவிக்கிறேன். இதை நீர் மனத்தில் வைத்துக்கொண்டு, 'தனுர்யாகத்தையும், மதுரா நகரத்தின் அழகையும் பார்த்துவரலாம்' என்று சொல்லி, குழந்தைகளான ராமகிருஷ்ணர்களை அழைத்து வாரும்'' என்றான்.

38—41. அதனைக் கேட்ட அக்ரூரர் கம்ஸனை நோக்கி "ஓ அரசனே! உம்முடைய யோசனை நல்லது; உமக்கு நேரும் மரணத்தை அது நிவர்த்திக்கக்கூடியது; ஆனால் காரியம் முடிந்தாலும் அதில் சந்தோஷப்படவேண்டாம்; இல்லாவிடினும் துக்கப்படவேண்டாம். பலன் கிடைப்பது தெய்வாதீனமாக இருக்கிறது. ஜனங்கள் தெய்வபலு

மில்லாத காலத்தில் முயற்சித்தும் காரியம் சித்திக்காமல் துக்கத்தை அடைகிறார்கள். தெய்வபலமுள்ள ஸமயத்தில் காரியம் சித்திப்பதால் சந்தோஷத்தை அடைகிறார்கள். ஆனாலும் உம்முடைய உத்தரவின்படி செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டார். இப்படிக் கம்ஸன் அக்ரூரருக்கும் மந்திரிகளுக்கும் ஆஞ்ஞாபனஞ் செய்து அந்தப்புரஞ் சென்றான். அக்ரூரரும் தம்முடைய வீட்டிற்குச் சென்றார்.

## நோட்டு

இந்த அத்தியாயத்தில் 25-வது சுலோகம்முதல் 33-சுலோகங்களுக்கு ஒரு வியாக்கியானக்காரர்களும் வியாக்கியானஞ் செய்யவில்லை. என்றாலும் சில மூல புத்தங்களில் காணப்படுவதாலும், பிரகரணத்துக்கு ஒத்திருப்பதாலும் அவைகளுக்கு அர்த்தம் பின்வருமாறு கண்டு கொள்க.

கம்ஸன் சொல்லுகிறான்: 'ஓ மஹாமாத்திர! மிகுந்த புத்தியுள்ளவரே! நான் சொல்வதைக் கேளும். இரு கன்னங்களிலும் மதம் பெருகும் குவலயாபீடமென்ற யானையின் துதிக்கையில் இரும்பு உலக்கையைக் கொடுத்து மல்ல சபையின் வாயிலில் நிறுத்திவைத்து, அதனைக் கொண்டு ராமகிருஷ்ணர்களிருவரையும் கொல்லவேண்டும்' என்று சொல்லி, பின்னும் அந்தக் கம்ஸன் அவ்விடத்தில் கூடியிருப்பவர்களை நோக்கி, "நான் பிறந்தது முதல் பந்துக்களான இவர்களிடத்தில் விரோத புத்தியுள்ளவனாக இருப்பதின் காரணத்தைச் சொல்லுகிறேன், தெரிந்துகொள்ளுங்கள். ஓ! மிகுந்த பாக்கியசாலிகளே! தாமரை மலர்போன்ற கண்களுள்ள என்னுடைய

தாய் ஒரு நாள் வீட்டின் தோட்டத்தில் விளையாட்டாக சஞ்சரித்தாள். அப்பொழுது தென்றல்காற்று வீசிற்று. அந்தத் தோட்டத்திலுள்ள அசோகம், மகிழமரம், பாக்கு மரம், புன்னைமரம் இவைகள் புஷ்பித்திருந்தன. வண்டு கள் பாடின; குயில்கள் கூவின; மயில்கள் கூத்தாடின; குரங்குகள் சேஷ்டித்தன; இப்படி வசந்தகாலத்தால் அழகான அந்தத் தோட்டத்தில் சஞ்சரிக்கும் அவள் ருது ஸ்நானஞ் செய்தவளாகையால் தன் பர்த்தாவை மனத் தில் நினைத்தாள். அந்த ஸமயத்தில் த்ரமிடனென்ற ஒரு கந்தர்வன் கண்ணுக்குப் புலப்படாமல் அவ்விடம் சஞ் சரித்தான். மேலுமவன் எல்லாருடைய மனத்திலிருக்கும் எண்ணத்தைத் தெரிந்துகொள்ளும் சக்தியுள்ளவனாகை யால் அவளுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு, தனியே சஞ்சரிக்கும் அவளைப் பார்த்துக் காமவெறி கொண்டு உக்ரஸேனர்போல வேஷந் தரித்துச் சிரிப்புள்ள வார்த்தை, பார்வை ஆகிய இவைகளுடன் மன்மத தாபங் கொண்ட பதிவிரதையான அவளிடம் வந்தான். அவள் அவனைத் தன்னுடைய பர்த்தாவென்று நினைத்து அவனு டன் ரமித்தாள். பின்னுமவள் சில சேஷ்டைகளால் அவ னிடத்தில் சந்தேகமடைந்து மிகுந்த வருத்தத்துடன் கண்கலக்கமுள்ளவளாகி, "ஓ வஞ்சகனே! நீ யார்? துஷ்ட னாகிய உன்னால் இம்மாதிரியான கெட்ட காரியம் செய்யப் பட்டது" என்று கேட்டாள். அதனைக் கேட்ட கந்தர்வன், "ஓ ஸ்திரீயே! நாங்கள் கந்தர்வ ஜாதியில் பிறந்தவர்கள்; தேவர்களுக்குச் சமமானவர்கள்; தேவஸ்திரீகளால் அநு பவிக்கக்கூடியவர்கள்; உன்னைப்போன்ற மனுஷ்ய ஸ்திரீ கள் எங்களை எளிதில் அடையமுடியாது. கிழத்தனம், மரணம்முதலிய துக்கங்களுள்ள மனிதர்களுக்கும், அவை களற்ற தேவர்களுக்கும் அதிக தாரதம்யம் இருக்கிறது"

என்று சமாதானஞ்செய்தான். அதனைக் கேட்டு அவள் கோபத்தால் இந்திரியங்கள் கலங்கினவளாகி, 'நீ இம்மாதிரியான துஷ்ட நடத்தையைச் செய்து திரும்பவும் என்னைச் சமாதானஞ் செய்கிறாய். பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாயம், சந்திரன், ஸூர்யன், திக்குகள், காமம், தர்மம், இரண்டு ஸந்தியா காலங்கள் ஆகிய இவைகள் எல்லா ஜனங்களால் செய்யப்படும் சகல கர்மங்களுக்கும் சாக்ஷியாக இருக்கின்றன. அவைகளையும் லக்ஷ்யஞ்செய்யாமல் என் பதிவிரதா தர்மத்தைக் குறைத்தாய். மதங்கொண்ட யானையால் ஜலத்தின் நடுவிலுள்ள தாமரைபோல் கெடுக்கப்பட்டேன். ஓ! தேவர்களுக்குள் அதம! அப்படிப்பட்ட நீ என்னை ஏன் பலவகையாகச் சமாதானஞ்செய்கிறாய்?' என்று கோபித்தாள். அதனைக் கேட்ட கந்தர்வன் சாபங் கொடுப்பாளோ என்று சந்தேகித்து அவளை நோக்கி, "ஓ தாமரை மலர்போன்ற கண்ணுள்ளவளே! தேவர்கள் மனுஷ்ய ஸ்திரீகளைச் சேர்வது அநுலோம மெனப்படுகிறது. மனிதர்கள் தேவஸ்திரீகளைச் சேர்வது பிரதிலோம மெனப்படும். (அநுலோமமான சேர்க்கை பெரியோர்களால் ஒப்புக்கொள்ளக்கூடியது என்று தாத்பர்யம்) ஓ தாமரை மலரின் வாசனைபோன்ற வாசனையுள்ளவளே! உன் விஷயத்தில் என்னைக் குற்றஞ்செய்தவனாக நினைக்கவேண்டாம். என்னுடைய வீரியமானது வீணாகிறதில்லை. ஆனதால் பக்தியுள்ளவனும், பாக்யமுள்ளவனும், உத்ஸாகமுள்ளவனுமாகிய புத்திரன் உன்னிடம் ஜனிப்பான். என் வார்த்தை பொய்யாக ஆகிறதில்லை" என்று சொன்னான். அதனைக் கேட்ட என் தாய் அரிதான பதிவிரதா தர்மம் குறைந்துபோனதைப்பற்றித் துக்கித்து அவனை நோக்கி, "லோக மரியாதையைக் கடந்து தன் இஷ்டப்படி நடப்பவனாகிய உன்னுடைய புத்திரன் நற்குண

யில்லாதவனாகவும், பிடிவாதமுள்ளவனாகவும், தேவதைகளாலும், பிராம்மணர்களாலும், மகரிஷிகளாலும் அனுக்கிரகிக்கக்கூடாதவனுமாக இருப்பான்" என்று சொன்னாள். அதனைக் கேட்ட கந்தர்வன், "உன்னைச் சார்ந்தவர்களுக்கு அவன்சத்ருவாக இருக்கட்டும்" என்று சொல்லி, சாபங் கொடுப்பாளோ என்று பயந்து கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்தான். அதன் பிறகு என்னுடைய தாய் தன் வீட்டிற்கு வந்தாள். தோட்டத்தில் நடந்த சமாசாரம் வேறொருவருக்குந் தெரியாது. பின்பு அவள் கர்ப்பத்தை யடைந்து பிரசவகாலம் நேர்ந்தபொழுது என்னைப் பெற்றாள் என்ற விஷயத்தை நாரதர் எனக்குச் சொன்னார். அது முதல் நான் பந்துக்கள்போன்ற இந்தத் துஷ்டர்களிடத்தில் விரோதம் வைத்திருக்கிறேன். அவர்களும் எப்பொழுதும் என்னை விரோதித்துக்கொண்டிருக்கிறார்கள். இது உங்களுக்குத் தெரிந்த விஷயம். நான் கந்தர்வனுக்குப் பிறந்தவனானகயால் துர்ப்புத்தியாகிய உக்ரேசனனையும், கெட்ட எண்ணமுள்ள தேவகனையும், வஞ்சகனாகிய வசுதேவனையும், அவர்களைச் சார்ந்த மற்றவர்களையும் கொல்வதால் எனக்குத் தோஷமில்லை. அதனால் தான் ராமகிருஷ்ணர்களைக் கொல்லும்படி கடுமையாக ஆஞ்ஞாபிக்கிறேன். மிக்க பலமுள்ள குவலயாபீடம் என்ற யானையால் அவர்கள் கொல்லப்பட்டால் வசுதேவன், உக்கிரசேனன், நந்தன், தேவகன், கோபாலர்கள், யாதவர்கள், அவர்களைச் சார்ந்த மற்றவர்கள் ஆகிய இவர்களெல்லாரும் ராமகிருஷ்ணர்களுக்கு உத்தரக்கிரியை செய்துவிட்டு மரணமடைவார்கள். ஆனதால் தேசத்திலுள்ள ஜனங்களை வரவழையுங்கள்; கொல்லப்படும் ராமகிருஷ்ணர்களைப் பார்க்கட்டும்" என்று சொன்னான்.

# அத்தியாயம் 37

## பகவான் கேசியைக் கொன்றது

**1—9.** கம்ஸனால் அனுப்பப்பட்ட கேசியென்ற அசுரன் பருத்த குதிரை வேஷங்கொண்டு குளம்புகளால் தரையைப் பிளந்து பூமியை அசைத்துக்கொண்டு நந்தகோகுலத்திற்கு வந்தான். அவனுடைய பிடரிமயிர்களால் மேகங்களும் விமானங்களும் அடிக்கப்பட்டன. அவனுடைய கனைப்பைக் கேட்டு எல்லாரும் பயந்தார்கள். அவனுடைய கண்கள் விசாலமாகவும், வாயானது குகைபோலவும், கழுத்து பருத்தும் இருந்தன. மேலும் அவன் கருத்த மலைபோன்ற சரீரமுள்ளவனாக இருந்தான். பின்னும்,அவனுடைய வாலால் அடிக்கப்பட்டு மேகங்கள் நான்கு பக்கமும் பயந்து ஓடின. அவனுடைய சப்தத்தைக் கேட்டு கோகுலத்திலுள்ள பிராணிகள் பயந்தன. இன்னுமவன் சண்டைக்காக பகவானைத் தேடிக்கொண்டிருந்தான். அவனைக் கண்ட ஸ்ரீ கிருஷ்ணன் சிங்கம் போலக் கர்ஜித்து அவனை யுத்தத்திற்காக அழைத்தார். அந்த அசுரன் முகத்தைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்தை விழுங்குகிறவன்போல மிகுந்த கோபத்துடன் பயங்கரமாகச் சப்தித்துக்கொண்டு கிருஷ்ணனுக்கு எதிராக ஓடிவந்து பகவானைக் கால்களால் உதைத்தான். பகவான் அவன் கால்கள் தம்மீது படாமலிருக்கும்படி அவனை வஞ்சித்துக் கோபத்துடன் அவனுடைய கால்களைப் பிடித்துச் சுழற்றி, சர்ப்பத்தைக் கருடன் தூக்கி எறிவது போல் எறிந்தார். அவன் நூறு விற்கடை தூரத்திற்கப்பால் விழுந்தான். கொஞ்சநேரம் சென்றபின் அவன் பிரஜ்ஞை யடைந்து எழுந்திருந்து, வாயைத் திறந்துகொண்டு வேகமாகக் கிருஷ்ணனிடம் ஓடிவந்தான். அப்

பொழுது பகவான் பாம்புப் புற்றில் கையை நுழைத்தாற்போல அவனுடைய வாயில் தம்முடைய வலது கையைச் சிரித்துக்கொண்டு நுழைத்தார். பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பைத் தொட்டாற்போல பகவானுடைய கை பட்ட மாத்திரத்தில் அசுரனுடைய பற்கள் உதிர்ந்தன. ஜலோதரமென்ற வியாதியுள்ளவன் அதற்கு வைத்தியஞ்செய்யாமல் அதனை உபேக்ஷித்தால் அந்த வியாதி எப்படி விருத்தியடையுமோ, அதுபோல அசுரனுடைய வயிற்றுக்குட் சென்ற பகவானுடைய கையானது விருத்தியடையும் பொழுது அந்த அசுரன் மூச்சுவிட முடியாமல் உயிர் துறந்து சுழலுகின்ற கண்களுடன் பூமியில் விழுந்தான். அவனுடைய சரீரம் வியர்வையுள்ளதாக இருந்தது. கால்கள் நீட்டப்பட்டன. அப்பொழுது பகவான் வெள்ளரிப் பழம்போல் வெடித்திருக்கும் அவனுடைய சரீரத்தி லிருந்து கையை இழுத்துக்கொண்டார். எளிதில் சத்துருவைக் கொன்றவரானாலும் கர்வத்தை அடைய வில்லை. தேவர்கள் மிகுந்த ஆச்சரியத்தை யடைந்து புஷ்பங்களை வர்ஷித்து, பகவானைத் துதித்தார்கள்.

10—25. கிருஷ்ணனிடத்தில் பக்தியுள்ளவரும், தேவரிஷியுமாகிய நாரதர் சாதுக்களைக் காப்பாற்றுபவரான ஸ்ரீ கிருஷ்ணனிடம் ரகசியமாக வந்து, 'ஓ கிருஷ்ண! கிருஷ்ண! அளவிடக்கூடாத சுரூபமுள்ளவரே! நினைக்க முடியாத மகிமையுள்ளவரே! ஜகத்துக்கு அதிபதியே! சகல பிராணிகளிடத்திலும் வசிப்பவரே! சகல ஜனங்களுக்கும் வாசஸ்தலமாக இருப்பவரே! ஸாத்வதர்களுக்குட் சிறந்தவரே! ஓ பிரபுவே! நீர் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருக்கிறீர். விறகுகளுக்குள் தேஜஸானது எப்படி ஒன்றாக இருக்கிறதோ, அதுபோல சகல பிராணிகளுடைய இருதயத்தில் இருப்பவர் நீர் ஒருவரே!

ஆனாலும் அவர்களால் பார்க்கமுடியாமல் மறைந்திருக்கிறீர்; புத்திக்கும் புலப்படாதவர்; எல்லாவற்றிற்கும் சாக்ஷியாக இருப்பவர்; மகாபுருஷன்; ஈசுவரன்; சுதந்திரராகிய நீர் மாயையால் குணங்களைச் சிருஷ்டித்தீர்; ஸத்ய ஸங்கல்பராகிய நீர் அந்தக் குணங்களைக் கொண்டு இந்த ஜகத்தைப் படைத்தீர்; காப்பாற்றுகிறீர்; ஸம்ஹரிக்கிறீர்; (ஸங்கல்பத்தாலேயே எல்லாம் சித்திக்கின்றன. ஆனதால் மற்றொன்றை அபேக்ஷிக்கிறதில்லையென்று கருத்து.) அப்பேர்ப்பட்ட நீர் பூமியில் அரசர்களாக ஜனித்திருக்கும் தைத்தியர்களையும், ராக்ஷஸர்களையும் கொல்வதற்காகவும், சாதுக்களைக் காப்பாற்றுவதற்காகவும் அவதரித்திருக்கிறீர். குதிரை யுருவங்கொண்ட இந்தக் கேசியென்பவன் கர்ஜித்தால் அந்தச் சப்தத்தைக் கேட்டு தேவர்கள் சுவர்க்கத்தைவிட்டு ஓடுவார்கள். அந்த அசுரன் தெய்வாதீனமாக உம்மால் கொல்லப்பட்டான். நாளை நின்றைக்குச் சாணூரன், முஷ்டிகன் முதலிய மல்லர்களையும், குவலயாபீடமென்ற யானையையும், கம்ஸனையும் கொல்லுவீர். அதனையும் பார்ப்பேன். அதன்பிறகு சங்கன் (பஞ்சனன்), யவனன், முரன், நரகன் முதலியவர்களை அடிக்கப்போகிறீர். பாரிஜாதத்தைப் பூமிக்குக் கொண்டுவரப்போகிறீர். இந்திரனை ஜயிக்கப்போகிறீர். பராக்கிரமத்தைக் காண்பித்து, கன்னிகைகளை விவாகஞ்செய்வீர்; துவாரகையில் வசிக்கும்பொழுது நிருகனைச் சாபத்திலிருந்து நிவர்த்திக்கப்போகிறீர். ஜாம்பவதியையும், சியமந்தகமென்ற ரத்தினத்தையுங் கொண்டுவருவீர். மரணமடைந்த புத்திரனைப் பிராமணனுக்குத் திருப்பிக்கொடுப்பீர். பௌண்ட்ரகனைக் கொல்வது, காசிப்பட்டணத்தைக் கொளுத்துவது, தந்தவக்திரனைக் கொல்வது, யாகசபையில் சிசுபாலனை ஸம்ஹரிப்பது முதலிய எந்தக் காரியங்களைத் துவாரகையில்

வசித்துக்கொண்டு நீர் செய்வீரோ, அவை யெல்லாவற்றையும் நான் பார்ப்பேன். அவைகளைக் கவிகள் கானஞ் செய்வார்கள். பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக அவதரித்திருக்கும் நீர் அருச்சுனனுக்குச் சாரதியாக இருந்து அக்ஷௌஹிணிக் கணக்கான சைன்னியங்களை நாசஞ்செய்யப்போகிறீர்; அதையும் நான் தரிசிப்பேன். நீர் கேவலஞ்ஞானசுரூபி; பரமானந்த ரூபியானதால் எல்லாவற்றையும் அடைந்தவர்; சத்திய சங்கல்பர்; (சங்கல்பமுள்ளவரானாலும் ஸம்ஸார சம்பந்தமில்லாதவர்.) தம்முடைய சித்சக்தியால் மாயா காரியமாகிய ஸம்ஸாரத்தில் சம்பந்தப்படாதவர்; ஒப்பற்ற ஐசுவரியமுள்ளவர்; அப்படிப்பட்ட உம்மைச் சரணமடைகிறேன். மேலும் நீர் எல்லாவற்றிற்கும் அதிபதி; உமக்கு மேலான தொன்றுமில்லை; உம்முடைய மாயையால் மஹத் தத்வம் முதலிய பேதங்கள் ஏற்படுகின்றன. விளையாட்டாக மனித சரீரத்தை எடுத்துக்கொண்டு யாதவர்களுக்கும், விருஷ்ணிகளுக்கும், ஸாத்வதர்களுக்கும் அதிபதியாக அவதரித்திருக்கிறீர். அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன்" என்று ஸ்தோத்திரஞ்செய்து நமஸ்கரித்து விடைபெற்று, பின் நடக்கப்போகிறவைகளைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையுடன் சென்றார்.

**26—34.** கோவிந்தராகிய ஸ்ரீ கிருஷ்ணனும் கேசியை அடித்து, அதனால் பிரியமடைந்த தோழர்களுடன் வனஞ்சென்று, வழக்கம்போல் பசுக்களை மேய்த்தார். அப்போது ஒரு சமயத்தில் அந்தச் சிறுவர்கள் திருடர்களாக இருந்து ஒளிந்துகொள்ளுகிறதும், சிலர் அவர்களைக் கண்டுபிடிப்பதுமாக ஒளிந்து விளையாட ஆரம்பித்தார்கள். அவர்களில் சிலர் திருடர்களாகவும், சிலர் அவர்களைக் கண்டுபிடிப்பவர்களாகவும், சிலர் ஆடு

ளாகவும் ஏற்படுத்திக்கொண்டார்கள். ஆடுகளாக இருப்பவர்களைத் திருடர்களாக இருப்பவர்கள் திருடிக்கொண்டு போவதும், அவர்களைக் கண்டுபிடிப்பவர்கள் கண்டுபிடிப்பதுமாகப் பயமற்று விளையாடினார்கள். அந்தச் சமயத்தில் மயனுடைய புத்திரனாகிய வியோமன் என்ற அசுரன் கோபவேஷத்துடன் அச் சிறுவர்களின் கூட்டத்தில் பிரவேசித்து, தான் திருடனாக இருந்தான். பின்னும் அவன் ஆடுகளாக இருப்பவர்களில் சில கோபர்களைத் தூக்கிச் சென்று ஒரு மலையின் குகையில் வைத்துப் பாறையால் அதை மூடித் திரும்பிவந்து மறுபடியும் கோபர்களைக் கொண்டுபோய் அந்தக் குகையில் வைத்தான். இப்படி கோபர்கள் எல்லாரும் அசுரனால் அபகரிக்கப்பட்டார்கள். நாலைந்து சிறுவர்கள் தான் எஞ்சினார்கள். சாதுக்களைக் காப்பாற்றுகிறவராகிய பகவான் இப்படி அசுரன் செய்வதைத் தெரிந்துகொண்டு, சிங்கம் செந்நாயைப் பிடித்தாற்போல அந்த வியோமனென்ற அசுரனைப் பிடித்துக்கொண்டார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணனால் பிடிக்கப்பட்ட அசுரன் மலைபோன்ற தனது ராக்ஷஸ சரீரத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனிடமிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முயன்றான். ஆனாலும் அவனால் முடியவில்லை. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தேவர்கள் பார்த்திருக்கும்போது அவனைப் பூமியில் தள்ளி, பசுவை (ஆட்டை)க் கொல்வதுபோலக் கொன்றார். பின்பு அவர் குகையைத் திறந்து, கோபர்களை வெளிப்படுத்தி அவர்களுடன் கோகுலஞ் சென்றார். தேவர்களும் கோபர்களும் ஸ்ரீ கிருஷ்ணனைத் துதித்தார்கள்.

# அத்தியாயம் 38

## அக்ரூரர் கோகுலஞ் சென்றது

**1-24.** மிக்க புத்திசாலியாகிய அக்ரூரர் அன்றைய ராத்திரி மதுரா நகரத்திலிருந்து, மறுநாள் காலையில் ரதத்திலேறிக்கொண்டு நந்தகோகுலத்தை நோக்கிப் புறப்பட்டார். போகும் வழியில் மிகுந்த பாக்கியமுள்ளவராகிய அக்ரூரர், தாமரைக் கண்ணனாகிய பகவானிடத்தில் அதிக பக்தியுடன் தமக்குள் யோசிக்கலானார். "நான் என்ன நற்காரியத்தைச் செய்தேன்? என்ன தவஞ் செய்தேன்? பாத்திரத்தில் தானஞ்செய்தேனோ? இன்றைய தினம் பகவானைத் தரிசிக்கப்போகிறேன். கீழ் ஜாதியில் பிறந்தவனுக்கு வேதம் எப்படி அரிதோ, அப்படி விஷயங்களில் மூழ்கினவனாகிய எனக்கு உத்தம சுலோகராகிய பகவானுடைய தரிசனம் அரிதென்று நினைக்கிறேன். ஆனாலும் நதியின் பிரவாகத்தில் செல்லுகிற திருணம் முதலியவைகளில் சில பிரவாகத்துடன் சென்றாலும் சில, கரை சேருகின்றன அல்லவா? அதுபோல் ஜீவர்கள் காலத்திற்கு வசப்பட்டவர்களானாலும் அந்த ஜீவர்களுக்குள் நான் அதமனானாலும் எனக்கு ஸம்ஸார பந்தம் நிவர்த்தியாகும் பாக்கியம் உண்டாகலாம். அதற்குக் காரணமாகிய பகவானுடைய தரிசனமும் கிடைக்கும். இன்றைய தினம் யோகிகளால் தியானஞ் செய்யக்கூடிய பகவானுடைய பாதாரவிந்தத்தை நான் நமஸ்கரிக்கப்போவதால் எனக்கு சகல பாபங்களும் நாசமாயின. என்னுடைய பிறப்பானது ஸபலமாயிற்று. கம்ஸன் என்னை ஸ்ரீ கிருஷ்ணனிடம் அனுப்பியபடியால் என்னை அனுக்கிரகத்தவனாகிறான். அவனுடைய சகாயத்தால் பகவானுடைய பாதாரவிந்தத்தைத் தரிசிக்கப்போகிறேன். அந்தப் பாதத்தின்

நககாந்தியைச் சேவித்து, அம்பரீஷன் முதலிய முன்னோர்கள் கொடிய சம்சாரத்தைத் தாண்டினார்கள். மேலும், அந்தப் பாதமானது பிரம்மா, பரமசிவன் முதலிய தேவர்களால் பூஜிக்கப்பட்டது; லக்ஷ்மீதேவியால் சேவிக்கப் பெற்றது; (மிக்க அழகுள்ளதென்று கருத்து.) பக்தியுள்ள மகரிஷிகளால் ஆச்ரயிக்கப்பெற்றது; பசுக்களை மேய்ப்பதற்காகக் கோபர்களுடன் வனத்தில் சஞ்சரிப்பது; (தயாளுவென்று கருத்து.) கோபிகைகளுடைய ஸ்தனத்திலுள்ள குங்குமத்தால் அடையாளமிடப்பட்டது; (அன்பினால் எளிதில் அறியக்கூடியதென்று கருத்து.) இந்த மிருகங்கள் பிரதக்ஷிணமாகச் செல்லுகின்றன; ஆனதால் இன்றைய தினம் அழகான கன்னங்கள், மூக்குகள் இவைகளுள்ளதும், புன்சிரிப்புள்ள பார்வையுள்ளவையும், சிவந்தவையும், தாமரைமலர்போன்றவையுமான கண்களுள்ளதும், சுருட்டை மயிர்களால் மறைக்கப்பட்டதுமான பகவானுடைய முகத்தைத் தரிசிக்கப்போகிறேன். மிகுந்த அழகு பொருந்தியவரும், பூமியின் பாரத்தைப் போக்கடிப்பதற்காகத் தமது இஷ்டப்படி அவதரித்தவருமான ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தரிசனம் எனக்குக் கிடைக்குமா? கிடைத்தால் என்னுடைய கண்கள் ஸபலமாகும். (நம்மைப்போல் ஸ்ரீ கிருஷ்ணனும் காரியங்களைச் செய்கிறார். சுகங்களை அனுபவிக்கிறார். ஆனதால், அவரை விஷ்ணுவென்று எப்படிச் சொல்லலாமென்றால் மூன்று சுலோகங்களால் அதற்குச் சமாதானஞ் சொல்லப்படுகிறது.) காரியங்களும், காரணங்களும் அவருடைய சங்கல்பத்தால் சேஷ்டிக்கின்றன. ஆனாலும் அவருக்கு நான் என்ற அகங்காரமில்லை. மேலும், அவருக்கு அஞ்ஞானமும், அதனாலுண்டாகும் பேதபுத்தியும், அதனால் அபிநிவேசமும் இல்லை. அப்படிப்பட்ட பகவான்

தம்முடைய சங்கல்பத்தால் பிராணன், இந்திரியங்கள், புத்தி இவைகளுள்ள ஜீவர்களைத் தம்மிடத்தில் உண்டு பண்ணி, அவர்களுடன் கோபிகைகளுடைய வீடுகளில் விளையாட்டாகக் கர்மங்களைச் செய்துகொண்டு, உண்மையில் பற்றுதலில்லாதவரானாலும் ஆசையுள்ளவர்போலத் தோன்றுகிறார். சகல பாபங்களையும் நிவர்த்திப்பவைகளும், சகல மங்களங்களைக் கொடுப்பவைகளுமான பகவானுடைய குணங்களையும், சரிதங்களையும், அவதாரங்களையும் எவன் சொல்லுகிறானோ, அவனுடைய வாக்கு ஜகத்தைப் பிழைக்கச்செய்கிறது; பரிசுத்தப்படுத்துகிறது; அவைகளுடைய சம்பந்தமற்ற வாக்குகள் பிணத்துக்கு அலங்காரஞ் செய்ததுபோல பிரயோசனமற்றவையாகின்றன. அப்படிப்பட்ட பகவான் தம்மால் ஏற்படுத்தப்பட்ட தர்மங்களைக் காப்பாற்றிக்கொண்டிருக்கும் தேவர்களுக்கு சுகத்தைச் செய்பவராகையால் யதுவம்சத்தில் அவதரித்துத் தம்முடைய கீர்த்தியைப்பரவச்செய்து கொண்டு கோகுலத்தில் வசிக்கிறார். எல்லாருக்கும் சகல மங்களத்தையும் கொடுக்கும் அந்தக் கீர்த்தியைத் தேவர்கள் கானஞ்செய்கிறார்கள். இன்றைய தினம் நல்ல பொழுது விடிந்தது. பகவானைத் தரிசிக்கப்போகிறேன். இது நிச்சயம். அவர் மகான்களுக்குக் கதியாக இருப்பவர்; எல்லாருக்கும் குருவாக இருப்பவர்; மூவுலகத்திலுமுள்ள ஜனங்களுக்குள் மிக்க அழகானவர்; கண்ணுள்ளவர்களுக்கு அதிக சந்தோஷத்தைக் கொடுப்பவர்; லக்ஷ்மீ தேவிக்குப் பிரியமான சுரூபமுள்ளவர்; பகவானைத் தரிசித்தவுடன் ராமகிருஷ்ணர்களுடைய பாதங்களில் நேரில் நான் நமஸ்கரிப்பேன். அவைகள் யோகிகளாலும் மனத்தால் தியானஞ் செய்யப்பட்டவை (யோகிகளுக்குங்கூட நேரில் கிடைக்காத பகவானுடைய பாதத்தை நான்

நேரில் பார்ப்பேன் என்று கருத்து). பின்பு அவர்களுடைய தோழர்களான கோபர்களையும் நமஸ்கரிப்பேன். அந்த பகவான் தம்முடைய பாதாரவிந்தத்தில் நமஸ்கரித்தவனாகிய என்னுடைய தலையில் தாமரை மலர்போன்ற கையை வைத்து அனுக்கிரகிப்பாரா? அந்தக் கையானது காலமாகிய சர்ப்பத்தைக் கண்டு பயந்து, சரணமடைந்தவர்களுக்கு அபயத்தைக் கொடுப்பது; அந்த பகவானுடைய கையை இந்திரனும், பலியும் பூஜித்து மூவுலகங்களுக்கும் இந்திரனாக ஆனார்கள். மேலும், அந்தக் கையானது தாமரைமலரின் வாசனைபோன்ற வாசனையுள்ள தாகையால் ராஸக்ரீடையில் கோபிகைகளுக்கு நேர்ந்த சிரமத்தை நிவர்த்தித்தது; பகவான் எல்லாவற்றையும் அறிந்தவரானதாலும், என்னுடைய மனத்திற்கு உள்ளும் வெளியிலுமிருப்பவரானதாலும், என்னுடைய அபிப்பிராயத்தை நித்தியமான ஞானத்தால் பார்த்துக்கொண்டே இருக்கிறார். ஆனதால் நான் கம்ஸனால் அனுப்பப்பட்டவனானாலும் என்னைச் சத்துருவாக நினைக்கமாட்டார். (வெளியில் கம்ஸனை அனுசரிக்கிறேனே யொழிய அந்தரங்கத்தில் ஸ்ரீ கிருஷ்ணனையே நினைத்துக்கொண்டிருக்கிறேன்.) பின்னும் அவருடைய பாதத்தின் சமீபத்தில் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு ஜாக்கிரதையாக இருக்கும் என்னைக் கிருபை பொருந்திய அனுக்கிரக திருஷ்டியால் பார்ப்பாரா? அப்படிக் கடாக்ஷித்தால் அந்த க்ஷணத்திலேயே சகல பாபங்களற்றவனாகி, பயமற்றுமிருந்த சந்தோஷத்தை அடைவேன். பின்னும் பகவானையே தெய்வமாகக் கொண்டவனும், பந்துவும், மித்திரனுமாகிய என்னைப் பகவான் பருத்த கைகளால் ஆலிங்கனஞ் செய்துகொள்வார். அப்பொழுதே என்னுடைய ஆத்மா சுத்தமாகிவிடும். கர்மபந்தமும் நழுவிவிடும்.

இப்படி பகவான் ஆலிங்கனஞ் செய்தபிறகு நான் அஞ்சலிபந்தம் செய்துகொண்டிருப்பேன். அப்படிப்பட்ட என்னை நோக்கி மிக்க கீர்த்தியுள்ள பகவான், 'ஓ தாத! அக்ரூர!' என்று அழைப்பார். அப்பொழுதுதான் நான் ஜன்ம ஸாபல்யத்தை யடைவேன். ஸ்ரீ கிருஷ்ணனால் எவன் ஆதரிக்கப்படவில்லையோ, அவனுடைய ஜன்மம் வியர்த்தமானதேயாம். கல்பக விருக்ஷமானது எப்படி, ஆச்ரயித்தவர்களுடைய இஷ்டத்தைக் கொடுக்கிறதோ, அதுபோல பகவான் எதற்காக, எவர்கள் தன்னை சேவிக்கிறார்களோ, அவர்களுக்கு அதனைக் கொடுக்கிறார். அவருக்குப் பிரியனாவது, அப்ரியனாவது, ஸ்நேகிதனாவது, விரோதியாவது, உதாஸினனாவது ஒருவனுமில்லை. யதுக்களுக்குட் சிறந்தவரான பலராமன் என்னுடைய இரு கையையும் பிடித்துச் சிரித்துக்கொண்டு வீட்டிற்கு அழைத்துப்போய் அர்க்கியம் முதலியவைகளைக் கொடுத்து, பந்துக்கள் விஷயத்தில் கம்ஸன் செய்யும் கெட்ட நடையைப்பற்றிக் கேட்பாரா" என்று யோசித்துக்கொண்டு சுவபல்கருடைய புத்திரராகிய அக்ரூரர் ரதத்துடன் நந்தகோகுலம் வந்தார். சூரியனும் அஸ்தமித்தார்.

25—45. அப்பொழுது அக்ரூரர் சகல லோகபாலர்களால் கிரீடங்களில் தரிக்கப்படும் சுத்தமான பாததூளியுள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய காலடிகளைக் கண்டார். அவைகள் தாமரை மலரின் ரேகை, யவ ரேகை, அங்குச ரேகை ஆகிய இவைகளுள்ளவை; பூமிக்கு அலங்காரமாயுள்ளவை; அவைகளைப் பார்த்தவுடன் அக்ரூரர் மிகுந்த சந்தோஷத்தை அடைந்து, பரபரப்புடன் ரதத்திலிருந்து கீழே இறங்கினார். ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலுள்ள பிரியத்தால் ஆனந்தக்கண்ணீரைப் பெருக்கினார். மயிர்க்

கூச்சலை அடைந்தார்; மேலும் அவர், "இவை பிரபுவினு டைய பாததூளிகள்; இவைகள் கிடைப்பது அரிது" என்று சொல்லி, அவைகளில் விழுந்து புரண்டார். கம்ஸ னுடைய உத்தரவின்படி அக்ரூரர் கோகுலத்திற்குப் புறப்பட்டு, வழியில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய காலடிகளைத் தரிசித்தும், அவருடைய சரிதங்களைக் கேட்டும், டம்பம், பயம், துக்கம் ஆகிய இவைகளைவிட்டுப் பகவானை தியா னித்துக்கொண்டும் இருந்தாரென்று சொன்னோமல்லவா? இப்படி இருப்பதே பிராணிகளுக்குப் புருஷார்த்த மாகிறது. பின்பு அவர் ரதத்தின்மீதேறி, "ஸ்ரீ கிருஷ்ண னும், பலராமனும் எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட் டுக்கொண்டு சென்றார்.

சாயங்காலத்தில் மரத்திலிருக்கும் கோப குமாரர் கள் முகமாகக் கொட்டிலில் ஸ்ரீ கிருஷ்ணனும், பல ராமனும் இருப்பதாகத் தெரிந்துகொண்டு அவ்விடஞ் சென்று, மாடு கறக்கும் ஸ்தலத்தில் உட்கார்ந்திருக்கும் பலராமனையும், ஸ்ரீ கிருஷ்ணனையும் தரிசித்தார். அவர் களில் ஸ்ரீ கிருஷ்ணன் பீதாம்பரத்தையும், பலராமன் கறுத்த வஸ்திரத்தையும் தரித்திருந்தார்கள். மேலுமவர் கள் சரத்காலத்தில் புஷ்பித்த தாமரை மலர் போன்ற கண்களுள்ளவர்களும், பருத்த கைகளுள்ளவர்களும், அழகான முகங்களுள்ளவர்களும், சௌந்தரியமுள்ளவர் களும், யானைக்குட்டிபோன்ற பராக்கிரமமுள்ளவர்களு மாக இருந்தார்கள். அவர்களில் கிருஷ்ணன் கறுத்த திரு மேனியுள்ளவராகவும், பலராமன் வெண்மை நிறமுள்ளவ ராகவும் இருந்தார்கள். பின்னும் அவர்களுடைய கால்கள் த்வஜ ரேகை, வஜ்ர ரேகை, அங்குச ரேகை, தாமரை ரேகை இவைகளுள்ளனவாக இருந்தன. அப்படிப்பட்ட பாதங்களால் கோகுலத்தில் நடந்து அதனைப் பிரகாசிக்

கச் செய்கிறார்கள். பின்னும் அவர்களுடைய சிரிப்பும், பார்வையும் தயையுள்ளனவாக இருந்தன. இன்னுமவர்கள் வனமாலை, நல்ல வாசனையுள்ள சந்தனம், சுத்த வஸ்திரம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் ஜகத்திற்குக் காரணமான பிரதான புருஷர்கள்; பூமியின் பாரத்தை நிவர்த்திப்பதற்காக அவதரித்தவர்கள்; அவர்கள் சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட மரகத மலை போலும், வெள்ளி மலை போலும், தங்களுடைய காந்தியால் சகல திக்குகளையும் பிரகாசிக்கச் செய்துகொண்டும் இருந்தார்கள். அவர்களைக் கண்டவுடன் அக்ரூரர் சீக்கிரமாக ரதத்திலிருந்து இறங்கி, ராமகிருஷ்ணர்களுடைய பாதங்களில்தடிபோல் விழுந்து நமஸ்கரித்தார். பகவானைத் தரிசித்ததால் மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, கண்ணீரால் தொண்டை யடைத்து மயிர்க்கூச்சலை அடைந்து, "நான் அக்ரூரன்; நமஸ்காரம் செய்தேன்" என்று சொல்வதற்கு முடியாமலிருந்தார். வணங்கினவர்களிடத்தில் பிரீதியுள்ளவரான ஸ்ரீ கிருஷ்ணன் அக்ரூரருடைய அபிப்பிராயத்தை அறிந்து, சக்ரரேகையுள்ள தமது கையினால் அவரைத் தூக்கி ஆலிங்கனஞ் செய்துகொண்டார். கம்பீரமனமுள்ள பலராமன் தம்முடைய பாதங்களில் நமஸ்கரித்தவராகிய அக்ரூரரைத் தூக்கித் தழுவி அவருடைய கையைத் தமது கையால் பிடித்து அழைத்துக்கொண்டு தம்பியாகிய கிருஷ்ணனுடன் தமது வீட்டிற்குச் சென்றார். அவ்விடத்தில் அவரை நல்வரவா வென்று கேட்டு, அவருடைய கால்களை அலம்பி, ஆசனங் கொடுத்து, மதுவர்க்க விதிப்படி பூஜைசெய்தார். அதிதிகளைப் பூஜிக்கும் முறையை யறிந்தவரான பலராமன், அதிதியாகிய அக்ரூரருக்குப் பசுவைக் கொடுத்து, அவருடைய களைப்பை நிவர்த்தித்து, பரிசுத்தமான ருசியுள்ள அன்னத்தைப்

ப்ரீதியுடன் கொடுத்துப் புசிக்கச் செய்தார். அவர் போசனஞ் செய்தபின்பு பச்சைக்கற்பூரம் சேர்ந்த சந்தனத்தைப் பூசி, புஷ்பமாலைகளால் அலங்கரித்து, மிகவும் சந்தோஷிக்கச் செய்தார். பின்பு நந்தகோபர் அக்ரூரரை நோக்கி, "மிக்க கொடியவனாகிய கம்ஸனிடத்தில் நீங்கள் எப்படி வசிக்கிறீர்கள்? பசுக்களைக் கொல்லும் கொடிய சுபாவமுள்ளவனை ஆடுகளுக்குக் காவலாளாக நியமித்தாற் போல கம்ஸன் நமக்கு அரசனாக இருக்கிறான். அவன் தன்னுடைய பிராணனைக் காப்பாற்றிக்கொள்வதில் நோக்கமுள்ளவன்; தயையில்லாதவன்; சகோதரியின் குழந்தைகளைக் கொன்றவன்; அந்தக் கம்ஸனுடைய ராஜ்ஜியத்தில் வசிக்கும் ஜனங்களுக்கு ஜீவனமே அரிது. உங்களை எப்படி க்ஷேமமா என்று கேட்போம்" என்று இனிமையான வார்த்தையால் பூஜித்தார். அக்ரூரர் வழி நடந்துவந்த களைப்புத் தீர்ந்து சுகத்தை யடைந்தார்.

## அத்தியாயம் 39

### அக்ரூரர் விஷ்ணு லோகத்தைப் பார்த்தது

**1—7.** பின்பு அக்ரூரர் ராமகிருஷ்ணர்களால் மஞ்சத்தில் வைத்துப் பூஜிக்கப்பட்டு, வழியில் எவைகளை நினைத்துக்கொண்டு வந்தாரோ அவ்வளவு மனோரதங்களையும் அடைந்தார். லக்ஷ்மீதேவிக்கு வாசஸ்தலமாகிய பகவான் சந்தோஷமடைந்தால் எதுதான் கிடைக்காது? (எல்லாம் கிடைக்கும் என்று கருத்து.) ஆனாலும் பகவானிடத்தில் பக்தி செய்கிறவர்கள் ஒன்றையும் விரும்புகிறதில்லை. தேவகியின் புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் சாயங்கால போஜனத்தை முடித்துக்கொண்டு, கம்ஸன் பந்துக்

களிடத்தில் எப்படியிருக்கிறான் என்பதையும், அவ னுடைய எண்ணத்தைப்பற்றியும் பின்வருமாறு கேட்க லானார்: எப்படியெனில்—‘ ஓ நல்ல சுபாவமுள்ள அக்ரூரரே! கம்ஸனிடத்திலிருந்து நல்வரவா? உங்க ளுக்கு க்ஷேமமுண்டாகட்டும். நம்முடைய பந்துக்க ளெல்லாரும் ரோகமில்லாமல் சுகமாக இருக்கிறார்களா? நம்முடைய குலத்திற்கு வியாதிபோன்றவனும், அம்மான் (மாதாவின் சகோதரன்) என்ற பாந்தவ்யமுள்ளவனு மாகிய கம்ஸன் விருத்தியடைந்திருக்கும்பொழுது அவ னுடைய ராஜ்யத்தில் வசிப்பவர்களான நம்முடைய பந்துக்களுக்குச் சுகமேது? அதைப்பற்றி நான் கேட்க வேண்டுமா? பூஜிக்கத்தக்கவர்களான எமது தாய் தந்தையர்களுக்கு எங்கள் நிமித்தமாக மிக்கக் கெடுதிகள் சம்பவித்தன; எங்கள் நிமித்தத்தில் அவர்கள் காராகிரு கத்தில் அடைக்கப்பட்டார்கள்; புத்திரசோகத்தை அனுபவித்தார்கள். பந்துக்களாகிய உங்களை நான் தரிசித்தது தெய்வச் செயலேயாம். இது வெகுநாளாக எதிர்பார்க்கப்பட்டது; ஆனதால் நீர் வந்த காரியம் என்ன? சொல்லவேண்டும்’ என்று கேட்டார்.

8—37. அதனைக் கேட்ட அக்ரூரர், “கம்ஸன் யாதவர்களிடத்தில் விரோத புத்தி வைத்திருப்பதையும், வசுதேவரைக் கொல்ல முயன்றதையும், எதற்காகக் கம்ஸன் தன்னை அனுப்பினானோ, எந்த வார்த்தைகளைச் சொல்லும்படி சொன்னானோ, அவைகளையும், நாரதர் முகமாக உங்களிருவர்களையும் வசுதேவருடைய புத்திரர் களென்று கம்ஸன் தெரிந்துகொண்டிருக்கிறானென்பது முதலியவைகளெல்லாவற்றையும் தெரிவித்தார். அதனைக் கேட்ட ராமகிருஷ்ணர்களிருவர்களும் சிரித்து, கம்ஸன் சொல்லியனுப்பிய சமாசாரத்தைப் பிதாவாகிய நந்த

கோபரிடம் நன்றாகத் தெரிவித்தார்கள். அதனைக் கேட்ட நந்தகோபரும் கோபர்களை நோக்கி, “நம்முடைய கோகுலத்திலுள்ள பால், தயிர், நெய் முதலியவைகளை எடுத்துக் கொள்ளுங்கள். மேலும், காணிக்கைகளாக உயர்ந்த வஸ்துக்களை யெடுத்துக்கொள்ளவேண்டும். வண்டிகளைத் தயார் செய்யுங்கள்; நாளையதினம் மதுரா நகரத்திற்குப் போவோம். அரசனிடம் காணிக்கைகளைச் சமர்ப்பிப்போம்; தனுர்யாகத்தைப் பார்ப்போம்; அதற்காகத் தேசத்திலுள்ள ஜனங்கள் போகிறார்கள்” என்று சொல்லி கோகுலத்தில் பிரசித்தப்படுத்தினார். (தண்டோரா போடுவித்தார்.) கோபிகைகள், ராமகிருஷ்ணர்களை அழைத்துப் போவதற்காக அக்ரூரர் வந்திருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டுத் துக்கமடைந்தார்கள். சில ஸ்திரீகள் அதனால் மனவருத்தத்தை யடைந்து பெருமூச்சு விட்டு, வாடின முகமுள்ளவர்களானார்கள். மற்றுஞ் சில ஸ்திரீகளுக்கு வஸ்திரம், வளை, தலைமுடிச்சு ஆகிய இவைகள் நழுவின. மற்றுஞ் சிலர், பகவானைத் தியானஞ்செய்து அதனால் சகல இந்திரிய வியாபாரங்க ளடங்கியவர்களாகி ஆத்ம லோகத்தை அடைந்தவர்கள்போல இவ்வுலகத்தை மறந்திருந்தார்கள். பின்னுஞ் சிலர் அன்புபொருந்திய சிரிப்புள்ளவைகளும், மனோகரங்களும், விசித்திர பதங்களுள்ளவைகளுமான பகவானுடைய வார்த்தைகளை நினைத்து மோகித்தார்கள். பின்னும் அவர்கள், பகவானுடைய அழகான நடை, சேஷ்டை, சிரிப்புள்ள அழகான பார்வை, துக்கத்தை நிவர்த்திக்கக்கூடிய மேலான சரித்திரங்கள் ஆகிய இவைகளை நினைத்து ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிய மனமில்லாதவர்களாகி, கூட்டமாக ஒன்று கூடிக் கிருஷ்ணனிடத்திலேயே மனத்தைச் செலுத்தியவர்களாகி, கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு பின்வருமாறு

மாறு சொல்லலானர்கள்: "ஓ தெய்வமே! உனக்கு ஒருவரிடத்திலும் தயையில்லை. சில காலம் சேர்த்து அனுகூலத்தைச் செய்து போகத்தை அனுபவிக்காம லிருக்கும்பொழுதே பிரித்துவிடுகிறாய். உன்னுடைய கையானது குழந்தைகளுடைய சரிதம்போல இருக் கிறது; பிரயோசனமற்றது; கறுத்த மயிர்களால் மறைக்கப்பட்டதும், அழகான கன்னங்களுள்ளதும், உயர்ந்த மூக்குகளுள்ளதும், துக்கத்தை நிவர்த்திக்கக் கூடிய புன்சிரிப்புள்ளதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தைக் காண்பித்து, இப்பொழுது அதனைத் தரிசிக் காமலிருக்கும்படி செய்கிறாய். ஆனதால் உன்னால் செய் யப்படும் காரியம் நல்லதல்ல. ஓ அக்ரூர! நீர் மிகவும் கொடிய சுபாவமுள்ளவர்; பெயர் மாத்திரம் அக்ரூரர் (நல்லவர்) என்றிருக்கிறது. எங்களுக்குக் கண்ணாக விருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை அபகரிக்கிறீரல்லவா! ஓ தெய்வமே! எங்களுக்கு உம்மால் ஸ்ரீ கிருஷ்ணனாகிய கண்ணானது கொடுக்கப்பட்டிருந்த தல்லவா? அதனால் நாங்கள் சிருஷ்டிக்கும் விஷயத்தில் உமக்கு இருக்கும் சாமர்த்தியத்தைப் பகவானுடைய சரீரத்தில் பார்த்துக் கொண்டிருந்தோம். அப்படி உம்மால் கொடுக்கப்பட்ட கண்ணை நீரே மூடன் போல அக்ரூரர் என்ற பெயருடன் அபகரிக்கிறீர். அதனால் நீர் கொடிய சுபாவமுள்ளவரே யாம். நந்தகுமாரராகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய பிரிய மானது ஸ்திரமில்லாதது. ஏனென்றால் வீடு, பந்துக் கள், புத்திரர்கள், பர்த்தா ஆகிய எல்லோரையும் விட்டு தமக்கு வேலைக்காரிகளாகவும், தமது நிமித்தமாகக் கஷ்டப் படுகிறவர்களுமான எங்களைக் கவனிக்கிறதில்லை. மதுரா நகரத்திலுள்ள ஸ்திரீகளுக்கு இன்றைய தினம் நல்ல பொழுது விடிந்தது. அவர்களுடைய இஷ்டம் நிறை வேறியது. கடைக்கண் பார்வையுள்ள பகவானுடைய

புன்சிரிப்பாகிய மதுவை அவர்கள் பானம்பண்ண ப
போகிறார்கள். ஓ ஸ்திரீகளே! அந்தப் பட்டணத்திய
ஸ்திரீகள் தேன்போல் இனிமையாகப் பேசுவார்கள்.
அதற்கு பகவான் தைரியமுள்ளவரானாலும், வசப்பட்டு
அவர்களுடைய வெட்கம், சிரிப்பு, விளையாட்டு இவை
களால் மோகித்து, அவ்விடத்திலேயே வசிப்பாரே
யொழியக் கிராமத்து ஜனங்களாகிய நம்மை லட்சியஞ்
செய்து இவ்விடம வருவாரோ? (வரமாட்டார் என்று
தாத்பரியம்.) இன்றைய தினம் மதுரா நகரத்திற்குப்
போகிறவரும், லக்ஷ்மீபதியும், எல்லாக் குணங்கள்
பொருந்தியவருமான தேவகியின் புத்திரனை மார்க்கத்தில்
எவர்கள் தரிசிப்பார்களோ, அவர்களுடைய கண்களுக்
கும் பட்டணத்தில் இந்தக் கிருஷ்ணனை தரிசிக்கும்
தாசார்ஹர்கள், போஜர்கள், அந்தகர்கள், விருஷ்ணிகள்,
ஸாத்வதர்கள் ஆகிய இவர்களுடைய நேத்திரங்களுக்கும்
மிகுந்த ஆனந்த முண்டாகப் போகிறது. இந்த அக்ரூரர்
கொடிய சுபாவமுள்ளவர்; தயையில்லாதவர்; ஆனதால்
இவருக்கு அக்ரூரர் என்ற பெயர் தகுதியானதல்ல.
எங்களுக்குப் பிராணனைக் காட்டிலும் பிரியமாகவிருக்கும்
ஸ்ரீ கிருஷ்ணனை தூரதேசத்திற்கு அழைத்துப்போகிறார்.
இந்த ஸ்ரீ கிருஷ்ணன் ரதத்தின் மீதேறிப் பிரயாணத்
திற்கு ஸன்னத்தராக இருக்கிறார். இவர் தயையில்லாத
வர்; இந்தக் கோபர்களும் வண்டிகளைப் பூட்டிக்கொண்டு,
கிருஷ்ணனைச் சீக்கிரப்படுத்துகிறார்கள். வயதுசென்ற
கோபர்களும் மௌனமாக இருக்கிறார்கள். நமக்கு இப்
பொழுது தெய்வமும் அனுகூலமாக இருக்கவில்லை.
(தெய்வம் அனுகூலமாக இருந்தால் இப்பொழுது
மழை பெய்யலாம்; இடி விழலாம்; கிருஷ்ணனுடைய
பிரயாணத்திற்கு இடையூறுகள் உண்டாகலாம்
என்று கருத்து.) இப்பொழுது நாம் கிருஷ்ணனிடம்

சென்று மதுரா நகரத்திற்குப் போகக்கூடாதென்று தடுத்துவிடுவோமா? அப்படிச் செய்தால் நம்முடைய பந்துக்களும், பெரியோர்களும் என்ன செய்வார்கள்? அரை க்ஷணமேனும் கிருஷ்ணனைவிட்டுப் பிரிந்திருக்க முடியாது. தெய்வத்தால் பகவானுடைய விரதமானது நமக்கு ஏற்பட்டிருப்பதால் நம்முடைய மனது மிகவும் தீனமாக இருக்கிறது. (நமக்கு மிருத்யுவினிடத்திலும் பயமில்லை என்று தாத்பர்யம்.) ஓ கோபிகைகளே! கிருஷ்ணனுடைய அழகான சிரிப்பு, பேச்சு, விளையாட்டான பார்வை, ஆலிங்கனம் ஆகிய இவைகளால் ராஸக்ரீடையில் ராத்திரியை க்ஷணம்போலப் போக்கடித்தோமல்லவா? அப்படிப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்து எப்படி துக்கத்தை சகிக்க முடியும்? சயங்காலத்தில் எந்தப் பகவான் பலராமனுடனும், கோபர்களுடனும் மாடுகளை யோட்டிக்கொண்டு, வேணுகானஞ் செய்து கொண்டு கோதூளிகள் படிந்த தலைமயிருள்ளவராகிக் கோகுலத்திற்கு வந்து கடைக்கண்ணால் நம்மைப் பார்த்து நம்முடைய மனத்தை அபகரிப்பாரோ, அந்தப் பகவானை விட்டுப் பிரிந்திருக்கமுடியுமா?" என்று சொல்லிக் கொண்டு கோபஸ்திரீகள் கிருஷ்ணனையே மனத்தில் நினைத்துக்கொண்டு, 'ஓ கோவிந்தா! தாமோதரா! மாதவா!' என்று உரக்கக் கதறினார்கள். இப்படி ஸ்திரீகள் அழுதுகொண்டிருக்கும்பொழுது சூரியன் உதயமானார். அப்பொழுது அக்ரூரர் ஸந்தியாவந்தனம் முதலிய கருமங்களை முடித்துக்கொண்டு ரதத்தை நடத்தினார். நந்தன் முதலிய கோபர்களும் நெய், பால் முதலியவைகளால் நிறைந்த குடங்களை எடுத்துக்கொண்டு, வண்டிகளின் மேலேறிக்கொண்டு அவர்பின் சென்றார்கள். கோபிகைகளும் ஸ்ரீ கிருஷ்ணன்பின் சென்று கிருஷ்ணனால் பார்க்கப்பட்டவர்களாகி அவருடைய உத்தரவை எதிர்பார்த்து

நின்றார்கள். அப்பொழுது யாதவர்களுக்குச் சிறந்தவ ராகிய ஸ்ரீ கிருஷ்ணன் தாம் துவாரகா நகரத்திற்குப் போவதால் கோபிகைகள் வருத்தப்படுகிறார்கள் என்ப தைத் தெரிந்துகொண்டு, 'சீக்கிரம் திரும்பி வருகிறேன்' என்று தூதன்முகமாகச் சொல்லியனுப்பி அவர்களைச் சமாதானஞ்செய்தார். அந்தக் கோபிகைகள் ஸ்ரீ கிருஷ் ணனுடைய ரதத்தின் கொடியானது எதுவரையில் கண் ணுக்குப் புலப்பட்டதோ ரதஞ்செல்வதால் உயரக் கிளப் பும் தூளி எதுவரையில் பார்க்கப்பட்டதோ, அதுவரை யில் பகவானிடத்திலேயே சித்தத்தைச் செலுத்திக் கொண்டு சித்திரம்போல நின்றார்கள். பின்பு ஆசை யொழிந்தவர்களாகி, ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரத் தைக் கானம் பண்ணிக்கொண்டு தினங்களைக் கழித் தார்கள்.

38—57. ஸ்ரீ கிருஷ்ணனும், பலராமனும், அக்ரூர ரும் வாயுவுக்குச் சமமான வேகமுள்ள ரதத்துடன் யமுனாதீரஞ் சென்றார்கள். அந்த யமுனையானது பாபத் தைப் போக்கடிக்கக்கூடியது ; மேலும், ஸ்ரீ கிருஷ்ணன் ரத்தினம்போல் சுத்தமான காந்தியுள்ள யமுனையின் ஜலத்தை ஆசமனஞ்செய்து மரங்களின் கூட்டத்தின் வழியாகப் பலராமனுடன் சென்று ரதத்தில் வசித்தார். அக்ரூரர் அவர்களிடம் விடைபெற்று அவர்களை ரதத்தில் வசிக்கச்செய்து, யமுனையின் மடுவிற்குச் சென்று விதிப் படி ஸ்நானஞ்செய்தார். அந்த ஜலத்தில் மூழ்கி வேத மந்திரத்தை ஜபஞ் செய்துகொண்டிருந்தார். அப்பொ ழுது அந்த ஜலத்தில் ராமனும் கிருஷ்ணனும் சேர்ந் திருப்பதைத் தரிசித்து அக்ரூரர் ரதத்திலிருந்த வசுதேவ புத்திரர்கள் ஜலத்தில் எப்படிக் காணப்படுகிறார்கள் ? ரதத்திலில்லையோ, என்று சந்தேகித்து, ஜலத்திற்கு மேலே

கிளம்பிக் கரையில் பார்த்தார். அவ்விடத்திலும் போல ராமகிருஷ்ணர்களிருவர்களும் ரதத்திலிருப்பதைக் கண்டு ஜலத்தில் பார்த்தது பொய்யோ என்று திரும்பவும் ஜலத்தில் மூழ்கினர். அவ்விடத்திலும் முன்போல் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்தார். எப்படியெனில் ஆயிரம் படங்களுள்ளவரும், தாமரைத் தண்டுபோல வெண்மைச் சரீரமுள்ளவரும், கறுத்த வஸ்திரத்தைத் தரித்தவரும் ஸித்தர்களாலும், கந்தர்வர்களாலும், அசுரர்களாலும் துதிக்கப்பெற்றவருமான ஆதிசேஷனைக் கண்டார். அவருடைய மடியில் வசிக்கும் பகவானையும் தரிசித்தார். அவர் மேகம்போன்ற கறுத்த திருமேனியுள்ளவர்; பீதாம்பரத்தைத் தரித்தவர்; நான்கு கைகளுள்ளவர்; சாந்தமான சுபாவமுள்ளவர்; தாமரை இதழ்போன்ற நீண்ட கண்களுள்ளவர்; அழகான சிரித்த முகமுள்ளவர்; புன்சிரிப்புள்ள பார்வையுள்ளவர்; அழகான புருவங்கள், காதுகள், கன்னங்கள் இவைகளுள்ளவர்; உயரமான மூக்குள்ளவர்; சிவந்த உதடுள்ளவர்; பருத்துத் தொங்குகிற கைகளுள்ளவர்; உயரமான தோள்களுள்ளவர்; மார்பில் லக்ஷ்மிதேவியை வைத்துக்கொண்டவர்; சங்கம் போன்ற கழுத்துள்ளவர்; பள்ளமான தொப்புள் உள்ளவர்; மூன்று மடிப்புள்ளதும், அரச இலைக்குச் சமமான வயிறுள்ளவர்; பருத்த இடுப்பு, முன்பக்கம் இவைகளுள்ளவர்; கரபம் (கையின் பக்கம்) போன்ற தொடைகளுள்ளவர்; அழகான முழங்கால்கள், கணைக்கால் இவைகளுள்ளவர்; கொஞ்சம் உயர்ந்தும், சிவந்த நககாந்தியுள்ளதுமான பாதங்களுள்ளவர்; மிகவும் மிருதுவான கட்டைவிரல் முதலிய விரல்களால் பிரகாசிக்கும் பாதாரவிந்தமுள்ளவர்; மேலுமவர் விலையுயர்ந்த ரத்தினங்கள் இழைத்த கிரீடம், வளை, தோள்வளை, அரைஞாண், பூணூல், ஹாரம், பாதஸரம், குண்டலம் இவைகளால் பிரகாசிப்

பவர்; தாமரை மலர், சங்கம், சக்கிரம், கதாயுதம் ஆகிய இவைகளைக் கைகளில் தரித்தவர்; ஸ்ரீவத்ஸத்தால் அழகிய மார்புள்ளவர்; பிரகாசிக்கும் கௌஸ்துப ஹாரமுள்ளவர்; வனமாலையுள்ளவர்; மேலும் சுநந்தர், நந்தர் முதலிய பார்ஷத கணங்களும், ஸனகர் முதலியவர்களும், பிரும்மா, ருத்திரன் முதலிய தேவர்களும், மரீசி முதலிய ஒன்பது பிரஜாபதிகளும், பிரகலாதர், நாரதர், உபரிசரவஸு முதலிய பாகவதர்களும் அந்த ஸ்ரீ பகவானைப் பலவித அபிப்பிராயமுள்ள சிறந்த வார்த்தைகளால் ஸ்தோத்திரம் செய்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீ, புஷ்டி, வாக்கு, கீர்த்தி, காந்தி, துஷ்டி, பூமி, ஊர்ஜை, வித்தை, அவித்தை, சக்தி, மாயை ஆகிய இவைகளும் பகவானை சேவித்துக்கொண்டிருந்தன. அப்படிப்பட்ட பகவானை அக்ரூரர் தரிசித்துப் பிரியமடைந்து, மிகுந்த பக்தியுடன் மயிர்க்கூச்சலை யடைந்து, பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தி, ஆனந்தக் கண்ணீருள்ளவராகி, கண்டமடைத்து, தைரியத்தை யடைந்து சிரசில் இரு கைகளைக் கூப்பிக்கொண்டு, தழுதழுத்த வார்த்தையுடன் மெதுவாக ஸ்தோத்திரஞ் செய்ய ஆரம்பித்தார்.

## அத்தியாயம் 40

### அக்ரூர் பகவானைத் தோத்திரஞ் செய்தது

1—30. "ஓ கிருஷ்ணா! நீர் எல்லாவற்றிற்குங் காரணங்களான ஐந்து மகா பூதங்களுக்குங் காரணராக இருப்பவர்; உமக்கு ஆதியும் அந்தமுமில்லை; உம்முடைய தொப்புளிலிருந்து உண்டான தாமரைமலரிலிருந்துபிரும்ம தேவர் உண்டானார். அவரால் இவ்வுலகம் சிருஷ்டிக்கப்

பட்டது; அப்படிப்பட்ட ஆதி புருஷனாகிய உமக்கு நமஸ்காரம். மேலும், ஜகத்திற்குக் காரணங்களான பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாயம், அகங்காரம், மகத் தத்துவம், மாயை, மனம், இந்திரியங்கள், சப்தம் முதலிய விஷயங்கள், தேவர்கள் ஆகிய எல்லாம் உமக்கு அவயவங்களாக இருக்கின்றன. (உம்முடைய சரீரத்திலிருந்து உண்டானவைகள்.) முன்காட்டிய மாயை முதலியவைகள் ஜடங்களானதால் (அசேதனம்) உம்முடைய சுவரூபத்தைத் தெரிந்துகொள்ளச் சக்தியில்லாதவைகளாக இருக்கின்றன. மாயையின் குணங்களுள்ளவனான ஜீவன் சேதனனாலும், குண சம்பந்தமற்றவரான உம்மைத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவனாக இருக்கிறான். மேலும், ஹிரண்யகர்ப்பர் முதலியவர்கள் அத்யாத்மம், அதிபூதம், அதிதெய்வம் ஆகிய இவைகளுக்குச் சாட்சியும், அந்தர்யாமியும், மகா புருஷனும், ஈசுவரனுமாகிய உம்மைப் பூஜிக்கிறார்கள். கர்மயோகத்தை அனுஷ்டிப்பவர்களான சில பிராமணர்கள் வேத வித்தையைக் கொண்டு பல வகையான தேவர்களுடைய பெயரைச் சொல்லி அநேக யாகங்களால் உம்மைப் பூஜிக்கிறார்கள். இன்னும் சிலர் எல்லாக் கர்மங்களையும் உம்மிடத்தில் சமர்ப்பித்துச் சாந்தர்களாகி, ஞானமாகிய யாகத்தைக்கொண்டு ஞான சுரூபியாயிருக்கிற உம்மைப் பூஜிக்கிறார்கள். இன்னும் சிலர் வைஷ்ணவ தீட்சைபெற்று, உம்மையே தியானஞ் செய்துகொண்டு உம்மால் சொல்லப்பட்ட பாஞ்சராத்ர விதிப்படி உம்மையே பிரத்யும்னரென்றும், அனிருத்தரென்றும், அநேக மூர்த்திகளாயும், நாராயணனென்ற ஒரு மூர்த்தியாகவும் பூஜிக்கிறார்கள். மற்றுஞ் சிலர் சிவதீட்சை பெற்றுச் சைவம், பாசுபதம், முதலிய மார்க்கத்தால் சிவசுரூபியாக உம்மைப் பூஜிக்கிறார்கள். ஓ சகல தேவசுரூபியே! இன்னும் மற்ற அற்ப தேவதைகளிடத்

தில் பக்தி செய்பவர்களும் உம்மையே பூஜிப்பவர்களாக ஆகிறார்கள். எண்ணத்தில் பேதமேயொழிய வஸ்துவில் பேதமில்லை. மலையிலிருந்து பெருகி வரும் நதிகள் மழையால் நிறைந்து சமுத்திரத்தை அடைகிறதுபோல எந்த மார்க்கமாக,எந்த தேவதையைப் பூஜித்தாலும் அது கடைசியில் உம்மையே பூஜித்ததாகிறது. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவைகள் உம்முடைய பிரகிருதியின் குணங்கள். தாவரம் முதல் பிரும்மா வரையிலுள்ளவர்கள் பிருகிருதி சம்பந்தமுள்ளவர்களாகையால் அதன் குணங்களில் பிரவேசித்திருக்கிறார்கள்; சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். (அவர்கள் பிரகிருதியிலும் அந்தப் பிரகிருதியானது உம்மிடத்திலும் இருக்கிறது. ஒவ்வொன்றும் லயத்தையடைந்தால் எல்லாம் உம்மையே அடைகின்றனவென்று தாத்பரியம்.) நீர் அவைகளில் சம்பந்தப்படாத ஞானமுள்ளவர்; சகல சுரூபியாக இருப்பவர்; சகல புத்திகளுக்கும் சாட்சியாக இருப்பவர்; உம்முடைய மாயையால் ஏற்பட்ட இந்த ஸம்ஸாரமானது சரீரத்தில் அபிமானமுள்ள தேவர்கள், மனிதர்கள், பசுக்கள், பட்சிகள் முதலியவைகளுக்கே யொழிய உமக்கில்லை. மேலும், உமக்கு அக்னியானது முகமாகவும், பூமி பாதமாகவும், சூரியன் கண்ணாகவும், ஆகாயம் தொப்புளாகவும், திக்குகள் காதுகளாகவும், த்யுலோகம் தலையாகவும், தேவர்கள் கைகளாகவும், சமுத்திரம் வயிறாகவும், வாயு பிராணனாகவும், பலமாகவும், விருட்சங்களும் கொடிகளும் மயிர்களாகவும், மேகங்கள் தலைமயிர்களாகவும், மலைகள் எலும்புகளாகவும், நகங்களாகவும், இரவும், பகலும் கண்கொட்டலாகவும், பிரும்மதேவர் ஆண்குறியாகவும், மழையானது வீரியமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. நாசமில்லாத சுரூபமுள்ள புருஷனாகிய உம்மிடத்தில் அநேக ஜீவர்கள், லோகபாலர்கள் ஆகிய இவர்களடங்கிய லோகங்கள்

கற்பிக்கப்பட்டிருக்கின்றன. பின்னும், நீர் விளையாட்டாக எந்தெந்த அவதாரங்களைச் செய்கிறீரோ, அவைகளால் ஜனங்கள் துக்கத்தை நிவர்த்தித்துக்கொண்டு உம்முடைய கீர்த்தியைக் கானஞ்செய்கிறார்கள். பிரளயகாலத்தில் மத்ஸ்ய ரூபியாகச் சஞ்சரித்த உமக்கு நமஸ்காரம். மது, கைடபன் இவர்களைக் கொன்றவரும், ஹயக்ரீவராக அவதரித்தவருமாகிய உமக்கு நமஸ்காரம். கூர்மமாக அவதரித்து, மந்தரமலையை முதுகில் தாங்கியவரான உம்மை நமஸ்கரிக்கிறேன். வராஹாவதாரஞ் செய்து பாதாளத்திலிருந்து பூமியைக் கொண்டுவருவதாகிய விளையாட்டைச் செய்தவராகிய உமக்கு நமஸ்காரம். ஓ சாதுக்களுடைய பயத்தை நிவர்த்திப்பவரே! அற்புதமான ஸிம்மாவதாரஞ்செய்த உமக்கு நமஸ்காரம். வாமனராக அவதரித்த உமக்கு நமஸ்காரம். மூவுலகத்தையும் அளந்தவராகிய உமக்கு நமஸ்காரம். பரசுராமனாக அவதரித்து, துஷ்டர்களான க்ஷத்திரியர்களுடைய கூட்டத்தை நாசஞ்செய்த உமக்கு நமஸ்காரம். வசுதேவருக்குப் புத்திரராகிய உமக்கு நமஸ்காரம். ஸங்கர்ஷணராகிய (பலராமன்) உமக்கு நமஸ்காரம். பிரத்யும்னரும், அனிருத்தரும், ஸாத்வதர்களுக்கு அதிபதியுமாகிய உமக்கு நமஸ்காரம். சுத்தரும், புத்தரும், தைத்யர்களையும், தானவர்களையும் மோகிக்கச்செய்த மோகினி ரூபமுள்ளவரும், கல்கி சுரூபமெடுத்து மிலேச்சர்கள்போன்ற க்ஷத்திரியர்களை நாசஞ்செய்தவருமான உமக்கு நமஸ்காரம். ஓ பகவன்! சகல லோகங்களும் உம்முடைய மாயையால் மோகத்தை அடைந்திருக்கின்றன. தேகம் முதலிய அஸத் பதார்த்தங்களில் 'நான், என்னுடையது' என்ற அபிமானமுள்ளவர்கள் கர்ம மார்க்கத்தில் சுற்றுகிறார்கள். ஓ பிரபுவே! சரீரம், புத்திரன், வீடு, களத்திரம், பணம், பசுக்கள் முதலியவைகள் சொப்பனம்போன்ற

யவன்; அவைகளை நான் உண்மையானவைகளென்று நினைத்து மோஹிக்கிறேன். நான் அஞ்ஞானத்தால் மூடப்பட்டு அநித்யங்களும், அனாத்மாக்களும், துக்ககரங்களுமான விஷயங்களை நித்யமானவைகளென்றும், ஆத்மாவென்றும், ஸுகத்தைக் கொடுக்கக்கூடியவைகளென்றும் நினைத்து, ஸுகதுக்கங்களில் பிரியப்பட்டு, ஆத்மாவிற்கு க்ஷேமத்தைச் செய்பவரான உம்மைத் தெரிந்து கொள்ளவில்லை. ஜலத்தை விரும்பியவன் ஜலத்திலிருந்து உண்டான பாசிகளால் மூடப்பட்டிருக்கும் ஜலத்தை விட்டுக் கானலை ஜலமென்று நினைத்து, அதனை யனுஸரித்தாற்போல மாயையால் மறைக்கப்பட்டிருக்கும் உம்மை விட்டு விஷயங்களில் நோக்கமுள்ளவனாக இருக்கிறேன். நான் விஷயங்களில் சென்ற புத்தியுள்ளவன்; என்னுடைய மனமோ கர்வத்தாலும், காமத்தாலும் கலங்கி இருக்கிறது. இந்திரியங்களால் பல விஷயங்களில் இழுக்கப்பட்டிருக்கிறது. ஆனதால் அதனைத் தடுக்க என்னால் முடியவில்லை. அப்படிப்பட்ட நான் உம்முடைய பாதத்தைச் சரணமடைந்தேன். இது அஸத்துக்களால் அடையமுடியாதது; இது உம்முடைய அனுக்ரஹத்தால் கிடைத்ததென்று நினைக்கிறேன். ஜீவனுக்கு ஸம்ஸார நிவர்த்தி உம்முடைய க்ருபையால்தான் உண்டாகவேண்டும். ஸாதுக்களை உபாஸித்தால் உம்மிடத்தில் பக்தியுண்டாகும். உம்முடைய க்ருபை இல்லாவிடில் ஸாதுக்களுடைய சேவை கிடைக்கிறதில்லை. அதனால் உம்மிடத்தில் ப்ரீதியுண்டாகிறதில்லை. அவர்களுக்கு மோக்ஷமும் கிடைக்கிறதில்லையென்று கருத்து.) விஜ்ஞான ஸ்வரூபமாயும், ஸகல ஜ்ஞானங்களுக்கும் காரணமும், புருஷனுக்கு ஸுகதுக்கங்களை யுண்டுபண்ணுகின்ற காலம், கர்மம் முதலியவைகளுக்கு அதிபதியும், பரிபூர்ணரும், அனந்தமான சக்தியுள்ளவரும், வாஸுதேவருடைய புத்திரரும் (சித்தத்

திற்கு அதிஷ்டாதாவென்று சொல்லப்பட்டது.) சகல ப்ராணிகளுக்கும் ஆச்ரயமாக விருப்பவரும், அஹங்காரத் திற்கு அதிஷ்டாதாவென்று காட்டப்பட்டது.) இந்திரியங்களுக்கு அதிபதியுமாகிய உம்மை நமஸ்கரிக்கிறேன். ஓ பிரபுவே! சரணாகதனாகிய என்னைக் காப்பாற்றும்" என்று ப்ரார்த்தித்தார்.

## அத்தியாயம் 41

---

### ஸ்ரீ கிருஷ்ணன் மதுரா நகரஞ் சென்றது

1—18. இப்படி அக்ரூரர் ஸ்தோத்திரஞ்செய்ய, பகவான் தம்முடைய ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டார். அது நர்த்தனன், செய்துகொண்டிருந்த நடன நாட்டியத்தை மறைத்துக்கொண்டது போலிருந்தது. அதன் பின் அக்ரூரர் ஜலத்தினின்றும் கிளம்பி, அதிசீக்கிரம் அவசரமாக, செய்யவேண்டியவைகளைச் செய்துகொண்டு ஆச்சரியத்துடன் ரதத்திற்கு வந்தார். அவரைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன், "அக்ரூரரே! பூமியிலாவது, ஆகாயத்திலாவது, ஜலத்திலாவது அற்புதமானதைப் பார்த்தீரோ? ஆச்சரியத்தைப் பார்த்தவர்போலத் தோன்றுகிறீர்" என்று கேட்டார். அதைக் கேட்ட அக்ரூரர் பகவானை நோக்கி, "பூமியிலும், ஆகாயத்திலும், ஜலத்திலும் எவ்வளவு அற்புதங்களிருக்கின்றனவோ, அவைகள் ஜகத்ஸ்வரூபியான உம்மிடத்தி லிருக்கின்றன. அப்படிப்பட்ட உம்மைப் பார்ப்பவனாகிய என்னால் எந்த ஆச்சரியந்தான் பார்க்கப்படவில்லை; (என்னிடம் வருவதற்கு முன்னமேயே ஆச்சரியத்தைப் பார்த்தவன்போல முகக்குறியால் காணப்படுகிறீர். அப்படியிருக்க என்னைப் பார்த்து

தாம் எல்லா ஆச்சரியமும் பார்க்கப்பட்டது என்று எப்படிச் சொல்லுகிறீர் என்றால், அடுத்த சுலோகத்தால் சமாதானஞ் சொல்லப்பட்டிருக்கிறது.) ஓ பரமேசுவர! பூமி, ஆகாயம், ஜலம் இவைகளில் எவ்வளவு ஆச்சரியங்கள் இருக்கின்றனவோ, அவைகள் யாவும் உம்மிடத்திலிருக்கின்றன. அப்படிப்பட்ட உம்மைப் பார்த்துக் கொண்டிருக்கும் நான் உம்மைவிட வேறு எந்த இடத்தில், எந்த ஆச்சரியத்தைப் பார்க்கப்போகிறேன். (உம்மை விட வேறு அற்புதமான வஸ்து இல்லையென்று தாத்பரியம்) என்று சொல்லி, அக்ரூரர் ரதத்தை ஓட்டினார். சாயங்காலத்தில் ராமகிருஷ்ணர்கள் மதுரா நகரத்தின் சமீபம் வந்துசேர்ந்தார்கள். போகும் வழியில் கிராமத்திலுள்ள ஜனங்கள் அந்தந்த இடங்களில் ராமகிருஷ்ணர்களிருவரையும் மிகுந்த பிரியத்துடன் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். அதற்குள் நந்தன் முதலிய கோபர்கள் முந்தி சென்று பட்டணத்திற்குச் சமீபத்திலிருக்கும் தோட்டத்தில் ராமகிருஷ்ணர்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு இருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் அவ்விடஞ் சென்று கோபர்களுடன் சேர்ந்து அக்ரூருடைய கையைத் தமது கையால் பிடித்துக்கொண்டு, வணங்கியிருக்கும் அவரை நோக்கி, "நீர் ரதத்துடன் மதுரா நகரஞ் சென்று வீட்டிற்குப் போகலாம்; நாங்கள் இவ்விடத்தில் ராத்திரியைக் கழித்துவிட்டுக் காலையில் பட்டணத்தைப் பார்க்கிறோம்" என்று சிரித்துக்கொண்டு சொன்னார். அதைக் கேட்ட அக்ரூரர், "பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவரே! உங்களிருவர்களையும் இவ்விடத்தில் விட்டு நான் தனியாகப் பட்டணத்திற்குப் போகமாட்டேன்; பக்தனாகிய என்னை விடுவது உசிதமல்ல; ஆதலால் தமையனுடனும், மற்ற கோபர்களுடனும் என்னுடைய கிருகத்திற்கு வரவேண்டும். என்னை நாத

னுள்ளவனுகச் செய்யவேண்டும். கிருகஸ்தர்களான எங்களுடைய வீட்டை உம்முடைய பாததூளியால் சுத்தப்படுத்தும். உம்முடைய பாதத்தை அலம்புவதால் பிதிருக்களும், அக்னிகளும், தேவர்களும் திருப்தியடைகிறார்கள். மேலும், பலிச் சக்கரவர்த்தி உம்முடைய பாதத்தை அலம்பிப் புண்ணிய கீர்த்தியுள்ளவனுகி, ஒப்பற்ற ஐசுவரியத்தையும், பக்தர்களடையக்கூடிய கதியையும் அடைந்தார். பின்னும், உம்முடைய பாத தீர்த்தமானது மூன்று லோகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறது. அந்த ஜலத்தைப் பரமசிவன் தலையில் தரித்தார். அந்த ஜலத்தால் சகர புத்திரர்கள் சுவர்க்க லோகத்தை யடைந்தார்கள். ஓ! தேவர்களுக்கும் தேவரே! ஜகத்திற்கு அதிபதியே! உம்முடைய சரிதங்களைக் கேட்பதாலும், சொல்வதாலும் புண்ணியத்தைக் கொடுப்பவரே! யாதவர்களுக்குட் சிறந்தவரே! உத்தம சுலோகரே! ஓ நாராயணா! உமக்கு நமஸ்காரம்" என்று பிரார்த்தித்தார். அதனைக் கேட்ட பகவான், "நான் தமையனுடன் உம்முடைய கிருகத்திற்கு வருகிறேன்; யாதவர்களுக்குத் துரோகஞ் செய்பவனுகிய கம்ஸனைக் கொன்று, சிநேகிதர்களுக்குப் பிரியத்தைச் செய்வேன்" என்று சொன்னுர். அதனைக் கேட்டும் அக்ரூரர் வருத்தத்துடன் மதுரா நகரஞ் சென்று கம்ஸனிடத்தில் சமாசாரத்தை (ஸ்ரீ கிருஷ்ணன் வந்திருக்கிறுரென்பதை) சொல்லிவிட்டுத் தமது கிருகஞ் சென்றுர்.

19—31. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடனும் கோபர்களுடனும் மறு நாள் அபராஹ்ண காலத்தில் மதுரா நகரத்திற்குட் சென்று, அதன் அழகைப் பார்த்து வந்தார். அந்தப் பட்டணத்தில் கோட்டை வாயில்கள் ஸ்படிகத்தால் கட்டப்பட்டவைகளும், மிகவும் உயரமான

ரங்களுமாக இருந்தன. மேலும், அவைகளுக்கு சுவர்ணமயமான கதவுகள் போடப்பட்டிருந்தன. பின்னும், தானியம் வைக்கும் வீடுகள் முதலியவை தாமிரம், பித்தளை இவைகளால் செய்யப்பட்டிருந்தன. அந்தப் பட்டணத்தைச் சுற்றி ஆழமான அகழ் இருப்பதால் அந்த நகரம் சத்ருக்களால் அடைய முடியாததாக இருந்தது. பட்டணத்திற்குச் சமீபத்திலும், தூரத்திலும் அழகான தோட்டங்கள் இருந்தன. சுவர்ணமயங்களான நாற்சந்தி மண்டபங்களும், மாளிகைகளும், அவைகளுக்குத் தகுதியான தோட்டங்களும், சபைகளும், மற்ற வீடுகளும் நிறைந்திருந்தன. வைடூரியம், வஜ்ரம், நீலம், பவழம், முத்து இவைகளால் வலபிகளும், வேதிகைகளும், ஜன்னல்களின் சமீபப் பிரதேசங்களும் அலங்கரிக்கப்பட்டிருந்தது மன்றி, அவ்விடங்களில் மயில்களும், புறாக்களும் வசித்துச் சப்தித்தன. பின்னும் ராஜவீதிகளும், கடைவீதிகளும் ஜலம் தெளிக்கப்பட்டிருந்தன. மேலும், அந்தப் பட்டணமானது புஷ்பங்களாலும், பொரிகளாலும், அக்ஷதங்களாலும், பூர்ண கும்பங்களாலும், சந்தனத்தாலும், தயிராலும், தீபங்களாலும், தளிர்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வீட்டின் வாயிற்படிகள் பாக்குக் குலைகளாலும், தாருள்ள வாழைகளாலும், துவஜங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அப்படிப்பட்ட அழகான நகரத்தில் ராமகிருஷ்ணர்கள் இருவர்களும் தங்கள் ஸ்நேகிதர்களுடன் ராஜவீதி வழியாகப் போனார்கள். அப்படிப்பட்ட ராமகிருஷ்ணர்களைத் தரிசிக்க விரும்பிப் பட்டணத்திய ஸ்திரீகள் மாடியின்மீது ஏறினார்கள். சில ஸ்திரீகள் வஸ்திரத்தை மாற்றி உடுத்திக்கொண்டும், ஆபரணங்களை வித்தியாசமாக அணிந்துகொண்டும், ஒரு காதில் ஓலையைத் தரித்துக்கொண்டும், ஒரு கையில் கங்கணத்தைத் தரித்துக்கொண்டும், ஒரு காலில் பாதசரத்

யைப் போட்டுக்கொண்டும், சிலர் ஒரு கண்ணுக்கு மைப்ட்டுக்கொள்ளாமலும் பகவானைத் தரிசிக்க ஓடி வந்தார்கள். மற்றுஞ் சில ஸ்திரீகள் போஜனஞ் செய்து கொண்டிருக்கும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் வருகிறானென்பதைக் கேள்விப்பட்டு அன்னத்தைப் புசிக்காமலேயே ஓடிவந்தார்கள். பின்னுஞ் சிலர் எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்நானஞ் செய்யாமலேயே வந்தார்கள். மற்றுஞ் சிலர் தூங்கி யெழுந்திருந்த குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக்கொண்டிருக்கும்பொழுது பகவான் வருவதைக் கேள்விப்பட்டுக் குழந்தைகளை விட்டுவிட்டு வந்தார்கள். இப்படி மதங்கொண்ட யானைபோல் நடப்பவரான பகவான் லக்ஷ்மீதேவிக்கு சந்தோஷத்தைக் கொடுக்கின்ற தமது சரீரத்தாலும், மேலான விளையாட்டு, சிரிப்பு, பார்வை இவைகளாலும் அந்த ஸ்திரீகளுடைய மனத்தை அபகரித்தார். ஓ! மன்மதனை ஜயித்த அரசனே! அந்த ஸ்திரீகள் பகவானுடைய குணங்களைப்பற்றி முன்னமேயே கேள்விப்பட்டு அவரிடத்திலேயே மனத்தைச் செலுத்தியிருந்தவர்களானதால், இப்பொழுது நேரில் அவரைத் தரிசித்துக் கண்வழியாக ஆனந்தமூர்த்தியாகிய அவரை இருதயத்தில் வைத்துக் கட்டிக்கொண்டு சகல துக்கங்களையும் நிவர்த்தித்துக்கொண்டார்கள். மேலும், அவர்கள் மயிர்க்கூச்சலடைந்தார்கள். பின்னுமவர்கள் மிகுந்த பிரியத்தால் மலர்ந்த முகமுள்ளவர்களாகி, மேல்மாடியிலேறிப் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். ஒவ்வொரு வீதிகளிலும் பிராம்மணர்கள் தயிர், அக்ஷதை, பூர்ண கும்பம், புஷ்பமாலை, சந்தனம் முதலியவைகளால் ராமகிருஷ்ணர்களைப் பூஜித்தார்கள். பின்னும் பட்டணத்து ஸ்திரீகள், "பூலோகத்திற்கு மஹோற்சவத்தை பண்ணுகின்ற இந்த ராமகிருஷ்ணர் இருவர்களையும் எப்பொழுதும் தரிசித்துக்

கொண்டிருக்கிற கோபிகைகள் என்ன மேலான தவஞ் செய்தார்களோ" என்று சொல்லிக்கொண்டார்கள்.

32—35. இப்படியாகக் கிருஷ்ணன் ராஜவீதியில் போகும்பொழுது சுத்தமான வஸ்திரங்களை யெடுத்துக் கொண்டு எதிரில் வரும் ஒரு வண்ணானைக் கண்டு அவனை நோக்கி, "உத்தமமான வஸ்திரங்களை யுடுத்திக்கொள்ளத் தகுதியுள்ளவர்களான எங்களுக்குச் சுத்தமான வஸ்திரங் களைக் கொடு. அப்படிக் கொடுப்பதால் உனக்கு மிகுந்த க்ஷேமமுண்டாகும்; சம்சயமில்லை" என்று கேட்டார். இப்படி எல்லாவற்றிலும் பூரணரான ஸ்ரீ கிருஷ்ணனால் யாசிக்கப்பட்ட வண்ணான், துஷ்டனானதால் மிகுந்த கோபத்துடன், "காடுகளிலும் மலைகளிலும் வசிக்கும் நீங்கள் இம்மாதிரியான வஸ்திரங்களைத்தான் உடுத்திக் கொள்ளுகிறது வழக்கமா? ஏன், கர்வத்துடன் அரசனுடைய சொத்தை அபகரிக்க விரும்புகிறீர்கள்? ஓ மூடர்களே! உங்களுக்குப் பிழைத்திருக்கவேண்டு மென்ற விருப்பமிருந்தால் இந்த மாதிரி கேட்கவேண் டாம். அரசனுடைய சேவகர்கள் உங்களை அடிப்பார் கள். காராகிருகத்தில் அடைப்பார்கள். உங்களுடைய பணத்தைப் பிடுங்கிக்கொள்வார்கள்" என்று சொன் னான். இப்படிச் சொன்ன வண்ணானுடைய வார்த்தை யைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ணன் மிகவும் கோபங்கொண்டு, தமது கையினால் அந்த வண்ணானுடைய தலையை வெட்டி அவனைக் கொன்றார். அவனுடைய வேலைக்காரர்கள் வஸ்திர மூட்டைகளை ஆங்காங்கு கிடத்திவிட்டு ஓடினார் கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தமக்கு இஷ்டமான வஸ்திரங்களை எடுத்து உடுத்திக்கொண்டு, பலராமருக்கும் கோபர்களுக்கும் கொடுத்து, எஞ்சிய வஸ்திரங்களை வீதியில் போட்டுத் தமது இஷ்டப்படி சென்றார். பின்பு

ஒரு நெசவுக்காரன் பகவானுக்கு எதிரில் வந்து, ராம கிருஷ்ணர்களிடத்தில் மிகுந்த பிரியத்துடன் பட்டு வஸ்திரங்களால் செய்யப்பட்ட ஆபரணங்களால் அவர்களை அலங்கரித்தான். இப்படி அலங்கரிக்கப்பட்ட அவ்விருவர்களும் பருவகாலத்தில் வஸ்திரம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட குட்டி யானைகள்போலப் பிரகாசித்தார்கள். அவனிடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் சந்தோஷித்து, அவனுக்கு இவ்வுலகத்தில் மிகுந்த ஐசுவரியத்தையும், இந்திரியங்களுடைய வலிமையையும், தம்மிடத்தில் பக்தியையும் அனுக்கிரகித்ததுமன்றி, பரலோகத்தில் தம்முடைய ஸாரூப்யத்தையும் கொடுத்தார். பின்பு அவ்விருவர்களும் சுதாமாவென்ற புஷ்பக்காரனுடைய வீட்டுக்குச் சென்றார்கள். அவன் ராமகிருஷ்ணர்களைக் கண்டு சீக்கிரமாக எழுந்திருந்து, பூமியில் விழுந்து நமஸ்கரித்தான். பின்னும் அவன் அவர்களுக்கும், அவர்களுடன் வந்தவர்களுக்கும் ஆசனம், பாத்தியம், அர்க்கியம் முதலியவைகளைக் கொடுத்து, புஷ்பமாலை, தாம்பூலம், சந்தனம் இவைகளால் பூஜித்தான். இன்னும் அவன், “ஓ பிரபுவே! என்னுடைய பிறப்பானது இப்போது சபலமாயிற்று. என்னுடைய குலமானது காப்பாற்றப்பட்டது; நீங்கள் என் வீட்டிற்கு வந்ததால் பிதிருக்களும், தேவர்களும், ரிஷிகளும் என்னிடத்தில் சந்தோஷப்படுகிறார்கள். நீங்கள் சகல ஜகத்திற்கும் முக்கிய காரணர்களாக இருக்கிறீர்கள். மேலும், நீங்கள் ஜனங்களுடைய க்ஷேமத்திற்காக பூமியில் அவதரித்திருக்கிறீர்கள்; ஜகத் சுருபிகளும், லோகத்திற்கு மித்திரர்களும், எல்லா பிராணிகளிடத்திலும் சமமாக இருப்பவர்களும், பக்தர்களை அனுக்கிரகிப்பவர்களுமான உங்களுக்கு ஒருவரிடத்திலும் பேத புத்தி இல்லை. ஆனதால் வேலைக்காரனுகிய எனக்கு

உத்தரவு கொடுக்கவேண்டும். நான் எதனைச் செய்ய வேண்டும்? உங்களால் எவன் ஆஞ்ஞாபிக்கப்படுகிறானோ, அவனுக்கு அது அநுக்கிரகமாகிறது" என்று பிரார்த்தித்து, வாசனையுள்ள உயர்ந்த புஷ்பங்களால் கட்டப்பட்ட மாலைகளை அவர்களிடம் சமர்ப்பித்தான். பின்பு அந்த சுதாமா வென்பவன் ராமகிருஷ்ணர்களுக்கு நமஸ்காரஞ் செய்தான். அவர்கள் 'இஷ்டமான வரத்தைக் கேள்' என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட சுதாமா, "சகல ஜகத் சுரூபியான உம்மிடத்தில் எனக்குப் பக்தி இருக்கவேண்டு மென்றும், உம்முடைய பக்தர்களிடத்தில் ப்ரீதி இருக்க வேண்டும்; சகல பிராணிகளிடத்திலும் தயை இருக்க வேண்டும்" என்றும் கேட்டுக்கொண்டான். அதனைக் கேட்ட பகவான் அவனுக்கு இந்த மூன்று வரங்களையும் கொடுத்துக் குலவிருத்தியையும், ஐசுவரியத்தையும், தேக பலத்தையும், தீர்க்கமான ஆயுளையும், கீர்த்தியையும், காந்தியையும் அநுக்கிரகித்து அவ்விடமிருந்து வெளியில் சென்றார்.

## அத்தியாயம் 42

### ஸ்ரீ கிருஷ்ணன் வில்லை முறித்தது

1—14. பின்பு ராஜவீதி வழியாகச் செல்லுகிற ஸ்ரீகிருஷ்ணன் சந்தனம் நிறைந்த பாத்திரத்தைக் கையி லெடுத்துக்கொண்டு தமக்கு எதிரில் வருகிற ஒரு கூனி யான ஸ்திரீயைக் கண்டார். சுகத்தைக் கொடுப்பவராகிய பகவான், அழகான முகமுள்ள அவளை நோக்கி, "உ சிறந்த தொடைகளுள்ளவளே! நீ யார்? இந்தச் சந்த னத்தை யாருக்காக எடுத்துக்கொண்டு போகிறாய்?

அதனை விவரமாகச் சொல்லு. சிறந்த இந்தச் சந்தனத்தைத் எங்களுக் கொடு; உனக்கு மிகுந்த க்ஷேமம் சீக்கிரத்தில் உண்டாகும்" என்றார். அதனைக் கேட்ட அவள் பகவானை நோக்கி, "ஓ அழகுள்ளவரே! நான் கம்ஸனுடைய வேலைக் காரி. என்னைத் திரிவக்ரா என்று சொல்லுவார்கள். எனக்குச் சந்தனம் சேர்க்கத் தெரியும். என்னால் சேர்க்கப் பட்ட சந்தனத்தில் கம்ஸன் மிகவும் பிரியப்படுவார். ஆனால் இந்தச் சந்தனத்தைப் பூசிக்கொள்ளுவதற்கு நீங்களே தகுந்தவர்கள்" என்று சொல்லி, கிருஷ்ணனுடைய ரூபம் மிருதுவாகவிருப்பது, மாதுர்யம், சிரிப்பு, பேச்சு, பார்வை ஆகிய இவைகளால் மோகித்து அந்தச் சந்தனக் குழம்பை ராமகிருஷ்ணர்களுக்குக் கொடுத்தாள். பின்பு அவ்விருவர்களும் உத்தமமான அந்தச் சிவப்புச் சந்தனத்தைப் பூசிக்கொண்டு மிகவும் பிரகாசித்தார்கள். அப்போது கிருஷ்ணன் அவளிடத்தில் சந்தோஷித்துத் தம் முடைய தரிசனத்தின் பயனைக் காண்பித்துக்கொண்டு, அவளுடைய சரீரத்திலுள்ள கோணலை நிவர்த்திக்கவேண்டும் என்று நினைத்தார். மேலும் அவர் தம்முடைய இரண்டு கால்களால் அவளுடைய நுனிக் கால்களை மிதித் துக்கொண்டு உயரத் தூக்கிய இரண்டு விரல்களுள்ள கையினால் அவளுடைய முகவாய்க்கட்டையைப் பிடித் துத் தூக்கினார். அப்பொழுது அவளுடைய சரீரம் கோணலில்லாமல் ரிஜுவாக ஆனதுமன்றி, அவள் பகவா னுடைய திவ்ய ஹஸ்தம் பட்டதால் உத்தம ஸ்திரீயாக ஆனாள். அவளுடைய ஸ்தனங்களும், இடுப்பின் பின்பாக மும், முன்பாகமும் பருத்ததாயிற்று. பின்பு அவள் நல்ல ரூபம், குணம், ஔதாரியம் இவைகளுள்ளவளாகி ஸ்ரீ கிருஷ்ணனுடைய உத்தரீயத்தின் தலைப்பைப் பிடித்துக் கொண்டு, "ஓ வீர! என்னுடைய வீட்டிற்கு நாமிருவரும்

போவோம். உம்மால் என்னுடைய சித்தம் கலங்கியிருப்ப தால் உம்மை விட்டுப் போக எனக்கு மனமில்லை. என் னிடத்தில் தயவு செய்யவேண்டும்" என்று மன்மத தாப முள்ளவளாகிப் பிரார்த்தித்தாள். இப்படி அந்த ஸ்திரீயி னால் பிரார்த்திக்கப்பட்ட பகவான் பலராமனுடையவும், கோபர்களுடையவும் முகத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு, "ஓ அழகான புருவமுள்ளவளே! கல்யாணஞ் செய்துகொள்ளாதவர்களும், தேசாந்தரத்திலிருந்து வந்த வர்களுமான எங்களுக்கு நீதான் கதி. எந்தக் காரியத்திற் காக இவ்விடம் வந்தேனோ, அதனை முடித்துக்கொண்டு மனக் கவலையை நிவர்த்திக்கக்கூடிய உன்னுடைய கிரு கத்திற்கு வருகிறேன்" என்று இனிமையாகச் சொல்லி யனுப்பிவிட்டு வீதியில் செல்லும்பொழுது கடை வீதியில் பலவகையான காணிக்கைகளாலும், தாம்பூலத்தாலும், புஷ்பமாலைகளாலும், சந்தனத்தாலும் ஜனங்கள் ராம கிருஷ்ணர்களைப் பூசித்தார்கள். அந்த ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்த ஸ்திரீகள் மன்மத தாபமுள்ளவர்களாகித் தங் களை மறந்து சித்திரத்தில் எழுதப்பட்டவர்கள்போல் அசையாமல் நின்றார்கள். அவர்களுடைய தலைமுடிச்சு அவிழ்ந்தது; கங்கணங்களும், வஸ்திரங்களும் நழுவின.

15—24. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் பட்டணத்து ஜனங் களை நோக்கி, "தனுர்யாகம் எவ்விடத்தில் நடக்கிறது? வில் எவ்விடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது?" என்று கேட்டுக்கொண்டு அந்த ஸ்தலஞ் சென்று, அவ்விடத்தில் ஸ்தாபித்துப் பூஜிக்கப்பட்டிருக்கும் வில்லைப் பார்த்தார். அது இந்திரனுடைய வில்லைப்போல அற்புதமாக இருந் தது; அநேக வீரர்களால் காப்பாற்றப்பட்டிருந்தது; அத னைப் பார்த்த ஸ்ரீ கிருஷ்ணன் அதனை எடுக்க முயற்சிக்க, தடுத்தார்கள்; அப்படியும் அவர்களை லட்சி

யஞ் செய்யாமலேயே இடது கையால் விளையாட்டாக வில்லை எடுத்து வெகு சீக்கிரமாக நாணேற்றி, சகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்க மதங்கொண்ட யானை கருப்பங் கழியை ஒடித்தாற்போல அந்த வில்லை முறித்தார். அந்த வில் ஒடிந்ததால் மிக்க சப்தம் உண்டாயிற்று. அது ஆகாயம், பூமி, திக்குகள் எங்கும் பரவிற்று. அதனைக் கேட்டுக் கம்ஸன் பயந்து நடுங்கினான். வில்லைச் சம்ரட்சித்துக்கொண்டிருந்த வீரர்களும், அவர்களுடைய சேவகர்களும் கிருஷ்ணனைப் பிடிக்க விரும்பி, 'இவனைப் பிடியுங்கள்-கட்டுங்கள்' என்று சொல்லிக்கொண்டு கிருஷ்ணனிடம் ஓடிவந்தார்கள். இப்படி கெட்ட எண்ணத்துடன் வருகிற வீரர்களைப் பார்த்துப் பலராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் வில்லின் இரண்டு துண்டுகளை எடுத்துக்கொண்டு அவர்களைக் கொன்றார்கள். அதைக் கேட்ட கம்ஸன் ராமகிருஷ்ணர்களைக் கொல்வதற்குச் சில சைன்னியங்களை அனுப்பினான். அதனையும் ராமகிருஷ்ணர்கள் கொன்று, அந்தக் கிருகத்திலிருந்து வெளிக் கிளம்பி, பட்டணத்து வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு சந்தோஷமாகச் சஞ்சரித்தார்கள். அவர்களுடைய அற்புதமான சரித்தைக் கண்ணுற்ற பட்டணத்து ஜனங்கள் இவர்களுடைய மகிமை, தைரியம், ரூபம் ஆகிய இவைகளால் இவர்களைச் சிறந்த தேவர்களென்றே நினைத்தார்கள். இப்படி அவ்விருவர்களும் தங்களிஷ்டப்படி சஞ்சரித்து வரும்பொழுது சூரியன் அஸ்தமயத்தை அடைந்தார். ராமகிருஷ்ணர்களும் மற்ற கோபர்களுடன் பட்டணத்திலிருந்து தங்களுடைய விடுதிக்குச் சென்றார்கள். லக்ஷ்மீ தேவியானவள் மற்றவர்களை விட்டு எவனுடைய தேகத்தை அடைந்தாளோ, புருஷர்களுக்கு ஆபரணம் போன்றவராகிய அந்தப் பகவானுடைய திவ்ய தேகத்

தைத் தரிசித்துப் பட்டணத்து ஸ்திரீகள் ஆனந்தத்தை அடைந்தார்கள். அதனால் ஸ்ரீ கிருஷ்ணன் கோகுலத்திலிருந்து பிரயாணப்படும்பொழுது கோபிகைகள் எதைச் சொன்னார்களோ அவைகள் உண்மையாயின. மேலும் ராமகிருஷ்ணர்கள் வீதியில் பாதங்களை அலம்பி, பாலன்னத்தைப் புசித்துக் கம்ஸனுடைய எண்ணத்தைத் தெரிந்துகொண்டு அன்றைய ராத்திரி சுகமாக வசித்தார்கள்.

35—31. கம்ஸன் கிருஷ்ணனால் வில் முறிக்கப்பட்டதையும், காவலாட்கள் கொல்லப்பட்டதையும், தன்னால் அனுப்பப்பட்ட சைன்யங்களுடைய வதத்தையும், ராமகிருஷ்ணர்களுடைய சரிதத்தையும் கேள்விப்பட்டுப் பயந்து வெகு நேரம் தூக்கமில்லாமல் விழித்துக்கொண்டிருந்தான். மேலுமவனுக்கு அன்றைய ராத்திரி விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும், தூங்கும்பொழுதும் (சொப்பனத்திலும்) வெகு அபசகுனங்கள் நேர்ந்தன. அவைகள் மரணம் சமீபித்தது என்பதைக் காட்டின. அவை எவையெனில், கண்ணாடி முதலியவைகளில் தன்னுடைய சரீரம் பிரதிபலிக்கும்பொழுது அந்தப் பிரதிபிம்பத்தில் தலைமாத்திரம் தெரியவில்லை. சந்திரன் முதலிய தேஜஸ்கள் இரண்டாகத் தோன்றின. பிரதிபிம்பத்தில் இடுக்கு இருப்பதாகத் தோன்றியது; காதுகளைக் கையால் பொத்திக்கொண்டால் (மறைத்தால்) சப்தம் கேட்கவில்லை. மரங்கள் ஸ்வர்ணமயங்களாகத் தோன்றின. தவிர, சேறு முதலியவைகளில் நடக்கும்பொழுதும் காலடி கண்ணுக்குப் புலப்படவில்லை. பின்னும் சொப்பனத்தில் பிணத்தைக் கட்டிக்கொள்வதாகவும், கழுதையின் மீதேறித் தாமரைக் கிழங்கைப் புசித்து எண்ணெய் தேய்த்துக்கொண்டு சம்பரத்தைப் புஷ்பமாலையைத்

தரித்து வஸ்திரமில்லாமல் தனியே செல்வதாகவும் தோன்றியது. இப்படி சொப்பனத்திலும், விழித்துக் கொண்டிருக்கும்பொழுதும் இன்னும் பலவகையான அபசகுனங்களைப் பார்த்துக் கம்ஸன் மரணம் நேருமோ வென்று பயந்து, கவலையுள்ளவனாகி நல்ல நித்திரை யில்லாம லிருந்தான்.

32—38. மறுநாள் காலையில் சூரியன் ஜலத்தி லிருந்து கிளம்பி உதயமானார். கம்ஸன் மல்லர்களின் விளையாடச் செய்வதாகிய உற்சவத்தை நடத்தினான். அந்த ரங்கஸ்தலத்தை வேலைக்காரர்கள் (மல்லர்கள் யுத்தஞ் செய்யுமிடம்) அலங்கரித்தார்கள். தூரி வாத்தியங்களும், பேரி வாத்தியங்களும் முழக்கப்பட்டன. பட்டுத் தோரணங்களாலும், புஷ்பமாலைகளாலும் மஞ்சங்கள் அலங்கரிக்கப்பட்டன. பட்டணத்திலுள்ளவர்களும், தேசத்திலிருந்து வந்தவர்களுமான ஜனங்கள், பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள் என்ற முறைப்படி அவரவர்களுக்குத் தகுதியான மஞ்சங்களில் உட்கார்ந்தார்கள். கம்ஸன் அரசனுக்குத் தகுதியான மஞ்சத்தில் உட்கார்ந்து, மனக் கவலையுடனிருந்தான். அவனுடைய சமீபத்தில் மந்திரிக ளிருந்தார்கள். பின்னும் கம்ஸனைச் சுற்றி அநேக அரசர்கள் உட்கார்ந்தார்கள். தூரியம் முதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன. மல்லர்கள் சந்தோஷத்தால் கைகளை அடித்துக்கொண்டார்கள். மேலும் மல்லர்களுடைய தாளசப்தமானது வாத்திய சப்தத்தைக் காட்டிலும் அதிகமாகக் கேட்கப்பட்டது. மல்லர்களும் அலங்காரஞ் செய்துகொண்டிருந்த கர்வத்துடன் தங்கள் உபாத்தியாயரை முன்னிட்டுக்கொண்டு அந்தச் சபைக்கு வந்தார்கள். பின்னும் சாணூரன், முஷ்டிகன், கூடன், சலன், தோசலன் ஆகிய மல்லர்கள் வாத்திய சப்தத்தைக் கேட்

டுச் சந்தோஷித்து அவ்விடம் வந்தார்கள். அப்பொழுது கம்ஸன் நந்தகோபர் முதலிய கோபர்களை அழைத்து வரும்படி சேவகர்களை அனுப்ப, கோபர்களும் காணிக்கைகளுடன் அவ்விடம் சென்று அரசனிடத்தில் காணிக்கைகளைக் கொடுத்து மஞ்சத்தில் உட்கார்ந்தார்கள்.

## அத்தியாயம் 43

### ஸ்ரீ கிருஷ்ணன் குவலயாபீடத்தைக் கொன்றது

1—16. காலையில் ராமகிருஷ்ணர்க ளிருவர்களும் சுத்தர்களாக மல்லர்களுடைய கர்ஜனையையும், துந்துபி சப்தத்தையும் கேட்டு அந்த உற்சவத்தைப் பார்ப்பதற்காக அவ்விடம் வந்தார்கள். அந்தச் சபையின் வாயிலில் குவலயாபீடமென்ற ஒரு யானை நிறுத்தப்பட்டிருந்தது. அம்பஷ்டனென்ற யானைப்பாகன் அதனை நடத்திக் கொண்டிருந்தான். அதனைக் கண்ட ஸ்ரீ கிருஷ்ணன் வஸ்திரம் முதலியவைகளை இறுக்கிக் கட்டிக்கொண்டு சுருட்டையான தலைமயிர்களைச் சேர்த்து முடிந்துகொண்டு யானைப்பாகனை நோக்கி, "ஓ அம்பஷ்டா! அம்பஷ்டா! வழியை விட்டு விலகிப் போ; தாமதிக்கவேண்டாம்; அப்படி விலகாமலிருந்தால் உன்னையும், உன்னுடைய யானையையும் யமலோகத்திற்கு அனுப்பிவிடுவேன்" என்று மேகம் கர்ஜிப்பதுபோல் உரக்கச் சொன்னார். அப்படி கிருஷ்ணனால் அதட்டப்பட்ட அம்பஷ்டன் மிகவும் கோபம் கொண்டு யானைக்கும் கோபத்தை யுண்டு பண்ணி ஸ்ரீ கிருஷ்ணன்மீது அந்த யானையைத் தூண்டினான். அந்த யானை காலனுக்கும், அந்தகனுக்கும், யமனுக்கும் சமமாக இருந்தது. பின்பு அந்த யானை வேக

மாக ஓடிவந்து துதிக்கையால் கிருஷ்ணனைப் பிடித்துக் கொண்டது. அதன் துதிக்கையிலிருந்து ஸ்ரீ கிருஷ்ணன் தம்மை விடுவித்துக்கொண்டு, அதனை படித்துக் கால் களின் நடுவில் சென்று மறைந்தார். பின்பு அந்த யானை கிருஷ்ணனைக் காணாமல் கோபங் கொண்டு முகர்ந்து பார்த்துக் கிருஷ்ணன் இருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டு, திரும்பவும் கிருஷ்ணனைத் துதிக்கையால் பிடித்துக்கொண்டது. அவரும் பலாத்காரமாகத் திமிறிக் கொண்டு வெளியில் வந்தார். பின்னுமவர் மிக்க பலமுள்ளவரானதால் அதன் வாலைப் பிடித்து இருபத்தைந்து விற்கடை தூரம் இழுத்தார். அது கருடன் சர்ப்பத்தை இழுத்தாற்போலிருந்தது. வாலைப் பிடித்துக்கொண்டிருக்கும் கிருஷ்ணனைப் பிடிப்பதற்கு யானை வலது பக்கமாகத் திரும்பினால் கிருஷ்ணன் இடதுபக்கமாகச் சுற்றி இழுத்தார். இப்படிச் சிறுவன் கன்றுக்குட்டியின் வாலைப் பிடித்துச் சுழற்றினாற்போல ஸ்ரீ கிருஷ்ணன் அந்த யானையின் வாலைப் பிடித்துச் சுற்றி அதனைக் கையாலடித்து அதன் கையில் அகப்படாமல் அதை ஏமாற்றினதுமன்றிப் பூமியில் தள்ளினார். இப்படிக் கீழே விழுந்த அந்த யானையானது மிகவும் கோபங் கொண்டு தன்னுடைய பராக்கிரமம் தடைபட்டதாதலால் பூமியைத் தந்தங்களால் குத்தியது. பிறகு யானைப்பாகர்களால் அது தூண்டப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனுக்கு எதிரில் ஓடி வந்தது. மதுவைக் கொன்ற பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ணன் தமக்கெதிரில் ஓடிவரும் யானையின் துதிக்கையைப் பிடித்து இழுத்துப் பூமியில் தள்ளினார். பின்னுமவர் பூமியில் விழுந்த யானையைக் காலால் மிதித்துக்கொண்டு அதன் தந்தங்களைப் பிடுங்கி அதனால் அடித்து யானையைக் கொன்று யானைப் பாகர்களை

யும் கொன்றார். இன்னுமந்த பகவான் யானையின் தந்தத்தைத் தோளில் வைத்துக்கொண்டு மல்ல சபைக்கு வந்தார். அவருடைய சரீரத்தில் யானையின் மத ஜலத் துளிகளும், ரத்தத் துளிகளு மிருந்தன. மேலும், அவருடைய முகமானது வியர்வைத் துளிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பலராமனும், சில கோபர்களும் ஸ்ரீகிருஷ்ணனுடன் அந்தச் சபைக்கு வந்தார்கள்.

17. ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து மல்லர்கள் இடியென்று நினைத்தார்கள். மனிதர்கள், மனிதர்களுக்குச் சிறந்தவரென்று நினைத்தார்கள். ஸ்திரீகள், மன்மதன் சரீரமெடுத்து வந்திருக்கிறான் என்று நினைத்தார்கள். கோபர்கள், தங்களுடைய பந்து (உறவினர்) என்று நினைத்தார்கள். துஷ்டர்களான அரசர்கள், தங்களைச் சிக்ஷிப்பவரென்று நினைத்தார்கள். வசுதேவரும் தேவகியும் தங்களுடைய புத்திரனென்று நினைத்தார்கள். கம்ஸன், தனக்கு மிருத்யுவென்று நினைத்தான். கிருஷ்ணனுடைய உண்மையை அறியாத ஜனங்கள் கிருஷ்ணனைச் சிசுவென்று (சக்தியற்றவர்) நினைத்தார்கள். யோகிகள், இவரைப் பரமாத்மாவென்று நினைத்தார்கள். விருஷ்ணிகள், பரதேவதையென்று நினைத்தார்கள். இவ்விதம் மேற்காட்டிய பத்து வகையான ஜனங்களால் பத்து வகையாகத் தெரிந்துகொள்ளப்பட்ட ஸ்ரீகிருஷ்ணன் பலராமனுடன் மல்ல சபைக்கு வந்தார்.

18—30. அப்பொழுது கம்ஸன் குவலயாபீடம் கொல்லப்பட்டதையும், ஒருவராலும் ராமகிருஷ்ணர்கள் ஜயிக்க முடியாதவர்களாக இருப்பதையும் பார்த்து மிக்க பயம் அடைந்து நடுங்கினான். அந்தச் சபையின் நடுவில் நீண்ட கைகளுள்ளவர்களும், விசித்திரமான வேஷம், ஆபரணம், மாலை, வஸ்திரம் இவைகளைத் தரித்தவர்களும்,

பார்ப்பவர்களுடைய மனத்தை அபகரிப்பவர்களும், மேலான அலங்காரமுள்ள நடர்கள்போல பிரகாசிப்பவர்களும், புருஷோத்தமர்களுமாகிய ராமகிருஷ்ணர்களைப் பார்த்து, அந்த ஸதஸ்ஸிலுள்ள அரசர்கள் மிகுந்த சந்தோஷத்தால் கண்கள் மலர்ந்து அவருடைய முகத்தை வெகு காலமாகத் தரிசித்தும் போதுமென்ற திருப்தியை யடையவில்லை. மேலுமவர்கள் பகவானைக் கண்களால் பானஞ்செய்பவர்கள் போலவும், நாக்கினால் நக்குகிறவர்கள் போலவும், மூக்குகளால் முகர்ந்து பார்ப்பவர்கள் போலவும், கைகளால் தழுவிக்கொள்பவர்கள் போலவும் காணப்பட்டார்கள். பின்னுமவர்கள் தாங்கள் பார்த்தபடியும், கேள்விப்பட்டபடியும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரத்தை அவருடைய ரூபம், குணம், சிரிப்பு, தைரியம் இவைகளால் நினைத்துக்கொண்டவர்கள்போல ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ள ஆரம்பித்தார்கள். எப்படியெனில், "இவ்விருவர்களும் ஸ்ரீமந் நாராயணனுடைய அம்ச பூதர்கள்; வசுதேவருடைய கிருகத்தில் அவதரித்திருக்கிறார்கள். இதோ இருக்கும் ஸ்ரீகிருஷ்ணன் தேவகியினிடம் அவதரித்தவர். இத்தனை காலம் நந்தருடைய கிருகத்தில் கோகுலத்தில் மறைந்து (வசுதேவருடைய புத்திரரென்று தெரியாமல்) வசித்துக்கொண்டிருந்தார். இவர் நந்தகோகுலத்தில் பூதனையென்னும் ராக்ஷஸியை சம்ஹரித்தார்; சுழல்காற்றாக வந்த திருணாவர்த்தனென்ற அசுரனையும் கொன்றார்; இரண்டு மருதமரங்களையும் பூமியில் தள்ளினார்; மேலும் தேனுகன், கேசி, சங்கருடன் முதலியவர்களையும் கொன்றார்; பசுக்களையும், கோபர்களையும் காட்டுத் தீயிலிருந்து காப்பாற்றினார்; காளியனென்ற சர்ப்பத்தின் கர்வத்தையும், இந்திரனுடைய ...த்தையும் அடக்கினார்; கோவர்த்தனம் என்ற

மலையை ஒரு கையால் தூக்கிக் குடையாகப் பிடித்துக் கோகுலத்தை மழை, காற்று, இடி இவைகளின் உபத்திரவமில்லாமல் காப்பாற்றினார்; பின்னும், கோபிகைகள் அவருடைய புன்சிரிப்புள்ள முகத்தைப் பார்த்து மிகுந்த ஆனந்தங்கொண்டவர்களாகிப் பலவகையான பாபங்களை நிவர்த்தித்துக்கொண்டார்கள். பின்னும், யதுவின் வம்சமானது இவருடைய அவதாரத்தால் மிகுந்த கீர்த்தியுள்ளதும், மிகுந்த மாகாத்மியமுள்ளதும், மிகுந்த லக்ஷ்மீகரம் பொருந்தியதுமாக ஆகப்போகிறது என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். தாமரை மலர்போன்ற கண்களுள்ள இந்தப் பலராமன் இவருக்குத் தமையன்; இவரால் பிரலம்பன், வத்ஸன், தேனுகன் முதலியவர்கள் கொல்லப்பட்டார்கள்" என்றும் ஜனங்கள் சொல்லிக்கொண்டார்கள்.

**31—40.** இப்படி ஜனங்கள் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது வாத்தியங்கள் முழக்கப்பட்டன. அப்பொழுது சாணூரனென்ற மல்லன் ராமகிருஷ்ணர்களை நோக்கி, "ஓ நந்தகுமாரராகிய கிருஷ்ண! ஓ ராம! நீங்களிருவரும் மிக்க பலசாலிகள்; முஷ்டியுத்தத்தில் தேர்ந்தவர்கள் என்று அரசன் கேள்விப்பட்டு உங்களுடைய பலத்தைப் பார்ப்பதற்காக வரவழைத்திருக்கிறார். ஜனங்கள் மனத்தாலும், வாக்கினாலும், சரீரத்தாலும் அரசனுக்குப் பிரியமான காரியத்தைச் செய்தால் க்ஷேமத்தையடைவார்கள். அப்படி யில்லாவிடில் அவர்களுக்கு க்ஷேமம் கிடைக்கிறதில்லை. கோபர்கள் காடுகளில் மிக்க சந்தோஷமாக மாடுகளை மேய்த்துக்கொண்டு முஷ்டியுத்தம் செய்து விளையாடுவது வழக்கமல்லவா? ஆனதால் நாங்களும் நீங்களுமாக அரசனுக்குப் பிரியமான காரியத்தைச் செய்வோம். அரசன் சகல பிராணிகளின் சுரூபி

யாகையால் அவரைச் சந்தோஷிக்கச்செய்தால் சகல பிராணிகளும் சந்தோஷப்படுவார்கள்" என்று சொன்னான். அதனைக் கேட்டு கிருஷ்ணன் முஷ்டியுத்தஞ் செய்ய இஷ்டமுள்ளவராகி, அதனைச் சிலாகித்து, "அரசனுடைய பிரஜைகளாகிய நீங்களும், வனத்தில் சஞ்சரிப்பவர்களுமான நாங்களும் அரசனுக்குப் பிரியமான காரியத்தையே செய்வோம். அதுவே எங்களுக்கு மிகுந்த அனுக்கிரகமாகிறது. ஆனாலும், நாங்கள் சிறுவர்களாகையால் எங்களுக்குச் சமமான பலமுள்ளவர்களுடன் உசிதப்படி விளையாடுகிறோம். இந்தச் சபையிலுள்ள ஜனங்களுக்கு அதர்மம் உண்டாகவேண்டாம்" என்று தேசத்துக்கும், காலத்துக்கும் தகுதியான வார்த்தையைச் சொன்னார். அதனைக் கேட்ட சாணூரன் கிருஷ்ணனை நோக்கி, "நீ சிறுவனல்ல; பலராமன் பலசாலிகளுக்குட் சிறந்தவர்; ஆயிரம் யானைப் பலமுள்ள குவலயாபீடமென்ற யானையானது உம்மால் அடிக்கப்பட்டதல்லவா? ஆகையால் நீங்களிருவரும் பலசாலிகளேயாம். நீர் என்னுடன் யுத்தஞ் செய்யவேண்டும். பலராமன் முஷ்டிகனுடன் யுத்தஞ் செய்யட்டும். இந்த விஷயத்தில் தர்ம விரோதம் ஒன்றுமில்லை" என்று சொன்னான்.

## அத்தியாயம் 44

### கம்ஸ வதம்

1—19. இப்படி பகவான் சாணூரனுடன் யுத்தஞ் செய்வதாக நிச்சயித்துச் சாணூரனை எதிர்த்தார். ரோஹிணி தேவியின் புத்திரனாகிய பலராமன் முஷ்டிகனென்பவனை எதிர்த்தார். அவர்கள் கைகளைக் கைகளால் அடித்துக்

கொண்டும், தோளை தட்டிக்கொண்டும், ஒருவரையொருவர் கட்டிக்கொண்டும், கைகளால் கைகளைப் பிடித்துக் கொண்டும், கால்களால் கால்களைப் பிடித்தும் ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் இழுத்தார்கள். மேலுமவர்கள் முஷ்டிகளை முஷ்டிகளாலும், முழங்கால்களால் முழங்கால்களையும், தலையால் தலையையும், மார்பினால் மார்பையும் அடித்துக்கொண்டார்கள். பின்னுமவர்கள் கை முதலியவைகளைப் பிடித்து நாலு பக்கங்களிலும் சுற்றுவது, ஒருவரையொருவர் தூக்கி யெறிவது, கைகளால் இறுக்கிக் கட்டிக்கொள்வது, கீழே தள்ளிவிட்டு முந்திப்போவது, பிந்திச் செல்வது இவைகளைச் செய்து ஒருவரையொருவர் தடுத்தார்கள். பின்னுமவர்கள் கால்களையும், முழங்கால்களையும் சேர்த்துப் பிடித்துத் தூக்குவது, கைகளால் உயரத் தூக்கி எறிவது, கழுத்தைக் கட்டிக்கொள்ளும்போது சரீரத்தை உதறி அவனைக் கீழே தள்ளுவது, கை கால் முதலியவைகளை ஒன்றாகச் சேர்த்துக் கீழே அழுத்திவிடுவது முதலியவைகளைச் செய்து ஒருவர்க்கொருவர் சண்டைசெய்து வந்தார்கள். அந்தச் சமயத்தில் அவ்விடம் சேர்ந்திருந்த எல்லா ஸ்திரீகளும் தயவுடன் பின்வருமாறு சொல்லிக் கொண்டார்கள். "சிறுவர்களாகிய ராமகிருஷ்ணர்களையும், பலிஷ்டர்களாகிய சாணூரன் முதலியவர்களையும் சேர்ந்து யுத்தம் செய்யும்படி அரசனும், சபையிலுள்ளவர்களும் பார்த்திருப்பதால் இது மிகவும் அதர்மம். இந்த மல்லர்கள் மலைபோன்றவர்கள்; இவர்களுடைய சகல அவயவங்களும் வஜ்ரம்போல்கெட்டியானவை; ராமகிருஷ்ணர்களோ மிகவும் மிருதுவான அவயவங்களுள்ளவர்கள்; சிறுவர்கள்; யௌவன வயதை அடையாதவர்கள்; ஆகையால் இவர்களுக்கும், மல்லர்களுக்கும் எவ்வளவு பேத

யிருக்கிறது? இந்தச் சபையில் அதர்மம் நடக்கிறது; அதர்மமிருக்கும் ஸதஸ்ஸில் வசிக்கக்கூடாது. வித்வானாக இருப்பவன் ஸதஸ்ஸிலுள்ள தோஷங்களை யறிந்துக் கொண்டு சபைக்குப் போகமாட்டான். ஏனென்றால் அவ்விடத்தில் தர்ம விரோதமான காரியங்கள் நடந்தால் அதனைத் தான் அறிந்திருந்தும் சொல்லாமல் மௌனமாக இருந்தாலும், எனக்குத் தெரியாதென்று விபரீதமாகச் சொன்னாலும் பாபத்தை யடைவான். சத்ருவின் நான்கு பக்கத்திலும் ஓடுகிற ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தைப் பாருங்கள். அது ஜலத் துளிகளால் நனைந்த தாமரை மலர்போல் வியர்வைத் துளிகளுள்ளதாக இருக்கிறது. முஷ்டிகனிடத்தில் கோபத்தால் சிரித்துக் கொண்டும், பரபரப்புள்ளதும், சிவந்த கண்களுள்ளதும், மனோகரமுமான பலராமனுடைய முகத்தைப் பாருங்கள். இந்த ஸ்ரீ கிருஷ்ணன் புராண புருஷனாகிய ஸ்ரீமந் நாராயணனே யொழிய வேறில்லை. அவரே மனுஷ்யனாக அவதரித்திருக்கிறார். மேலும் இவருடைய பாதங்களைப் பரமசிவனும் லக்ஷ்மீதேவியும் பூஜிக்கிறார்கள். அப்படிப் பட்ட ஸ்ரீ கிருஷ்ணன் காட்டுப் புஷ்பங்களால் தமது சரீரத்தை அலங்கரித்துக்கொண்டும், பசுக்களை மேய்த்துக் கொண்டும், வேணுகானஞ் செய்துகொண்டும் கோகுலத்தில் சஞ்சரித்ததால் அந்தப் பூமி மிகவும் புண்ணியம் பெற்றதாயிற்று. மேலும், இந்தக் கிருஷ்ணனுடைய திவ்ய சரீரமானது மிக்க அழகு பொருந்தியது; ஒப்புயர் வில்லாதது; கீர்த்தியுள்ளது; ஐசுவரியமுள்ளது; லக்ஷ்மீகரம் பொருந்தியது; அப்படிப்பட்ட அந்த திவ்ய சரீரத்தைத் தரிசித்த கோபிகைகள் என்ன தவஞ் செய்தார்களோ! பின்னுமவர்கள் மாடு கறக்கும்பொழுதும், நெல் முதலியவைகளைக் குத்தும்பொழுதும், ஊஞ்சலாடும்

பொழுதும், குழந்தைகளைச் சமாதானம் செய்யும்பொழுதும், ஜலம் கொட்டும்பொழுதும், பெருக்கும்பொழுதும் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தி, மிகுந்த பிரியத்துடன் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு, கிருஷ்ணனுடைய சரித்திரத்தையே கானஞ்செய்கிறார்கள். ஆனதால், அவர்கள் மேலானவர்களேயாம். பின்னும், இவர்கள் காலையில் கிருஷ்ணன் கோகுலத்திலிருந்து வனம் சென்று சாயங்காலத்தில் வனத்திலிருந்து கோகுலத்திற்கு வரும்பொழுதும் கருணைபொருந்திய பார்வை, சிரிப்பு ஆகிய இவைகளுள்ள கிருஷ்ணனுடைய முகத்தைப் பார்த்தும், அவருடைய வேணுகானத்தைக் கேட்டும் ஆனந்தத்தை யடைகிறார்கள். ஆனதால் அவர்களே மிகுந்த புண்ணியஞ்செய்தவர்கள்" என்று சொல்லிக் கொண்டார்கள். இப்படி ஸ்திரீகள் சொல்லிக்கொள்ளும் பொழுது யோகேசுவரராகிய ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய பயத்தை நிவர்த்திப்பதற்காகச் சத்துருவைக் கொல்வதற்கு யத்தனித்தார். இம்மாதிரியான பட்டணத்து ஸ்திரீகளுடைய வார்த்தையைக் கேட்டு வசுதேவரும், தேவகியும் ராமகிருஷ்ணர்களுடைய சக்தியை அறியாதவர்களாகையால் புத்திர ஸ்நேகத்தால் மிகவும் துக்கித்தார்கள்.

20—31. ஸ்ரீ கிருஷ்ணனும் சாணூரனும், பலராமனும், முஷ்டிகனுமாகச் சேர்ந்து முஷ்டி யுத்தத்தின் முறைப்படி யுத்தஞ்செய்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடைய தேகம் வஜ்ரம்போல கெட்டியாக இருந்ததினால் அதனுடைய அடியினால் சாணூரனுடைய சரீரம் அடிக்கப்பட்டு, அடிக்கடி சாணூரன் களைப்படைந்தான். பருந்தின் வேகம்போன்ற வேகமுள்ள சாணூரன் இரு கைகளையும் முஷ்டிசெய்துகொண்டுமிகுந்தகோபத்துடன் ஸ்ரீகிருஷ்ண

னுடைய மார்பில் அடித்தான். இப்படி சாணூரனால் அடிக்கப்பட்டும் ஸ்ரீ க்ருஷ்ணன் புஷ்பமாலையால் அடிக்கப்பட்ட யானைபோல் அசையவில்லை. மேலும் அவர், சாணூரனுடைய இரு கைகளையும் பிடித்து நான்கு பக்கங்களிலும் இழுத்துச் சுழற்றி, பூமியில் அடித்தார் (தள்ளினார்). அதனால் சாணூரன் ஆபரணம், மாலை, தலைமயிர் ஆகிய இவைகளில் அலங்கோலமாகி மரணமடைந்தான். அவன் பூமியில் விழுந்தது இந்திரத்வஜம் விழுந்தாற்போலிருந்தது. அப்படியே முஷ்டிகன் தனது முஷ்டியால் பலராமனைக் குத்தினான். மிக்க பலசாலியான பலராமன் தம்முடைய கையால் முஷ்டிகனை அறைந்தார். அதனால் முஷ்டிகன் காற்றினால் பூமியில் தள்ளப்பட்ட மரம்போல் வாயினால் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு பூமியில் விழுந்து மரணமடைந்தான். பின்பு கூடனென்பவன் பலராமனை எதிர்த்தான். பலராமன் அலட்சியமாக இடது கையால் அவனைக் குத்தினார். அவன் அதனால் மரணமடைந்தான். அதன்பின் சலன், தோஸலன் என்ற இருவர்களும் க்ருஷ்ணனை எதிர்த்தார்கள். பகவான் அவர்களைக் காலால் உதைத்தார். அவர்கள் அதனால் தலை உடைந்தவர்களாகிப் பூமியில் விழுந்து, பரலோகஞ் சென்றார்கள். இப்படி சாணூரன், முஷ்டிகன், கூடன், சலன், தோஸலன் என்ற மல்லர்கள் மரணமடைந்ததைக் கண்ணுற்ற மற்ற மல்லர்கள் உயிர்பிழைக்க விரும்பி ஓடினார்கள். பின்னும் ராமக்ருஷ்ணர்கள் தங்களுடைய சிநேகிதர்களான கோபர்களை அழைத்து அவர்களுடன் சேர்ந்து விளையாடினார்கள். வாத்தியங்கள் முழக்கப்பட்டன. அதனைக் கண்ணுற்ற ஜனங்கள் சந்தோஷித்தார்கள். கம்ஸனைத் தவிர மற்றவர்களும், ப்ராம்மணர்களும் 'நல்லது, நல்லது' என்று கோஷித்தார்கள்.

32-48. இப்படி முக்கியர்களான மல்லர்கள் அடிக்கப்பட்டும், மற்றவர்கள் பயந்து ஓடிப்போவதையும் கண்ட கம்ஸன் வாத்தியங்களை நிறுத்திவிட்டு, சேவகர்களை நோக்கி, "வசுதேவருடைய புத்திரர்களான இவர்கள் கெட்ட நடையுள்ளவர்கள்; ஆனதால் இவர்களைப் பட்டணத்திலிருந்து துரத்திவிடுங்கள். கோபர்களுடைய பொருளை அபகரியுங்கள். துர்ப்புத்தியுள்ளவனாகிய நந்தனுக்கு விலங்கு போடுங்கள். துர்ப்புத்தியுள்ளவராகிய வசுதேவரும், என்னுடைய பிதாவாகிய உக்கிரசேனரும், அவர்களைச் சார்ந்தவர்களும் சத்துருவின் பக்ஷத்திலிருக்கிறார்கள். ஆனதால் அவர்களைக் கொல்லுங்கள்" என்று சொன்னான். அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் கோபங்கொண்டு, சிரமமில்லாமல் மிகுந்த லாகவத்துடன் கம்ஸன் உட்கார்ந்திருக்கும் உயரமான மஞ்சத்திலேறினார். அப்பொழுது மிக்க தைரியமுள்ளவனாகிய கம்ஸன் மிருத்யுபோல ஓடிவரும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்துச் சீக்கிரமாக எழுந்திருந்து, கத்தியையும் கேடகத்தையும் எடுத்துக்கொண்டான். பின்னும் அவன் ஆகாயத்தில் பருந்துபோல இடமாகவும், வலமாகவும் சுற்றினான். அப்பொழுது சகிக்க முடியாத தேஜஸ் உள்ள ஸ்ரீ கிருஷ்ணன் அவனைப் பிடித்துக்கொண்டார். அது கருடன் சர்ப்பத்தைப் பிடித்துக்கொண்டாற் போலிருந்தது. சுதந்திரரும், சகல ஜகத்திற்கு இருப்பிடமும், தாமரை மலரைத் தொப்புளில் தரித்தவருமாகிய பகவான் கம்ஸனுடைய தலைமயிரைப் பிடித்திழுத்து, உயரமான மஞ்சத்திலிருந்து பூமியில் தள்ளித் தாமும் அவன்மீது விழுந்தார். அதனால் கம்ஸன் உயிர் துறந்து மரித்தான். பின்னும், அவனுடைய சரீரத்தைப் பகவான் எல்லா ஜனங்களும் பார்த்திருக்கும்பொழுது பாவனைச் சிங்கம் இழுத்தாற்

போல இழுத்தார். அப்பொழுது சகல ஜனங்களும் ஹா, ஹா என்று உரக்கச் சொன்னார்கள். அந்தக் கம்ஸன் பிழைத்திருக்கும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனிடம் பயந்து அன்னத்தைப் புசிக்கும்பொழுதும், தீர்த்தம் முதலியவைகளைக் குடிக்கும்பொழுதும், சஞ்சரிக்கும் பொழுதும், தூங்கும்பொழுதும், மூச்சு விடும்பொழுதும் பகவானையே தியானஞ் செய்துகொண்டிருந்தவனா தால் மற்றவர்களால் அடைய முடியாததான பகவானுடைய ரூபத்தை அடைந்தான். பின்பு கங்கன், நயக் குரோதன் முதலிய கம்ஸனுடைய எட்டு சகோதரர்களும் கம்ஸனுடைய வதத்திற்குப் பிரதிசெய்ய விரும்பினவர்க ளாகி ஓடிவந்தார்கள். இப்படி வேகமாக ஓடிவரும் அவர்களைப் பலராமன் பரிகமென்ற ஆயுதத்தால் அடித்து நாசஞ்செய்தார். அது சிங்கம் மிருகங்களைக் கொன்றாற் போலிருந்தது. அப்பொழுது ஆகாயத்தில் துந்துபி வாத்தியங்கள் முழக்கப்பட்டன. பிரும்மதேவர், பரம சிவன் முதலியவர்கள் மிகுந்த பிரியத்துடன் புஷ்பமாரி பெய்து பகவானைத் தோத்திரஞ் செய்தார்கள்.

**44—49.** ஓ பரிக்ஷித்து மகாராஜனே! அந்தக் கம்ஸன் முதலியவர்களுடைய பத்தினிகள், பர்த்தாக்கள் மரணமடைந்ததால் துக்கித்துக் கண்ணீரைப் பெருக்கித் தலையில் அடித்துக்கொண்டு, அந்தப்புரத்தை விட்டு வெளியில் வந்தார்கள். மேலும், கொல்லப்பட்டுப் பூமி யில் படுத்திருக்கும் புருஷர்களைக் கட்டிக்கொண்டு மிகுந்த துக்கத்துடன் அழுதார்கள். எப்படியெனில் "ஓ நாத! பிரியமுள்ளவரே! தர்மத்தை அறிந்தவரே! தயை பொருந்தியவரே! வாத்ஸல்யமுள்ளவரே! நீர் ஒருவர் மரணமடைந்தால் நாங்களும் குழந்தைகளும் மரணமடைந்தவர்களாகிறோம். நாதனாகிய உம்மை விட்

டுப் பிரிந்த நாங்கள் எப்படிச் சந்தோஷமில்லாமலிருக்கிறோமோ, அப்படியே இந்த நகரமும் மக்கள் காரியமற்றதாகிப் பிரகாசிக்கவில்லை. நீர் குற்றமற்றவர்களான பிராணிகளுக்கு மிகவும் துரோகஞ் செய்தீர். அதனால் இம்மாதிரியான நிலைமை உமக்கு நேர்ந்தது. பிராணிகளுக்குத் துரோகஞ் செய்பவன் க்ஷேமத்தை அடைவானா? இந்த ஸ்ரீ கிருஷ்ணன் சகல பிராணிகளையும் சிருஷ்டிப்பவர்; நாசஞ்செய்பவர்: ஆனதால் இவருக்கு அபகாரஞ் செய்பவன் சுகத்தை அடையமாட்டான்" என்று பிரலாபித்தார்கள்.

50—52. இப்படிப் பிரலாபிக்கிற ஸ்திரீகளைக் கண்ணுற்று பகவான் சகல பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக இருப்பவரானதால் அவர்களைச் சமாதானஞ்செய்து மரித்தவர்களுக்குச் செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளைச் செய்வித்தார். பின்பு ராமகிருஷ்ணர்கள் தங்கள் தாய் தந்தையர்களை விலங்கிலிருந்து விடுவித்து, தங்களுடைய தலை அவர்களுடைய பாதத்தில் படும்படி நமஸ்கரித்தார்கள். அப்பொழுது தேவகியும் வசுதேவரும் ராமகிருஷ்ணர்களை ஜகதீசர்களென்று நினைத்து, அஞ்சலி செய்துகொண்டிருந்தார்கள்; கட்டிக்கொள்ளவில்லை.

## அத்தியாயம் 45

### ராமகிருஷ்ணர்களின் வித்தியாப்பியாசம்

1—21. புருஷோத்தமராகிய ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய தாய் தந்தையர்கள் உண்மையைத் தெரிந்து கொண்டார்கள் என்பதைத் தெரிந்துகொண்டு, இவர்களுக்குதத்துவஞானமுண்டாகவேண்டாமென்றுஜனங்

களை மோகிக்கச் செய்யக்கூடிய தம்முடைய மாயையாகிய வலையை வீசினர். பின்னும், ஸாத்வதர்களுக்குச் சிறந்தவராகிய பகவான் மிருந்த வணக்கத்துடனும், ப்ரீதியுடனும் 'அம்ம, அண்ண!' என்று அழைத்துத் தாய்தந்தையர்களை நோக்கி, "நீங்கள் எங்களிடத்தில் நித்தியம் ப்ரீதியுள்ளவர்களாக இருந்தும் பால்யம், கைசோரம், பௌகண்டம் என்ற வயதுகளில் உண்டான எங்களுடைய விளையாட்டைப் பார்த்து, சுகத்தை யடையவில்லை. நாங்களும் உங்களுடைய ஸமீபத்தில் வசிக்காததால், குழந்தைகள் தகப்பனருடைய வீட்டில் வசித்து அனுபவிக்கும் சுகம் எங்களுக்குங் கிடைக்காமற் போயிற்று. சரீரமானது தர்மம் முதலிய ஸகல புருஷார்த்தங்களுக்கும் சாதனமாக இருக்கிறது. ஆனதால், அதை உண்டுபண்ணிப் போஷித்தவர்களான தாய்தந்தையர்களுக்குப் புத்திரன் நூறுவருஷ காலமாக எவ்வித சிசுருஷை செய்தாலும் அவர்கள் செய்ததற்குத் தகுதியாக ஆகிறதில்லை. ஆனதால் தேகபலம், பணம் இவைகளுள்ளவனாக இருந்தும் எவன் தாய்தந்தையர்களைப் போஷிக்காமல் விட்டுவிடுகிறானோ, அவன் மரணமடைந்த பிறகு தன்னுடைய மாமிசத்தையே புசிக்கும்படி யம படர்களால் தூண்டப்படுவான். மேலும், வயது முதிர்ந்த தாய், தந்தை, பதிவிரதையான பாரியை (மனைவி), பாலனாகிய புத்திரன், ஆசாரியன், பிராம்மணன், சரணமடைந்தவன் ஆகிய இவர்களை எவன் பணம், தேகபலம் இவைகளிருக்கும்பொழுது காப்பாற்றவில்லையோ, அவன் ஜீவித்திருந்தாலும் மரணமடைந்தவனேயாம். ஆனதால் கம்ஸனிடமிருந்து நித்தியம் பயந்தவர்களும், தங்களைக் காப்பாற்றிக்கொள்ள முடியாதவர்களுமான உங்களுக்குச் சிசுருஷை முதலியவைகளும் செய்யாமல் வீணாகக் காலத்

தைக் கழித்தோம். ஆனதால் கம்ஸனால் உபத்திரவப் படுத்தப்பட்ட உங்களுக்கு நாங்கள் சிசுருஷை செய்யாம லிருந்ததைப்பற்றி மன்னிக்கவும்" என்று மாயையால் மானிட வேடங்கொண்டவரும், ஜகத் சுரூபியுமான பக வான் சொல்ல, அதனைக் கேட்டு வசுதேவரும் தேவகி யும் மோகத்தை யடைந்து, ராமகிருஷ்ணர்களை மடியில் வைத்து ஆலிங்கனஞ்செய்து, சந்தோஷத்தை யடைந்தார் கள். பின்னும் அவர்கள் ஆனந்தத்தால் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு, ராமகிருஷ்ணர்களிடத்தில் மிகுந்த சிநேகமுள்ளவர்களாகிக் கண்ணீரால் கண்டமடைத்து, ஒன்றையுஞ் சொல்ல முடியாமல் மௌனமாக இருந்தார் கள். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் தாய்தந்தையரைச் சமாதானஞ் செய்து பாட்டனாராகிய உக்கிரசேனருக்கு ராஜ்ஜியத்தைக் கொடுத்து, அவரை யாதவர்களுக்கு அதிபதியாகச் செய்தார். பின்னும் அவர் உக்கிர சேனரை நோக்கி, "ஓ மகாராஜா! நாங்கள் உம்முடைய பிரஜைகள்; எங்களை நீர் ஆஞ்ஞாபிக்கத் தகுதியுள்ளவர்; யாதவர்கள் சிங்காசனத்தில் உட்காரக் கூடாதென்று (ராஜ்ஜியமில்லை யென்று) யயாதி சபித்திருக்கிறார். ஆனா லும் என்னுடைய உத்தரவினால் ராஜ்ஜியபாலனஞ் செய் யும். நான் உமக்கு வேலை செய்பவனாக சமீபத்திலிருக் கும்பொழுது தேவர்களும் வணங்கியவர்களாகி, உமக்குக் காணிக்கைகளைக் கொடுப்பார்கள். மற்ற அரசர்கள் வணங்குவார்களென்பதில் என்ன சந்தேகம்?" என்று சொல்லி வாயு பகவானை வரவழைத்து, "சுதர்மாவென்ற இந்திரனுடைய சபையை உக்கிரசேனருக்காகக் கொண்டு வாரும்" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்ட வாயு பகவான் கிருஷ்ணனுடைய உத்தரவை மகேந்திர னிடம் தெரிவித்தார். மகேந்திரனும் அதனைக் கேட்டு

ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை அறிந்தவனானதால், தன்னுடைய சபையைப் பூமிக்கு அனுப்பினான். முன்பு கம்ஸனிடம் பயந்து தேசாந்தரஞ் சென்றிருந்த யாதவர்களும், விருஷ்ணிகளும், அந்தகர்களும், தாசார்களும், குகுரர்களும் பல திக்குகளிலிருந்து மதுரா நகரத்திற்கு வந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தேசாந்தரத்தில் வசித்துக் கஷ்டப்பட்டவர்களான சகல பந்துக்களையும் நன்றாக உபசரித்து, அவரவர்களுக்கு வேண்டிய தனத்தைக் கொடுத்து, அவர்களுடைய வீட்டில் வசிக்கும்படி செய்தார். இப்படி யாதவர்கள் முதலானவர்கள் ராமகிருஷ்ணர்களால் காப்பாற்றப்பட்டு, உபத்திரவமற்றவர்களாகிப் பூர்ண மனோரதமுள்ளவர்களாக (குறைவில்லாமல்) அவரவர்கள் வீட்டில் சுகமாக வசித்தார்கள். மேலும் அவர்கள், கருணை பொருந்தியதும், அழகு பொருந்தியதும், புன்சிரிப்புள்ள பார்வையுள்ளதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தை ஒவ்வொரு நாளும் தரிசித்து மிக்க பிரியத்துடன் எப்பொழுதும் சந்தோஷமாக வசித்தார்கள். பின்னும் அவர்களில் எவர்கள் வயது சென்றவர்களோ, அவர்கள் பகவானுடைய முகமாகிய தாமரை மலரின் அமிருதத்தைப் பானஞ்செய்து மிக்க பலமுள்ளவர்களாகவும், காந்தியுள்ளவர்களாகவும், யௌவன வயதுள்ளவர்களாகவும் ஆனார்கள்.

22—27. தேவகியின் புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் நந்தரிடஞ் சென்று, அவரை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, "அண்ணா! நீங்களிருவரும் மிக்க பிரியத்துடன் எங்களைப் போஷித்தீர்கள். தாய்தந்தைகளுக்குத் தங்கள் குழந்தைகளிடத்தில் சரீரத்தில்விட அதிகப் பிரியமிருக்கும். பந்துக்கள் தங்கள் குழந்தைகளை வளர்க்க

முடியாமல் மற்றொருவரிடத்தில் ஒப்புவித்தால் அந்தக் குழந்தைகளைத் தங்களுடைய குழந்தைகளைப்போல ரட்சிப்பவர்களே தாய்தந்தையர். இப்பொழுது நீங்கள் கோகுலத்திற்குப் போகலாம். நாம் பந்துக்களுக்கு சுகமானவைகளைச் செய்தபின் உங்களைப் பார்ப்பதற்காக் கோகுலத்திற்கு வருகிறோம்'' என்று சமாதானஞ் செய்து கோகுலவாசிகளெல்லோரையும் வஸ்திரம், ஆபரணம், தங்கம், வெள்ளி முதலியவைகளால் ப்ரியத்துடன் பூஜித்தார். நந்தர் ஸ்ரீகிருஷ்ணனை விட்டுப் பிரிய மனமில்லாமல் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு, குழந்தையை ஆலிங்கனஞ்செய்து, கோபர்களை அழைத்துக்கொண்டு கோகுலம் சென்றார்.

28—53. பின்பு வசுதேவர் கர்க்காசாரியர் முதலிய பிராம்மணர்களைக் கொண்டு ராமகிருஷ்ணர்களுக்கு உபநயனஞ் செய்வித்தார். அப்பொழுது அவர் பிராம்மணர்களுக்கு அலங்காரஞ் செய்து கன்றுள்ளவைகளும், சுவர்ண மாலையுள்ளவைகளும், பட்டு வஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான பசுக்களைத் தட்சிணையாகக் கொடுத்தார். பின்னுமவர் ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்தபொழுது எவ்வளவு பசுக்களை மனத்தால் தானஞ் செய்தாரோ (சங்கல்பித்தாரோ) அதனை நினைத்து, அவைகளையும் தானஞ்செய்தார். வசுதேவருடைய பசுக்களைக் கம்ஸன் அபகரித்து வைத்துக்கொண்டிருந்ததால் அவைகளை இப்பொழுது வரவழைத்துப் பிராம்மணர்களுக்குக் கொடுத்தார். ராமகிருஷ்ணர்கள் சகல வித்தைகளைச் சிருஷ்டித்தவர்களானாலும், எல்லாவற்றையும் அறிந்தவர்களானாலும், ஜகத்திற்கு அதிபதிகளானாலும், இயற்கையான சுத்த ஞானத்தை மறைத்துக்கொண்டு மனிதர்களின் வழக்கப்படி யதுகுலத்திற்கு ஆசாரியரான கர்க்க

ரிடமாக பிரம்மசரிய விரதத்தைப் பெற்று குருகுல வாசஞ்செய்ய விரும்பினார்கள். பின்னும், அவர்கள் அவந்தி யென்ற பட்டணத்தில் வசிக்கும் காசி தேசத்திய சாந்திபினி என்பவரிடஞ் சென்று, மிக்க வணக்கமுள்ளவர்களாகி, அவரை ஆசாரியனாக விதிப்படி அடைந்து, தேவனைப்போல் பாவித்து குரு சிசுருஷை செய்து சேவித்தார்கள். அதனைக் கண்ணுற்ற ஜனங்கள், குருகுலவாசஞ் செய்யவேண்டிய மாதிரி இப்படிப்பட்டதென்றும், குருவுக்குச் சிசுருஷை இப்படிச் செய்யப்படவேண்டுமென்றும் தெரிந்துகொள்ளக்கூடியதாக இருந்தது. இப்படி ராமகிருஷ்ணர்கள் கபடமில்லாமல் சிசுருஷை செய்து வந்ததால் சாந்திபினி அவர்களிடம் மிகவும் சந்தோஷித்து சகல வேதங்களையும், அவைகளின் அங்கங்களையும், உபநிஷத்துக்களையும், தனுர் வேதத்தையும், மந்திரம், தேவதை இவைகளின் ஞானத்தையும், தர்ம சாஸ்திரங்களையும், மீமாம்ஸை முதலியவைகளையும், தர்க்க வித்தையையும், ஆறுவகையான ராஜ நீதியையும் உபதேசித்தார். அந்த ராமகிருஷ்ணர்கள் சகல வித்தைகளையும் சிருஷ்டித்து உலகத்தில் பரவச் செய்தவர்களான சிறந்த தேவர்களாகையால் ஒரே ஒரு தடவை ஆசாரியரிடம் உபதேசம் பெற்றவுடன் அவையெல்லாவற்றையும் தெரிந்துகொண்டார்கள். இன்னுமவர்கள் அறுபத்துநான்கு நாட்களில் அறுபத்து நான்கு கலைகளையும் அப்பியசித்தார்கள். பின்பு அவர்கள் ஆசாரியரிடஞ் சென்று, "நாங்கள் குரு தட்சிணை கொடுக்க வேண்டுமே, எதனைக் கொடுப்போம்? ஆஞ்ஞாபிக்கவேண்டும்" என்று கேட்டார்கள். அந்தப் பிராம்மணன் இவர்களுக்கு அற்புதமான மகிமை இருப்பதையும், மனிதர்களை அதிக்கிரமத்த புத்தியிருப்பதையும் பார்த்துத் தமது பத்தினியுடன் யோசித்து, ராம

கிருஷ்ணர்களை நோக்கி, "பிரபாஸ க்ஷேத்திரத்தில் சமுத்திரத்தில் விழுந்து என்னுடைய குழந்தை யொருவன் மரணமடைந்தான். அவனைத் திருப்பிக்கொண்டு வந்தால் அதுவே குருதட்சிணையாகும்" என்றார். அதனைக் கேட்ட ராமகிருஷ்ணர்கள் மகாவீரர்களானதால் 'அப்படியே செய்கிறோம்' என்று ஒப்புக்கொண்டு ரதத்தின்மீதேறிப் பிரபாஸ க்ஷேத்திரஞ் சென்று, சமுத்திரக்கரையில் க்ஷணகாலம் இருந்தார்கள். அங்கே கிருஷ்ணன் எதிரிலுள்ள, சமுத்திரத்தை நோக்கி, "என்னுடைய குருவின் புத்திரனை நீர் பெரிய அலையால் அபகரித்ததாகக் கேள்விப்படுகிறேன்; அந்தப் புத்திரனைச் சீக்கிரம் கொண்டுவாரும்" என்றார். அதனைக் கேட்ட சமுத்திர ராஜன், "ஓ பிரபுவே! உம்முடைய குரு புத்திரனை நான் அபகரிக்கவில்லை. என்னுடைய ஜலத்திற்குள் பஞ்சஜனனென்ற அசுரனொருவன் வசிக்கிறான். அவனால் பிராம்மணருடைய குழந்தை அபகரிக்கப்பட்டது. ஆதலால் ஜலத்திற்குட் சென்று அசுரனைக் கொன்று குரு புத்திரனை அழைத்துப் போகலாம்" என்றார். அதனைக் கேட்டுப் பகவான் ஜலத்திற்குட் சென்று, சங்க ரூபமுள்ள அந்த அசுரனைக் கொன்று, அவன் வயிற்றைக் கிழித்துப் பார்க்கையில் குரு புத்திரன் இல்லை. அதனால் ஸ்ரீ கிருஷ்ணன் அவனுடைய சரீரத்திலுண்டான சங்கத்தை எடுத்துக்கொண்டு ரதத்தின்மீதேறினார். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் ஸம்யமனி யென்ற யமனுடைய பட்டணஞ் சென்று சங்கத்தைக் கோஷித்தார். சகல பிரஜைகளையும் சிட்சிப்பவனாகிய யமன், பகவானுடைய சங்கத் தொனியைக் கேட்டு மிகுந்த பக்தியுடன் அவ்விருவர்களையும் பூஜித்தான். பின்னுமவன் சகல பிராணிகளின் இருதயத்தில் வசிப்பவரான ஸ்ரீ கிருஷ்ணனை

நோக்கி, "விளையாட்டாக மனித வேடங்கொண்ட உங்களுக்கு நான் செய்யவேண்டியதென்ன?" என்று கேட்டார். அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் யமனை நோக்கி, "ஓ மிக்க அதிருஷ்டமுள்ள யம! என்னுடைய குருவின் புத்திரன் இவ்விடம் கொண்டுவரப்பட்டிருக்கிறான்; அவன் அவனுடைய கர்மத்தால் இவ்விடம் வந்தவனானாலும் (அற்பாயுசு) என்னுடைய உத்திரவினால் அவனைக் கொண்டுவா" என்றார். அதனைக் கேட்ட யமன், "அப்படியே செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டு, சாந்தீபினியின் புத்திரனைக் கொடுத்தான். பின்பு ராமகிருஷ்ணர்கள் அந்தப் புத்திரனை அழைத்துக்கொண்டு குருவினிடஞ் சென்று புத்திரனைச் சமர்ப்பித்து 'இன்னும் எதனைச் செய்யவேண்டும்' என்று கேட்டார்கள். அதனைக் கேட்ட பிராம்மணன், 'ஓ குழந்தைகளே! உங்களால் குருசிச்ருஷை நன்றாகச் செய்யப்பட்டது; உங்களைப் போன்றவர்களைச் சிஷ்யர்களாக அடைந்த ஆசாரியனுக்கு எதுதான் கிடைக்காது? உங்களுக்குச் சுத்தமான கீர்த்தியுண்டாகட்டும் (உங்களுடைய சரிதங்களைக் கேட்பவர்களுக்குப் புண்ணியமுண்டாகுமென்று கருத்து). உங்களுடைய கிரகத்திற்குப் போகலா" மென்று அநுக்கிரகித்தார். இப்படி ஆசாரியரிடம் விடைபெற்றுக் காற்றுபோல வேகமாகச் செல்லும் ரதத்தின் மீதேறித் தங்களுடைய பட்டணத்திற்கு வந்தார்கள். மேக கர்ஜனை போன்ற ரதத்தின் சப்தத்தைக் கேட்டுப் பட்டணத்து ஜனங்கள் வெகு நாளாக ராமகிருஷ்ணர்களைப் பார்க்காமலிருந்தவர்களானதால் கை தவறிப்போன பொருள் கிடைத்தாற்போல ராமகிருஷ்ணர்களைத் தரிசித்துச் சந்தோஷத்தை அடைந்தார்கள்.

# அத்தியாயம் 46

## கிருஷ்ணன் உத்தவரைக் கோகுலத்திற்கு அனுப்பியது

1—7. விருஷ்ணிகளுக்குட் சிறந்தவரும், மந்திரியும், ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தோழருமான உத்தவரென்று ஒருவருண்டு. அவர் பிருகஸ்பதியின் சிஷ்யர்; மிகுந்த புத்திசாலி; கிருஷ்ணனுக்கு அவரிடத்தில், மிக்க பிரியம். அவர் கிருஷ்ணனிடத்தில் அநன்யமாக பக்திசெய்பவர். அப்படிப்பட்ட உத்தவருடைய கையைப் பிடித்துக்கொண்டு, சரணமடைந்தவர்களுடைய உபத்திரவத்தை நிவர்த்திப்பவராகிய பகவான், "ஓ நல்ல சுபாவமுள்ள உத்தவ! நீர் கோகுலஞ் சென்று நம்முடைய தாய்தந்தைகளுக்குப் பிரியத்தை யுண்டுபண்ணும். நான் சொல்வதைச் சொல்லி, கோபிகைகளுக்கு உண்டாகி யிருக்கும் விரகதாபத்தை நிவர்த்தியும். அந்தக் கோபிகைகள் என்னிடத்திலேயே மனத்தைச் செலுத்தியவர்கள்; என்னையே பிராணனாகக் கொண்டவர்கள்; எனக்காக பர்த்தா புத்திரிய பந்துக்களை விட்டவர்கள்; என்னிடத்திலேயே மிக்க பிரீதி வைத்து மனத்தால் என்னையே அடைந்திருக்கிறார்கள். எவர்கள் இவ்வுலகம், பரலோகம் இவைகளின் சுகத்தையும், அதன் சாதனங்களையும் விட்டு என்னையே தியானிக்கிறார்களோ, அவர்களை நான் அங்கீகரித்து சுகப்படுத்துகிறேன்; அப்படிப்பட்ட கோபிகைகள் மிக்க பிரியனாகிய என்னை விட்டுப் பிரிந்திருப்பதால் என்னை நினைத்து நினைத்து துக்கத்தைச் சகியாமல் வருத்தப்படுவார்கள். ஆனால் சீக்கிரத்தில் திரும்பி வருகிறேன் என்ற என் வார்த்தையைக் கேட்டால் கஷ்டப்படாமல் என்னையே தியானித்துப் பிராணனை வைத்துக்கொண்டிருப்பார்கள்" என்று சொன்னார்.

8—44. அதனைக் கேட்ட உத்தவர், பகவான் கோபிகைகளுக்குச் சொல்லும்படி அனுக்கிரகித்த சமாசாரத்தைத் தெரிந்து கொண்டு ரதத்தின்மீதேறி நந்த கோகுலஞ் சென்றார். அவர் நந்த கோகுலம் வந்த பொழுது, சூரியன் அஸ்தமனத்தை யடைந்தார். அப்பொழுது காட்டிலிருந்து கோகுலத்துக்கு வருகின்ற பசுக்களின் தூளியால் உத்தவருடைய ரதமானது மூடப்பட்டது. மேலும், அப்பொழுது மதங்கொண்ட விருஷபங்கள் பசுக்கள் நிமித்தமாக ஒன்றுக்கொன்று சண்டை செய்து கர்ஜித்தன. பசுக்கள் பருத்த மடிகளுடன் கன்றுகள் இருக்குமிடத்தை நோக்கி ஓடின. வெண்மை நிறமுள்ள கன்றுகள் இங்குமங்கும துள்ளிக் குதித்துக் கொண்டிருந்ததால் அவைகள் கோகுலத்தை அலங்கரித்தன. புல்லாங்குழல்களின் சப்தமும் கேட்கப்பட்டது. கோபிகைகள் எல்லோரும் அலங்காரஞ் செய்துகொண்டு ராமகிருஷ்ணர்களுடைய புண்ணியகரமான சரிதங்களைக் கானஞ் செய்துகொண்டிருந்தார்கள். அக்னி, சூரியன், அதிதிகள், பசுக்கள், பிராம்மணர்கள், பிதுருக்கள், தேவர்கள் இவர்களைப் பூஜிப்பதாலும் தூபம், தீபம், புஷ்பமாலை இவைகளாலும் கோபர்களுடைய வீடுகள் அழகாக இருந்தன. அங்கிருந்த தோட்டங்களிலுள்ள மரங்களெல்லாம் புஷ்பித்திருந்தன. வண்டுகளும் பறவைகளும் சப்தித்துக்கொண்டிருந்தன. மேலும் ஹம்ஸம், நீர்க் காக்கை முதலியவைகளாலும், தாமரை மலர்க் கூட்டங்களாலும் அந்தக் கோகுலமானது அழகாக இருந்தது. பின்பு நந்தர் கிருஷ்ணனுக்கு அந்தரங்க ஸ்நேகிதராகிய உத்தவரைப் பார்த்து மிகுந்தபிரியத்துடன் அவரை ஆலிங்கனஞ் செய்துகொண்டு ஸ்ரீ மஹாவிஷ்ணுவாக நினைத்துப் பூஜித்தார். மேலான ருசியுள்ள அன்னத்தைக்

கொடுத்துப் பூஜித்தும் மெதுவான படுக்கையில் படுக்க வைத்தும் கால்பிடிப்பது முதலியன செய்தும் அவருடைய களைப்பை நிவர்த்தித்து, “ஓ மிகுந்த அதிர்ஷ்டமுள்ளவரே? என்னுடைய தோழரும், சூரனுடைய புத்திரனுமாகிய வஸுதேவர் குழந்தை முதலிய பந்துக்களுடனும், ஸ்நேகிதர்களுடனும் க்ஷேமமாக இருக்கிறாரா? தர்ம ஸ்வபாவமுள்ள ஸாதுக்களான யாதவர்களை எவன் எப்பொழுதும் உபத்திரவப்படுத்திக் கொண்டிருந்தானோ, அந்தப் பாபியான கம்ஸன் தன்னைச் சேர்ந்தவர்களுடன் நாசமடைந்தான். அது தெய்வச் செயலேயாம். ஸ்ரீக்ருஷ்ணன் என்னையும் மாதாவான யசோதையையும், பந்துக்களையும், தோழர்களையும், நம்மையே தெய்வமாகக் கொண்ட கோபர்களையும், கோகுலத்தையும், பசுக்களையும், பிருந்தாவனத்தையும், கோவர்த்தன மலையையும் நினைத்துக் கொண்டிருக்கிறாரா? ஸ்ரீ கிருஷ்ணன் பந்துக்களைப் பார்ப்பதற்காக ஒரு தடவையாவது இவ்விடம் வருவாரா? அழகான மூக்குள்ளதும், புன்சிரிப்புள்ள பார்வையுள்ளதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தை எப்பொழுது தரிசிப்போம்? ஸ்ரீ கிருஷ்ணன் காட்டுத் தீயிலிருந்தும் காற்று மழையிலிருந்தும், விருஷபாஸுரனிடமிருந்தும், சர்ப்பத்தினிடமிருந்தும் எங்களைக் காப்பாற்றினார். பின்னுமவர் நிவர்த்திக்க முடியாத ஆபத்துக்களிலிருந்தும் ரட்சித்தார். மேலும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதங்களையும், விளையாட்டான கடைக்கண் பார்வையையும், சிரிப்பையும், வார்த்தையையும் நினைக்கும்பொழுது காரியங்களில் மனம் பிரவர்த்திக்கவில்லை. மேலும் நதிகள், மலைகள், வனங்கள், விளையாடும் ஸ்தலங்கள் ஆகிய இவைகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பதால் அவைகளைப் பார்க்கும் பொழுது

எங்களுடைய மனதானது ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலேயே செல்லுகிறது. கர்க்கர் சொன்னதை நினைத்துப் பார்க்கும்பொழுது தேவர்களுடைய காரிய நிமித்தமாக சிறந்த தேவர்கள் ராம கிருஷ்ணர்களாக கோகுலத்திற்கு வந்தார்கள் என்று நினைக்கக்கூடியதாக இருக்கிறது. மேலும், சிங்கமானது பசுக்களைக் கொன்றாற் போல பதினாயிரம் யானையின் பலமுள்ள கம்ஸனையும், மல்லர்களையும், குவலயா பீடமென்ற சிறந்த யானையையும், விளையாட்டாக ஸ்ரீ கிருஷ்ணன் கொன்றார். பின்னும் சிறந்த யானை கடியை முறித்தாற்போல் ஸ்ரீ கிருஷ்ணன் மூன்று பனைமரம் உயரமுள்ளதும், மிகக் கெட்டியானதுமான வில்லை ஒடித்தார்; இன்னுமவர் கோவர்த்தன மலையை ஒரு கையால் தூக்கி ஏழு நாள் குடையாகப் பிடித்தார். பின்னும் தேவர்களை ஜயித்தவர்களான பிரலம்பன், தேனுகன், அரிஷ்டன், திருணாவர்த்தன், பகன் முதலிய அசுரர்களை லீலையாக ஜயித்தார்" என்று கிருஷ்ணனுடைய சரிதங்களை நினைத்துக் கிருஷ்ணனிடத்திலேயே புத்தியைச் செலுத்திப் பிரேமையால் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி அதனால் கண்டமடைத்துப் பேச முடியாதவராகி மௌனமாக இருந்தார். இப்படி நந்தரால் வர்ணிக்கப்படும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதங்களைக் கேட்ட யசோதை அவரிடத்திலிருக்கும் பிரியத்தால் பால் சுரந்த ஸ்தனங்களுள்ளவளாகி ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கினாள். இப்படி நந்தருக்கும், யசோதைக்கும் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலிருக்கும் மிக்க பிரியத்தைக் கண்ணுற்ற உத்தவர் மிகுந்த சந்தோஷத்துடன் அவர்களை நோக்கி, "நீங்களிருவரும் மனிதர்களுக்குட் சிறந்தவர்கள். லோகங்களுக்கும் குருவாகிய ஸ்ரீமந் நாராயணனிடத்தில் இம்மாதிரி மிகுந்த பக்தி புள்ளவர்களாக இருக்கிறீர்கள். இவர்கள் இந்த

ஜகத்திற்கு நிமித்த காரணர்களாகவும், உபாதான காரணர்களாகவும் இருக்கிறார்கள். பிரதான புருஷர்களாயும் இருக்கிறார்கள். மேலும் இவர்கள் பிராணிகளிடத்தில் பிரவேசித்துப் பலவகையான பேத ஞானத்திற்கும் ஜீவனுக்கும் நியந்தாக்களாக இருக்கிறார்கள்; இவர்கள் புராண புருஷர்கள்; ஜனங்கள் சாகும் தருணத்தில் எந்தப் பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தி அதனால் கர்மவாசனையை யொழித்து சுத்த சத்வ மூர்த்தியாகி சுரூப ஞானத்தை அடைந்து சீக்கிரத்தில் பரமபதத்தை அடைகிறார்களோ, அப்படிப்பட்ட மகிமை பொருந்தியவரும், எல்லாவற்றிற்கும் ஆத்மாவாகவும், காரணமாகவும், நாராயணராயும், சில காரணத்தால் மனித வடிவங் கொண்டவருமான இந்த ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் நீங்கள் மனத்தைச் செலுத்தியிருப்பதால் உங்களுக்கு என்ன காரியம் பாக்கியிருக்கிறது (எல்லாவற்றையும் அடைந்தீர்கள்)? ஸாத்வதர்களுக்கு அதிபதியான பகவான் சொற்ப நாட்களில் கோகுலத்திற்கு வருவார். உங்களுக்குப் பிரியத்தைச் செய்வார்: சகல யாதவர்களுக்கும் விரோதியாக இருந்த கம்ஸனை மல்ல சபையில் கொன்று, உங்களை நோக்கி கிருஷ்ணன் எதனைச் சொன்னாரோ (பந்துக்களுக்கு க்ஷேமத்தைச் செய்து கோகுலம் வருகிறேனென்று), அதனை உண்மையாகச் செய்வார் (சீக்கிரத்தில் வருவாரென்று கருத்து). ஓ மிகுந்த அதிர்ஷ்ட முள்ளவர்களே! நீங்கள் துக்கப்படவேண்டாம். சமீபத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசிப்பீர்கள். மரத்திற்குள் அக்கினி யிருப்பதுபோல சகல பிராணிகளின் இருதயத்திற்குள் கிருஷ்ணன் வசிக்கிறார். (மரத்திற்குள்ளிருக்கும் அக்கினி கடைந்தால்தான் வெளிப்படும்; அதுபோல, பக்தியினால்தான் பகவானுடைய சுரூபம் அறியப்படுமென்று

கருத்து.) அந்தப்பகவான் அகங்காரமற்றவராகையால் ஒருவரிடத்திலும் அவருக்கு அதிகப் பிரியமில்லை; அவருக்கு விரோதியுமில்லை; அவர் எல்லாரிடத்திலும் சமபுத்தியுள்ளவரானதால் மேலானவன், தாழ்ந்தவன் சமன் என்ற பேதபுத்தியும் அவருக்கு இல்லை. மேலும், அவருக்குத் தாய் தந்தைகளில்லை; பத்தினியில்லை; புத்திரனில்லை. தன்னைச் சார்ந்தவனில்லை. அன்னிய ரென்பதில்லை. அவருக்குச் சரீரமில்லை; ஜனனமுமில்லை; புண்ய பாவம் முதலிய கருமமும் அவருக்கு இல்லை; ஆனாலும் அவர் சாதுக்களைக் காப்பாற்றுவதற்காகத் தேவனாகவும், மத்ஸ்யமாகவும், சிம்மமாகவும், மனிதனாகவும் அவதரிக்கிறார். இது அவருக்கு ஒரு விளையாட்டாக இருக்கிறது. அவர் உண்மையில் குணசம்பந்த மில்லாதவரானாலும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களில் சம்பந்தப் பட்டவர்போலத் தோன்றுகிறார். ஒருவித ஆசையுமில்லா தவரானாலும், மாயையின் குணங்களைக்கொண்டு உலகத்தைச் சிருஷ்டிக்கிறார்; காப்பாற்றுகிறார்; சம்ஹரிக்கிறார். கண்ணிலிருக்கும் தோஷத்தால் பூமி அசைவது போல எப்படித் தோன்றுகிறதோ, அப்படி ஆத்மா சித்தமாகத் தம்மை நினைத்துக்கொண்டு சித்தத்தால் செய்யப்படும் தர்மங்களைத் தாம் செய்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறான். இந்தக் கிருஷ்ணன் உங்களிருவர்களுக்கும் மாத்திரம் புத்திரனில்லை, சகலப் பிராணிகளுக்கும் புத்திரனாகவும், ஆத்மாவாகவும், தாய் தந்தையர்களாகவும், ஈசுவரனாகவும் இருக்கிறார். பின்னும் பார்க்கப்பட்டது, கேட்கப்பட்டது, நடந்தது, நடக்கிறது, நடக்கப்போகிறது, தாவரம், ஜங்கமம், பெரியது, சிறியது ஆகிய இவைகளெல்லாம் உண்மையில் ஸ்ரீ கிருஷ்ணனேயாம். அவரைத் தவிர

உண்மையானது வேறொன்றுமில்லை. அவரே சத்திய வஸ்து" என்று சொன்னார்.

45—50. இப்படி நந்தரும் உத்தவருமாகப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது பொழுது விடிந்தது. கோபிகைகள் எழுந்திருந்து தீபங்களை ஏற்றி வைத்துக்கொண்டு திண்ணை, ரேழி, வாயிற்படி முதலியவைகளை மெழுகிச் சுத்தஞ்செய்து தயிர் கடைய ஆரம்பித்தார்கள். அப்பொழுது அவர்களுடைய கங்கணங்களிலும், ஒட்டியாணங்களிலும் இருக்கும் ரத்தினங்கள் தீபத்தின் ஒளியுடன் சேர்ந்து பிரகாசித்தன. மேலும் நிதம்பம், ஹாரம், குண்டலங்கள் ஆகிய இவைகள் அசைந்தன. மேலும், அவர்கள் காதில் அணிந்திருக்கும் குண்டலங்களுடைய காந்தியால் கன்னங்கள் பிரகாசித்தன. முகங்கள் குங்குமங்களால் விளங்கின. இப்படி கோகுலத்திலுள்ள கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதங்களைச் சொல்லிக்கொண்டு தயிர் கடையும்பொழுது அதனால் உண்டான சப்தமும், கானஞ் செய்வதாலுண்டான சப்தமும், ஆகாயம் வரையில் எட்டியது. பின்பு சூரியன் உதயமானார். கோகுல வாசிகள் எல்லோரும் சுவர்ணமயமான ரதம் நிறுத்தியிருப்பதைக் கண்டு "இது யாருடையது? கம்ஸனுடைய காரியத்தை முடிப்பவரான அக்ரூரர் வந்திருக்கிறாரா? அந்த அக்ரூரர் தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீ கிருஷ்ணனை மதுரா நகரத்திற்கு அழைத்துப்போனாரல்லவா? அதனால் கம்ஸன் அவரிடத்தில் பிரியமடைந்தானல்லவா? அப்படிப்பட்ட கம்ஸனுக்கு நம்மைக்கொண்டு அக்ரூரர் எந்தக் காரியத்தை முடிக்கப்போகிறார்?" என்று கோபிகைகள் ஒருவருக் கொருவர் பேசிக்கொண்டார்கள். அந்தச் சமயத்தில் உத்தவர் ஸ்நானம் முதலிய நியமங்களை முடித்துக்கொண்டு அவ்விடம் வந்தார்.

# அத்தியாயம் 47

## உத்தவர் கோபிகைகளைச் சமாதானஞ் செய்தது

1—10. *நீண்ட கைகளுள்ளவரும், புதிதாய் மலர்ந்த தாமரைமலர்போன்ற கண்களுள்ளவரும், பீதாம்பரத்தைத் தரித்தவரும், தாமரைப் புஷ்பமாலையை யுடையவரும், சுத்தமான ரத்தினங்கள் இழைத்த குண்டலங்களால் பிரகாசிக்கும் முகமுள்ளவரும், ஸ்ரீ கிருஷ்ணனுடன் சஞ்சரிப்பவருமான உத்தவரைக் கோபிகைகள் பார்த்து, "இவர் யார்? சுத்தமான சிரிப்புள்ளவராகவும், அழகான சரீரமுள்ளவராகவும், கிருஷ்ணனைப்போல் ஆபரணம் முதலியவைகளைத் தரித்தவராகவும் இருக்கிறார்" என்று சொல்லிக்கொண்டு உத்தம சுலோகராகிய பகவானுடைய பாதாரவிந்தத்தை ஆசிரயித்திருக்கும் உத்தவரைச் சுற்றிக் கொண்டார்கள். பின்பு அவர்கள் மிகவும் வணக்கமாக உத்தவரிடஞ் சென்று வெட்கச் சிரிப்புள்ள பார்வைகளால் அவரை உபசரித்து, கிருஷ்ணனால் அனுப்பப்பட்டு வந்தவரென்று தெரிந்துகொண்டு, அவர் ஆசனத்தில் உட்கார்ந்தபின் ரகசியமாக அவரை நோக்கி "நீர் ஸ்ரீகிருஷ்ணனுக்கு மிகுந்த தோழரென்று எங்களுக்குத் தெரியும். தாய் தந்தையர்களுக்குப் பிரியத்தைச் செய்வதற்காக பர்த்தாவாகிய ஸ்ரீ கிருஷ்ணனால் அனுப்பப்பட்டுவந்தவர்; ஸ்ரீ கிருஷ்ணனால் நினைக்கப்பட வேண்டியவர்கள் கோகுலத்தில் தாய் தந்தைகளே பொழிய வேறொருவருமில்லை. (எங்களிடத்தில் அந்த அந்தக் காலத்தில் ஸ்நேகமே பொழிய உண்மையான பிரியமில்லையென்று கருத்து.)*

பந்துக்களிடத்திலிருக்கும் ஸ்நேகத்தை மகரிஷிகளாலும் விடமுடியாது. பந்துக்களல்லாத மற்றவர்களைக் காரியத்திற்காக ஸ்நேகிப்பதேயொழிய வேறில்லை. அதுவும் காரியம் முடியும் வரையில் ஸ்நேகிப்பதாக அபிநயஞ் செய்கிறதாக இருக்கிறது. வண்டுகள் புஷ்பத்திலிருக்கும் மதுவைப் பானஞ் செய்கிறவரையில் அதில் வசித்து அதன்பின் அதனை விட்டு வேறு புஷ்பத்திற்குச் செல்வதுபோல் ஸ்திரீகளிடத்தில் புருஷர்கள் ஸ்நேகம் வைப்பதும் அவர்களை அநுபவிப்பதற்காகவே, (நீடித்துப் பிரியம் வைக்கிறதில்லையென்று கருத்து). தாசிகள் பணக்காரனிடத்தில் அவனுடைய பணத்தை அபகரிப்பதற்காக ஸ்நேகித்து அவன் ஏழையானபின் அவனை விட்டு விடுகிறார்களல்லவா ? ஜனங்கள் தங்களைக் காப்பாற்ற அரசன் சாமர்த்திய மற்றவனாக இருக்கும்பொழுது அவனை லட்சியஞ் செய்கிறதில்லை யல்லவா ? சிஷ்யர்கள் ஆசாரியனிடம் வித்தை அப்பியசித்தபின் அந்தக்குருவை லட்சியஞ் செய்கிறதில்லை யல்லவா ? தட்சிணை பெற்றுக் கொண்ட பின் ரித்விக்குகள் யஜமானனை லட்சியஞ்செய்கிறார்களா ? பறவைகள் பழமிருக்கும்பொழுது அந்த மரத்தைச் சேவிக்கின்றன; பழங்களற்ற மரத்தைச் சேவிக்கின்றனவா ? அதிதிகள் போஜனஞ் செய்தபின் அந்த வீட்டில் அபிமானத்தை விட்டுவிடுகிறார்க ளல்லவா! காட்டில் வசிக்கும் மிருகங்கள் காட்டுத்தீ பற்றிக்கொண்டால் அந்த வனத்தை விட்டு அப்புறஞ் செல்லுகின்றன வல்லவா ? அன்னிய புருஷன் (ஜாரன்) தன்னிடம் ஆசைப்பட்டவளான ஸ்திரீயை அநுபவித்த பின்பு அவளை விட்டு விடுகிறானல்லவா ? அதுபோல் கிருஷ்ணனுக்கு எங்களிடத்தில் உண்மையான பிரியமில்லை" என்று சொன்

னார்கள். பின்னுமவர்கள் ஸ்ரீகோவிந்தரிடத்தில் மனம், வாக்கு, சரீரம் ஆகிய இவைகளைச் செலுத்தி அந்தப் பகவான் பாலிய வயதிலும், கிசோர வயதிலும் எதனைச் செய்தாரோ, அந்தச் சரிதங்களை நினைத்து நினைத்து லௌகிகமான காரியங்களையும் விட்டு வெட்கமில்லாமல் பகவானுடைய சரிதங்களைக் கானஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

11—13. அவர்களில் ஒரு கோபிகை கிருஷ்ணனுடைய சங்கமத்தைப்பற்றி தியானஞ்செய்து கொண்டிருக்கையில், எதிரில் வந்த ஒரு வண்டை கிருஷ்ணனால் அநுப்பப்பட்டு வந்த தூதனாக வைத்துக்கொண்டு பின்வருமாறு சொன்னாள்: (வண்டைப் பார்த்துச் சொல்வது போல உத்தவரைப் பார்த்துச் சொன்னளென்றும் கருத்து) எப்படியெனில் "ஓ வண்டே! வஞ்சகராகிய கிருஷ்ணனுடைய தூத! என் காலில் விழாதே (நமஸ்கரித்துப் பிரார்த்திப்பதாக நினைத்துச் சொல்லுகிறாள்). அந்தக் கிருஷ்ணன் எனக்கு ஸபத்னிகளான கோபிகைகளை ஆலிங்கனஞ் செய்துகொண்டதால் அவர்களுடைய ஸ்தனங்களிலிருந்த குங்குமங்கள் பகவானுடைய வனமாலையில் ஒட்டிக்கொண்டன. அந்த மாலையில் நீ புரண்டதனால் கருமையான உன்னுடைய மீசை சிவப்பாக இருக்கிறது. ஆனதால் யாரைக் கிருஷ்ணன் ஆலிங்கனஞ் செய்து கொண்டாரோ, அவளுடைய காலில் விழுந்து அவளைச் சமாதானஞ் செய். தூதனாகிய உன்னுடைய மீசை சிவந்திருப்பதால் பகவான் உன்னை என்னிடம் அநுப்பி, பரிகாசஞ் செய்கிறார் என்பதை அறியலானேன். மேலும், வண்டாகிய நீ புஷ்ப ரசத்தை எடுத்துக்கொண்டு, புஷ்பங்களை எப்படி விட்டுவிடுகிறாயோ, அதுபோல சகல லோகங்களையும் மோகிக்கச் செய்யும் அதராமிருதத்தை

ஒரு தடவை ஸ்ரீகிருஷ்ணன் எங்களுக்குக் கொடுத்து பின்பு எங்களை விட்டுவிட்டார். இப்படிச் செய்த உபகாரத்தை மறக்கும் சுபாவமுள்ள கிருஷ்ணனுடைய பாதங்களில் லக்ஷ்மீதேவி எப்படிச் சிச்ருஷை செய்து கொண்டிருக்கிறாள்? ஆச்சரியம். அந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டேன்" (உத்தமசுலோகராகிய பகவானுடைய பொய்யான கதைகளைக் கேட்டு மோகித்துச் சிச்ருஷை செய்கிறாள். லக்ஷ்மீபோல நான் தெரியாதவளல்லவென்று கருத்து).

14. பின்னும், கானம்செய்யும் வண்டை நோக்கி, ஸ்ரீகிருஷ்ணனுடைய சரிதத்தைக்கானஞ்செய்கிறதென்று நினைத்துப் பின் வருமாறு சொல்லலானாள். எப்படியெனில், "ஓ வண்டே! ஸ்ரீகிருஷ்ணனைப் பலமுறை பார்த்திருக்கிறோம். அவருடைய சுபாவம் எல்லாம் நமக்குத் தெரியும். ஆனதால் அவரைப்பற்றி நம்முடைய முன்பாக நீ சொல்ல வேண்டாம். இப்பொழுது அவர் எந்த ஸ்திரீகளிடத்தில் பிரியப்பட்டிருக்கிறாரோ, அவர்கள் முன்பாக அவரைப்பற்றிச் சொல்வாயானால் இந்தச் சரிதத்தைக் கேட்டு அவர்களுடைய ஸ்தனங்களுக்கு சுகமுண்டாகும். அதனால் உனக்கு இஷ்டமான வஸ்துவைக் கொடுப்பார்கள்" என்றாள்.

15. (பின்னுமவள், "ஓ அம்ம! நீ இப்படிச் சொல்வது சரியல்ல; உன்னை உத்தேசித்துப் பகவான் மன்மததாபத்தை அடைந்து உன்னிடம் என்னை அனுப்பினார்." என்று வண்டு சொல்வதுபோல வைத்துக்கொண்டு பதில் சொல்லுகிறாள்) "ஓ கபட சுபாவமுள்ள வண்டே! கிருஷ்ணனுடைய அழகான பார்வை, புருவம் நெரித்தல் இவைகளைக் கண்டவுடன் அவரிடம் எவள்தான் ஆசைப்படமாட்டாள்? ஆகாயத்திலிருக்கும் தேவ ஸ்திரீக

ளாளுலும், பூமியிலிருப்பவர்களாளுலும் அவரிடத்தில் பிரியப் படுவார்களென்பதில் சந்தேகமில்லை. லக்ஷ்மீதேவி யானவள் அவருடைய பாததூளியை சேவிக்கிருளல்லவா? அப்படியிருக்க நாங்கள் அவரிடத்தில் ஆசைப் படுவதற்கு என்ன ஆட்சேபம்? ஆளுலும், தீனர்களிடத்தில் தயையுள்ளவனை உத்தமசுலோகனென்று சொல்லுவது வழக்கம். அப்படிப்பட்ட உத்தம சுலோகராகிய பகவான் என்னிடத்தில் தயை செய்யும்படி நீ சொல்லவேண்டும்'' என்று சொன்னுள்.

16. பின்னுமவள் தன்னுடைய பாதங்களின் சமீபத்தில வண்டு வருவதைப் பார்த்துத் தன்னைச் சமாதானப் படுத்துவது போல் நினைத்துக்கொண்டு அதனைப் பார்த்து "ஓ வண்டே! நீ பிறரை சமாதானப்படுத்தும் வித்தையை ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் அப்பியசித்துக் கொண்டு, பிரியமான வார்த்தைகளைச் சொல்லுகிருய் என்பது எனக்குத் தெரியும். என்னுடைய காலில் நீ விழ வேண்டாம். கிருஷ்ணன் நிமித்தத்தில் புத்திரன், பர்த்தா முதலிய பந்துக்களை விட்டு அவரையே அநுசரித்தவர்களான எங்களை நன்றியறிவில்லாமல் அவர் விட்டுவிட்டார். அவரிடத்தில் ஏன் பிரியம் வைக்கவேண்டும்?'' என்று சொன்னுள் (கிருஷ்ணனைப்போல் உன்னையும் நம்பக்கூடாது என்பது கருத்து.)

17. பின்னுமவள் வண்டை நோக்கி, "எவர் வேடன்போல வாலியைக் கொன்றுரோ, எவர் தம்மைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளவிரும்பிய சூர்ப்பனகையைச் சீதையினிடம் ஆசைப்பட்டுக் குரூபியாகச் செய்தாரோ (காது மூக்குகளை அறுத்தாரென்று கருத்து), எவர் பலி சக்ரவர்த்தியால் கொடுக்கப்பட்ட பூமியைப் பெற்றுக்

கொண்டு காக்கைபோல அவனைக்கட்டிப் பாதாளத்தில் அழுத்தினாரோ, அந்தக் கிருஷ்ணனுடைய ஸ்நேகத்தால் பிரயோசனமில்லை. ஆனாலும், அவருடைய சரித்திரங்களைச் சொல்லாமலிருக்க முடியவில்லை" என்றாள்.

18. "அந்தக் கிருஷ்ணனுடைய லீலையாகிற அமிருதத்தின் துளியை ஒருதடவை பானஞ்செய்தால் ஆசை, த்வேஷம் முதலியவைகள் நிவர்த்தியாகின்றன. அதனால் வீடு, குடும்பம் முதலியவைகளை உடனே விட்டு அநேகம் பெரியோர்கள் அன்ன பட்சிகள் போல சன்னியாசிகளுடைய விரதத்தை அனுஷ்டிக்கிறார்கள்.

19. "கிருஷ்ணனுக்கு மந்திரியா யிருக்கும் ஓ வண்டே! வேடனுடைய கானத்தைக் கேட்டுப் பெண்மான்கள் அதனை உண்மையென்று நினைத்து வேடனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டுக் கெடுதியை அடைவது போலக் கபட சுபாவமுள்ள கிருஷ்ணனுடைய வார்த்தையை சத்தியமென்று நினைத்து, நாங்கள் அவருடைய நகங்களுடைய ஸ்பரிசத்தால் மன்மத தாபத்தை யடைந்திருக்கிறோம். ஆனதால் வேறு வார்த்தையைச் சொல்லு."

20. (கொஞ்ச தூரஞ்சென்று திரும்பிவந்த வண்டைப் பார்த்துச் சொல்லுகிறாள்). "கிருஷ்ணனுக்கு ஸ்நேகிதனாகிய ஓ மதுகரமே! நீ கிருஷ்ணனால் அனுப்பப்பட்டுத் திரும்பவும் வருகிறாயோ? உனக்கு என்ன வேண்டும்? ஸ்ரீ கிருஷ்ணனுடைய தூதனாகையால் உன்னை நான் பூஜிக்கவேண்டும். கிருஷ்ணனுடைய மார்பில் லக்ஷ்மிதேவி எப்பொழுதும் வசிப்பதால் அந்தப் பகவானுடைய சமீபத்தில் என்னை எப்படி நீ அழைத்துப் போவாய்?"

21. "எங்களுடைய நாதனுகிய கிருஷ்ணன் இப்பொழுது மதுரா நகரத்தில் வசிக்கிருரா? அவர் கோகுலத்திலுள்ள கோபர்களையும், பந்துக்களையும் நினைத்துக் கொண்டிருக்கிருரா? வேலைக்காரிகளான எங்களைப்பற்றி எப்பொழுதாவது சொல்வதுண்டா? அகில் கட்டை போல் வாசனையுள்ள தமது கையை என்னுடைய தலையில் எப்பொழுது வைப்பார்?" என்று கேட்டாள்.

22—37. இப்படி கிருஷ்ணனைப் பார்க்க விரும்பும் கோபிகளைப் பார்த்து உத்தவர், "ஓ கோபிகைகளே! உங்களுடைய மனமானது ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் செலுத்தப்பட்டிருப்பதால் நீங்கள் சகலலோகங்களாலும் பூஜிக்கக் கூடியவர்களாக இருக்கிறீர்கள். தியானம், விரதம், தபஸ், ஹோமம், ஜபம், வேதாத்யயனம், இந்திரியங்களை அடக்குவது, க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய மற்றவைகள் ஆகிய இவைகளால் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பக்தியுண்டாக வேண்டும். அந்தப் பக்தியானது மகரிஷிகளுக்கும் கிடைப்பது அரிது. அப்படிப்பட்ட மேலான பக்தியானது உங்களுக்கு உண்டாயிருக்கிறது; நீங்கள் புத்திரர்கள், புருஷர்கள், தேகம், பந்துக்கள், வீடு ஆகிய இவைகளெல்லாவற்றையும் விட்டு ஸ்ரீ கிருஷ்ணனென்று சொல்லப்படும் பரம புருஷனிடத்தில் சித்தத்தைச் செலுத்தினீர்களே, இது தெய்வாதீனமேயாம். நீங்கள் ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்ததால் உங்களுக்கு அவனிடத்தில் ஏகாந்தமான பக்தி யுண்டாயிருக்கிறது. அப்படிப்பட்ட பக்தியை நான் பார்த்ததால் மிகவும் அனுக்கிரகிக்கப்பட்டவனாக இருக்கிறேன். ஆனதால் ஸ்ரீ கிருஷ்ணன் தனக்கு அந்தரங்கத் தோழனுகிய என் முகமாக உங்களுக்குச் சில சமாசாரங்களைச் சொல்லி யனுப்பியிருக்கிறுர். அதனைச் சொல்லுகிறேன், கேளுங்கள்."

எப்படியெனில், "ஓ! கோபிகைகளே! சகல பிராணிக ளிடத்திலும் ஆகாயம், வாயு அக்னி, ஜலம், பூமி ஆகிய பூதங்கள் எப்படி இருக்கின்றனவோ, அப்படியே மனம், பிராணன், புத்தி, இந்திரியம் இவைகளின் காரணமும் இவைகளுக்கு ஆச்ரயமுமாக இருக்கும் நானும் எல்லாப் பிராணிகளிடத்திலும் வசிக்கிறேன். நான் சகல சுவ ரூபியா யிருப்பதால் உங்களுக்கு என்னுடைய விரகமே (விட்டுப் பிரிவது) இல்லை. நான் என்னிடத்தில் என்னால் என்னை என்னுடைய மாயா மகிமையால் பூதம், இந்திரி யம், குணம் இவைகளின் சுரூபமாக சிருஷ்டிக்கிறேன்; காப்பாற்றுகிறேன்; கொல்லுகிறேன். (ஆனதால், எல்லா வற்றிற்கும் காரணமாயும், சகல சுரூபமாயும் இருப்ப தால், காரியகாரண பேதமில்லை என்று கருத்து.) ஆத்மா உண்மையில் சுத்தர்; ஞானசுரூபி; குண சம்பந்தமற்றவர்; ஆனாலும் மாயையின் விருத்திகளான சுஷுப்தி, ஸ்வப் னம், ஜாக்ரத் இவைகளில் முறையே பிராக்ஞன், தைஜ ஸன், விச்வன் என்று தோன்றுகிறார். (அதனால் சகல பூத சுரூபியானாலும் ஆத்மாவுக்குப் பூதங்களுடைய தோஷ சம்பந்தமில்லை யென்று கருத்து.) வேதம், யாகம், ஆத்மா, அனாத்மா இவைகளின் விவேகம், தபஸ், இந்தி ரிய நிக்கிரகம் இவைகளாலுண்டாகும் பயன் மனத்தை யடக்குவதேயாம். பூமியில் அநேகம் வழிகளாகச் செல் லும் நதிகள் சமுத்திரத்தை அடைவதுபோல மேற்சொல் லிய யோகம் முதலிய மார்க்கங்கள் பல விதங்களானாலும் அதனாலடையக்கூடிய பலன் மனத்தை யடக்குவதேயாம். நான் உங்களுக்குச் சமீபத்திலில்லாமல் வெகு தூரத்தி லிருப்பதற்குக் காரணமென்னவெனில், உங்களுடைய மனமானது என்னிடத்தில் எப்பொழுதும் சென்றிருக்கு மென்பதேயாம். ஸ்திரீகள், தங்களுடைய நாயகன்

தேசாந்தரம் சென்றிருக்கும்பொழுது எப்படிப் புருஷர்களையே நினைத்துக்கொண்டிருக்கிறார்களோ, அப்படி, சமீபத்திலிருக்கும் புருஷர்களிடத்தில் பிரியப்பட மாட்டார்கள். ஆனதால் நீங்கள் உங்களுடைய சித்தத்தை என்னிடத்திலேயே செலுத்தி, சகல வியாபாரங்களையும் விட்டு என்னையே நினைத்துச் சீக்கிரத்தில் என்னையடைவீர்கள். ஓ நல்ல சுபாவமுள்ளவர்களே! ராஸக்ரீடை நடந்தபொழுது எந்த ஸ்திரீகள், வீட்டிலிருந்து வெளிவர முடியாமல் அவ்விடத்திலேயே என்னைத் தியானஞ் செய்துக் கொண்டிருந்தார்களோ அவர்கள் என்னுடைய சரித்திரங்களைச் சிந்தித்ததால் என்னையே அடைந்தார்களல்லவா?" என்று கிருஷ்ணன் உங்களுக்குச் சொல்லும்படி ஆஞ்ஞாபித்தார்" என்று உத்தவர் சொன்னார்.

38—53. அதனைக் கேட்ட கோபிகைகள் முன்பு நடந்த விஷயங்களை நினைத்துமிகுந்த பிரியத்துடன் உத்தவரை நோக்கி, "யாதவர்களுக்கு விரோதியாக இருந்த கம்ஸன் தெய்வாதீனமாக அடிபட்டான். ஸ்ரீ கிருஷ்ணன் சகல காமங்களையும் அடைந்த பந்துக்களுடன் க்ஷேமமாக இருப்பதும் தெய்வாதீனமேயாம். எங்களுடைய வெட்கச் சிரிப்பு, மேலான பார்வை இவைகளால் பூஜிக்கப் பட்டவரான ஸ்ரீ கிருஷ்ணன் இப்பொழுது பட்டணத்திலிருக்கும் ஸ்திரீகளுக்கு சந்தோஷத்தை உண்டு பண்ணுகிறாரா? ஸ்ரீ கிருஷ்ணன் ரதிவிசேஷத்தை அறிந்தவரானதாலும், பட்டணத்து ஸ்திரீகளுக்குப்பிரியராக இருப்பதாலும், அவர்களுடைய விளையாட்டைப் பார்த்தும், இனிமையான வார்த்தைகளைக் கேட்டும் அவர்களிடத்தில் ஏன் ஆசைப்படமாட்டார்? (பட்டணத்து ஸ்திரீகளிடத்தில் ஆசைப்பட்டு அவ்விடத்தில் வசிப்பாரேயொழிய இவ்விடத்தில் வரமாட்டா

ரென்று கருத்து.) ஓ சாதுவே! எந்த பிரஸ்தாபத்திலா வது, பட்டணத்து ஸ்திரீகளுடைய கோஷ்டியிலாவது தமதிஷ்டப்படி பேசிக்கொண்டிருக்கும் பொழுதாவது கோவிந்தர் கிராமவாசிகளான எங்களைப்பற்றிப் பேசுகிற துண்டா? மேலும், பிருந்தாவனத்தில் ஒரு சமயம் ராத் திரியில் சந்திர கிரணத்தால் இருளில்லாமலிருக்கும் பொழுது கிருஷ்ணன் எங்களுடன் சேர்ந்து ராஸக்ரீடை செய்தார். அப்பொழுது அவருடைய இனிமையான சரி தங்களைக் கானஞ் செய்தோம். பகவான், கால் சலங்கை கள் சப்திக்கும்படி நர்த்தனஞ்செய்து ரமித்தார்; அவை களை நினைத்துக் கொண்டிருக்கிறாரா? மகேந்திரன் மேகங் களைக்கொண்டு வனத்தை சந்தோஷிக்கச் செய்வதுபோல் பகவான் இவ்விடம் வந்து எங்களை ஆலிங்கனஞ் செய்வது முதலியவைகளால் சந்தோஷப் படுத்துவாரா? அவரைத் தரிசிக்காமல் நாங்கள் தாபத்தை அடைந்திருக்கிறோம். ஆனால் கிருஷ்ணன் கம்ஸனைக் கொன்று ராஜ்ஜியத்தை அடைந்திருக்கிறார். அவர் ராஜ குமாரிகளை விவாகஞ் செய்து பட்டணத்தில் வசிப்பாரேயொழிய இவ்விடம் எதற்காக வரப் போகிறார்? சகல காமங்களையும் அடைந்த வரும், லக்ஷ்மீபதியுமான ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வனவாசி களான நம்மால் செய்யக்கூடிய காரியமென்ன இருக் கிறது (ஒன்றுமில்லையென்று தாத்பர்யம்)? ஒரு விஷயத் திலும் ஆசைப் படாமலிருப்பதே மேலான சுகம் என்று வியபசாரியான பிங்களா என்பவள் சொன்னாள். அதனை நாங்கள் அறிந்திருக்கிறோம். ஆனாலும் கிருஷ்ணனிடத் தில் ஆசை யொழியவில்லை. விரும்பாவிடினும், லக்ஷ்மீ எவருடைய சரீரத்தில் இடைவிடாமல் வசிக்கிறாளோ, அந்த உத்தம சுலோகராகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய ரகஸிய வார்த்தையை மறந்து விடமுடியுமா? இந்த நதிகளும்,

மலைகளும், பசுக்களும், புல்லாங்குழல் சப்தமும் அடிக்கடி கிருஷ்ணனுடைய ஞாபகத்தை உண்டுபண்ணுகின்றன. லக்ஷ்மீகரம் பொருந்திய அவருடைய அடிச்சுவடுகளைத் தரிசிக்கும்பொழுது அவரை மறக்கமுடியவில்லை. பின்னும் அந்தக் கிருஷ்ணன் அழகான நடை, மேலான சிரிப்பு, பார்வை, இனிமையான வார்த்தை ஆகிய இவைகளால் எங்களுடைய மனத்தை அபகரித்திருக்கிறார். ஆனதால் அவரை எப்படி மறக்கமுடியும்? ஓ லக்ஷ்மீபதியே! எங்களுடைய நாத! கோகுலத்திற்கு நாதனாக இருப்பவரே! உபத்திரவத்தைப் போக்கடிப்பவரே! கோவிந்த! துக்க சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் கோகுலத்தைக் காப்பாற்றும்" என்று சொல்லிப் பகவான் உத்தவர் முகமாகச் சொல்லியனுப்பிய வார்த்தைகளைக் கேட்டு சந்தோஷத்தையடைந்து, ஸ்ரீ கிருஷ்ணனை ஸ்ரீமந் நாராயணனென்றும், அவரே தாங்களென்றும் நினைத்துக்கொண்டு உத்தரவை உபசரித்தார்கள்.

54—63. பின்பு உத்தவர் ஸ்ரீகிருஷ்ணனுடைய லீலைகளைச் சொல்லி கோபிகைகளுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணிக்கொண்டு சில மாதங்கள் கோகுலத்தில் வசித்தார். அவர் சொல்லும் ஸ்ரீ கிருஷ்ண சரித்திரத்தைக் கேட்டு ஆனந்தத்தை யடைந்த கோபிகைகள் ஒவ்வொரு நாளையும் ஒரு க்ஷணத்தைப்போலக் கழித்தார்கள். இப்படி கிருஷ்ண தாசராகிய உத்தவர் கோவர்த்தனம், பிருந்தாவனம், புஷ்பித்தமரங்கள் முதலியவைகளைப் பார்த்து கிருஷ்ணனுடைய ஞாபகத்தை கோகுல வாசிகளுக்கு உண்டுபண்ணிக்கொண்டு சுகமாக வசித்தார். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மிகுந்த பிரியம் வைத்து, அதனாற் கோபிகைகள் துக்கப்படுவதை உத்தவர் பார்த்து அவர்களை மேலானவர்களென்று நினைத்து

நமஸ்கரிக்கவேண்டுமென்று எண்ணிப் பின்வருமாறு சொல்லலானார். எப்படியெனில் "சகல ஜகத்ரூபியாக இருக்கும் கோவிந்தனிடத்தில் இந்த கோபிகைகள் இடைவிடாமல் பக்தி செய்வதால் இவர்களே மேலானவர்கள். மகரிஷிகளும் நாமும் ஸம்ஸாரத்திலிருந்து பயந்து கிருஷ்ணனிடம் பக்திசெய்கிறோம். ஆதலால் பகவானிடத்தில் பக்தி செய்து, அவருடைய கதைகளைச் சொல்லிக்கொண்டிருப்பவர்கள் எந்த ஜாதியில் பிறந்தவர்களானாலும் மேலானவர்களேயாம். பகவானிடத்தில் பக்தி செய்யாதவர்கள் பிராம்மண ஜன்மத்தை அடைந்தவர்களானாலும் அதனால் என்ன விசேஷம்? (பகவானுடைய சரிதத்தில் ஆசைகொண்ட பக்தர்களுக்குப் பிராம்மண ஜன்மங்களால் என்ன சிறப்பு ஏற்படப் போகிறது என்றும் தாத்பரியம்.) இந்த கோபிகைகள் காட்டில் சஞ்சரிப்பவர்கள்; வியபார சுபாவமுள்ளவர்கள்; இவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் இம்மாதிரி உறுதியான பக்தியுண்டாயிருக்கிறதே, அமிருதத்தை மூடன் புசித்தாலும் அது அவனுக்குச் சுகத்தை யுண்டு பண்ணுவதுபோல் அஞ்ஞானனாயிருந்தாலும்பகவானிடத்தில் பக்திசெய்வானானால் அவனுக்குப் பகவான் க்ஷேமத்தைச் செய்கிறார். மேலும், ராஸக்ரீடையில் பகவான் தமது கையை கோபிகைகளுடைய கழுத்தில் வைத்துத் தழுவி எவ்விதம் கோபிகைகளை அவர் அநுக்கிரகித்தாரோ, அம்மாதிரியான அநுக்கிரகம் எப்பொழுதும் அவருடைய மார்பிலேயே வசிப்பவளும் பகவானிடத்திலிருந்த பிரியமுள்ளவளுமான லக்ஷ்மீதேவிக்கும் கிடைக்கவில்லை. தாமரை மலரின் வாசனைபோன்ற வாசனை, காந்தியிவைகளுள்ள ஸ்வர்க்க லோகத்து ஸ்திரீகளுக்கும் கிடைக்கவில்லை. மற்றவர்களுக்கு எப்படி கிடைக்கும்?

எந்தக் கோபிகைகள் பந்துக்களையும், தர்ம மார்க்கத்தையும் விட்டு வேதங்களாலும் தேடக்கூடிய பகவானுடைய பாதத்தை அடைந்திருக்கிறார்களோ, அவர்களுடைய பாததூளியை அடைந்த பிருந்தாவனத்திலுள்ள புதர், கொடி, ஔஷதி இவைகள் மிக்க மேலானவைகளாகின்றன. ஆதலால் அவைகளுக்குள் நான் ஒரு கொடியாகப் பிறந்தேனே! பின்னும் எந்தப் பகவானுடைய பாதத்தைச் சகல காமங்களையும் அடைந்தவர்களான பிரும்மா முதலியவர்களும், யோகீசுவரர்களும், லக்ஷ்மீதேவியும் பூஜிக்கிறார்களோ அந்தப் பாதத்தைக் கோபிகைகள் ராஸக்ரீடை செய்யும்பொழுது தங்கள் ஸ்தனங்களில் வைத்துக் கொண்டு தாபம் நீங்கி சுகத்தை அடைந்தார்கள். இன்னும் எந்தக் கோபிகைகள் கிருஷ்ண சரித்தைக் கானஞ்செய்வதால் மூவுலகத்தையும் பரிசுத்தப் படுத்துகிறார்களோ அந்தக் கோபிகைகளுடைய பாததூளியை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்" என்று சொன்னார்.

64—67. பின்பு உத்தவர் கோபிகைகளுக்கும், யசோதைக்கும், நந்தருக்கும், மற்ற கோபர்களுக்கும் சமாதானஞ்சொல்லி அவர்களிடம் விடைபெற்று ரதத்தின் மீதேறி மதுரா நகரத்திற்குப் புறப்பட்டார். அதைக் கண்ணுற்ற நந்தன் முதலிய கோபர்கள் பலவிதமான காணிக்கைகளை எடுத்துக்கொண்டு மிகுந்த பிரியத்துடன் கண்ணீரைப் பெருக்கி, "ஓ உத்தவரே! எங்களுடைய மனமானது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தையே ஆச்ரயிக்கட்டும். வாக்கானது அவருடைய திவ்ய நாமதேயங்களையே உச்சரிக்கட்டும். சரீரம் அவரை வணங்குவது முதலியவைகளில் உபயோகப் படட்டும். காமங்களால் ஸம்ஸாரத்தில் சுற்றிக் கொண்டிருப்பவர்களான எப்பொழுதாவது தெய்வாதீனமாக நா

யத்தைச் செய்திருந்தோமானல் அவைகளால் எங்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் உறுதியான பக்தி யுண்டாகட்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

68—69. இப்படி உத்தவர் கிருஷ்ண பக்தர்களான கோபர்களால் உபசரிக்கப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனால் காப்பாற்றப்பட்டிருக்கும் மதுரா நகரஞ் சென்றார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்து நமஸ்கரித்து ராம கிருஷ்ணர்களிடம் கோகுல வாசிகளின் பக்தி விசேஷத்தைத் தெரிவித்தார். அவர்களால் கொடுக்கப்பட்ட காணிக்கைகளை அரசனாகிய உக்கிரசேனரிடம் சமர்ப்பித்தார்.

## அத்தியாயம் 48

### அக்ரூரரை ஹஸ்தினபுரத்திற்கு அனுப்பியது

1—11. பின்பு எல்லாருடைய அபிப்பிராயத்தையும் அறிந்தவரும், சகல சுருபியுமான ஸ்ரீ கிருஷ்ணன் "தமக்குச் சந்தனங்கொடுத்தவள் மன்மத தாபத்தை அடைந்து தம்முடைய வரவை எதிர்பார்த்திருக்கிறாள். அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்" என்று நினைத்து, அவளுடைய வீட்டிற்குச் சென்றார். அவளுடைய வீடானது மன்மதனை விருத்தி செய்யக் கூடிய சாமான்களால் பூர்ணமாகஇருந்தது. எப்படியெனில் முத்து மாலைகளாலும், துவஜங்களாலும், கொடிங்கைகளாலும், படுக்கைகளாலும், ஆசனங்களாலும், நல்வாசனையுள்ள தூபங்களாலும், தீபங்களாலும், புஷ்பமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அப்பொழுது அவள் வீட்டிற்கு வந்த தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்து சீக்கிரம் ஆசனத்திலிருந்து எழுந்திருந்திருந்த பரபரப்புள்ளவளாகித் தன் தோழிகளுடன் ஸ்ரீ

கிருஷ்ணனை எதிர்கொண்டழைத்து, ஆசனம் முதலியவைகளைக் கொடுத்துப் பூஜித்தாள். மேலுமவள் ஸ்ரீ கிருஷ்ணனுடன் வந்த உத்தவருக்கும் ஆசனங்கொடுத்து நன்றாக உபசரித்தாள். உத்தவர் அவள் கொடுத்த ஆசனத்தைக் கையால் தொட்டுப் பூமியில் உட்கார்ந்தார். ஸ்ரீ கிருஷ்ணன் உலக வழக்கத்தை அநுசரித்து, மிகுந்த விலையுள்ள உத்தமமான படுக்கையில் உட்கார்ந்தார். பின்பு அவள் ஸ்நானஞ்செய்து வஸ்திரத்தை யுடுத்திச் சந்தனத்தைப் பூசிக்கொண்டு ஆபரணங்களை அணிந்து, புஷ்பங்கள், தாம்பூலம் இவைகளைத் தரித்து, சரீரத்தை அலங்கரித்துக்கொண்டு வெட்கச் சிரிப்புடன் கிருஷ்ணனுடைய சமீபஞ் சென்றாள். அப்பொழுது கிருஷ்ணன் புதிய சங்கமத்தில் வெட்கத்தால் சம்சயத்துடன் சமீபத்தில் வருகிற ஸ்திரீயை அழைத்துக் கங்கணங்களால் அலங்கிருதமான அவளுடைய கையைப் பிடித்துப் படுக்கையில் வைத்துக்கொண்டு அவளுடன் ரமித்தார். அவள் பகவானுக்குச் சந்தனங் கொடுத்ததால் உண்டான சொற்ப புண்ணியத்தால் இம்மாதிரியான பாக்கியத்தை அடைந்தாள். அவள் மன்மத தாபத்தால் வாடிய ஸ்தனங்களிலும், மார்பிலும், கண்களிலும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களை வைத்துத் தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டதுமின்றி ஆனந்தமூர்த்தியாகிய பகவானை இரு கைகளாலும் ஆலிங்கனஞ் செய்துகொண்டு வெகு காலமாக ஏற்பட்டிருந்த தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டாள். க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவரும், அடையமுடியாதவருமான ஸ்ரீ கிருஷ்ணனை அவள் சந்தனங் கொடுத்த புண்ணியத்தால் எளிதில் அடைந்தும் அதிருஷ்டமில்லாதவளானதால் பகவானை நோக்கி, "ஓ தாமரை மலர் போன்ற கண்களுள்ளவரே! நாத! இவ்விடத்தில் சில நாள்

வித்து என்னுடன் ரமிக்கவேண்டும். உம்மை விட்டுப் 'பிரிய மனமில்லை'' என்று கேட்டுக்கொண்டாள். (கோபி கைகள்போலப் பக்தி செய்யாததனால் அதிருஷ்டமில்லா தவளென்று சொல்லப்பட்டது.) அதனைக் கேட்டுப் பக வான் அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்து, உத்தவ ருடன் தமது இல்லம் சென்றார். ஆராதிக்கமுடியாதவ ரும், எல்லாருக்கும் அதிபதியுமாகிய மகாவிஷ்ணுவை இவள் ஆராதித்தும், விஷயசுகத்தில் ஆசைப்பட்டதால் புத்தியில்லாதவளானாள்.

12—27. பின்பு பகவான் பலராமன், உத்தவர் இவர்களுடன் அக்ரூரருக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி, எதனையோ செய்வதற்காக அக்ரூரருடைய வீடு சென்றார். அக்ரூரர் தம்முடைய வீட்டிற்கு வந்த பந் துக்களான புருஷோத்தமர்களைப் பார்த்து எதிர் வந்து அழைத்து, மிகுந்த ஆனந்தமுள்ளவராகிக் கட்டிக்கொண் டார். பின்பு கிருஷ்ணனுக்கும், பலராமனுக்கும், உத்தவ ருக்கும் நமஸ்காரஞ் செய்தார். அவர்களும் அக்ரூரரை நமஸ்கரித்தார்கள். பின்பு அக்ரூரர் அவர்களுக்கு ஆச னம் கொடுத்து முறைப்படி பூஜித்தார். அவர்களுடைய பாதங்களை அலம்பி, அந்த ஜலத்தைச் சிரசில் புரோக்ஷித் துக்கொண்டார். பின்னுமவர் நல்ல வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், புஷ்பமாலைகளாலும், பூஜித்து, நமஸ் கரித்து, அவர்களுடைய பாதங்களைத் தம்முடைய மடி யில் வைத்துப் பிடித்து மிகுந்த வணக்கத்துடன் ராம கிருஷ்ணர்களை நோக்கி, "கம்ஸன் தன்னைச் சார்ந்தவர்க ளுடன் தெய்வாதீனமாகக் கொல்லப்பட்டான். இந்தக் குலமானது ஆபத்திலிருந்து காப்பாற்றப்பட்டு உங்களால் விருத்தி செய்யப்பட்டது. நீங்களிருவரும் ஜகத்காரணபுருஷர் கள்; ஜகத்திற்குக் காரணர்களாக இருப்பவர்கள்; பிர

த்தான புருஷ சுரூபிகள்; ஆனதால் உங்களைத் தவிர காரண மாவது காரியமாவது ஒன்றுமில்லை. ஓ பரமேசுவர! மாயை முதலிய உம்முடைய சக்திகளைக்கொண்டு சிருஷ்டிக்கப்பட்ட இந்த ஜகத்தில் நீர் பிரவேசித்தவர்போல இருந்து சுருதிக்கும், பிரத்யட்சத்திற்கும் விஷயமாகும் படி சேஷ்டிக்கச் செய்கிறீர். பிருதிவி முதலிய பூதங்களால் ஏற்பட்ட தாவர ஜங்கமங்களில் அந்த மகா பூதங்கள் பலவகையாகத் தோன்றுவதுபோல உம்மால் படைக்கப்பட்ட ஜகத்தில் நீர் சுதந்திரராலும் பலவகையாகத் தோன்றுகிறீர் (மனித சரீரம் முதலியவைகளில் பாலியம், யௌவனம் முதலிய அவஸ்தைகளிலும் என்று கருத்து). நீர் ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற குணங்களாகிய சக்திகளைக்கொண்டு ஜகத்தைப் படைக்கிறீர்; காப்பாற்றுகிறீர்; சம்கரிக்கிறீர்; ஆனாலும் ஞானசுரூபியானதால், அவைகளின் குணத்துடனும், கர்மத்துடனும் சம்பந்திக்கிறதில்லை. (பந்தத்திற்கு அவித்தை காரணம். அது உம்மிடத்தில் இல்லாததனால் உமக்கு பந்தமில்லையென்று கருத்து.) [ஜீவாத்மாவிற்குங்கூட உண்மையில் பந்தமில்லையென்று அடுத்த சுலோகத்தில் சொல்லியிருக்கிறது.] தேகம் முதலிய உபாதிகள் உண்மையானவை யல்ல. அதனால் பேதபுத்தியும் (அவித்தை) சாத்தியமல்ல. ஆனதால் உமக்குப் பந்தமுமில்லை. எங்களுடைய அவிவேகத்தால பந்தமோக்ஷங்கள் கற்பிக்கப்படுகின்றனவே யொழிய உண்மையிலில்லை. (ஆனாலும் உம்முடைய அவதாரங்களும் லீலைகளும் பொய்யல்லவென்று சொல்லுகிறார்.) ஜகத்திற்கு க்ஷேமத்தைச் செய்வதற்காக உம்மால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் அநாதியான வேத மார்க்கம் பாஷண்டர்களால் எப்பொழுது கெடுக்கப்படுகிறதோ, அப்பொழுது நீர் சுத்த ஸத்வமூர்த்தியாக அவதரிக்கிறீர்.

(இது உமக்கு இல்லையென்று கருத்து.) ஓ பிரபுவே! அப்படிப்பட்ட நீர் பூமிக்குச் சுமையாக இருக்கும் அசுராம்சர்களான அக்ஷௌஹிணிக்கணக்கான அரசர்களைக் கொன்று பூமியின் பாரத்தை நிவர்த்திப்பதற்காக வசுதேவருடைய கிருகத்தில் அவதரிக்கிறீர். இந்தக் குலத்திற்குக் கீர்த்தியை விருத்தி செய்கிறீர்; எவர் சகல தேவ சுரூபியாகவும், பிதிரு சுரூபியாகவும், பிராம்மண சுரூபியாகவும் இருக்கிறாரோ, எவருடைய பாதஜலமானது (கங்கை) மூவுலகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறதோ, அப்படிப்பட்ட ஜகத்குருவாகிய நீர் என்னுடைய வீட்டிற்கு வந்ததால் என்னுடைய கிருகம் மிக்க அதிருஷ்டமுள்ளதாயிற்று; நீர் பக்தர்களிடத்தில் பிரியமுள்ளவர்; ஸத்யவாதி; மித்திரன்; செய்த உபகாரத்தை நினைப்பவர்; பக்தர்களுக்கு சகல காமங்களையும் கொடுப்பவர்; உமக்கு விருத்தியுமில்லை; குறைவுமில்லை; பக்தர்களுக்கு உம்முடைய ஆத்மாவையும் கொடுப்பவர்; ஆனதால் விவேகியாக இருப்பவன் யார்தான் உம்மைச் சரணமடைய மாட்டான்? (உம்மையே சரணமடைவா னென்று கருத்து.) ஓ ஜனார்தன! யோகீசுவரர்களான சிறந்த தேவர்களாலும் நீர் அடையமுடியாதவர்; அப்படிப்பட்ட உம்மை தெய்வச்செயலாகத் தரிசித்தேன். ஆனதால் புத்திரன், களத்திரம், பணம், பந்துக்கள், வீடு, தேகம் ஆகிய இவைகளில் எனக்கு உண்டாகியிருக்கும் மோகமாகிய உம்முடைய மாயா பந்தத்தை நிவர்த்தியும்'' என்று பிரார்த்தித்தார்.

28—36. இப்படி பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ணன் பக்தராகிய அக்ரூரரால் துதிக்கப்பெற்று, சிரித்துக் கொண்டு அவரை மோஹிக்கச் செய்பவர்போல, "நீர் எமக்கு குருவாகவும், பிதாவின் சகோதரராகவும்,

மேலான பந்துவாகவும் இருக்கிறீர். நாங்களோ உம்மைச் சார்ந்த பிரஜைகள்; உம்மால் காப்பாற்றப்படவேண்டிய வர்கள்; தயைசெய்யத் தகுதியானவர்கள்; மேலும் உம் மைப்போன்ற பாகவதர்கள் (பகவத் பக்தர்கள்) மிகவும் பூஜிக்கத்தக்கவர்கள்; அவர்களே ஜனங்களால் சேவிக்கக் கூடியவர்கள். அவர்களைச் சேவிப்பதால் மனிதர்களுக்கு க்ஷேமமுண்டாகிறது. மேலும், ஸாதுக்கள் தங்கள் காரி யத்தில் நோக்கமில்லாமல் பிறருக்கு அநுக்கிரகஞ் செய் யும் ஸ்வபாவமுள்ளவர்கள்; அவர்கள் தேவசுரூபிகளாக இருப்பவர்கள்; (தேவர்கள் தங்கள் காரியத்தில் நோக்க முள்ளவர்கள்; ஸாதுக்கள் அப்படியல்ல. ஆனதால் ஸாதுக்களையே சேவிக்கவேண்டுமென்று அர்த்தஞ் சொல்வதுமுண்டு.) புண்ணிய தீர்த்தங்களும், மண்ணி னாலும், கற்களாலும் செய்யப்பட்ட தேவபிம்பங்களும் ஜனங்களைப் பரிசுத்தப்படுத்துகிறதில்லை என்பதில்லை. (பரிசுத்தப்படுத்துகின்றன.) அவைகள் சில காலஞ் சென்றபின் அநுக்கிரகிக்கின்றன. ஸாதுக்களோ தங்க ளைத் தரிசித்தவுடன் பாபத்தை நிவர்த்தித்து அநுக்கிர கஞ் செய்கிறார்கள். ஆனதால் நீர் என்னுடைய மித்திரர் களுக்குட் சிறந்தவர்; பாண்டுவின் புத்திரர்களுடைய க்ஷேமத்தைத் தெரிந்துகொண்டு வருவதற்காக அஸ்தின பட்டணம் போகவேண்டும். பாண்டு மகாராஜன் வனத் தில் மரணமடைந்தபின் துக்கப்படும் குழந்தைகளை மாதாவாகிய குந்தியுடன் திருதராஷ்டிரர் பட்டணத் திற்கு அழைத்துவந்தாரென்று கேள்விப்பட்டிருக்கி றோம். அம்பிகை யென்பவருடைய புத்திரனாகிய திருத ராஷ்டிரர் கண்ணில்லாதவரானதாலும் (குருடன்), துஷ்ட னாகிய புத்திரர்களுக்குச் சுவாதீனரானதாலும், சகோதர னுடைய புத்திரர்களான பாண்டவர்களைத் தம்முடைய

புத்திரர்களாகப் பாவிக்கமாட்டாரென்பது திண்ணம் (நிச்சயம்). ஆனதால் நீர் அவ்விடஞ் சென்று பாண்டவர்களுடைய க்ஷேமத்தைத் தெரிந்துகொண்டு வாரும். பின்பு அது நல்லதாயிருந்தாலும், கெட்டதாக இருந்தாலும் அதற்குத் தக்கபடி பந்துக்களான பாண்டவர்களுக்கு க்ஷேமத்தைச் செய்வோம்'' என்று ஆஞ்ஞாபித்து பலராமன், உத்தவர் இவர்களுடன் தமது கிருகஞ் சென்றார்.

## அத்தியாயம் 49

### அக்ரூரர் அஸ்தினாபுரஞ் சென்று திரும்பிவந்தது

**1—14.** அக்ரூரர் அஸ்தினா நகரத்திற்குப் போனார். அந்தப் பட்டணத்தில் குரு வம்சத்திய அரசர்களால் கட்டுவிக்கப்பட்ட தேவாலயம் முதலியவைகள் அவர்களுடைய கீர்த்தியைக் காண்பிக்கின்றன. அவ்விடத்தில் திருதராஷ்டிரரையும், பீஷ்மரையும், விதுரரையும், குந்தியையும் பாஹ்லீகரையும், அவருடைய புத்திரராகிய ஸோமதத்தரையும், துரோணரையும், கிருபரையும், கர்ணனையும், துரியோதனனையும், அசுவத்தாமாவையும்,பாண்டவர்களையும், மற்ற மித்திரர்களையும் பார்த்தார். இப்படி அவரவர்களுக்குத் தக்கபடி அக்ரூரர் பந்துக்களை க்ஷேமம் விசாரித்தார். அவர்களும் இவரைக் கண்டவுடன் க்ஷேமம் விசாரித்துத் தங்கள் பந்துக்களுடைய க்ஷேமத்தையும் கேட்டார்கள். பின்பு அக்ரூரர் கெட்ட புத்திருள்ளவரும், அற்ப புத்தியுள்ளவரும், துஷ்டர்களுடைய இஷ்டப்படி நடப்பவருமான அரசனுடைய நடையை நன்குத் தெரிந்துகொள்வதற்காக அவ்விடத்தில் சில

மாத காலம் வசித்தார். அப்பொழுது குந்தியும், விதுரரும் அக்ரூரரை நோக்கி, பாண்டவர்களுடைய பிரதாபம், அஸ்திர சாமர்த்தியம், சௌரியம் ஆகிய இவைகளைச் சகியாமல் துரியோதனன் முதலியவர்கள் பாண்டவர்களுக்கு விஷத்தைக் கொடுப்பது முதலிய கெடுதியைச் செய்தார்கள் என்ற சகல விஷயங்களையும் தெரிவித்தார்கள். மேலும், குந்தி இந்த விஷயத்தைத் தெரிவிப்பதற்கு முன்னமேயே சகோதரராகிய அக்ரூரரைக் கண்டவுடன் அவருடைய சமீபஞ் சென்று, பிறந்த வீட்டை நினைத்துக் கண்ணீரைப் பெருக்கி, "நம்முடைய தாய்தந்தையர்களும், சகோதரர்களும், அவர்களுடைய புத்திரர்களும், குலஸ்திரீகளும், தோழிகளும் எங்களைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறார்களா? சகோதரனுடைய புத்திரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் அத்தையின் புத்திரர்களான பாண்டவர்களை நினைக்கிறாரா? அவர் இவ்விடம் வந்து சத்துருக்களுடைய மத்தியில் செந்நாய்களிடத்தில் அகப்பட்ட பெண் மான்போல துக்கப்படும் என்னையும், பால்யத்தில் தந்தையை இழந்தவர்களான என் குழந்தைகளையும் சமாதானஞ் செய்வாரா? ஓ கிருஷ்ண! கிருஷ்ண! மகாயோகியே! சகல ஜகத் சுருபியே! ஜகத்தைக் காப்பாற்றுகிறவரே! கோவிந்த! உம்மைச் சரணமடைகிறேன். குழந்தைகளுடன் துக்கப்படும் என்னைக் காப்பாற்றும். மிருத்யு போன்ற சம்சாரத்திலிருந்து பயந்த ஜனங்களைக் காப்பாற்றுவது உம்முடைய பாதாரவிந்தத்தைத்தவிர வேறொன்றுமில்லை. அந்தப் பாதமானது மோட்சத்தைக் கொடுக்கக்கூடியது; தர்மசுருபியும், எங்கும் நிறைந்த வஸ்துவும், பரமாத்மாவும், அணிமா முதலிய ஐசுவரியமுள்ளவரும், ஞானசுருபியுமாகிய ஸ்ரீ கிருஷ்ணனாகிய உம்மை நமஸ்கரித்துச் சரணமடை

கிறேன்" என்று தன்னுடைய பந்துக்களையும் ஸ்ரீ கிருஷ்ணனையும் நினைத்துக்கொண்டு உம்முடைய பிரபிதாமஹியாகிய குந்தியானவள் அழுதாள் என்று பரீக்ஷித்தைப் பார்த்து சுகர் சொல்லிப் பின்னும் சொல்லலானார்.

15—25. அதனைக் கண்ணுற்ற அக்ரூரரும், மிகுந்த கீர்த்தியுள்ள விதுரரும், குந்தியுடன் சமமான சுகதுக்கமுள்ளவர்களாகையால் ஏற்கனவே குந்திதேவிக்குப் பின்னை பிறந்ததின் காரணங்களைச் சொல்லி, அவளைச் சமாதானஞ் செய்தார்கள். பின்பு அக்ரூரர் மதுரா நகரம் போக யத்தனித்துப் புத்திரனிடத்தில் பிரீதியுள்ளவரும் விஷம சுபாவமுள்ளவருமான அரசனிடம் வந்து பந்துக்களுடைய மத்தியில் ராமகிருஷ்ணர்கள் சொன்ன வார்த்தையைப் பின்வருமாறு சொல்லலானார்: "ஓ விசித்திர வீரியனுடைய புத்திரரே! குரு வம்சத்திய அரசர்களுடைய கீர்த்தியை விருத்தி செய்பவரே! உம்முடைய சகோதரனாகிய பாண்டுவுக்குப் பிறகு நீர் ராஜ்யத்தை அடைந்திருக்கிறீர். ஆனாலும் ஜனங்களை சுபாவத்தால் சந்தோஷிக்கச் செய்துகொண்டும், பூமியைத் தர்மமாகப் பரிபாலித்தும், பந்துக்களிடத்தில் சம புத்தியுடனுமிருந்தால்தான் க்ஷேமத்தையும் கீர்த்தியையும் அடைவீர். இதற்கு விரோதமாக நடந்தால் ஜனங்களால் நிந்திக்கப்பட்டு மிகுந்த துக்கத்தை யடைவீர். ஆனதால் பாண்டவர்களையும், துரியோதனன் முதலியவர்களையும் நீர் சமமாகப் பார்க்கவேண்டும். இவ்வுலகத்தில் ஒருவனும் தன்னுடைய பந்துக்களை விட்டுப் பிரியாமல் எப்பொழுதும் சேர்ந்து வசிக்கிறான் என்பதில்லை. அவரவர்களுடைய தேகமே அநித்யமாகையால் அதனையே விட்டுப் பிரிந்து விடுகிறார்கள். அப்படியிருக்க, களத்திரம், புத்திரன் முதலியவர்களை விட்டுப் பிரிவதில் என்ன சந்தேகம்? ஜீவன்

ஒருவனே ஜனிக்கிறான். ஒருவனாகவே புண்ணிய பாபங்களின் பலன்களை அனுபவிக்கிறான். அவனால் போஷிக்கக்கூடியவர்களென்று சொல்லப்படும் பந்துக்கள் அவனுடைய பணத்தைக் கொண்டுபோகிறார்கள். அதனை யறியாமல் மூடனாகிய புருஷன் அதர்ம மார்க்கமாகப் பணத்தைச் சம்பாதிக்கிறான். ஜல ஜந்துவாகிய மீன்களுக்கு ஜீவனமாகிய ஜலத்தை அதன் குழந்தைகள் அபகரிக்கவில்லையா? மேலும், புருஷன் எவர்களைத் தன்னைச் சார்ந்தவர்களென்ற புத்தியினால் காப்பாற்றுகிறானோ, அந்த மூடனாகிய புருஷனைப் பிராணன், பணம், புத்திரன் முதலியவர்கள் அவன் அனுபவிப்பதற்கு முந்தியே விட்டுவிடுகிறார்கள். பின்பு அந்தப் புருஷன் தன்னுடைய மனோரதம் நிறைவேறாமல் இவர்களால் விடப்பட்டு தனக்குரிய தர்மத்தை அனுஷ்டிக்காததனால் பாபியாகி நரகத்தை யடைகிறான். ஓ அரசனே! இந்த லோகமானது சொப்பனத்திற்கும், மாயைக்கும், மனோரதத்திற்கும் சமமானது. (உண்மையல்லவென்று தாத்பரியம்.) ஆனதால் மனத்தை யடக்கிக்கொண்டு சாந்தியடைந்து, எல்லாரிடத்திலும் சமமான புத்தியுள்ளவராக இருக்கவேண்டும்" என்று சொன்னார்.

26—29. அதனைக் கேட்ட திருதராஷ்டிரர், "ஓ அக்ரூரரே! உம்மால் சொல்லப்பட்ட இனிமையான வார்த்தையைக் கேட்டுப் போதுமென்ற திருப்தியை நான் அடையவில்லை. அமிருதத்தைப் புசித்தவன் போதுமென்று திருப்தி அடைவானா? ஆனாலும் புத்திரனிடத்திலிருந்த ஆசையுள்ள சஞ்சலமான இருதயத்தில் இந்த இனிமையான வார்த்தையானது மின்னல்போல ஸ்திரமாக இருக்கவில்லை. ஈசுவரனுடைய சங்கல்பத்தை எவனும் மாற்றமுடியும்? பூமியின் பாரத்தை நிவர்த்திப்பதற்

ளாக எவர் யது வம்சத்தில் அவதரித்திருக்கிறரோ, எவர் தம்முடைய மாயையால் இந்த ஜகத்தைப் படைத்து அதற்குள் பிரவேசித்தவர்போல அதனை நடத்துகிறரோ, எவருடைய மாயையின் மார்க்கம் அறியமுடியாததோ, எவருடைய விளையாட்டைப் பிரதானமாகக் கொண்ட ஸம்ஸார சக்கரத்தின் கதி தெரிந்துகொள்ள முடியாததோ, அந்தப் பரமேசுவரருக்கு நமஸ்காரம்" என்று சொன்னர்.

30-31. இப்படி அக்ரூரர், இராமகிருஷ்ணர்களால் எதற்காக அஸ்தினபுரத்திற்கு அனுப்பப்பட்டாரோ, அக்காரியமான அரசனுடைய எண்ணத்தைத் தெரிந்து கொண்டு, பந்துக்களிடம் விடைபெற்று மதுரா நகரஞ் சென்றர். அவ்விடத்தில் ராமகிருஷ்ணர்களிடஞ் சென்று பாண்டவர்களிடத்தில் திருதராஷ்டிரருடைய நடையையும் தெரிவித்தார்.

10-வது ஸ்கந்தத்தின் முன் பாகம் முற்றிற்று.

# பத்தாவது ஸ்கந்தத்தின் பின் பாகம்

---

## அத்தியாயம் 50

### ஸ்ரீ கிருஷ்ணன் பந்துக்களைத் துவாரகா நகரஞ் சேர்த்தது

1—18. கம்ஸன் மரணமடைந்தபின்பு அஸ்தி, பிராஸ்தி என்ற அவனுடைய இரண்டு பத்தினிகளும் பிறந்த வீட்டிற்குச் சென்று தங்களுடைய பிதாவும், மகத தேசத்து அரசனுமாகிய ஜராசந்தனிடம் தங்களுக்கு வைதவ்யம் நேர்ந்ததின் காரணத்தைத் (ஸ்ரீ கிருஷ்ணன் கம்ஸனைக் கொன்றானென்பதை) தெரிவித்தார்கள். அந்த அப்பிரியமான வார்த்தையைக் கேட்ட ஜராசந்தன், கம்ஸன் விஷயத்தில் துக்கத்தையும், கிருஷ்ணனிடத்தில் கோபத்தையும் அடைந்து, பூமியில் யாதவர்களில்லாமலிருக்கும்படி செய்யவேண்டுமென்று நினைத்து, அதற்காக மிகுந்த முயற்சி செய்தான். (அதாவது) இருபத்துமூன்று அக்ஷௌஹிணி சைன்னியத்துடன் யாதவர்களுடைய ராஜதானியாகிய மதுரா நகரத்தை முற்றுகை போட்டான். சமுத்திரம் கரைபுரண்டு வந்தாற்போல மதுரா நகரத்தை நான்கு புறங்களிலும் சைன்னியங்கள் சுற்றிக்கொண்டன. யாதவர்கள் பயந்தார்கள். அப்பொழுது அதனைக்கண்ணுற்ற, சில காரணத்திற்காக மனித வடிவங் கொண்ட ஸ்ரீ கிருஷ்ணன் தேசத்திற்கும் காலத்திற்கும் தக்கபடி தமக்குள் தம் அவதாரத்தின் பிரயோசனத்தைப்பற்றிப் பின்வருமாறு யோசிக்கலானார்: எப்படியெனில், "பூமிக்குச் சுமையாக இருப்பதும், ஜராசந்தனால் கொண்டுவரப்பட்டதும், காலாட்படை, குதிரை, ரதம், யானை இவைகளடங்கியதும், அக்ஷௌஹிணிக்

க்குள்ளதுமான இந்த சைன்னியத்தை சகல அரசர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கொல்லுகிறேன். ஜராசந்தன் திரும்பவும் சைன்னியங்களைச் சேர்த்துக்கொண்டு வருவானாதால் அவனை மாத்திரம் இப்பொழுது கொல்லக்கூடாது. பூமியின் சுமையை நிவர்த்திப்பதற்காகவும், ஸாதுக்களைக் காப்பாற்றுவதற்காகவும், துஷ்டர்களைச் சிட்சிப்பதற்காகவுமே நாம் பூமியில் அவதரித்தோம். எப்பொழுது அதர்மம் விருத்தியாகுமோ, அப்பொழுது தர்மத்தை விருத்தி செய்வதற்காகத் தேகத்தை அங்கீகரிக்கிறேன்" என்று பகவான் நினைத்துக்கொண்டிருக்கையில் சூரியன் போன்ற மிக்க தேஜஸ் உள்ள இரண்டு ரதங்கள் ஆகாயத்திலிருந்து பூமியில் இறங்கின. அவைகளில் யுத்தத்திற்கு வேண்டிய ஸாமான்களும் பூர்ணமாக இருந்தன. மேலும் அவைகள் சாரதியுள்ளவைகளாகவும் இருந்தன. அவைகளில் திவ்யமான ஆயுதங்களும் காணப்பட்டன. தெய்வச்செயலாக வந்த அந்த ரதங்களைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனை நோக்கி, "உம்மையே நாதனைக் கொண்ட யாதவர்களுக்கு வந்திருக்கும் ஆபத்தைப் பார்த்தீரா? உம்முடைய மனத்திற்குப் பிடித்ததான ரதமும் ஆயுதங்களும் இதோ வந்திருக்கின்றன. இந்த ரதத்திலேறிக்கொண்டு சத்துருக்களைக் கொல்லும்; பந்துக்களைக் காப்பாற்றும்; ஸாதுகளுக்கு க்ஷேமத்தைச் செய்வதற்காகவே நாம் அவதரித்தோமல்லவா? இருபத்துமூன்று அக்ஷௌஹிணி சைன்னியங்கள் ஒரே இடத்தில் சேர்ந்திருக்கின்றன. பூமிக்குச் சுமையாக இருக்கும் இதனைக் கொல்லும்" என்று சொல்லி இருவர்களும் தனியே ரதத்திலேறிக்கொண்டு சொற்ப சைன்னியத்துடனும், ஆயுதங்களுடன் பட்டணத்திலிருந்து வெளியில் வந்தார்கள்.

தாருகனைச் சாரதியாகக் கொண்ட ஸ்ரீ கிருஷ்ணன் சங்கத்தை ஊதினார். அதனைக் கேட்டு சத்துருவின் சைன்னியங்கள் பயந்து நடுங்கின. அப்பொழுது ராம கிருஷ்ணர்களைப் பார்த்து ஜராசந்தன், "ஓ கிருஷ்ண! புருஷாதம! மந்தபுத்தியுள்ளவனே! பந்துக்களைக் கொன்றவனே! எப்பொழுதும் நீ ஒளிந்துகொண்டே இருப்பதால் பாலனாகிய உன்னுடன் யுத்தஞ் செய்ய வெட்கப் படுகிறேன் (எல்லாப் புருஷர்களும் உம்மைவிடத் தாழ்ந்தவர்கள். நீர் அவித்தையைப் போக்கடிப்பவர்; எல்லாவற்றிற்கும் உள்ளிருப்பவர் என்றும் அர்த்தம்). உனக்கு என்னுடன் யுத்தஞ் செய்ய இஷ்டமிருந்தால் சண்டை செய்யலாம்; என்னுடைய பாணங்களால் அடிக்கப்பட்டு சொர்க்கத்திற்குப் போகலாம்; அல்லது என்னையாவது கொல்லலாம்" என்றான்.

19—33. அதனைக் கேட்ட பகவான் ஜராசந்தனை நோக்கி, "ஓ ராஜன்! சூரர்கள் வாக்கினால் பிதற்றமாட்டார்கள். பராக்கிரமத்தைக் காண்பிப்பார்கள். நீ சாகுந்தருணத்திலிருப்பவனாகையால் உன்னுடைய வார்த்தையை எடுத்துக்கொள்ளமாட்டோம்" என்றார். அதனைக் கேட்ட ஜரையின் புத்திரன், வாயுவானது மேகங்களாலும், தூளிகளாலும் சூரியனையும், அக்னியையும் மறைத்தாற் போல சைன்னியம், வாகனம், துவஜம், குதிரை, சாரதி ஆகிய இவைகளுடன் ராமகிருஷ்ணர்களை எதிர்த்தான். அப்பொழுது மதுராநகரத்தில் மேல்மாடியில் ஏறி யுத்தத்தைப் பார்க்கும் பட்டணத்து ஸ்திரீகள் கருட துவஜமுள்ள ஸ்ரீகிருஷ்ணனுடைய ரதத்தையும், பனைமர துவஜமுள்ள பலராமனுடைய ரதத்தையும் காணாமல் துக்கத்தை அடைந்து மோகித்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனுடைய சைன்னியத்தில் ஜராசந்தனாகிய மேகம்

பாணமாகிய மழையை வர்ஷிக்க, அதனால் ஸைன்னியம் களைப்படைந்தது. அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் தேவர்களாலும், அசுரர்களாலும் பூஜிக்கப்பட்டிருக்கும் சார்ங்க மென்ற மேலான வில்லையெடுத்தார். அம்பராயி லிருந்து பாணங்களை யெடுத்து, வில்லில் தொடுத்து, கூர்மையான பாணங்களைப் பிரயோகித்து ரதங்கள், யானைகள், குதிரைகள், காலாட் படைகள் ஆகிய இவை களை வதஞ்செய்துகொண்டு, கொள்ளிக்கட்டை சுழல்வது போலச் சுற்றினார். யானைகள் தலை உடைபட்டு விழுந்தன; குதிரைகள் கழுத்தில் வெட்டப்பட்டன. ரதத்தின் சாரதி யும், குதிரைகளும், துவஜங்களும் அடிக்கப்பட்டன. காலாட்கள் கை, கால், தொடை, கழுத்து ஆகிய இவை கள் வெட்டுண்டு விழுந்தார்கள். இப்படி யுத்தத்தில் அடிக் கப்பட்ட யானைகள், குதிரைகள், காலாட்கள் ஆகிய இவை களுடைய சரீரத்திலிருந்து பெருகிய ரத்தமானது பல நதிகளாக ஓடிற்று. அதில் கைகள் ஸர்ப்பங்களாகவும், தலைகள் ஆமைகளாகவும், யானையின் சரீரம் முதலைகளாக வும் தோன்றின. மேலும், அந்த நதிகளில் கைகளும் தொடைகளும் மீன்களாகவும், தலைமயிர்கள் பாசிகளாக வும், விற்கள் அலைகளாகவும், ஆயுதங்கள் குல்மங்களாக வும், சக்கரங்கள் சுழிகளாகவும், மேலான ரத்னங்கள், ஆபரணங்கள் ஆகிய இவைகள் மணல்களாகவும் தோன் றின. அவை பயந்தவர்களுக்குப் பயங்கரங்களாகவும், தைரியசாலிகளுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடிய வைகளாகவு மிருந்தன. பின்னும், மிக்க தேஜஸ் உள்ளவ ரான பலராமன் முஸலத்தை யெடுத்துக்கொண்டு, சத்துரு ஸைன்னியத்தைக் கொன்றார். இப்படி வஸுதேவ புத்திரர்க ளான ராமகிருஷ்ணர்களால் ஜராஸந்தனுடைய ஸைன்னி யம் கொல்லப்பட்டது. இப்படி ஜகதீசர்களான ராம

கிருஷ்ணர்களுடைய சேஷ்டை மேலானதாக இருந்தது. எந்தப் பகவான் சகல ஜகத்தையும் படைத்துக் காப் பாற்றி ஸம்ஹரிக்கிருரோ, அந்தப் பகவான் சத்துரு சைன்னியத்தை வதஞ்செய்தாரென்பது ஆச்சரியமல்ல. ஆனாலும், மனிதர்களுடைய வழக்கப்படி வர்ணித்தோம். இப்படி சத்துரு சைன்னியத்தைக் கொன்று, ஜராசந்த னுடைய ரதம் முதலியவைகளை நாசஞ்செய்து பலராமன் ஜராசந்தனைப் பிடித்துக்கொண்டார். அது சிங்கமானது அற்ப மிருகத்தைப் பிடித்துக்கொண்டாற்போலிருந்தது. பின்பு வருண பாசத்தாலும், மனுஷ்ய பாசத்தாலும் ஜராசந்தனைப் பலராமன் கட்ட யத்தனிக்கும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அவனைக்கொண்டு சில காரியஞ் செய்து கொள்ள விரும்பி, அவனைக் கட்டவேண்டாமென்று பல ராமனைத் தடுத்தார். மகா வீரனுகிய ஜராசந்தன் ராம கிருஷ்ணர்களால் விடப்பட்டு, வெட்கமடைந்து, தவஞ் செய்வதற்காகச் சென்றான். வழியில் அவனைக் கண்ட அரசர்கள், "உமக்கு யாதவர்களிடத்தில் அபஜயமுண்டான து உம்முடைய கர்ம வசமேயாம். அதனால் உமக்கு என்ன அவமானம்? ஏன் தவத்திற்குப் போகவேண்டும்." என்று சாஸ்திர யுக்திகளையும், நீதி வாக்கியங்களையும் சொல்லிச் சமாதானஞ் செய்தார்கள். அதனைக் கேட்ட ஜராசந்தன் சகல சைன்னியங்களும் நாசமடைந்ததாலும், தான் அபஜயத்தை அடைந்ததாலும் மிக்க மன வருத்தத் துடன் மகத தேசஞ் சென்றான்.

34—67. பகவானுடைய சைன்னியத்தில் ஒருவருக் கும் கொஞ்சமேனும் காயமில்லை. அப்படிப்பட்ட சைன்னியத்துடன் சத்துருவை ஜயித்து ஸ்ரீ கிருஷ்ணன் மதுரா நகரத்திற்குட் பிரவேசித்தார். தேவர்கள் புஷ்பங் களை வர்ஷித்தார்கள். பட்டணத்து ஜனங்கள் சந்தோஷ

மாக எதிர்கொண்டு அழைத்து உபசரித்தார்கள். சூதர்களும், மாகதர்களும், வந்திகளும் துதித்தார்கள். சங்கம், துந்துபி, பேரி, வீணை, புல்லாங்குழல், மிருதங்கம், தாரி முதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன. அந்தப் பட்டணத்திலுள்ள வீதிகளில் ஜலந் தெளிக்கப்பட்டிருந்தது. ...ரங்கள் சந்தோஷமுள்ளவர்களாக இருந்தார்கள்; தோரணங்கள், துவஜங்கள் ஆகிய இவைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. வேத கோஷம் நடந்தேறியது. அப்பொழுது பட்டணத்து ஸ்திரீகள் தயிர், அட்சதை, புஷ்பம் ஆகிய இவைகளை இறைத்தார்கள். அன்புள்ள பார்வையால் கிருஷ்ணனைப் பார்த்தார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் யுத்தகளத்திலிருந்து கொண்டுவரப்பட்ட மேலான ஆபரணம் முதலியவைகளை அரசனாகிய உக்கிரசேனனிடம் சமர்ப்பித்தார். பின்பும் ஜராசந்தன் அக்ஷௌஹிணிக் கணக்கான சைன்னியங்களைச் சேர்த்துக்கொண்டு யாதவர்களிடம் யுத்தத்திற்கு வந்தான். அதனையும் பகவான் நாசஞ்செய்து அவனை ஜயித்தார். இப்படி ஜராசந்தன் பதினேழு தடவை ஸ்ரீ கிருஷ்ணனிடம் யுத்தஞ்செய்து அபஜயத்தை அடைந்தான். பதினெட்டாவது தடவையும் ஜராசந்தன் சைன்னியங்களைச் சேர்த்துக்கொண்டு வருவதற்கு முன்னமேயே நாரதரால் தூண்டப்பட்ட யவனன் மூன்று கோடி மிலேச்ச சைன்னியங்களுடன் மதுராநகரம் வந்து முற்றுகைபோட்டான். பூமியில் அவனுக்குச் சமமான பராக்கிரமசாலி வேறொருவருமில்லை. அவன் விருஷ்ணிகள் தனக்குச் சமமானவர்களென்று நாரத முகமாகத் தெரிந்துகொண்டு யுத்தத்திற்காக மதுரா நகரம் வந்திருப்பதைப் பார்த்த ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன், "என்ன கஷ்டம்; யாதவர்களுக்கு வருகிற ஆபத்தைப் பாரும்; யவனன் யுத்தத்திற்கு வந்திருக்கிறான்; இன்றைய

தினமாவது, நாளைய தினமாவது, நாளை யன்றைக்காவது ஜராசந்தனும் வருவான். இரண்டு புறத்திலும் மிகுந்த கஷ்டம் நேர்ந்திருக்கிறது. நாம் யவனனுடன் யுத்தஞ் செய்துகொண் டிருக்கையில் ஜராசந்தன் வந்தால் நம் முடைய பந்துக்களைக் கொன்றுவிடுவான்; அல்லது தன் னுடைய பட்டணத்திற்குக் கொண்டுபோவான். மனிதர் கள் போகமுடியாத ஒரு பட்டணத்தை யுண்டுபண்ணி, அதில் பந்துக்களை வைத்துவிட்டு யவனனைக் கொல்வோம்" என்று யோசித்துப் பன்னிரண்டு யோசனை தூரம் அகல முள்ள ஒரு பட்டணத்தைச் சமுத்திரத்தின் நடுவில் உண்டு பண்ணினார். அந்தப்பட்டணத்தில் விசுவகர்மாவின் வேலைத் திறமை முழுமையும் காட்டப்பட்டிருந்தது. ராஜ வீதி களும், அதன் முன்னிலையில் மற்ற வீதிகளும், இரு பக்கங் களிலும் நாற்சந்தி மண்டபங்களும், நடுவில் கிருகங்கள், அதன் நடுவிற் சுவர்ணமயமான வீடுகளும், அதன்மீது ஸ்படிகங்களால் செய்யப்பட்ட மாடிகளும், அதன் சிக ரத்தில் தங்கக் கலசங்களுமாக வீதிகளும் வீடுகளும் ஏற் படுத்தப்பட்டிருந்தன. அவ்விடத்திலிருக்கும் தோட்டங் களில் தேவ விருட்சங்களும் கொடிகளும் பிரகாசித்தன. கோபுரங்களும், மாடியின் சிகரங்களும் ஆகாயத்தைத் தொடும்படி உயரமாக இருந்தன. மேலும் குதிரை லாயம், அன்னசாலை முதலியவை வெள்ளி, பித்தளை, இரும்பு முதலியவைகளால் செய்யப்பட்டிருந்தன. அவை களுக்கு சுவர்ண கலசங்கள் வைக்கப்பட்டிருந்தன. பின் னும் சில கிருகங்களுக்குப் பதுமராகம் முதலிய ரத்தினங் களால் சிகரம் வைக்கப்பட்டிருந்தது; மரகத ரத்தினங் களால் தளவரிசை செய்யப்பட்டிருந்தது. பின்னும் தேவாலயங்கள் பிரகாசித்தன. நான்கு வர்ணத்திய ஜனங் களும் அவ்விடத்தில் வசித்தார்கள். ராஜகிருகங்கள் கட்

டப்பட்டிருந்தன. அந்தப் பட்டணத்திற்கு ஸ்ரீ கிருஷ்ணனுக்காக இந்திரன் சுதர்மை என்ற சபையையும், பாரிஜாதமென்ற கல்பவிருட்சத்தையும் அனுப்பினார். அந்தப் பட்டணத்தில் வசிக்கும் மனிதர்கள் தேவர்களுடைய தன்மையை (பசி, தாகம் முதலியவை இல்லாமலிருப்பது) அடைகிறார்கள். அப்பொழுது வருணன் கருமையான நிறமுள்ள ஒற்றைக் காதுள்ளவைகளும், வெண்மை நிறமுள்ளவைகளுமான ஆயிரம் குதிரைகளைப் பகவானுக்கு அனுப்பினார். குபேரன் எட்டு நிதிகளை யனுப்பினார். மற்ற லோகபாலகர்களும் தங்களுக்குச் சொந்தமாகிய தனத்தை அனுப்பினார்கள். இப்படி லோகபாலகர்கள் தங்கள் தங்கள் அதிகாரத்திற்காக எதைப் பகவான் முன்பு கொடுத்தாரோ, அதை எல்லாம் பகவான் பூமிக்குச் சென்றிருக்கும்பொழுது பூமிக்கு அனுப்பினார்கள். அப்படிப்பட்ட பட்டணத்தில் ஸ்ரீகிருஷ்ணன் தம்முடைய யோக மகிமையால் சகல பந்துக்களையும் மதுரா நகரத்திலிருந்து கொண்டுவந்து வைத்து, பலராமனுடன் மதுரா நகரம் வந்து ஆயுதமில்லாமல் வெளியில் வந்தார்.

## அத்தியாயம் 51

## பகவான் முசுகுந்தரை அநுக்ரஹித்தது

1 - 12. மதுரா நகரத்திலிருந்து வெளியில் வரும் ஸ்ரீ கிருஷ்ணனை யவனன் உதயமாகும் சந்திரனைப்போலப் பார்த்தான். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் மிக்க அழகுள்ளவரும், கருத்த திருமேனியுள்ளவரும், பீதாம்பரத்தைத் தரித்தவரும், ஸ்ரீ வத்ஸத்தால் பிரகாசிக்கும் மார்புள்ளவரும், கௌஸ்துப ஹாரமுள்ளவரும், பருத்து நீண்ட

நான்கு கைகளுள்ளவரும், தாமரைமலர் போல் சிவந்த கண்களுள்ளவரும், எப்போதும் சிரித்த முகமுள்ளவரும், அழகான கன்னங்களுள்ளவரும், மகர குண்டலங்களால் பிரகாசிப்பவருமாக இருந்தார். அவரைக் கண்ட யவனன் ஸ்ரீவத்ஸம், நான்கு கைகள், தாமரைமலர் போன்ற கண், வனமாலை ஆகிய நாரதர் சொன்ன லட்சணங்களைக் கொண்டு இவர் கிருஷ்ணனென்று தெரிந்துகொண்டான். பின்னுமவன், "இவன் ஆயுதமில்லாமல் காலால் நடந்து செல்வதால் நானும் ஆயுதமில்லாமல் இவனுடன் யுத்தஞ் செய்வேன்" என்று நிச்சயஞ்செய்து திரும்பிப் பாராமல் ஓடுகின்ற கிருஷ்ணன்பின் சென்றான். அவர் யோகிகளால் அடைய முடியாதவரானாலும், அடிக்கடி அவனுடைய கையில் அகப்பட்டவர்போல அபிநயஞ்செய்து வெகு தூரம் அவனை அழைத்துச் சென்றார். அப்பொழுது யவனன், "யது குலத்தில் பிறந்த நீ சத்ருவைக் கண்டு பயந்து ஓடுவது தகுதியல்ல" என்று வைது கொண்டு அவர்பின் சென்றும் அவரை அவனால் பிடிக்க முடியவில்லை. ஆனால் அவனுக்குப் பாபங்கள் நிவர்த்தியாயின. இப்படி அவனால் நிந்திக்கப்பட்டுப் பகவான் ஒரு மலையின் குகையில் நுழைந்தார். அந்த யவனனும் அந்தக் குகைக்குள் சென்றான். ஆனால் அவ்விடத்தில் கிருஷ்ணனைக் காணவில்லை. வேறொரு புருஷன் படுத்திருக்கக் கண்டான். அப்பொழுது யவனன், "என்னை இவன் வெகு தூரம் ஏமாற்றி அழைத்து வந்து நல்லவன் போலத் தூங்குகிறான்" என்று நினைத்துத் தூங்குகிறவனைக் கிருஷ்ணனென்று எண்ணி, காலால் உதைத்தான். அங்கு வெகு காலமாகத் தூங்கிக்கொண்டிருந்த அவன் எழுந்திருந்து, மெதுவாகக் கண்களைத் திறந்து நான்கு புறத்திலும் பார்க்கும்பொழுது பக்கத்திலிருக்கும் யவனன்

னைக் கண்டான். அப்பொழுது அவனுடைய கோபப் பார்வையால் யவனனுடைய சரீரத்தில் அக்னி யுண்டாகி யவனனை யெரித்துவிட்டதென்று சுகர் பரீக்ஷித்தை நோக்கிச் சொன்னார்.

13. அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பிராமண! இந்தக் குகையில் படுத் திருந்த புருஷன் யார்? அவன் யாருடைய பிள்ளை? எவ்வளவு பராக்கிரமமுள்ளவன்? எதற்காக அந்தக் குகை யில் படுத்துத் தூங்கினான்? அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

14—20. அதனைக் கேட்ட சுகர், அரசனை நோக்கி, "அந்தப் புருஷன் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த அரசன்; மாந்தாதாவின் புத்திரர்; முசுகுந்தரென்று பெயர் பெற்றவர்; பிராம்மண பக்தி யுள்ளவர்; சத்திய விரத முள்ளவர்; முன்பு ஒருகால் இந்திரன் முதலிய தேவர்கள் அசுரர்களிடம் பயந்து தங்களைக் காப்பாற்றவேண்டு மென்று முசுகுந்தரைக் கேட்டுக்கொண்டார்கள். அவர் அதனை ஒப்புக்கொண்டு வெகுகாலம் தேவசேனாதிபதி யாக இருந்து தேவர்களைக் காப்பாற்றி வந்தார். பின்பு தேவர்களுக்கு சுப்பிரமணியர் சேனாதிபதியாக வந்த பொழுது தேவர்கள் முசுகுந்தனை நோக்கி, "ஓ மகாராஜ! இத்தனை காலம் எங்களைக் காப்பாற்றியதால் மிகவும் களைப்படைந்திருக்கிறீர். மேலும், இதற்காக பூலோகத் தையும், ராஜ்ஜியத்தையும் விட்டு இவ்விடம் வந்தீர். உம் முடைய புத்திரர்கள், ஸ்திரீகள், மந்திரிகள், பந்துக்கள் முதலியவர்கள் இப்பொழுது இல்லை. பலசாலியா[illegible] [illegible]ரூபியாகிய பகவான் பசுக்களை இடையன் மேய்ப் பதுபோலப் பிரஜைகளை நடத்திக்கொண்டு விளையாடு

கிறார். ஆனதால் மோக்ஷத்தைத் தவிர வேறு வரத்தைக் கேளும். அந்த மோக்ஷத்தைக் கொடுப்பதற்கு விஷ்ணு ஒருவர்தான் சாமர்த்தியமுள்ளவர்" என்று சொன்னார்கள்.

21. அப்பொழுது தேவர்களை நோக்கி முசுகுந்தர், "நான் மிகுந்த களைப்புள்ளவனாக இருப்பதால் தூங்குவதற்கு விரும்புகிறேன்" என்றார். அதனைக் கேட்ட தேவர்கள், "இந்த மலையின் குகையில் தூங்கும். யார் உம்மை எழுப்புகிறானோ அவன் சாம்பலாக ஆகட்டும்" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட முசுகுந்தர் தேவர்களை நமஸ்கரித்து, அந்த மலையின் குகையில் தேவர்களுடைய அநுக்கிரகத்தால் தூங்கி

22—34 அப்படிப்பட்ட யவனன் சாம்பலாக ஆனவுடன், புத்திசாலியாகிய முசுகுந்தருக்கு ஸ்ரீ கிருஷ்ணன் தரிசனங்கொடுத்தார். அப்பொழுது முசுகுந்தர் மேகம் போல கருத்த திருமேனியுள்ளவரும், பீதாம்பரத்தைத் தரித்தவரும், ஸ்ரீவத்ஸத்துடன் கூடிய மார்புள்ளவரும், கௌஸ்துபத்தால் பிரகாசிப்பவரும், நான்கு கைகளுள்ளவரும், வைஜயந்தியென்னும் மாலையால் பிரகாசிப்பவரும், அழகுபொருந்தியதும், மகரகுண்டலங்களால் விளங்குவதும், பிரசன்னமுமான முகமுள்ளவரும், அன்பு பொருந்திய புன்சிரிப்பு உள்ளவரும், மூவுலகத்திலும் அழகான சரீரமுள்ளவரும், மத்த சிங்கம்போன்ற பராக்கிரமமுள்ளவருமான ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தரிசித்து, அவருடைய தேஜஸ்ஸால் அடக்கப்பட்டு, அவருடைய தேஜஸ்ஸைப்பற்றிச் சந்தேகித்து மெள்ள மெள்ளப் பேசலானார். எப்படியெனில், "இந்தக் காட்டில் மலையின் குகையில் வந்திருக்கும் நீர் யார்? இந்த வனத்தில் முட்

ள் அதிகமாக இருக்கின்றனவே! அப்படிப்பட்ட வனத்தில் தாமரை இலைபோல மிருதுவாகவிருக்கும் கால்களால் சஞ்சரிக்கிறீரே; நீர் தேஜசுள்ளவர்களுடைய தேஜஸ்ஸா? நீர் சூரியனா? அக்கினியா? சந்திரனா? மகேந்திரனா? அல்லது மற்ற லோகபாலகர்களில் ஒருவரா? தீபமானது காந்தியால் இருளைப் போக்குவதுபோல குகையிலிருக்கும் இருளானது உம்முடைய காந்தியால் நிவர்த்திக்கப்படுவதால் பிரம்மா, விஷ்ணு, மகேசுவரர்களான மூன்று தேவர்களுக்குள் ஒருவராக இருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். உண்மையைத் தெரிந்துகொள்ள நான் விரும்புவதால் உம்முடைய பிறப்பு, குலம் இவைகளைச் சொல்லக் கூடுமானால் சொல்லும். நான் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவன்; மாந்தாதாவின் புத்திரன்; முசுகுந்தனென்று எனக்குப் பெயர்; வெகு நாளாக நான் விழித்துக்கொண்டிருந்தமையால் களைப்படைந்து தூக்கத்தால் மயங்கி இந்தக் குகையில் படுத்துத் தூங்கினேன். இப்பொழுது யாரோ ஒருவன் என்னை யெழுப்பினான். அவனும் அவனுடைய பாபத்தினால் சாம்பலாக்கப்பட்டான். சத்துருக்களைக் கொல்பவரே! பின்பு அழகிய நீர் பார்க்கப்பட்டீர். நீர் அதிக தேஜஸ் உள்ளவராக இருப்பதால் உம்மை நன்றாகப் பார்க்க முடியவில்லை. ஆனதால் நீர் எல்லோராலும் சிலாகிக்கக்கூடியவர்" என்று சொன்னார்.

35—42. அதனைக் கேட்ட சகல பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக வசிக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சிரித்துக்கொண்டு முசுகுந்தரை நோக்கி, "என்னுடைய பிறப்பும், பெயர்களும், சரிதங்களும் பல இருக்கின்றன. அவைகளைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. பூமியிலுள்ள தூளிகளைப் பல ஜன்மங்களெடுத்து எண்ணினாலும் என்னுடைய குணங்களையாவது சரிதங்களை

யாவது, பெயர்களையாவது, பிறப்புக்களையாவது இவ்வளவென்று எண்ணமுடியாது. மகரிஷிகள்கூட மேற்சொன்னவைகளை முழுமையும் தெரிந்துகொள்ள அசக்தர்களாக இருக்கிறார்கள். ஆனாலும் இப்பொழுதிய என்னுடைய பெயர் முதலியவைகளைச் சொல்லுகிறேன், கேள். முன்னொருகால் பிரம்ம தேவர் பூமிக்குச் சுமையாக இருக்கும் துஷ்டர்களைக் கொல்லவேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொண்டதனால் நான் அதனை யொப்புக்கொண்டு, யதுவின் வம்சத்தில் வசுதேவருக்குப் புத்திரனாக அவதரித்தேன். அதனால் என்னை வாசுதேவனென்று சொல்லுவார்கள். காலநேமியாகிய கம்ஸன் கொல்லப்பட்டான். பிரலம்பன் முதலிய துஷ்டர்களும் கொல்லப்பட்டார்கள். இந்த யவனனும் உம்முடைய உக்கிரமான கண்ணினால் எரிக்கப்பட்டான். நீர் முன் ஜன்மத்தில் என்னை ஆராதித்திருப்பதால் பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவனாகிய நான் உம்மை அநுக்கிரகிப்பதற்காக இந்தக் குகைக்கு வந்தேன். உமக்கு வேண்டிய வரத்தைக் கொடுக்கிறேன்; கேட்கலாம். என்னைச் சரணமடைந்தவன் பின்பு துக்கப்படமாட்டான்' என்று சொன்னார்.

43—57. அதனைக் கேட்ட முசுகுந்தர் கிருஷ்ணனை ஸ்ரீமந்நாராயணரென்று தெரிந்துகொண்டு, அவரை நமஸ்கரித்து மிக்க சந்தோஷத்துடன் கர்க்கருடைய வார்த்தையை (இருபத்தெட்டாவது சதுர் யுகத்தில் பகவான் பூமியில் அவதரிக்கப்போகிறாரென்று கர்க்கர் சொல்லியிருப்பதை) நினைத்துக்கொண்டு 'ஓ நாதா! ஆண் பெண் என்ற இருவகையான மக்களும் ஸத்யமாகிய உம்மை அறியாமல் உம்முடைய மாயையால் மோஹித்து, துக்கத்திற்குக் …மாகிய ஸம்ஸாரத்திலேயே பிரவர்த்திக்கிறார்கள்

மேலும், சுகத்தை அடையவேண்டுமென்ற விருப்பமுள்ளவர்களாக இருக்கிறார்களேயொழிய அதற்குத் தகுந்த முயற்சி செய்கிறதில்லை. இவ்வுலகத்தில் மனித ஜன்மத்தை அடைவது அரிது. அதிலும் ஊமை, குருடு, செவிடு, நொண்டி முதலியவையில்லாமல் சகல அங்கங்களுள்ளவனாக இருப்பது மிக்க அரிது. அப்படிப்பட்ட ஜன்மத்தை ஜனங்கள் அடைந்தும் ஸம்ஸாரமாகிய பாழுங்கிணற்றில் பசுபோல விழுகிறார்களேயொழிய உம்முடைய பாதத்தை சேவிக்கிறதில்லை. விஷயங்களிலேயே ஆசைப்படுகிறார்கள். ஒருவராலும் ஜயிக்கப்படாதவரே! நான் இவ்வளவு காலம் என்னை மனிதனென்றும், அரசனென்றும் நினைத்து ராஜ்ய சம்பத்தால் கர்வமடைந்து புத்திரன், களத்திரம், பொக்கிஷம், பூமி ஆகிய இவைகளில் ஆசையுள்ளவனாகவிருந்து வீணாகக் காலத்தைக் கழித்தேன். குடத்திற்கும், சுவற்றிற்கும் ஒப்பான இந்தச் சரீரத்தில் மிகுந்த அபிமானத்துடன் என்னை அரசனென்று நினைத்துக்கொண்டு ரதம், யானை, குதிரை, காலாட்படை ஆகிய இவைகளால் சூழப்பட்டு, உம்மைச் சேவிக்காமலிருந்தேன் (தியானிக்கவில்லை). துஷ்டர்களைச் சிக்ஷிப்பவராக நீர் இருக்கிறீர் என்று நினைக்காமல் தேகம் முதலியவைகளில் அபிமானமுள்ளவனாக இருப்பவனும், இப்படிச் செய்ய வேண்டுமென்ற மனோரத பரம்பரையுள்ளவனும், இஷ்டம் கிடைத்தாலும் கிடைக்காவிடினும் விஷயங்களில் ஆசைப்படுகிறவனுமாகிய மூடனை நீர் சிக்ஷிக்கிறீர். அநுபவிஸில் கடைவாய்களை நக்கிக்கொண்டிருக்கும் ஸர்ப்பமானது எலியை விழுங்குகிறாற்போலிருக்கிறது. இந்தச் சரீரமானது சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட ரதங்களிலும், யானைகளின்மீதும் ஏறிச் சஞ்சரித்து அரசன் என்ற பெயரை அடைந்திருக்கிறது. அந்தச் சரீரமே சில காலத்

சென்றபின் (மரணமடைந்தபின்) அக்னியினால் தஹிக்கப் பட்டால் சாம்பலென்றும், இல்லாவிட்டால் புழுவென் றும், நாய் முதலியவைகளால் புசிக்கப்பட்டால் அமேத் திய மென்றும் பெயரை அடைகிறது. (மேலுமிவன் ஜீவித்திருக்கும்பொழுது சுகத்தை அடைகிறதில்லை.) அரசனானாலும், எல்லாத் திக்குகளை ஜயித்துத் தனக்குச் சமமான அரசர்களால் நமஸ்கரிக்கப்பட்டவனானாலும் ஸ்திரீ விஷயத்தில் ஆசைப்பட்டு ஸ்திரீகளுக்குக் கிரீடா மிருகம்போல் (விளையாடுவதற்காக வளர்க்கப்பட்ட மான் முதலியவை) ஸ்வாதீனமாயிருக்கிறான். மேலும், விஷயத் தில் ஆசைகொண்டவனுக்குச் சுகமேயில்லை. ஏனென்றால், நல்ல போகங்களை யனுபவிக்க விரும்பித் தவஞ்செய்ய ஆரம்பித்துப் போகங்களை யொழித்து அதற்குத் தகுந்த நல்ல கர்மங்களை யனுஷ்டிக்கிறான். அதன் பயன் கிடைத்தபின்னும் திரும்பவும் மகாராஜனாக ஆகவேண்டு மென்று தவஞ்செய்கிறான். அது கிடைத்தபின் மகேந் திரனாகவேண்டுமென்று விரும்புகிறான். ஆனதால் அதிக ஆசையுள்ளவனுக்குச் சுகமேயில்லை. ஸம்ஸார சக்கரத்தில் சுழன்றுகொண்டிருக்கும் ஜனத்திற்கு ஸம்ஸார பந்தம் நிவர்த்தியாகவேண்டுமானால் உம்முடைய அநுக்ரகத் தால் ஸாதுக்களுடைய சேர்க்கை யுண்டாகும். ஸாதுக்க ளுக்குக் கதியும், காரிய காரணங்களுக்கு நியந்தாவுமான உம்மிடத்தில் பக்தியுண்டாகும். (அதனால் முக்தியடை வானென்று தாத்பர்யம்.) ஓ ஈச! ராஜ்யத்தை விட்டு வில கும்படி என்னை நீர் செய்தது எனக்கு அநுக்ரகமே யாம். ஸாதுக்களான அரசர்கள் இம்மாதிரியான நிவிருத் தியை அடைவதற்காக வனஞ் செல்லுகிறார்கள். உம் முடைய பாதத்தை ஸேவிப்பதைக் காட்டிலும் வேறொன் றையும் நான் விரும்பவில்லை. இது ஏழைகளால் பிரார்த்

திக்கக்கூடியது; இதனைக்காட்டிலும் மேலானதொன்று மில்லை. மோக்ஷத்தைக் கொடுப்பவரான உம்மை ஆராதித்து விவேகியாக இருப்பவன் விஷயங்களில் ஆசைப் படுவானே? ஆனதால் ரஜஸ், தமஸ், ஸத்வம் ஆகிய குணங்களாலேற்படும் சகல காமங்களையும் விட்டுப் புண்ணிய பாபங்களற்றவரும், மகாஞானியும், குணங்களற்றவரும், ஒருவரும், பரம புருஷருமாகிய உம்மைச் சரணமடைகிறேன். ஓ காப்பாற்றுகிறவரே! வெகுகாலமாகத் தாக்கத்தால் (பாபத்தால்) பிடிக்கப்பட்டும், காமம் முதலிய ஆறு வகைச் சத்துருக்களுள்ளவனும், ஆசையை யொழிக்காதவனுமாகிய நான் தெய்வாதீனமாகச் சாந்தியை அடைந்து உம்முடைய பாதாரவிந்தத்தை அடைந்தேன். ஓ பரமாத்மாவே! உம்முடைய பாதம், பயத்தை நிவர்த்திப்பது; மோக்ஷத்தைக் கொடுத்து துக்கத்தை நிவர்த்திப்பது. ஆனதால் என்னைக் காப்பாற்றும்'' என்றார்.

58—68. அதனைக் கேட்ட கிருஷ்ணன் அரசனை நோக்கி, "ஓ மகாராஜ! உம்முடைய புத்தியானது மிகவும் சுத்தமானது; உறுதியானது; வேண்டிய வரன்களைக் கொடுப்பதாகச் சொல்லியும் விஷயத்தில் ஆசைப்படவில்லை. என்னிடத்தில் உறுதியான பக்தி செய்தவர்களுடைய புத்தியானது விஷயத்தில் செல்லாது. உம்முடைய புத்தியைப் பரீக்ஷிப்பதற்காகவே வரம் கொடுப்பதாகச் சொன்னேன். என்னிடத்தில் நிலையான பக்தியில்லாமல் அதற்காக முயற்சிக்கும் சிலருடைய புத்தியானது அடங்கியிருந்தாலும் சில சமயம் விஷயத்தில் ஆசைப்படும். ஆனதால் நீர் எப்பொழுதும் என்னிடத்திலேயே மனத்தைச் செலுத்திக்கொண்டு பூமியில் சஞ்சரியும்; என்னிடத்தில் ஒருபொழுதும் பக்தி குறையவேண்டாம். நீர் க்ஷத்திரியனாயிருந்து வேட்டை

யில் மிருகங்களைக் கொன்றீரல்லவா? அந்தப் பாபத்திற்காக என்னையே மனத்தில் தியானஞ்செய்துகொண்டிரும். அந்தத் தவத்தினால் அந்தப் பாபம் நிவர்த்தியடையும். அடுத்த ஜன்மத்தில் நீர் பிராமணனாகப் பிறந்து, சகல பிராணிகளுக்கும் மித்திரனாகவிருந்து என்னை அடைவீர்" என்று அநுக்கிரகித்தார் (மோக்ஷத்தை அடைவீரென்று கருத்து).

## அத்தியாயம் 52

### ருக்மிணீ தேவி பகவானுக்குச் செய்தி அனுப்பியது

1—4. இப்படி இக்ஷ்வாகு குலத்தரசனாகிய முசுகுந்தன் ஸ்ரீ கிருஷ்ணனால் அநுக்கிரகிக்கப்பட்டு அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து அந்தக் குகையிலிருந்து வெளியில் வந்தார். மேலுமவர் மனிதர்கள், பசுக்கள், மரங்கள், கொடிகள் ஆகிய இவைகளெல்லாம் சிறுத்திருப்பதைப் பார்த்துக் கலியுகம் வந்துவிட்டதென்று தெரிந்து கொண்டு, தவஞ் செய்யவேண்டுமென்ற சிரத்தையுடன் விஷயங்களில் ஆசையற்றவராகி, சந்தேகமற்று ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மனத்தைச் செலுத்தி வடக்குத் திசையை நோக்கிச் சென்றார். அவ்விடத்தில் கந்தமாதனமென்ற மலையில் நரநாராயணர்கள் வசிக்கும் பதரிகாசிரமத்தில் சுகதுக்கங்களையும் சகித்து, சாந்தராகித் தவஞ் செய்து பகவானைச் சேவித்துக்கொண்டிருந்தார்.

5—14. ஸ்ரீ கிருஷ்ணன் திரும்பவும் மதுரா நகரத்திற்கு வந்து மிலேச்ச சைன்னியத்தைக் கொன்று அவர்களுடைய தனத்தை துவாரகைக்குக் கொண்டுபோனார். இப்படி பகவான் மிலேச்சர்களுடைய தனங்களை மனிதர்

களைக் கொண்டும், எருதுகளைக்கொண்டும் துவாரகைக்கு அனுப்பியபின், இருபத்துமூன்று அக்ஷௌஹிணி சைன்னியங்களுக்கு அதிபதியான ஜராசந்தன் யுத்தத்திற்கு வந்தான். அவனுடைய வேகத்தைக் கண்ணுற்ற ராமக்ருஷ்ணர்களிருவர்களும் பயந்தவர்கள் போல அபிநயஞ் செய்துகொண்டு ஓடினார்கள். உண்மையில் பயமில்லாதவர்களானாலும் பயந்தவர்கள்போலத் தாமரை போன்ற மிருதுவான கால்களால் வெகு யோசனை தூரம் ஓடினார்கள். அதனைக் கண்ட பலசாலியான ஜராசந்தன் ஈசுவரர்களான ராமக்ருஷ்ணர்களுடைய உண்மையை யறியாதவனானதால் சிரித்துக்கொண்டு சைன்னியங்களுடன் அவர்கள்பின் ஓடினான். இப்படி வெகுதூரம் ஓடியும் களைப்படையாமல் ப்ரவர்ஷணமென்ற உயரமான மலையின் மீதேறினார்கள். (அந்த மலையில் எப்பொழுதும் மழை மிகுதியாக இருக்குமாகையால் அதற்குப் ப்ரவர்ஷணமென்று) பெயருண்டாயிற்று. ஜராசந்தன் அந்தப் பர்வதத்தில் ராமக்ருஷ்ணர்கள் ஒளிந்துகொண்டார்கள் என்று நினைத்து, அவர்களைப் பலவாறுகத் தேடியும் அவர்களைக் காணவில்லை. பின்பு அவன் அந்த மலையைச் சுற்றிக் கட்டைகளை அடுக்கி நெருப்பை வைத்துக் கொளுத்தினான். அந்த மலையின் தாழ்வரைகள் எரியும்பொழுது ராமக்ருஷ்ணர்கள் பதினொரு யோசனை தூரம் உயரமான அந்த மலையிலிருந்து சத்துருவுக்குத் தெரியாமல் பூமியில் குதித்துத் திரும்பவும் துவாரகா நகரஞ் சென்றார்கள். பின்பு ஜராசந்தன் ராமக்ருஷ்ணர்களை யெரித்துவிட்டோம் என்று நினைத்துக்கொண்டு சைன்னியத்துடன் மகத தேசஞ் சென்றான்.

15—17. ஆனர்த்த தேசத்திற்கு அதிபதியான ரைவதர் என்பவர் பிரம்மதேவரால் தூண்டப்பட்டு

ரேவதி யென்ற தமது கன்னிகையைப் பலராமருக்கு மணஞ் செய்து கொடுத்தாரென்று ஏற்கனவே சொன்னேம் (ஒன்பதாவது ஸ்கந்தத்தில்). ஓ மகாராஜ! கோவிந்தராகிய பகவான் பீஷ்மகருடைய புத்திரியும் லக்ஷ்மிதேவியின் அம்சமுமான ருக்மிணி யென்பவளைச் சுயம்வரத்தில் சிசுபாலனைச் சார்ந்த சால்வன் முதலியவர்களை ஜயித்து, சகல ஜனங்களும் பார்த்திருக்கும் பொழுது விவாகஞ் செய்துகொண்டார். அது கருடன் தேவர்களை ஜயித்து அமிருதத்தைக் கொண்டுவந்தது போலிருந்தது என்று சுகர் சொன்னார்.

18—20. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "ஓ பிராமணா! ஒப்பற்ற தேஜஸ் உள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் சுயம்வரத்தில் ஸால்வன் முதலிய அரசர்களை ஜயித்து ருக்மிணியைப் பாணிக்கிரகணஞ் செய்து கொண்ட கதையைச் சொல்லும். ஓ பிராமணா! விஷ்ணுவின் கதைகள் புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியவை; தேன்போல் இனிமையானவை; ஜனங்களுடைய பாபத்தைப் போக்கக்கூடியவை; எப்பொழுதும் புதிதாக இருப்பவை; அதனைக் கேட்டுப் போதுமென்று திருப்தி யாருக்கு உண்டாகும்?" என்றார்.

### ருக்மிணீ கல்யாணக் கதை

21—26. விதர்ப்ப தேசத்து அரசனாகிய பீஷ்மகர் என்பவருக்கு ருக்மி, ருக்மரதன், ருக்மபாகு, ருக்மகேசன், ருக்மமாலி என்ற ஐந்து புத்திரர்களும், ருக்மிணி யென்ற ஒரு பெண்ணுமுண்டு. அந்தப் பெண் இளையவள். நல்ல நடையுள்ள அந்தப் பெண் தன் வீட்டிற்கு வந்தவர்கள் மூலமாக ஸ்ரீ கிருஷ்ணனுடைய ரூபம், வீரி

-வம், குணம், அழகு இவைகளைப்பற்றிக் கேள்விப்பட்டு, தனக்குக் கிருஷ்ணனே தகுதியான கணவனென்று நினைத்தாள். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அந்தப் பெண்ணினுடைய புத்தி, லக்ஷணம், ஔதார்யம், ரூபம், சுபாவம், குணம், அழகு இவைகளைப்பற்றிக் கேள்விப்பட்டுத் தமக்குத் தகுந்த மனைவியென்று நினைத்து அவளைக் கல்யாணஞ் செய்துகொள்வதாகச் சங்கற்பித்தார். ருக்மிணியின் பந்துக்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கும் ருக்மிணிக்கும் விவாகத்தை நடத்தச் சம்மதித்தார்கள். ஆனால் ருக்மி யென்ற ருக்மிணியின் சகோதரன் ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் விரோத புத்தியுள்ளவனானதால் தங்கையைச் சிசுபாலனுக்கு விவாகஞ் செய்விக்கவேண்டுமென்று நினைத்து, பந்துக்களுடைய இஷ்டத்திற்கு இசையாமல் அதனைத் தடுத்தான். அவனுடைய அபிப்பிராயத்தை அறிந்த ருக்மிணி தனக்குள் யோசித்து மிகவும் கவலையடைந்து தனக்கு ஆப்தராகிய ஒரு பிராமணனை ஸ்ரீ கிருஷ்ணனிடம் அனுப்பி,

27—35. ருக்மிணியால் அனுப்பப்பட்ட பிராமணன் துவாரகா நகரம் வந்து, காவலாட்களின் அநுமதியின்மீது பகவானுடைய கிரகத்திற்குட் பிரவேசித்து, சுவர்ணமயமான ஆசனத்தில் உட்கார்ந்திருக்கும் ஆதிபுருஷனாகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்தார். பிராமணர்களையே தெய்வமாகக்கொண்ட ஸ்ரீ கிருஷ்ணன் பிராமணனைக் கண்டவுடன் ஆசனத்தை விட்டெழுந்திருந்து, தம்முடைய ஆசனத்தில் பிராமணனை உட்காரவைத்துத் தேவர்கள் தம்மைப் பூஜிப்பதுபோல் உபசரித்தார். பிராமணன் ஆகாரத்தைப் புசித்துக் களைப்பாறியபின் அவனுடைய பாதங்களைப் பகவான் தமது கைகளால் பிடித்து அவனை நோக்கி, “ஓ பிராமண சிரேஷ்டர்களுக்குட் சிறந்

தவரே! கிடைத்ததைக் கொண்டு சந்தோஷப்படும் உம்முடைய தர்மமானது பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதா? அதிகக் கஷ்டப்படாமல் சுவதர்மத்தை நடத்துகிறீரா? பிராமணன் கிடைத்ததைக் கொண்டு சந்தோஷப்படுவதே அவனுக்கு சுவதர்மம். தன்னுடைய தர்மத்தை விடாமல் அநுஷ்டிக்கவேண்டும். அப்படிச் செய்வதால் சகல காமங்களும் கிடைக்கின்றன. கிடைத்ததைக்கொண்டு சந்தோஷப்படாமல் அதிக ஆசைப்படுகிறவன் மகேந்திர பதத்தை அடைந்தவனானாலும் அதனால் அவனுக்குத் திருப்தியுண்டாகிறதில்லை; அதனால் அவன் சுகப்படுகிறதில்லை. ஏழையானாலும் அதிக ஆசையில்லாமல் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷிப்பவன் கை, கால் முதலிய சகல அவயவங்களிலும் தாபமற்றவனாகச் சுகப்படுவான். தெய்வச் செயலாகக் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷிப்பவர்களும், பிராணிகளிடத்தில் தயையுள்ளவர்களும், அகங்காரமற்றவர்களும், சாந்தர்களுமான ஸாதுக்களை நான் சிரஸினால் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஓ பிராமண! க்ஷேமமா? எந்த அரசனுடைய ராஜ்யத்தில் அரசனால் காப்பாற்றப்பட்டுப் பிரஜைகள் சுகமாக வஸிக்கிறார்களோ, அந்த அரசனிடத்தில் நான் மிகவும் பிரியப்படுகிறேன். நீர் சமுத்திரத்தைத் தாண்டி எதற்காக இவ்விடம் வந்தீரோ, அதெல்லாவற்றையும் சொல்லக்கூடியதானால் சொல்லும்; நம்மால் செய்யக்கூடியதென்ன?" என்று கேட்டார்.

86—88. இப்படிப் பரமேசுவரரும், விளையாட்டாக மனித வடிவம் கொண்டவருமான பகவானால் கேட்கப்பட்ட பிராமணர் அவரிடம் எல்லாவற்றையும் தெரிவித்தார். எப்படியெனில், விதர்ப்ப தேசத்து அரசனுடைய புத்திரியும், [illegible] ருக்மிணிக்கு விவா

கம் சமீபித்திருப்பதால் அவன் உமக்குச் சில சமாசாரத்தைச் சொல்லி யனுப்பியிருக்கிறான். பீஷ்மகருடைய புத்திரியான அவளால் அனுப்பப்பட்டு உம்முடைய சமீபம் வந்தேன். அதனைக் கேட்டு மேல் செய்யவேண்டியதைச் செய்யவும். ருக்மிணியால் சொல்லி யனுப்பியதைக் கேளும்.

39. ஓ அச்சுத! எல்லா லோகங்களிலும் சுந்தர புருஷ! உம்மைப்பற்றிக் கேள்விப்படுகிறவர்களின் காதின் வழியாக நீர் உள்ளே பிரவேசித்து, சகல அவயவங்களின் தாபத்தை நிவர்த்திக்கிறீர். உம்முடைய சரீரத்தைத் தரிசிப்பதே கண்களுக்குப் பயன். தரிசிப்பவர்களுக்கு எல்லாப் புருஷார்த்தங்களும் கிடைக்கின்றன. அப்படிப்பட்ட உம்முடைய குணங்களையும் சுருபத்தையும் கேள்விப்பட்டு என்னுடைய மனமானது வெட்கமற்று உம்மிடத்தில் பிரவேசிக்கிறது. (உம்முடைய குணங்களுக்கும், எனக்கும் மிகுந்த தாரதம்யமிருந்தாலும் மேலான விஷயத்தை படைய விரும்புவதால் வெட்கமில்லாமல் உம்மை அடைய விரும்புகிறேன் என்று கருத்து).

40. 'ஓ முகுந்த! மனிதர்களுக்குட் சிறந்தவரே!(கன்னிகைக்கு இவ்வளவு தைரியமாவென்று சங்கிக்கவேண்டாம்.) குலத்திலும், ரூபத்திலும், சுபாவத்திலும், வித்தையிலும், வயதிலும், சம்பத்திலும், காந்தியிலும் ஒப்பற்றவரும் (நமக்குச் சமரும்), ஜனங்களுடைய மனத்தை ரமிக்கச் செய்பவருமான உம்மிடத்தில் நல்ல குலத்தில் பிறந்தவளும் புத்தியுள்ளவளுமான எவள்தான் ஆசைப்படமாட்டாள்? அதிலும் இது விவாக சமயம் (தவறினால் உம்மை அடைவதற்கு நியாயமில்லை. மேலும் மணப் பெண்ணுக்கு ஏற்ற குணமிருக்கவேண்டுமென்று கன்னிகை

யும், அவள் தாயும் தந்தையும், பந்துக்கள் முதலியவர்களும் விரும்புவர்களோ அந்தக் குணங்கள் யாவும் உம்மிடத்திலிருக்கின்றனவென்று கருத்து.)

41. 'ஓ தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! பிரபுவே! உம்மைக் கணவனுக நான் வரித்திருக்கிறேன். என்னுடைய ஆத்மாவை உம்மிடம் சமர்ப்பித்தேன். ஆனதால் நீர் இவ்விடம் வந்து என்னைப் பத்தினியாக அங்கீகரிக்கவேண்டும். வீரராகிய உம்முடையவளான என்னைச் சிசுபாலன் சீக்கிரத்தில் தொடவேண்டாம். சிங்கத்திற்கென்று வைத்ததை நரி அபகரிக்கலாமா? (நீர் வாராமலிருந்தால் சிசுபாலன் என்னை ஸ்பரிசிக்கும்படி நேரும். அப்படிச் செய்யாமல் சீக்கிரம் வந்து அநுக்கிரகிக்கவேண்டுமென்று கருத்து.)

42. பூர்த்த தர்மம் (கிணறு, குளம் வெட்டுவிப்பது முதலியவை), இஷ்ட தர்மம் (யாகம் முதலியவை), தானம், தீர்த்தயாத்திரை, கிருச்சரம் முதலிய விரதம், தேவ பூஜை, குரு பூஜை, பிராமண பூஜை முதலியவைகளைச் செய்து நான் பரமாத்மாவை ஆராதித்திருந்தால் ஸ்ரீ கிருஷ்ணன் இவ்விடம் வந்து என்னைப் பாணிக்கிரகணஞ் செய்துகொள்ளட்டும். சிசுபாலன் முதலிய மற்றவர்களுக்கு என்னுடைய பாணிக்கிரகணங் கிடைக்கவேண்டாம்.

43. 'ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரே! நாளைய தினம் நடக்கப்போகிற கல்யாணத்திற்காக நீர் ஒருவருக்கும் தெரியாமல் விதர்ப்ப தேசம் வந்து சைன்யத்தை அடித்து, பராக்கிரமத்தைக் காண்பித்து, ராக்ஷஸ விதிப்படி என்னை விவாகஞ் செய்துகொள்ளும்.

44. ‘அந்தப்புரத்தில் சஞ்சரிக்கும் உன்னுடைய பந்துக்களைக் கொன்று உன்னை அபகரிக்கவேண்டும். கல்யாண காலத்தில் அப்படிச் செய்வது உசிதமா’ என்று கேட்பீரோ? விவாகத்திற்கு முந்திய தினத்தில் பட்டணத்திற்கு வெளியிலிருக்கும் அம்பிகையின் ஆலயத்திற்குக் கல்யாணப் பெண் போவது வழக்கம். (அப்பொழுது அம்பிகையின் ஆலயத்திலிருந்தே என்னைத் தூக்கிக் கொண்டு போகலாம்.)

45. ‘ஓ தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! உம்முடைய பாதாரவிந்த தூளியைப் பூசிக்கொள்வதனால் (ஸ்நானம்) அஞ்ஞானம் நிவர்த்தியாகிறதென்று பரமசிவன் நினைத்து, பாததூளியை விரும்புவதுபோல் பெரியோர்களும் அதனையே சேவிக்கிறார்கள். ஆனதால் அப்படிப்பட்ட உம்முடைய அநுக்கிரகம் எனக்குக் கிடைக்காவிடில் விரதங்களைச் செய்து அதனால் இளைத்து, பிராணனை விட்டுவிடுவேன். அடுத்த ஜன்மத்திலும் நீர் என்னை அநுக்கிரஹிக்காவிட்டால் அப்பொழுதும் மரணமடைவேன். இப்படி எவ்வளவு ஜன்மமெடுத்தும் உம்முடைய அநுக்கிரகத்தை எதிர்பார்த்திருப்பேன்.’

46. “ஓ யாதவர்களுக்கு தெய்வமே! ருக்மிணியால் சொல்லியனுப்பப்பட்ட ரகசிய வார்த்தைகளைச் சொன்னேன். இதைப்பற்றி யோசித்து எதனைச் செய்யவேண்டுமோ அதனைச் செய்யும்” என்று பிராமணர் ஸ்ரீ கிருஷ்ணனிடம் தெரிவித்தார்.

# அத்தியாயம் 53

## கிருஷ்ணன் ருக்மிணியை அபகரித்தது

1—13. பிராமண முகமாக ருக்மிணி சொல்லியனுப்பிய வார்த்தையைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ணன் சிரித்துத் தமது கையால் அந்தப் பிராமணனுடைய கையைப் பிடித்துக் கொண்டு, "அழகான முகமுள்ள ருக்மிணியானவள் என்னையே நினைத்துக்கொண்டிருப்பது போல நானும் அவளையே நினைத்துக்கொண்டு ராத்திரியில் கூட தூக்கமில்லாமலிருக்கிறேன். ருக்மியானவன் என்னிடம் விரோத புத்தியுள்ளவனாகையால் என்னுடைய விவாகம் தடைப் பட்டதென்பது எனக்குத் தெரியும். (ருக்மிணியால் சொல்லப்படாமலிருந்தாலும் எனக்குத் தெரியுமென்று கருத்து). ஆனதால் கட்டையிலிருந்து அக்னிஜ்வாலையை எடுப்பதுபோல அதமர்களான அரசர்களை ஜயித்து அழகான அவயவங்களுள்ளவளும், என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தியவளுமான ருக்மிணியைக் கொண்டு வருவேன்" என்று சொல்லிவிட்டு மறுநாள் ராத்திரி ருக்மிணியின் விவாகத்திற்குச் சமயமென்பதை யறிந்து சாரதியை நோக்கி, "தாருக! ரதத்தைக் கொண்டுவா" என்று ஆஞ்ஞாபித்தார். அதனைக் கேட்ட தாருகன் சைன்னியம், சுக்ரீவம், மேகபுஷ்பம், வலாஹகம் என்ற பெயருள்ள நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட ரதத்துடன் வந்து, இரு கைகளையும் கூப்பிக்கொண்டு கிருஷ்ணனுடைய முன்பாக நின்றான். பின்பு கிருஷ்ணன் அந்த ரதத்தில் பிராமணனை ஏற்றிக்கொண்டு தாமும் ஏறிக் கொண்டு ஆனர்த்த தேசத்திலிருந்து ஒரு ராத்திரியில் விதர்ப்ப தேசம் வந்தார். குதிரைகள் அவ்வளவு வேகமாகச் சென்றன. குண்டின பட்டணத்திற்கு அதிபதி

யான பீஷ்மகர், புத்திரனுகிய ருக்மியிடத்திலுள்ள பிரியத்தால் அவனுடைய இஷ்டப்படி ருக்மிணியைச் சிசுபாலனுக்குக் கொடுப்பதாக நிச்சயஞ்செய்துகொண்டு கல்யாண காரியங்களைச் செய்வித்தார். பட்டணத்து வீதிகளும் நாற்சந்தி மண்டபங்களும் குப்பையில்லாமல் சுத்தஞ்செய்யப்பட்டும் ஜலந்தெளிக்கப்பட்டு மிருந்தன. மேலும், பலவகையான தோரணங்களாலும், துவஜங்களாலும், பதாகைகளாலும் (கொடிகள்) அலங்கரிக்கப்பட்டிருந்தன. அந்தப் பட்டணத்திலுள்ள எல்லா ஸ்திரீகளும் புருஷர்களும் புஷ்பங்களாலும் சந்தனத்தாலும், சுத்த வஸ்திரத்தாலும் சரீரத்தை அலங்கரித்துக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் அகில் முதலிய தூபங்களால் வாசனையுண்டாயிற்று. அரசன் பிதிருக்களையும், தேவர்களையும், பிராமணர்களையும் விதிப்படி பூஜித்தார். மேலும் பிராமணர்களுக்குப் போஜனஞ் செய்வித்தார். பின்பு ருக்மிணிக்கு ஸ்நானஞ்செய்வித்து, மங்கலச் சரடு கையில் தரிக்கச் செய்து, புது வஸ்திரங்களாலும், மேலான ஆபரணங்களாலும் அலங்கரித்தார். பின்பு பிராமணர்கள் ஸாமம், ரிக், யஜுஸ் ஆகிய இவைகளின் மந்திரங்களை யுச்சரித்துக் கல்யாணப் பெண்ணுக்கு ரக்ஷையைச் செய்தார்கள். அதர்வ வேதத்தை யறிந்தவரான புரோகிதர் கிருகசாந்திக்காக ஹோமஞ்செய்தார். தங்கம், வெள்ளி, வஸ்திரம், எள், வெல்லம், பசுக்கள் ஆகிய இவைகளைப் பிராமணர்களுக்கு அரசன் தானஞ்செய்தார்.

14—18. அப்படியே சேதி தேசத்தரசனுகிய தமகோஷ ரென்பவர், புத்திரனுகிய சிசுபாலனுக்காக மங்கள காரியங்களைச் செய்தார். பின்னுமவர் மதங்கொண்ட யானைப்படை, ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட ரதங்கள், காலாட்படை, குதிரைகள் ஆகிய இவைகளுள்ள

சைன்னியங்களுடன் குண்டின பட்டணத்திற்கு வந்தார். அதனைக்கண்ட பீஷ்மக மகாராஜன் அவரை யெதிர் கொண்டழைத்து நன்றாகப் பூஜித்து ஒரு மாளிகையில் இறக்கினார். மேலும் அந்த விடுதிக்கு ஸால்வன், ஜராசந்தன், தந்தவக்த்ரன், விடூரதன், பௌண்ட்ரகன் முதலிய சிசுபாலனைச் சார்ந்தவர்கள் வந்தார்கள். பின்னுமவர்கள் ராமகிருஷ்ணர்களுக்கு விரோதிகளானதாலும், சிசுபாலனைச் சார்ந்தவர்களானதாலும் கிருஷ்ணன் இவ்விடம் வந்து ஒருகால் ருக்மிணியை அபகரிப்பாரானால் அப்பொழுது நாமெல்லோரும் சேர்ந்து அவருடன் யுத்தஞ் செய்து அவரை ஜயித்து, சிசுபாலனுடைய விவாகத்தை முடித்து வைக்கிறதென்ற நிச்சயத்துடனிருந்தார்கள்.

19—20. அப்பொழுது பலராமன் சத்துருக்களுடைய எண்ணத்தைக் கேள்விப்பட்டு, ஸ்ரீ கிருஷ்ணன் ஒருவராகச் சென்றதையும் பார்த்து, ஒருகால் யுத்தமுண்டாகுமோவென்று சந்தேகித்து ரதம், யானை, குதிரை, காலாட்படை யென்ற நான்கு அங்கங்களுள்ள அதிக சைன்னியத்துடன் கிருஷ்ணனிடத்திலிருக்கும் ஸ்நேகத்தால் குண்டின பட்டணத்திற்கு வந்தார்.

21—26. அப்பொழுது பகவானுடைய வரவை எதிர்பார்த்திருக்கும் பீஷ்மகருடைய புத்திரியான ருக்மிணியானவள் பிராமணன் திரும்பிவராததால் பின்வருமாறு தனக்குள் யோசிக்கலானாள். எப்படியெனில், "என்னுடைய கல்யாணத்திற்கு ஒரு ராத்திரிதான் மத்தியிலிருக்கிறது. இன்னும் ஸ்ரீ கிருஷ்ணன் வரவில்லை. நான் அதிர்ஷ்டமில்லாதவள். பகவான் வாராதகாரணம் இன்னதென்று தெரியவில்லை. என்னால் அனுப்பப்பட்ட பிராமணனும் திரும்பி வரவில்லை. ஒருகால் தோஷமற்றவராகிய பகவான் என்னுடைய தைரியம் முதலியவைகளைப்

பார்த்து, என்னை விவாகஞ் செய்துகொள்வதில் பிரியமில்லாமல் அதில் முயற்சி செய்யாமலிருக்கிறாரோ? (ஒருவேளை கிருஷ்ணன் த்வாரகா நகரத்திலிருந்து புறப்பட்டும் வழியில் தடைப்பட்டிருக்கிறாரா?) அதிருஷ்டமற்றவளாகிய எனக்கு தெய்வம் அநுகூலமாக இருக்கவில்லை. ருத்திரருடைய பத்தினியும், பர்வதராஜனுடைய புத்திரியுமான அம்பிகையும் என்னிடத்தில் பிரியப்படவில்லை", என்று யோசித்துக்கொண்டு பகவானையே தியானித்து, இப்பொழுது பகவான் வரலாம் என்று ஆனந்தக்கண்ணீர் நிறைந்த கண்களை மூடிப் பகவானையே தியானஞ் செய்துகொண்டிருந்தாள். அப்பொழுது அவளுடைய இடது கையும், தொடையும், கண்ணும் துடித்தன. அதனால் பகவான் வந்துவிட்டாரென்று அவள் தெரிந்துகொண்டாள்.

27—30. பின்பு கிருஷ்ணனால் ('நான் வந்தேன் என்பதைச் சொல்லும்' என்று) அனுப்பப்பட்ட அந்த பிராமணன் அந்தப்புரஞ் சென்று ராஜகுமாரியைக் கண்டார். ருக்மிணியும் குறிப்பால் அறியக்கூடியவளானதால் சிரித்தமுகமுள்ளவரும்,பரபரப்பில்லாமல் நடப்பவருமான பிராமணரை நோக்கி, சிரித்துக்கொண்டு பகவான் வந்தாராவென்று கேட்டாள். அதனைக் கேட்ட பிராமணன், ஸ்ரீ கிருஷ்ணன் வந்திருக்கிறாரென்பதையும், "உன்னை அழைத்துப் போகிறேன்" என்று பகவான் சொன்னார் என்பதையும் ருக்மிணிக்குத் தெரிவித்தார். அதனைக் கேட்டு ருக்மிணி சந்தோஷத்தை அடைந்து, பிராமணர் செய்த உபகாரத்திற்குப் பதில் எதனைச் செய்வலாமென்று யோசித்து, அதற்கு வேறு ஒன்றும் பதிலாகாதென்று நிச்சயித்து, அவருக்கு நமஸ்காரஞ் செய்தாள்.

31—34. பின்பு பீஷ்மக மஹாராஜன் ருக்மிணியின் விவாகத்தைப் பார்ப்பதற்காக ராமகிருஷ்ணர்கள் வந்திருக்

கிறார்களென்று கேள்விப்பட்டு, தூரியம் முதலிய வாத்திய கோஷங்களுடன் அவர்களை யெதிர்கொண்டழைத்துப் பூஜித்தார். மேலுமவர் சுத்தமான வஸ்திரங்களையும், மற்றும் காணிக்கைகளையும், மதுவர்க்கத்தையும் எடுத்து வந்து விதிப்படி பூஜித்து உபசரித்தார். பின்னுமவர் அழகான விடுதி யேற்படுத்தி அவர்களுக்கும், அவரைச் சார்ந்தவர்களுக்கும், அவருடைய சைன்னி யங்களுக்கும் மரியாதை செய்தார். இப்படி பீஷ்மக மகாராஜன் ருக்மிணியின் விவாகத்திற்காக அவ்விடம் வந்த அரசர்களுக்கு அவரவர்களுடைய வயதிற்கும், பலத்திற்கும், ஐசுவரியத்திற்கும், வீரியத்திற்கும் தக்கபடி பல பொருள்களையுங் கொடுத்து உபசரித்தார்.

35—37. அந்தப் பட்டணத்திலுள்ள ஜனங்கள் கிருஷ்ணன் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு, அவ்விடம் வந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தைத் தரிசித்தார்கள். பின்னுமவர்கள், இந்தக் கிருஷ்ணனுக்கே ருக்மிணி தகுந்த பத்தினி; இந்தக் கிருஷ்ணனும் ருக்மிணிக்குத் தகுந்த பர்த்தா. நம்மால் ஏதாவது புண்ணியஞ் செய்யப்பட்டிருந்தால் அதன் மகிமையால் ஸ்ரீ கிருஷ்ணன் ருக்மிணியை விவாஹஞ்செய்து கொள்ளட்டும்” என்று பிரியமாகப் பேசிக்கொண்டார்கள்.

38—57. பின்பு கல்யாணப்பெண்ணாகிய ருக்மிணி அம்பிகையின் ஆலயத்திற்கு வாகனமில்லாமல் காலால் நடந்துசென்றாள். அப்பொழுது சூரர்களான அரச னுடைய சேவகர்கள் அவளைக் காப்பாற்றிக்கொண்டு நாலுபக்கத்திலும் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். அந்த ருக்மிணியும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ்செய்துகொண்டு சென்றாள். பின்னுமவளைச் சுற்றி அவளுடைய தோழிகளும், தாய்களும் சென்றார்கள்.

கள். மிருதங்கம், சங்கம், பேரி, தூரி, பணவம் முதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன. சூரர்களான சேவகர்கள் ஆயுதபாணிகளாக அவளைக் காத்துக்கொண்டு சென்றார்கள். மேலும், சிறந்த தாசிகள் பலவகையான பூஜா திரவியங்களை எடுத்துக்கொண்டு சென்றார்கள். பிராம்மண மாதர்கள் புஷ்பம், சந்தனம், உயர்ந்த வஸ்திரம், ஆபரணம் ஆகிய இவைகளால் அலங்கரித்துக்கொண்டு சென்றார்கள். சூதர்களும், மாகதர்களும், வந்திகளும் தோத்திரஞ் செய்தார்கள். வாத்தியக்காரர்கள் வாத்தியங்களைக் கோஷித்தார்கள். இப்படி அம்பிகையின் ஆலயஞ்சென்று கால் கைகளை அலம்பிச் சுத்தையாகி, சாந்த மனமுள்ளவளாகி அம்பிகாலயத்திற்குட் பிரவேசித்தாள். அப்பொழுது பூஜாவிதியை அறிந்தவர்களான பிராமண ஸ்திரீகள் ஆசமனஞ் செய்வித்து, பரமிவனுக்கும் அம்பிகைக்கும் ருக்மிணியை நமஸ்காரஞ்செய்யும்படி செய்தார்கள். அப்பொழுது ருக்மிணியானவள், “ஓ அம்பிகையே! உமக்கு நமஸ்காரஞ்செய்கிறேன். கணபதி முதலியவர்களுடன் கூடிய பரமசிவனையும் வணங்குகிறேன். ஸ்ரீ கிருஷ்ணன் எனக்குக் கணவனாக வேண்டும். அதனைப் பகவான் அங்கீகரிக்கட்டும்” என்று சொல்லி நமஸ்காரம் செய்தாள். மேலுமவள் பிராமண ஸ்திரீகள் முன்னிலையில் ஜலத்தாலும், சந்தனத்தாலும், தூபதீபங்களாலும், வஸ்திரங்களாலும், புஷ்பமாலைகளாலும், ஆபரணங்களாலும் பரமசிவனையும் அம்பிகையையும் பூஜித்தாள். பின்னுமவள் உப்பு பட்சணங்கள், அதிரஸம், தாம்பூலம், பழங்கள், கரும்பு, மங்கள காண் ஆகிய இவைகளால் சுமங்கலிகளான பிராமணப் பெண்டிர்களையும் பூஜித்தாள். அந்தச் சுமங்கலிகள் குங்குமாக்ஷதைகளை ருக்மிணிக்குக் கொடுத்து ஆசிர்வாதஞ்செய்தார்கள். பின்பு

ருக்மிணி அந்த பிராமணப் பெண்டிர்களுக்கும், அம்பி கைக்கும் நமஸ்காரஞ்செய்து நிருமாலியத்தைப் பெற்றுக் கொண்டாள். பின்பு அவள் மௌனத்தை விட்டு, ரத்தினமிழைத்த மோதிரத்தால் பிரகாசிக்கும் தனது கையால் வேலைக்காரியைப் பிடித்துக்கொண்டு அம்பிகால யத்திலிருந்து வெளியில் வந்தாள். அவள் தேவமாயை போல் வீரர்களை மோகிக்கச் செய்பவளாகவும், அழகான இடுப்புள்ளவளாகவும், குண்டலங்களால் பிரகாசிக்கும் முகமுள்ளவளாகவும், யௌவன வயதுள்ளவளாகவும், ஒட்டியாணத்தைத் தரித்தவளாகவும், பிரகாசிக்கும் மார் புப் பிரதேசமுள்ளவளாகவும், தலைமயிர்களைக்கண்டு பயந்து அசைகின்றவைகள் போன்ற கண்களுள்ளவளாகவும், சுத்தமான சிரிப்புள்ளவளாகவும், கோவைப் பழம்போலச் சிவந்த உதடுகளுள்ளவளாகவும், அவற்றின் காந்தியால் சிவந்த பற்களையுடையவளாகவும், அன்னம்போல நடப்ப வளாகவும் இருந்தாள். அவள் நடக்கும்பொழுது காலில் அணிந்திருக்கும் பாதச் சிலம்புகள் இனிமையாகச் சப்தித்தன. அப்படிப்பட்ட ருக்மிணியைக் கண்ணுற்ற வீரர்களான அரசர்கள் மன்மத தாபத்தை அடைந்து மோகித்தார்கள். இப்படி விளையாட்டாக நடப்பது என்ற வியாஜமாகத் தன்னுடைய அழகைப் பகவானுக்குக் காண் பித்தாள். அந்தப் பெண்ணைப் பார்த்த அரசர்கள் அவ ளுடைய சிரிப்பு, வெட்கப் பார்வை இவைகளால் மோகித் துக் கையிலிருந்த ஆயுதங்களை நழுவவிட்டு, ரதம், யானை, குதிரை முதலிய வாகனங்களிலிருந்து பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தார்கள். இப்படி ருக்மிணி மெள்ள மெள்ள நடந்துவரும்பொழுது பகவானை எப்பொழுது அடை வோம் என்று யோசித்துக்கொண்டு முகத்தை மறைக்கும் தலைமயிர்களை இடக்கையின் நகங்களால் விலக்கிக்கொண்டு

அவ்விடம் வந்திருக்கும் அரசர்களையும் ஸ்ரீ கிருஷ்ணனை யும் பார்த்தாள். இப்படி ஆலயத்திலிருந்து வெளியில் வந்து ருக்மிணி ரதத்திலேற யத்தனிக்கும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அந்த ருக்மிணியைத் தூக்கிக் கருடக்கொடி யுள்ள தம்முடைய ரதத்தில் வைத்துக்கொண்டு அந்த அரசர்களை லட்சியஞ் செய்யாமல் பலராமனை முன்னிட்டுச் சென்றார். அது சிங்கம் நரிக்கூட்டத்திலிருந்துத் தனது பாகத்தைக் கொண்டுபோனாற்போ லிருந்தது. அப் பொழுது ஜராசந்தன் முதலிய மற்ற அகங்காரமுள்ள அரசர்கள் தங்களைக் கிருஷ்ணன் லட்சியஞ்செய்யாம லிருந்ததையும், தங்களுக்குக் கீர்த்தி குறைந்துவிட்டதை யும்பற்றிப் பொறாமை அடைந்தார்கள். மேலு மவர்கள், "சிங்கங்களின் கீர்த்தியை மிருகங்கள் அபகரித்தாற்போல் கோபர்களால் நம்முடைய கீர்த்தி அபகரிக்கப்பட்டது. கஷ்டம். ஆனதால் நம்மை நிந்திக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டார்கள்.

## அத்தியாயம் 54

### கிருஷ்ணன் ருக்மிணியைக் கல்யாணஞ் செய்துகொண்டது

பின்பு ஜராசந்தன் முதலியவர்கள் மிக்க கோபங் கொண்டு தகுந்த முயற்சியுடன் வாகனத்தின் மீதேறி அவரவர்களுடைய சைன்னியத்துடன் ஆயுத பாணிகளாகக் கிருஷ்ணனைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அவர்களைக் கண்ணுற்ற யாதவ சேனா பதிகள் தங்கள் வில்களை மண்டலமாக வளைத்துச் சப்திக்கச் செய்துகொண்டு நின்றார்கள். அப் பொழுது குதிரையேற்றம், யானையேற்றம், ரதத்தேறு

வது இவைகளை யறிந்தவர்களான சத்துருக்கள், மேகங்கள் மலைகளில் மழையைப் பெய்வதுபோல யாதவ சைன்னியத்தில் பாணங்களை வர்ஷித்தார்கள். அப்பொழுது நல்ல இடைப்புள்ள ருக்மிணிதேவி பர்த்தாவாகிய கிருஷ்ணனுடைய சைன்னியம் சத்துருக்களுடைய பாணங்களால் மறைக்கப்பட்டிருப்பதைப் பார்த்து மிகுந்த பயத்தால் கலங்கிய கண்களுள்ளவளாகி, கிருஷ்ணனுடைய முகத்தை வெட்கத்துடன் பார்த்தாள். அதனைக் கண்ட பகவான் சிரித்து, "ஓ அழகிய கண்களுள்ளவளே! பயப்படவேண்டாம்; சீக்கிரத்தில் உன்னைச் சார்ந்த சைன்னியங்களால் சத்துரு சைன்னியம் கொல்லப்படும்" என்று சொன்னார். அதற்குள் கதன், சங்கர்ஷணர் முதலிய வீரர்கள் சத்துருக்களுடைய காரியத்தைச் சகியாமல் நாராசமென்ற பாணங்களைப் பிரயோகித்து, சத்துருக்களுடைய குதிரை, யானை, ரதம் இவைகளை அடித்தார்கள். அதனால் யானை, ரதம், குதிரை இவைகளின்மீது உட்கார்ந்திருந்த வீரர்களுடைய தலைகள் வெட்டப்பட்டுக் கிரீடம், குண்டலம், தலைப்பாகை இவைகளுடன் கோடிக் கணக்காகக் கீழே விழுந்தன. மேலும் கத்தி, கதாயுதம், வில் இவைகளுடன் கைகளும், தொடைகளும், கால்களும் வெட்டுண்டு விழுந்தன. பின்னும் குதிரைகளும், கோவேறு கழுதைகளும், யானைகளும், ஒட்டகங்களும், காலாட்படைகளும் கொல்லப்பட்டன. இப்படி விருஷ்ணிகளால் தமது சைன்னியம் கொல்லப்பட்டபொழுது ஜராசந்தன் முதலிய அரசர்கள் திரும்பி குண்டின பட்டணம் வந்து, களத்திரரைப் பறிகொடுத்தவன்போல் துக்கப்பட்டுக்கொண்டிருப்பவனும், காந்தியற்றவனும், உற்சாகமில்லாதவனும், வாடின முகமுள்ளவனுமான சிசுபாலனை நோக்கி, "ஓ புருஷர்களுக்குட் சிறந்தவனே!

இந்த விஷயத்தில் நீ வருத்தப்படவேண்டாம். பிராணிக ளிடத்தில் சுகமாவது, துக்கமாவது நிலையாக நிற்கிற தில்லை. (எப்பொழுதும் ஒருவன் சுகத்தை படைந்தா னென்பதுமில்லை; எப்பொழுதும ஒருவன் துக்கத்தை படைந்தானென்பதுமில்லை.) மரத்திஞல் செய்யப்பட்ட பொம்மையானது ஆட்டிவைப்பவனுடைய இஷ்டப்படி எப்படி நர்த்தனஞ் செய்கிறதோ அதுபோல இந்த ஜனங் கள் ஈசுவரனுக்கு வசப்பட்டுச்சேஷ்டிக்கிறார்களேயொழிய சுகத்தை படைவதற்காகவாவது, துக்கத்தை அடைவதற் காகவாவது இவர்களுக்கு சுவாதந்திரியமில்லை. நான் இரு பத்து மூன்று அக்ஷௌஹிணி சைன்னியங்களுடன் பதி னேழு தட்வை கிருஷ்ணனுடன் யுத்தஞ் செய்தும் அப ஜயத்தை அடைந்தேன். ஒரு தடவை நான்மாத்திரம் தனியே கிருஷ்ணனை ஜயித்தேன். ஆனாலும் அபஜயப் பட்டபொழுதும் துக்கிக்கவில்லை; ஜயித்தபொழுதும் சந் தோஷப்படவில்லை. இந்த ஜகத்தானது அதிருஷ்டத் துடன் கூடிய காலத்தால் நடத்தப்படுகிறது என்று தெரிந்துகொண்டிருக்கிறேன். இப்பொழுதும் மிக்க சூரர் களான சேனைகளுக்கு அதிபதியான நாம் குறைந்த சைன்னியங்களுள்ள யாதவர்களால் கிருஷ்ணனுடைய ஒத்தாசையைக்கொண்டு ஜயிக்கப்பட்டோம். இது சத்து ருக்களுக்கு அனுகூல காலமாகையால் அவர்கள் ஜயித் தார்கள். நமக்குக் காலம் எப்பொழுது அனுகூலமாக இருக்குமோ அப்பொழுது நாமும் ஜயிப்போம்" என்று சமாதானஞ் செய்தார்கள். அதனைக் கேட்ட சிசுபாலன் தைரியமடைந்து, தன்னுடைய சைன்னியத்துடன் சேதி தேசஞ் சென்றான். சண்டையில் மரணமடைந்தவர்கள் போக பாக்கியான சைன்னியங்கள் அவரவர்கள் நகரத்திற் குச் சென்றார்கள்.

18—26. பின்பு ருக்மி என்பவன் மிகுந்த கோபத்துடன் எல்லா அரசர்களும் கேட்டுக்கொண்டிருக்க, "யுத்தத்தில் கிருஷ்ணனைக் கொல்லாமலும், ருக்மிணியைத் திருப்பி யழைத்துவராமலும் நான் குண்டின பட்டணத்திற்கு வருகிறதில்லை; சத்தியமாகச் சொல்லுகிறேன்" என்று பிரதிக்ஞை செய்து, கிருஷ்ணன் ருக்மிணியைப் பலாத்காரமாக அபகரித்ததைச் சகியாமல் அக்ஷௌஹிணி சைன்னியத்துடன் கிருஷ்ணனைப் பின்தொடர்ந்தான். பின்னுமவன் வில்லைக் கையிலெடுத்துக்கொண்டு யுத்தத்திற்குத் தகுந்த முயற்சியுடன் ரதத்திலேறிச் சாரதியை நோக்கி, "கிருஷ்ணன் எவ்விடத்திலிருக்கிறானோ, அவ்விடத்திற்கு ரதத்தை நடத்து; அவனுடன் யுத்தஞ்செய்ய வேண்டும்; இடையனும், துஷ்டபுத்தியுள்ளவனும், என்னுடைய தங்கையை அபகரித்தவனுமான கிருஷ்ணனுடன் யுத்தஞ்செய்து இப்பொழுது அவனுடைய வீரன் என்ற கர்வத்தைக் கூர்மையான பாணங்களால் போக்கடிக்கிறேன்" என்று கெட்டபுத்தியுள்ள ருக்மி, தன்னைத் தானே புகழ்ந்துகொண்டு கிருஷ்ணனுடைய உண்மையான பலத்தை யறியாதவனாகையால் தான் ஒருவனாக 'நில், நில்' என்று அதட்டிக்கொண்டு ஒரே ரதத்துடன் வேகமாக ஓடிவந்தான். இன்னுமவன் கெட்டியான வில்லையெடுத்துப் பாணங்களைப் பூட்டி மூன்று பாணங்களால் கிருஷ்ணனை அடித்து, "ஓ திருடனே! யதுகுலத்திற்கு அபகீர்த்தியை யுண்டுபண்ணுகிறவனே! காக்கை ஹவிஸ்ஸை அபகரித்தாற்போல என்னுடைய தங்கையைத் திருடிக்கொண்டு எங்கே போகிறாய்? மூடனும், கபட யுத்தஞ் செய்பவனும், மாயாவியுமான உன்னுடைய கர்வத்தை இப்பொழுது போக்கடிக்கிறேன். என்னுடைய பாணத்தால் அடிக்கப்பட்டுப் பூமியில் விழுவ

தற்கு முன்னமேயே ருக்மிணியை விட்டுவிடு" என்று சொன்னான்.

27—32. அதனைக் கேட்ட கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு ருக்மியினுடைய வில்லை வெட்டி, ஆறு பாணங்களால் ருக்மியையும், எட்டு பாணங்களால் நான்கு குதிரைகளையும், இரண்டு பாணங்களால் சாரதியையும், மூன்று பாணங்களால் துவஜத்தையும் அடித்தார். பின்பு ருக்மியானவன் வேறு வில்லை யெடுத்துக்கொண்டு ஐந்து பாணங்களால் கிருஷ்ணனை அடித்தான். அவைகளால் அடிக்கப்பட்ட கிருஷ்ணன் அந்த வில்லையும் வெட்டினார். ருக்மியானவன் பின்னுமொரு வில்லை எடுத்துக்கொண்டான். கிருஷ்ணன் அதனையும் வெட்டினார். பின்னுமவன் பரிகம், பட்டஸம், சூலம், கேடகம், கத்தி, சக்தி, தோமரம் முதலிய ஆயுதங்களை யெடுக்க, கிருஷ்ணனும் முறையே அவைகளை வெட்டினார். பின்பு ருக்மியானவன் கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டு ரதத்திலிருந்து குதித்து அக்கினியை நோக்கி விளக்குவெட்டுப் பூச்சி வந்தாற்போலக் கிருஷ்ணனைக் கொல்லவேண்டுமென்ற விருப்பத்தால் ஓடிவந்தான். அப்பொழுது கிருஷ்ணன் சில பாணங்களைப் பிரயோகித்து அவனுடைய கத்தியையும், கத்தியின் உறையையும் எள்ளளவாக வெட்டினார். மேலுமவர் ருக்மியைக் கொல்ல விரும்பிக் கூர்மையான கத்தியை எடுத்துக்கொண்டார்.

33—38. அதனைக் கண்ட ருக்மிணிதேவி பயத்தால் மனங்கலங்கி, கிருஷ்ணனுடைய பாதங்களில் வணங்கி, மிகவும் தீனமாகப் பர்த்தாவை நோக்கி, "ஓ யோகேச! அளவிடக்கூடாத மகிமையுள்ளவரே! ஓ தேவர்களுக்கும் தேவ! ஜகத்திற்கு அதிபதியே! நல்ல சுபாவமுள்ளவரே!

நீண்ட கைகளுள்ளவரே! என்னுடைய சகோதரனாகிய ருக்மியைக் கொல்லவேண்டாம்” என்று கேட்டுக்கொண்டாள். அப்பொழுது அவளுடைய சரீரமானது பயத்தால் நடுங்கியது; துக்கத்தால் முகம் வாடியது; கண்ணீரால் தொண்டை யடைத்தது; அதைரியத்தால் சுவர்ணமாலை கழுவியது. இப்படிப்பட்ட ருக்மிணி பகவானுடைய பாதத்தைப் பிடித்துக்கொண்டபடியால் அவளிடந் தயை செய்து, ருக்மியைக் கொல்லாமல் பகவான் அவனை வஸ்திரத்தால் கட்டி, மீசை தலைமயிர் இவைகளைக் கத்தரித்து விட்டார். அதற்குள் யானை தாமரைக் கொடியைப் பிடுங்கினாற்போல யாதவர்கள் சத்துருவின் சைன்னியத்தை நாசஞ் செய்தார்கள். அந்தச் சமயத்தில் பிரபுவாகிய பலராமன் கிருஷ்ணனுடைய சமீபஞ் சென்று கொல்லப் பட்டவன்போலிருக்கும் ருக்மியைப் பார்த்து, கட்டை யவிழ்த்துக் கிருஷ்ணனை நோக்கி, “ஓ கிருஷ்ண! இந்த ருக்மியின் மீசை, தலைமயிர் இவைகளைக் கத்தரித்து விகாரஞ் செய்தது சரியல்ல. இது சிநேகிதர்களுக்கு வதத்திற்குச் சமமானதேயாம்” என்று சொன்னார்.

39. பின்னும் பலராமன் ருக்மிணியை நோக்கி, “ஓ பதிவிரதையே! உன்னுடைய சகோதரனுக்கு நேர்ந்த அவமானத்தைப்பற்றி எங்களிடம் நீ அருவைப்படவேண்டாம். தன்னால் செய்யப்பட்ட புண்ணிய பாபங்களின் பயனை ஒருவன் அநுபவிக்கிறான். ஆனதால் அவனுக்குச் சுகதுக்கங்களைப் புண்ணிய பாபங்கள் கொடுக்கின்றனவேயொழிய வேறு மனிதன் சுகத்தையாவது துக்கத்தையாவது உண்டுபண்ணுகிறானென்பதில்லை” என்று சொன்னார்.

40. பின்னுமவர் கிருஷ்ணனை நோக்கி, “பந்துவாக இருப்பவன் வதஞ் செய்யக்கூடிய குற்றஞ் செய்தாலும்

அவனைக் கொல்லக்கூடாது. அவன் செய்த குற்றத்தா லேயே அவன் அடிக்கப்பட்டிருப்பதால் அவனை ஏன் திரும்பவும் அடிக்கவேண்டும்?" என்றார்.

41. இன்னுமவர் திரும்பவும் ருக்மிணியை நோக்கி, "சகோதரனானாலும் சகோதரனைக் கொல்லுவது க்ஷத்திரி யர்களுக்குத் தர்மம் என்று பிரம்மதேவரால் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அதனால் இது மிகக் கடுந் தர்மமானாலும் இந்த விஷயத்தில் எங்களிடத்தில் யாதொன்றும் குற்ற மில்லை" என்று சொன்னார்.

42. பின்னுமவர் கிருஷ்ணனை நோக்கி, "பணத்தின் கர்வத்தால் விவேகமற்ற அரசர்கள் ராஜ்யத்திற்காக வாவது, பூமிக்காகவாவது, பணத்திற்காகவாவது, ஸ்திரீ விஷயமாகவாவது, மானத்திற்காகவாவது, தேஜஸுக்காக வாவது, இன்னும் மற்ற காரணத்தினாலாவது பிறரை ஜயிப்பது வழக்கம். ஆனாலும் நமக்கு இது சரியல்ல" என்றார்.

43—50. பின்னுமவர் ருக்மிணியை நோக்கி, "ஓ ருக்மிணியே! சகல பிராணிகளிடத்திலும் விரோத புத்தி புள்ளவர்களான ருக்மி முதலியவர்களுக்குப் புத்தியில்லா தவன்போல க்ஷேமத்தைப் பிரார்த்திப்பது தகுதியல்ல. (சகல பிராணிகளுக்கும் துஷ்டர்களான சிசுபாலன் முத லியவர்களுக்குக் கெடுதலையும், பக்தர்களுக்கு க்ஷேமத் தையும் நீ பிரார்த்திப்பதால் சமபுத்தி புள்ளவளல்ல என் றும் அர்த்தஞ் சொல்வதுண்டு; அல்லது சகல பிராணி களுக்குள் கெட்ட நடையுள்ள உன்னுடைய சகோதரர் களுக்குக் கிருஷ்ணனால் செய்யப்பட்ட சிட்சையானது அநுக்கிரகமே யொழிய வேறில்லை. அதை நீ சிட்சை யாக நினைப்பதால், உன்னுடைய புத்தி சரியானதல்ல

என்றுஞ் சொல்வதுண்டு). மேலும் தேகத்தையே ஆத்மாவென்று நினைத்துச் சிலரை மித்திரர்களென்றும், சிலரைச் சத்துருக்களென்றும் ஜனங்கள் ஈசுவரனுடைய மாயையால் மோகித்து நினைக்கிறார்கள். சூரியன் ஒன்றானாலும் எப்படி ஜலத்தில் அநேக சூரியன் இருப்பதாக மூடர்கள் பார்க்கிறார்களோ, எப்படி வாயு ஒன்றானாலும் குடம் முதலியவைகளில் வெவ்வேறு விதமாக இருப்பதாகத் தெரிந்துகொள்ளுகிறார்களோ, அப்படி ஆத்மா ஒருவனும் சுத்தனுமாக இருந்தாலும் அநேகனென்று மூடர்கள் சொல்லுகிறார்கள். (ஆத்மா உண்மையில் சித்தனாக இருந்தால் ஏன் சுத்தனென்று அறியப்படவில்லை என்றால் அடுத்த சுலோகத்தால் சமாதானஞ் சொல்லப்படுகிறது.) திரவியம், பிராணன், குணம் இவைகளின் சுரூபமான சரீரத்திற்கு உற்பத்தியும் நாசமும் உண்டு. அதன் குணங்களைச் சுத்தனாகிய ஆத்மாவிடத்தில் ஏற்படுத்திக் கொள்வதனால் ஆத்மா ஸம்ஸாரியாக ஆகிறான். (தேகமாகிய உபாதியின் சம்பந்தத்தால் ஆத்மா சுத்தனென்று அறியப்படவில்லை என்று கருத்து.) ஓ பதிவிரதையான ருக்மிணியே! ஆத்மாவைக்காட்டிலும் வேறாக இந்திரியங்களும், அவைகளுக்கு அதிஷ்டான தேவதைகள் முதலியவைகளுமில்லை. அதனால் அதிபூதம், அதிதெய்வம், அத்தியாத்மம் முதலியவைகளுடன் பரமாத்மா சேர்ந்திருக்கிறார் என்பதுமில்லை, அவைகளை விட்டுப் பிரிந்திருக்கிறாரென்பதுமில்லை. ஏனென்றால் அதிபூதம் முதலியவைகள் உண்மையில் சத்தியங்களல்ல. அசத்தியங்களான அவைகளுடன் சத்திய வஸ்துவான பரமாத்மா சேர்ந்திருக்கிறார் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்? சேர்க்கையே இல்லையென்றால் பிரிவு எப்படி உண்டாகும்? மேலும், இந்திரியங்களுக்கும், பூதங்களுக்கும் பரமாத்

மாலே காரணம். பின்னும் அவைகள் ஆத்ம சைதன்யத் தாலேயே பிரகாசிக்கின்றன. ஆனதால் ஆத்ம சைதன் யத்தைக்காட்டிலும் இந்திரியம் முதலியவைகள் வேறல்ல. நேத்திரம், அதன் விஷயமாகிய ரூபம் இவைகள் சூரியனு லேயே பிரகாசிக்கின்றன. ஆனதால் சூரியனைக்காட்டிலும் வேறல்ல. (தைஜஸமானதால் பேதமில்லை யென்று தாத் பரியம்.) அதுபோலவே ஆத்மாவின் பிரகாசத்தால் பூதம் முதலியவைகள் பிரகாசிப்பதால் ஆத்மாவிற்கும் அவைகளுக்கும் பேதமில்லை. உற்பத்தி, நாசம் முதலிய விகாரங்கள் சரீரத்தைச் சார்ந்தவைகளேயொழிய ஆத்மா விற்கு ஒருபொழுதுமில்லை. (சரீரம் உண்டானல் அதன் தர்மத்தை அவித்யையால் ஆத்மாவினுடையதாக நினைத் துக்கொண்டு நான் பிறந்தேன் என்று சொல்லுகிறான். உண்மையில் ஆத்மாவிற்கு ஜனனமில்லை. அப்படியே சரீரம் போனல் நான் மரணமடைகிறேன் என்று சொல்லுகிறான். உண்மையில் ஆத்மாவிற்கு மரணமு மில்லை.) சந்திரன் அமாவாசை தினத்தில் நாசமடைகிற னென்றால் உண்மையில் சந்திரன் மரணமடைகிறதில்லை; கலைகள் குறைந்துபோகின்றன. அதைச் சந்திரனிடத்தில் சொல்லுகிறார்கள். இதுவே முன்சொன்ன ஆத்ம விஷயத் தில் உதாரணமாகிறது. ஆத்மாவிற்குச் சரீர சம்பந்த மில்லையென்றால் எப்படி ஆத்மா பயனை அனுபவிக்கக்கூடு மென்றால், படுத்துத் தூங்குகிறவன் எப்படி சொப்பனத் தில் அசத்தியமான வஸ்துக்களை யனுபவிக்கிறானே, அப்படி விஷயங்கள் அசத்தியங்களானாலும் அவித்யை யால் மூடன் ஸம்ஸாரத்தை அடைகிறான். (போக்தா வாக நினைத்துக்கொள்ளுகிறான். ஆனதால் துக்கம் அஞ்ஞானத்தாலுண்டாகிறது; மனத்தை உலரச்செய் கிறது; மோகிக்கச் செய்கிறது. 'ஓ சுத்தமான விரிப்புள்ள

வளே! அப்படிப்பட்ட துக்கத்தைத் தத்துவ ஞானத்தால் நிவர்த்தித்துக்கொண்டு துக்கப்படாமலிரு" என்று சமாதானம் செய்தார்.

51—53. அதனைக் கேட்ட ருக்மியானவன் துக்கத்தைவிட்டு நிச்சயத்தை அடைந்தான். இம்மாதிரியான பலராமனுடைய வார்த்தையை ருக்மிணி கேட்டுக்கொண்டிருந்தும் அவன் மனத்திற்கு சமாதானம் ஏற்படவில்லை. பின்னுமவன் பிராணனுடன் விடப்பட்டு, காந்தியற்றவனுகித் தன்னுடைய எண்ணம் நிறைவேருமல் தனக்கு நேர்ந்த அவமானத்தை நினைத்துத் துக்கித்து எந்த இடத்தில் அவமானத்தை அடைந்தானே, அந்த விடத்தில் போஜகடமென்ற பட்டணத்தை யுண்டுபண்ணிக்கொண்டு அவ்விடத்திலேயே வசித்தான். 'கிருஷ்ணனைக் கொல்லாமலும், ருக்மிணியைத் திரும்பி யழைத்து வராமலும் குண்டின பட்டணத்திற்கு வருகிறதில்லை' என்று ஏற்கனவே பிரதிக்ஞை செய்தவனுனதால் குண்டின பட்டணத்திற்குப் போகவில்லை.

ருக்மிணீ கல்யாணம்

54—64. இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் பீஷ்மகருடைய புத்திரியாகிய ருக்மிணியைத் தமது நகரத்திற்கு அழைத்து வந்து விதிப்படி விவாகஞ் செய்துகொண்டார். அப்பொழுது அந்த நகரத்திலுள்ள ஜனங்கள் யாதவர்களுக்கு அதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மிக்க பிரியம் வைத்தவர்களானதால் பகவானுடைய கல்யாணத்தைத் தங்கள் தங்கள் வீட்டில் நடக்கும் கல்யாணமென்று நினைத்து உற்சவங் கொண்டாடினர்கள். ஸ்திரீகளும் புருஷர்களும் மிகவும் சந்தோஷமுள்ளவர்களாகவும், சுத்தமான ரத்னகுண்டலங்களைத் தரித்தவர்களாகவும் இருந்தார்கள். மேலுமவர்கள் பலவகையான அலங்காரத்

ளுள்ள கிருஷ்ணன் ருக்மிணி இவர்களுக்குப் பல வகையான வஸ்துக்களை உபகாரணங்களாகக் கொடுத்தார்கள். மேலும் அந்தப் பட்டணம் துவஜங்களாலும், பலவிதமான மாலை, வஸ்திரம், ரத்ன தோரணம் ஆகிய இவைகளாலும், ஒவ்வொரு கோபுர வாசலிலும் நெல்பொரி, அக்ஷதம், புஷ்பம் முதலிய மங்கள திரவியங்களாலும், பூரண கும்பங்களாலும், அகருதூபங்களாலும், தீபங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பின்னும் வீதிகளில் ஜலந் தெளிக்கப்பட்டிருந்தது; வாசலில் கட்டப்பட்டிருக்கும் வாழை மரம், பாக்கு மரம் முதலியவைகளால் பிரகாசித்தது; மேலும், ருக்மிணியின் விவாகத்திற்காக அழைக்கப்பட்ட மித்திரர்களான அரசர்கள் சைன்னியங்களுடன் வந்திருந்ததால் அவர்களுடைய மதங்கொண்ட யானைகள் அந்த வாழை மரம் முதலியவைகளைத் தொடுகின்றன. அப்பொழுது குருக்கள், சிருஞ்ஜயர்கள், கேகயர்கள், விதர்ப்பர்கள், யாதவர்கள், குந்திகள் ஆகியவர்கள் ஒருவருக்கொருவர் சேர்ந்து பேசிக்கொண்டு மிகவும் சந்தோஷத்தை அடைந்தார்கள். பகவான் ருக்மிணியை அபகரித்து வந்த கதையை எங்கும் ஜனங்கள் சொல்லிக் கானஞ் செய்தார்கள். அதனைக் கேட்டு அரசர்களும் ராசகுமாரிகளும் மிகவும் சந்தோஷத்தை அடைந்தார்கள். லக்ஷ்மீதேவியின் அம்சமான ருக்மிணியுடன் லக்ஷ்மிதேவியின் பர்த்தாவாகிய ஸ்ரீ கிருஷ்ணன் சேர்ந்திருப்பதைத் தரிசித்து, துவாரகவாசிகளான ஜனங்கள் மிகவும் சந்தோஷத்தை அடைந்தார்கள்.

# அத்தியாயம் 55

## பிரத்யும்ன ஜனனம்

வாசுதேவருடைய அம்சமான மன்மதன் முற்காலத்தில் ருத்திரனுடைய கோபத்தால் எரிக்கப்பட்டு, சரீரமில்லாதவனாக இருந்தான். அவன் திரும்பவும் சரீரத்தை அடைய விரும்பி ஸ்ரீ கிருஷ்ணனை அடைந்தான். அந்த மன்மதன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய வீரியத்திற்கு ருக்மிணியிடத்தில் பிரத்யுமனன் என்று பெயருடன் பிறந்தான். அவன் சகல குணங்களிலும் கிருஷ்ணனுக்குச் சமமாக இருந்தான். அவன் பிறந்து பத்து நாளைக்குள் இஷ்டப்படி ரூபமெடுக்கச் சக்தியுள்ளவனை சம்பரனென்ற அசுரன் அந்தக் குழந்தையைத் தனக்குச் சத்ருவென்று நினைத்து, ஒருவருக்குந் தெரியாமல் அதை அபகரித்து, சமுத்திரத்தில் போட்டுத் தன்னுடைய கிருகஞ் சென்றான். பின்பு சமுத்திரத்திலுள்ள ஒரு பருத்த மீன் அந்தக் குழந்தையை விழுங்கிற்று. அதன் பின் வலையர்கள் சமுத்திரத்தில் மீன் பிடிப்பதற்காக வலையை வீசும்பொழுது குழந்தையை விழுங்கிய மீனும், மற்ற மீன்களும் வலையில் அகப்பட்டு வலையர்களால் பிடிக்கப்பட்டன. அந்தப் பருத்த மீனை வலையர்கள் சம்பரனிடம் காணிக்கையாகக் கொடுத்தார்கள். அற்புதமான அந்த மீனைச் சமையல்காரர்கள் பாகசாலைக்குச் (சமையல் கட்டு) கொண்டுபோய்க் கத்தியால் பிளந்தார்கள். அதன் வயிற்றில் அற்புதமான ஒரு குழந்தை இருக்கக் கண்டு மாயாவதியினிடம் அந்தச் சிசுவைக் கொடுத்தார்கள். அதனைக் கண்டு மாயாவதி, "இதென்ன மீனின் வயிற்றில்

குழந்தை இருக்கிறதே” என்று சந்தேகிக்கும்பொழுது, நாரதர் அவ்விடம் வந்து அவளை நோக்கி, மத்ஸ்யத்தின் வயிற்றில் இந்தக் குழந்தை வந்த விஷயத்தை நன்றாகச் சொன்னார். அந்த மாயாவதி யென்பவள் மன்மதனுடைய பத்தினியாகிய ரதிதேவி. அவள் சம்பரனுடைய பாகசாலையில் அன்னம், பருப்பு முதலியவைகளைச் சமையல் செய்யும்படி சம்பரனால் ஏற்படுத்தப்பட்டிருந்தாள். மேலுமவள் ருத்திரனுடைய கோபத்தால் மன்மதன் எரிக்கப்பட்டுச் சரீரமற்றவனான பின் அவனுக்கு எப்பொழுது சரீரம் உண்டாகப்போகிறதென்று அதனை எதிர்பார்த்துக்கொண்டு, சம்பரனுடைய கிருகத்தில் வசித்திருந்தாள். அப்படிப்பட்ட மாயாவதி மிக்க அழகுள்ள அந்தக் குமாரனைப் பார்த்து முகம் மலர்ந்து, மன்மதனே இந்தக் குழந்தை யென்று தெரிந்துகொண்டு அவனிடத்தில் மிக்க அன்பு வைத்திருந்தாள். சொற்ப காலத்தில் அந்தக் குழந்தை யௌவன வயதை யடைந்தான். அப்பொழுது அவன் தன்னைப் பார்க்கும் ஸ்திரீகளுக்கு விளையாட்டை யுண்டுபண்ணினான். அப்பொழுது அந்த மாயாவதி தாமரைப் புஷ்பத்தின் இதழ்போன்ற கண்களுள்ளவரும், தொங்குகின்ற கைகளுள்ளவரும், மிக்க சௌந்தரியமுள்ளவரும், தனக்குப் பர்த்தாவுமான பிரத்யும்னரை வெட்கச் சிரிப்புள்ள பார்வையால் பார்த்துக்கொண்டு, அவரிடம் மன்மத விகாரமுள்ளவளாகி நின்றாள். அதனைக் கண்ட பிரத்யும்னர், “ஓ அம்ம! சாதாரண ஸ்திரீபோல் நீ வேறு எண்ணங்கொண்டிருப்பது சரியல்ல; நீ எனக்குத் தாயல்லவா?” என்றார். அதனைக் கேட்ட ரதியானவள் (மாயாவதி), “நீர் ஸ்ரீமந் நாராயணனுடைய புத்திரர்; நான் ரதி; நீர் மன்மதன்; ஆனதால் நான் உமக்குப் பத்தினி; இந்தச் சம்பரன் உம்மைக்

குழந்தையாக இருக்கும்பொழுதே (பிறந்து பத்து நாளைக்குள்) கிருஷ்ணனுடைய கிருகத்திலிருந்து அபகரித்து சமுத்திரத்தில் போட்டான். அப்பொழுது ஒரு மீன் விழுங்கிற்று. அதன் வயிற்றிலிருந்து உம்மை நான் எடுத்துக்கொண்டேன். உம்முடைய தாயான ருக்மிணி புத்திரனை விட்டுப் பிரிந்த குரரிபட்சிபோல் கதறுகிறாள். ஆனதால் இந்தச் சம்பரனை மோகனம் முதலிய மாயையால் கொல்லும். உமக்கு இவன் சத்ரு; பிறரால் கொல்லமுடியாதவன்; அநேக மாயைகளை அறிந்தவன்" என்று சொல்லி, சகல மாயைகளையும் நாசஞ் செய்யக் கூடிய மகா மாயா வித்தையை உபதேசித்தாள்.

17—24. பிரத்யும்னர் அதனைப் பெற்றுக்கொண்டு சம்பரனிடஞ் சென்று, 'யுத்தத்திற்கு வா' என்று அழைத்தார். சகிக்கமுடியாத நிந்தா வார்த்தைகளைச் சொல்லி, அவனுக்குக் கோபத்தை யுண்டுபண்ணினார். அதனைக் கேட்ட சம்பரன் காலால் மிதிக்கப்பட்ட சர்ப்பம்போல மிகவும் கோபங்கொண்டு, சிவந்த கண்களுள்ளவனாகி, கதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு வெளியில் வந்தான். மேலுமவன் வஜ்ரம்போல் கெட்டியான கதாயுதத்தைச் சுழற்றி, பிரத்யும்னரை நோக்கிப் பிரயோகித்தான். அதனைக் கண்ட பிரத்யும்னர் தமது கதையால் அந்தக் கதாயுதத்தை அடித்து, மிக்க கோபத்துடன் தமது கதாயுதத்தைச் சம்பரன்மீது பிரயோகித்தார். அப்பொழுது அந்த அசுரன் மயனுடைய மாயா பலத்தால் ஆகாயத்தில் மறைந்திருந்து கிருஷ்ணனுடைய புத்திரனுகிய பிரத்யும்னன்மீது அஸ்திரங்களை வர்ஷித்தான். அவைகளால் பீடிக்கப்பட்ட பிரத்யும்னர் சகல மாயைகளையும் நாசஞ்செய்யக்கூடியதும், அதிக ஸத்வ குணம் பொ[illegible]யதுமான வித்தையைப் பிரயோகித்தார்.

அசுரனும் காந்தர்வம், பைசாசம், குஹ்யகம், உரகம், ராக்ஷஸம் முதலிய பல அஸ்திரங்களைப் பிரயோகித்தான். பிரத்யும்னர் கூர்மையான கத்தியை யெடுத்து அவைகளையும், கிரீட குண்டலங்களுள்ளதும், சிவந்த மீசையுள்ளதுமான சம்பரனுடைய தலையையும் வெட்டினார். தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்துத் துதித்தார்கள்.

25—30. பின்பு ஆகாயத்தில் சஞ்சரிக்கும் சாமர்த்தியமுள்ளவளான மாயாவதி பிரத்யும்னரைத் தூக்கிக் கொண்டு கிருஷ்ணனுடைய அந்தப்புரஞ் சென்றாள். மின்னலுடன் மேகம் வந்தாற்போல் அந்தப்புரத்தில் ஆகாயத்திலிருந்து ரதியுடன் இறங்கிய பிரத்யும்னரைக் கண்டு அவ்விடத்திலுள்ள ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ணனென்று நினைத்து வெட்கப்பட்டு ஒளிந்துகொண்டார்கள். பிரத்யும்னர் மேகம்போலக் கருத்த நிறமுள்ளவராகவும், பீதாம்பரத்தைத் தரித்தவராகவும், தொங்குகின்ற கைகளுள்ளவராகவும், சிவந்த கண்களுள்ளவராகவும், கருத்தும் வக்ரமுமான மயிர்களால் அலங்கரிக்கப்பெற்றதும், புன்சிரிப்புள்ளதும், அழகு பொருந்தியதுமான முகமுள்ளவராகவும் இருந்ததனால் ஸ்ரீ கிருஷ்ணன் என்றே நினைக்கக் கூடியதாக இருந்தது. பின்பு அவர்கள் கிருஷ்ணனுக்கும் இவருக்குமுள்ள சொற்ப பேதத்தை மெள்ள மெள்ளக் கண்டுபிடித்து, உத்தம ஸ்திரீயுடனிருக்கும் அவருடைய சமீபஞ் சென்றார்கள்.

31—34. அப்பொழுது பிரத்யும்னரைப் பார்த்து அழகாகப் பேசக்கூடிய ருக்மிணியானவள் ஸ்நேகத்தால் பால்சுரந்த ஸ்தனங்களுள்ளவளாகி, முன்பு காணமற்போன தன்னுடைய குழந்தையை நினைத்துக்கொண்டாள். மேலும் அவள், "இந்தப் புருஷ[illegible]டன் யார்?"

தாமரைக் கண்ணனுகிய இவன் யாருடைய புத்திரன்? எவளுடைய கர்ப்பத்திலிருந்தவன்? எவ்விதப் புண்ணியஞ்செய்து இவனை எவள் புத்திரனுக அடைந்திருக்கிருள்? என்னுடைய குழந்தை பிரசவ கிருகத்திலிருந்தே காணுமற்போயிற்று. அந்தக் குழந்தை எவ்விடத்திலாவது ஜீவித்திருக்குமாளுல் இவனுக்குச் சமமான வயது, சரீரம் இவைகளுள்ளதாக இருக்கும். ஆனல் இவன் ஆகிருதி, அவயவங்கள், கண்ட சுவரம் (பேச்சுக் குரல்), நடை, சிரிப்பு, பார்வை இவைகளில் ஸ்ரீ கிருஷ்ணனை ஒத்திருக்கிறன். இதெப்படிப் பொருந்தும்? அல்லது, காணுமற்போன என்னுடைய குழந்தை இவன்தானே? இவனென்றே நினைக்கிறேன். இவனிடத்தில் எனக்கு மிக்க பிரியமுண்டாகியிருக்கிறது; )டது கை துடிக்கிறது" என்று

35—39. அந்தச் சமயத்தில் உத்தம சுலோகராகிய கிருஷ்ணன் தேவகி, வசுதேவர் இவர்களுடன் அவ்விடம் வந்தார். ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ப்ரத்யும்னருடைய பிறப்பு முதலியவைகள் நன்ருகத் தெரியுமாளுலும் மௌனமாக இருந்தார். அப்போது அவ்விடம் வந்த நாரதர், பிறந்தவுடன் குழந்தையைச் சம்பரன் தூக்கிக்கொண்டு போனது முதலியவைகளை விஸ்தாரமாகச் சொன்னர். இந்த அற்புதமான செய்தியைக் கேட்ட கிருஷ்ணனுடைய அந்தப்புர ஸ்திரீகள் வெகு நாளாகக் காணுமற்போய் இப்பொழுது திரும்பவும் வந்தவரான ப்ரத்யும்னரைப் பார்த்து மிகவும் சந்தோஷித்தார்கள். மேலும் தேவகி, வசுதேவர், ராமகிருஷ்ணர்கள், அவர்களுடைய ஸ்திரீகள் ஆகியவர்கள் தம்பதிகளான ப்ரத்யும்ன ரதிகளைத் தழுவி மிகவும் ஆனந்தத்தை யடைந்தார்கள். பின்னும் துவாரகாவாசிகளான ஜனங்கள், காணுமற்

போன பிரத்யும்னன் வந்ததைக் கண்டு, "மரணமடைந்தவன் பிழைத்து வந்தாற்போல இவன் தெய்வாதீனமாகத் திரும்பி வந்தான்" என்று சொல்லிக்கொண்டார்கள்.

40. பிரத்யும்னர் ஸ்ரீகிருஷ்ணனுக்குச் சமமான ஆக்ருதியுள்ளவராக இருந்ததால் அந்த ஸ்திரீகள் தமது பர்த்தாவென்று நினைத்தது ஆச்சரியமல்ல. நினைத்த மாத்திரத்தில் மனத்தைக் கலக்குகிறவனாகிய மன்மதனை நேரில் பார்த்தால் மனம் ஏன் கலங்காது? மேலும், லக்ஷ்மிக்கு வாசஸ்தலமாகிய கிருஷ்ணனுடைய பிரதிபிம்பமும், மன்மதனுமாகிய பிரத்யும்னர் ஸ்திரீகளுடைய மனத்தை அபகரிப்பதில் என்ன ஆச்சரியம்?

## அத்தியாயம் 56

### சத்தியபாமையின் விவாகம்

ஸத்ராஜித் என்பவர் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஒரு சமயம் அபராதஞ் செய்து, அதனை நிவர்த்தித்துக்கொள்வதற்காகத் தம்முடைய கன்னிகையான சத்தியபாமையையும், ஸியமந்தகமென்ற ரத்தினத்தையும் ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தார் என்று சுகர் சொல்ல, அதனைக் கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பிராம்மண! ஸத்ராஜித் என்பவர் கிருஷ்ணனுக்கு என்ன அபராதஞ் செய்தார்? ஸியமந்தகமென்ற ரத்தினம் அவருக்கு எப்படிக் கிடைத்தது? அவர் எதற்காகத் தமது பெண்ணாகிய சத்தியபாமையைக் கிருஷ்ணனுக்குக் கொடுத்தார்?" என்று கேட்டார்.

8—9. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "ஸத்ராஜித் என்பவர் சூரியனை உபாஸித்து சூரியனிடம்

பக்தி செய்தார். அவருடைய பக்தியால் சூரியன் மிகவும் சந்தோஷத்தை அடைந்து, அவருக்குத் தோழனாகவுமிருந்தார். அதனால் சூரியன் ஸத்ராஜித் என்பவருக்கு ஒரு ரத்தினத்தைக் கொடுத்தார். அந்த ரத்தினத்தைக் கழுத்தில் ஹாரமாகத் தரித்துக்கொண்டு ஸத்ராஜித் துவாரகைக்கு வந்தார். அவர் சூரியன்போலப் பிரகாசித்ததனால் அவருடைய தேஜஸால் ஸத்ராஜித் என்று தெரிந்துகொள்ள முடியாமலிருந்தது. அவருடைய தேஜஸால் கண் தெரியாதவர்களாகி ஜனங்கள் சூரியன் என்று சந்தேகித்துச் சொக்கட்டான் விளையாடிக்கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, “ஓ நாராயணா! சங்கம், சக்கரம், கதாயுதம் இவைகளைத் தரிப்பவரே! தாமோதர! தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! கோவிந்த! யதுநந்தன! உமக்கு நமஸ்காரம்; இந்த சூரியன் உம்மைத் தரிசிப்பதற்காக வருகிறார்; அவருடைய தேஜஸால் மனிதர்களுடைய கண்கள் அடக்கப்படுகின்றன; தேவர்கள் உம்முடைய மார்க்கத்தைத் தேடுகிறார்களல்லவா? நீர் இப்பொழுது யது வம்சத்தில் அவதரித்து மறைந்திருப்பதால் உம்மைத் தரிசிப்பதற்காக சூரியன் வருகிறார்” என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட கிருஷ்ணன் சிரித்து, “இவர் சூரியனல்ல; ஸத்ராஜித் ரத்தினத்துடன் வருகிறார்” என்றார்.

10—29. பின்பு ஸத்ராஜித் தம்முடைய கிருகஞ் சென்று, மங்கள காரியங்களைச் செய்து பிராம்மணர்களைக் கொண்டு ஸ்வஸ்திவாசனம் முதலியவைகளைச் செய்து, அந்த ரத்தினத்தைப் பூஜாகிருகத்தில் ஸ்தாபித்தார். அந்த ரத்தினம் ஒவ்வொரு தினத்திலும் எட்டு பாரம் சுவர்ணத்தை யுண்டுபண்ணிற்று. எந்தவிடத்தில் இந்த ரத்தினம் பூஜிக்கப்படுகிறதோ, அந்தவிடத்தில்

பஞ்சம், அகால மரணம், அமங்களம், மன வருத்தம், சரீர வியாதி, அசுபங்கள் இவைகள் நேரிடுகிறதில்லை. மேலும், அவ்விடத்தில் மாயாவிகள் வசிக்கமாட்டார்கள். பின்னொருகால் ஸ்ரீ கிருஷ்ணன் உக்கிரசேனருக்காக அந்த ரத்தினத்தைக் கொடுக்கும்படி ஸத்ராஜித்தைக் கேட்டார். அவர் பணத்தாசையால், "கிருஷ்ணன் கேட்கும்பொழுது கொடாமலிருப்பது சரியல்ல" என்று எண்ணமல் ரத்தினத்தைக் கொடுக்கவில்லை. பின்பு ஒரு நாள் ஸத்ராஜித் என்பவருடைய சகோதரனாகிய பிரசேனன் என்பவன் அந்த ரத்தினத்தைத் தரித்துக் கொண்டு குதிரையின்மீதேறி வேட்டைக்குச் சென்றான். அப்பொழுது ஒரு சிங்கம் பிரசேனனைக் கொன்று, அந்த ரத்தினத்தை எடுத்துக்கொண்டு ஒரு குகையுள் சென்றது. அந்தச் சிங்கத்தை ஜாம்பவான் கொன்று, அந்த ரத்தினத்தை எடுத்துக்கொண்டு தம்முடைய குகைக்குச் சென்று, ரத்தினத்தைக் குழந்தைக்கு விளையாட்டுச் சாமானாகச் செய்தார். (தொட்டிலில் கட்டினார். பகவானிடத்தில் சமர்ப்பியாமல் அநுபவிப்பவர்கள் கெடுதியடைவார்களென்று காட்டப்பட்டது.) பின்பு ஸத்ராஜித் சகோதரனைக் காணமல் மிகவும் வருத்தமடைந்தார். மேலும் அவர், 'ரத்தினத்துடன் காட்டிற்குச் சென்ற என்னுடைய சகோதரன் கிருஷ்ணனால்தான் கொல்லப்பட்டிருக்கவேண்டும்' என்று சொன்னார் (கிருஷ்ணன் ரத்தினத்தில் ஆசைப்பட்டிருந்தமையால்). அதனைக் கேட்டு ஜனங்களும் அப்படியே ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ள ஆரம்பித்தார்கள். அதனைக் கேட்ட பகவான், தமக்கு நேர்ந்த அபகீர்த்தியை நிவர்த்தித்துக் கொள்வதற்காகப் பட்டணத்து ஜனங்களை அழைத்துக் கொண்டு, பிரசேனன் சென்ற மார்க்கமாகச் சென்றார்.

வனத்தில் பிரசேனனும் அவனுடைய குதிரையும் சிங்கத்தால் கொல்லப்பட்டிருப்பதையும், அந்தச் சிங்கம் மலையின் தாழ்வரையில் கொல்லப்பட்டிருப்பதையும் பார்த்தார். ஜனங்களுக்கும் காண்பித்தார். மேலும் அவர் ஜனங்களை வெளியில் நிறுத்தி தாமொருவராகக் குகைக்குட் சென்றார். அது மிக்க இருளுள்ளதாக இருந்தது. அந்தக் குகையில் குழந்தைக்கு விளையாட்டுச் சாமானகச் செய்யப்பட்டிருக்கும் அந்த ரத்தினத்தைக் கிருஷ்ணன் பார்த்து, அதனை யெடுத்துக்கொள்வதற்காகக் குழந்தையின் சமீபத்தில் நின்றார். ஒருபொழுதும் பார்க்கப்படாத அபூர்வ மனிதரான கிருஷ்ணனைக் கண்டு, குழந்தையின் அருகிலிருந்த உபமாதா (வேலைக்காரி) பயந்து உரக்கக் கதறினள். அதனைக் கேட்டு மிக்க பலசாலியான ஜாம்பவான் மிக்க கோபத்துடன் ஓடிவந்தார். பின்னும் அவர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை அறியாமல், அவரைச் சாமானிய மனிதனாக நினைத்துத் தமக்கு யஜமானனெனினும் அவருடன் யுத்தஞ் செய்தார். அவ்விருவர்களும் கற்கள், மரங்கள், கைகள் இவைகளாகிய ஆயுதங்களால் யுத்தஞ்செய்தார்கள். அது மாமிசத்திற்காக இரண்டு பருந்துகள் யுத்தஞ்செய்தாற்போலிருந்தது. அவ்விருவர்களும் இடிபோலக் கெட்டியான முஷ்டிகளால் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு இருபத்தெட்டு நாள் இரவும் பகலும் இடைவிடால் யுத்தஞ்செய்தார்கள். கிருஷ்ணனுடைய முஷ்டிகளால் அடிக்கப்பட்ட ஜாம்பவானுடைய கை கால் முதலிய அவயவங்கள் சோர்வு அடைந்தன. அவருடைய சரீரம் முழுவதும் வியர்வையை அடைந்தது; பலங் குறைந்தது. அப்பொழுது ஜாம்பவான் மிகவும் ஆச்சரியமடைந்து கிருஷ்ணனை நோக்கி, "நீர் சகல பிராணிகளுக்கும் பிராணனுகவும்,

இந்திரியங்களின் சக்தியாகவும், இருதயத்தின் சக்தியாக வும், தேக பலமாகவும் இருக்கிறீர் என்பது எனக்குத் தெரியும். மேலும், நீர் மகாவிஷ்ணு; புராண புருஷன்; எல்லாவற்றையும் படைத்தவர்; அதிபதி; நீர் சகல பிரஜாபதிகளையும் சிருஷ்டித்தவர்; சிருஷ்டிக்கப்பட்ட சகல வஸ்துக்களுக்கும் நீர் உபாதான காரணம் (முக்கிய காரணம்). மேலும் நீர், கால சுரூபியாகவும் இருக் கிறீர்; பரமேசுவரர் ; சகல ஆத்மாக்களுக்கும் ஆத்மா வாக இருப்பவர் ; நீர் ஸ்ரீ ராமனாக அவதரித்திருக்கும் பொழுது சமுத்திரனிடம் கோபங்கொண்டு அதனைப் பார்த்தீர். அதனால் முதலை, திமிங்கலம் முதலியவைக ளடங்கிய சமுத்திரம் மேலும் கீழுமாகக் கலங்கி மார்க் கத்தைக் கொடுத்தது. அதன் வழியாக அணை கட்டி னீர். அதனால் உம்முடைய கீர்த்தி பிரகாசிக்கிறது. பின்பு அந்த சேதுவின் வழியாக லங்கா நகரஞ் சென்று அந்தப் பட்டணத்தை எரித்தீர். பின்பு உம்முடைய பாணங்களால் வெட்டப்பட்ட ராவணனுடைய தலைகள் பூமியில் விழுந்தன. அப்படிப்பட்ட பகவான் என்று எனக்குத் தெரியும்" என்றார்.

30—34. இப்படித் தம்மைத் தெரிந்துகொண்ட ஜாம்பவானைத் தேவகியின் புத்திரராகிய கிருஷ்ணன், க்ஷேமத்தைச் செய்யக்கூடிய தமது திவ்ய ஹஸ்தத்தால் தடவிக்கொடுத்து, "ஓ கரடிகளுக்கு அதிபதியே! வீணான அபகீர்த்தி எனக்கு வந்திருப்பதால் அதனை நிவர்த்தித்துக்கொள்வதற்காக இந்த ரத்தினத்தைத் தேடிக்கொண்டு இவ்விடம் வந்தேன்" என்று மிகுந்த கிருபையுடன் பக்தனை நோக்கி, மேகம் கர்ஜிப்பதுபோல உரக்கச் சொன்னார். அதனைக் கேட்ட ஜாம்பவான் அந்த ரத்தினத்தைப் பகவானிடத்தில் சமர்ப்பித்துத்

தமது பெண்ணுகிய ஜாம்பவதி யென்பவளையும் கொடுத் தார். பின்னும் அவர், மற்றும் சிறந்த ரத்தினங்களால் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜித்தார். அதனுல் பகவான் சந்தோ ஷித்து, மிக்க பிரீதியுடன் ஜாம்பவானுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தார்.

35—47. குகையின் வாயிற்படியிலிருந்த ஜனங்கள் பன்னிரண்டு நாட்கள் கிருஷ்ணனுடைய வரவை எதிர் பார்த்திருந்தும், கிருஷ்ணன் குகையிலிருந்து வெளியில் வராததனுல் மிகவும் துக்கித்து, துவாரகைக்குச் சென் ருர்கள். அதனைக் கேட்டு தேவகியும், ருக்மிணி தேவியும், வசுதேவரும், ஸுஹிருத்துக்களும், பந்துக்களும் கிருஷ் ணனைப் பாராமல் துக்கித்தார்கள். மேலும், துவாரகா வாசிகளான ஜனங்கள் ஸத்ராஜித்தை நிந்தித்துக்கொண்டு, "கிருஷ்ணன் க்ஷேமமாகத் திரும்பி வரவேண்டும்" என்று சந்திரபாகாவென்ற துர்க்கா தேவியைப் பூஜித்தார்கள். இப்படி அவர்கள் துர்க்கையைப் பூஜிக்க அவள் அவர்களை ஆசிர்வதித்தாள். அதனுல் ஸ்ரீ கிருஷ்ணன் குகையி லிருந்து வெளிக் கிளம்பி ரத்தினத்துடனும் ஜாம்பவதி யுடனும் ஜனங்களைச் சந்தோஷிக்கச் செய்தார். மரண மடைந்தவன் திரும்பி வந்தாற்போல் பகவான் ரத்தினத் துடனும், ஜாம்பவதியுடனும் வந்ததைக் கண்ட எல்லா ரும் மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள். அதன்பின் ஸ்ரீ கிருஷ்ணன் உக்கிரசேனருடைய முன்பாக சபையில் ஸத்ராஜித்தை அழைப்பித்து, ரத்தினம் கிடைத்த மார்க் கைச் சொல்லி, ரத்தினத்தை அவரிடம் கொடுத்தார். அப்பொழுது ஸத்ராஜித் மிகவும் வெட்கமடைந்து, தலை குனிந்து, தாம் செய்த குற்றத்தால் மனவருத்தமடைந்து, ரத்தினத்தை வாங்கிக்கொண்டு தம்முடைய கிருகஞ் சென்ருர். பின்னும் அவர், "மிக்க பலிஷ்டாரிபு

கிருஷ்ணனுக்கு அபராதஞ்செய்து, அவருடைய விரோதத்தைச் சம்பாதித்துக்கொண்டோமே, இதனால் என்ன கெடுதி நேருமோ, இதற்கு என்ன செய்யலாம்? எதைச் செய்தால் எனக்கு க்ஷேமமுண்டாகும்? எதைச் செய்தால் ஜனங்கள் நிந்திக்காமலிருப்பார்கள்? நான் தீர்க்கமான ஆலோசனையில்லாமல் பணத்தில் ஆசையாய் மூடனாகிக் கிருஷ்ணனுக்கு அபராதஞ் செய்தேனே? ஆனால் அதனை நிவர்த்தித்துக்கொள்வதற்காக அந்த ரத்தினத்தையும், என்னுடைய பெண்ணாகிய ஸ்திரீ ரத்தினத்தையும் கிருஷ்ணனிடம் சமர்ப்பித்து, கிருஷ்ணனை மணப்பிள்ளையாகச் செய்துகொள்ளுகிறேன். இப்படிச் செய்தால் அவர் நம்மிடத்தில் பிரியப்படுவார். இது நல்ல உபாயம். இல்லாவிட்டால் இதற்கு நிவர்த்தியில்லை" என்று யோசித்து, அந்த ரத்தினத்தை எடுத்துக்கொண்டு தமது பெண்ணாகிய சத்தியபாமையுடன் கிருஷ்ணனிடஞ் சென்று, பெண்ணையும் ரத்தினத்தையும் பகவானிடம் சமர்ப்பித்தார். அந்தப் பெண் மேலான சுபாவம், ரூபம், ஔதாரியம் முதலிய நற்குணம் பொருந்தியவள்; அவளை அநேகர் கல்யாணஞ் செய்துகொள்ள விரும்பித் தங்களுக்குக் கொடுக்கும்படி ஸத்ராஜித்தைக் கேட்டதுண்டு. அப்படிப்பட்ட உத்தம குணங்கள் பொருந்திய சத்தியபாமையை ஸ்ரீ கிருஷ்ணன் விதிப்படி விவாகஞ் செய்துகொண்டார். மேலும் ஸ்ரீ கிருஷ்ணன் ஸத்ராஜித்தை நோக்கி, "இந்த ரத்தினம் நமக்கு வேண்டாம். சூரிய பக்தராகிய உம்மிடத்திலேயே இருக்கட்டும். இதன் பயனை நாம் அடைவோம்" என்றார். (உமக்குப் புத்திரனில்லாததனால் உம்முடைய தனங்கள் யாவும் என்னுடையதுதான் என்று கருத்து.)

நோட்டு.

[எட்டுபாரம் நான்கு நெல்கள் கொண்ட நிறை. குஞ்ஜம் ஐந்து குஞ்சம் பணமென்னப்படும். எட்டு பணங்கள் கொண்டது தரண மெனப்படும். எட்டு தரணங்கள் கொண்டது கர்ஷமெனப்படும். நான்கு கர்ஷங் கொண்டது பலமெனப் படும். நூறு பலங்கொண்டது துலாமெனப்படும். இருபது துலாங்கொண்டது பாரமெனப்படும்.]

## அத்தியாயம் 57

### கிருஷ்ணன் சததன்வாவைக் கொன்றது

பாண்டுவின் புத்திரர்களாகிய தர்மபுத்திரர் முதலியவர்களும், குந்தியும் அரக்கு மாளிகையில் எரிக்கப்பட்டு மரணமடைந்தார்கள் என்ற சமாசாரத்தை ஸ்ரீ கிருஷ்ணன் கேள்விப்பட்டு அவர்கள் ஜீவித்திருக்கிறார்களென்ற உண்மையை அறிந்தவராயினும் அறியாதவர்போல் திருதராஷ்டிரர் முதலியவர்களை துக்கப் பிரச்னஞ் செய்வதற்காகப் பலராமனுடன் ஹஸ்தினபுரஞ் சென்றார். அவ்விடத்தில் பீஷ்மர், திருதராஷ்டிரர், விதுரர், காந்தாரி, துரோணர் ஆகிய இவர்களைப் பார்த்து இராம கிருஷ்ணர்கள், 'ஐயோ! கஷ்டம்' என்று சொல்லிச் சமதுக்கர்களாக அழுதார்கள்.

3—24. அந்தச் சமயம் துவாரகையில் அக்ரூரர், கிருதவர்மா இவர்கள் சததன்மா என்பவரை நோக்கி, "இந்த ஸத்ராஜித் பெண்ணை நமக்குக் கொடுப்பதாக உறுதிசொல்லி, அப்படிச் செய்யாமல் நம்மை விரோதித்து ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தான். மேலும், சகோதரனாகிய பிரசேனன் மரணமடைந்த பின் இவன் ஏன் உயிரை விடவில்லை? ஆனதால் இவனுடைய [illegible]

பிடுங்கிக்கொள்ளக்கூடாது" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட மிக்க அசத்தாகிய சததன்வா புத்தி மயங்கி, அவர்களுடைய வார்த்தையை அங்கீகரித்து, மரணம் சமீபித்துவிட்டதனால் ஸத்ராஜித்தைத் தூங்கும் சமயத்தில் கொன்றான். ஸ்திரீகள் அனாதர்கள்போலக் கதறும்பொழுது அவர்களை லட்சியஞ் செய்யாமல் கசாப்புக்கடைக்காரன் பசுவைக் கொல்வதுபோல ஸத்ராஜித்தைக் கொன்று, அந்த ரத்தினத்தை எடுத்துக்கொண்டு சென்றான். சத்தியபாமையும் தன்னுடைய தகப்பனார் சததன்வாவினால் கொல்லப்பட்டதைப் பார்த்து மிக்க துக்கத்தை அடைந்து, "கஷ்டம்; நான் அடிக்கப்பட்டேன். ஓ அண்ணா! ஓ அண்ணா" என்று கதறினாள். மேலும் அவள் எண்ணெய்க் கொப்பரையில் மரித்த தந்தையை வைத்துவிட்டு அஸ்தினபுரஞ் சென்றாள். பின்னுமவள் அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்து, மிகுந்த தாபமுள்ளவளாகித் தந்தையின் மரணத்தைத் தெரிவித்தாள். பகவான் சகல விஷயங்களையும் அறிந்தவரானாலும், அதைக் கேட்டு உலக வழக்கப்படி, "நமக்கு மிகுந்த கஷ்டம் நேர்ந்தது" என்று சொல்லிக் கண்ணீரைப்பெருக்கி அழுதார். பலராமனும் துக்கித்தார். பின்பு ஸ்ரீகிருஷ்ணன், பலராமன், சத்தியபாமை இவர்களுடன் துவாரகா நகரஞ் சென்று சததன்வாவைக் கொன்று, அந்த ரத்தினத்தைப் பிடுங்கிக்கொள்ளவேண்டுமென்று முயன்றார். அதனைக் கேள்விப்பட்ட சததன்வாவென்பவன் பயந்து உயிரைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பிக் கிருதவர்மாவென்பவரிடஞ் சென்று, தனக்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அதனைக்கேட்ட கிருதவர்மாவென்பவன் எல்லாவற்றிற்கும் ஈச்வரர்களான ராமகிருஷ்ணர்களுக்கு நான் அபராதஞ்

செய்யமாட்டேன். அவர்களுக்கு அபராதஞ்செய்பவன் க்ஷேமத்தை அடைவானு? அவர்களை விரோதித்ததால் கம்ஸனும், அவனைச் சார்ந்தவர்களும் நாசமடைந்தார்கள். ஜராசந்தன் பதினேழுதரம் அவர்களுடன் யுத்தஞ்செய்தும் அபஜயத்தை படைந்து, ரதமில்லாமல் நடந்து சென்றான். ஆனதால் அவர்களை ஜயிப்பதற்கு யாரால் முடியும்" என்றான். அதனைக் கேட்ட சததன்வா அக்ரூரரிடஞ்சென்று, அவரைத் தனக்கு சகாயஞ்செய்யவேண்டுமாறு கேட்டுக்கொண்டான். அதனைக் கேட்ட அக்ரூரர், "ஈசுவரர்களான ராமகிருஷ்ணர்களுடைய பலத்தை யறிந்தவன் அவர்களை விரோதித்துக்கொள்வானு? எவர் இந்த ஜகத்தை விளையாட்டாகப் படைக்கிறாரோ, எவர் காப்பாற்றுகிறாரோ, சம்கரிக்கிறாரோ, எந்தப் பகவானுடைய மாயையால் மோகித்து பிரஜாபதிகளும் எவருடைய உண்மையை அறியவில்லையோ, எவர் ஏழு வயதுச் சிறுவனுக இருக்கும்பொழுது ஒரு கையால் கோவர்த்தன மலையைத் தூக்கி, சிறுவன் நாய்க்குடையைப் பிடித்தாற்போல் குடையாகப் பிடித்தாரோ, அந்தக் கிருஷ்ணனை நமஸ்கரிக்கிறேம். அவர் அற்புதமான கர்மங்களைச் செய்தவர்; நாசமில்லாதவர்; எல்லாவற்றிற்கும் ஆதியாக இருப்பவர்; கூடஸ்தர்; (கூடம்போலிருப்பவர்; தட்டானுடைய பட்டரைக்குக் கூடமென்று பெயர். அது தன்னிடம் வந்த தங்கம் முதலியவைகளை ஆபரணங்களாக மாற்றித் தான் விகாரத்தை அடையாமலிருப்பதுபோல் விகாரமற்றவரென்று கருத்து) எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர். ஆனதால் அவருக்கு அபராதஞ்செய்யமாட்டேன்" என்றார். அதனைக் கேட்ட சததன்வா, அந்த ரத்தினத்தை அவரிடம் கொடுத்துவிட்டு, நூறு யோசனை தூரம் செல்லக்கூடிய குதிரையின்

சென்றான். ராமகிருஷ்ணர்களும் 'கருடத்வஜமுள்ள ரதத்தின்மீதேறிக்கொண்டு குருவை (மாமனாரை)க் கொன்றவனான சததன்வாவைத் துரத்தினார்கள். பின்பு மிதிலா நகரத்தின் அருகிலுள்ள தோட்டத்தில் சததன்வாவின் குதிரை களைத்துக் கீழே விழுந்தது. சததன்வா அதை விட்டிறங்கிக் காலால் நடந்து ஓடினான். ஸ்ரீ கிருஷ்ணனும் மிகுந்த கோபத்துடன் அவன்பின் ஓடினார். இப்படிப் பதாதியாக ஓடும் சததன்வாவின் பின் பகவான் ஓடி, கூர்மையான முனையுள்ள சக்கரத்தினால் அவனுடைய தலையை வெட்டி, அவனுடைய வஸ்திரத்தில் ரத்தின மிருக்கிறதாவென்று தேடினார். பின்னுமவர் பலராமனிடஞ் சென்று, "சததன்வாவை வீணாகக் கொன்றோம். அவனிடத்தில் ரத்தினமில்லை" என்றார். அதனைக் கேட்ட பலராமன், "அந்த ரத்தினத்தைச் சததன்வா எவனிடத்திலாவது கொடுத்திருக்கவேண்டும். ஆனதால் நீ துவாரகா நகரஞ் சென்று அந்தப் புருஷனைத் தேடவேண்டும். எனக்கு ஜனக மகாராஜன் மிகவும் மித்திரரானதால், அவரைப் பார்ப்பதற்காக மிதிலா நகரம் போகிறேன். நீ துவாரகைக்குப் போகலாம்" என்று சொல்லிப் பலராமன் மிதிலைக்குச் சென்றார்.

25—27. அப்பொழுது மிதிலா நகரத்து அரசனாகிய ஜனக மகாராஜன் அந்தப் பலராமனைப் பார்த்து, சீக்கிரமாக எழுந்து மிகுந்த பிரியத்துடன் பூஜிக்கத்தக்கவரான பலராமனைப் பூஜித்தார். அதனைப் பெற்றுக் கொண்ட பலராமன் அந்த நகரத்தில் சில வர்ஷ காலம் வசித்தார். அந்தச் சமயத்தில் திருதராஷ்டிரருடைய குமாரனாகிய துரியோதனன் மகாத்மாவாகிய ஜனகரால் [illegible]க்கப்பட்டு, பலராமனிடம் கதாயுதத்தை அப்பியசித்

28—42. ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய பார்யையான சத்தியபாமைக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பினவரான தால் துவாரகா நகரஞ் சென்று சத்தியபாமையை நோக்கி, "சததன்வாவைக் கொன்றும் ரத்தினம் கிடைக்க வில்லை" என்பதைச் சொன்னார். பின்னுமவர் மரண மடைந்தவரான ஸத்ராஜித்தை உத்தேசித்துச் செய்ய வேண்டிய உத்தரக்கிரியைகள் எல்லாவற்றையும் பந்துக் களுடன் செய்வித்தார். அப்பொழுது ஸத்ராஜித்தைக் கொல்லும்படி சததன்வாவைத் தூண்டினவர்களான அக்ரூரரும், கிருதவர்மாவும் மிகவும் பயந்து நடுங்கினவர் களாக அயல் தேசஞ் சென்றார்கள். (அக்ரூரர் ஸ்ரீ கிருஷ் ணனுடைய அநுமதியின்மீது தான் துவாரகையை விட்டுச் சென்றார். கிருதவர்மாவைப் பகவான் உபேக்ஷித் தாரென்று கருத்து.) அக்ரூரர் துவாரகையை விட்டுச் சென்றபின் துவாரகா நகரத்தில் அரிஷ்டங்கள் உண்டா யின. ஜனங்களுக்கு சரீர வியாதிகளும், மன வருத்தங் களும் நேர்ந்ததுமின்றி இடிவிழுவது, பூமி அசைவது முத லிய கெடுதிகளும் சம்பவித்தன. அப்பொழுது சில பெரி யோர்கள் சகல மகரிஷிகளாலும் தியானஞ் செய்யப்படும் ஸ்ரீ கிருஷ்ணன் இருக்குமிடத்தில் அரிஷ்டங்கள் சம்ப விக்குமா ? இவை அவருடைய சங்கல்பத்தால் உண்டா கின்றன" என்று நினையாமல், ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகி மையை மறந்து, "முன்னொரு கால் காசி தேசத்தில் மழை பெய்யாமல் பஞ்சமும் நேர்ந்தது. அப்பொழுது அந்தத் தேசத்து அரசன் அவ்விடம் வந்த சுபல்கரென்பவருக்குத் தம்முடைய புத்திரியான காந்தினி யென்பவளைக் கல் யாணஞ் செய்வித்தார். பின்பு மழைபெய்து ராஜ்யம் செழித்தது. அவருடைய புத்திரரான அக்ரூரரும் அவ் வளவு மகிமையுள்ளவர்; அவர் எவ்விடத்தில் வசிக்

கிரூரோ அவ்விடத்தில் மழை பெய்யும்; தாபங்கள் உண்டாகா; வைசூரி முதலிய உபத்திரவங்கள் இல்லை" என்று சொல்லிக்கொண்டார்கள். அதனைக் கேட்ட பகவான் 'அக்ரூரர் துவாரகையில் இல்லாமலிருப்பதுமாத்திரத்தால் அரிஷ்டங்களுண்டாகவில்லை; அந்த ரத்தினம் இல்லாமலிருப்பதுங் காரணம்' என்று யோசித்து, தூதர்களையனுப்பி அக்ரூரரை வரவழைத்தார்; அவருக்கு மரியாதை செய்தார்; பிரியமான வார்த்தைகளைச் சொன்னார். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் எல்லோருடைய அபிப்பிராயத்தையும் அறிந்தவராகையால் சிரித்துக்கொண்டு அக்ரூரரை நோக்கி, "ஓ அக்ரூரரே! சததன்வா ஸியமந்தகமென்ற ரத்தினத்தை உம்மிடம் கொடுத்திருக்கிறானென்பது முன்னமேயே நமக்குத் தெரியும். சத்ராஜித்துக்கு ஆண் சந்ததியில்லாததால் அவருடைய பெண்ணாகிய சத்தியபாமையின் புத்திரர்கள் அந்த ரத்தினத்தை அடையவேண்டியவர்களாகிறார்கள். மாதாமகருக்குச் செய்யவேண்டிய தர்ப்பணம், பிண்டதானம் முதலியவைகளைப் பெண்ணின் பிள்ளைகள் செய்துவிட்டு, அவருடைய தனத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் இந்த ரத்தினமானது மற்றவர்களால் காப்பாற்ற முடியாதது; நீர் நல்ல விரதங்களை அநுஷ்டித்தவரானதால் உம்மிடத்திலேயே இருக்கட்டும். ஆனாலும் இந்த ரத்தினத்தின் விஷயமாக நான் சொல்வதைப் பலராமன் ஒப்புக்கொள்ளவில்லை (நம்பவில்லை.) ஓ! மிகுந்த அதிருஷ்டமுள்ளவரே! அந்த ரத்தினத்தைக் காண்பித்து, பந்துக்களுக்கு என்னிடமிருக்கும் சந்தேகத்தை நிவர்த்தியும். நீர் அநேக யாகங்களை அநுஷ்டித்து வருவதால் அந்த ரத்தினம் உம்மிடத்தில் தான் இருக்கிறது" என்று நல்

வார்த்தையாகச் சொன்னார். அதனைக் கேட்ட சுபல்க ருடைய புத்திரராகிய அக்ரூரர், வஸ்திரத்தில் மறைத்து வைத்திருந்த சூரியன்போன்ற அந்த ரத்தினத்தை ஸ்ரீ கிருஷ்ணனிடம் கொடுத்தார். அதனைப் பகவான் பந்துக்களுக்குக் காண்பித்துத் தமக்கு நேர்ந்த அப வாதத்தை (ஸ்ரீகிருஷ்ணனே அக்ரூரரை தேசாந்திரம் அனுப்பினுரென்பதை) நிவர்த்தித்து, அந்த ரத்தினத்தை அக்ரூரரிடமே கொடுத்தார்.

43. எல்லாவற்றிற்கும் அதிபதியும், எங்கும் இருப் பவருமான பகவானுடைய இந்தச் சரித்திரம் பாபத்தைப் போக்கக்கூடியது ; மேலான மங்களத்தைக் கொடுக்கக் கூடியது ; ஆனதால் இதை எவன் படிக்கிறானே, பிறர் சொல்லக் கேட்கிறானே, தியானஞ் செய்கிறானே அவன் அபகீர்த்தியை அடையமாட்டான். (அதற்குக் காரண மான) பாபம் நிவர்த்தியடையும்; சகல க்ஷேமத்தையும் அடைவான்.

## அத்தியாயம் 58

### கிருஷ்ணன் காளிந்தி முதலியவர்களை விவாகஞ் செய்துகொண்டது

புருஷோத்தமராகிய பகவான் துருபத மகாராஜ னுடைய வீட்டில் வெளிப்பட்டவர்களாகிய பாண்டவர் களைப் பார்ப்பதற்காக யுயுதானர் முதலியவர்களுடன் இந்திரப்பிரஸ்தத்திற்குச் சென்றார். எல்லாவற்றிற்கும் அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணன் வருவதைக் கண்ட வீரர் பாண்டவர்கள் எழுந்திருந்தார்கள். அது, பிராண

௫ இந்திரியங்கள் சந்தோஷிப்பதுபோல இருந்தது. மேலும், வீரர்களான பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணனை ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். அதனால் அவர்கள் பாபங்களற்றவர்களானார்கள். பின்னுமவர்கள் அன்பு பொருந்திய சிரிப்புள்ள பகவானுடைய முகத்தைத் தரிசித்து சந்தோஷத்தை அடைந்தார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் தருமபுத்திரரையும், பீமசேனரையும் நமஸ்கரித்தார். அர்ச்சுனனை ஆலிங்கனஞ் செய்துகொண்டார். நகுல சகாதேவர்கள் கிருஷ்ணனை நமஸ்கரித்தார்கள். பின்பு கிருஷ்ண பகவான் உத்தமமான சிங்காதனத்தில் உட்கார்ந்தார். அப்பொழுது தோஷமற்றவளான திரௌபதி வெட்கத்துடன் மெள்ள மெள்ள நடந்து வந்து ஸ்ரீ கிருஷ்ணனை நமஸ்கரித்தாள். பாண்டவர்கள் ஸாத்யகியைப் பூஜித்தார்கள். மற்றவர்களும் பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டு உட்கார்ந்தார்கள். பின்பு பகவான் தம்முடைய பிதாவின் சகோதரியான (அத்தை) குந்தியை நமஸ்கரித்தார். அவள் அன்புபொருந்திய பார்வையால் பகவானைக் கடாக்ஷித்து, பந்துக்களுடைய க்ஷேமத்தை விசாரித்துக் கண்ணீரைப் பெருக்கினள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் குந்தியை நோக்கி, 'நாட்டுப்பெண்ணுடன் க்ஷேமமா?' என்று கேட்டார்.

8—10. அதனைக் கேட்ட குந்தி அன்பு, அதைரியம் ஆகிய இவைகளுடன் கண்ணீரை பெருக்கி, அதனால் தொண்டையடைத்தவளாகி சகல கஷ்டத்தையும் நிவர்த்திப்பவரான கிருஷ்ணனைத் தரிசித்து, குந்தி தன்னால் அநுபவிக்கப்பட்ட கஷ்டங்களை நினைத்து, "ஓ கிருஷ்ணா! நீர் பந்துக்களான எங்களுடைய ஞாபகத்துடன் என்னுடைய சகோதரனாகிய அக்ரூரரை எப்பொழுது அனுப்பினீரோ அப்பொழுதே எங்களுக்கு க்ஷேமமுண்டாயிற்று. அப்-

பொழுதே நாதனுள்ளவர்களாக ஆனோம். நீர் சகல பிராணிகளுக்கும் மித்திரராகவும், ஆத்மாவாகவும் இருக்கிறீர். அதனால் உமக்கு தம்மைச் சார்ந்தவன், பிறன் என்ற பேதபுத்தியில்லை. ஆனால் யார் உம்மைத் தியானஞ் செய்கிறார்களோ, அவர்களுடைய இருதயத்திலிருந்து சகல தாபங்களையும் நிவர்த்திக்கிறீர்" என்றாள்.

11—12. பின்பு தருமபுத்திரர் கிருஷ்ணனை நோக்கி, "யோகிகளாலும் பார்க்கமுடியாதவராகிய உம்மை அற்ப புத்தியுள்ளவனாகிய நான் இன்றைய தினம் தரிசித்தேன். இம்மாதிரி நான் என்ன புண்ணியஞ் செய்தேனோ, அறியேன்" என்று சொல்லி, மழைக்காலமாகிய நான்கு மாதங்களும் இவ்விடத்திலேயே வசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். ஸ்ரீ கிருஷ்ணனும் அதனை ஒப்புக்கொண்டு இந்திரப்பிரஸ்தத்தில் வசிக்கும் ஜனங்களுக்கு சந்தோஷத்தை யுண்டுபண்ணிக்கொண்டு அவ்விடத்தில் வசித்தார்.

13—19. ஒரு நாள் அர்ச்சுனன் வானர த்வஜமுள்ள ரதத்தின்மீதேறிக் காண்டீவமென்ற வில்லையும், குறைவற்ற பாணங்களுள்ள தூணீரங்களையும் எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடன் வனத்திற்குச் சென்றான். சத்துரு வீரர்களைக் கொல்பவராகிய அந்த அர்ச்சுனன் அநேக துஷ்ட மிருகங்களால் நிறைந்த வனத்தில் புகுந்து, புலி, பன்றி, எருமை, ருரு, சரபம், கவயம், கட்க மிருகம், மான்கள், சல்யக மிருகம், முயல் முதலியவைகளைப் பாணங்களால் அடித்தார். அடிக்கப்பட்ட மிருகங்களில் சுத்தமானவைகளை வேலைக்காரர்கள் எடுத்துப் பருவகாலத்தில் தர்மபுத்திரரிடம் சமர்ப்பித்தார்கள். அர்ச்சுனனோ களைப்படைந்து, தாகமுள்ளவராகி யமுனா நதிக்குச் சென்

ளுர். ஸ்ரீ கிருஷ்ணனும் அவருடன் அவ்விடஞ் சென்ளுர். மகாரதர்களான அவ்விருவர்களும் சுத்தமான யமுனையின் ஜலத்தில் ஸ்நானபானஞ் செய்து களைப்பை நிவர்த்தித் துக்கொண்டார்கள். அப்பொழுது அவர்கள் தங்களுக் குச் சமீபத்தில் ஒரு பெண் சஞ்சரிப்பதைக் கண்டார்கள். அவள் அழகான கண்களுள்ளவளாகவும், மனோகரங்க ளான பற்களால் பிரகாசிக்கும் முகமுள்ளவளாகவு மிருந் தாள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனால் தூண்டப்பட்டு அர்ச்சுனர் அந்தப் பெண்ணினிடம் வந்து, "ஓ நல்ல சுபாவமுள்ளவளே! நீ யார்? எங்கிருந்து வருகிருய்? எதைச் செய்ய விரும்புகிருய்? பர்த்தாவைத் தேடுகிறவள் போலத் தோன்றுகிருய்? எல்லாவற்றையும் சொல்" என்று கேட்டார்.

20—23. அதனைக் கேட்ட அந்தக் கன்னிகை அர்ச்சுனனை நோக்கி, 'நான் தேவராகிய சூரியனுடைய பெண். எல்லாராலும் பூஜிக்கத்தக்க ஸ்ரீ மகாவிஷ்ணு வைப் பர்த்தாவாக அடைய விரும்பி, மிக்க தவஞ்செய்து கொண்டிருக்கிறேன். லக்ஷ்மீபதியாகிய அந்தப் பகவா னைத் தவிர வேறொருவரையும் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வதில்லை. அனுதர்களை ஸம்ரக்ஷிப்பவரான ஸ்ரீ பக வான் என்னிடத்தில் சந்தோஷத்தை அடையட்டும். எனக்குக் காளிந்தி யென்று பெயர். யமுனையின் ஜலத் தில் எனது பிதாவாகிய சூரியனுல் ஏற்படுத்தப்பட்ட கிரு கத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தரிசனங் கிடைக்கும் வரை யில் வசிக்கிறேன்' என்று சொன்னுள். அதனைக் கேட்டு அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணனிடந் தெரிவித்தான். ஸ்ரீகிருஷ் ணன் முன்னமேயே இந்த சமாசாரத்தை அறிந்தவரான தால் அதைக் கேட்டுக் காளிந்தியை ரதத்திலேற்றிக்

கொண்டு இந்திரப்பிரஸ்தஞ் சென்று தருமபுத்திரரிடஞ் சென்றார்.

24—27. அப்பொழுது பாண்டவர்கள் கேட்டுக் கொண்டபடி அப்பொழுதே ஸ்ரீ. கிருஷ்ணன் விசுவகர்மாவைக் கொண்டு அவ்விடத்தில் அற்புதமான பட்டணத்தை யுண்டுபண்ணினார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் பந்துக்களுக்குப் பிரியத்தைச் செய்வதற்காக அவ்விடத்தில் வசித்து ஒப்புயர்வற்ற மகிமையுள்ளவரானாலும் அர்ச்சுனருக்குச் சாரதியாக இருந்தார். அப்பொழுது இந்திரனால் காப்பாற்றப்பட்ட காண்டவமென்ற வனத்தை அக்னிக்குக் கொடுத்து அவரைத் திருப்தி செய்தார். அதனால் அக்னிபகவான் காண்டீவமென்ற வில்லையும், வெண்மை நிறமுள்ள குதிரைகளையும், ரதத்தையும், குறைவற்ற பாணங்களுள்ள தூணீரங்களையும், சத்துருக்களால் பிளக்க முடியாத கவசத்தையும் அர்ச்சுனனுக்குக் கொடுத்தார். காண்டவ வனத்தில் வசித்துக்கொண்டிருந்த மயனை ஸ்ரீ கிருஷ்ணன் சம்ரட்சித்தார். அதனால் மயன் சந்தோஷித்து, கிருஷ்ணருடைய மித்திரரான தருமபுத்திரருக்கு அற்புதமான ஒரு சபையை யுண்டுபண்ணினன். பின்னொரு சமயம் அந்தச் சபையில் துரியோதனன் ஜலத்தைப் பூமியென்றும், பூமியை ஜலமுள்ள ஸ்தலமென்றும் பிரமித்தான்.

28—30. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் தருமபுத்திரரிடம் விடை பெற்று, பந்துக்களுக்குச் சொல்லிக்கொண்டு, ஸாத்யகி முதலியவர்களுடன் துவாரகைக்குச் சென்றார். அவ்விடத்தில் நல்ல ருதுவில் சுப நட்சத்திரங்கூடிய சுப தினத்தில் காளிந்தியைப் பகவான் விவாகஞ் செய்துகொண்டார். பந்துக்கள் மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள்.

31. அவந்தி தேசத்து அரசர்களான விந்தன், அநுவிந்தன் என்ற இருவர்களும் துரியோதனனைச் சார்ந்தவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய சகோதரியான மித்திரவிந்தா யென்பவள் ஸ்ரீ கிருஷ்ணனை விவாகஞ் செய்து கொள்ள விருப்பமுள்ளவளாக இருந்தாள். அதனை அவ்விருவர்களும் ஒப்புக்கொள்ளாமல் தடை செய்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தமக்கு அத்தையான ராஜாதி தேவியின் புத்திரியாகிய அந்த மித்திரவிந்தா என்பவளை எல்லா அரசர்களும் பார்த்திருக்கும் பொழுது பலாத்காரமாகக் கொண்டுவந்தார்.

32—46. கோசல தேசத்தில் நக்னஜித் என்ற ஒரு அரசன் இருந்தார். அவர் மிக்க தர்மிஷ்டர். அவருக்கு ஸத்யா என்ற பெயருள்ள ஒரு கன்னிகை இருந்தாள். அந்த அரசன் தம்மிடத்திலிருக்கும் ஏழு எருதுகளை எவன் ஜயிக்கிருனே, அவனுக்குத் தம்முடைய பெண்ணைக் கல்யாணஞ் செய்துகொடுப்பதாகப் பிரதிக்ஞை செய்திருந்தார். அந்த எருதுகள் கூர்மையான கொம்புகளுள்ளவையும், பிறரால் ஜயிக்க முடியாதவையாயும், துஷ்ட சுபாவமுள்ளவையாயுமாக இருந்தன. அதனால் அவைகளை ஒருவராலும் ஜயிக்க முடியவில்லை. அதனைக் கேள்விப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணன் மிகுந்த சைன்னியத்துடன் அந்த நகரத்திற்குச் சென்ருர். அந்த அரசன் ஸ்ரீ கிருஷ்ணன் வருகிறதைத் தெரிந்து, மிகுந்த பிரியத்துடன் ஆசனத்தை விட்டு எழுந்து எதிரில் சென்று அழைத்து, பூஜித்து, விசேஷ மரியாதை செய்தார். ஸ்ரீ கிருஷ்ணனும் அவரைச் சிலாகித்தார். நல்ல புருஷனை அடையவேண்டுமென்று விரதங்களை அநுஷ்டித்துக் கொண்டிருந்த அந்த ராஜகுமாரியும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, “என்னுல் அநுஷ்டிக்கப்பட்ட விரதம் உண்மை

யாறல் இவரே எனக்குப் பர்த்தாவாகவேண்டும்; என்னு டைய எண்ணம் பூர்த்தியாகவேண்டும்'' என்று பிரார்த் தித்தாள். மேலும் அரசன் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜித்து, “ஓ நாராயணா! ஜகதீச! ஆத்மானந்தத்தால் பூரணராக இருக்கும் உமக்கு மிக்க அற்பனுகிய நான் என்ன செய்ய வேண்டும்? லக்ஷ்மீதேவியும் பிரம்மதேவரும், லோகபால கர்களும் உம்முடைய பாததூளியைத் தரிக்கிறார்கள். பின் னும் நீர் தம்மால் செய்யப்பட்ட மரியாதையைக் காப் பாற்றுவதற்காக லோகத்தில் விளையாட்டாக அவதரிக் கிறீர். அப்படிப்பட்ட பகவானுகிய உமக்கு என்னுல் செய்யக்கூடியதென்ன? நான் எதைச் செய்து உம்மைச் சந்தோஷிக்கச் செய்வேன்'' என்றார். அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் அரசனை நோக்கி, “ஓ ராஜன்! க்ஷத்திரி யன் தன் ஜாதிக்குரியவைகளைச் செய்யவேண்டுமே யொழியப் பிறரை யாசிக்கக்கூடாது என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனல் உம்முடைய சம்பந்தம் வேண்டுமென்ற ஆசையால் உம்முடைய பெண்ணை எனக் குக் கன்னிகாதானஞ் செய்யவேண்டுமென்று யாசிக் கிறேன். ஆனல் கன்னிகைக்காகப் பணம் முதலியவை கொடுக்கமாட்டேன்'' என்று சிரித்துக்கொண்டு மேகம் போல் உரக்கச் சொன்னர். அதனைக் கேட்ட அரசன் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, “ஓ நாத! என்னுடைய பெண் ணுக்குத் தகுதியான வரன் உம்மைவிட வேறொருவரு மில்லை. சகல குணங்களும் உம்மிடத்திலேயே வசிக்கின் றன. லக்ஷ்மீதேவி உம்முடைய சரீரத்தில் நித்தியமாக வசிக்கிறாள். ஆனல் பெண்ணின் விவாக விஷயத்தில் வர னுடைய பராக்கிரமத்தைப் பரீக்ஷிப்பதற்காக ஒரு பிர திக்ஞை செய்திருக்கிறேன். அதென்னவென்றல், இதோ ஏழு எருதுகளிருக்கின்றனவல்லவா! இவைகள் பழக்கப்

ரவல்ல; பிறரால் ஜயிக்கப்படாதவை. இவைகளை யார் ஜயிக்கிறுரோ, அவனுக்குப் பெண்ணைக் கொடுக்கிறேமென்று பிரதிக்ஞை செய்திருக்கிறேன். அநேக இராஜ குமாரர்களை இந்த எருதுகள் கிழித்துக் கொன்றன. ஓ யதுக்களைச் சந்தோஷப்படுத்துகிறவரே! லக்ஷ்மீ பதியே! நீர் இந்த எருதுகளை அடக்குவீரானுல் என்னுடைய பெண்ணுக்குத் தகுதியான வரனுவீர்" என்று சொன்னுர். அதனைக் கேட்ட பகவான் அப்படியே செய்கிறேமென்று ஒப்புக்கொண்டு, கச்சை கட்டிக்கொண்டு தமமை ஏழு வகையாகச் செய்துகொண்டு விளையாட்டாக அவைகளை நிக்கிரகித்தார் (அடக்கினுர்). பின்னுமவர் மதம், பலம் இவைகளற்றவைகளான அந்த எருதுகளைக் கயிற்றுல் கட்டி இழுத்தார். அது சிறுவன் மரப்பொம்மைகளை இழுத்தாற்போலிருந்தது.

47—52. பின்பு அரசன் ஆச்சரியமடைந்து சந்தோஷித்துத் தம்முடைய புத்திரியை ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தானஞ் செய்தார். ஸ்ரீ கிருஷ்ணனும் தமக்குத் தகுந்த பத்தினியான அவளைப் பெற்றுக்கொண்டார். அரசனுடைய பத்தினிகளும் ஸ்ரீ கிருஷ்ணனை மணப்பிள்ளையாக அடைந்து மிகுந்த ஆனந்தத்தை அடைந்தார்கள். அப்பொழுது மகோற்சவம் நடந்தது. சங்கம், பேரி, ஆனகம் முதலிய வாத்தியங்கள் முழங்கப்பட்டன. பிராம்மணர்கள் ஆசீர்வதித்தார்கள். புருஷர்களும், ஸ்திரீகளும் நல்ல வஸ்திரங்களாலும், மாலைகளாலும் அலங்கரிக்கப்பெற்று, சந்தோஷமாக வசித்தார்கள். பின்பு அரசன் தம் பதிகளை ரதத்திலேற்றி, மிகுந்த சேனைகளுடன் மிக்க பிரியத்துடன் துவாரகைக்கு அனுப்பினுர். மேலும், அவர் லட்சம் பசுக்களைக் கன்னியாதானமாகக் கொடுத்தார். பின்னுமவர் ஆபரணங்களாலும், நல்ல வஸ்திரங்களாலும்

அலங்கரிக்கப்பெற்ற மூன்று ஆயிரம் யௌவனப் பெண்களையும், ஒன்பது ஆயிரம் யானைகளையும், அதற்கு நூறு மடங்கு ரதங்களையும் (9,00,000), அதற்கு நூறு மடங்கு (9,00,00,000) குதிரைகளையும், அதற்கு நூறு மடங்கு (9,00,00,00,000) காலாட்களையும் கொடுத்தனுப்பினர்.

53—55. இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் ஸத்தியா என்பவளைக் கல்யாணஞ் செய்துகொண்டு போகிறார் என்பதைக் கேள்விப்பட்டு அநேக அரசர்கள் வழியில் பாணங்களைப் பிரயோகித்துப் பகவானைத் தடுத்தார்கள். அவர்கள் அந்த எருதுகளால் ஜயிக்கப்பட்டவர்கள். அப்பொழுது அர்ச்சுனன் காண்டீவமென்ற வில்லையெடுத்து அவர்களை அடித்துத் துரத்தினர். அது சிங்கம் அற்ப மிருகங்களைத் துரத்தினற்போலிருந்தது. பின்பு தேவகியின் புத்திரராகிய பகவான் துவாரகைக்குச் சென்று ஸத்தியையுடன் ரமித்தார்.

56. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் பிதாவின் சகோதரியான சிருதகீர்த்தியின் புத்திரியான பத்திரா என்பவளை அவளுடைய சகோதரர்களுடைய அனுமதியினல் விவாகஞ் செய்துகொண்டார்.

57. பின்னுமவர் மத்திரதேசத்து அரசனுடைய புத்திரியும், லட்சணமுள்ளவளுமான லக்ஷ்மணை என்பவளைத் தாமொருவராகச் சுயம்வரத்தில் அபகரித்தார். அது கருடன் அமிருதத்தை அபகரித்தாற்போலிருந்தது.

58. இன்னும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இம்மாதிரியாகப் பல ஸ்திரீகளுண்டு. நரகாசுரனைக் கொன்று, அவனுடைய அரண்மனையிலிருந்து அநேக ஸ்திரீகளைக் கொண்டுவந்தார்.

# அத்தியாயம் 59

## நரகாசுர வதம்

அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "பகவான் பூமியின் புத்திரனாகிய நரகனை எப்படிக் கொன்றார்? ராஜ கன்னிகைகள் நரகனால் எப்படி அபகரிக்கப்பட்டிருந்தார்கள்? இந்தக் கிருஷ்ணனுடைய சரிதத்தைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

2—13. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "முன்னொருகால் பூமியின் புத்திரனாகிய நரகனென்ற அசுரன் மகேந்திரனுடைய குடையையும், அவன் மாதாவாகிய அதிதியின் குண்டலங்களையும், மணிபர்வதமென்ற ஸ்தலத்தையும் பிடுங்கிக்கொண்டான். பின்பு மகேந்திரன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து நரகனுடைய நடையைத் தெரிவித்தார் (ஸத்தியபாமையின் கிரகத்தில்). அதனைக் கேட்ட பகவான் ஸத்தியபாமையுடன் கருடன்மீதேறிக்கொண்டு பிராக்ஜோதிஷமென்ற நரகனுடைய நகரத்திற்குச் சென்றார். அந்த நகரமானது மலைகளால் செய்யப்பட்ட கோட்டைகளாலும், ஆயுதங்களாலும், ஜலத்தாலும், அக்னியினாலும், காற்றினாலும் சுற்றப்பட்டுச் சத்துருக்களால் பிரவேசிக்க முடியாததாக இருந்தது. பின்னும் கோரமும், கெட்டியுமான முரபாசங்களாலும் சுற்றப்பட்டிருந்தது. அதனைக் கண்ட கிருஷ்ணன் மலைகளைக் கதாயுதத்தால் உடைத்தார். அக்னி, ஜலம், வாயு இவைகளைச் சக்கரத்தால் அடக்கினார். முரபாசங்களைக் கத்தியினால் வெட்டினார். சங்க சப்தத்தால் யந்திரங்களை நிறுத்தினார். பருத்த கதாயுதத்தால் பிராகாரத்தை உடைத்தார். பாஞ்சஜன்யமென்ற சங்கத்தின் சப்தமானது பிரளயகாலத்திய இடி

போல் பயங்கரமாக இருந்தபடியால் அதனைக் கேட்டு ஜலத்தில் படுத்துக்கொண்டிருந்த ஐந்து தலையுள்ள முரனென்பவன் எழுந்திருந்து, மூன்று முனைகளுள்ள சூலத்தைச் சுழற்றிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுக்கு எதிரில் ஓடிவந்தான். அந்தச் சூலமானது பிரளய கால சூரியன் போலப் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. மேலுமந்த அசுரன் ஐந்து முகங்களால் மூவுலகங்களையும் விழுங்குகிறவன்போலக் காணப்பட்டான். அந்த அசுரன் கிருஷ்ணனை எதிர்த்தது, கருடனை சர்ப்பம் எதிர்த்தாற்போல இருந்தது. மேலுமந்த அசுரன் அந்தச் சூலாயுதத்தைச் சுழற்றிக் கிருஷ்ணன்மீது பிரயோகித்து, அதட்டி ஐந்து முகங்களாலும் அட்டகாசஞ் செய்தான். அந்தச் சப்தமானது ஆகாயம், பூமி, எல்லா திக்குகள், அண்டகடாகம் இவைகளில் பரவியது. அப்பொழுது கிருஷ்ணன் அநேக பாணங்களைப் பிரயோகித்து, அந்தச் சூலத்தை மூன்று துண்டுகளாக வெட்டினார். அந்த அசுரனுடைய முகங்களிலும் பாணங்களைப் பிரயோகித்தார். பின்பு அசுரன் கதாயுதத்தைச் சுழற்றி, மிகுந்த கோபத்துடன் கிருஷ்ணன்மீது பிரயோகித்தான். அதனைக் கண்ட கிருஷ்ணன் பாணங்களைப் பிரயோகித்து அந்தக் கதாயுதத்தை ஆயிரம் துண்டாக வெட்டினார். பின்பு அசுரன் இரு கைகளையும் தூக்கிக்கொண்டு கிருஷ்ணனை நோக்கி ஓடிவந்தான். அதனைக் கண்ணுற்ற பகவான் சக்கராயுதத்தைப் பிரயோகித்து அசுரனுடைய தலையை வெட்டினார். அசுரன் மரணமடைந்து இந்திரனால் உடைக்கப்பட்ட சிகரமுள்ள மலைபோல் ஜலத்தில் விழுந்தான். அதனைக் கண்ணுற்ற தாமிரன், அந்தரிட்சன், சிரவணன், விபாவசு, வசு, நபஸ்வான், அருணன் என்ற முரனுடைய பிள்ளைகள் தகப்பனுடைய வதத்தைச் சகியாமல் அதற்குப் பதில் செய்ய

விரும்பி, நரகனால் தூண்டப்பட்ட பீடனென்ற சேனாபதியை முன்னிட்டுக்கொண்டு பட்டணத்திலிருந்து வெளியில் வந்தார்கள். இப்படி அவர்கள் ஆயுதங்களுடன் வெளியில் வந்து மிகுந்த கோபங்கொண்டு பாணங்களையும், கத்திகளையும், சக்திகளையும், கதாயுதங்களையும், யஷ்டிகளையும், ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பிரயோகித்தார்கள். குறைவற்ற பராக்கிரமமுள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவான் தமது பாணங்களால் அந்த ஆயுதங்களை எள்ளளவாகப் பேதித்தார். பின்னும் அவர் அந்த வீரர்களுடைய கை, கால், தொடை, தலை இவைகளை வெட்டி, அவர்களை யமலோகத்திற்கு அனுப்பினார்.

14—22. இப்படி முரனுடைய புத்திரர்கள் கிருஷ்ணனால் கொல்லப்பட்டதைக் கேட்டு நரகாசுரன் சமுத்திரத்திலிருந்து உண்டானவைகளும், மதப் பெருக்குள்ளவைகளுமான யானைப் படைகளுடன் வெளியில் வந்து, ஸத்தியபாமையுடன் கருடன்மீது மின்னலுடன் கூடிய மேகம்போல் பிரகாசிக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை எதிர்த்தான். பின்னுமவன் சதக்னி யென்ற சக்தியால் கிருஷ்ணனை அடித்தான். அவனுடைய சைன்னியங்கள் பலவகையான ஆயுதங்களால் அடித்தன. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அந்த நரகனுடைய சைன்னியத்தைக் கூர்மையான பாணங்களால் அடித்தார். அந்த சைன்னியமானது ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டுக் கை, கால், தொடை, கண்டம் ஆகிய இவைகள் வெட்டுண்டு நாசமடைந்தன. பின்னர் யானைகளும், குதிரைகளும் கொல்லப்பட்டன. இன்னும் ஸ்ரீ கிருஷ்ணன் நரகனுடைய யோதர்களால் பிரயோகிக்கப்பட்ட ஆயுதங்களையும், அஸ்திரங்களையும் மூன்று மூன்று பாணங்களால் வெட்டினார். ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வாகனமாகவிருக்கும்

கருடன் இரக்கைகளாலும், நகங்களாலும், மூக்கினாலும் நரகனுடைய சைன்னியங்களை அடித்தார். அதனால் மிக வும் பீடிக்கப்பட்டு சைன்னியங்கள் பட்டணத்தை நோக்கிச் சென்றன. நரகன் மாத்திரம் யுத்தஞ் செய்தான். அப்பொழுது கருடனால் அடிக்கப்பட்டுப் பயந்து ஓடிய தன்னுடைய சைன்னியத்தைப் பார்த்து மிக்கக் கோபங் கொண்டு நரகன் சக்தியென்ற ஆயுதத்தால் கருடனை அடித்தான். முன்னொரு சமயம் கருடனிடத்தில் வஜ்ராயுதம் முனை மழுங்கிற்று. அப்படிப்பட்ட கருடன் புஷ்ப மாலையால் அடிக்கப்பட்ட யானைபோல அசையாமலிருந்தார். பின்பு நரகன் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்வதற்காகச் சூலாயுதத்தை எடுத்துக்கொண்டான். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் அதனைப் பிரயோகிப்பதற்கு முன்னமேயே சக்கரத்தைப் பிரயோகித்து யானையின் மீதிருக்கும் நரகனுடைய தலையை வெட்டினார். இப்படிச் சக்கரத்தால் வெட்டப்பட்ட இவனுடைய தலையானது குண்டலங்கள், அழகான கிரீடம் இவைகளுள்ளதாகப் பூமியில் விழுந்தது. நரகனைச் சார்ந்தவர்கள் 'ஹா ஹா' என்று கதறினார்கள். மகரிஷிகள் 'நல்லது' என்று சிலாகித்தார்கள். தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்துப் பகவானைத் தோத்திரஞ் செய்தார்கள்.

23—31. அதன்பின் பூமிதேவி ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து சுவர்ணாலங்காரமுள்ள உத்தம ரத்தின குண்டலங்களையும், வைஜயந்தி யென்ற வனமாலையையும், வருணனுடைய குடையையும், மேருவிலுண்டான உத்தமமான ரத்தினத்தையும் கொடுத்து, பகவானை நமஸ்கரித்து, மிக்க பக்தியுடன் வணங்கிய புத்தியுள்ளவளாகி அஞ்சலிசெய்து பின்வருமாறு தோத்திரஞ் செய்தாள். எப்படியெனில், "தேவர்களுக்கும் அதிபதியாகிய தேவா!

சங்கம், சக்கரம், கதாயுதம் இவைகளைத் தரிப்பவரே! (பக்தர்களைக் காப்பாற்றுவதற்காக வென்று கருத்து). பக்தர்களை அநுக்கிரகிப்பதற்காகத் தமது இஷ்டப்படி சரீரத்தை யெடுத்துக்கொள்பவரும் பரமாத்மாவுமான உமக்கு நமஸ்காரம். (எந்த மந்திரத்தால் குந்தியைப் பகவான் அநுக்கிரகித்தாரோ அதைச் சொல்லி நமஸ்கரிக்கிறாள்.) தாமரைமலரைத் தொப்புளில் வைத்துக்கொண்டிருப்பவரான உமக்கு நமஸ்காரம். (ஜகத்திற்குக் காரணம் என்று காட்டப்பட்டது.) தாமரை மலர்மாலையைத் தரித்தவராகிய உமக்கு நமஸ்காரம். (நல்ல கீர்த்தியாகிய மாலையைத் தரித்தவரென்று கருத்து.) தாமரைமலர் போல் தாபத்தை நிவர்த்திக்கக்கூடிய நேத்திரங்களையுடையவரான உமக்கு நமஸ்காரம். தாமரைமலர் ரேகையுள்ளதான பாதங்களுள்ள உமக்கு நமஸ்காரம். ஒப்புயர்வில்லாத ஐசுவரியங்களுள்ள உமக்கு நமஸ்காரம். சகல பிராணிகளுக்கும் இருப்பிடமும், எங்கும் வியாபித்தவரும், எல்லாவற்றிற்கும் முந்தியவரும், ஜகத் காரணங்களாகிய மகத் தத்துவம் முதலியவைகளுக்கும் காரணராக இருப்பவரும், சைதன்ய சொரூபியுமான உம்மை நமஸ்கரிக்கிறேன். மேலும், உற்பத்தியற்றவரும், இந்த ஜகத்தைப் படைப்பவரும், பிரம்மமும், அளவற்ற சக்தியுள்ளவரும், சகல பிராணிகளின் சொரூபியாக இருப்பவரும், பரமாத்மாவுமான உமக்கு நமஸ்காரம். ஓ பிரபுவே! நீர் லோகத்தைப் படைப்பதற்காக அதிக ரஜோ குணத்தையும், சம்ஹரிப்பதற்காகத் தமோ குணத்தையும் தரிக்கிறீர். ஆனாலும் குணங்களால் நீர் மறைக்கப்படுகிறதில்லை. மேலும் நீர் காலம், பிரதானம், புருஷன் ஆகிய இவைகளின் சொரூபமாக இருக்கிறீர். நீர் எல்லாவற்றிற்கும் மேலானவர். நான் (பூமி), ஜலம், தேஜஸ், வாயு,

ஆகாயம், தன்மாத்திரைகள், அதிஷ்டான தேவர்கள், மனம், இந்திரியங்கள், அகங்காரம், மகத் தத்துவம் ஆகிய சராசரங்க ளடங்கிய சகல ஜகத்தும் உம்முடைய சொரூபமேயாம். உம்மைவிட வேறாக இருக்கிற தென்று நினைப்பது பிரமையேயாம். ஓ சரணமடைந்தவர் களைக் காப்பாற்றுகிறவரே! நரகனுடைய புத்திரனாகிய பகதத்தனென்ற இவன் உம்முடைய பாதாரவிந்தத்தைச் சரணமடைந்திருக்கிறான். ஆனதால் இவனைக் காப்பாற் றும். பாபங்களை நிவர்த்திக்கக் கூடியதான உம்முடைய தாமரை மலர்போன்ற கையை இவனுடைய தலையில் வையும்'' என்று பிரார்த்தித்தாள்.

32—37. இப்படிப் பூமிதேவி பக்தியுடன் வணக்க மாகத் தோத்திரஞ்செய்ய, ஸ்ரீ கிருஷ்ணன் பகதத்தனுக்கு அபயத்தைக் கொடுத்து, சகல ஐசுவரியங்கள் நிறைந்த தான நரகனுடைய அரண்மனையில் பிரவேசித்தார். அந்த அந்தப்புரத்தில் பதினறு ஆயிரம் ராஜகுமாரிகள் இருந்தார்கள். அவர்கள் நரகனால் பலாத்காரமாக அப கரிக்கப்பட்டவர்கள். அந்தப் பெண்கள் புருஷோத்தம ராகிய ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, 'தெய்வம் தங்களுக் குப் பர்த்தாவைச் சமீபத்தில் தருவிக்கிறது' என்று நினைத்து அவர்களெல்லாரும் 'இவர் எனக்குப் பர்த்தாவாக ஆகட்டும். அதனைப் பிரம்மதேவர் ஒப்புக்கொள்ளட்டும்' என்று ஒவ்வொருவரும் பிரார்த்தித்துக்கொண்டார்கள். பின்பு கிருஷ்ணன் அழகான சுத்த வஸ்திரந் தரித்த அந்தப் பெண்களைப் பல்லக்கில் வைத்து, துவாரகைக்கு அனுப்பினார். மேலும் ரதங்கள், குதிரைகள், பொக்கிஷம் முதலியவைகளையும் துவாரகா நகரத்திற்கு அனுப்பினார். பின்னுமவர் ஐராவதத்தின் குலத்தில் பிறந்தவைகளும், நான்கு தந்தமுள்ளவைகளும், வெண்மை நிறமுள்ளவையு

மான அறுபத்துநான்கு யானைகளையும் தமது பட்டணத்திற்கு அனுப்பினார்.

38—41. பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் சத்தியபாமையுடன் சுவர்க்கலோகஞ் சென்று அதிதியினிடத்தில் குண்டலங்களைக் கொடுத்தார். மகேந்திரனும், இந்திராணியும் பகவானைப் பூஜித்தார்கள். அப்பொழுது சத்தியபாமை பாரிஜாதத்தைப் பூமிக்குக் கொண்டு வரவேண்டு மென்று கேட்டுக்கொண்டதால் பாரிஜாத விருட்சத்தை வேருடன் பிடுங்கிக் கருடன்மீது வைத்துக் கொண்டு த்வாரகை நகரஞ் செல்ல முயன்றார். அப்பொழுது தேவர்கள் தடை செய்தார்கள். அவர்களை ஜயித்து, பட்டணத்திற்கு வந்து, சத்தியபாமையின் வீட்டுத் தோட்டத்தில் பாரிஜாதத்தை நட்டுவைத்தார். அதன் புஷ்ப வாசனை, தேன் இவைகளில் ஆசைப்பட்டு வண்டுகள் சுவர்க்கத்திலிருந்து அதனுடன் பூமிக்கு வந்தன. தேவர்கள் தங்களுடைய கிரீடம் படும்படி பகவானுடைய பாதங்களில் நமஸ்கரித்துத் தங்கள் காரியங்களை ஒவ்வொரு சமயத்திலும் முடித்துக்கொள்ளுகிறார்கள். அப்படிப்பட்ட தேவர்களும் பாரிஜாதத்திற்காகக் கிருஷ்ணனுடன் யுத்தஞ் செய்தார்கள். அவர்களுடைய தமோ குணம் வியக்கத் தக்கது.

42—43. பின்பு ஒரு நல்ல முகூர்த்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் அநேக சொரூபத்தைத் தரித்து (தேவகி முதலியவர்கள் வீடுகளிலும் ஒரே காலத்தில் இருந்தா ரென்று தாத்பரியம்), மனத்தாலும் நினைக்கமுடியாத அற்புத கர்மங்களைச் செய்பவரான பகவான் பிராகிருத ஜனங்கள்போல ஒப்புயர்வில்லாத அந்த ஸ்திரீகளுடைய அரண்மனைகளில் எப்பொழுதும் வசித்து லக்ஷ்மியின்

அம்சமுள்ளவர்களான ஸ்திரீகளுடன் தம்முடைய ஆனந்தத்தால் பூர்ணராகி, கிருகஸ்த தர்மத்தை அனுஷ்டித்து வந்தார்.

44—46. எவருடைய மார்க்கத்தைப் பிரம்மதேவர் முதலியவர்கள் அறியவில்லையோ, அப்படிப்பட்ட லக்ஷ்மீபதியைப் பர்த்தாவாக அடைந்த அந்த ஸ்திரீகள் அன்பு பொருந்திய சிரிப்புள்ள பார்வை, புதிதாகிய சங்கம காலத்திய வார்த்தை, வெட்கம் ஆகிய இவைகளை அடைந்தார்கள். மேலும் அந்தப் பெண்கள் அநேக வேலைக்காரிகளால் தாங்கள் உபசரிக்கப்பட்டிருந்தாலும் எதிர்கொண்டழைப்பது, பிரியப்படுவது, பயப்படுவது, ஆசனங் கொடுப்பது, பாதங்களை அலம்புவது, தாம்பூலங் கொடுப்பது, விசிறுவது, சந்தனம் பூசுவது, புஷ்ப மாலையால் அலங்கரிப்பது, தலை வாருவது, படுக்கை போடுவது, ஸ்நானஞ் செய்து வைப்பது, பழம் முதலியவைகளைக் கொடுப்பது முதலியவைகளைச் செய்து ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் சிசுரூஷை செய்தார்கள்.

## அத்தியாயம் 60

### கிருஷ்ணன் ருக்மிணியுடன் பரிகாசமாய்ப் பேசியது

1-9. ஒரு சமயம் ஜகத்திற்குக் குருவாகிய ...ஷ்ணன் கட்டிலில் சுகமாக உட்கார்ந்துகொண் ...க்கும்பொழுது ருக்மிணி தேவி விசிறியால் விசிறிப் பகவானை உபசரித்துக்கொண்டிருந்தாள். எந்தப் பகவான் இந்த ஜகத்தை விளையாட்டாகப் படைக்கிறரோ, காப்பாற்றுகிறரோ, சம்ஹரிக்கிறரோ அந்தப் பகவான் தம்மால் ஏற்படுத்தப்பட்ட தர்மசேதுக்களைக் காப்பாற்றுவதற்காக யதுகுலத்தில் அவதரித்திருக்கிறார். இப்படிப்

பகவான். ருக்மிணி இவர்களிருக்கும் அரண்மனையில் முத்துமாலைகளும், கொடுங்கைகளும், ரத்தின தீபங்களும், பிரகாசித்தன. மேலும் அந்தக் கிருகம் வாசனையுள்ள தூபங்களாலும், மல்லிகைப் புஷ்பத்தின் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வண்டுகள் புஷ்பத்தின் தேனைக் குடித்து, சப்தித்துக்கொண்டிருந்தன. சந்திரனுடைய கிரணங்கள் ஜன்னலின் வழியாகப் பிரவேசித்திருந்தன. பாரிஜாத வனத்தின் வாசனையுடன் காற்று வீசியது. அப்படிப்பட்ட கிருகத்தில் பாலின் நுரைபோன்றதும் மிருதுவும் சுத்தமுமான ஹம்ஸ தூளிகா மஞ்சத்தில் சுகமாக உட்கார்ந்திருக்கும் ஜகதீசனாகிய கிருஷ்ணனுடைய சமீபத்தில் ருக்மிணிதேவி ரத்தின மயமான பிடியுள்ள சாமரத்தைத் தன் தோழியின் கையிலிருந்து வாங்கி, அதனால் பகவானை விசிறி உபசரித்தாள். அவளுடைய ரத்தின மயமான பாதசரங்கள் மிருதுவாகச் சப்தித்தன. மேலும், அவள் கையில் அணிந்திருந்த மோதிரம், வளை இவைகளாலும் சாமரத்தாலும் பிரகாசித்தாள். பின்னும் அவளுடைய வஸ்திரத்தின் நுனியால் மறைக்கப்பட்டிருக்கும் ஸ்தனங்களில் இருக்கும் குங்குமங்களுடைய காந்தியால் சிவந்த ஹாரங்களுள்ளவளாகவும், இடுப்பில் அணிந்திருக்கும் மேலான ஒட்டியாணமுள்ளவளாகவும் கிருஷ்ணனுடைய சமீபத்தில் நின்றாள். இப்படி மானிட உருவங்கொண்ட லக்ஷ்மீதேவி போன்றவளும், கிருஷ்ணனையே கதியாகக் கொண்டவளும், பகவானுடைய அவதாரத்திற்குத் தகுதியான சொரூபமுள்ளவளும், தலைமயிர், குண்டலம், ஹாரம், கழுத்து, முகம் இவைகளால் பிரகாசிப்பவளும், சிரிப்பாகிய அமிருதத்தை பரவச் செய்பவளுமான ருக்மிணியைப் பார்த்துக் கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு பின்வருமாறு சொல்லலானார்:

10—21. "ஓ ராஜகுமாரியே! லோகபாலர்களுக்குச் சமமான ஐசுவரியமுள்ளவர்களும், மிக்க மகிமையுள்ளவர்களும், அழகுள்ளவர்களும், ரூபம், உதார குணம், தேக பலம் இவைகள் உள்ளவர்களுமான சிசுபாலன் முதலிய அநேக அரசர்கள் உன்னைக் கலியாணஞ் செய்துகொள்ள விரும்பி, குண்டின நகரம் வந்திருந்தார்கள். அவர்களுக்கு உன்னை விவாகஞ் செய்து கொடாமல் உன்னுடைய சகோதரரும் பிதாவாகிய பீஷ்மகரும் எனக்குக் கொடுத்தார்கள். ஆனாலும் உனக்குச் சமமான சிசுபாலன் முதலியவர்களை விட்டு உனக்குத் தகுதியில்லாத என்னை நீ ஏன் விவாகஞ் செய்துகொண்டாய்? நான் ஜராசந்தன் முதலிய அரசர்களிடம் பயந்து சமுத்திரத்தைச் சரணமடைந்திருக்கிறேன். பலசாலிகளான அரசர்களை விரோதித்துக்கொண்டிருக்கிறேன். பெரும்பாலும் எனக்கு இராஜ்ய மில்லை. எவர்களுடைய நடை இப்படிப்பட்டதென்று அறிய முடியாததோ, எவர்கள் ஜனங்களுடைய மார்க்கத்தை அடையாதவர்களோ அவர்களை விவாகஞ் செய்துகொண்ட ஸ்திரீகள் பெரும்பாலும் துக்கப்படுவார்கள். ஓ அழகான இடுப்புள்ளவளே! நான் தரித்திரன்; ஏழைகளான ஜனங்கள் என்னிடத்தில் பிரியப்படுவார்கள். ஆனதால் பணக்காரர்கள் பெரும்பாலும் என்னைச் சேவிக்க மாட்டார்கள். மேலும், எந்த ஸ்திரீ புருஷர்கள் இருவர்களுக்கும் குலம், ஐசுவரியம், சொரூபம் ஆகிய இவைகள் சமமாக இருக்குமோ, அவ் விருவர்களுக்கும் விவாகமும், சிநேகமும் உசிதமென்று சொல்லப்படுகிறது. இவர்களில் ஒருவர் மேலானவரும், மற்றொருவர் தாழ்ந்தவருமானால் அவ் விருவர்களுக்கும் நேரும் விவாகமானது மேலானதல்ல. ஓ விதர்ப்ப தேசத்து அரசனுடைய புத்திரியே! நான் பிச்சைக்காரர்களால் சந்தோஷ

மாகச் சிலாகிக்கப்பெற்றவன்; குணமற்றவன். இதனை நீ அறியாமல் நீடித்த ஆலோசனையில்லாமல் என்னை விவாகஞ் செய்துகொண்டாய். ஆனதால் எந்தப் புருஷனை விவாகஞ் செய்துகொண்டால் இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் சகல காமங்களும் கிடைக்குமோ, அப் புருஷனை இப்பொழுது கல்யாணஞ் செய்துகொள். அப்படியானால் முன்னமேயே சொல்லக்கூடாதா வென்றால், சிசுபாலன், சாலுவன், ஜராசந்தன், தந்தவக்த்ரன், உன்னுடைய தமையனுகிய ருக்குமி ஆகிய இவர்கள் வீர்யமதங் கொண்டு என்னை விரோதித்துக்கொண் டிருந்தமையால், அவர்களுடைய கர்வத்தை அடக்குவதற்காக அவர்களை ஜயித்து உன்னைக் கொண்டுவந்தேன். நான் அசத்துக்களுடைய தேஜஸை அபகரிப்பவன்; ஸ்திரீ, புத்திரன், பணம், தேகம், வீடு ஆகிய இவைகளில் எனக்கு ஆசையில்லை. அவைகளில் உதாசீனனாக இருக்கிறேன். ஆத்ம லாபத்தால் பூர்ணனாக இருக்கிறேன். தீபம் எப்படி சாட்சியாக இருக்கிறதோ, அப்படி சாட்சியாக இருக்கிறேனே யொழிய, நான் கர்மங்களைச் செய்கிறதில்லை (கர்த்தாவல்ல)" என்று சொன்னார். 'ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அநேகம் ஸ்திரீகளிருந்தாலும் என்னிடத்திலேயே மிக்க பிரியம்' என்று ருக்மிணி கர்வ மடைந்திருந்ததனால், அவளுடைய கர்வத்தை அடக்குவதற்காகப் பகவான் இப்படிச் சொன்னார்.

22—24. இதற்குமுன் பகவான் இப்படி ஒருபொழுதும் சொன்னதில்லை. அப்படிப்பட்ட பகவானுடைய அப்பிரியமான வார்த்தையைக் கேட்டு ருக்மிணி தேவி பயந்து, மனத்தில் நடுக்கமடைந்து கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு மிக்கக் கவலையை அடைந்தாள். நகங்களின் ஒளியால் சிறந்ததும் மிருதுவுமான பாதத்தால் பூமி

யைக் கீறிக்கொண் டிருந்தாள். கண்ணீர் மையைக் கரைத்துக்கொண்டு ஸ்தனங்களில் விழுந்து, அவ்விடத்தி லிருக்கும் குங்குமத்தை நனைத்தது. மேலும், தலை குனிந்தவளாகிக் கண்ணீரால் கண்டமடைத்துப் பேச முடியாதவளாக இருந்தாள். இப்படி ருக்மிணி அப்ரியமான வார்த்தையைக் கேட்டுப் பயந்தாள். தன்னைப் பகவான் விட்டுவிடுவாரோ என்று துக்கத்தை (தாபத்தை) அடைந்தாள். அதனால் ப்ரக்ஞை தவறிற்று. கையிலணிந்த கங்கணம் நழுவியது; சாமரமும் கீழே விழுந்தது. பின்னும் அவள் நான்கு பக்கங்களிலும் பரவிய தலைமயிர் உள்ளவளாகிக் காற்றினால் தள்ளப்பட்ட ரஸ்தாளி வாழைபோல் பூமியில் விழுந்தாள்.

25—31. பகவான் பரிகாசமாகச் சொல்லுகிறார் என்பதை அறியாமல் மிக்க விசுவாசத்தால் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்த ருக்மிணி தேவியைப் பார்த்து, ஸ்ரீ க்ருஷ்ணன் அவளிடத்தில் தயைகொண்டு சீக்கிரம் கட்டிலை விட்டிறங்கி, நான்கு கைகளாலும் அவளைத் தூக்கி, அவளுடைய தலைமயிர்களை முடிந்து, தாமரை மலர் போன்ற கையால் அவளுடைய முகத்தைத் துடைத்தார். (ருக்மிணிக்குத் தடவிக்கொடுப்பது முதலியவைகளை ஒரே காலத்தில் செய்வதற்காக நான்கு கைகளுள்ளவரானாரென்று கருத்து.) கண்ணீர் நிறைந்த கண்களையும், ஸ்தனங்களையும் துடைத்தார். பின்னும் சாதுக்களைக் காப்பாற்றுபவரான ஸ்ரீ க்ருஷ்ணன் தம்மையே கதியென்று நினைத்தவளும், பதிவிரதையும், பரிகாச வார்த்தையை அறியாமல் மோகித்தவளும், அதனால் தீன ஸ்வபாவமுள்ளவளும், துக்கிக்கத்தகாதவளுமான ருக்மிணியை ஆலிங்கனஞ் செய்துகொண்டு பின்வருமாறு சமாதானஞ் செய்தார். "ஓ விதர்ப்ப தேசத்து ராஜகுமாரியே! நீ என்

னிடத்தில் மிகுந்த பிரியமுள்ளவளென்பது எனக்குத் தெரியும். உன்னுடைய வார்த்தையைக் கேட்க விரும்பிப் பரிகாசஞ் செய்தேன். மிக்க பிரியத்தால் துடிக்கும் உதடுகளுள்ளதும், சிவந்த கடைக்கண்களுள்ளதும், அழகான புருவங்களுள்ளதுமான உன்னுடைய முகத்தைப் பார்ப்பதற்காகவே இப்படிச் சொன்னேன். ஸ்திரீயுடன் பரிகாசமாகப் பேசிக்கொண்டு யாமத்தைக் கழிப்பதே கிருகஸ்தர்களுக்கு மேலான லாபம். ஆனதால் என்னிடத்தில் கோபிக்கவேண்டாம்" என்றார்.

32—34. இப்படிக் கிருஷ்ணனால் சமாதானஞ் செய்யப்பட்ட ருக்மிணிக்கு, "பகவான் நம்மைத் தள்ளி விடுவாரோ" என்ற பயம் நீங்கிய பின்பு அழகான சகல அவயங்களுள்ளவளும், ஒருபோதும் பகவானை விட்டுப் பிரியாத லக்ஷ்மீதேவியுமான ருக்மிணி வெட்கம், சிரிப்பு இவைகளால் அழகான கடாக்ஷத்தால் புருஷோத்தமராகிய ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்துக்கொண்டு பின்வருமாறு சொல்லத் தொடங்கினாள்: எப்படியென்றால்,

34. (ஸ்ரீ கிருஷ்ணனால் சொல்லப்பட்ட வார்த்தையை அங்கீகரித்து, அதற்கு வேறு அர்த்தமென்று பதில் சொல்லுகிறாள்.) "ஓ தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! நீர் சொன்னது உண்மையே. உமக்கு நான் சமமானவளல்ல. நீர் தம்முடைய மகிமையிலிருப்பவர்; பிரம்மா முதலியவர்களுக்கும் அதிபதி; நான் சத்வம் முதலிய பிராகிருத குண சுபாவமுள்ளவள்; இந்த உண்மையை அறியாதவர்கள் என்னை நமஸ்கரிப்பார்கள். அப்படிப்பட்ட எனக்கும் உமக்கும் எவ்வளவு தாரதம்யம். (11-வது சுலோகத்தில் உனக்குச் சமானனில்லாத என்னை ஏன் விவாகஞ் செய்துகொண்டாய் என்று பகவான்

சொன்ன வார்த்தையிலுள்ள அசமானன் என்ற பதத்திற்கு நான் உமக்கு சமமானவளல்லவென்று அர்த்தம்.) இது உண்மையே என்று சொன்னாள். மேலும், தாமரைக் கண்ணன் என்பதால் மற்ற வகையில் உமக்கும் எனக்கும் ஸாம்யத்தைப்பற்றி யோசிக்க வேண்டாம். (கண்ணைப் பார்த்தாலேயே உமக்கு நான் தகுதியில்லாதவளென்று தெரியவருகிறது என்று தாத்பர்யம்.)

35. "மேலும், அரசர்களிடம் பயந்து சமுத்திரத்தில் வசிப்பதாகச் சொன்னீரல்லவா? அது உண்மையே! ஓ சகல லோகங்களைக் காலால் அளந்தவரே! சைதன்ய கனராகிய நீர் சப்தம் முதலிய குணங்களிடம் பயந்தவர் போல் விஷயங்களுக்கு எட்டாத இருதய குகையில் ஸ்திரமாக வசிக்கிறீர். 'பலசாலிகளை விரோதித்துக்கொண்டிருக்கிறேன்' என்று சொன்னதும் உண்மைதான்! எப்பொழுதும் விஷயங்களிலேயே பிரவர்த்தித்துக்கொண்டிருக்கும் இந்திரியங்களுடன் நீர் விரோதமுள்ளவர். 'எனக்குச் சிங்காதனம் இல்லை'. என்று சொன்னதும் சரியானதே! அரசர்களுடைய சிங்காதனம் அவிவேகிகளால் அடையக்கூடியது. ஆனதால் உம்முடைய பக்தர்களே அதை விரும்புகிறதில்லை. நீர் விரும்பமாட்டீர் என்பதில் என்ன சந்தேகம்!"

36. "எவனுடைய நடை பிறரால் அறிய முடியாததோ, எவர்கள் லோக மார்க்கத்தை அடையாதவர்களோ, அவர்களைக் கல்யாணஞ் செய்துகொண்ட ஸ்திரீகள் பெரும்பாலும் துக்கப்படுவார்கள்' என்று சொன்னதும் உண்மையே! உம்முடைய பாதாரவிந்தத்தின் மதுவைப் பானஞ்செய்த முனிகளுடைய மார்க்கமே அஞ்ஞான ஜனங்களால் அறிய முடியாதது. (உம்முடைய மார்க்

கம்எப்படி அறியமுடியு மென்று கருத்து) மேலும், அவர்கள் லௌகிக விஷயங்களை இச்சிக்கிறதில்லை. அலௌகிக விஷயங்களையே இச்சிக்கிறார்கள். அப்படியிருக்க, உமக்கு லௌகிக விஷயங்களில் ஆசை யிருக்குமா?"

37. 'நான் தரித்திரன். என்னிடத்தில் தரித்திரர்களே பிரியப்படுவார்கள். ஆனதால், பணக்காரர்கள் என்னைச் சேவிக்கமாட்டார்கள்' என்று சொன்னீரல்லவா? அதுவும் உண்மையானதேயாம்! உம்மைப் பிரம்மா முதலிய தேவர்களும் பூஜிப்பதால் உம்மைவிட மேலானதொன்றுமில்லை (நிஷ்கிஞ்சன என்ற பதத்திற்கு தரித்திரன் என்று அர்த்தங்கொள்ளக் கூடாது. எவரைக் காட்டிலும் மேலான வஸ்து இல்லையோ, அவர் என்று அர்த்தங்கொள்ள வேண்டுமென்றுகருத்து). தன கர்வங்கொண்டு, அதனால் விவேகம் அற்றிருப்பவர்கள் உம்மைச் சிக்ஷகர் என்று அறியார்கள். ஆனதால் அவர்கள் தங்கள் பிராணனையே திருப்தி செய்பவர்கள் (உம்மைச் சேவிக்கமாட்டார்களென்று தாத்பரியம்). பிரம்மா முதலிய லோக பாலர்களிடத்தில் உமக்கு மிக்க பிரியம். அவர்களும் உம்மிடத்தில் பிரியப்படுவார்கள்.'

38. 'உனக்கும் எனக்கும் ஸாம்யம் இல்லாததால் நம் இருவர்களுக்கும் நேர்ந்த விவாகம் சரியல்ல' என்று சொன்னீரல்லவா? அதுவும் உண்மையே! உம்முடைய மகிமைக்கும் எனக்கும் எவ்வளவு பேதமிருக்கிறது? நீர் சகல புருஷார்த்த சொரூபியாக இருப்பவர்; பரமானந்த சொரூபி; உம்முடைய சொரூபத்தை அடைவதற்காக, புத்திசாலிகள் எல்லாவற்றையும் விட்டுவிடுகிறார்கள். ஓ பிரபுவே! அப்படிப்பட்ட புத்திசாலிகள் உம்மைச் சேவித்து, சேவிய சேவக பாவத்தை அடைக்

திருப்பார்கள். விஷய சுகங்களை ஆசிரயித்துக்கொண்டு, துக்கப்படுகிற ஸ்திரீபுருஷர்களுடைய சமாஜம் அவர்களுக்கு உசிதமாக இராது.'

39. 'பிக்ஷுக்கள் என்னைச் சிலாகிப்பார்கள்' என்று சொன்னதும் உண்மையே! சகல ஆசைகளையும் ஒழித்தவர்களான முனிவர்கள் உம்முடைய மாகாத்மியத்தைச் சொல்லுகிறார்கள் (பிக்ஷுக்களென்றால் மகரிஷிகளென்று அர்த்தமென்று சொல்லப்பட்டது). எல்லா ஜகத்திற்கும் ஆத்மாவாக இருக்கிறீர் (உம்மைக் கல்யாணஞ் செய்துகொண்டது வீணல்ல. எதற்காக எல்லாவற்றையும் சம்பாதிக்கிறோமோ, அந்த ஆத்மாவாக இருப்பதால் உம்மை அடைந்தேன் என்று கருத்து). மேலும், ஆத்மஞானத்தைக் கொடுப்பவர் என்பதைத் தெரிந்துகொண்டுதான் உம்மைக் கல்யாணஞ் செய்துகொண்டேன். (எவர் ஆத்மாவைக் கொடுப்பவரோ, பலத்தைக் கொடுப்பவரோ என்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.) பிரம்மதேவர், மகேந்திரன் முதலியவர்களுடைய ஐசுவரியம் (அதிகாரம்) உம்முடைய புருவத்தால் தூண்டப்பட்ட காலவேகத்தால் நாசஞ் செய்யப்படுகிறது. மற்றவர்கள் விஷயத்தில் கேட்கவேண்டுமா! அதனால்தான் அவர்களை விட்டு உம்மை விவாகஞ் செய்துகொண்டேன்.'

40. 'சிங்கமானது அற்ப மிருகங்களைக் கொன்று தன்னுடைய பாகத்தை அபகரித்தாற் போல, நீர் சார்ங்கமென்ற வில்லின் சப்தத்தால் சிசுபாலன் முதலிய அரசர்களைத் துரத்திவிட்டு என்னை அபகரித்தீரல்லவா? அப்படிப்பட்ட உமக்குப் பயமேது? அரசர்களிடம் பயந்து சமுத்திரத்தில் வசிக்கிறீர் என்பது பொருந்துமா?'

41. உம்முடைய பாதாரவிந்தத்தைச் சேவிப்பதற்காக அங்கன், பிரது சக்கரவர்த்தி, பரதன், யயாதி, கயன் முதலிய சிறந்த அரசர்கள் உம்மையே தியானஞ் செய்து ராஜ்யத்தை விட்டுக் காட்டிற்குச் சென்றார்கள். ஓ தாமரைக் கண்ணனே! உம்மை அடைந்தவர்கள் துக்கத்தை அடைவார்களா? (துக்கப்படமாட்டார்களென்று கருத்து.)

42. 'சமானனாகிய அரசனைத் தேடிக் கல்யாணஞ் செய்துகொள்' என்று சொன்னீரல்லவா? நீர் சகல குணங்கள் பொருந்தியவர்; உம்முடைய பாதபத்மம் சகல ஜனங்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது; லக்ஷ்மிக்கு இருப்பிடமானது. அப்படிப்பட்ட பாதத்தின் மகிமையை சாதுக்களுடைய முகமாகச் சிரவணஞ் செய்யும் விவேகியான எவள் உம்மைவிட்டு, எப்பொழுதும் பயமுள்ளவனும், மரண தர்மமுள்ளவனுமான மனிதனை அடைவாள்?'

43. 'நீர் சகல ஜகத்திற்கும் அதிபதி; எல்லாருக்கும் ஆத்மாவாக இருப்பவர்; இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் சகல இஷ்டத்தையும் கொடுப்பவர். உம்முடைய பாதத்தை சேவிப்பவர்களுக்கு ஸம்ஸாரம் நாசமகிவிடும். ஆனதால் உம்முடைய பாதம் எனக்குச் சரணமாகட்டும்.'

44. 'மேலும், சத்ருக்களைச் சம்ஹரிப்பவரே! பரமசிவன், பிரம்மதேவர் ஆகிய இவர்களுடைய சபையில் கானஞ் செய்யப்படுகின்ற உம்முடைய கதையை எவள் கேட்கவில்லையோ, அதிருஷ்டமில்லாத அந்தப் பெண்ணுக்குக் கழுதைபோலச் சுமை சுமப்பவர்களும், எருதுகள்போல் எப்பொழுதும் வேலை செய்து கஷ்டப்

படுகிறவர்களும், நாய்கள் போலப் பிறரால் அவமதிக்கப் பெற்றவர்களும், பூனைகள் போலக் கடோரர்களும், வேலைக்காரர்கள் போலச் சுவாதந்திரிய மில்லாதவர்களு மான அரசர்கள் புருஷர்களாக ஆகட்டும்.

45. எவள் உம்முடைய பாதமாகிய தாமரைமலரின் மதுவைப் பானஞ் செய்யவில்லையோ, அவள் தோல், மீசை மயிர், நகம், தலைமயிர் ஆகிய இவைகளால் மூடப்பட்டும், உள்ளே மாமிசம், எலும்பு, ரத்தம், பூச்சி, அமேத்யம், கபம், பித்தம், வாதம் இவைகளுள்ளதும், பிழைத்திருந் தும் பிணத்துக்கு ஒப்பானதுமான சரீரத்தைத் தன் னுடைய பர்த்தாவென்று நினைப்பாள். அவளே மூட புத்தியுள்ளவள்.

46. ஓ தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! தம்முடைய ஆத்மாவினிடத்திலேயே ரமிப்பவரே! உம் முடைய பாதங்களில் எனக்கு பக்தியானது இருக்கட்டும். என்னிடத்திலும் (பிரகிருதியினிடத்திலும்) மிகுந்த ஆசை உமக்கு இல்லை. அப்படி ஒன்றையும் விரும்பாதவ ரானாலும் உம்முடைய பாதசேவையே எனக்குப் பெரிய லாபம். மேலும், நீர் இந்த ஜகத்தை விருத்திசெய்வதற் காக ரஜோ குணத்தை ஆசிரயித்து என்னைக் கடாக்ஷிக் கிறீர். அதுவே எனக்கு மிகுந்த அனுக்கிரகம்.

47—48. ஓ மதுவைக் கொன்றவரே! 'உனக்குச் சமமான புருஷனைக் கலியாணம் பண்ணிக்கொள்' என்று உம்மால் சொல்லப்பட்டது பொய்யல்ல. காசி தேசத் தரசனுடைய கன்னிகைகளான அம்பா, அம்பாலிகா, அம்பிகா என்ற மூவர்களுக்குள் அம்பா என்பவள் கன்னி கையாக இருக்கும்பொழுதே சாலுவனிடத்தில் எப்படி ஆசைப்பட்டாளோ, அதுபோலக் கலியாணமான பிறகும்

வியபசாரிகளான சில ஸ்திரிகளுடைய மனமானது வெவ்வேறு புருஷனை இச்சிக்கிற வழக்கமுண்டு. அப்படி வியபசாரியான ஸ்திரீயை வித்துவானாக இருப்பவன் வைத்துக்கொள்ளக்கூடாது. அப்படிப் போஷிப்பானானால் இவ்வுலகம், பரலோகம் இவ்விரண்டிலும் சுகத்தையடையமாட்டான்" என்று சொன்னாள் (ஆனதால் என்னுடைய மனத்தைப் பரீட்சிப்பதற்காகவே இம்மாதிரி சொன்னீரென்று கருத்து).

49—57. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் ருக்மணியை நோக்கி, "ஓ பதிவிரதையே! இம்மாதிரியான உன்னுடைய வார்த்தையைக் கேட்கவேண்டுமென்ற ஆசையால் இம்மாதிரி சொன்னேன். உன்னால் சொல்லப்பட்டது எல்லாம் உண்மையே. என்னிடத்தில் மிகவும் பக்திகொண்டவளான நீ எந்தெந்தக் காமங்களை விரும்புகிறாயோ, மோக்ஷம் வரையிலுள்ள அவைகளெல்லாம் உனக்கு இருக்கின்றன. ஓ தோஷமற்றவளே! பரிகாச வார்த்தைகளால் உன்னுடைய புத்தியை நான் கலக்கியும், உன்னுடைய மனமானது என்னிடத்திலேயே ஸ்திரமாக இருந்தபடியால் பதிவிரதா தர்மத்தையும் அதிகமான விசுவாசத்தையும் அடைந்தவளாகிறாய். எவர்கள் தவம், விரதம் இவைகளை அனுஷ்டித்தும் விஷயத்தில் ஆசை கொண்டவர்களாகி, மோக்ஷத்திற்கு அதிபதியாகிய என்னை என்னுடைய மாயையால் மோகித்து, தம்பதிகளுடைய விஷய சுகத்திற்காக ஆராதிக்கிறார்களோ, பின்னும் அவர்கள் மோக்ஷம் வரையிலுள்ள சகல சம்பத்துக்களையும் கொடுக்கக்கூடியவரான என்னை ஆராதித்தும், மோக்ஷத்தை விரும்பாமல் சம்பத்துக்களையே விரும்புகிறார்களோ அவர்கள் அதிருஷ்டமில்லாதவர்கள். விஷய சுகம் தாழ்ந்த ஜன்மத்திலும் கிடைக்கும். ஆனதால்

அவர்கள் தாழ்ந்த ஜன்மத்தை அடைவார்கள். ஓ! கிரு கத்திற்கு அதிபதியாக இருப்பவளே! ஒருவித பலனை யும் விரும்பாமல் என்னிடத்தில் நீ பக்திசெய்தாய். இம் மாதிரியான பக்தியானது ஸம்ஸாரத்தை நிவர்த்திக்கக் கூடியது; இது உனக்கேற்பட்டது தெய்வச்செயலேயாம். துஷ்டர்களுக்கு இம்மாதிரியான பக்தி ஏற்படுகிறதில்லை. விஷயங்களிலே ஆசையுள்ளவளும், தன்னுடைய பிராண னைத் திருப்தி செய்துகொள்வதிலேயே நோக்கமுள்ள வளும், வஞ்சிக்கும் சுபாவமுள்ளவளுமான பெண்ணுக்கு இம்மாதிரியான பக்தி ஏற்படுகிறதற்கு நியாயமே இல்லை. மேலும், உன்னைப்போல் பர்த்தாவினிடத்தில் பிரீதியுள்ள வளான பத்தினியை ஒரு வீட்டிலும் நான் பார்த்ததில்லை. உன்னுடைய விவாக காலத்தில் உன்னைக் கல்யாணஞ் செய்துகொள்வதற்காக வந்திருந்த எல்லா அரசர்களையும் விட்டு (அவர்களிடம் ஆசைப்படாமல்) என்னுடைய சரித் திரங்களைக் கேள்விப்பட்டு, ரகசியமாக ஒரு பிராம்மணனை அனுப்பினை யல்லவா? மேலும், விவாக காலத்தில் யுத்தத் தில் உன்னுடைய சகோதரனை நான் ஜயித்து, மீசை முதலியவைகளை க்ஷவரஞ்செய்து அவமானப்படுத்தி னேன். பின்னர், சொக்கட்டான் விளையாடும்பொழுது அவனைப் பலராமன் கொன்றார். இவைகளைப் பார்த்தும் நீ ஒன்றையும் சொல்லாம லிருந்ததுமின்றி அதனை அடிக் கடி ஸ்மரிப்பதால் நேரும் துக்கத்தையும் சகித்திருந்தாய் (பகவான் நம்மை விட்டுவிடுவாரோ என்ற பயத்தால்). அதனால் நீ என்னை ஜயித்தவளாகிறாய். இன்னும் உன் னுடைய விவாக சமயத்தில், 'நாளைய தினமெனக்கு விவாக சமயமென்று நிச்சயிக்கப் பெற்றிருப்பதால் அந்த சமயம் நீர் வாராமல் தாமதித்தால் நான் உயிரை விடுவேன்' என்று பிராம்மண முகமாகத் தெரிவித்தாயல்லவா? அப்

பொழுது பிராம்மணன் திரும்பி உன்னிடம் வருவதற்கு முன், 'கிருஷ்ணனிடஞ் சென்ற பிராம்மணன் இன்னும் வரவில்லையே' என்று பிராணனை விட்டுவிடுகிறதென்று நிச்சயஞ் செய்துகொண்டாயல்லவா? அதற்கு நம்மால் பதில் செய்யமுடியாது. அதைப்பற்றிச் சந்தோஷிக்கிறோம்" என்று சொன்னார்.

58—59. இப்படிப் பகவான் விளையாட்டான வார்த்தைகளைச் சொல்லி லக்ஷ்மீதேவியின் அம்சமான ருக்மணி தேவியுடன் மநுஷ்ய பாவனையை அநுசரித்து ரமித்தார். இப்படியே லோககுருவாகிய அந்தப் பிரபு மற்ற ஸ்திரீகளுடைய வீடுகளிலும் கிருகஸ்தராக இருந்து, கிருகஸ்த தர்மத்தை யநுஷ்டித்தார்.

## அத்தியாயம் 61

### கிருஷ்ணனுடைய புத்திர பௌத்திர சந்ததி

அந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஒவ்வொரு ஸ்திரீகளிடத்திலும் பத்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் சகல விதத்திலும் கிருஷ்ணனை அநுசரித்தவர்கள். ஒவ்வொரு ஸ்திரீகளும் தங்கள் வீட்டிலேயே ஸ்ரீ கிருஷ்ணன் வசிப்பதைப் பார்த்து, அவருடைய உண்மையை அறியாதவர்களானதால் தங்களிடத்திலேயே பகவானுக்குப் பிரியமென்று நினைத்திருந்தார்கள். மேலும், அந்த ஸ்திரீகள் அந்தக் கிருஷ்ணனுடைய தாமரைமலர் போன்ற முகம், நீண்ட கைகள், கண்கள், அன்புபொருந்திய சிரிப்பு, பார்வை, மனோஹரமான வார்த்தை இவைகளால் சுகித்தார்களே யொழியத் தங்களு விளையாட்டுகளால் ஸ்ரீகிருஷ்ணனுடைய மனத்தை

அபகரிக்க முடியாதவர்களாக இருந்தார்கள். அவர் மிக்க மகிமை பொருந்தியவர். பகவானுடைய பத்தினிகளான பதினாறாயிரம் ஸ்திரீகளும் புன்சிரிப்புள்ள சொற்ப பார்வையால் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறார்கள். அதனால் மனோகரமான புருவத்தில் அசைவுண்டாகிறது. அதனால் விலாசங்கள் உண்டாகின்றன. இப்படி மன்மதனை விருத்திசெய்யக்கூடிய செய்கைகளை அந்த ஸ்திரீகள் செய்து, பகவானுடைய மனத்தைக் கலக்குவதற்கு (ஆசைப்படும்படி செய்வதற்கு) முடியவில்லை. பிரம்மா முதலிய தேவர்களும் எவருடைய மார்க்கத்தை அறியாமல் தேடுகிறார்களோ, அந்த லக்ஷ்மீபதியான பகவானைப் பர்த்தாவாக அடைந்து, அன்புபொருந்திய சிரிப்புள்ள பார்வை, புதிதாகிய சங்கமத்தில் ஆசை ஆகிய இவைகளால் மிக்க சந்தோஷத்தை அடைந்தார்கள். மேலும், அந்த ஸ்திரீகள் தங்களுக்கு அநேக வேலைக்காரிகளிருந்தாலும் எதிர்கொண்டழைப்பது, ஆசனங்கொடுப்பது, பூஜிப்பது, காலை அலம்புவது, தாம்பூலம் கொடுப்பது, விசிறுவது, சிரமத்தை நிவர்த்திப்பது, சந்தனம் பூசுவது, புஷ்பத்தால் அலங்கரிப்பது, தலை வாருவது, படுக்கை போடுவது, ஸ்நானஞ்செய்விப்பது, பழம் முதலியவைகளைச் சமர்ப்பிப்பது முதலியவைகளால் ஸ்ரீகிருஷ்ணனை உபசரித்தார்கள். அந்த ஸ்திரீகளில் ஒவ்வொருவருக்கும் பத்துப் புத்திரர்கள் ஜனித்தார்கள் என்று முன்பு சொன்னேனல்லவா? கிருஷ்ணனுடைய எட்டுப் பட்டமகிஷிகளுடைய புத்திரர்களான பிரத்யும்னன் முதலியவர்களைச் சொல்லுகிறேன். பிரத்யும்னன், சாருதேஷ்ணன், சுதேஷ்ணன், சாருதேவன், சுசாரு, சாருகுப்தன், பத்ரசாரு, சாருபத்திரன், விசாரு, சாரு என்று ருக்மணியிடத்தில் பத்துப் புத்திரர்கள் ஜனித்தார்கள். அவர்க

னெல்லாரும் கிருஷ்ணனுக்குச் சமமானவர்கள். பானு, சுபானு, சுவர்ப்பானு, பிரபானு, பானுமான், சந்திரபானு, பிரகத்பானு, ரவிபானு, ஸ்ரீபானு, பிரதிபானு என்றவர்கள் சத்யபாமையின் புத்திரர்கள். சாம்பன், சுமித்திரன், கிருஜித், சதஜித், ஸஹஸ்ரஜித், விஜயன், சித்திரகேது, கீர்த்திமான, )வாகள ஜாமபவ புத்திரர்கள். சாம்பன் முதலிய புத்திரர்கள் பிதாவிற்குச் சமமானவர்கள். பானு, சந்திரன், அசுவஸேனன், சித்திரகு, வேகவான், விருஷன், ஆமன், சங்கு, வசு, ஸ்ரீமானுகிய கிருதி ஆகிய இவர்கள் நாக்னஜித்தின் புத்திரர்கள். சிருதன், கவி, விருஷன், வீரனுகிய சுபாகு பத்திரன், ஏகலன், சாந்திதர்சம், பூர்ணமாஸம், ஸோமகன் ஆகிய இவர்கள் காளிந்தியின் புத்திரர்கள். பிரகோஷன், காத்திரவான், சிம்மன், பலன், பிரபலன், ஊர்த்வகன், மகாசக்தி, ஸஹன், தேஜஸ், அபராஜிதன் என்பவர்கள் மாத்திரியின் (லக்ஷ்மணையென்பவள்) புத்திரர்கள். விருகன், அர்கன், அனிலன், கிருத்திரன், பஹுவன்னன், நாதன், மஹாசன், பாவனன், வஹ்நி யென்பவர்கள் மித்ரவிந்தையின் புத்திரர்கள். சங்கிராமஜித், பிரஹத்சேனன், சூரன், பிரகரணன், அரிஜித், யக்ஞன், சுபத்திரன், வாமன், ஆயு, ஸத்யகன் ஆகிய இவர்கள் பத்ரையின் புத்திரர்கள். தீப்திமான், தாம்ரபத்திரன் முதலியவர்கள் விஷ்ணுவின் அம்சமாகிய பலராமனுக்கு ரோகிணியிடம் ஜனித்த புத்திரர்கள். ருக்மியின் புத்ரியாகிய ருக்மவதி என்பவளிடத்தில் பிரத்யும்னருக்கு போஜகடமென்ற பட்டணத்தில் அநிருத்தனென்ற புத்திரன் பிறந்தான். இவர்களுடைய புத்திரர்களும், பௌத்திரர்களும் கோடிக்கணக்காக இருந்தார்கள். கிருஷ்ணனுடைய புத்திரர்களுக்குத் தாய்கள் பதினாறுயிரத்திற்கு அதிகமானவர்கள்" என்று சுகர் சொன்னார்.

23—25. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "ருக்குமி யென்பவன் ஸ்ரீகிருஷ்ணனால் அவமதிக்கப்பெற்றவனானதால் ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்வதற்கு சமயம் பார்த்துக்கொண் டிருப்பவனல்லவா? அப்படிப்பட்ட ருக்குமி என்பவன் சத்துருவின் புத்திரனாகிய பிரத்யும்னனுக்குத் தன்னுடைய பெண்ணை எப்படி விவாகஞ் செய்வித்தான்? நடந்தவை, நடப்பவை, வருங்காரியம், இந்திரியங்களுக்குப் புலப்படாதவை, வெகு தூரத்திலிருப்பவை, சுவர் முதலியவைகளால் மறைக்கப்பட்டவை ஆகிய இவைகள் எல்லாவற்றையும் யோகிகள் நேரில் பார்ப்பது போலத் தெரிந்துகொள்ளுகிறார்களன்றோ! ஆனதால் விரோதிகளான ருக்குமி, ஸ்ரீகிருஷ்ணன்இருவர்களுக்கும் சம்பந்தம் எப்படி ஏற்பட்டது? அதனைச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

26—27. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, ருக்குமி என்பவன் ஸ்ரீகிருஷ்ணனால் அவமதிக்கப்பெற்றதால் கிருஷ்ணனிடத்தில் விரோத புத்தி யுள்ளவனானாலும் சகோதரியான ருக்மணியின் பிரியத்திற்காக அவளுடைய புத்திரனாகிய பிரத்யும்னனுக்குத் தன்னுடைய பெண்ணை மணஞ்செய்வித்தான். மேலும், பிரத்யும்னன் மன்மதனுடைய அவதாரமானதால் அவனைச் சுயம்வரத்தில் ருக்மவதி பார்த்து ஆசைப்பட்டதனால் அவ்விடம் சுயம்வரத்திற்காக வந்திருந்த அரசர்களை ஜயித்து, பிரத்யும்னன் ருக்குமவதியை அபகரித்தான்(ருக்குமியும் சம்மதித்தானென்று தாத்பரியம்).

28. ருக்மணியின் புத்திரியான சாருமதி யென்பவளைக் கிருதவர்மாவின் புத்திரன் மணஞ் செய்து கொண்டான். எல்லா ஸ்திரீகளுக்கும் ஒவ்வொரு பெண்

ணடு. (அந்தப் பெண்களின் கல்யாணத்தைச் சொல் வதற்காகவே மூத்த குமாரியின் விவாகம் மட்டுமே சொல்லப்பட்டது.)

29—44. பின்பு ருக்குமி யென்பவன் பெண்ணின் புத்திரனாகிய அநிருத்தனுக்குப் புத்திரனுடைய புத்திரி யான ரோசனை யென்பவளை மணஞ்செய்வித்தான். அந்த சம்பந்தம் தர்மத்திற்கு ஒத்ததல்லவென்று ருக்குமிக்குத் தெரியும். ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலும் அவனுக்கு விரோத முண்டு. ஆனாலும் சகோதரியான ருக்மணியின் பிரீதிக் காக அந்த விவாகத்தை நடத்தினான். அந்தக் கல்யாணத் திற்காக ருக்மணி, பலராமன், கிருஷ்ணன், சாம்பன், பிரத்யும்னன் முதலியவர்கள் போஜகடமென்ற பட்ட ணத்திற்குச் சென்றார்கள். பின்பு கல்யாணம் நடந்தது. அதன்பின காளிங்கன் முதலிய கர்வமுள்ள அரசர்கள் ருக்குமியை நோக்கி, "பலராமன் சொக்கட்டான் விளை யாடத் தெரியாதவர். ஆனாலும் அந்த விளையாட்டில் மிக்க பிரியமுள்ளவர். ஆனதால் அவருடன் சொக்கட்டான் விளையாடி அவரை ஜயித்துவிடலாம்" என்றார்கள். அதனைக் கேட்ட ருக்மியானவன் பலராமனை அழைத்து, அவருடன் சொக்கட்டான் விளையாடினான். அப்பொழுது பலராமன் நூறு, ஆயிரம், பதினாயிரமென்று பந்தயங் கட்டினார். அதனை ருக்குமி ஜயித்தான். அதனைக் கண் ணுற்ற காளிங்கன் பற்கள் வெளியில் தெரியும்படி சிரித் தான். அது பலராமனுக்குக் கோபத்தை உண்டுபண்ணி யது. பின்பு, ருக்குமியென்பவன் லக்ஷத்தைப் பந்தயமாக வைத்தான். அதனைப் பலராமன் ஜயித்தார். அப்பொழுது ருக்குமி கபடமாக 'நான் ஜயித்தேன்' என்று பொய் சொன்னான். பின்பு, பலராமன் இயற்கையில் சிவந்த ்களுள்ளவ ராகையால், பருவகாலத்திய சமுத்திரம்

போலப் பொங்கிய கோபமுள்ளவராகிப் பத்துகோடியைப் பந்தயமாக வைத்தார். அதனையும் பலராமனே ஜயித்தார். அப்பொழுதும் ருக்குமி "நான்தான் ஜெயித்தேன்; இதை மத்தியஸ்தர்கள் சொல்லட்டும்" என்றான். அப்பொழுது ஆகாசவாணி, "பலராமன்தான் நியாயமாக ஜயித்தார்; ருக்குமி சொல்வது பொய்"என்றது. அதனையும் லட்சியஞ் செய்யாமல் ருக்குமியானவன் காலம் குறுகிவிட்டதனால் துஷ்டர்களான அரசர்களால் தூண்டப்பட்டு, பலராமனை நோக்கி, "நீங்கள் வனத்தில் சஞ்சரிக்கும் இடையர்கள் ; உங்களுக்குச் சொக்கட்டான் விளையாட்டுத் தெரியாது. அரசர்கள் சொக்கட்டான் ஆடுவார்கள்; பாணங்களால் யுத்தஞ் செய்வார்கள். உங்களைப் போன்றவர்களுக்கு அவை எப்படி தெரியும்" என்று பரிகாசஞ் செய்தான். அவனுடன் மற்ற அரசர்களும் பரிகாசஞ் செய்தார்கள். அப்பொழுது பலராமன் மிக்க கோபங்கொண்டு பரிக மென்ற ஆயுதத்தால் அந்த ருக்குமியைக் கொன்றார். பின்னுமவர் களிங்க தேசத்து அரசனாகிய காளிங்கனைப் பத்தாவது அடியில் பிடித்து அவனுடைய பற்களை யுடைத்தார். அவன் பற்கள் வெளியில் தெரியும்படி சிரித்தா னல்லவா? மற்ற அரசர்களும் பரிகத்தால் பல ராமனால் அடிக்கப்பட்டுக் கைகள், தொடைகள், தலைகள் ஆகிய இவைகள் வெட்டுண்டு, ரத்தப் பிரவாகமுள்ளவர்களாகிப் பயந்து ஓடினார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் தம்முடைய மைத்துனரைப் பலராமன் கொன்றதைப் பார்த்தும், ருக்மணி, பலராமன் இவர்களுக்கு சிநேகம் குறையுமோவென்று பயந்து, ஒன்றையும் சொல்லாமல் மௌனமாக இருந்தார். பின்பு பலராமன் முதலிய தாசார் ஹர்கள் கல்யாணம், சத்துரு வதம் முதலியவைகளைக் கிருஷ்ணனுடைய மகிமையால் முடித்துக்கொண்டு,

தம்பதிகளை ரதத்தில் வைத்துக்கொண்டு போஜகடமென்ற பட்டணத்திலிருந்து துவாரகை நகரஞ் சென்றார்கள்.

இந்த அத்தியாயத்தில் கிரந்தாட்சரத்தில் அச்சிட்டிருக்கும் புத்தகத்தில் 7, 8-வது சுலோகங்கள் வியாக்கியானக்காரர்களால் அங்கீகரிக்கப்படவில்லை. ஆதலால் அவைகளுக்கு அர்த்தம் எழுதப்படவில்லை.

## அத்தியாயம் 62

### அநிருத்தனுடைய சரிதம்

1. அரசன் சுகரை நோக்கி, "யதுக்களில் உத்தமனாகிய அநிருத்தன் பாணனுடைய பெண்ணாகிய உஷையை எப்படிக் கல்யாணஞ் செய்துகொண்டார்? அதன நிமித்தம் விஷ்ணுவுக்கும் பரமசிவனுக்கும் பெருத்த யுத்தம் எப்படி நேர்ந்தது? அதெல்லாவற்றையும் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

2—9. மகாவிஷ்ணுவுக்குப் பூமியைத் தானஞ் செய்த பலிச்சக்கரவர்த்தியின் நூறு புத்திரர்களுக்குள் பாணனென்பவன் ஜ்யேஷ்டன் (மூத்தவன்). அவனுக்கு ஆயிரங் கைகளுண்டு. அவன் பரமசிவன் நர்த்தனஞ் செய்யும்பொழுது பக்க வாத்தியத்தை முழக்கினன். அவன் சோணித மென்ற பட்டணத்தில் வசித்தான். அவன் சத்தியப் பிரதிக்ஞன்; திருடமான விருதமுள்ளவன். அவனுக்குப் பரமசிவனுடைய அநுக்கிரகத்தால் எல்லாத் தேவர்களும் வேலைக்காரர்களாக இருந்தார்கள். அதனல் சகல பிராணிகளுக்கும் அதிபதியும், எல்லாவற்றையும் காப்பாற்றுபவரும், பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவருமான பகவான் சந்தோஷித்து, பாணனை நோக்கி,

"உனக்கு இஷ்டமான வரத்தைக் கொடுக்கிறேன்" என்றார். அதனைக் கேட்ட பாணன், "தன்னுடைய பட்டணத்தைக் காப்பாற்றவேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். பின்னுமொருக்கால் மதமுள்ளவனாகிய அந்தப் பாணன் தன் பக்கத்திலிருக்கும் பரமசிவனுடைய பாதங்களில் சூரியன்போலப் பிரகாசிக்கும் கிரீடம் படும்படி நமஸ்கரித்து, "ஓ மகாதேவா! சகல லோகங் களுக்கும் குருவும், ஈசுவரனும், ஆசையுள்ள புருஷர் களுடைய இஷ்டத்தைக் கற்பக விருட்சம்போலப் பூர்த்தி செய்பவருமான உமக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். எனக்கு ஆயிரம் கைகளைக் கொடுத்திருக்கிறீர். அவைகள் சுமையாக இருக்கின்றனவே யொழிய வேறில்லை. இந்த மூவுலகங்களிலும் உம்மைவிட என்னுடன் யுத்தஞ் செய் யத் தகுதியான புருஷன் வேறொருவருமில்லை. கைகளில் மிகவும் தினவு உண்டாகிறது. ஓ எல்லாவற்றிற் கும் முந்தியவரே! அந்தக் கைகளால் மலைகளைப் பொடி யாக்கிக்கொண்டு திக்கு கஜங்களிடம் யுத்தத்திற்குச் சென்றேன். அவைகளும் பயந்து ஓடின" என்றான்.

10-11. அதனைக் கேட்ட பரமசிவன் மிக்க கோபத்துடன், "ஓ மூடா! எனக்குச் சமமான எந்தப் புருஷனால் உன்னுடைய கொடியானது எப்பொழுது வெட்டப்படுமோ, அவன்தான் உன்னுடைய கர்வத்தை அடக்குவான்" என்றார். அதனைக் கேட்ட மூடனாகிய பாணன் சந்தோஷமடைந்து, தனது அரண்மனை சென்று பரமசிவனுடைய ஆக்ஞையின்படி தன்னுடைய மதத்தை அடக்கும் புருஷன் எப்பொழுது வருவான் என்று எதிர் பார்த்திருந்தான்.

12-15. பாணனுக்கு உஷா என்று ஒரு பெண் உண்டு. அவள் சொப்பனத்தில் அநிருத்தனைப்

பார்த்து அவனிடம் ஆசைகொண்டு பின்னும் அவனைக் காணமல், 'ஓ நாயகா! எவ்விடத்திலிருக்கிறீர்' என்று சொல்லிக்கொண்டு விழித்துக்கொண்டாள். ஆனால் அவள் அநிருத்தனை முன் பார்த்தவளுமல்ல; அவனைப் பற்றிக் கேட்டவளுமல்ல. இப்படித் தூங்கி விழித்துக் கொள்ளும் சமயத்தில், தான் இவ்வாறு தோழி களுடைய மத்தியில் கூவியதைக் கண்டு மிகவும் வெட்கத்தை அடைந்தாள். பாணனுடைய மந்திரி கும்பாண்டன் என்பவன். அவனுடைய பெண்ணாகிய சித்திரலேகை என்பவள் உஷைக்குத் தோழியானதால், அவள் உஷையை நோக்கி, "ராஜகுமாரியே! பர்த்தாவைக் காணமல் தேடுகிறாயே! உனக்கு இன்னும் விவாகம் ஆகவில்லையே! இதென்ன?" என்று கேட்டாள்.

16-17. அதனைக் கேட்ட உஷை சித்திரலேகையை நோக்கி, "சொப்பனத்தில் ஒரு மனிதனைக் கண்டேன். அவர் கருத்த திருமேனியுள்ளவராயும், தாமரைமலர் போன்ற கண்களுள்ளவராகவும், பீதாம்பரத்தைத் தரித்தவராகவும், பருத்த கைகளுள்ளவராகவும், ஸ்திரீகளுடைய மனத்தை அபகரிப்பவராகவு மிருந்தார். அப்படிப்பட்டவர் எனக்கு அதராமிருதத்தைக் கொடுத்து என்னைத் தூக்கிக்கச் செய்துவிட்டு எங்கேயோ போய் விட்டார். அவரைத் தேடுகிறேன்" என்றாள்.

18-35. அதனைக் கேட்ட சித்திரலேகை உஷையை நோக்கி, "உன்னுடைய துக்கத்தை நிவர்த்திக்கிறேன். எந்தப் புருஷன் உன்னுடைய மனத்தை அபகரித்தவனே அவனை வரவழைக்கிறேன். எனக்கு உத்தரவு கொடு" என்று சொல்லித் தேவர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், சாரணர்கள், பன்னகர்கள், தைத்தியர்கள், வித்தியாதரர்கள், யக்ஷர்கள், மனிதர்கள் ஆகிய இவர்

களைச் சித்திர படத்தில் எழுதினதுமன்றி, மனிதர்களில் கிருஷ்ணிகளையும், சூரனையும், வசுதேவரையும், பலராம னையும், ஸ்ரீ கிருஷ்ணனையும், பிரத்யும்னனையும், அநிருத் தனையும் எழுதி உஷைக்குக் காண்பித்தாள். பிரத்யும்ன னைப் பார்த்து உஷை வெட்கப்பட்டாள் (மாமனு ரென்று). பின்னுமவள் அநிருத்தனைப் பார்த்துத் தலை குனிந்து 'இவர்தான் அவர்' என்று சிரித்துக்கொண்டு சொன்னாள். அதனைக் கேட்ட சித்திரலேகை, அவன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பௌத்திரனென்று தெரிந்து கொண்டு, யோக மகிமையால் ஆகாய மார்க்கமாகத் துவாரகைக்குச் சென்றாள். அவ்விடத்தில் அந்தப்புரத் தில் கட்டிலில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த அநி ருத்தனைத் தன்னுடைய யோக மகிமையால் சோணித புரத்திற்குக் கொண்டுவந்து தனது தோழிக்கு அவ னைக் காண்பித்தாள். அந்த உஷை மிக்க அழகுள்ள அந்தப் புருஷனைப் பார்த்து முகம் மலர்ந்து, புருஷர் களுடைய சஞ்சாரமில்லாத தன்னுடைய வீட்டில் வைத்து, அவனுடன் ரமித்து வந்தாள். மேலும் அவள் விலை யுயர்ந்த வஸ்திரம், மாலை, சந்தனம், தூபம், தீபம், ஆச னம், பானம், பக்ஷ்யம், நல்வார்த்தை, சிசுரூஷை இவை களால் அநிருத்தனைப் பூஜித்தாள். இப்படி அநிருத் தன் அந்தப்புரத்தில் நாளுக்குநாள் விசேஷ சிநேகமுள்ள இந்த உஷையுடன் விஷயசுகத்தை யனுபவித்து சென்ற நாட்கள் இவ்வளவென் றறியாமல் வெகுநாட்களைக் கழித் தான். இப்படிச் சிலநாள் சென்ற பிறகு அந்தப்புரத்தின் காவலாட்கள் மறைக்க முடியாததான சில காரணங் களால் உஷை புருஷனுடைய சம்பந்தத்தை அடைந் திருக்கிறாள் என்பதைத் தெரிந்துகொண்டு, பாணு சுரனிடஞ் சென்று, "ஓ அரசனே! தவறுதலில்லா

மல் நாங்கள் காத்துக்கொண்டு வரும்பொழுதும், உம்முடைய புத்திரியான உஷைக்குப் புருஷனுடைய சம்பந்தம் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. புருஷ சஞ்சாரமில்லாத அந்தப்புரத்தில் வசிப்பவர்களுக்கு இம்மாதிரியான தோஷம் ஏற்படுவதற்கு நியாயமில்லை. அதன் காரணத்தை நாங்கள் அறியோம்" என்று சொன்னார்கள். அதனைக் கேட்ட பாணாசுரன் மிக்க வருத்தமடைந்து சீக்கிரமாக அந்தப்புரஞ் சென்றான். அவ்விடத்தில் பிரத்யும்னனுடைய புத்திரனாகிய அநிருத்தனையுங் கண்டான். அவன் மூவுலகங்களிலும் அழகிய புருஷனும், கருத்த திருமேனியுள்ளவனும், பீதாம்பரத்தைத் தரித்தவனும், தாமரைமலர்போன்ற கண்களுள்ளவனும், பருத்த கைகளுள்ளவனும், குண்டலம், தலைமயிர், சிரிப்புள்ள பார்வை இவைகளோடு அழகிய பத்தினியுடன் சொக்கட்டான் விளையாடுபவனுமாக இருந்தான். மேலும் அவனுடைய கழுத்தில் ஒரு மல்லிகை புஷ்பமாலை போடப்பட்டிருந்தது. அது உஷையால் தரிக்கப்பட்ட மாலையாகையால் அவனுடைய ஸ்தனத்தில் ஒட்டிய குங்குமங்கள் அதிலிருந்தன. அவனைப் பார்த்து பாணாசுரன் மிகவும் ஆச்சரியமடைந்தான். அப்பொழுது அநிருத்தன், ஆயிரம் கைகளுடனும், ஆயுதங்களைத் தரித்த வீரர்களுடனும் அவ்விடம் வந்த பாணாசுரனைக் கண்டு அவனைக் கொல்ல விரும்பி, இரும்பினால் செய்யப்பட்ட பரிகமென்ற ஆயுதத்தை எடுத்துக்கொண்டு யமன்போல் நின்றான். பின்னுமவன் சிறந்த பன்றியானது நாய்களைக் கொன்றாற்போலத் தன்னைப் பிடிப்பதற்காக நெருங்கி வரும் யுத்தவீரர்களை அடித்தான். அவர்கள் தலை, கைகள், தொடைகள் இவைகள் உடைபட்டவர்களாகி,

அவ்விடமிருந்து பயந்து ஓடினார்கள். க கண
ணுற்ற பலியின் புத்திரனாகிய பாணசுரன் நாகபாசங்
களால் அநிருத்தனைக் கட்டினான். க் கண்ட
உஷை மிகுந்த துக்கத்தால் பரவசையாகிக்
பெருக்கிக்கொண்டு அழுதாள்.

## அத்தியாயம் 63

### பாணசுர யுத்தம்

1-21. துவாரகை நகரத்
அவனுடைய பந்துக்கள் துக்கித்து, வருஷாகாலமாகிய
நான்கு மாதங்களைக் கழித்தார்கள். (ஒரு பக்ஷத்தை ஒரு
மாதமென்று வேதத்தில் சொல்லியிருப்பதால் இரண்டு
மாதமென்றுஞ் சிலர் கொள்கை.) இந்தச் சமயத்தில்
நாரதர் விருஷ்ணிகளிடஞ் சென்று, அநிருத்தனுடைய
சமாசாரத்தைத் தெரிவித்தார். அதனைக் கேட்டுப் பிரத்
யும்னன், யுயுதானன், கதன், சாம்பன், சாரணன், நந்
தன், உபநந்தன், பத்திரன் முதலிய ராமகிருஷ்ணர்களைச்
சார்ந்தவர்கள் பன்னிரண்டு அக்ஷௌஹிணி சைன்னியங்
களுடன் சோணிதபுரஞ் சென்று, ஸ்ரீ கிருஷ்ணனுடைய
சகாயத்தால் முற்றுகை போட்டார்கள். பட்டணத்துக்கு
சமீபத்திலிருக்கும் தோட்டங்களும், கோபுரங்களும்,
பிராகாரம் முதலியவைகளும் நாசஞ் செய்யப்பட்டன.
அதனைக் கண்ணுற்ற பாணன் பன்னிரண்டு அக்ஷௌ
ஹிணி சைன்னியங்களுடன், மிக்க கோபங்கொண்டு பட்
டணத்தை விட்டு வெளியில் வந்தான். பகவானாகிய பரம
சிவன் தம்முடைய புத்திரர்களுடனும், பிரதம கணங்க
ளுடனும் விருஷபத்தின் மீதேறி ராமகிருஷ்ணர்களுடன்
யுத்தஞ் செய்தார். ஸ்ரீகிருஷ்ணனுக்கும் பரமசிவனுக்கும்

யுத்தம் நேர்ந்தது. பிரத்யும்னன் சுப்பிரமண்யரை எதிர்த்தான். பலராமன் கும்பாண்டன், கூபகர்ணன் ஆகிய இவர்களை எதிர்த்தார். சாம்பன், பாணனுடைய புத்திரனிடம் யுத்தஞ் செய்தான். பாணன் சாத்தாகியுடன் யுத்தம் செய்தான். அந்த யுத்த வேடிக்கையைப் பார்ப்பதற்காகப் பிரம்மா முதலிய தேவர்களும், மகரிஷிகளும், சித்தர்களும், சாரணர்களும் விமானங்களில் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் வந்தார்கள். அப்பொழுது பூதங்கள், பிரேதங்கள், குஹ்யகர்கள், டாகினிகள், யாதுதானர்கள், பேதாளங்கள், விநாயகர்கள், பூத மாதாக்கள், பிசாசங்கள், கூச்மாண்டங்கள், பிரம்ம ராக்ஷஸர்கள் ஆகிய பரமசிவனுடைய கணங்களை ஸ்ரீகிருஷ்ணன் கூர்மையான பாணங்களால் அடித்தார். அப்பொழுது பரமசிவன் ஸ்ரீகிருஷ்ணன்மீது பல வகையான அஸ்திரங்களைப் பிரயோகித்தார். ஸ்ரீகிருஷ்ணன் அநாயாசமாகப் பதில் அஸ்திரங்களைப் பிரயோகித்து, அந்த அஸ்திரங்களைத் தடுத்தார். எப்படியெனில், பிரம்மாஸ்திரத்தை பிரம்மாஸ்திரத்தாலும், வாயுவின் அஸ்திரத்தைப் பர்வதாஸ்திரத்தாலும், அக்கினி அஸ்திரத்தை வாருணாஸ்திரத்தாலும், பாசுபதாஸ்திரத்தை வைஷ்ணவாஸ்திரத்தாலும் அடக்கினர். பின்னும் ஸ்ரீகிருஷ்ணன் ஜிரம்பண மென்ற அஸ்திரத்தைப் பிரயோகித்துப் பரமசிவனை மோகிக்கச் செய்துவிட்டுப் பாணனுடைய சைன்னியத்தைக் கத்தி, கதாயுதம், பாணம் முதலியவைகளால் அடித்தார். சுப்பிரமண்யர் பிரத்யும்னனுடைய பாணங்களால் அடிபட்டு,* சரீரத்தில் ரத்தம் பெருக, மயில் வாகனத்துடன் பயந்து ஓடினர். பலராமனுடைய முசலத்தால் அடிக்கப்பட்டு கும்பாண்டனும், கூபகர்ணனும் பூமியில் விழுந்தார்கள். இப்படி சேனாதிபதிகள் *அடிபட்டதனுல்

சைன்னியங்கள் பயந்து ஓடின. அதனைக் கண்ணுற்ற பாணன் சாத்தகியை விட்டு ஸ்ரீகிருஷ்ணனை எதிர்த்தான். மேலும், ஏககாலத்தில் ஐந்நூறு வில்களை நாணேற்றி வளைத்து, ஒவ்வொன்றிலும் இரண்டு இரண்டு பாணங்களைப் பூட்டினன். அதனைக் கண்ட ஸ்ரீகிருஷ்ணன் அந்த வில்களெல்லாவற்றையும் வெட்டினர். பின்னுமவர் பாணாசுரனுடைய சாரதியையும் ரதத்தில் கட்டிய குதிரைகளையுங் கொன்று, ரதத்தையும் உடைத்துச் சங்க வாத்தியத்தை முழக்கினர். அப்பொழுது பாணாசுரனுடைய மாதாவான கோடரா வென்பவள் தலைமயிரை அவிழ்த்துக்கொண்டு வஸ்திரமில்லாமல் புத்திரனைக் காப்பாற்ற வேண்டி, ஸ்ரீகிருஷ்ணனுடைய முன்பாக வந்து நின்றாள். அதனைக் கண்ட பகவான் அவளைப் பாராமல் முகத்தைத் திருப்பிக்கொண்டார். அந்தச் சமயம் பார்த்து பாணாசுரன் தன்னுடைய பட்டணத்திற்குள் பிரவேசித்தான்.

22-25. பின்பு பரமசிவனுடைய பரமதகணங்கள் பயந்து ஓடியதால் மூன்று தலைகளுள்ளதும், மூன்று கால்களுள்ளதுமான மாகேசுவர ஜ்வரமானது பரமசிவனால் தாண்டப்பட்டுக் கிருஷ்ணனுடைய முன்னிலையில் வந்து நின்றது. பின்பு அதனைக் கண்ணுற்ற புருஷன் அதன்மீது வைஷ்ணவ ஜ்வரத்தைத் தாண்டினர். இரண்டு ஜ்வரங்களும் யுத்தஞ்செய்தன. வைஷ்ணவ ஜ்வரத்தால் மாஹேசுவர ஜ்வரம் அடிக்கப்பட்டுப் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து அவரைச் சரணமடைந்து, வருமாறு தோத்திரஞ் செய்யலாயிற்று. எப்படியெனில்,

26. "அளவற்ற சக்தியுள்ளவராகிய உம்மை நமஸ்கரிக்கிறேன். நீர் பிரம்மா முதலிய மேலானவர்களுக்கும் அதிபதியாக இருப்பவர்; எல்லாவற்றையும்

பாணாசுரன் உம்முடைய சொரூபத்தை யறியாமல் யுத்தஞ் செய்தது ஆச்சரியமல்ல என்பது கருத்து.) மேலும், உமக்கு ஆகாயம் தொப்புளாகவும், அக்கினி முகமாகவும், ஜலம் வீரியமாகவும், த்யுலோகம் தலையாகவும், திக்குகள் காதுகளாகவும், பூமி பாதமாகவும், சந்திரன் மனமாகவும், சூரியன் கண்ணாகவும், நான் (பரமசிவன்) அகங்காரமாகவும், சமுத்திரம் வயிறாகவும், இந்திரன் முதலிய லோக பாலர்கள் கைகளாகவும், ஓஷதிகள் ரோமங்களாகவும், மேகங்கள் தலைமயிர்களாகவும், பிரம்மதேவர் புத்தியாகவும், பிரஜாபதியானவர் ஆண்குறியாகவும், தர்மம் இருதயமாகவும் இருக்கின்றன. ஆனதால் நீர் லோகங்களால் கற்பிக்கப்பட்ட புருஷன் (அத்திப்பழத்திற்குள் வசிக்கும் புழுக்கள் எப்படி அந்தப் பழத்தை யறியமுடியாதவை களோ, அப்படியே உம்முடைய சரீரத்திற்குள் இருப்பவர்களால் உம்மை யறியமுடியாதென்று தாத்பரியம்).

38-41. ஓ தடையற்ற மகிமையுள்ளவரே! நீர் ஜகத்தின் க்ஷேமத்திற்காகவும், தர்மத்தைக் காப்பாற்றுவதற்காகவும் பூமியில் அவதரிக்கிறீர். லோகபாலர்களான நாங்களும் உம்மால் காப்பாற்றப்பட்டு (உம்முடைய அநுக்கிரகத்தால்), ஏழுலோகங்களையும் சம்ரக்ஷிக்கிறோம். மேலும், நீர் ஒருவர் (ஸஜாதீய பேதமற்றவர்); புராண புருஷன்: (மூன்று அவஸ்தையுள்ள புருஷர்களுக்குப் பிரகிருதியாக இருப்பவரென்று கருத்து.) தமக்கு இரண்டாவதில்லாதவர் (விஜாதீய பேதமற்றவர்); சுத்தர்; தாமாகப் பிரகாசிக்கும் ஞானசொரூபி; எல்லாவற்றிற்கும் காரணராக இருப்பவர்: உமக்குக் காரணமொன்றுமில்லை; எல்லாவற்றிற்கும் ஈசன்; (சுத்தப்பிரம்மத்திற்கு உபாதிகளுடைய சம்பந்தம் ஏற்பட்டால் அதிலிருந்து ஜீவர்கள் உண்டாகிறார்கள். "அக்னியிலிருந்து அற்பமான நெருப்

புப் பொறிகள் உண்டாவதுபோல் இந்த ஆத்மாவினிட மிருந்து சகல ஜீவாத்மாக்களும் உண்டாகிறார்கள்" சுருதி) அப்படி ஒருவரானாலும் சகல விஷயங்களையும் பிரகாசிக்கச் செய்வதற்காக ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறாகத் தோன்றுகிறீர். ஆனாலும் நீர் ஸம்ஸாரியல்ல. ஏனென்றால், ஓ மகிமை பொருந்தியவரே! சூரியன் மேகங்களால் மறைக்கப்பட்டாலும், அந்த மேகங்களையும், மற்ற பதார்த்தங்களையும் எப்படிப் பிரகாசிக்கச் செய்கிறாரோ, அப்படித் தாமாகப் பிரகாசிப்பவரான நீர் அகங்காரத்தால் மறைக்கப்பட்டிருந்தாலும், ஸத்வம் முதலிய குணங்களையும், ஜீவர்களையும் பிரகாசிக்கச் செய்கிறீர். மேலும், ஜனங்கள் உம்முடைய மாயையால் மோகித்துப் புத்திரன், களத்திரம், வீடு முதலியவைகளில் ஆசைகொண்டு, துக்க சமுத்திரத்தை அடைந்து அழுந்திவிடுகிறார்கள். (தாவர ஜன்மத்தை அடைகிறார்கள்.) சில சமயம் மேலே கிளம்புகிறார்கள். (தேவாதி ஜன்மத்தை அடைகிறார்கள். சகல ஜனங்களையும் மோகிக்கச்செய்யும் மாயை உம்மை ஆச்சிரயித்திருப்பதால் உமக்கு ஸம்ஸார சம்பந்தம் எப்படி ஏற்படுமென்று கருத்து.)

42-43. உம்மால் கொடுக்கப்பட்ட மனித சரீரத்தை யடைந்தும், எவன் இந்திரியங்களை ஜயிக்காமலும் உமமுடைய பாதங்களையும் சேவிக்கவில்லையோ, அவன் ஆத்மவஞ்சகன். அவனைப்பற்றித் துக்கிக்கவேண்டும். பின்னும் ஆத்மாவாகவும், பிரியரும், ஈசுவரனுமாகிய உம்மை எந்த மனிதன் சேவியாமல் புத்திரன் முதலியவர்களையே போஷித்துக்கொண்டு விஷயத்தில் மூழ்கியிருக்கிறானோ, அவன் துக்கிக்கத்தக்கவன். மேலுமவன் அமிருதத்தை விஷமென்று நினைத்து, அதைப் புசியாமலிருப்பவனுக்குச்

சமமாவான். (பகவானைச் சேவியாதவன் துக்கப்படுவான் என்று சொல்லப்பட்டது.)

44-46. நான் (பரமசிவன்), பிரம்மதேவர், தேவர்கள், சுத்த சித்தர்களான மகரிஷிகள் ஆகிய நாங்களெல்லாரும் ஆத்மாவும், ஈசுவரனும், இஷ்டருமாகிய உம்மை மூன்று காரணங்களாலும் சரணமடைகிறோம். ஓ தேவ! நீர்! சகல ஜகத்தையும் படைப்பவர்; சம்ரக்ஷிப்பவர்; நாசஞ்செய்பவர்; சமபுத்தியுள்ளவர்; மிகவும் சாந்தர்; புத்தியைப் பிரவர்த்திக்கச்செய்பவர்; ஆத்மா எல்லாவற்றிற்கும் அதிபதி; (உம்மைக்காட்டிலும் உபாசிக்கத்தக்க பிரபு வேறில்லையென்று கருத்து.) சகல ஜகத்திற்கும், ஆத்மாக்களுக்கும் இருப்பிடம்; ஸஜாதிய விஜாதிய பேதமற்றவர்: அப்படிப்பட்ட உம்மை மோக்ஷத்திற்காகச் சேவிக்கிறோம். இந்தப் பாணன் என்னுடைய அந்தரங்க பக்தன்; நான் இவனுக்கு அபயங் கொடுத்திருக்கிறேன். (காப்பாற்றுவதாக ஒப்புக்கொண் டிருக்கின்றேன்.) ஆனதால் பலிச் சக்ரவர்த்தியை அனுக்கிரகித்ததுபோல் இவனை அநுக்கிரகிக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

47-50. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் பரமசிவனை நோக்கி, "ஓ பகவன்! நீர் எதனைச் சொன்னீரோ, அதன்படி உம்முடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கிறேன். உம்முடைய வார்த்தையை நன்றாக அநுமோதித்தேன். இவன் பலியின் புத்திரனானதால் இவனைக் கொல்வது சரியல்ல. "உன்னுடைய வம்சத்தில் பிறந்தவனை நான் கொல்லுகிறதில்லை'' என்று பிரஹ்லாதருக்கு வரங் கொடுத்திருக்கிறேன். இவனுடைய கர்வத்தை அடக்குவதற்காகவே இவனுடைய கைகளை வெட்டினேன். பூமிக்குச் சுமையாக இருந்த சைன்னியத்தையும் கொன்றேன்.

இவனுக்கு நான்கு கைகள் வெட்டுப்படாமல் மிருந்திருக்கின்றன. இவன் கிழத்தனம், சாவு இவைகளில்லாமல் உம்முடைய பார்ஷதர்களில் முக்கியனாகி, பயமற்று சஞ்சரிக்கட்டும்” என்று அநுக்கிரகித்தார்.

51.54. இப்படி ஸ்ரீ கிருஷ்ணனால் அநுக்கிரகிக்கப் பெற்ற பாணாசுரன் அநிருத்தனையும், உஷையையும் ரதத்திலேற்றி ஸ்ரீ கிருஷ்ணனிடம் சமர்ப்பித்தான். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் அக்ஷௌஹிணிக்கணக்கான சைன்னியங்களுடன் கூடியவனும், நல்ல வஸ்திரமுள்ளவனும், அலங்கரிக்கப்பெற்றவனும், உஷையுடன் கூடியவனுமான அநிருத்தனை முன்னிட்டு ருத்ரனிடம் விடைபெற்றுத் தம்முடைய நகரஞ் சென்றார். அந்தப் பட்டணமானது துவஜங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பட்டணத்து ஜனங்களும், மித்திரர்களும் சங்கம், ஆனகம், துந்துபி ஆகிய வாத்தியங்களுடன் எதிர்சென்று அழைத்தார்கள். கிருஷ்ணன் பரமசிவனுடன் யுத்தஞ் செய்த கதையையும், பாணனை ஜயித்த கதையையும் எவன் காலையில் எழுந்திருந்து நினைத்துக்கொள்ளுகிறானோ அவனுக்கு அபஜயமில்லை. (எங்கும் ஜயமுள்ளவனாவானென்று கருத்து.)

## நோட்டு.

சூரியன் மேகங்களால்...சூரியனுடைய சாயையே மேகம். பார்ப்பவர்களுக்குச் சூரியன் மேகத்தால் மறைக்கப்பட்டிருப்பதாகத் தோற்றுகிறதே யொழிய உண்மையில் மறைக்கப்படவில்லை. தன்னுடைய சாயையால் தனக்கு மறைவு ஏற்படுமோ? எப்படி மேகங்களால் மறைக்கப்பட்டிருக்கும்பொழுது அந்த மேகங்களும் மற்ற உலகிலுள்ள வஸ்துக்களும் எதனால் பிரகாசிக்கின்றன வென்று யோசித்தால் அந்தச் சூரியனாலேயே பிரகாசிக்கின்றன. இதுபோலவே அகங்காரமென்பது பரமாத்மாவின் காரியம். நடப்

அதனால் ஆத்மா மறைக்கப்பட்டிருப்பதாக நினைக்கிறார்கள். உண்மையில் அதனால் ஆத்மா மறைக்கப்படவில்லை. அந்த ஆத்ம பிரகாசத்தாலேயே உபாதிகளாகிய குணங்களும், உபாதி சம்பந்தமுள்ள ஜீவர்களும் பிரகாசிக்கிறார்கள். எல்லாம் ஆத்மபிரகாசத்தால் பிரகாசிக்கின்றன. ஆத்மா ஸம்ஸாரியாக ஆவதற்கு நியாயமில்லை. எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயும், ஸம்ஸார சம்பந்தமில்லாத சுத்த சொரூபியுமான ஆத்மாவிற்கு ஸம்சாரமில்லையென்று தாத்பரியம்.

---

## அத்தியாயம் 64

### நிருகருடைய கதை

ஓ பரீக்ஷித்து மகாராஜனே! ஸாம்பன், பிரத்யும்னன், சாருபானு, கதன் முதலிய யதுகுமாரர்கள் விளையாடுவதற்காகத் தோட்டத்திற்குச் சென்றார்கள். அவ்விடத்தில் வெகுநேரம் விளையாடிக் களைப்படைந்து, தாகமுள்ளவர்களாகி, ஜலம் எங்கே இருக்கிறது என்று தேடினார்கள். அப்பொழுது ஒரு கிணற்றைப் பார்க்க, அது ஜலமில்லாததாக இருந்ததுமன்றி அதில் அற்புதமான ஓணான் ஒன்றுஇருக்கக் கண்டார்கள். அது மலைபோலப் பருத்த சரீரமுள்ளதாக இருந்ததனால் அதனைப் பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். மேலும், அவர்கள் மிக்க தயையுடன் கயிறுகளாலும், தோல் வார்களாலும் அதனைத் தூக்க முயன்றும் அவர்களால் முடியவில்லை. அதனால் அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் தெரிவித்தார்கள். தாமரைக் கண்ணனும், சகல ஜகத்திற்கு அந்தர்யாமியும், பகவானுமாகிய ஸ்ரீகிருஷ்ணன் அதனைக் கேட்டு அவ்விடம்சென்று அந்த ஓணானைப் பார்த்து, இடக்கையால் விளையாட்டாக உயரத் தூக்கினார். உத்தம சுலோகராகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய திவ்யமான கைபட்ட மாத்திரத்தில், அது ஓணான் சொரூபத்தைவிட்டு தேவசொரூபத்தை யடைந்தது. மேலும்

அந்தத் தேவன் சுவர்ணத்தின் நிறம்போன்ற நிறமுள்ளவ னும், அற்புதமான வஸ்திரம், மாலை இவைகளால் அலங் கரிக்கப்பட்டவனுகவு மிருந்தான். அவனைக் கண்ணுற்ற ஸ்ரீகிருஷ்ணன் அவனுடைய உண்மையை யறிந்தவரானு லும், அவனுல் செய்யப்பட்ட தானத்தின் மகிமையை ஜனங்களுக்குத் தெரிவிப்பதற்காக அவனை நோக்கி, 'ஓ மிகுந்த அதிருஷ்டமுள்ளவனே! நீ யார்? உத்தமமான சொரூபமுள்ளவனு யிருக்கிறுய். உன்னைச் சிறந்த தேவ னென்று நினைக்கிறேன். உனக்கு இம்மாதிரியான தாழ்ந்த ஜன்மம் உண்டாவதற்கு நியாயமில்லையே. எந்தப் பாபத் தால் இந்த ஜன்மத்தை யடைந்தாய்? அதனைத் தெரிந்து கொள்ள நான் விரும்புவதால் எனக்குச் சொல்லக்கூடு மானுல் சொல்லும்" என்று கேட்டார்.

9-30. ஆனந்த சொரூபியான ஸ்ரீகிருஷ்ணனுல் கேட் கப்பட்ட அந்தத் தேவன் சூரியன்போலப் பிரகாசிக்கும் கிரீடம் படும்படி பகவானுடைய பாதங்களில் நமஸ்கரித் துக் கிருஷ்ணனை நோக்கி, "ஓ பிரபுவே! நான் இக்ஷ்வாகு வின் புத்திரனுகிய நிருகனென்ற அரசன். கொடையாளி களுடைய பிரஸ்தாபத்தில் என்னை ஒருவனுகச் சொல்லு வார்கள். என்னுடைய பெயரை நீரும் கேட்டிருக்கலாம். ஓ நாத! சகல பிராணிகளுடைய புத்திக்குச் சாட்சியாக விருக்கும் உமக்கு எதுதான் தெரியாது? ஆனுலும் உம் முடைய ஆக்ஞையால் சொல்லுகிறேன். பூமியில் எவ்வ ளவு மணல்கள் இருக்கின்றனவோ, ஆகாயத்தில் எவ்வ ளவு நட்சத்திரங்களிருக்கின்றனவோ, மழைத்தாரைகள் எவ்வளவோ அவ்வளவு பசுக்களை நான் தானம்செய்திருக் கிறேன். அவ்வளவு பசுக்களும்நல்ல சுபாவமுள்ளவை; அதி கப் பாலைக் கொடுக்கக்கூடியவைகள்; அழகுள்ளவைகள்; கபிலைகள் (காராம் பசுக்கள்); நியாயமாகச் சம்பாதிக்கப் பட்டவைகள்; கன்றுள்ளவைகள்; தங்கத்தால் அலங்கரிக் கப்பட்ட கொம்புகளுள்ளவைகள்; வெள்ளியால் அலங்

கரிக்கப்பட்ட குளம்புகள் உள்ளவைகள்; வெண்பட்டு, புஷ்பமாலை, ஆபரணம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவைகள்; இப்படி அலங்கிருதமான பால் பசுக்களை நற்குணங்கள், சுபாவம் இவைகள் பொருந்தியவர்களும், தரித்திரர்களும், விரதங்களை அனுஷ்டித்தவர்களும், தபஸ்விகளும், வேதத்தைப் பிறருக்குச் சொல்லிவைப்பவர்களும், யௌவன வயதுள்ளவர்களுமான பிராம்மணர்களை வஸ்திரம் முதலியவைகளால் பூஜித்து, அவர்களுக்குத் தானஞ் செய்தேன். மேலும், இப்படிப் பசு, பூமி, ஹிரண்ணியம், வீடு, குதிரை, யானை, வேலைக்காரிகளுடன் கூடிய கன்னிகைகள், எள், வெள்ளி, படுக்கை, வஸ்திரம், ரத்தினம், ரதங்கள் ஆகிய இவைகளைத் தானஞ்செய்தேன். பின்னும் யாகங்கள் செய்யப்பட்டன; கிணறு, குளம் வெட்டுவிப்பது முதலிய பூர்த்த தர்மங்களையும் செய்தேன். இப்படியிருக்கையில் ஒரு பிராமணனுடைய பசுவானது காணுமற்போய் என்னுடைய பசுக்கூட்டத்தில் கலந்தது. அதனை நான் அறியாமல் பிராம்மணனுக்கு அதனையும் கூட்டத்தோடு தானஞ் செய்துவிட்டேன். தானம் பெற்றுக்கொண்ட பிராம்மணன் அவைகளை ஓட்டிக்கொண்டுபோகும்பொழுது, அந்தப் பசுவின் யஜமானனாகிய பிராம்மணன், ‘இது என்னுடைய பசு’ என்று அதனைக் கூட்டத்திலிருந்து பிரித்து ஓட்ட யத்தனித்தார். அப்பொழுது தானம்பெற்றவர், ‘இந்தப் பசுவை எனக்கு நிருக மகாராஜன் கொடுத்தார்,’ என்றார். இப்படி அவ்விருவர்களும் விவாதப்பட்டு என்னிடம் வந்து, தானம் வாங்கியவர் உம்மால் கொடுக்கப்பட்ட இந்தப் பசுவை இந்தப் பிராம்மணன் கொண்டுபோகிறானென்றும், மற்றொருவர் என்னுடைய பசுவை இவர் திருடிக்கொண்டார் என்றும் பேசிக்கொண்டார்கள். அதனைக் கேட்டு நான்

உண்மை தெரியாமல் மோகித்தேன். அப்பொழுது அந்த இரண்டு பிராம்மணர்களேயும் மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன். 'நான் இப்பொழுது உண்மையை யறியாதவனு யிருப்பதால் எப்படிச் செய்வது தர்மமென்பது தெரியவில்லை. ஆனதால் மிகவும் கஷ்டப்படுகிறேன். இந்த ஒரு பசுவிற்குப் பதிலாக லட்சம் பசுவைக் கொடுக்கிறேன். நீங்கள் சமாதானத்தை யடைந்து என்னை யநுக்கிரகிக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டேன். அதனைக் கேட்ட அந்தப் பசுவின் யஜமானனுகிய பிராம்மணன், 'இந்தப் பசுவைத் தவிர வேறு எனக்கு ஒன்றும் வேண்டாம்' என்று சொல்லிவிட்டுச் சென்றுர். மற்றொருவர் பத்து லட்சம் பசுக் கொடுத்தாலும் எனக்கு வேண்டாம்' என்று சொல்லிவிட்டுப் போனுர். இந்தச் சமயத்தில் எனக்கு மரணகாலம் சமீபித்ததால் யமதூதர்கள் என்னை யமலோகம் அழைத்துப் போனுர்கள். அவ்விடத்தில் யமன் என்னை நோக்கி, "ஓ அரசனே! நீர் புண்ணியத்தின் பயனை முதலில் அனுபவிக்கிறீரா? அல்லது பாபத்தின் பயனை யனுபவிக்கிறீரா? நீர் செய்த தானத்தின் பயன் முடிவற்றது' என்று கேட்டார். அதற்கு நான் அவரை நோக்கி, "ஓ தேவ! நான் பாபத்தின் பயனை முதலில் அனுபவிக்கிறேன்' என்று சொன்னேன். அதனைக் கேட்டு யமன் 'விழு' என்று சொன்னுர். பின்பு ஓணுன் சரீரத்துடன் பூமியில் விழுந்தேன். பிராம்மண பக்தியுள்ளவனும், தாதாவும், உம்முடைய பக்தனும், உம்முடைய தரிசனத்தை எதிர்பார்த்தவனுமாகிய எனக்கு முந்திய ஞாபகம் இப்பொழுதுமிருக்கிறது. ஆனதால் ஓ பிரபுவே! யோகிகள் உபநிஷத்தாகிய கண்ணுல் இருதயத்தில் உம்மைத்தியானஞ்செய்கிறுர்கள். நீர் இந்திரியங்களுக்குப் புலப்படாதவர். அப்படிப்பட்ட நீர் ஓணுன் ஜன்

மத்தை யடைந்து கஷ்டப்படும் எனக்குத் தரிசனங் கொடுத்தது ஆச்சரியமேயாம். உம்முடைய தரிசனம் ஸம்ஸாரத்தை நிவர்த்திக்கக்கூடியது. ஓ தேவர்களுக்குந் தேவனே! ஜகத்திற்கு அதிபதியே! கோவிந்தா! புருஷோத்தமா! நாராயணா! இந்திரியங்களுக்கு அதிபதியே! புண்ய சுலோகா (நல்வினையைக் கொடுப்பவர்) அழிவில்லாதவரே! அண்டினவர்களைக் காப்பாற்றுகிறவரே! தேவலோகஞ் செல்லுகிற எனக்கு விடை கொடும். நான் எவ்விடத்திலிருந்தாலும் என்னுடைய மனமானது உம்முடைய பாதத்தைத் தியானஞ் செய்யட்டும். எல்லாவற்றையும் படைத்தவரும், விகாரமற்றவரும், மாயையென்ற சக்தியுள்ளவரும், எல்லாவற்றிற்கும் ஆச்சிரயரும், ஆனந்தரூபியும், யக்ஞம் முதலிய கர்மங்களுக்குப் பயனைக் கொடுப்பவருமான உம்மை நமஸ்கரிக்கிறேன்'' என்று சொல்லி அவருக்குப் பிரதட்சிண நமஸ்காரஞ் செய்து, அவரிடம் விடைபெற்று உயர்ந்த விமானத்தின்மேலேறி, எல்லா ஜனங்களும் பார்த்திருக்கும்பொழுது தேவலோகஞ்

31—44. அப்பொழுது பிராம்மணர்களைத் தெய்வமாகக் கொண்டவரும், தர்ம சுபாவமுள்ளவரும், தேவகியின் புத்திரருமான கிருஷ்ணன் தர்மத்தின் ரகசியத்தை அரசர்களுக்குத் தெரிவிப்பதற்காகச் சிரித்துக்கொண்டு, தம்முடைய பரிஜனத்தை நோக்கி, "அக்கினிக்குச் சமமான தேஜஸ்வியானாலும் பிராம்மணனுடைய சொத்தில் அற்ப பாகத்தை அபகரித்தாலும் அது செரிக்காது; அப்படியிருக்க, தன்னை ஈசுவரனென்று நினைத்து அகங்காரமடைந்திருக்கும் அரசர்கள் பிராம்மண சொத்தை அபகரித்தால் அதனைச் சரித்துக்கொள்ள முடியுமா? நான் ஆலகாலத்தை விஷமென்று நினைக்கவில்லை. அதனை மணி,

மந்திரம், ஒளஷதம் இவைகளால் அடக்கலாம். பிரா மணனுடைய சொத்தே விஷமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனை யொருவராலும் நிவர்த்திக்கமுடியாது. விஷம் புசித்தவனை மாத்திரம் கொல்லும். அக்கினியை ஜலத்தால் அணைத்துவிடலாம். பிராம்மணனுடைய சொத்தாகிய அரணியிலிருந்து உண்டான அக்கினியானது குலம் முழுவதையும் நாசஞ்செய்கிறது. பிராம்மணனுடைய சொத்தை அவருடைய அநுமதியில்லாமல் அபகரித்தால் அது மூன்று தலைமுறையை நாசஞ்செய்யும். பலிஷ்டர்களுடைய ஆச்சிரயத்தால் பலாத்காரமாக அபகரித்து அநுபவித்தால், அவனுக்கு முந்திப் பத்துத் தலைமுறைகளையும், பிந்திப் பத்துத் தலைமுறைகளையும் நாசமாக்கிவிடும். எந்த அரசர்கள் பிராம்மணனுடைய சொத்தை விரும்புகிறார்களோ, அவர்கள் கெடுதியை இச்சிப்பவர்களாகிறார்கள். அதனால் அவர்கள் மூடர்கள்; தனக்கு வரும் கெடுதியை அறியாதவர்கள்; அரசர்களானாலும், அரசர்களுக்குச் சமானர்களானாலும் எவர்கள் பிராம்மணனுடைய சொத்தை அபகரிக்கிறார்களோ, அவர்கள் சொத்தைப் பறிகொடுத்த குடும்பிகளான பிராம்மணர்கள் அழும்போது கண்ணீர் ஜலத்துளிகள் எவ்வளவு பூமியில் விழுமோ அவ்வளவு காலம் கும்பீபாகமென்ற நரகத்தை அடைவார்கள். பின்னுமந்தப் பிராம்மணர்கள் கோபத்தால் மண்ணை வாரியிறைத்தால் அதில் எவ்வளவு தூளிகளிருக்குமோ, அவ்வளவு காலம் கும்பீபாகத்தில் வசிப்பார்கள். பிராம்மணனுக்கு ஒரு ஜீவனத்தைத் தானே கொடுத்து, அதனைப் பிந்தி அபகரித்தாலும், பிறரால் கொடுக்கப்பட்ட ஜீவனத்தை அபகரித்தாலும் அவன் அறுபதினாயிரம் வருஷங்கள் அமேத்யத்தில் புழுவாக ஜனிப்பான். ஆனதால் பிரம்ம சொத்தானது எனக்கு

வேண்டாம். (இதில் இச்சையுண்டாகவேண்டாமென்று கருத்து.) பிராம்மண சொத்தில் ஆசை வைத்தால் அந்த அரசர்களுக்கு ஆயுள் குறையும்; சத்ருக்களால் ஜயிக்கப்பட்டு ராஜ்யத்தை இழந்து பயத்தை அடைவார்கள். ஓ என்னைச் சார்ந்தவர்களே! பிராம்மணன் குற்றஞ் செய்தாலும், அவர்களுக்கு நீங்கள் துரோகஞ் செய்யக்கூடாது. பிராம்மணன் உங்களை அடித்தாலும், பலதரம் வைதாலும், அவனை எப்பொழுதும் நமஸ்கரியுங்கள். நான் ஒவ்வொரு காலத்திலும் மிக்க ஜாக்கிரதையாக பிராம்மணர்களை நமஸ்கரிப்பதுபோல் நீங்களும் பிராம்மணர்களை நமஸ்கரியுங்கள். அப்படியில்லாவிடில் சிட்சிக்கப்படுவீர்கள். இந்த நிருக மகாராஜன் தமது பசுக்களில் சேர்ந்திருந்த பிராம்மணனுடைய பசுவைத் தெரியாமல் தானஞ் செய்ததால் ஓணான் ஜன்மத்தை அடைந்து கஷ்டப்பட்டதுபோலப் பிராம்மணனுடைய சொத்தை அபகரிப்பவன் துக்கப்படுவான்” என்று சகல லோகத்தையும் பரிசுத்தப்படுத்துகிறவரான ஸ்ரீ கிருஷ்ண பகவான் துவாரகாவாசிகளான ஜனங்களுக்கு உத்தரவு செய்து, தம்முடைய அரண்மனைக்குட் பிரவேசித்தார்.

## அத்யாயம் 65

### பலராமன் யமுனா நதியை இழுத்தது

1-8. ஓ பரீக்ஷித்து மகாராஜனே! பலராமன் ஒரு கால் ரதத்தில் ஏறிக்கொண்டு பந்துக்களைப் பார்ப்பதற்காக நந்தகோகுலஞ் சென்றார். அவ்விடத்தில் சில கோபர்களும், கோபிகைகளும் *பலராமனை ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். பலராமன் தாய்

நமஸ்கரித்தார். அவர்கள், "ஓ ஜகதீசனுகிய பல! தம்பி யான ஸ்ரீ கிருஷ்ணனுடன் வெகு காலம் எங்களைக் காப் பாற்று" என்று சொல்லி ஆனந்தக்கண்ணீரைப் பெருக்கி, அதனுல் பலராமனை நனைத்தார்கள். மேலும் பலராமன், பெரியோர்களான கோபர்களை நமஸ்கரித்தார். இப்படி வயதிற்கும், பாந்தவ்யதிற்கும் தக்கபடி பலராமன் கோபர் களை நமஸ்கரித்தும், கோபர்களால் நமஸ்கரிக்கப்பட்டும் இருந்தார். சிலர் பலராமனைக் கையைப் பிடித்தும், சிரித் தும், உபசரித்தும் க்ஷேமம் விசாரித்தார்கள். பலராம னும் அவர்களை க்ஷேமம் விசாரித்தார். மேலும் அந்தக் கோபர்கள் தாமரைமலர்போன்ற கண்களுள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ணனையே மனத்தில் நினைத்துக்கொண்டு, சகல ஆசைகளையும் ஒழித்தவர்களாகிப் பலராமனை நோக்கி, "ஓ ராம! நீங்கள், உங்களுடைய புத்திரர்கள், களத்திரம் ஆகிய இவர்களுடன் க்ஷேமமாக இருக்கிறீர்களா? எங்க ளுடைய ஞாபகமிருக்கிறதா? நம்முடைய பந்துக்களெல் லோரும் க்ஷேமமாக இருக்கிருர்களா? பாபியாகிய கம் ஸன் தெய்வச்செயலாக அடிக்கப்பட்டான். பந்துக்கள் தெய்வச்செயலால் க்ஷேமத்தை அடைந்தார்கள். சத் துருக்களை ஜயித்தும், கொன்றும் தெய்வாதீனமாக துவா ரகா நகரத்தை அடைந்தீர்கள்" என்று பிரியத்தால் தழுதழுத்த (கத் கத) கண்டசுவரத்துடன் கேட்டார்கள்.

9—15. கோபிகைகள் ராமனைத் தரிசித்து, மிக்க பிரியத்துடன் அவருடைய சமீபஞ் சென்று, "பட்ட ணத்து ஸ்திரீகளின் மனத்தை அபகரிப்பவரான ஸ்ரீ கிருஷ்ணன் சுகமாக வசிக்கிருரா? நீண்ட கைக ளுள்ளவரான பகவான் முந்தி நாங்கள் அவரைச் சேவித் துக்கொண் டிருந்ததை நினைத்துக்கொள்வதுண்டா? மேலும் தாய், தந்தை, சகோதரர்கள், பர்த்தாக்கள்,

புத்திரர்கள், சகோதரிகள் ஆகிய விடமுடியாத எல்லா பந்துக்களையும்விட்டு எந்த ஸ்ரீ கிருஷ்ணனை ஆச்ரயித்திருந்தோமோ, அப்படிப்பட்ட எங்களுடைய ஞாபகமிருக்கிறதா ? அவ்வளவு பிரீதியுள்ளவர்களான எங்களைவிட்டு விசுவாசத்தை மறந்து மதுரா நகரஞ் சென்றார். அப்படிப்பட்ட கிருஷ்ணனுடைய வார்த்தையைப் பட்டணத்து ஸ்திரீகள் எப்படி நம்புகிறார்கள் ? கிருஷ்ணன் சஞ்சல சித்தமுள்ளவர்; செய்த உபகாரத்தை மறப்பவர்; ஆனாலும் சமயத்துக்குத் தக்கபடி அழகாகப் பேசக் கூடிய கிருஷ்ணனுடைய வார்த்தையை எவர்கள்தான் நம்பமாட்டார்கள் ? அதனால்தான் அழகான கிருஷ்ணனுடைய புன்சிரிப்புள்ள பார்வையால் மன்மத தாபத்தை அடைந்து மோகித்து அவருடைய வார்த்தையைப் பட்டணத்து ஸ்திரீகள் நம்புகிறார்கள். (சில ஸ்திரீகள் சொல்லுகிறார்கள்.) ஓ கோபிகைகளே ! கிருஷ்ணனுடைய கதையைவிட்டு மற்றக் கதையைச் சொல்லுங்கள். நம்மைவிட்டுப் பிரிந்த அவருக்கும் காலம் போகிறது (சுகமாக); அவரைவிட்டுப் பிரிந்த நமக்கும் காலஞ் செல்லுகிறது (துக்கமாக); ஆகையால் அவருடைய கதையைச் சொல்வதால் நமக்கென்ன பயன் ?" என்றுச் சொல்லிப் பகவானுடைய சிரிப்பு, வார்த்தை, அழகான பார்வை, நடை, அன்புடன் ஆலிங்கனஞ் செய்துகொள்வது ஆகிய இவைகளை நினைத்து அழுதார்கள்.

16—26. அதனைக் கேட்ட பலராமன், பலவகையாகச் சமாதானஞ் சொல்லச் சமர்த்தரானதால் ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியனுப்பிய வார்த்தைகளைச் சொல்லி அவர்களைச் சமாதானஞ் செய்தார். இப்படிப் பலராமன் சைத்ரம், வைசாகம் ஆகிய இரண்டு மாதங் கோகுலத்தில் வசித்தார். பலராமன் ராத்திரிகளில்

யமுனா நதியின் கரையிலுள்ள வனங்களில் ஸ்திரீகளுடன் கோபிகைகளுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணிக் கொண்டு விளையாடினார். அப்பொழுது பூர்ண சந்திரன் பிரகாசித்தான். குமுதம் முதலிய புஷ்பங்களின் வாசனையுடன் காற்று வீசியது. அப்பொழுது வாருணீ யானவள் (அமிருதத்துடன் சமுத்திரத்திலுண்டான மத்யம்) வருணனால் தூண்டப்பட்டு, மரத்தின் பொந்திலிருந்து பெருகி அந்த வனத்தை வாசிக்கச் செய்தது. அந்த மதுவின் வாசனையை முகர்ந்து, பலராமன் ஸ்திரீகளுடன் அவ்விடம் வந்து அதனைப் பானம் செய்தார். மேலுமவர் தாம் கானஞ்செய்துகொண்டும், ஸ்திரீகளால் கானஞ்செய்யப்பட்டும் ஸ்திரீகளுடைய நடுவில் பிரகாசித்தார். அது பெண் யானைகளின் நடுவில் ஐராவதம் விளங்கினாற்போலிருந்தது. அப்பொழுது ஆகாயத்தில் துந்துபி வாத்தியங்கள் முழங்கப்பட்டன. புஷ்ப மாரி பெய்தது. கந்தர்வர்களும், மகரிஷிகளும் பலராமனுடைய சரிதத்தைத் துதித்தார்கள். இப்படிப் பலராமன் ஸ்திரீகளால் துதிக்கப்பெற்றும், மதித்தவராகவும், மதத்தால் கலங்கிய கண்களுள்ளவராகவும், புஷ்பமாலையைத் தரித்தவராகவும், வைஜயந்தியென்ற மாலையைத் தரித்தவராகவு மிருந்தார். அவருடைய சிரிப்புள்ள முகமானது வியர்வைத் துளிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அப்படிப்பட்ட பலராமன் ஜலக்கிரீடை செய்வதற்காக யமுனா நதியை அழைத்தார். அதனைக் கேட்ட யமுனா நதி, "இவர் மதங்கொண்டவர்" என்று இவருடைய வார்த்தையை லக்ஷியம் செய்யாமல் வரவில்லை. அதனைக் கண்ட பலராமன் யமுனையை நோக்கி, "அடி பாபியே! என்னால் அழைக்கப்பட்டும் நீ வராததனால், இஷ்டப்படி சஞ்சரிப்பவளான உன்னைக் கலப்பையால்

பலவகையாகச் செய்கிறேன்" (பேதிக்கிறேன்) என்று சொல்லிக் கலப்பையின் நுனியால் கோபத்துடன் இழுத்தார்.

27—29. அதனைக் கேட்ட யமுனா நதி பயந்து, பலராமனுடைய பாதங்களில் நமஸ்கரித்து, "ஓ ராம! ராம! மிகுந்த பராக்கிரமமுள்ளவரே! உம்முடைய பராக்கிரமத்தை நானறியேன். நீர் ஆதிசேஷனாக இருந்து பூமியைத் தாங்குகிறீர். ஓ சகல ஜகத்சொரூபியாக இருப்பவரே! உம்முடைய உண்மையான சொரூபத்தை யறியாதவளான என்னை விட்டுவிடவேண்டும். நீர் பக்தர்களிடம் பிரீதியுள்ளவர்; உம்மை நான் சரணமடைகிறேன்" என்று கேட்டுக்கொண்டாள்.

30—34. அதனைக் கேட்ட பலராமன், யமுனையை விட்டுவிட்டு ஸ்திரீகளுடன் ஜலத்தில் பிரவேசித்தார். அது பெண் யானைகளுடன் யூதபதியான ஆண் யானை ஜலத்தில் இறங்கினாற்போலிருந்தது. பின்பு ஜலக்கிரீடை செய்து கரையில் வந்தார். அப்பொழுது லக்ஷ்மீதேவி கருமை நிறமுள்ள வஸ்திரங்களையும், விலையுயர்ந்த ஆபரணங்களையும், எப்பொழுதும் வாடாத மாலையையும் கொடுத்தாள். பலராமன் அவைகளைப் பெற்றுக் கொண்டு, கருத்த நிறமுள்ள வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டும், சந்தனம் முதலியவைகளைப் பூசிக்கொண்டும் அலங்கிருதராக ஐராவதம்போலப் பிரகாசித்தார். இப்பொழுதுகூட யமுனையில் கலப்பையால் இழுக்கப்பட்டதன் அடையாள மிருக்கிறது. அதனால் பலராமனுடைய பராக்கிரமத்தின் ஞாபகமுண்டாகிறது. இப்படி கோபிகைகளுடைய அன்பு பொருந்திய விளையாட்டுக்களில் நோக்கத்துடன் பலராமன் கிரீடித்து, அந்த எல்லா ராத்திரிகளையும் ஒரு ராத்திரிபோலக் கழித்துவந்தார்.

# அத்தியாயம் 66

## பகவான் பௌண்ட்ரகனைக் கொன்றது

பலராமன் கோகுலத்தில் வசிக்கும்பொழுது கரூச தேசத்து அரசனாகிய பௌண்ட்ரக னென்பவன் தன்னையே வாசுதேவனென்று நினைத்துக்கொண்டான். மேலும், மூடர்கள் அவனை "நீர்தான் வாசுதேவனாக அவதரித்திருக்கிறீர்; நீர் பகவதம்சம்" என்று ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அதனால் அவன் தன்னை வாசுதேவன் என்று நினைத்து, அகங்காரத்தை யடைந்தான். இப்படி மூடர்களால் அரசனாகச் செய்யப்பட்ட அந்தப் பௌண்ட்ரகன் அறியமுடியாத மார்க்கமுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஒரு தூதனை அனுப்பினான். அந்தத் தூதன் துவாரகைக்கு வந்து சபையிலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "பிராணிகளைக் காப்பாற்றுவதற்காகப் பூமியில் அவதரிக்கும் வாசுதேவன் நானொருவன்தான்; வேறொருவருமில்லை. நீ பொய்யான பெயரை விட்டுவிடு. என்னுடைய அடையாளங்களை நீ பயமில்லாமல் வைத்துக் கொண்டிருக்கிறாய். அவைகளை நீ விட்டு என்னைச் சரணமடையவேண்டும். இல்லாவிடில் என்னுடன் யுத்தஞ் செய்யவேண்டும்" என்று பௌண்ட்ரகன் சொன்னதாகச் சொன்னான்.

7—9. அற்ப புத்தியுள்ளவனாகிய பௌண்ட்ரகனுடைய பிதற்றலைக் கேட்டு உக்கிரசேனர் முதலிய சபையிலிருந்தவர்கள் மிகவும் சிரித்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் தூதனை நோக்கி, "ஓ மூட! எந்த அடையாளங்களை வைத்துக்கொண்டு பிதற்றுகிறாயோ, அவைகளை விட்டுவிடும்படி செய்கிறேன். மேலும் நீ, எப்பொ

மூது வாயை மூடிக்கொண்டு கழுகு முதலிய பறவைகளால் சூழப்பட்டுப் பூமியில்படுத்துத்தூங்குவாயோ (மரணத்தை அடைவாய்), அப்பொழுது நாய்களுக்குச் சரணமாவாய் என்று சொல்'' என்றார்.

10—24. அதனைக் கேட்ட தூதன், பௌண்ட்ரகனிடம் வந்து கிருஷ்ணனுடைய வார்த்தையைத் தெரிவித்தான். ஸ்ரீ கிருஷ்ணனும் ரதத்தின்மீதேறிக் காசி தேசஞ் சென்றார். (காசிராஜன் பௌண்ட்ரகனுக்கு மித்திரனானதால் அவ்விடத்தில் அவனுமிருந்தானென்று கருத்து.) ஸ்ரீ கிருஷ்ணனுடைய முயற்சியைக் கண்ட பௌண்ட்ரகன் இரண்டு அக்ஷௌஹிணி சைன்னியங்களுடன் வெளியில் வந்தான். அவனுடைய மித்திரனாகிய காசிராஜனும் அவனுடைய பின்புறத்தைக் காப்பாற்றிக்கொண்டு, மூன்று அக்ஷௌஹிணி சைன்னியங்களுடன் அவன்பின் சென்றான். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் பௌண்ட்ரகனைக் கண்டார். அவன் சங்கம், சக்கரம், கத்தி, கதாயுதம், சார்ங்கம், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், வனமாலை, பீதாம்பரம், கருடத்வஜம், விலையற்ற ரத்தினாபரணங்கள், மகரகுண்டலங்கள் ஆகிய இவைகளைத் தரித்திருந்தான். இப்படி நடன் கிருத்திரவமான வேடந்தரித்தாற்போலக் கிருத்திரவ வேடம் பூண்டவனாகிய பௌண்டரகனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் மிகவும் சிரித்தார். அப்பொழுது சூலம், கதாயுதம், பரிகம், பிராஸம், சக்தி, யஷ்டி, தோமரம், கத்தி, பட்டஸம், பாணம் ஆகிய இவைகளால் சத்துருக்கள் ஸ்ரீ கிருஷ்ணனை அடித்தார்கள். அப்பொழுது பிரளய காலத்தில் அக்கினி பிரஜைகளை எரித்தாற்போல் ஸ்ரீ கிருஷ்ணன் கதாயுதம், கத்தி, சக்கரம், பாணம் இவைகளால் ரதம், யானை, குதிரை, காலாட்பட்ை இவைகளுள்ள சத்துரு சைன்னியத்தை அடித்தார்.

குதிரைகளும் யானைகளும், ரதங்களும், கோவேறு கழுதை களும், ஒட்டகங்களும் சக்கரத்தால் வெட்டப்பட்டு விழுந் தன. தைரியசாலிகள் அந்த யுத்தகளத்தைப் பார்த்துச் சந்தோஷிக்கக்கூடியதாக இருந்தது. மேலும் அந்த யுத்த களமானது பிரளயகாலத்திய ருத்திரன் விளையாடும் ஸ்த லம்போலிருந்தது. அப்பொழுது பகவான் பௌண்ட் ரகனை நோக்கி, "ஓ பௌண்ட்ரக! தூதமுகமாக எதனைச் சொல்லியனுப்பினையோ, அந்த அஸ்திரங்களைப் பிரயோ கிக்கிறேன். என்னுடைய அடையாளங்களை நீ தரித்திருக் கிறதனால் அவைகளை விட்டுவிடும்படி செய்கிறேன். யுத்தஞ் செய்ய எனக்கு விருப்பமில்லாவிட்டால் உன்னைச் சரண மடைகிறேன்!" என்று சொல்லிக் கூர்மையான பாணங்க ளைப் பிரயோகித்துப் பௌண்ட்ரகனுடைய ரதத்தை உடைத்து, மகேந்திரன் வஜ்ரத்தால் மலையின் சிகரத்தை யுடைத்தாற்போலச் சக்கராயுதத்தால் பௌண்ட்ரகனு டைய தலையை வெட்டினார். பின்பு காசிராஜனுடைய தலையைப் பாணங்களால் வெட்டிப் பூமியில் தள்ளினார். அது தாமரை மொட்டுப்போலப் பூமியில் விழுந்தது. இப்படிப் பகவான் பௌண்ட்ரகனையும், காசி ராஜனையும் கொன்று, துவாரகைக்குச் சென்றார். சித்தர்கள் அவ ருடைய கதைகளைக் கானஞ் செய்தார்கள். மேலும், பௌண்ட்ரகன் எப்பொழுதும் கிருஷ்ணனைப்போல் வேடந்தரித்துப் பகவானையே தியானஞ் செய்துகொண் டிருந்ததனால் சகல பந்தங்களும் ஒழிந்து, பகவத் சொரூபியாக ஆனான்.

25—30. காசிராஜனுடைய தலையானது வெட்டப் பட்டு அரசனுடைய அரண்மனை வாசலில் விழுந்தது. அதனைக் கண்ட ஜனங்கள், 'இது யாருடைய முகம்' என்று சந்தேகித்தார்கள். பின்பு அரசனுடைய தலையென்று

அறிந்து, அந்தப்புர ஸ்திரீகளும், புத்திரர்களும், பந்துக் களும், பட்டணத்து ஜனங்களும், "ஓ ராஜன்! நாதா! உம்மை விட்டுப் பிரிந்த நாங்கள் அடிக்கப்பட்டோம்" என்று அழுதார்கள். அந்தக் காசிராஜனுடைய புத்திர னாகிய சுதக்ஷிணனென்பவன் பிதாவுக்கு உத்தரக்கிரியை களைச் செய்து முடித்து, 'என் பிதாவைக் கொன்றவனைக் கொன்று பிதாவை ஆராதிக்கிறேன்" என்று நிச்சயித்துக் கொண்டு, தன்னுடைய உபாத்தியாயருடைய அனுமதி யின்மீது பரமசிவனை மிக்க சாவதானனாகப் பூஜித்தான். அதனால் பகவான் சந்தோஷித்து, சுதக்ஷிணனை நோக்கி, "இஷ்டமான வரத்தைக் கேள்; கொடுக்கிறேன்" என்று சொன்னார். அதனைக் கேட்ட சுதக்ஷிணன், "என்னு டைய பிதாவைக் கொன்றவரைக் கொல்லும் உபாயத் தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான். அதனைக் கேட்ட பரமசிவன், "ஓ சுதக்ஷிண! ரித்விக்குகள் போன்ற அக்கினியை அபிசார விதியால் பூஜி. அந்த அக்கினியைப் பிராம்மண பக்தியில்லாதவனிடத்தில் பிர யோகித்தால் அக்கினி பிரமதகணங்களுடன் காரியத்தை முடிப்பார்" என்று சொன்னார்.

31—36. அதனைக் கேட்டு சுதக்ஷிணன் ஸ்ரீ கிருஷ் ணனைக் கொல்ல விரும்பி, அந்த விருதத்தை யனுஷ்டித் தான். பின்பு குண்டத்திலிருந்து மிகப் பயங்கர சுரூ பத்துடன் அக்கினி பகவான் கிளம்பினார். காய்ச்சப்பட்ட தாமிரம்போலச் சிவந்த தலைமயிர், மீசை இவைக ளுள்ளவராக இருந்தார். மேலும், அவருடைய கண்கள் நெருப்புத்தணல்போலிருந்தன. சிங்கப்பற்களும், புருவ மும், முகமும் பயங்கரமாக இருந்தன. மேலும் அந்தப் புருஷன் வஸ்திரமில்லாமலும், மூன்று முனை யுள்ள சூலத்தைச் சுழற்றிக்கொண்டும், கடைவாய்களை

நாக்கினால் நக்கிக்கொண்டும் இருந்தார். அவருடைய கால்கள் பனைமரம்போலிருந்தன. இப்படிப் பயங்கர சொரூபத்துடன் பூமியை அசைப்பது போல் துவாரகையை நோக்கி அந்தப் புருஷன் சென்றான். அதனைக் கண்ட துவாரகாவாசிகளான ஜனங்கள் காட்டுத்தீயைக் கண்ட மிருகங்கள்போல் பயந்து, சபையில் சொக்கட்டான் விளையாடுகின்ற ஸ்ரீ கிருஷ்ணனிடஞ் சென்று, "ஓ மூவுலகங்களுக்கும் அதிபதியாக இருப்பவரே! இந்த அக்கினி பட்டணத்தை எரிக்கிறது; காப்பாற்றும்" என்றார்கள்.

37—42. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன், தம்முடைய பந்துக்கள் பயப்படுவதைப் பார்த்து, "பயப்படவேண்டாம்; உங்களை நான் சம்ரட்சிக்கிறேன்" என்று சொன்னார். மேலுமவர் சகல ஜனங்களுடைய இருதயத்திற்கும் சாக்ஷியாக இருப்பதால், "இது பரமசிவனுடைய சம்பந்தமான கணம்" என்று தெரிந்துகொண்டு, அதனை ஜயிப்பதற்காகத் தம்முடைய பக்கத்திலிருக்கும் சக்கரத்தை அனுப்பினார். அந்தச் சக்கரமானது கோடி சூரியன் உதித்தாற்போலப் பிரகாசித்தது; மேலும் பிரளயகால அக்கினிபோல ஜ்வலித்தது; தன்னுடைய தேஜஸ்ஸால் திக்குகளையும், ஆகாயத்தையும், பூமியையும் பிரகாசிக்கச் செய்தது; அப்படிப்பட்ட முகுந்தருடைய அஸ்திரமாகிய சக்கரமானது அந்த அக்கினியை அணைத்தது. இப்படிச் சக்கராயுதத்தால் ஜயிக்கப்பட்ட அந்த அக்கினியானது திரும்பிக் காசி தேசஞ் சென்று சுதக்ஷிணனையும், அவனுடைய ரித்விக்குகளையும் தகித்தது. பின்பு ஸ்ரீகிருஷ்ணனுடைய சக்கரம் காசிக்குச் சென்று, கோபுரம், பிராகாரம், சபை, வீடுகள், பசுக்கள் கட்டும் சாலை,

ஷீரை லாயம், யானை கட்டும் ஸ்தலம், பொக்கிஷம், அன்னசாலை முதலியவைகளைத் தகித்து நாசஞ்செய்து ஸ்ரீகிருஷ்ணனுடைய பக்கஞ் சென்றது.

43. எந்த மனிதன் உத்தம சுலோகராகிய பகவானுடைய இந்தச் சரிதத்தைப் பிறருக்குச் சொல்லுகிறானோ, எவன் பக்தியுடன் பிறர் சொல்லக் கேட்கிறானோ, அவனுக்குச் சகல பாபங்களும் நிவர்த்தியடை

## அத்தியாயம்—67

### பலராமன் துவிவிதனைக் கொன்றது

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "அற்புதமான சரிதங்களைச் செய்பவரான பலராமன் இன்னும் எதனைச் செய்தார்? அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

2—11. அதனைக் கேட்டு சுகர் அரசனை நோக்கிப் பின்வருமாறு சொல்லத் தொடங்கினர். எப்படியெனில், "நரகாசுரனுக்கு துவிவிதனென்ற ஒரு வானரன் தோழனாக இருந்தான். அவன் சுக்ரீவனுடைய மந்திரி; மைந்தனென்பவனுடைய சகோதரன். அவன் தன்னுடைய தோழனாகிய நரகனைக் கிருஷ்ணன் கொன்றதால் கிருஷ்ணனுடைய தேசமாகிய ஆனர்த்த தேசத்திலுள்ள பட்டணங்களிலும் கிராமங்களிலும் இடைச்சேரிகளிலும் அக்னியை வைத்துத் தகித்தான். பின்னுமவன் மலைகளைப் பிடுங்கி தேசத்தில் போட்டு, அதனால் ஜனங்கள் முதலியவர்களைப் பொடிசெய்தான். இப்படி ஆனர்த்த தேசத்தை மிகவும்

உபத்திரவித்தான். இன்னும் பத்தாயிரம் யானைப் பல முள்ளவனான அந்தத் துவிவிதன் சில சமயம் சமுத்திரத் தின் நடுவில் நின்று, கைகளால் ஜலத்தை வாரியிறைத் துக் கரைக்குச் சமீபத்திலிருக்கும் தேசங்களை முழுகச் செய்தான். மேலும், மகரிஷிகளுடைய ஆச்சிரமங்களில் இருக்கும் மரங்களை முறித்தான். விஷ்டை, மூத்திரம் இவைகளால் யாகத்தின் அக்னிகளை அணைத்தான். பின் னும் அவன் குளவியானது புழுவைக் கூட்டிற்குள் வைத்து மூடுவதுபோலப் புருஷர்களையும் ஸ்திரீகளையும் மலையின் குகையில் வைத்துக் கற்பாறைகளால் மூடினான். குலஸ்திரீகளின் கற்பை அழித்தான். இப்படி ஆனர்த்த தேசத்திற்குக் கெடுதி செய்துவந்தான். ஒருகால் அவன் ரைவதக மென்ற மலையில் காதிற்கு இனிமையான சப்தத் தைக் கேட்டு, அவ்விடஞ் சென்றான். அவ்விடத்தில் தாமரை மாலையுள்ளவரும், அழகிய சரீரமுள்ளவரும், மத் யத்தைக் குடித்து மதித்தவரும், சிவந்த கண்களுள்ள வரும், ஸ்திரீகளின் கூட்டத்தின் நடுவிலிருந்து கானஞ் செய்பவரும், மதித்த சிறந்த யானை போன்றவருமான பலராமனைக் கண்டான். பின்னும் துஷ்டனாகிய அந்த வானரன், மரத்தின் கிளைகளிலிருந்து மரங்களை அசைத் துக்கொண்டு, கர்வத்தால் தன்னைக் காண்பித்துக்கொண்டு "கில கில' என்று சப்தித்தான்.

12--23. அதனைக் கேட்ட பலதேவருடைய ஸ்திரீ கள் சுபாவத்தால் சபலர்களானதாலும், சிரிப்பில் பிரிய முள்ளவர்களானதாலும் சிரித்தார்கள். அப்பொழுது அந்த வானரன் எதிரில் நிற்பது, புருவத்தை அசைப்பது ஆகிய இவைகளைச் செய்து, பலராமனை லட்சியஞ்செய்யா மல் தன்னுடைய பின்பக்கத்தை அவர்களுக்குக் காண்பித் தான். அதனைக் கண்ணுற்ற பலசாலியான பலராமன்

மிக்க கோபங்கொண்டு அந்த வானரனைக் கல்லால் அடித்தார். அந்தக் கல் தன்மேல் படாமல் ஒதுக்கங்கொடுத்து, அந்த வானரன் மத்யக் குடத்தை யெடுத்துக்கொண்டு அவரைப் பரிகசித்தான். அதனால் பலராமன் கோபங்கொண்டார். பின்னும் துஷ்டனாகிய அந்தத் துவிவிதன் மத்யக் குடத்தை உடைத்தது மல்லாமல் ஸ்திரீகளுடைய வஸ்திரங்களைக் கிழித்துப் பலவாறாகப் பலராமனை லட்சிஞ் செய்யாமல் அபசாரஞ் செய்தான். அப்பொழுது அவனுடைய கெட்ட நடையையும், அவனால் தேசம் உபத்திரவிக்கப்பட்டிருப்பதையும் பார்த்துச் சத்துருவைக் கொல்வதற்காக மிக்க கோபங்கொண்டு முசலத்தையும், கலப்பையையும் எடுத்துக்கொண்டார். அதனைக் கண்ட துவிவிதனும் ஸாலமென்ற மரத்தைப் பிடுங்கி, வேகமாகப் பலராமனுடைய தலையில் அடித்தான். பலராமன் மலைபோலத் தலையில் விழுகின்ற மரத்தைப் பிடித்துக்கொண்டு முஸலத்தால் அவனை அடித்தார். இப்படி முஸலத்தால் அடிக்கப்பட்டு அவனுடைய தலையுடைந்து ரத்தம் பெருகியது. அதனால் நச்சங்குப் பொடிகளுள்ள மலைபோல அவன் பிரகாசித்தான். துவிவிதன் அந்த அடியை லட்சியஞ்செய்யாமல் வேறு மரத்தைப் பிடுங்கி, இலைகளையுதிர்த்து அதனால் பலராமனை அடித்தான். அதனைப் பலராமன் நூறு துண்டுகளாக வெட்டினார். இப்படி இவ்விருவர்களும் யுத்தஞ்செய்யும்பொழுது துவிவிதனால் மரங்கள் பிடுங்கப்பட்டதனால் அந்த வனத்தில் மரங்களற்றுப் போயின. பின்பு துவிவிதன் காட்டில் மரமில்லாததால் கற்களை எடுத்து வர்ஷித்தான். அதனையும் பலராமன் முஸலாயுதத்தால் பொடியாக்கினார். பின்பு துவிவிதன் பனைமரம்போன்ற கைகளை முஷ்டி செய்துகொண்டு அதனால் பலராமனுடைய மார்பில் குத்தினான். பலராம

னும் முஸலத்தையும், கலப்பையையும் வைத்துவிட்டு அவ னுடைய கழுத்தை இறுகக் கட்டினார். அதனால் துவிவிதன் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு மரணமடைந்து விழுந்தான். அதனால் அந்த வனமும், அவ்விடத்திலிருக்கும் மரங் களும், ஜலாதாரங்களும் நடுங்கின. அந்த மலையானது பெருங்காற்றில் அகப்பட்ட ஓடம்போல அசைந்தது. ஆகாயத்தில் ஸித்தர்களும், தேவர்களும், மகரிஷிகளும், புஷ்பங்களை வர்ஷித்து, "ஜய ஜய" என்றும், 'நல்லது, நல்லது' என்றும், 'நமஸ்காரம்' என்றும் சொன்னார்கள். லோகத்திற்கு உபத்திரவத்தைச் செய்துகொண்டிருந்த துவிவிதனைப் பலராமன் கொன்று, ஜனங்களால் துதிக்கப் பெற்றுத் தமது நகரஞ் சென்றார்.

இரண்டாம் பாகம் முற்றிற்று.

The T. V. C. Press, Madras for PIC. TE. 4.—2000-C.

# ஸ்ரீமத் பாகவதம்

## தசமஸ்கந்தம்

### மூன்றாம் பாகம்

---

### அத்தியாயம் 68

### கௌரவர்கள் ஸாம்பனைக் கட்டியது

1—12. ஓ பரீக்ஷித்து மகாராஜனே! ஜாம்பவதியின் புத்திரனாகிய ஸாம்பன் என்பவன் துரியோதனனுடைய புத்திரியான லக்ஷ்மணை யென்பவளை ஸ்வயம்வரத்தில் அபகரித்தான். அதனைக் கண்ணுற்ற கௌரவர்கள் மிக்க கோபங்கொண்டு, "இந்தச் சிறுவன் தன்னிடத்தில் ஆசைப்படாமலிருக்கும் இந்தப் பெண்ணை நம்மையெல்லாரையும் லட்சியஞ் செய்யாமல் பலாத்காரமாக அபகரித்தான். இம்மாதிரி கெட்ட நடையுள்ள இவனைக் கட்டிவிடுங்கள். விருஷ்ணிகளால் என்ன செய்யமுடியும்? அந்த விருஷ்ணிகள் நம்மால் தயவாக விடப்பட்ட பூமியை அநுபவித்துக்கொண்டிருப்பவர்கள்; ஒருகால் ஸாம்பன் கட்டுப்பட்டதைக் கேள்விப்பட்டு விருஷ்ணிகள் யுத்தத்திற்கு வந்தால் பிராணாயாமம் முதலியவைகளால் அடக்கப்பட்ட இந்திரியங்கள்போல சாந்தியை அடைவார்கள்" என்று கர்ணன், சலன், பூரி, யக்ஞகேது, துரியோதனன், பீஷ்மர் ஆகிய இவர்கள் யோசித்து ஸாம்பனைப் பின்தொடர்ந்தார்கள். அதனைக் கண்ட ஸாம்பன் ஒருவனானாலும் சிங்கம்போல் பயமற்று அழகான வில்லையெடுத்துக் கொண்டு நின்றான். கர்ணன் முதலிய அந்த கௌரவர்கள் மிக்க கோபத்துடன் அவனைப் பிடிக்க விரும்பி, 'நில்; நில்'

என்று அதட்டி, பாணங்களை வருஷித்தார்கள். இப்படி கௌரவர்களால் அடிக்கப்பட்ட ஸாம்பன் அற்ப மிருகங்களால் ஏற்படும் அவமானத்தைச் சிங்கம்போல் சகிக்கவில்லை. அவன் எண்ணமுடியாத மகிமையுள்ள பகவானுடைய புத்திரனல்லவா? பின்னுமவன் தன்னுடைய வில்லில் நாண் கயிற்றைக் கட்டி வளைத்து நாணொலியைச் செய்து, கர்ணன் முதலிய ஆறு ரதிகர்களையும் பல பாணங்களால் ஒரே சமயத்தில் அடித்தான். எப்படியென்றால், நான்கு பாணங்களால் அவர்களுடைய ரதத்தில் கட்டிய குதிரைகளையும், ஒவ்வொரு பாணத்தால் சாரதிகளையும் சிறந்த வில்லுள்ள அந்த ரதிகர்களையும் அடித்தான். அதனைக் கண்டு அவர்கள் சிலாகித்தார்கள். பின்னும் அவர்களில் நால்வர் ஸாம்பனுடைய நான்கு குதிரைகளையும், ஒருவன் சாரதியையும் அடித்தார்கள். மற்றொருவன் வில்லை வெட்டினான். இப்படி கௌரவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு அவனை ரதமில்லாத பதாதியாகச் செய்து, அவனைக் கட்டி லக்ஷ்மணையுடன் தங்களுடைய பட்டணத்திற்குக் கொண்டுபோனார்கள்.

13—22. அப்பொழுது நாரதர் துவாரகைக்குச் சென்று விருஷ்ணிகளுக்கு ஸாம்பனுடைய விஷயத்தைத் தெரிவித்தார். அதனைக்கேட்ட விருஷ்ணிகள் உக்கிரஸேனரால் தூண்டப்பட்டுக் கௌரவர்களுடன் யுத்தஞ்செய்ய முயற்சித்தார்கள். அதனைக் கண்ணுற்ற விருஷ்ணிகளுக்குச் சிறந்தவரான பலராமன் விருஷ்ணிகளுக்கும், கௌரவர்களுக்கும் சண்டை நேரிடக்கூடாதென்று நினைத்து விருஷ்ணிகளைச் சமாதானஞ்செய்து சூரியன் போன்ற தேஜஸ் உள்ள ரதத்திலேறிக்கொண்டு ஹஸ்தினாபுரஞ் சென்றார். பிராம்மணர்களும், விருஷ்ணிகளில் பெரியோர்களும் அவரைச் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். அது, சந்திரன் கிரகங்களால் சூழப்பட்டாற் போலிருந்தது. அப்படிப்

பட்ட பலராமன் ஹஸ்தினபுரத்தின் வெளியிலிருக்கும் தோட்டத்திலிருந்துகொண்டு திருதராஷ்டிரருடைய மனத்தைத் தெரிந்துகொள்வதற்காக உத்தவரை அனுப்பினார். அந்த உத்தவர் பட்டணத்திற்குள் பிரவேசித்துத் திருதராஷ்டிரர், பீஷ்மர், துரோணர், பாஹ்லிகர், துரியோதனன் ஆகிய இவர்களிடஞ் சென்று, பெரியோர்களை நமஸ்கரித்து பலராமன் வந்திருக்கிறா ரென்பதைத் தெரிவித்தார். அவர்கள் பலராமன் வந்திருப்பதைக் கேட்டு மிக்க பிரியமுள்ளவர்களாகி, உத்தவருக்கு மரியாதை செய்து, மங்களத் திரவியங்களை எடுத்துக்கொண்டு பட்டணத்திலிருந்து பலராமன் இருக்குமிடம் வந்து, விதிப்படி அர்க்கியங் கொடுத்துப் பூஜித்தார்கள். மேலும் அவர்களில், அவருடைய மகிமையை யறிந்தவர்கள் பலராமனை நமஸ்கரித்தார்கள். பின்னும் ஒருவருக்கொருவர் சந்தித்து க்ஷேமம் விசாரித்தார்கள். அப்பொழுது பலராமன் கௌரவர்களை நோக்கி, "மகாராஜனுகிய உக்கிரசேனர் உங்களுக்கு ஆஞ்ஞாபனஞ் செய்கிறார். அதனைச் சமாதானமாகக் கேட்டுத் தாமதியாமல் செய்யுங்கள். என்னவென்றால், நீங்கள் எல்லாரும் ஒன்றுகூடி ஸாம்பனொருவனை ஜயித்து அதர்ம மார்க்கமாகக் கட்டினீர்களல்லவா? அது சரியல்ல. பந்துக்கள் விரோதமில்லாமல் அன்புள்ளவர்களாக இருக்கவேண்டும் என்று சொல்லும்படி சொன்னார்" என்றார்.

23—29. இப்படி வீர்யம், சௌர்யம், பலம், தன்னுடைய சக்தி ஆகிய இவைகளுக்குச் சமமாகப் பலராமன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட கௌரவர்கள் மிக்க கோபங்கொண்டு, "இது மிகவும் ஆச்சரியம். கிரீடம் வகிக்கக் கூடிய தலையில் பாதரட்சை ஏற விரும்புகிறது. குந்தியைக் கல்யாணஞ் செய்த விஷயத்தில் விருஷ்ணிகளுக்கும் நமக்கும் சம்பந்தம் ஆனதால் இவர்களுக்கு அரசனுடைய ஆசனத்தைக் கொடுத்து, நமக்குச் சமமாகச் செய்துகொண்

டோம். சர்மம், சங்கம், வெண்குடை, கிரீடம், ஆசனம், படுக்கை ஆகிய இவைகளை நம்முடைய அநுமதியால் இவர்கள் அநுபவிக்கிறார்கள். நம்முடைய தயையால் கொடுக்கப் பட்டதைப் புசிக்கும் யாதவர்கள் வெட்கமில்லாமல் நம்மை ஆஞ்ஞாபிக்கிறார்கள். நமக்கு விரோதஞ் செய்பவர்களான யாதவர்களிடமிருந்து அரசர்களுக்கு அடையாளமான குடை முதலியவைகளைப் பிடுங்கவேண்டும். பீஷ்மர், துரோணர், அர்ச்சுனன், கௌரவர்கள் முதலியோரால் சம்மதித்துக் கொடுக்கப்படாதவைகளை மஹேந்திரனாலும் எப்படி எடுத்துக்கொள்ள முடியும்? சிங்கத்திற்குச் சுவாதீனமான வஸ்துவை ஆட்டினால் அபகரிக்கமுடியுமா? (இனி உக்கிரசேனன் அரசனாக இருக்கத் தகாதவன்.) என்று குலத்தாலும், பந்துக்களாலும், சம்பத்தாலும் மதங்கொண்டவர்களும் அசத்துக்களுமான கௌரவர்கள் சொல்லிப் பட்டணத்துக்குள் பிரவேசித்தார்கள்.

30—40. பலராமன் கௌரவர்களுடைய துஷ்ட நடையைப் பார்த்தும், நிந்தா வார்த்தைகளைக் கேட்டும், மிக்க கோபத்தால் பயங்கரமான முகமுள்ளவராகி, "பலவகையான மதமுள்ள அசத்துக்கள் சாந்தியை அடையமாட்டார்கள். பசுக்களைத் தடியால் அடித்து அடக்குவதுபோல் அசத்துக்களைச் சிட்சித்து நிக்கிரகிக்கவேண்டும். என்ன ஆச்சரியம்! ஸ்ரீ கிருஷ்ணனும் யாதவர்களும் கோபங்கொண்டு யுத்தத்திற்கு முயற்சித்தார்கள். அவர்களை நான் சமாதானஞ்செய்து இவ்விடம் வந்தேன். மூடர்களும், சண்டையில் பிரியமுள்ளவர்களும், துஷ்டர்களுமான கௌரவர்கள் என்னை லட்சியஞ்செய்யாமல் கெட்ட வார்த்தைகளைச் சொன்னார்கள். போஜர்களுக்கும், விருஷ்ணிகளுக்கும், அந்தகர்களுக்கும் அதிபதியாகிய உக்கிரசேனருடைய உத்தரவை இந்திரன் முதலிய லோகபாலர்களும் சிரசால் வகிக்கிறார்

கள். ஸுதர்மா என்ற தேவ சபையும், தேவ விருட்சமான பாரிஜாதமும் பூமிக்குக் கொண்டுவரப்பட்டு அவரால் அநுபவிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட உக்கிரசேனர் அரசனாக இருக்கத் தகுதியில்லாதவரென்று இவர்கள் சொல்லுகிறார்கள். மேலும், எல்லாவற்றிற்கும் அதிபதியான லக்ஷ்மீதேவி எவருடைய பாதங்களைச் சேவிக்கிறாளோ, அந்த லக்ஷ்மீபதியாகிய ஸ்ரீகிருஷ்ணனுக்கு அரசனுக்குரிய சாமக்கிரிகள் (குடை, சாமரம் முதலியவை) தகுதியல்ல என்கிறார்கள். எவருடைய பாத தூளியைக் கங்கையைவிடப் பரிசுத்தமானதென்று பிரும்மா, பரமசிவன், லக்ஷ்மீதேவி ஆகிய நாங்கள் சிரஸால் தரிக்கிறோமோ, நாங்கள் எவருடைய அம்சமோ, அப்படிப்பட்ட பகவானுக்கு அரசர்களுக்குரிய சிங்காதனம் உரியதல்லவென்கிறார்கள். கௌரவர்களால் கொடுக்கப்பட்ட சொற்ப பூமியை விருஷ்ணிகள் அநுபவிக்கிறார்களாம். நாம் பாதரட்சைகளாம்; கௌரவர்கள் தலைகளாம். ஐசுவரிய மதங்கொண்டு அகங்காரிகளாகி மதுபானஞ் செய்தவன் போல அசம்பந்தமாகப் (கோணலாக) பேசுகிற அசத்துக்களுடைய வார்த்தையைச் சிட்சிப்பவனான எவன் சகிப்பான்? ஆனதால் இப்பொழுது பூமியில் கௌரவர்களில்லாமல் நாசஞ்செய்துவிடுகிறேன்" என்று மூவுலகங்களையும் எரிப்பவர்போலக் கலப்பையை எடுத்துக்கொண்டு எழுந்திருந்தார்.

**41—47.** மேலுமவர் ஹஸ்தினபுரத்தைக் கலப்பையால் குத்திப் பிளந்து கங்கையில் தள்ளுவதற்காகத் தூக்கினார். இப்படிக் கலப்பையால் குத்திப் புரட்டப்பட்ட நகரமானது ஜலத்தில் கப்பல்போல அசைந்தது. அதனைக் கண்ட கௌரவர்கள் பயந்து உயிர் பிழைக்க விரும்பி, குடும்பத்துடன் பலராமனையே சரணமடைந்தார்கள். மேலுமவர்கள் லக்ஷ்மணையுடன் ஸாம்பனை முன்னிட்டு அஞ்சலிபந்தஞ்செய்து

"ஓ ராம! ராம! எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பவரே! உம்முடைய மகிமையை அறியோம். மூடர்களும் கெட்ட புத்தியுள்ளவர்களுமான எங்களுடைய குற்றத்தை மன்னிக்கவேண்டும்; இந்த ஜகத்தைப் படைப்பதற்கும், சம்ரட்சிப்பதற்கும் நீர் காரணராக இருப்பவர்; உமக்கு வேறு காரணமில்லை. பிரும்மா முதலியவர்கள் உமக்கு இந்த ஜகத்தை விளையாட்டுச் சாமான்களென்று சொல்லுகிறார்கள். ஓ அனந்த! ஆயிரந்தலையுள்ளவரே! இந்தப் பூமண்டலத்தை நீர் தலையால் சுமக்கிறீர். பிரளயகாலத்தில் சகல ஜகத்தையும் தமக்குள் அடக்கிக்கொண்டு தாமொருவராக இருக்கிறீர். ஓ பலராம! உமக்குத் துஷ்டர்களைச் சிட்சிப்பதற்காகக் கோபமேயொழிய மாத்ஸரியத்தாலேற்பட்டதல்ல. நீர் பூமியைப் பரிபாலிப்பதில் நோக்கமுள்ளவர்; ஓ சகல பிராணிகளின் சுரூபியாக இருப்பவரே! சகல சக்திகளையும் தரிப்பவரே! அழிவற்றவரே! ஜகத்தின் க்ஷேம கர்மங்களைச் செய்பவரே! உம்மை நமஸ்கரிக்கிறோம். நாங்களெல்லோரும் உம்மைச் சரணமடைகிறோம்" என்றார்கள்.

48—53. இப்படிச் சரணமடைந்தவர்களும், பயந்து நடுங்கியவர்களுமான கௌரவர்களுடைய வார்த்தையைக் கேட்ட பலராமன் 'பயப்படவேண்டாம்' என்று அவர்களுக்கு அபயங்கொடுத்தார். அப்பொழுது துரியோதனன் அறுபது வயதுள்ள பன்னிரண்டு ஆயிரம் யானைகளையும், லட்சம் குதிரைகளையும், ஆறு ஆயிரம் ரதங்களையும், ஆயிரம் வேலைக்காரிகளையும் கன்னிகாதானமாகக் கொடுத்தான். பலராமன் அவையெல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு புத்திரனுடனும், நாட்டுப்பெண்ணுடனும் பந்துக்களால் சிலாகிக்கப்பெற்று துவாரகைக்குச் சென்றார். பின்பு பலராமன் ஹஸ்தினபுரஞ் சென்று பந்துக்களைக் கண்டு யாதவர்களு

டைய சபையில் கௌரவர்களுடைய விஷயத்தைத் தெரிவித்தார். இப்பொழுதும் அந்த ஹஸ்தினா நகரம் தென்பக்கத்தில் உயர்ந்து, பலராமனுடைய பராக்கிரமத்தைக் காண்பித்துக்கொண்டிருக்கிறது.

## அத்தியாயம் 69

### நாரதர் கிருஷ்ணனுடைய கிரகஸ்த தர்மத்தைப் பார்த்து ஆச்சரிய மடைந்தது

1—16. ஒரு சமயம் நாரத மகரிஷி நரகாசுரன் அடிபட்டதையும், அநேக ராஜகுமாரிகளைக் கிருஷ்ணன் ஒருவர் விவாகஞ்செய்துகொண்டதையும் கேள்விப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்க்க விரும்பி துவாரகைக்குச் சென்றார். ஒரே புருஷன் ஒரே காலத்தில் பதினாறு ஆயிரம் கிரகத்திலிருந்து அவ்வளவு ஸ்திரீகளைக் கலியாணஞ் செய்துகொள்வது மிகுந்த ஆச்சரியமானதால் அதனைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் தேவரிஷியாகிய நாரதருக்கு உண்டாயிற்று. அந்த துவாரகா நகரத்தில் அநேக உத்தியானங்களும், அதிலுள்ள மரங்கள் புஷ்பித்தும், அந்தப் புஷ்பங்களின் மதுவைப் பானஞ்செய்து வண்டுகள் சப்தித்துக்கொண்டிருந்தன. மேலும் ஓடைகளில் நீலோத்பலங்களும், தாமரைகளும், குமுதங்களும் புஷ்பித்திருந்தன. ஹம்ஸங்களும் சாரச பட்சிகளும் சப்தித்துக்கொண்டிருந்தன. பின்னும் அந்த நகரத்தில் ஸ்படிகங்களாலும், வெள்ளிகளாலும், மரகத ரத்தினங்களாலும் செய்யப்பட்டவைகளும், சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான ஒன்பது லசட்ம் மாடிகளும் இருக்கின்றன. வீதிகளும் கடைத்தெருவுகளும் நாச்சந்தி மண்டபங்களும் சபைகளும் இருக்கின்றன. பின்னும் வீதி

கள் ஜலத்தெளிக்கப்பட்டு சுத்தஞ்செய்யப்பட்டும், வீட்டு வாயிற்படிகள் குப்பையில்லாமல் பெருக்கப்பட்டும், வீதி களில் துவஜங்களும், பதாகைகளும் கட்டப்பட்டு வெயிலை மறைத்துக்கொண்டும் இருக்கின்றன. அந்த நகரத்தில் மிக்க அழகுபொருந்திய ஸ்ரீகிருஷ்ணனுடைய அந்தப்புரம் ஒன்று இருக்கிறது. அதனைச் சகல லோகபாலர்களும் பூஜிக்கிறார் கள். விசுவகர்மாவின் சாமர்த்தியம் முழுவதும் அதில் காட்டப்பட்டிருக்கிறது. மேலுமதில் கிருஷ்ணனுடைய பதினாறாயிரம் ஸ்திரீகளுக்கும் தனித்தனியே அரண்மனைகள் இருக்கின்றன. அதில் நாரதர் ஒரு கிரகத்தில் பிரவேசித் தார். அந்த அரண்மனை பவழத் தூண்களாலும், இந்திர நீலச் சுவர்களாலும், இந்திர நீலமயமான பூமிகளாலும், வைடூரியப் பலகைகளாலும், கொடுங்கைகளாலும், முத்து மாலைகளாலும், தந்தங்களால் செய்யப்பட்டு ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான கட்டில் முதலியவைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மேலும், அந்தக் கிரகங்களில் ரத்தினஹாரங்களாலும், நல்ல வஸ்திரங்களாலும் அலங் கரிக்கப்பட்ட வேலைக்காரிகளும், சட்டை, தலைப்பாகை, ரத் தின குண்டலங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்ட வேலைக் காரர்களும் வசிக்கிறார்கள். ரத்தின தீபங்களின் ஒளியால் இருளில்லாமல் பிரகாசமாக இருக்கிறது. கொடுங்கைகளில் வசிக்கும் மயில்கள் ஜன்னல் வழியாக வெளியில்வரும் அகரு தூபத்தின் புகையை மேகமென்று நினைத்துக் கூத்தாடுகின் றன. அப்படிப்பட்ட அந்தக் கிரகத்தில் அதற்குடைய வளான ராஜகுமாரி (ருக்மிணி) தங்கப் பிடியுள்ள சாமரத்தைக் கையிலெடுத்துக் கிருஷ்ணனை விசிறி உபாசித்துக்கொண் டிருந்தாள். அவளுக்குச் சமமான ரூபம், குணம், வயது, அலங்காரம் இவைகளுள்ள அநேக வேலைக்காரிகள் அவளைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது நாரதரைக் கண்ட

ஸ்ரீ கிருஷ்ணன் கட்டிலிலிருந்து சீக்கிரமாக இறங்கி, நாரதருடைய பாதத்தில் தம்முடைய கிரீடம் படும்படி நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு தம்முடைய ஆசனத்தில் உட்கார்த்திவைத்தார். மேலுமவர் நாரதருடைய பாதங்களை அலம்பி, அந்தத் தீர்த்தத்தைத் தம் தலையில் புரோக்ஷித்துக் கொண்டார். அவர் ஜகத்திற்கு மேலானவராலும், சாதுக்களுக்கு அதிபதியானாலும், பிராமணர்களையே தெய்வமாகக் கொண்டவரானதால் இப்படிச் செய்தது உசிதம். அவருடைய பாதாரவிந்தத்திலிருந்து பெருகிய கங்காதீர்த்தமானது எல்லாவற்றையும் பரிசுத்தப்படுத்துகிறது. இப்படி தேவரிஷிகளுக்குட் சிறந்தவராகிய நாரதரை நரநாராயணர்களாக அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணன் விதிப்படி பூஜித்து, அமிருதப்பெருக்குள்ள பிரியமான வார்த்தைகளைச் சொல்லி, "உமக்கு என்னால் செய்யக்கூடியதென்ன ?" என்று கேட்டார்.

17—18. அதனைக் கேட்ட நாரதர், "ஓ பிரபுவே! சகல ஜகத்திற்கும் அதிபதியே! எல்லா ஜனங்களிடத்தும் நீர் பிரீதி செய்வதும், துஷ்டர்களைச் சிட்சிப்பதும் ஆச்சரியமல்ல. நீர் ஜகத்தைத் தரிப்பதற்காகவும், ரட்சிப்பதற்காகவும், அதற்கு மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகவும் தமது இஷ்டப்படி அவதரிக்கிறீர் என்பதை நான் அறிவேன். (எல்லாஜனங்களிடத்திலும் பிரீதிசெய்வது உமக்கு இயற்கையானதால் என்னைப் பூஜித்தீரேயொழிய என்னிடத்திலுள்ள கௌரவத்தால் பூஜிக்கவில்லை என்று கருத்து.) உம்முடைய பாதாரவிந்தத்தைத் தரிசித்தேன். அது சகல ஜனங்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது; மிகுந்த ஞானமுள்ள பிரும்மா முதலியவர்களாலும் ஹிருதயத்தில் தியா

னிக்கக்கூடியது; ஸம்ஸாரமாகிய கிணற்றில் விழுந்தவனை வெளியில் தூக்கிவிடக்கூடியது; உம்முடைய ஸ்மரணமானது எப்பொழுதும் எனக்கு இருக்கும்படி அனுக்கிரகிக்க வேண்டும்" என்று சொன்னார்.

19—22. பின்பு நாரதர் அந்தக் கிரகத்திலிருந்து வெளியில் வந்து யோகேசுவரராகிய கிருஷ்ணனுடைய யோகமாயையின் மகிமையைப் பார்க்க விரும்பி இன்னொரு கிரகத்தில் பிரவேசித்தார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் பத்னியுடனும் உத்தவருடனும் சொக்கட்டான் விளையாடிக் கொண்டிருந்தார். பின்னுமவர் மிகுந்த பக்தியுடன் நாரதரைக் கண்டு எழுந்திருந்து விதிப்படிப் பூஜித்து, ஒன்றையும் அறியாதவர்போல "எப்பொழுது வந்தீர்? எல்லாவற்றிலும் பூர்ணரான உமக்கு அபூர்ணர்களான எங்களால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. ஆனாலும் நான் செய்ய வேண்டியதைச் சொல்லும். என்னுடைய ஜன்மத்தை ஸபலமாக்கிவிடும்" என்று சொன்னார். அதனைக் கேட்ட நாரதர் மிகவும் ஆச்சரியப்பட்டு, பதில் சொல்லாமல் எழுந்திருந்து மௌனமாக மற்றொரு கிரகஞ்சென்றார்.

23—39. அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் குழந்தைகளை எடுத்துவைத்துக் கொஞ்சிக்கொண்டிருக்கக் கண்டார். அதனைப்பார்த்து நாரதர் மற்றொரு வீட்டிற்குள் சென்றார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்நானஞ்செய்ய யத்தனித்துக்கொண்டிருந்தார். அவ்விடமிருந்து மற்றொரு கிரகஞ் சென்று நாரதர் அவ்விடத்தில் அக்னிஹோத்திரஞ் செய்துகொண்டிருக்கும் ஸ்ரீகிருஷ்ணனைத் தரிசித்தார். இப்படி நாரதர் ஒவ்வொரு கிரகத்திற்கும் சென்றார். ஸ்ரீகிருஷ்ணன் ஒரு வீட்டில் பஞ்சயக்ஞங்களை அநுஷ்டித்துக்கொண்டும், மற்றொருவிடத்தில் பிராமணர்களுக்குப் போஜனஞ் செய்வித்துக்கொண்டும், இன்னுமொரு வீட்டில் அதிதிகளுக்கு உபயோ

கித்து மிருதியான அன்னத்தைப் புசித்துக்கொண்டும், இன்னுமொருவிடத்தில் சந்தியோபாஸ்தி செய்துகொண்டும், மற்றொரு வீட்டில் மௌனமாக ஜபஞ் செய்துகொண்டும், இன்னுமொரு வீட்டில் கத்தி, கேடகம் இவைகளைத் தரித்து மார்க்கத்தில் ஸஞ்சரித்துக்கொண்டும், மற்றொரு வீட்டில் குதிரையின்மீதேறுகிறவரும், பின்னுமொரு வீட்டில் யானை, ரதம் இவைகளில் ஏறுகிறவரும், மற்றுமொரு வீட்டில் கட்டிலில் படுத்துக்கொண்டவரும், வந்திகளால் துதிக்கப்பெற்றவரும், உத்தவர் முதலிய மந்திரிகளுடன் ஆலோசிப்பவரும், மற்றொரு வீட்டில் தாசிகளுடன் ஜலக்ரீடைசெய்பவரும், இன்னுமொரு வீட்டில் பிராமணர்களுக்கு அலங்கரிக்கப்பட்ட பசுக்களைத் தானஞ்செய்துகொண்டும், இதிகாச புராணங்களைக் கேட்டுக்கொண்டும், மற்றொரு வீட்டில் தம் பத்னியுடன் பரிகாச வார்த்தை பேசி அவளைச் சிரிக்கச்செய்து கொண்டும், ஒரு கிரகத்தில் தர்மத்தை அநுஷ்டித்துக் கொண்டும், மற்றொரு வீட்டில் அர்த்தகாமங்களை யநுபவித்துக்கொண்டும், மற்றொரு வீட்டில் பிரகிருதியைவிட மேலான (ப்ரகிருதி சம்பந்தமில்லாத) பரம புருஷனைத் (தம்மை) தியானஞ்செய்துகொண்டும், இன்னுமொரு வீட்டில் ஆசாரியனுக்கு இஷ்டமான வஸ்துக்களைக் கொடுத்துப் பணிவிடை செய்துகொண்டும், ஒரு வீட்டில் சிலருடன் சண்டை செய்துகொண்டும், மற்றொரு கிரகத்தில் சமாதானஞ் செய்துகொண்டும், மற்றொரு வீட்டில் பலராமனுடன் சாதுக்களின் க்ஷேமத்தை யோசித்துக்கொண்டும், இன்னுமொரு கிரகத்தில் புத்திரர்களுக்கும், பெண்களுக்கும் உசிதமான காலத்தில் முறையே உபநயனம், விவாகம் இவைகளைச் செய்துகொண்டும், மற்றொருவிடத்தில் புத்திரனுக்குத் தகுதியான பெண்ணைத் தேடிக்கொண்டும், மற்றொரு வீட்

தில் கன்னிகாதானங் கொடுப்பவரும், பெண், மணப்பிள்ளை ஆகிய இவர்களை அனுப்பிக்கொண்டும், அவர்களை அவர்கள் வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டும், மற்றொரு வீட்டில் சகல ஜனங்களும் சந்தோஷிக்கும்படி குழந்தைகளுக்குக் கல்யாண மஹோற்சவத்தைச் செய்துகொண்டும், மற்றொரு வீட்டில் யாகங்களை யநுஷ்டித்துச் சகல தேவர்களைப் பூஜித்துக்கொண்டும், மற்றொரு வீட்டில் கிணறு, குளம் வெட்டுவிப்பது, தேவாலயம் கட்டுவிப்பது, தோட்டம் போடுவது முதலிய பூர்த்த தர்மத்தை அநுஷ்டித்துக் கொண்டும், மற்றொரு வீட்டில் சிந்து தேசத்திலுண்டான குதிரையின் மீதேறி வேட்டைக்குச் சென்றுகொண்டும், மற்றொரு வீட்டில் சுத்தமான பசுக்களைக்கொண்டு யாகஞ் செய்துகொண்டும், மற்றொரு வீட்டில் அவ்விடத்திலிருக்கும் ஜனங்களைப் பரீட்சிப்பதற்காக வேறு வேஷந் தரித்துச் சஞ் சரிப்பவருமாக இருந்தார். இப்படிப்பட்ட மனிதனுக அவ தரிக்கும் பகவானுடைய யோகமாயையின் மகிமையைப் பார்த்து நாரத மகரிஷி சிரித்து ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி, “ஓ யோகேசுவர! உம்முடைய யோகமாயை யோகிகளா லும் பார்க்கமுடியாதது; உம்முடைய பாதசேவையால் அது என்னுடைய மனத்தில் தோன்றியது. அதனால் அதனைத் தெரிந்துகொண்டேன். ஆனதால் ஓ கிருஷ்ண! விடை கொடுத்தனுப்பும். லோகங்களைப் பரிசுத்தப்படுத்துகின்ற உம்முடைய லீலைகளைக் கானஞ்செய்துகொண்டு, உம்முடைய கீர்த்தி பரவிய லோகங்களில் சஞ்சரிக்கிறேன்” என்றார். (உம்முடைய மனுஷ்யபாவனையால் நான் மோகிக்கிறேன். ஆனதால் என்னை அனுப்புமென்று கருத்து.)

40—43. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் நாரதனை நோக்கி, “ஓ பிராமண! நான் தர்மத்தைச் சொன்னவன்; அதனைச் செய்பவன்; அதனை அநுமோதிப்பவன்; ஆதலால்

ஜனங்கள் தர்மத்தைச் செய்யும்படி அநுஷ்டித்துக் காண்பித்துக்கொண்டிருக்கிறேன். ஓ புத்திர ! நீ இதைப் பார்த்து மோகிக்கவேண்டாம்" என்று சொன்னார். அதனைக் கேட்ட நாரதர் கிருகஸ்த தர்மங்களை எல்லா வீட்டிலும் அநுஷ்டித்துக்கொண்டிருக்கும் பகவானை ஒருவராக (பல சுரூபங்களில்லாமல்) தரிசித்தார். அளவற்ற மகிமையுள்ள ஸ்ரீகிருஷ்ணனுடைய யோகமாயையின் மகிமையைப் பார்த்து நாரதர் மிக்க சந்தோஷத்தை அடைந்து ஆச்சரியமடைந்தார். இப்படி அர்த்தம், காமம், தர்மம் ஆகிய இவைகளில் சிரத்தையுள்ளவரான ஸ்ரீகிருஷ்ணனால் நாரதர் பூஜிக்கப்பட்டு அந்த ஸ்ரீகிருஷ்ணனையே நினைத்துக்கொண்டு சென்றார்.

44—45. இப்படி ஸ்ரீமந் நாராயணன் சகல ஜனங்களுடைய க்ஷேமத்திற்காக அநேக அவதாரங்களைச் செய்து பதினாறு ஆயிரம் ஸ்திரீகளுடைய வெட்கம், அன்பு இவைகள் பொருந்திய பார்வை, சிரிப்பு இவைகளை அடைந்து ரமித்தார். மேலும் ஜகத்தைப் படைப்பதற்கும், காப்பாற்றுவதற்கும், ஸம்ஹரிப்பதற்கும் காரணராகிய ஸ்ரீ கிருஷ்ணன் எந்த அற்புதமான சரிதங்களைச் செய்தாரோ, அவைகளை எவன் கானஞ்செய்கிறானோ, கேட்கிறானோ, அதனை அநுமோதிக்கிறானோ, அவனுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பவரான பகவானிடத்தில் பக்தியுண்டாகும்.

## அத்தியாயம் 70

### ஸ்ரீகிருஷ்ணனுடைய நித்தியக் கடமைகள்

(நாரதர் ஒவ்வொரு கிருகங்களில் பகவானுடைய கிருஹஸ்த தர்மத்தைத் தரிசித்தாரல்லவா? அதனைக் கிரமமாகச் சொல்லுகிறார்.) விடியற்காலம் சமீபித்தபொழுது

கோழிகள் சப்தித்தன. அப்பொழுது ஒவ்வொரு வீடுகளி லும் ஸ்ரீகிருஷ்ணனால் ஸ்திரீகள் ஆலிங்கனஞ்செய்துகொள் ளப்பட்டிருந்தமையால் அவர்கள் கோழிகளை வைதார்கள். (கோழிகளுடைய சப்தத்தைக் கேட்டுப் பகவான் தங்களை விட்டு எழுந்திருந்துவிடுவாரென்று பயந்து, கோழிகளை வைதார்களென்று கருத்து.) மந்தார வனத்திலிருந்து வாச னையுள்ள காற்று வீசியது. அதனால் வண்டுகள் சப்தித்தன. பறவைகள் வந்திகள்போல் சப்தித்துக் கிருஷ்ணனை எழுப் பின. அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணனால் ஆலிங்கனஞ் செய்து கொள்ளப்பட்டு அவருடைய கைகளின் மத்தியை அடைந்த ருக்மிணி ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரியவேண்டுமே யென்ற காரணத்தால் அந்தப் பறவை சப்திப்பது முதலியவைகளைச் சகிக்கவில்லை. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் பிராம்ம முகூர்த்தத்தில் எழுந்திருந்து, கைகால்களை அலம்பி ஆச மனஞ்செய்து, தெளிந்திருக்கும் இந்திரியங்களுள்ளவராகி, பிரகிருதி சம்பந்தமற்றதும், அகண்டமும், உபாதி சம்பந்த மில்லாததும், நித்தியமானதும், தானாகப் பிரகாசிப்பதும், எப்பொழுதும் அவித்தையின் சம்பந்தமற்றதும், இந்த ஜகத்தைப் படைப்பது முதலியவைகளுக்குக் காரணமாகிய தனது சக்திகளால் தன்னுடைய இருப்பையும் ஆனந்தத்தை யும் காண்பிப்பதும், பிரும்மமென்று சொல்லப்படுவதுமான பரமாத்மாவைத் தியானஞ்செய்தார். (குணங்கள் ஒன்றோ டொன்று சேருவதற்குமுன் கேவல சத்தாமாத்திரனாக இருந்தாரென்று கருத்து.) பின்பு சுத்தமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்து வஸ்திரங்களையுடுத்திக்கொண்டு சந்தியோ பாசனம் முதலிய கர்மங்களை விதிப்படி செய்தார். பின்னும் சாதுக்களுக்குட் சிறந்தவரான ஸ்ரீ கிருஷ்ணன் அக்னி காரி யத்தைச் செய்து காயத்திரியை ஜபித்தார். பின்பு சூரியன் உதயமானார். அதன்பின் காயத்திரியின் உபஸ்தானத்தைச்

செய்து தம்முடைய அம்சமான தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதிருக்களுக்கும் தர்ப்பணஞ்செய்து பெரியோர்களான பிராமணர்களைப் பூஜித்து, பசுக்களைத் தானஞ்செய்தார். அவைகள் கலையீற்றுள்ளவைகள்; தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்புகளுள்ளவைகள்; நல்ல சுவபாவமுள்ளவைகள்; முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவைகள்; வஸ்திரத்தால் அலங்கரிக்கப்பெற்றவைகள்; வெள்ளியால் அலங்கரிக்கப்பட்ட குளம்புகளுள்ளவை. பிராமணர்களுக்கும் அலங்காரம் செய்து மேற்சொல்லியபடியுள்ள பசுக்களையும், எள்ளு, பட்டு இவைகளையும் கொடுத்தார். இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வீட்டிலும் செய்துவந்தார். பின்பு பசுக்கள், பிராமணர்கள், தேவதைகள், பெரியோர்கள், ஆசாரியர்கள், மற்ற சகல பூதங்கள் ஆகிய தம்மிடத்திலிருந்து உண்டானவைகளை நமஸ்கரித்து, மங்கள திரவியங்களை ஸ்பரிசித்தார் (தொட்டார்). அதன்பின் பூலோகத்திற்கே ஆபரணமாக இருக்கும் தம்முடைய சரீரத்தை மிகவும் திவ்யமான வஸ்திரம், ஆபரணம், சந்தனம், புஷ்பம் ஆகிய இவைகளால் அலங்கரித்துக்கொண்டார். பின்பு நெய்யில் தம்முடைய பிரதிபிம்பத்தைப் பார்த்தார். அதன் பின் கண்ணாடி, பசு, விருஷபம், பிராமணன், தேவதை ஆகிய இவைகளைத் தரிசித்தார். பிறகு அந்தப்புரத்தில் வசிக்கும் ஜனங்களுக்கும், பட்டணத்து ஜனங்களுக்கும் இஷ்டமான வஸ்துக்களைக் கொடுத்துச் சந்தோஷப்படுத்தித் தாமும் ஆனந்தத்தை அடைந்தார். சந்தனம், புஷ்பம், தாம்பூலம் முதலியவைகளைப் பிராமணர்களுக்கு முன்னதாகக் கொடுத்து, பின்பு மித்திரர்களுக்கும், அதன்பின் ஜனங்களுக்கும்; அதன்பின் தம்முடைய பத்தினிகளுக்கும் கொடுத்து, எஞ்சியவைகளைத் தாம் உபயோகித்துக்கொண்டார். அதற்குள் சுக்ரீவம் முதலிய குதிரைகளைப் பூட்டி அற்புதமான

ரதத்தைத் தாருகன், வாசலில் நிறுத்தி, கிருஷ்ணனை நமஸ்கரித்து நின்றான். அதனைக் கண்ட பகவான் ஸாத்யகி, உத்தவர் இவர்களுடன் சாரதியின் கையைப் பிடித்துக்கொண்டு ரதத்தின்மீது ஏறினார். அது சூரியன் உதய பர்வதத்தை அடைந்தாற்போலிருந்தது. அந்தப்புர ஸ்திரீகள் வெட்கத்துடனும் அன்புடனும் கிருஷ்ணனைக் கடாக்ஷித்து, சிரமப்பட்டு விடை கொடுத்தார்கள். இப்படி பகவான் அநேக ஸ்திரீகளுடைய வீட்டிலிருந்து அநேக கிருஷ்ணனாக வெளியில் வந்து ஒரு கிருஷ்ணனாகிச் சபைக்குச் சென்றார். இப்படி ஸ்ரீ கிருஷ்ணன் எல்லா விருஷ்ணிகளாலும் சூழப்பட்டுச் சுதர்மா என்ற சபைக்குச் சென்றார். அந்தச் சபையிலிருப்பவர்களுக்குப் பசி, தாகம் முதலிய ஆறுவகை விகாரங்களில்லை. அந்தச் சபையில் உத்தமமான ஆசனத்தில் கிருஷ்ணன் உட்கார்ந்து, தம்முடைய காந்தியால் திக்குகளைப் பிரகாசிக்கச்செய்தார். மற்ற யாதவர்கள் அவரைச் சுற்றிக் கொண்டிருந்தார்கள். அது ஆகாயத்தில் நட்சத்திரங்களுடைய மத்தியில் சந்திரன் பிரகாசிப்பதுபோலிருந்தது. அப்பொழுது சிரிக்கும்படி பேசக்கூடியவர்கள் (விகடகவிகள்) பலவகையான ஹாஸ்யங்களால் கிருஷ்ணனுக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணினார்கள். நர்த்தனஞ்செய்யும் புருஷர்களும் ஸ்திரீகளும் மிருதங்கம், வீணை, முரசு, புல்லாங்குழல், தாளம், சங்கம் இவைகளை முழக்கிக்கொண்டு நர்த்தனஞ் செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். சூதர்களும், மாகதர்களும், வந்திகளும் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். மேலும், அங்கிருந்த சில பிராமணர்கள் புண்யசுலோகர்களான முந்திய அரசர்களுடைய சரிதங்களைச் சொன்னார்கள். அப்பொழுது ஒரு புருஷன் ஸ்ரீகிருஷ்ணனைப் பார்ப்பதற்காக வந்தான். காவலாட்கள் பகவானிடத்தில் தெரிவித்து, சபையில் அவனை அழைத்துச் சென்றார்கள். அந்தப் புருஷன்

அஞ்சலிபந்தஞ்செய்து பரமேசுவரனாகிய கிருஷ்ணனுக்கு நமஸ்காரஞ்செய்து, “ஜராஸந்தன் திக்விஜயஞ்செய்யும் பொழுது எந்த அரசர்கள் அவனைக் கண்டு வணங்கவில் லையோ, அவர்களை பலாத்காரமாகக் கொண்டுவந்து காரா கிருகத்தில் அடைத்து வைத்திருக்கிறான். இப்படி கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கும் இரண்டு லட்சம் அரசர்கள் என் முக மாகத் தங்களிடம் தெரிவித்துக்கொள்ளுகிறார்கள். எப்படி யெனில், ‘ஓ கிருஷ்ணா! அளவற்ற மகிமையுள்ளவரே! சரணாகதர்களுடைய பயத்தை நிவர்த்திப்பவரே! பேதபுத்தி உள்ளவர்களான நாங்கள் சம்சாரத்திலிருந்து பயந்து உம்மைச் சரணமடைகிறோம். இந்த ஜனங்கள் காம்ய கர்மங் களையும், நிஷித்த கர்மங்களையும் செய்ய விரும்புகிறார்கள். தமக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியதும், உம்மால் சொல் லப்பட்டதுமான நல்ல கர்மத்தைச் செய்கிறதில்லை. அப்படிப் பட்ட ஜனங்களுக்குப் பிழைத்திருக்க வேண்டுமென்கிற ஆசையை ஒரு க்ஷணத்தில் எந்த ரூபமானது போக்கடிக் கிறதோ, அந்தக் காலசுரூபியான உமக்கு நமஸ்காரம். ஓ ஈச! நீர் சாதுக்களை ரட்சிப்பதற்கும் துஷ்டர்களைச் சிட்சிப் பதற்கும் பூமியில் அவதரித்திருக்கிறீர். அப்படியிருக்க உம் முடைய உத்தரவை மீறி நடக்கிறவன் க்ஷேமத்தை அடை கிறானென்பதும், உம்முடைய பக்தர்கள் துக்கப்படுவதென் பதும் இரண்டும் யுக்தமில்லை. மேலும், உம்மை சேவித்து யோகிகளாலடையக் கூடிய இயற்கையான சுகத்தை நாங்கள டையாமல், உம்முடைய மாயையால் மோகித்து சொப்பனம் போன்ற விஷயசுகத்தில் ஆசைகொண்டு எப்பொழுதும் பய முள்ளதும், பிணத்துக்கு ஒப்பானதுமான இந்தச்சரீரத்தால் களத்திரம், புத்திரன் இவர்களைப் பற்றி யோசிப்பதாகிய சுமையைச் சுமக்கிறோம். சிங்கமானது ஆடுகளை ஜயித்தாற்

போல எங்களெல்லோரையும் ஜராஸந்தன் காராகிருகத்தில் அடைத்து வைத்திருக்கிறபடியால் சரணமடைந்தவர்களுடைய துக்கத்தை நிவர்த்திக்கும் பாதமுள்ளவராகிய நீர் ஜராஸந்தனென்ற கர்மபாசத்தை நாசஞ்செய்து எங்களைக் காப்பாற்றும். அந்த ஜராஸந்தன் லட்சம் யானை பலமுள்ளவனானதால் அவனை ஜயிக்க எங்களால் முடியவில்லை. ஓ சக்ராயுதத்தை உடையவரே! இவன் பதினேழு தரம் உம்மால் ஜயிக்கப்பட்டும் பதினெட்டாவது தடவை மனித வடிவங்கொண்டவரும், அளவற்ற பராக்கிரமமுள்ளவருமான உம்மை ஜயித்து மிக்க கர்வங்கொண்டு உம்மைச் சார்ந்தவர்களான எங்களை உபத்திரவிக்கிறான். இந்த விஷயத்தில் எதனைச் செய்யவேண்டுமோ அதனைச் செய்யும்' என்று சொல்லி ஜராஸந்தனால் அடைக்கப்பட்ட அரசர்கள் உம்மைப் பார்க்க விரும்பினவர்களாக உம்முடைய பாதத்தைச் சரணமடைகிறார்கள். தீனர்களான அவர்களுக்கு க்ஷேமத்தைச் செய்யும்" என்று சொன்னான்.

33—37. இப்படி அந்த தூதன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது சூரியன்போல் மிக்க தேஜஸ் உள்ளவரும், பொன்னிறமான ஜடைகளுள்ளவரும், தேவரிஷியுமாகிய நாரதர் அவ்விடம் வந்தார். அவரைக் கண்ட கிருஷ்ணன் சகல லோகபாலர்களுக்கும் அதிபதியானாலும் எழுந்திருந்து தலை வணங்கி நமஸ்கரித்தார். சபையிலிருப்பவர்களும் கிருஷ்ணனைச் சார்ந்தவர்களும் சந்தோஷமாக நாரதரை நமஸ்கரித்தார்கள். இப்படி நாரதரைப் பூஜித்து ஆஸனத்திலுட்கார்த்தி கிருஷ்ணன் பிரியமான வார்த்தைகளைச் சொல்லலானார். எப்படியென்றால், "மூவுலகங்களும் பயமில்லாமல் க்ஷேமமாக இருக்கின்றனவா? நீர் சகல லோகங்களிலும் சஞ்சரிப்பதனால் அந்தந்த லோக விருத்தாந்

தம் எங்களுக்குத் தெரியவருகிறது. அதுவே எங்களுக்குப் பெரிய லாபமாக இருக்கிறது. ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்ட லோகங்களில் உமக்குத் தெரியாததொன்றுமில்லை. ஆதலால் பாண்டவர்களுடைய சமாசாரத்தைப்பற்றி உம்மைக் கேட்கிறேன்" என்றார்.

38—45. அதனைக் கேட்ட நாரதர், "ஓ மிக்க மகிமையுள்ளவரே! சகல பிராணிகளிடத்திலும் தம்முடைய சக்திகளால் மறைக்கப்பட்டு கட்டையில் அக்னிபோல நீர் வசிக்கிறீர். மேலும் நீர் பிரும்மதேவருக்கும் மோகத்தையுண்டுபண்ணக்கூடிய மாயாவியாக இருக்கிறீர். அப்படிப்பட்ட உம்முடைய பலவித மாயையை நான் பார்த்தேன். (ஆனதால் நீர் அறியாதவர்போலப் பாண்டவர்களைப்பற்றிக் கேட்பது எனக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லை.) மேலும் நீர் உண்மையிலில்லாததான இந்த ஜகத்தை சத்தியம்போல உம்முடைய மாயையால் தோன்றச்செய்து அதனைப் படைத்தும், சம்கரித்தும், எல்லாவற்றையும்விட விலட்சணமான சுரூபமுள்ளவராகப் பிரகாசிக்கிறீர். அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம். உம்முடைய அபிப்பிராயத்தை யாரால் நன்றாகத் தெரிந்துகொள்ள முடியும்? பின்னும் நீர், அனர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய சரீரத்தையடைந்து சம்சாரியாக இருப்பவனும் அதிலிருந்து மோக்ஷத்தையடைய உபாயத்தையறியாதவனுமான ஜீவனுக்காக பூமியில் அவதாரங்களைச் செய்து உம்முடைய கீர்த்தியாகிய தீபத்தைப் பிரகாசிக்கச் செய்கிறீர். (அஞ்ஞானமாகிற இருட்டைப் போக்கடிப்பதற்காக) அப்படிப்பட்ட உம்மைச் சரணமடைகிறேன். ஆனாலும் மனுஷ்யபாவனையுள்ள உமக்கு அத்தையின் புத்திரனாகிய தர்மபுத்திரருடைய எண்ணத்தைத் தெரிவிக்கிறேன். பாண்டுவின் புத்திரராகிய தர்மபுத்திரர் ராஜசூயமென்ற

சிறந்த யாகத்தைச் செய்து உம்மைப் பூஜிக்கப்போகிறார். அதனை நீர் அனுமதிக்கவேண்டும். அந்தச் சிறந்த யாகத்தில் உம்மைப் பார்ப்பதற்காகத் தேவர்களும் கீர்த்தியுள்ள அரசர்களும் வரப்போகிறார்கள். வேதமூர்த்தியான உம்மைத் தியானித்தும், உம்முடைய சரிதங்களைக் கேட்டும், உம்முடைய குணங்களை உச்சரித்தும் சண்டாளன் முதலியவர்களும் பரிசுத்தியை அடைகிறார்கள். உம்மைத் தரிசித்தவர்களும், ஸ்பரிசித்தவர்களும் சுத்தியடைவதற்கு என்ன ஆக்ஷேபம்? சகல லோகங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவரே! உம்முடைய கீர்த்தியானது சகல லோகங்களுக்கும் அலங்காரமாக இருக்கிறது; பாதாளத்திலும், ஆகாயத்திலும், பூமியிலும் பிரசித்தமாகவிருக்கிறது. மேலும் உம்முடைய பாதத்திலிருந்து பெருகிய ஜலமானது ஆகாயத்தில் மந்தாகினியென்றும், பாதாளத்தில் போகவதியென்றும், பூமியில் கங்கையென்றும் பெயரடைந்து லோகங்களைப் பரிசுத்தப்படுத்துகிறது" என்று சொன்னார்.

46—48. அதனைக்கேட்ட அவ்விடத்திலிருந்த யாதவர்கள் கிருஷ்ணனுடைய அபிப்பிராயத்தை (தர்மபுத்திரருடைய யாகத்திற்குப் போகவேண்டுமென்பதை) ஒப்புக் கொள்ளாமலிருக்கும்பொழுது, ஸ்ரீ கிருஷ்ணன் அழகான வார்த்தைகளால் அவர்களை மயக்கிக்கொண்டு உத்தவரை நோக்கி "ஓ உத்தவ! நீர் நமக்கு மேலான கண்ணாகவும், மித்திரராகவும், மந்திராலோசனையின் உண்மையை அறிந்தவராகவுமிருக்கிறீர். ஆனதால் இப்பொழுது நாம் எதனை சிரத்தையுடன் செய்யவேண்டும் சொல்லும்" என்று கேட்டார். இப்படி எல்லாவற்றையும் அறிந்தவரான கிருஷ்ணன் அறியாதவர்போலக் கேட்க அவருடைய உத்தரவினால் உத்தவர் பதில் சொல்ல ஆரம்பித்தார்.

நோட்டு

ஆறுவகை விகாரங்கள்— பசி, தாகம், சோகம், மோஹம், கிழத்தனம், மரணம். வந்திகள்: அரசர்களை துதிப்பவர்கள். காம்மிய கர்மங்கள்: பலனை உத்தேசித்துச் செய்யும் கர்மங்கள். நிஷித்தம்: வேதத்தில் எவைகளைச் செய்யக்கூடாதென்று தடுக்கப் பட்டிருக்கின்றனவோ அவை.

## அத்தியாயம் 71

### கிருஷ்ணன் ராஜசூயத்திற்காக இந்திரப்பிரஸ்தம் சென்றது.

தேவரிஷியாகிய நாரதருடைய வார்த்தையைக் கேட்டும், சபையோர்களுடைய அபிப்பிராயத்தையும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அபிப்பிராயத்தையும் அறிந்தும் மிக்க புத்திசாலியான உத்தவர் கிருஷ்ணனை நோக்கி, “ ஓ தேவ! உமக்கு அத்தையின் புத்திரராகிய தர்மபுத்திரர் யாகஞ்செய்யப் போகிறதாயும், அதற்கு நீங்கள் ஒத்தாசை செய்யவேண்டுமென்றும் தேவரிஷியாகிய நாரதர் சொன்னாரல்லவா? அதனையுஞ்செய்ய வேண்டும். சரணமடைந்திருக்கும் அரசர்களையும் காப்பாற்ற வேண்டும். ஆனால் ராஜசூயஞ் செய்பவன் திக்குகளை ஜயிக்கவேண்டும். அப்பொழுது ஜராஸந்தனை வதஞ் செய்யும்படி நேரும். அதனால் ராஜசூயம், சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுவது என்ற இரண்டு காரியமும் சித்திக்கும். அதனால் நமக்கும் அநேக காரியங்கள் சித்திக்கும். ஓ கோவிந்த! அரசர்களைக் காராகிரகத்திலிருந்து விடுவிப்பதால் உமக்குக் கீர்த்தியுமுண்டாகும். ஜராஸந்தன் அநேகம் பிராணி பலமுள்ளவன்; அவனுக்குச் சமமான பலமுள்ளவன் பீமசேனன் ஒருவன்தான். ஆனாலும் ஜராஸந்தனுக்கு அநேக அக்ஷௌஹிணி சைன்னியம் [illegible]

னியங்களுடன் யுத்தத்திற்கு வந்தால் அவனை பீமஸேனனு லும் ஜயிக்கமுடியாது. ஆனால் அவந்த யுத்தத்தில் (இரண்டு பேர்களாக மாத்திரம் சண்டைசெய்வது) பீமஸேனன் அவனை ஜயிக்கவேண்டும். (பீமஸேனனால் அவனுக்கு மரணமென்று ஏற்பட்டிருக்கிறது என்று கருத்து.) அந்த ஜராஸந்தன் பிராமணர்களைத் தெய்வமாகக் கொண்டவன். ஆனதால் பிராமணன் அவனை யாசித்தால் ஒருபொழுதும் அதனைத் தள்ளமாட்டான். ஆனதால் பீமஸேனன் பிராமண வேஷங்கொண்டு அவனை யாசித்தால் துவந்துவயுத்தஞ்செய்ய ஒப்புக்கொள்வான். அப்பொழுது பீமன் உம்முடைய முன் பாக அவனுடன் யுத்தஞ்செய்தால் அவனைக் கொல்வான்; சந்தேகமில்லை. ரூபமில்லாத காலரூபியாகவிருக்கும் உம் முடைய சந்நிதானத்தால் ஹிரண்யகர்ப்பர் ஜகத்தைப் படைக்கிறார். உம்முடைய சந்நிதானத்தால் பரமசிவன் ஜகத்தை சம்ஹரிக்கிறார். (ஜகத்தை உண்டுபண்ணுவதற் கும் சம்ஹரிப்பதற்கும் முறையே பிரும்மா, பரமசிவன் நிமித் தமேயொழிய உம்முடைய சந்நிதானமே முக்கிய காரணம். அதுபோல் ஜராஸந்தன் வதத்தில் பீமஸேனன் நிமித்த காரணமேயொழிய உம்முடைய சன்னிதானமே முக்கிய காரணமாகிறது என்று கருத்து.) மேலும், கோபிகைகள் சங்கசூடனைக்கொன்று தங்களைக்காப்பாற்றியதை எப்படி கானஞ்செய்கிறார்களோ, மகரிஷிகளும் நாங்களும் உம்மால் செய்யப்பட்ட கஜேந்திரமோக்ஷத்தையும், ராவண வதத்தை யும், கம்ஸனைக்கொன்று வசுதேவர் தேவகி இவர்களைக் காப் பாற்றியதையும் எப்படி கானஞ்செய்கிறோமோ, அதேவிதம் ராஜபத்தினிகளும் குழந்தைகளை சமாதானஞ்செய்வது முக் கிய காலங்களில் 'ஓ! குழந்தைகளே! அழவேண்டாம். ஸ்ரீ கிருஷ்ணன் ஜராஸந்தனைக்கொன்று உங்களுடைய தந்தை யை ரக்ஷிப்பார்' என்று உம்முடைய சுத்தமான கீர்த்தி

யைக் காணஞ்செய்கிறார்கள். (ஆனதால் அவர்களிடம் தயை செய்து காப்பாற்றவேண்டுமென்று கருத்து) ஜராஸந்தனைக் கொன்றால் அநேக காரியங்கள் முடியும். (சிசுபாலன் முதலியவர்கள் கொல்லப்படுவார்கள் என்று தாத்பர்யம்) ஜராஸந்தன் முதலியவர்களுடைய பாபத்தின் பயனாலும், அவனால் நிர்ப்பந்திக்கப்பெற்ற அரசர்களுடைய புண்ணிய பரிபாகத்தாலும் ஜராஸந்தன் கொல்லப்படுவான்; சந்தேகம் இல்லை" என்று சொன்னார். (ஆனதால் இந்த யாகம் உமக்கு இஷ்டமானதேயாம். யாகத்திற்கு நீர் சென்றால் எல்லாக் காரியமும் சித்திக்குமென்று கருத்து.)

11—17. இப்படி ஸகல காரியங்களுக்கும் தகுதியாக உத்தவர் சொல்ல அதனைக்கேட்ட நாரதரும், பெரியோர்களான யாதவர்களும், கிருஷ்ணனும் ஒப்புக்கொண்டார்கள். அப்பொழுது தேவகியின் புத்திரராகிய ஸ்ரீகிருஷ்ணன் தர்மபுத்திரருடைய யாகத்திற்குப் போகவேண்டும் என்று தாருகன், ஜைத்ரன் முதலிய வேலைக்காரர்களுக்கும், பெரியோர்களுக்கும் சொன்னார். பின்னுமவர் தம்முடைய பத்தினிகளை அவர் அவர்களுடைய புத்திரர்களுடனும், சாமான்களுடனும் பயணப்படுத்தினார். பலராமனையும் உக்ரஸேனரையும் புறப்படும்படி சொல்லிவிட்டு, தாருகனால் கொண்டுவரப்பட்ட தம்முடைய ரதத்திலேறினார். மேலும் ரதங்கள், யானைகள், குதிரைகள், காலாட்படைகள் அடங்கிய சேனைகள் புறப்பட்டன. மிருதங்கம், பேரி, ஆனகம், சங்கம், கோமுகம் இவைகள் முழங்கப்பட்டன. அதனால் திக்குகளில் மிக்க சப்தம் பரவியது. பதிவிரதைகளான கிருஷ்ணனுடைய ஸ்திரீகள் உத்தமமான வஸ்திரம், ஆபரணம், சந்தனம், புஷ்பம் ஆகிய இவைகளால் அலங்கரித்துக்கொண்டு குதிரைகள், தந்தப்பல்லக்கு முதலிய வாகனங்களில் ஏறிக்கொண்டு

சென்றார்கள். சக்தி முதலிய ஆயுதங்களைத் தரித்த யாதவர்கள் அவர்களைச் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். வேலைக்காரிகளும், வேலைக்காரர்களுடைய மனைவிகளும், தாசிகளும் ஒட்டகம், எருது, எருமை, கோவேறுகழுதை, அச்வதரி (குதிரைக்குக் கழுதையினிடம் உண்டானது), வண்டிகள், பெண்யானை இவைகளின்மீது ஏறிக்கொண்டு சென்றார்கள். மேலுமவர்கள் விராமிச்சம் வேர் முதலியவைகளால் செய்யப்பட்ட கூடாரங்கள், கம்பளம், வஸ்திரம் முதலிய மற்ற சாமான்களையும் வண்டி முதலியவைகளில் ஏற்றிக்கொண்டு போனார்கள். மேலும் அந்த சைன்னியமானது பருத்த த்வஜ படம், குடை, சாமரம், மேலான ஆயுதங்கள், ஆபரணங்கள், கிரீடம், கவசம் ஆகிய இவைகளுள்ளதும் பயங்கரமான இரைச்சலுள்ளதுமாக இருந்தது; ஆனதால் திமிங்கிலம், அலை இவைகளால் கலங்கியதும், சூரியனுடைய கிரணங்களால் நிறைந்ததுமான சமுத்திரம்போலிருந்தது.

18—20. பின்பு நாரதமகரிஷி கிருஷ்ணனால் பூஜிக்கப்பட்டு அவரைத் தரிசித்ததால் மிக்க சுகத்தை அடைந்து அவரையே தியானஞ்செய்துகொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றார். பின்பு பகவான் அரசர்களுடைய தூதனை நோக்கி 'ஓ தூத! அரசர்களைப் பயப்படவேண்டாமென்று சொல்லு. ஜராஸந்தனை நாசஞ்செய்கிறேன்' என்று பிரியமான வார்த்தை சொல்லி அனுப்பினார். அதனைக்கேட்ட தூதன் அரசர்களிடஞ்சென்று நடந்த சமாசாரத்தைத் தெரிவித்தான். அந்த அரசர்களும் ஸ்ரீகிருஷ்ணனுடைய தரிசனத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

21—36. பின்பு பகவான் ஆனர்த்தம், ஸௌவீரம், குருக்ஷேத்திரம், மருவதகம் முதலிய மலைகள், நதிகள், பட்டணங்கள், கிராமங்கள், இடைச்சேரி முதலியவைகளைத்

தாண்டி திருஷத்வதீ, ஸரஸ்வதீ, பாஞ்சால தேசம், மத்ஸ்ய தேசம் ஆகிய இவைகளைத் தாண்டி இந்திரப்பிரஸ்தஞ் சென்றார். மனிதர்களால் தரிசிக்கமுடியாதவராகிய ஸ்ரீக்ருஷ்ணன் வருவதைக் கேள்விப்பட்ட தர்மபுத்திரர் உபாத்தியாயருடனும், மித்திரர்களுடனும் பட்டணத்திலிருந்து வெளியில் வந்தார். அப்பொழுது வாத்தியங்கள் முழக்கப்பட்டன. பாடகர்கள் பாடினார்கள். பிராமணர்கள் வேதத்தை கோஷித்தார்கள். இப்படி தர்மபுத்திரர் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்கொண்டழைத்தது இந்திரியங்கள் பிராணனையழைத்தாற்போலிருந்தது. தர்மபுத்திரர் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து மிக்க ஸ்நேகத்தால் உருகின ஹிருதயமுள்ளவராகி, க்ருஷ்ணனைக் கண்டு வெகுகாலமானதாகையால் அடிக்கடி தழுவினார். இப்படி லக்ஷ்மிதேவிக்கு வாசஸ்தலமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய சரீரத்தைத் தர்மபுத்திரர் ஆலிங்கனஞ் செய்துகொண்டதனால் பாபமற்றவராகி ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி, மயிர்க்கூச்சலை அடைந்து, இவ்வுலகத்தை மறந்து மேலான ஆனந்தத்தை அனுபவித்தார். அம்மானுடைய புத்திரரான (அம்மான்சேய்) ஸ்ரீக்ருஷ்ணனைப் பீமசேனர் ஆலிங்கனஞ்செய்து மிக்க ஆனந்தத்தை அடைந்தார். பின்னும் அருச்சுனரும், நகுல, சகதேவர்களும் சந்தோஷமாகப் பகவானைக் கட்டிக்கொண்டார்கள். அப்பொழுது பகவான் தர்மபுத்திரருக்கும், பீமசேனருக்கும் நமஸ்காரஞ் செய்தார். அருச்சுனர் ஆலிங்கனஞ்செய்துகொண்டார். நகுல சகதேவர்கள் பகவானை நமஸ்கரித்தார்கள். பின்பு ஸ்ரீக்ருஷ்ணன் பிராமணர்களையும், பெரியோர்களையும் நமஸ்கரித்து, எல்லாராலும் பூஜிக்கப்பட்டு குருக்களையும், ஸ்ருஞ்ஜயர்களையும், கேகயர்களையும் பூஜித்தார். குசலரும்,

மாகதர்களும், வந்திகளும் ஸ்தோத்திரஞ்செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். விகடகவிகள் விகடஞ்செய்தார்கள். மிருதங்கம், சங்கம், படகம், வீணை, புல்லாங்குழல் ஆகிய வாத்தியங்கள் கோஷிக்கப்பட்டன. பிராமணர்கள் தாமரைக்கண்ணராகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் துதித்தார்கள். நர்த்தனஞ்செய்பவர் நர்த்தனஞ்செய்தார்கள். இம்மாதிரி மித்திரர்களால் உபசரிக்கப்பெற்றுப் புண்ய சுலோகர்களுக்குட் சிறந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களால் துதிக்கப்பட்டு, பட்டணத்தில் பிரவேசித்தார். அந்த நகரத்தில் வீதிகள் யானைகளுடைய மதஜலத்தால் நனைக்கப்பட்டிருந்தன. பலவகையான துவஜங்களும் கட்டப்பட்டிருந்தன. பூர்ண கும்பங்கள் வைக்கப்பட்டிருந்தன. புருஷர்களும், ஸ்திரீகளும் புதிய பட்டுக்களாலும், ஆபரணம், புஷ்பம், சந்தனம் இவைகளாலும் அலங்கரித்துக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வீடுகளிலும் தீபங்களும், பலிகளும் வைக்கப்பட்டிருந்தன; ஜன்னல் வழியாக தூபத்தின் புகை வெளிவருவதால் வாசனையாகவும், அழகான பதாகைகளுள்ளனவாகவு மிருந்தன. ஒவ்வொரு வீடுகளிலும் தங்கக் கலசங்கள் வைக்கப்பட்டிருந்தன. கலசத்திற்குக் கீழ்ப்பட்ட பாகம் வெள்ளியால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அப்பொழுது மனிதர்களுடைய கண்களுக்கு மிக்க திருப்தியுண்டுபண்ணுகிற பகவான் வருவதைக் கேள்விப்பட்ட பட்டணத்திய மாதர்கள் பகவானைத் தரிசிக்கவேண்டுமென்ற மிக்க பிரியத்தால் வஸ்திரம், தலைமயிர் ஆகிய இவைகள் அவிழ்ந்தவர்களாகி வீட்டு வேலைகளை விட்டும், படுக்கையில் தங்கள் பர்த்தாவையும்விட்டு ராஜவீதியில் வந்தார்கள். ராஜவீதி யானை, குதிரை, ரதம், காலாட்படை இவைகளால் நெருக்கமாக இருந்ததனால் தங்கள் கிரகத்தின் மாடியின் மீதேறி ஸ்ரீ கிருஷ்ணனையும், அவருடைய பத்தினிகளையும் தரிசித்து மனத்தால் அவரைத் தழுவி, புஷ்பங்களை வரு

ஷித்து அன்பு பொருந்திய பார்வையால் நல்வரவு கேட்டார்கள். மேலும் ஸ்ரீகிருஷ்ணனுடைய பத்தினிகளைப் பார்த்துப் பட்டணத்து ஸ்திரீகள், "இந்தக் கிருஷ்ணனுடைய பத்தினிகள் என்ன புண்ணியஞ்செய்தார்களோ, இவர்கள் புருஷோத்தமராகிய பகவானுடைய புன்சிரிப்புள்ள முகத்தைத் தரிசித்தும், அவரால் கடாக்ஷிக்கப்பட்டும் நேத்திரானந்தத்தை அடைந்து, சந்திரனுடன் நக்ஷத்திரங்கள்போல வசிக்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டார்கள்.

37—40. ஒவ்வொரு தொழிலாளிகளிலும் முக்கியர்களாக இருப்பவர்களும், பட்டணத்து ஜனங்களும் வீதிகளில் ஒவ்வொரு இடத்திலும் கிருஷ்ணனைத் தரிசித்து மங்களத் திரவியங்களை வைத்துக்கொண்டு பகவானைப் பூஜித்து சுத்தர்களானார்கள். அந்தப்புர ஜனங்கள் கண்கள் மலர்ந்து மிக்க பிரியத்துடன் எதிரில் வந்து அழைத்தார்கள். இப்படி எல்லோராலும் பூஜிக்கப்பட்டு கிருஷ்ணன் ராஜகிரகம் சென்றார். குந்திதேவி, சகோதரனுடைய புத்திரராகிய கிருஷ்ணனைக் கண்டவுடன் ஆசனத்திலிருந்து எழுந்திருந்தாள். அவளுடைய நாட்டுப்பெண்ணும் எழுந்திருந்தாள். பின்னும் குந்தி மூவுலகங்களுக்கும் அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணனை மிக்க பிரியத்துடன் கட்டிக்கொண்டாள். தேவர்களுக்கும் தேவராகிய ஸ்ரீ கிருஷ்ணனை வீட்டிற்கு அழைத்து வந்த தருமபுத்திரர் மிக்க ஆனந்தத்தால் பரவசராகி, அவரைப் பூஜிப்பதற்காக இன்னது செய்யவேண்டியதென்பதை அறியாமலிருந்தார்.

41—44. அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் பிதாவின் சகோதரியான குந்தியையும், ஆசாரியபத்தினியையும் நமஸ்கரித்தார். திரௌபதியும், சகோதரியான சுபத்திரையும்

கிருஷ்ணனை நமஸ்கரித்தார்கள். பின்பு குந்தியால் தூண்டப்பட்டு திரௌபதி ருக்மிணியையும், சத்தியபாமையையும், பத்திரையையும், ஜாம்பவதியையும், காளிந்தியையும், மித்திர விந்தையையும், நக்னஜித்தின் புத்திரியான சதியையும், மற்றும் கிருஷ்ண பத்தினிகளையும் வஸ்திரங்களாலும், புஷ்பங்களாலும், ரத்தினங்களாலும், ஆபரணங்களாலும் பூஜித்தார்கள். இப்படிக் கிருஷ்ணன் பத்தினிகளுடனும், மந்திரிகளுடனும், சைன்னியத்துடனும் புதிது புதிதாகத் தரும புத்திரரால் உபசரிக்கப்பெற்றுச் சுகமாக வசித்தார்.

45—46. ஸ்ரீகிருஷ்ணன் இந்திரப்பிரஸ்தத்தில் சில மாத காலம் வசித்து, அருச்சுனனுடன் ரதத்திலேறி விளையாடிக்கொண்டு தருமபுத்திரருக்குப் பிரியத்தைச் செய்தார். அப்பொழுது காண்டவமென்ற வனத்தை அக்னிக்குக் கொடுத்து அக்னியைத் திருப்தி செய்தார். மயனென்ற அசுரனைச் சம்ரட்சித்தார். அந்த மயன் தருமபுத்திரருக்குத் திவ்வியமான சபையை நிருமித்தான்.

## அத்தியாயம் 72

### பீமசேனர் ஜராசந்தனைக் கொன்றது

ஒரு நாள் தருமபுத்திரர் தம்முடைய சகோதரர்களுடன் சிங்காதனத்தில் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது ரிஷிகளும், பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும், ஆசாரியர்களும், குலத்தில் பெரியோர்களும், ஞாதிகளும், சம்பந்திகளும், பந்துக்களும் உட்கார்ந்திருந்தார்கள். அந்தச் சமயத்தில் தருமபுத்திரர் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஓ கோவிந்த! பிரபுவே! ராஜசூயமென்ற [illegible] உன்னுடைய விபூதிகளைப்

வேண்டுமென்று விரும்புகிறேன். அதனை முடித்துவைக்க வேண்டும். ஓ ஈச! ஓ தாமரைமலரைத் தொப்புளிலுடையவரே! உம்முடைய பாதுகைகளை எவர்கள் சேவிக்கிறார்களோ, பாபத்தைப் போக்கக்கூடிய அந்தப் பாதங்களை எவர்கள் தியானஞ்செய்கிறார்களோ, எந்தப் புத்திமான்கள் அவைகளைப்பற்றிச் சொல்லுகிறார்களோ அவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து முக்தியை அடைவார்கள்; மற்றவர்களால் அடைய முடியாது. ஓ தேவர்களுக்கும் தேவரே! உம்முடைய பாதசேவையின் மகிமையை ஜனங்கள் பார்க்கட்டும். எவர்கள் பக்தியின் மகிமையை யறிந்து உம்மைச் சேவிக்கிறார்களோ, எவர்கள் கர்மத்தையே பிரதானமென்று நினைத்து உம்மைச் சேவிக்கவில்லையோ, இந்த இரண்டு இனத்தாராகிய குருக்களுக்கும் ஸ்ருஞ்ஜயர்களுக்கும் கிடைக்கும் பயனைக் காண்பியும். நீர் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருப்பவரும், சமபுத்தியுள்ளவரும், தம்முடைய சுகானுபவமுள்ளவரும், பரப்பிரும்மமுமாக இருப்பதால் உமக்குத் தம்மைச் சார்ந்தவர், பிறர் என்ற பேதபுத்தி யில்லை. கற்பக விருக்ஷம் போல் உம்மை ஆசிரயிப்பவர்களுக்கு அவர்களுடைய சேவைக்குத் தக்கபடி பயனைக் கொடுக்கிறீர். அதில் வித்தியாசமில்லை" என்று சொன்னார்.

7—11. அதனைக் கேட்ட பகவான் தருமபுத்திரரை நோக்கி, "ஓ ராஜன்! சத்துருக்களைக் கொல்பவரே! நல்ல நிச்சயமுள்ளவராக இருக்கிறீர். சுபமான கீர்த்தி லோகத்தில் பரவப்போகிறது. நீர் செய்யவேண்டுமென்று விரும்பிய இந்தச் சிறந்த யாகமானது மகரிஷிகள், பிதிருக்கள், தேவர்கள், மித்திரர்கள் ஆகிய இவர்களெல்லோருக்கும் இஷ்டமானதேயாம். சகல அரசர்களையும் ஜயித்துப் பூமியை வசப்படுத்திக்கொண்டு, அதற்கு வேண்டிய சாமக்கிரியைச் சம்பா

நித்து இந்த மகா யாகத்தைச் செய்யும்; உம்முடைய இந்தச் சகோதரர்கள் லோகபாலகர்களுடைய அம்சமுள்ளவர்கள். (அவர்களைக்கொண்டு அரசர்களை ஜயித்துவிடலாமென்று கருத்து.) இந்திரியங்களுக்கு வசப்பட்டவர்களால் ஜயிக்க முடியாத என்னை இந்திரியங்களை நிக்கிரகித்தவரான நீர் ஜயித்துவிட்டீர். என்னிடத்தில் பக்திசெய்து, என்னையே கதியாகக்கொண்டவர்களைத் தேஜஸாலும், கீர்த்தியாலும், ஐசுவரியத்தாலும், சைன்னியம் முதலியவைகளாலும், தேவர்களாலும் ஜயிக்கமுடியாது. அப்படியிருக்க, அரசர்களால் உம்மை எப்படி ஜயிக்கமுடியும்?" என்றார்.

12-21. அதனைக் கேட்ட தருமபுத்திரர் முகம் மலர்ந்து மிக்க பிரியத்துடன் விஷ்ணுவின் தேஜசு உள்ளவர்களான சகோதரர்களைத் திக்குகளை ஜயிக்கும்படி அனுப்பினார். எப்படியெனில், தெற்குத்திக்கில் ஸிருஞ்சயர்களையும் சகதேவனையும், மேற்கில் நகுலனை மத்ஸ்யர்களுடனும், வடக்கில் அருச்சுனனைக் கேகயர்களுடனும், கிழக்கில் பீமசேனனை மத்ர தேசத்தரசர்களுடனும் அனுப்பினார். அவர்கள் அவ்விடம் சென்று சூரர்களான அரசர்களை ஜயித்து, ஏராளமான தனத்தைத் தருமபுத்திரரிடம் சமர்ப்பித்தார்கள். ஜராசந்தன் ஒருவன் மாத்திரம் ஜயிக்கப்படவில்லை. அதனைப் பற்றி அரசன் ஆலோசித்துக்கொண்டிருக்க, ஸ்ரீ கிருஷ்ணன் அவனை ஜயிக்கும் விஷயத்தில் உத்தவர் சொன்ன உபாயத்தைச் சொன்னார். பின்பு பீமசேனர், அருச்சுனன், ஸ்ரீ கிருஷ்ணன் ஆகிய மூவர்களும், பிராம்மண வேஷங்கொண்டு ஜராசந்தன் வசிக்கும் கிரிவிரஜம் சென்றார்கள். அதிதிகளுக்குப் பூஜை செய்யக்கூடிய சமயத்தில் கிரகஸ்தனாகிய ஜராசந்தனிடஞ் சென்று, பிராம்மண வேஷம் பூண்ட அந்த அரசர்கள், "ஓ அரசனே! நாங்கள் வெகு தூரத்திலிருந்து

உம்மிடத்தில் யாசகர்களாக வந்திருக்கிறோம். ஆனதால் நாங்கள் எதனை விரும்புகிறோமோ, அதனைக் கொடும். உமக்கு க்ஷேமமுண்டாகும். பொறுமையுள்ளவர்கள் எதைத்தான் சகிக்கமாட்டார்கள்? துஷ்டர்கள் எதைத்தான் செய்யமாட்டார்கள்? கொடையாளிகள் எதைத்தான் கொடுக்கமாட்டார்கள்? சத்துரு, மித்திரன் என்ற பேதமில்லாமல் சமமாக நினைப்பவர்கள் யாரைப் பிறர் என்று நினைப்பார்கள்? [ஆனதால் இதைக் கொடுக்கவேண்டுமென்று குறிப்பிட்டுச் சொல்லவேண்டியதில்லை என்று கருத்து.] எவன் அநித்தியமான சரீரத்தைக்கொண்டு நித்தியமான கீர்த்தி சம்பாதிப்பதில் நோக்கமில்லாமலிருக்கிறானோ, அவனைப் பற்றித் துக்கிக்கவேண்டும். அரிச்சந்திரன், ரந்திதேவன், முத்கலன், சிபி, பலி, வேடன், கபோதம் (புறா) முதலிய அநேகர்கள் நிலையில்லாத சரீரத்தைக் கொடுத்து நிலையான கீர்த்தியை அடைந்தார்கள்" என்று சொன்னார்.

22—27. அதனைக் கேட்ட ஜராசந்தன் அவர்களுடைய பேச்சுக் குரல், ஆகிருதி, நாண்கயிற்றால் அடிக்கப்பட்ட மணிக்கட்டு ஆகிய இவைகளால் க்ஷத்திரியர்கள் என்று தெரிந்துகொண்டு, "இவர்களை முந்தி பார்த்திருக்கிறோம்; இவர்கள் க்ஷத்திரியர்கள். பிராம்மண வேஷம் தரித்திருக்கிறார்கள். ஆனாலும் இவர்கள் என்னுடைய ஆத்மாவைக் கேட்டாலும் அதனைக் கொடுத்துவிடுவேன். முன்னொருகால் மகாவிஷ்ணு இந்திரனுக்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்பி, பிராம்மணவேஷங்கொண்டு பலிச்சக்ரவர்த்தியை யாசித்தார். அவன் அதன் உண்மையை அறிந்திருந்தும், சுக்ராசாரியரால் தடுக்கப்பட்டும் அவருடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்தான். அதனால் அவனுக்கு சகல திக்குகளிலும் சுத்தமான கீர்த்தியுண்டாயிற்று. க்ஷத்திரியன் பிராம்மணர்களுக்கு

உபகாரஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யாமல் நிலையில் லாத சரீரத்திற்காகக் கீர்த்தியைச் சம்பாதிக்காமல் ஜீவித்திருப்பதால் என்ன பிரயோஜனம்?" என்று யோசித்துக் கம்பீர புத்தியுள்ளவனான ஜராசந்தன் அவர்களை நோக்கி, "இஷ்டத்தைக் கேளுங்கள்; என்னுடைய தலையானாலும் கொடுக்கிறேன்" என்றான்.

28—33. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் ஜராசந்தனை நோக்கி, "ஓ மகாராஜரே! யுத்தஞ்செய்யவேண்டுமென்ற விருப்பத்துடன் வந்திருக்கிறோம். நாங்கள் க்ஷத்திரியர்கள்; எங்களுக்கு யுத்தத்தைவிட வேறொன்றும் வேண்டியதில்லை. இவர் பீமசேனர். இவர் அருச்சுனர். நான் இவர்களுக்கு அம்மான்சேய் ஆகிய கிருஷ்ணன்; உமக்குச் சத்ரு" என்று சொன்னார். அதனைக் கேட்ட ஜராசந்தன் மிகவும் சிரித்தான். மேலும் அவன் கிருஷ்ணனை நோக்கி, 'ஓ மூடர்களே! அப்படியானால் உங்களுக்கு யுத்தங் கொடுக்கிறேன். நீ யுத்தத்தில் பயந்து மதுரையைவிட்டு சமுத்திரத்தைச் சரணமடைந்தவன் (துவாரகைக்குச் சென்றவன்). ஆனதால் உன்னுடன் யுத்தஞ் செய்யமாட்டேன். இந்த அருச்சுனன் வயதிலும், பலத்திலும் எனக்குச் சமனல்ல. பீமசேனன் எனக்குச் சமமான பலமுள்ளவனானதால் இவனுடன் யுத்தஞ் செய்கிறேன்" என்று சொல்லிப் பருத்த கதாயுதத்தைப் பீமசேனனிடம் கொடுத்தான். மற்றொரு கதாயுதத்தைத் தானெடுத்துக்கொண்டு பட்டணத்தை விட்டு வெளியில் வந்தான்.

34—16. பின்பு அவ்விரு வீரர்களும் மேடுபள்ளமில்லாத சமமான பூமியில் வஜ்ராயுதம்போன்ற அந்த ஆயுதங்களால் அடித்துக்கொண்டார்கள். மேலும் அவர்கள் இடமாகவும், வலமாகவும் சுற்றி யுத்தஞ் செய்யும் படர்கள் காட்டிய

சமீபத்தில் சத்தமுண்டானதுபோலிருந்தது. அப்பொழுது இரண்டு யானைகள் முட்டிக்கொண்டால் அதன் தந்தங்கள் ஒன்றோடொன்று நெருங்கி சப்தித்தாற்போல அவர்களுடைய கதாயுதங்கள் ஒன்றோடொன்று அடிபட்டதனால் இடிபோலச் சடசடவென்று சப்தமுண்டாயிற்று. இப்படி அவ்விருவர்களும் தோள், இடுப்பு, கால்கள், கைகள், தொடைகள் இவைகளில் கதாயுதத்தால் அடித்துக்கொள்ளும்பொழுது அவ்விரு கதாயுதங்களும் எருக்கன் கழிகள்போல் பொடியாயின. இப்படி மிக்க கோபத்துடன் யானைகள்போல் யுத்தஞ்செய்தார்கள். இவ்விதம் கதைகள் பொடியானபின், இரும்புக்குச் சமமான முஷ்டிகளால் அடித்துக்கொண்டார்கள். முஷ்டிகளாலும் உள்ளங்கைகளாலும் அவர்கள் அடித்துக்கொள்ளும்பொழுது இடிபோலும், வஜ்ரம்போலும் கடுமையான சப்தமுண்டாயிற்று. அவ்விருவர்களும் சமமான பலமுள்ளவர்கள்; சமமான தேஜசுள்ளவர்கள்; ஆனதால் ஒருவருக்கொருவர் தோல்வியன்னியில் யுத்தஞ்செய்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் ஜராசந்தனுடைய பிறப்பையும் அவன் மரணத்தையும், பின்பு ஜரையால் பிழைக்கச்செய்ததையும் அறிந்தவரானபடியால் பீமசேனரைத் தம்முடைய தேஜஸால் பலமுள்ளவராகச் செய்து (கடாக்ஷத்தால் அவருக்குப் பலத்தைக் கொடுத்து) போதித்தார். மேலும் சத்ருவைக் கொல்லும் உபாயத்தை அறிந்து ஒரு மரத்தின் கிளையைப் பிளந்து, இதுபோல் சத்ருவைப் பிளக்க வேண்டுமென்று ஜாடை காண்பித்தார். அதன் பின்பு மிக்க புஜவலியான பீமன் சத்ருவின் காலைப் பிடித்துப் பூமியில் தள்ளி ஒரு காலைத் தன் காலால் மிதித்துக்கொண்டு மற்றொரு காலைப் பிடித்து [illegible] [illegible] பீமசேனருக் [illegible]

பட்டது. ஒவ்வொரு துண்டிலும் ஒரு கால், ஒரு தொடை, இடுப்பு, ஒரு ஸ்தனம், ஒரு தோள், ஒரு கண், ஒரு கை, ஒரு புருவம், ஒரு காது ஆகிய இவைகள் உள்ளதாக இருந்ததை ஜனங்கள் பார்த்தார்கள். ஜராசந்தன் கொல்லப்பட்டவுடன் ஹா ஹா என்ற சப்தமுண்டாயிற்று. அர்ச்சுனனும் ஸ்ரீ கிருஷ்ணனும் பீமசேனனைத் தழுவிப் பூஜித்தார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் ஜராசந்தனுடைய புத்திரனாகிய சகதேவனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்து, அந்த க்ஷணத்தில் அபிஷேகஞ் செய்வித்தார். ஜராசந்தனால் நிக்ரஹிக்கப்பட்ட அரசர்களை விடுவித்தார்.

---

## அத்தியாயம் 73

### கிருஷ்ணன் அரசர்களை விடுவித்தது

ஜராசந்தன் யுத்தத்தில் ஜயித்து இரண்டு லக்ஷத்து எண்ணூறு அரசர்களை மலையின் குகையில் அடைத்து வைத்திருந்தானல்லவா? அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தால் வெளியில் வந்தார்கள். அப்பொழுது எல்லாரும் அழுக்குள்ள வஸ்திரத்தைத் தரித்தவர்களும், பசியால் இளைத்த சரீரமுள்ளவர்களும், உலர்ந்த முகமுள்ளவர்களும், தடுக்கப்பட்டிருந்தால் கஷ்டப்பட்டவர்களுமாக இருந்தார்கள். மேலுமவர்கள் வெளியில் வந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் மேகம்போன்ற கருத்த திருமேனியுள்ளவரும், பீதாம்பரத்தைத் தரித்தவரும், ஸ்ரீவத்ஸமென்ற அடையாளமுள்ளவரும், நான்கு கைகளுள்ளவரும், தாமரை மலரின் இதழ்போல நீண்ட கண்களுள்ளவரும், அழகு பொருந்திய புன்சிரிப்புள்ள முகம் உள்ளவரும், மகரகுண்டலங்களால் பிரகாசிப்பவரும், தாமரைமலர், கதாயுதம், சங்கம், சக்கரம் இவைகளைக் கை

களில் தரிப்பவரும், கிரீடம், ஹாரம், வளை, அரைநாண், தோள் வளை ஆகிய இவைகளால் அலங்கரிக்கப்பெற்றவரும், கௌஸ்துப ஹாரத்தால் பிரகாசிக்கும் கழுத்துள்ளவரும், வனமாலையுள்ளவருமாக இருந்தார். அவரைக் கண்ட அரசர்கள், கண்களால் பானஞ் செய்பவர்கள் போலவும், நாக்கினால் நக்குகிறவர்கள் போலவும், மூக்குகளால் முகருகிறவர்கள் போலவும், கைகளால் கட்டிக்கொள்பவர்கள் போலவும் கிருஷ்ணனுடைய பாதங்களில் நமஸ்கரித்தார்கள். அதனால் அவர்கள் பாபம் நீங்கி சுத்தர்களானார்கள். மேலும் அவர்களுக்குக் கிருஷ்ணனைத் தரிசித்தவுடன் இவ்வளவு காலம் அனுபவித்த சிரமம் நிவர்த்தியாயிற்று. பின்னும் அவர்கள் அஞ்சலிசெய்து, "ஓ தேவர்களுக்கும் தேவராகிய ஈச! சரணமடைந்தவர்களுடைய உபத்திரவத்தை நிவர்த்திப்பவரே! அறிவற்றவரே! கோரமான ஸம்ஸாரத்தினிருந்து நிர்வேதத்தை யடைந்த எங்களைக் காப்பாற்றும். ஓ! நாத! இந்த ஜராசந்தனிடத்தில் நாங்கள் அருமையை அடையவில்லை. அரசர்களுக்கு ராஜ்யத்தை விட்டுவிடும்படி செய்வது அனுக்கிரகமேயாம். ஐசுவரிய மதமுள்ள அரசர்கள் க்ஷேமத்தை அடையமாட்டார்கள். உம்முடைய மாயையால் மோகித்து ஐசுவரியத்தையே நித்தியமென்று நினைக்கிறார்கள். மூடர்கள் கானலை ஜலமென்று நினைப்பதுபோல மாயா மயமான விகாரங்களை நித்திய வஸ்து என்று நினைக்கிறார்கள். நாங்கள் முந்தி ஐசுவரிய மதங்கொண்டு புத்தியில்லாமல் பிறரை ஜெயிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு சைன்னியங்களை நாசஞ் செய்துகொண்டிருந்தோம். மதத்தால் 'கெடுப்பவர் நீர் இருக்கிறீர்' என்பதை நினையாமல் இருந்தோம். ஆனால் மிகுந்த வீரியமுள்ள காலரூபியான நீர் எங்களை ராஜ்யமில்லாமல் கஷ்டப்படும்படி செய்தீர். இப்

பொழுது உம்முடைய தயையால் மதமற்றுப் பாதங்களைத் தியானிக்கிறோம். இந்தச் சரீரமானது ஒவ்வொரு க்ஷணத்திலும் குறைகிறது. ரோகங்கள் உண்டாகுமிடமாக இருக்கிறது; அப்படிப்பட்ட சரீரத்தால் கானல்போன்ற ராஜ்யத்தை அடையவேண்டுமென்று நாங்கள் இப்பொழுது விரும்பவில்லை. மரணமடைந்த பிறகு ஸ்வர்க்கம் முதலிய போகங்களையும் நாங்கள் விரும்பவில்லை. [அது கேட்பதற்கு மாத்திரம் இனிமையாக இருக்கக்கூடியது.] ஆனதால் ஸம்ஸாரிகளான எங்களுடைய மனமானது உம்முடைய பாதங்களிலேயே எப்பொழுதும் இருக்கும்படியான உபாயத்தைச் சொல்லவேண்டும். வாஸுதேவரும், பரமாத்மாவும், ஸகல பாபங்களையும் நிவர்த்திப்பவருமான ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்" என்றார்கள்.

17—23. இப்படித் தம்மால் விடுவிக்கப்பட்ட அரசர்களால் துதிக்கப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களிடத்தில் மிகுந்த தயை அடைந்து, "இன்றுமுதல் நீங்கள் கேட்டுக்கொண்டபடி என்னிடத்தில் உங்களுக்கு எப்பொழுதும் பக்தியுண்டாகும். நான் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாகவும் அதிபதியாகவு மிருக்கிறேன். நீங்கள் சொல்வது உண்மையே, ஐசுவரிய மதமானது மனிதர்களுடைய புத்தியை மாற்றித் தனதிஷ்டப்படி சஞ்சரிக்கச் செய்கிறது. மேலும் கார்த்தவீரியன், நகுஷன், வேனன் முதலிய அரசர்களும், ராவணன், நரகன் முதலியவர்களும் ஐசுவரிய மதங்கொண்டவர்களாக இருந்ததால் ராஜ்யத்தை இழந்தார்கள். ஆனதால் சரீரம் முதலியவை ஜனன மரணங்களுள்ளவை [ஆத்மாவிற்கு ஜனனமாவது மரணமாவது இல்லை; ஆத்மா நித்தியமென்பது கருத்து.] என்பதை நீங்கள் தெரிந்துகொண்டு என்னிடத்தில் பக்திசெய்து, யாகங்களைச் செய்துகொண்டு

ப்ராணிகளைக் காப்பாற்றுங்கள். மேலும், நீங்கள் புத்திர பௌத்திர சந்ததியை உண்டுபண்ணிக்கொண்டு, சுக துக்கங்களையும், க்ஷேமத்தையும், கஷ்டத்தையும் சமமாக நினைத்து அனுபவித்துக்கொண்டு [சுகம் கிடைத்தபொழுது சந்தோஷிக்கவேண்டாம்; துக்கம் வந்தபொழுதும் துக்கிக்கவேண்டாமென்று கருத்து.] என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்திக்கொண்டு சுகமாகச் சஞ்சரியுங்கள். தேகம் முதலியவைகளில் உதாசீனர்களாகி, ஆத்மாவிடத்தில் ஆசை உள்ளவர்களாக என்னிடத்திலேயே சித்தத்தைச்செலுத்தி, முடிவில் ப்ரும்மமாகிய என்னை அடைவீர்கள்" என்று அனுக்ரஹித்தார்.

24—30. சகல லோகங்களுக்கும் அதிபதியாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் அந்த அரசர்களுக்கு எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்விக்கும்படி சில புருஷர்களுக்கும், ஸ்த்ரீகளுக்கும் உத்தரவு கொடுத்தார். பின்பு ஸ்ரீ க்ருஷ்ணனால் தூண்டப்பட்ட சகதேவன் (ஜராசந்தனுடைய புத்திரன்) அந்த அரசர்களை ராஜாக்களுக்குரிய வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், மாலைகளாலும், சந்தனத்தாலும், தாம்பூலம் முதலிய பலவகையான போக்ய வஸ்துக்களாலும் பூஜித்தார். இப்படி அந்த அரசர்கள் க்ருஷ்ணனுடைய அனுக்ரஹத்தால் ஸ்நானஞ்செய்து, அலங்காரஞ் செய்துகொண்டு, உத்தமமான அன்னத்தைப் புஜித்துக் குண்டலம் முதலிய ஆபரணங்களைத் தரித்து கஷ்டத்திலிருந்து விமுக்தி அடைந்து, மழைக்காலம் சென்றபின் நக்ஷத்ரங்களைப் போலப் ப்ரகாசித்தார்கள். பின்பு அவர்கள் நல்ல குதிரைகள் கட்டிய ரதத்தில் ஏறிக்கொண்டு சகதேவனுடைய இனிய வார்த்தைகளால் பூஜிக்கப்பட்டு, க்ருஷ்ணனுடைய ஸந்நிதியிலே

கள். மேலும் அவர்கள், தங்கள் தங்கள் பந்துக்களுக்கு, ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்தத்தைச் சொன்னதுமல்லாமல், பகவானுடைய உத்தரவின்படி நடந்துவந்தார்கள்.

31—35. ஸ்ரீ கிருஷ்ணன் பீமசேனனைக்கொண்டு ஜராசந்தனைக் கொன்று, சகதேவனால் பூஜிக்கப்பட்டு பீமசேனன், அர்ச்சுனன் இவர்களுடன் இந்திரப்ரஸ்தஞ் சென்றார். அவ்விடத்தில் கிருஷ்ணன் முதலிய மூவர்களும் சங்கத்தை ஊதினார்கள். அந்தச் சப்தமானது பந்துக்களுக்குச் சுகத்தையும், சத்துருக்களுக்குத் துக்கத்தையும் கொடுக்கக்கூடியதாக இருந்தது. அதனைக் கேட்ட இந்திரப்ரஸ்தத்தில் வசிக்கும் ஜனங்களும், தர்மபுத்திரரும், ஜராசந்தன் அடிபட்டான் என்று தெரிந்துகொண்டார்கள். அதன்பின் பீமன், அர்ச்சுனன், கிருஷ்ணன் ஆகிய மூவர்களும் தர்மபுத்திரரை நமஸ்கரித்து, தங்களால் செய்யப்பட்ட காரியங்களைத் தெரிவித்தார்கள். அதனைக் கேட்ட தர்மபுத்திரர் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு மிகுந்த பிரியத்தால் ஒன்றையுஞ் சொல்லாமலிருந்தார்.

## அத்தியாயம் 74

### தர்மபுத்திரர் ராஜசூய யாகம் செய்தது

தர்மபுத்திரர் ஜராசந்த வதம் முதலிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையைக் கேட்டு மிக்க பிரியத்துடன், "ஓ 1. தாமரைமலர் போன்ற கண்களுள்ளவரே! மூவுலகங்களுக்கும் ஆசாரியர்களாக இருப்பவர்களும், சகல லோகங்களும் (லோகபாலகர்களும், உம்முடைய ஆஜ்ஞையைச் சிரசால் தரிக்கிறார்கள்.) அப்படிப்பட்ட நீர் அகங்காரிகளான எங்களுடைய இஷ்டப்படி நடக்கிறீர். இது மிகவும் உசிதமல்ல,

(மனிதபாவனையை அனுசரிக்கிறீர் என்று கருத்து). ஆனால் நீர் பரிபூர்ணரானதால் உத்தரவு செய்வது, பிறருடைய உத்தரவைத் தரிப்பது இவைகளால் உமக்குத் தேஜஸின் விருத்தியாவது, குறைவாவது நேருகிறதில்லை. ஏனென்றால் நீர் ஒருவர்; உமக்குச் சமமான வஸ்து வேறொன்றும் இல்லை; நீர் பிரும்மம். சகல ஜீவர்களுக்கும் நியந்தாவாகிய பரமாத்மா; ஆனதால் உமக்கு கர்மங்களால் தேஜசு விருத்தி அடைகிறதென்பதில்லை. (கர்மத்தால் விருத்தியடைகிறதில்லை; இளைக்கிறதில்லை என்ற சுருதியின்படி) சூரியனுடைய தேஜஸானது உதயத்தால் விருத்தியடைகிறதுமில்லை. அஸ்தமயத்தால் குறைகிறதுமில்லை யல்லவா? (ஆனதால் எல்லோருக்கும் மேற்பட்டவரான நீர் தாழ்ந்தவர்களான எங்களிஷ்டப்படி நடப்பது எங்களிடத்திலுள்ள தயையாலேயொழிய வேறில்லை. அதனால் உமக்குக் குறைவில்லை என்று தாத்பரியம்.) ஓ! ஒருவராலும் ஜயிக்கப்படாதவரே! மூடர்கள் நான், என்னுடையது, நீ, உன்னுடையது என்று எப்படி பேதபுத்தியை அடைகிறார்களோ, அப்படி உம்முடைய பக்தர்களுக்குப் புத்தி உண்டாகிறதில்லை யென்று சொல்லி, யாகம் ஆரம்பிக்கவேண்டிய காலத்தில் (வசந்தம் முதலிய காலம்) வேதாத்தியயனஞ் செய்தவர்களான பிராம்மணர்களைக் கிருஷ்ணனுடைய அனுமதியால் ரித்விக்குகளாக வரித்தார். இப்படி தர்மபுத்திரரால் வியாஸர், பாரத்வாஜர், சுமந்து, கௌதமர், அஸிதர், வஸிஷ்டர், சியவனர், கண்வர், மைத்ரேயர், கவஷர், திருதர், விசுவாமித்திரர், வாமதேவர், சுமதி, ஜைமினி, க்ரது, பைலர், பராசரர், கர்க்கர், வைசம்பாயனர், தூர்வாஸர், கச்யபர், தௌம்யர், பரசுராமன், ஆசுரி, வீதிஹோத்திரர், மதுச்சந்தஸ், வீரஸேனர், அகிருதவிரணர் ஆகிய இவர்கள் ரித்விக்குகளாக வரிக்கப்பட்டார்கள். மேலும் மற்ற பிராம்மணர்களும், பீஷ்மர், துரோணர்,

பீமர், திருதராஷ்டிரர், அவருடைய பிள்ளைகள், மிக்க புத்திசாலியான விதுரர், மற்ற க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் ஆகிய எல்லோரும் தர்மபுத்திரரால் அழைக்கப்பட்டு, யாகத்தைப் பார்ப்பதற்காக இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்தார்கள். அப்பொழுது பிராம்மணர்கள் தங்கக் கலப்பையால் யாக பூமியை உழுது, விதிப்படி அரசனுக்குத் தீக்ஷை செய்வித்தார்கள். இந்த யாகத்தில் பாத்திரங்களெல்லாம் வருணனுடைய யாகத்தில்போல ஸ்வர்ணமயங்களாக இருந்தன. இந்திரன் முதலிய லோகபாலகர்களும், பிரும்மதேவரும், பரமசிவனும், அவரவர்களுடைய கணங்களும், சித்தர்களும், உரகர்களும், மகரிஷிகளும், யக்ஷர்களும், ராக்ஷஸர்களும், கருடர்களும், கின்னரர்களும், சாரணர்களும், அரசர்களும், ராஜபத்னிகளும் தர்மபுத்திரரால் அழைக்கப்பட்டு, பாண்டுவின் புத்திரராகிய தர்மபுத்திருடைய யாகத்தைப் பார்ப்பதற்காக வந்தார்கள். மேலும் அவர்கள் கிருஷ்ணபக்தராகிய தர்மபுத்திரருடைய யாகத்தை நல்லதென்று ஆச்சரியமில்லாமல் ஒப்புக்கொண்டார்கள்.

17—30. தேவர்கள் வருணனுக்கு யாகஞ் செய்வித்தது போல தேவர்கள்போன்ற மிக்க தேஜஸ்ஸுள்ள பிராம்மணர்கள் தர்மபுத்திரருக்கு ராஜஸூய யாகஞ் செய்வித்தார்கள். ஸோமலதையைப் பிழியும் தினத்தில் [ஸுத்யாகஸ்] யாகஞ் செய்விக்கும் மிக்க யோக்யர்களான ரித்விக்குகளையும், ஸதஸ்யர்களையும் தர்மபுத்திரர் மிகவும் பக்தியுடன் பூஜித்தார். அப்பொழுது ஸபையிலிருப்பவர்களில் யாரை முதலில் பூஜிக்கலாம் என்று யோசிக்கும்பொழுது அதற்குரியவர்கள் அநேகர்கள் இருந்தார்கள். இன்னாரைத்தான் முதலில் பூஜிக்கவேண்டுமென்று நிச்சயமில்லாமல் [illegible] [illegible]ர்கள். அப்பொழுது ஸஹதேவர் [illegible]

அதிபதியான ஸ்ரீ கிருஷ்ணனை முதலில் பூஜிக்கவேண்டும்; அவரே அதற்குத் தகுதியானவர். இவர் சகல தேவ சுரூபி. தேசம், காலம், தனம், யாகம், அக்னி, ஆகுதி, சாங்கியம், யோகம், ஜகத் ஆகிய இவைகளெல்லாம் இந்தக் கிருஷ்ணனேயாம். ஓ சதஸ்யர்களே! இவருக்குச் சமமானவர் ஒருவருமில்லை. இந்த ஜகத் முழுவதும் இவருடைய சுருபமேயொழிய வேறில்லை. இவர் தம்முடைய மகிமையில் இருந்துகொண்டு (மற்றொன்றையும் அபேக்ஷியாமல்) தாமே இந்த ஜகத்தைப் படைக்கிறார்! காப்பாற்றுகிறார்; ஸம்ஹரிக்கிறார். இவர் நித்தியர்; எல்லா ஜனங்களும் பலவகையான கர்மங்களைச் செய்து, தர்மம் முதலிய க்ஷேமத்தை அடைவதற்கு இவருடைய அனுக்கிரகமே காரணமாய் இருக்கிறது. (கர்மங்களும், அவைகளின் பயனும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சுவாதீனங்களென்று கருத்து.) அதனால் மிகுந்த மகிமை பொருந்தியவரும், சகல பிராணிகளுக்கும் ஆத்மாவும், பேதபுத்தி இல்லாதவருமான ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அக்கிர பூஜை செய்தால் குறைவற்ற பலன் கிடைக்கும்; சகல பிராணிகளையும், ஆத்மாவையும் பூஜித்ததாக ஆகும். ஆனதால் கிருஷ்ணனையே முதலில் பூசிக்கவேண்டும்" என்று கிருஷ்ணனுடைய மகிமையை அறிந்தவராகையால் சொன்னார். அதனைக் கேட்ட சதஸ்யர்கள் எல்லோரும் நல்லது, நல்லது என்று ஒப்புக்கொண்டார்கள். அதனைக் கேட்ட தர்மபுத்திரர் சதஸ்யர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து மிக்க ஸைரியத்துடன் ஸ்ரீகிருஷ்ணனைப் பூஜித்தார் மேலும் அவர் பகவானுடைய பாதங்களை அலம்பி, லோகத்தைப் பரிசுத்தப்படுத்தக்கூடிய அந்தத் தீர்த்தத்தைத் தம் [illegible]டைய பத்தினிகள், சகோதரர்கள், மந்திரிகள், [illegible] [illegible] லே புரோக்ஷித்துத் [illegible] [illegible]கொண்டார். பின்னும், பட்டு முதலிய [illegible]

னும், விலையுயர்ந்த ஆபரணங்களாலும் பகவானை அலங்கரித்து, ஆனந்தத்தால கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு அவரைத் தரிசிக்க முடியாமல் நின்றார். [மிக்க பிரியத்துடன் தரிசித்தார் என்று கருத்து.] இப்படி தர்மபுத்திரரால் பூஜிக்கப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்த எல்லா அரசர்களும் அஞ்சலி செய்து ஜய! ஜய! என்று சொல்லி நமஸ்கரித்தார்கள். புஷ்பங்கள் வருஷிக்கப்பட்டன.

31—33. அதைப் பார்த்த சிசுபாலன் பகவானுடைய குணங்களைப் பொறாமல் கோபங்கொண்டு தனது ஆசனத்தைவிட்டு எழுந்திருந்து பின்வருமாறு கிருஷ்ணனை உத்தேசித்துக் கடுஞ்சொற்களைச் சொல்லலானான்: ஸபையில், "காலமானது எல்லாவற்றிற்கும் அதிபதி; அதனை ஜயிக்க முடியாது என்று பெரியோர்கள் சொல்லுவது உண்மையே. இந்த ஸபைகளில் இருக்கும் பெரியோர்களுடைய புத்திகூட சிறுவனுடைய வார்த்தையால் மாறிவிட்டது. ஸதஸ்யர்களான ஓ பெரியோர்களே! நீங்கள் பாத்திரத்தை [பூஜிக்கத்தக்கவனை] அறிந்தவர்களுக்குகூட சிறந்தவர்களானதால் கிருஷ்ணனைப் பூஜிக்கவேண்டுமென்று சிறுவன் சொல்லும் வார்த்தையை நீங்கள் ஒப்புக்கொள்ளவேண்டாம். மிகுந்த தபஸ்விகளும், வித்யையுள்ளவர்களும், விரதங்களை அனுஷ்டித்தவர்களும், ஞானிகளும், பாபமற்றவர்களும், லோகபாலகர்களாலும் பூஜிக்கப்பட்டவர்களும் பிரம்மிஷ்டர்களுமான மகரிஷிகள் இதோ இருக்கின்றார்கள். இவர்களைப் பூஜிக்காமல் தாழ்ந்த குலத்தில் பிறந்த இந்த இடையனை எப்படிப் பூஜிக்கலாம்? காக்கைக்குப் புரோடாசத்தைக் (ஹவிஸ்) கொடுக்கலாமா? இந்தக் கிருஷ்ணன் ஜாதி, ஆசிரமம், குலம் இவைகளில்லாதவன்; ஒரு தர்மத்தையும் அனுஷ்டிக்காதவன்; தனது இஷ்டப்

படி நடப்பவன்; குணமற்றவன்; இவனை எப்படிப் பூஜிக்க லாம்? இவர்களுடைய குலமானது யயாதி மகாராஜனால் சபிக்கப்பட்டிருக்கிறது; சாதுக்களால் தள்ளப்பட்டது; வீணாக மத்திய பானத்திலேயே ஆசையுள்ளது. அப்படிப் பட்ட குலத்திற் பிறந்த இந்தக் கிருஷ்ணன் பூஜைக்குரிய வனா? மேலும் இவர்கள் பிரும்மரிஷிகள் வசிக்கக்கூடிய புண்ணியமான தேசங்களை விட்டு, அமங்களமான சமுத்திரத் தின் நடுவிலிருந்துகொண்டு திருடர்களாக ஜனங்களை உபத் திரவிக்கிறார்கள்" என்று பலவிதமான கடுஞ் சொற்களைச் சொன்னான். மரணம் சமீபித்தவனாகிய சிசுபாலனுடைய இம்மாதிரியான வார்த்தையைக் கேட்டும், பகவான் ஒன்றை யும் சொல்லாமல் மௌனமாக இருந்தார். அது நரியினு டைய கத்தலைக் கேட்டுச் சிங்கம் மௌனமாக இருந்தாற் போலிருந்தது.

40—47. இப்படி சிசுபாலனால் சொல்லப்பட்ட நிந்தா வார்த்தைகளைக் கேட்டு, சதஸ்யர்கள் அதனைச் சகியாமல் காதுகளை மூடிக்கொண்டு சிசுபாலனை நிந்தித்துக்கொண்டு வெளியில் சென்றார்கள். பகவானையாவது, பக்தர்களையா வது யாராவது நிந்தித்தால் அதனைக் கேளாமல் அந்த இடத்தைவிட்டு வெளியில் போகவேண்டும். அப்படியில்லா மல் எவன் அவ்விடத்திலேயே இருந்து அதனைக் கேட்டுக் கொண்டிருக்கிறானோ, அவன் புண்ணியத்தை இழந்துவிடு கிறான். பின்பு பாண்டவர்களும், மத்ஸ்யர்களும், கேகயர்களும், ஸிருஞ்ஜயர்களும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு சிசுபால னைக் கொல்ல முயற்சித்தார்கள். அதனைக்கண்ட சிசுபாலன் பயப்படாமல் கத்தியையும் கேடகத்தையும் எடுத்துக் கொண்டு கிருஷ்ணனைச் சார்ந்தவர்களை அதட்டினான். அப் பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் எழுந்திருந்து, [illegible]

சார்ந்தவர்களைத் தடுத்துச் சக்கரத்தை பிரயோகித்துச் சத்துருவாகிய சிசுபாலனுடைய தலையை வெட்டினார். சிசுபாலன் கொல்லப்பட்டபொழுது மிக கோலாகல சப்தம் உண்டாயிற்று. சிசுபாலனைச் சார்ந்த அரசர்கள் உயிர் பிழைக்க விரும்பிப் பயந்து ஓடினார்கள். அப்பொழுது சகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்க ஆகாயத்திலிருந்து கொள்ளிக்கொள்ளி விழுந்தாற்போல சிசுபாலனுடைய சரீரத்திலிருந்து கிளம்பிய தேஜஸானது பகவானிடம் பிரவேசித்தது. அந்தச் சிசுபாலன் மூன்று ஜென்மமாகப் பகவானிடத்தில் விரோதம் வைத்து, அவரையே எப்பொழுதும் தியானித்திருந்தமையால் பகவத் சுரூபத்தை அடைந்தான். எண்ணமே (பாவனை) க்ஷேமத்திற்குக் காரணமாகிறது.

48—54. பின்பு தர்மபுத்திரர் ருத்விக்குகளுக்கும், சதஸ்யர்களுக்கும் விசேஷமான தட்சிணை கொடுத்து யாகத்தை முடித்தார். இப்படி கிருஷ்ணன் தர்மபுத்திரருக்கு யாகத்தை நடத்திவைத்து, பந்துக்களுடைய வேண்டுகோளின்படி சில மாத காலம் அவ்விடத்தில் வசித்தார். பின்பும் கிருஷ்ணனைத் துவாரகைக்கு அனுப்ப தர்மபுத்திரர் சம்மதியாமலிருக்கும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அவரிடம் விடைபெற்று, பத்தினிகளுடனும் மந்திரிகளுடனும் தன்னுடைய பட்டணஞ் சென்றார். ஓ பரீக்ஷித்து மகாராஜனே! வைகுண்டத்தில் வசித்த ஜய, விஜயர்களுக்கு பிராம்மண சாபம் சேர்ந்த விஷயத்தைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறேன். இம்மாதிரி தர்மபுத்திரர் ராஜசூயத்தைச் செய்து முடித்து பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள் இவர்களுடைய மத்தியில் மகேந்திரன்போலப் பிரகாசித்தார். அந்த யாகத்திற்கு வந்திருந்த தேவர்களும், மனிதர்களும் அந்த [illegible]

ரியும் விலாவித்துக்கொண்டு தங்களிருப்பிடஞ் சென்றார்கள். துரியோதனன் மிக்க பாபியானதாலும், குருகுலத்திற்கு வியாதி போன்றவனானதாலும் அவன் ஒருவன்மாத்திரம் தர்மபுத்திரருடைய ஐசுவரியத்தைப் பார்த்துப் பொறாமை

55. எவன் ஸ்ரீ கிருஷ்ணனால் செய்யப்பட்ட சிசுபால வதம், அரசர்களைக் காப்பாற்றியது, தர்மபுத்திரருடைய யாகம் ஆகிய இவைகளைப் படிக்கிறானோ, அவன் சகல பாபங்களற்றவனாகிச் சுத்தனாவான்.

நோட்டு

ரித்விக்குகளாக:— ஹோதா, போதா, அத்வர்யு, நேஷ்டா, உத்காதா, பிரும்மா முதலியவர்கள். இந்த அத்தியாயத்தில் 32-வது சலோகம் முதல் 7சலோகங்களால் சிசுபாலன் பகவானை நிந்தித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் அந்தச் சலோகங்களுக்கு பகவானை துதித்ததாகவும் அர்த்தமேற்படுகிறது. எப்படியெனில், ஸ்ரீ பகவான் காலசுரூபியாயிருப்பதனால் அந்தக் காலத்தை ஒருவராலும் ஜயிக்க முடியாது என்ற வார்த்தை உண்மையே. வித்வான்களானாலும் லோகத்தில் சில ஜனங்கள் மூடர்களுடைய வார்த்தையை அங்கீகரிக்கிறார்கள். [அதற்கு பகவானுடைய சங்கற்பமே காரணமென்று கருத்து.] இவனைப் பூஜிக்கலாம், இவன் தகுதியானவன் என்று தெரிந்துகொள்ள நீங்கள் சக்தியுள்ளவர்களானதால் சகதேவன் சொன்ன வார்த்தையைச் சிறுவன் வார்த்தையென்று அலட்சியம் செய்யாதீர்கள் [கிருஷ்ணனையே பூஜிக்க வேண்டுமென்று கருத்து]. சபையிலிருப்பவர்கள் தபஸ்விகளானாலும், வித்வான்களானாலும், விரதத்தை அனுஷ்டிப்பவர்களானாலும், ஞானத்தால் மோகமற்றவர்களானாலும், பிரம்மிஷ்டர்களானாலும், லோகபாலர்களால் பூஜிக்கப்பட்டவர்களானாலும் [illegible] ஸ்ரீ கிருஷ்ணனை ஏன் பூஜிக்கக்கூடாது? [illegible] பூமியையும் காப்பாற்றுபவர் [illegible]

திற்கு விரோதமான பாஷண்ட மதத்தை ஆச்ரயித்தவர்களை ஸம்ஹரிப்பவர்; (குலபாம்ஸன என்பதின் அர்த்தம்) அகாக என்று பதம் பிரித்தால் சுகதுக்கமற்றவரென்று அர்த்தம் அப்படிப்பட்ட சமயுத்தியுள்ளவன் (ஆப்தகாமன்) எப்படி எல்லாவற்றையும் அடைய தகுந்தவனோ, அப்படி இந்தப் பகவான் என் அக்ரபூஜையை அடையக்கூடாதா? மேலும் இவருக்கு இன்ன ஜாதி, இன்ன ஆசிரமம், இன்ன குலமென்பதில்லை. (எல்லாவற்றையும் கடந்த பிரம்மம் என்று தாத்பர்யம்). சகல தர்மங்களையும் கடந்தவர்; சாமானிய ஜனங்கள் போல தர்மாதர்மத்திற்குக் கட்டுப்பட்டவரல்ல என்று தாத்பர்யம். [அதனால் தமதிஷ்டப்படி சஞ்சரிப்பவர்; பரமேசுவரனென்று கருத்து.] குணசம்பந்தமற்றவர்; யயாதி இவருடைய குலத்தைச் சபித்தும் சாதுக்கள் அதனைத் தள்ளிவிட்டார்களா? (அந்தக்குலத்தையே ஆச்ரயிக்கிறார்களென்று கருத்து] நல்ல ஆசாரமுள்ளது. (வேதத்திற்கு விரோதமான அடையாளத்தைத் தரிக்கின்ற பாஷண்டர்களை யாதவர்கள் சிட்சிக்கிறார்கள். ஆனதால் யாதவர்களைக் காட்டிலும் தர்மசிந்தையுள்ளவர் வேறு யார் இருக்கிறார்கள் என்று தாத்பரியம்.)

## அத்தியாயம் 75

### தர்மபுத்திரர் அவபிருதஸ்நானஞ் செய்தது

1–2. அதனைக்கேட்ட பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பிராம்மண! ஒருவரிடத்திலும் விரோத புத்தி இல்லாதவராகிய தர்மபுத்திரருடைய ராஜசூய யாகத்தைப் பார்த்து எல்லா அரசர்களும், மகரிஷிகளும், தேவர்களும் சந்தோஷித்தார்கள். ஆனால் துரியோதனன் மாத்திரம் சந்தோஷப்படாமல் பொறாமையை அடைந்தானென்று சொன்னீரல்லவா? அதற்கு என்ன காரணம்? அதைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

3—30. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "மகாத்மாவும் உமக்குப் பிதாமகருமான (பிதாவின் பிதா) தர்மபுத்திரர் ராஜசூயஞ் செய்தபொழுது பந்துக்கள் அவரிடத்திலுள்ள விசுவாசத்தால் யாகத்தில் வேலைசெய்தார்கள். பீமசேனன் சமையல்கட்டிற்கு அதிபதியாகவும், துரியோதனன் பொக்கிஷத்திற்கு அதிபதியாகவுமிருந்தான். சகதேவன் வந்தவர்களைப் பூஜித்து மரியாதை செய்துவந்தான். நகுலன் சாமக்கிரிகளைச் சம்பாதித்துக்கொண்டிருந்தான். அர்ச்சுனன் சாதுக்களுக்குச் சிசுருஷை செய்துவந்தார். ஸ்ரீகிருஷ்ணன் சாதுக்களுடைய பாதங்களை அலம்புவதான காரியத்தைச் செய்துகொண்டிருந்தார். துருபதருடைய புத்திரனாகிய திருஷ்டத்யும்னன் பரிவேஷணம் (பரிமாறுவது) செய்துவந்தான். மிக்க கம்பீர மனமுள்ளவனான கர்ணன் தானதிகாரியாக இருந்தான். யுயுதானன், விகர்ணன், ஹார்திக்யர், விதுரர், பாஹ்லீக புத்திரன், பூரி, சந்தர்த்தன் முதலியவர்கள் மற்றும் பலவிதமான காரியங்களைச் செய்துகொண்டிருந்தார்கள். இப்படி தருமபுத்திரருடைய பந்துக்கள் அவருடைய பிரீதிக்காக ஜாக்கிரதையாக வேலையைச் செய்துவந்தார்கள். அப்பொழுது தருமபுத்திரர் ரித்விக்குகளையும், சதஸ்யர்களையும், பெரியோர்களையும், விசேஷ மித்திரர்களையும் பிரிய வார்த்தைகளாலும், தட்சிணைகளாலும், மரியாதையாலும் பூஜித்தார். சிசுபாலன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதத்தை அடைந்தான். அதன் பின் கங்கையில் அவபிருத ஸ்நானம் நடந்தேறியது. அந்த அவபிருத மகோற்சவத்தில் மிருதங்கம், சங்கம், பணவம், பேரி, ஆனகம், கோமுகம் முதலிய பலவகையான வாத்தியங்கள் முழக்கப்பட்டன. தாசிகள் நர்த்தனஞ் செய்தார்கள். பாடகர்கள் கூட்டங்கூட்டமாகப் பாடினார்கள். வேணு, வீணை, புல்லாங்குழல், தாளம் இவைகளுடைய சப்தம்

ஆகாயத்தில் பரவியது. பலவகையான துவஜங்கள், பதாகைகள், சிறந்த யானைகள், ரதங்கள், குதிரைகள், காலாட்கள் ஆகிய சைன்னியங்களுடன் அரசர்கள் அலங்கரித்துக் கொண்டு வெளிக்கிளம்பினார்கள். மேலும் யாதவர்கள், ஸ்ருஞ்சயர்கள், காம்போஜர்கள், குருக்கள், கேகயர்கள், கோசலர்கள் ஆகிய இவர்கள் சைன்னியங்களுடன் பூமியை அசைத்துக்கொண்டு யஜமானனை முன்னிட்டுச் சென்றார்கள். சதஸ்யர்களும், ரித்விக்குகளும், மற்றும் பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் வேதத்தைக் கோஷித்தார்கள். தேவர்களும், மகரிஷிகளும், பிதுருக்களும் கந்தர்வர்களும் புஷ்பங்களை வருஷித்துத் தோத்திரஞ் செய்தார்கள். மேலும், புருஷர்களும் ஸ்திரீகளும் சந்தனத்தாலும், புஷ்ப மாலையாலும், ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும் அலங்கரித்துக்கொண்டு எண்ணெய், வெண்ணெய், நெய் முதலியவைகளை ஒவ்வொருவர் மீதும் இறைத்துக்கொண்டு விளையாடினார்கள். மேலும் மஞ்சள், குங்குமம், சந்தனம் முதலியவைகளைப் புருஷர்கள் ஸ்திரீகளின் மீது பூசினார்கள். இப்படி அலங்கரிக்கப்பெற்று அவர்கள் விளையாடினார்கள். மேலும் ராஜ பத்தினிகள் தேவஸ்திரீகள் போல யோதர்களால் காப்பாற்றப்பட்டு, கிருஷ்ணனுடைய பத்தினிகளால் நெய் முதலியவைகளால் நனைக்கப்பட்டு வெட்கச் சிரிப்புள்ள முகத்துடன் பிரகாசித்தார்கள். மேலுமவர்கள் ஸ்தனம் முதலிய அவயவங்களை மூடிக்கொள்ளாமல், தங்கள் பர்த்தாவின் சகோதரர்களையும் மற்ற [illegible] யும் யந்திரங்களால் (ஜலத்தைப் பிறர் மீது வாரி இறைக்கும் யந்திரங்கள்) ஜலம் முதலியவைகளை இறைத்தும், அவர்களால் இறைக்கப்பட்டும் ஈரமான [illegible] வர்களாய் விளையாடினார்கள். அதனைக் கண்ட [illegible] [illegible]. அப்பொழுது சம்ராட்டாகிய [illegible] [illegible] குதிரைகள் கட்டியதும், [illegible]

அலங்கரிக்கப்பட்டதுமான ரதத்தில் தம் பத்தினிகளுடன் விளங்கினார். அது ராஜஸூய யாகமே, அதற்கு அங்கங்களான இஷ்டிகளுடன் பிரகாசிப்பதுபோலிருந்தது. அப்பொழுது ரித்விக்குகள் பத்னீசம்யாஜமென்ற யாக விசேஷங்களையும், அவபிருத கர்மங்களையும் செய்து, அரசனை ஆசமனம் செய்யச் சொல்லி, கங்கையில் திரௌபதியுடன் ஸ்நானஞ் செய்வித்தார்கள். தேவர்கள் துந்துபி வாத்தியங்களை முழக்கினார்கள். மனிதர்களும் துந்துபிகளைக் கோஷித்தார்கள். தேவர்களும், மகரிஷிகளும், பிதுருக்களும், மனிதர்களும் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். அப்பொழுது எல்லா ஜாதி ஜனங்களும், எல்லா ஆச்ரமிகளும் ஸ்நானஞ்செய்தார்கள். அவபிருத காலத்தில் ஸ்நானஞ்செய்தவன் மிக்க பாபியானாலும் உடனே சுத்தனாகிவிடுவான். பின்பு அரசன் புதிய பட்டு வஸ்திரங்களை உடுத்தி அலங்கரித்துக்கொண்டு ரித்விக்குகளையும், சதஸ்யர்களையும், பிராம்மணர்களையும் ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும் பூஜித்தார். இப்படி தருமபுத்திரர் அவபிருத ஸ்நானஞ்செய்து ஸ்ரீமந் நாராயணனையே மனத்தில் தியானஞ் செய்துகொண்டு பந்துக்களுக்கும், மித்திரர்களுக்கும், ஞாதிகளுக்கும் மரியாதை செய்தார். அவ்விடத்திலிருந்த எல்லா ஜனங்களும் ரத்தின குண்டலங்களாலும், புஷ்பமாலைகளாலும், சட்டை, தலைப்பாகை, பட்டு, விலையுயர்ந்த ஹாரங்கள் இவைகளாலும் அலங்கரிக்கப்பெற்று தேவர்கள்போலப் பிரகாசித்தார்கள். மாதர்கள் குண்டலங்கள், தங்க ஒட்டியாணம் முதலியவைகளால் விளங்கினார்கள். பின்பு மகாத்மாக்களான ரித்விக்குகள், பிரம்ம வித்துக்களான சதஸ்யர்கள், யாகத்திற்காக வந்திருந்த பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள்,

ருத்திரர்கள், தேவர்கள், மகரிஷிகள், பிதுருக்கள், பூதங்கள், லோகபாலகர்கள், அவர்களைச் சார்ந்தவர்கள் ஆகிய எல்லாரும் அரசனால் பூஜிக்கப்பட்டு அரசனிடம் விடைபெற்றுத் தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றார்கள். அமிருதத்தைப் புசித்த மனிதன் போதுமென்று திருப்தியை எப்படி அடைய மாட்டானோ, அப்படி அவர்கள் கிருஷ்ண பக்தராகிய தரும புத்திரருடைய ராஜசூய மஹோத்ஸவத்தை அநுபவித்து, அதனையே சிலாகித்துத் திருப்தியடையவில்லை. பிறகு அரசனாகிய தருமபுத்திரர் மித்திரர்கள், சம்பந்திகள், கிருஷ்ணன் முதலிய பந்துக்களாகிய இவர்களைச் சிலகாலம் இந்திரப்பிரஸ்தத்திலேயே வசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவர்கள் தங்களை விட்டுப் பிரிய மனமில்லாதவரான தருமபுத்திரர் கேட்டுக்கொண்டபடி அவ்விடம் வசித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனும் சாம்பன் முதலியவர்களைத் துவாரகைக்கு அனுப்பிவிட்டுத் தாம் ஒரு வருஷ காலம் அவ்விடத்தில் வசித்தார். இப்படி தருமபுத்திரர் மனோரதமாகிய மகா சமுத்திரத்தை ஸ்ரீ கிருஷ்ணனுடைய சகாயத்தால் தாண்டி (ராஜசூயத்தைச் செய்து) கவலையற்றவராக இருந்தார்.

31—40. ஒரு தருணம் அந்தப்புரத்தில் தருமபுத்திரருடைய சம்பத்தைப் பார்த்த துரியோதனன் ராஜசூயத்தின் மகிமையை நினைத்துப் பொறாமைகொண்டான். மேலும், மயனால் உண்டுபண்ணப்பட்ட அந்தப்புரத்தில் சபையில் சிறந்த அரசர்களால் அடையக்கூடிய சம்பத்தும், அசுர சிரேஷ்டர்களுக்குக் கிடைக்கக்கூடியவைகளும், மகேந்திரனுடைய சம்பத்துக்களும் பொருந்தியிருந்தன. அப்படிப்பட்ட ஐசுவரியங்களுடன் திரௌபதி தன் பர்த்தாக்களுக்குச் சிசுருஷை செய்துகொண்டிருந்தாள். ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலேயே பக்திசெய்துகொண்டிருக்கும் தருமபுத்திரரு

டைய ஐசுவரியத்தைப் பார்த்து துரியோதனன் பொறாமை கொண்டான். (பக்தர்களுடைய ஐசுவரியத்தில் அசூயைப்படுகிறவர்கள் க்ஷேமத்தையடையமாட்டார்களென்று கருத்து.) மேலும், தருமபுத்திரர் ஒருகால் மயனால் நிருமிக்கப்பட்ட சபையில் சுவர்ண சிங்காதனத்தில் உட்கார்ந்திருந்தார். அவருடைய சகோதரர்கள் அவரைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். தருமபுத்திரருக்குக் கண்ணாக இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனும் அவ்விடமிருந்தார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அநேக ஸ்திரீகளும் இருந்தார்கள். அவர்கள் இரண்டு பாதங்களிலும் அணிந்திருக்கும் ஆபரணங்கள் சப்திக்க. பெருமவர்கள் அழகிய முகங்களுள்ளவர்களாகவும், அசைகின்ற குண்டலங்களுள்ளவர்களாகவும் ஹாரங்களுள்ளவர்களாகவும் இருந்தார்கள். பாரமேஷ்டிய சம்பத்துள்ள தருமபுத்திரரை வந்திகள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அப்பொழுது மிக்க அகங்காரியான துரியோதனன் தன்னுடைய சகோதரர்களுடன் சத்தியை எடுத்துக்கொண்டு கிரீடம், மாலை இவைகளால் அலங்கரிக்கப்பெற்று, காவலாட்களை அதட்டிக்கொண்டு அந்தச் சபையில் பிரவேசித்தான். அவன் தரையை ஜலமென்று பிரமித்து வஸ்திரத்தின் நுனியைத் தூக்கிக்கொண்டான். ஜலமுள்ள இடத்தைத் தரை என்று நினைத்து விழுந்தான். இப்படி மயனுடைய மாயையால் மோகித்த துரியோதனனைப் பார்த்துப் பீமசேனனும், ஸ்திரீகளும், மற்ற அரசர்களும் சிரித்தார்கள். அவர்களைச் சிரிக்கவேண்டாமென்று தருமபுத்திரர் தடுத்தார். அப்படியும் அவர்கள் கிருஷ்ணனால் அநுமதிக்கப்பெற்றுப் பரிகாசஞ்செய்தார்கள். சபையில் துரியோதனனைப் பார்த்து ஜனங்கள் சிரிக்கும்பொழுது ஹா ஹா என்ற சப்தமுண்டாயிற்று. தருமபுத்திரர் வருத்தமடைக்

தார். ஸ்ரீகிருஷ்ணன் பூமியின் சுமையை நிவர்த்திப்பதற்காக துரியோதனனைச் சபையில் கோபிக்கச்செய்து பரிகாசம் செய்தவர்களையும் தடுக்காமலிருந்தார். அதன் பின்பு துரியோதனன் வெட்கமடைந்து, தலைகுனிந்து மௌனமாகச் சபையிலிருந்து வெளியில் வந்து அஸ்தினாபுரஞ் சென்றான். ஓ பரீக்ஷித்து மகாராஜனே! ராஜஸூய மகா யாகத்தில் துரியோதனன் அசூயை அடைந்த காரணத்தைக் கேட்டீரல்லவா? அதனைச் சொன்னேன்" என்றார்.

## அத்தியாயம் 76

### பிரத்யும்னன் சால்வனுடன் யுத்தஞ் செய்தது.

ஓ மகாராஜ! விளையாட்டாக மனித வடிவங் கொண்டவரான ஸ்ரீ கிருஷ்ணன் சால்வனைக் கொன்றார். அந்த அற்புதமான சரிதத்தையும் சொல்லுகிறேன், கேளும். ருக்மிணியின் விவாகத்திற்காக வந்தவர்களான யாதவர்களால் ஜராஸந்தன் முதலியவர்கள் ஜயிக்கப்பட்டார்களல்லவா? அப்பொழுது சிசுபாலனுக்குத் தோழனாகிய சால்வன் என்பவன் எல்லா அரசர்களும் கேட்டுக்கொண்டிருக்க, "பூமியில் யாதவர்கள் இல்லாமலிருக்கும்படி செய்கிறேன்; என்னுடைய பராக்கிரமத்தைப் பாருங்கள்" என்று பிரதிக்ஞை செய்தான். மூடனாகிய சால்வன் மேற்சொன்னபடி உறுதிசெய்து ஒரு பிடி புழுதியைப் புசித்துக்கொண்டு ஒரு வருஷ காலம் பரமசிவனை ஆராதித்தான். இப்படி ஒரு வருஷஞ் சென்றபின் பரமசிவன் அவனிடத்தில் சந்தோஷத்தை அடைந்து, வரங் கொடுக்கிறேனென்று சொல்ல, அவனை நோக்கிச் சால்வன் "தேவர்களாலும், அசுரர்களாலும், மனிதர்களாலும், கந்தர்வர்களாலும், உரகர்களாலும், ராக்ஷதர்களாலும் பேதிக்க

முடியாததும், இஷ்டப்படி செல்லக்கூடியதும், விருஷ்ணி களுக்குப் பயங்கரமுமான ஒரு விமானம் வேண்டு”மென்று கேட்டுக்கொண்டான். அதனைக் கேட்ட பரமசிவன் மய னுக்கு உத்தரவுகொடுக்க, அவன் இரும்பினால் ஒரு விமானத் தை நிருமித்து, ஸௌபமென்ற அந்த விமானத்தைச் சால்வ னுக்குக் கொடுத்தான். அம்மாதிரியான விமானம் பிறருக் குத் துர்லபம்; அநேக மாயைகளுக்கு இருப்பிடம்; இஷ்டப் படி செல்லக்கூடியது. அதனைப் பெற்றுக்கொண்டு சால்வன் கிருஷ்ணனால் செய்யப்பட்ட விரோதத்தை நினைத்துக் கொண்டிருந்த சைனியங்களுடன் துவாரகா நகரஞ்சென்று அந்த நகரத்தைத் முற்றுகை போட்டான்; தோட்டங்களை அழித்தான்; கோபுரங்களையும், மாடிகளையும், வாசற்படிகளை யும் இடித்தான். மேலும் அவன் அந்த விமானத்திலிருந்து ஆயுதங்களை வர்ஷித்தான்; மரங்களையும், மணல்களையும் வர்ஷித்தான். மேலும் அவனுடைய மாயையால் இடி களும், ஆலங்கட்டிகளும், சுழல்காற்றும் உண்டாயின. தூளி யால் திக்குகள் மறைக்கப்பட்டன. இவ்விதம் கிருஷ்ணனு டைய நகரமானது இந்தச் சால்வனால் உபத்திரவிக்கப்பட்டு, திரிபுரத்தால் பூமி கஷ்டப்பட்டதுபோலச் சிரமத்தை யடைந்தது. துவாரகா நகரத்தில் வசிக்கும் ஜனங்கள் சால்வ னால் உபத்திரவிக்கப்படுவதைப் பார்த்துப் பிரத்யும்னன் பயப்படவேண்டாமென்று ஜனங்களைச் சமாதானஞ்செய்து ரதத்துடன் வெளியில் வந்தான். ஸாத்யகி, சாருதேஷ் ணன், ஸாம்பன், அக்ரூரர், அவருடைய சகோதரர்கள், ஹார்த்திக்யர், பானுவிந்தர், கதர், சுகர், ஸாரணர் முதலிய முக்கியமான யுத்த வீரர்களும் அவரவர்களுடைய சைனி யங்களுடன் வெளியில் வந்தார்கள். பின்பு சால்வனைச் சார்ந்த வர்களுக்கும் யாதவர்களுக்கும் யுத்தம் நிகழ்ந்தது. அது

மயிர்க்கூச்சல் உண்டுபண்ணக்கூடியதாகவும், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நேர்ந்த யுத்தம்போலவு மிருந்தது. அப்பொழுது சூரியன் இருட்டைப் போக்கடிப்பது போல ருக்மிணியின் புத்திரராகிய பிரத்யும்னர் சால்வனுடைய மாயைகளைத் திவ்யமான அஸ்திரங்களால் அடக்கினார். தங்கக் கட்டுள்ளதும், இரும்பு முனைகளுள்ளதுமான இருபத்தைந்து பாணங்களால் சால்வனுடைய சேனாதிபதியை அடித்தார். சால்வனையும் மற்றுமுள்ள சைனியங்களையும் ஒவ்வொரு பாணங்களாலும், ஸாரதியைப் பத்து பாணங்களாலும், குதிரைகளை மும்மூன்று பாணங்களாலும் அடித்தார். அதனைக் கண்ட இரண்டு சைனியங்களும் பிரத்யும்னனுடைய அற்புதமான செய்கைகளைச் சிலாகித்தன. அந்தச் சால்வனுடைய விமானமானது மாயாமயமானதாலும், மயனால் செய்யப்பட்டதானதாலும் சில சமயம் அநேகமாகவும், சில சமயம் ஒன்றாகவும், சில சமயம் ஆகாயத்தில் இருப்பதாகவும், ஒரு சமயம் மலையிலிருப்பதாகவும், மற்றொரு சமயம் ஜலத்திலிருப்பதாகவும் தோன்றியது. ஆனதால் கொள்ளிக்கட்டையைச் சுழற்றினாற்போல நான்கு பக்கங்களிலும் சுழன்றுகொண்டிருக்கும் அந்த விமானம் பிறரால் அறியமுடியாததாக இருந்தது. சால்வனும் அவனுடைய விமானமும், சைனியங்களும் எங்கெங்கவிடத்தில் காணப்படுகின்றனவோ, அந்தந்தவிடத்தில் யாதவ சேனாதிபதிகள் பாணங்களைப் பிரயோகித்தார்கள். இப்படி யாதவர்களால் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள அக்னி போலவும், சூரியன்போலவும், சர்ப்பம்போலவும் இருந்தமையால் சால்வன் அவைகளால் அடிக்கப்பட்டு மூர்ச்சை அடைந்தான். சால்வனுடைய சேனாதிபதிகள் விருஷ்ணிகளை ஆயுதங்களாலும், அஸ்திரங்களாலும் அடித்தார்கள்.

அப்படியும் அவர்கள் யுத்தகளத்தை விட்டு ஓடவில்லை. இவ்வுலகத்தில் கீர்த்தியையும் பரலோக சுகத்தையும் விரும்பினவர்களாக இருந்தார்கள். அப்பொழுது சால்வனுடைய மந்திரியாகிய த்யுமானென்பவன் இரும்பினால் செய்யப்பட்ட கதாயுதத்தால் பிரத்யும்னனை யடித்துக் கர்ஜித்தான். அதனால் பிரத்யும்னனுடைய மார்பானது அடிபட்டுப் பிரத்யும்னன் மூர்ச்சை யடைந்தான். அப்பொழுது தாருகனுடைய குமாரனான ஸாரதி, யுத்தத்தின் தர்மத்தை அறிந்தவனாதலால் பிரத்யும்னனை யுத்தஸ்தலத்தை விட்டு வேறு இடத்திற்குக் கொண்டுபோனான். பின்பு ஒரு முகூர்த்தத்தில் பிரத்யும்னன் மூர்ச்சை தெளிந்து, பிரக்ஞை யடைந்து ஸாரதியை நோக்கி, "ஓ ஸாரதியே! யுத்தகளத்தை விட்டு என்னுடைய ரதத்தை இவ்விடம் கொண்டுவந்தது நல்ல காரியமில்லை. யதுகுலத்திற் பிறந்தவன் யுத்தத்திலிருந்து பயந்து ஓடுகிற வழக்கமில்லை, நான் ஒருவன்தான் உன்னால் அபகீர்த்தியை யடைந்தேன். கிருஷ்ணன், பலராமன் இவர்களைக் கண்டு நான் என்ன சொல்வேன்? என் சகோதரனின் மனைவிகள் என்னுடைய அதைரியத்தைப் பார்த்து, 'ஓ வீர! யுத்தத்தில் சத்துருக்கள் என்ன செய்தார்கள் என்று கேட்பார்களே' என்று சொன்னான். அதனைக் கேட்ட ஸாரதி, பிரத்யும்னனை நோக்கி, "ஓ பிரபுவே! ரதிகனாகவிருப்பவன் ஸாரதிக்கு ஆபத்து வந்தால் ஸாரதியைக் காப்பாற்றவேண்டும்; ரதிகனுக்கு ஆபத்து நேர்ந்தால் அவனை ஸாரதி காப்பாற்றவேண்டும் என்பது யுத்தத்தின் தர்மம். அதனை நான் தெரிந்துகொண்டு உம்மை யுத்தகளத்திலிருந்து இவ்விடம் கொண்டுவந்தேன். நீர் சத்துருவினுடைய கதையால் அடிபட்டு மூர்ச்சை யடைந்திருந்தீர்" என்று சொன்னான்.

## அத்தியாயம் 77

### ஸால்வ வதம்

அதனைக் கேட்ட பிரத்யும்னன் ஜலத்தைத் தொட்டு சுத்தனாகி வில்லையெடுத்து முயற்சியுடன் ஸாரதியை நோக்கி, "த்யுமானுடைய ஸமீபத்திற்கு என்னுடைய ரதத்தை நடத்து" என்றார். பின்னுமவர் யுத்தஸ்தலம் வந்து, தன்னுடைய சைனியத்தை யடிக்கும் த்யுமானை எட்டு நாராச பாணங்களால் அடித்தார். அவனுடைய குதிரைகளை நான்கு பாணங்களாலும், ஒரு பாணத்தால் ஸாரதியையும், இரண்டு பாணங்களால் வில்லையும், துவஜத்தையும் அடித்ததுமன்றி, மற்றொரு பாணத்தால் த்யுமானுடைய தலையையும் வெட்டினார். பின்பு கதன், ஸாத்யகி, ஸாம்பன் முதலியவர்கள் ஸால்வனுடைய சைனியத்தை அடித்தார்கள். யாதவர்களால் அடிக்கப்பட்ட ஸால்வனுடைய சைனியங்கள் தலை வெட்டுண்டு சமுத்திரத்தில் விழுந்தன. இப்படி ஸால்வனுக்கும் யாதவர்களுக்கும் இருபத்தேழு நாட்கள் பயங்கரமான யுத்தம் நடந்தது. அந்தச் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் துவாரகையி லில்லை. தருமபுத்திரருடைய ராஜஸூயத்திற்காக இந்திரப்ரஸ்தஞ் சென்றவர் அவ்விடத்திலேயே வசித்தார். அப்பொழுது பகவான் இந்திரப்ரஸ்தத்தில் சில கடுமையான அபசகுனங்களைப்பார்த்துப்பந்துக்களை நோக்கி, "பலராமன், மற்ற மித்திரர்கள் ஆகிய இவர்களுடன் நான் இவ்விடம் வந்துவிட்டேன். இந்தச் சமயத்தில் சிசுபாலனைச் சார்ந்தவர்கள் என்னுடைய பட்டணத்தை உபத்திரவிப்பார்கள். ராஜஸூயம் முடிந்தது. சிசுபாலனைக் கொன்றேன். (வந்த காரியம் முடிந்ததென்று தாத்பர்யம்) அபசகுனங்கள் காணப்படுகின்றன. நான் துவாரகைக்குப் போகவேண்

டும்" என்று பாண்டவர்கள், குந்தி, மகரிஷிகள், மற்ற பெரியோர்கள் ஆகிய எல்லாருக்கும் சொல்லிக்கொண்டு துவாரகைக்கு வந்தார்.

9—18. ஸ்ரீகிருஷ்ணன் துவாரகை சென்று அவ்விடம் யுத்தம் நடப்பதைப் பார்த்து, பலராமனைப் பட்டணத்தைக் காப்பாற்றும்படி சொல்லி, தாருகனை நோக்கி, "ஓ ஸாரதியே! என்னுடைய ரதத்தை ஸால்வனிடம் நடத்து. அவன் மாயாவியானதால் அவனைக் கண்டு பயப்படவேண்டாம்" என்றார். அதைக் கேட்ட தாருகன் ரதத்தை நடத்தி யுத்தஸ்தலங் கொண்டுவந்தான். இப்படிப் பகவான் யுத்தகளம் வந்ததைச் சத்துருக்களும் யாதவர்களும் பார்த்தார்கள். அப்பொழுது ஸால்வனுடைய சைனியங்கள் வெகுவாகக் கொல்லப்பட்டிருந்தன. ஸால்வன் கிருஷ்ணனைப் பார்த்து, சக்தியென்ற ஆயுதத்தைப் பிரயோகித்தான். அந்தச் சக்தி பயங்கரமான சப்தத்துடன் குறைக்கொள்ளிபோல ஜ்வலித்துக்கொண்டு வருவதைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் சில பாணங்களைப் பிரயோகித்து நூறு துண்டாக வெட்டினார். ஸால்வனையும் பதினாறு பாணங்களால் அடித்து, ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஸௌபமென்ற விமானத்தையும் அநேக பாணங்களால் அடித்தார். சூரியனுடைய கிரணங்கள் ஆகாயத்தில் பரவினாற்போல் பாணங்கள் அந்த விமானத்தின்மீது விழுந்தன. அதைக் கண்ட ஸால்வன் சார்ங்கமென்ற வில்லைப் பிடித்திருக்கும் பகவானுடைய இடது கையைப் பாணத்தால் அடித்தான். அதனால் அடிக்கப்பட்டு அந்தச் சார்ங்கமென்ற வில் கீழே விழுந்தது. அது மிகவும் ஆச்சரியப்படக்கூடியதாக இருந்தது. அதைக் கண்ட சகல பிராணிகளும் ஹா, ஹா என்று கதறினார்கள். ஸால்வன் அட்டகாசஞ்செய்து ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "நீ என்னு

டைய தோழனாகிய சிசுபாலனுடைய பத்னியாகிய ருக்மிணியை அபகரித்தாயல்லவா? மேலும், சிசுபாலனைச் சபையில் வதஞ்செய்தாயல்லவா? பின்பு, ஒருவராலும் ஜயிக்கப் படாதவன் என்று அகங்காரமடைந்திருக்கிறாய். ஓ மூட! ஆனதால் என் முன்பாக நில். உன்னை யமலோகத்திற்கு அனுப்புகிறேன்" என்றான்.

19—21. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன், "ஓ மூட! வீணாகப் பிதற்றுகிறாய். சமீபத்தில் நேர்ந்திருக்கும் மரணத்தை நீ தெரிந்துகொள்ளவில்லை. சூரர்கள் தங்கள் பராக்கிரமத்தைக் காண்பிப்பார்களேயொழிய அதிகமாகப் பேசமாட்டார்கள்" என்று சொல்லிக் கதாயுதத்தை யெடுத்து மிக்க வேகமாகச் சுழற்றி ஸால்வனை அடித்தார். கதாயுதம் அவனை அடைந்துத் திரும்பியவுடன் ஸால்வன் மாயையில் மறைந்துவிட்டான்.

22—28. பின்பு ஒரு முகூர்த்தத்தில் தேவகியால் அனுப்பப்பட்டு வந்த ஒரு புருஷன் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து, தேவகியினால் அனுப்பப்பட்டு வந்த புருஷன் என்று சொல்லி, "ஓ கிருஷ்ண! கிருஷ்ண! மிக்க பராக்கிரமமுள்ளவரே! பிதாவிடத்தில் பிரியமுள்ளவரே! ஸௌனிகன் (கசாப்புக்காரன்) பசுவைக் கொண்டுபோனாற்போல் உம்முடைய பிதாவாகிய வசுதேவரை ஸால்வன் கட்டிக்கொண்டு போனான்" என்று அழுதுகொண்டு சொன்னான். அந்த அப்ரியமான வார்த்தையைக் கேட்டுப் பகவான் மநுஷ்ய பாவனையை அநுசரித்து மிக்க வருத்தத்துடன் சாமானிய ஜனங்கள்போல, "தேவர்களாலும், அசுரர்களாலும் ஜயிக்க முடியாதவரும், ஜாக்கிரதையுள்ளவருமான பலராமனை ஜயித்து, அற்பனாகிய ஸால்வன் என்னுடைய பிதாவை

அபகரித்துச் சென்றான். தெய்வச்செயலே மேலானது" என்று சொல்லித் துக்கித்தார். இந்தச் சமயத்தில் ஸால்வன் வசுதேவரைப்போல மாயையால் ஒரு பிரதிகிருதியைச் செய்து, அதைக் கிருஷ்ணனுக்குக் காண்பித்து, "இதோ உன்னுடைய பிதாவாகிய வசுதேவர் இருக்கிறார். எவர் நிமித்தம் நீ ஜீவித்திருக்கிறாயோ அவரைக் கொல்லுகிறேன். உனக்குப் பலமிருக்குமானால் வசுதேவனைக் காப்பாற்று" என்று சொல்லிக் கத்தியால் அந்த மாயா வசுதேவருடைய தலையை வெட்டி, அந்தத் தலையை எடுத்துக்கொண்டு ஆகாயத்திலிருக்கும் விமானத்திலேறினான்.

29—30. பின்பு பகவான் இயற்கையில் எல்லாவற்றையும் அறிந்தவரானாலும் மனித பாவனையால் பந்துக்களைப் போல் க்ஷணகாலம் துக்கித்தார். அதன்பின் ஸால்வனால் செய்யப்பட்டது மயனுடைய மாயையென்று தெரிந்துகொண்டார். அப்பொழுது அவ்விடத்தில் தேவகியால் அனுப்பப்பட்ட தூதனும், வசுதேவருடைய உடலும் காணப்படவில்லை அதனால் இது ஸ்வப்னத்தில் பார்க்கப் படும் வஸ்து போன்றது; ஸால்வனுடைய மாயை உண்மையல்ல என்று பகவான் நன்றாகத் தெரிந்துகொண்டு விமானத்திலிருக்கும் ஸால்வனைக் கண்டு அவனைக் கொல்ல முயற்சித்தார்.

31—34 இப்படிச் சில மகரிஷிகள் முன்பின் ஆலோசனையில்லாமல் சொல்லுகிறார்கள். தாங்கள் முன் சொல்லியதற்கு விரோதமாகச் சொல்லுகிறோமேயென்று நினைக்கிறதில்லை. சோகமாவது, மோகமாவது, ஸ்நேகமாவது, அஞ்ஞானத்தாலுண்டாகும் பயமாவது பகவானுக்கு உண்டாகக் கூடுமா? அவருடைய ஞானமும் (ஸ்வரூப ஞானமும்), விஞ்ஞானமும் (பாஹ்யமான விஷய ஞானம்) ஆகிய இவைகள்

ஒருவிடத்திலும் தடைப்படாதது ; அவர் தேவர்களால் துதிக்கப்பெற்றவர் ; மேலும், அஞ்ஞர்கள் அவருடைய பாதங்களைச் சேவித்து ஆத்மஞானத்தை அடைகிறார்கள். அனாதியான வித்தியாசமான எண்ணத்தை (நான் இளைத்திருக்கிறேன் ; துக்கப்படுகிறேன் என்று எண்ணம்) நிவர்த்தித்துக்கொள்ளுகிறார்கள். அதனால் இயற்கையான, அனந்தமான பதத்தை அடைகிறார்கள். ஸாதுக்களுக்குக் கதியாகிய பரம புருஷர் எங்ஙனம் கோபிப்பது ? (6-வது ச்லோகம் முதல் இதுவரையில் சொல்லியது பிறர் சொல்லியதென்று தாத்பர்யம். தம்முடைய அபிப்பிராய மென்னவெனில்) அநேகமான பராக்கிரமமுள்ளவரான பகவான் அநேக ஆயுதங்களைப் பிரயோகித்துக் கர்வம் அடிப்பவனாகிய ஸால்வனை அடித்ததுமின்றி, கதாயுதத்தால் அவனுடைய கவசத்தையும் விமானத்தையும் உடைத்தார். கிருஷ்ணனுடைய கதாயுதத்தால் ஆயிரம் துண்டாக உடைக்கப்பட்டு கவசமும், விமானமும் ஜலத்தில் விழுந்தன. அதன்பின் ஸால்வன் அந்த விமானத்தை விட்டுப் பூமியில் வந்து கதாயுதத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி எதிர்த்து ஓடிவந்தான். அவனைக் கண்ணுற்ற பகவான் கதாயுதத்துடன் அவனுடைய கையைப் பல்லமென்ற பாணத்தால் வெட்டி, பிரளயகால ஸூரியன்போல் ஜ்வலிக்கும் அற்புதமான சக்கரத்தை ஸால்வனைக் கொல்வதற்காக எடுத்துக்கொண்டார். அதனால் அவர் சூரியனுடன் கூடிய உதய பர்வதம்போலப் பிரகாசித்தார். மேலுமவர் அந்தச் சக்கரத்தைப் பிரயோகித்து மிக்க மாயாவியான ஸால்வனுடைய கிரீடம், குண்டலம் இவைகளுள்ள தலையை வெட்டினார். அது மகேந்திரன் வஜ்ஜிரத்தால் விருத்திராசுரனுடைய தலையை வெட்டினதுபோலிருந்தது. அப்பொழுது

யமித்ரர்கள் ஹா ஹா என்றார்கள். அந்த மிக்க பாபியான ஸால்வனையடித்தவுடன் ஆகாயத்தில் தேவர்கள் துந்துபி வாத்தியங்களை முழக்கினார்கள். பின்பு தந்தவக்த்ரன் தன்னுடைய ஸ்நேகிதர்களுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி, கோபத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனை எதிர்த்தான்.

[ இந்த அத்தியாயத்தில் 6-வது ச்லோகம் முதல் 30-வது ச்லோகம் வரையில் ஸால்வன் துவாரகையில் யுத்தஞ்செய்த சமயத்தில் கிருஷ்ணன் இந்திரப்ரஸ்தத்திலிருந்ததாகவும், அபசகுனங்களைப் பார்த்துப் பயந்து துவாரகைக்கு வந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இது பொருந்தாது. தருமபுத்திரர் துரியோதனனுடன் சொக்கட்டான் விளையாடும் சமயத்தில் ஸால்வனுடைய யுத்தமென்று சொல்வதுதான் பொருந்தும். ஏனென்றால், தருமபுத்திரர் முதலியவர்கள் காம்யக வனத்தில் வசிக்கும்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் அவர்களைச் சமாதானஞ்செய்யும் சமயத்தில் தருமபுத்திரரை நோக்கி, "ஸால்வனுடைய யுத்தத்தில் நான் கவலை கொண்டிருந்தமையால் உங்களுடைய சொக்கட்டான் விளையாட்டை மறந்துவிட்டேன்" என்று சொன்னதாக வியாசர் சொல்லியிருக்கிறார். மேலும், முன் அத்தியாயத்தில் பலராமனைப் பகவான் துவாரகைக்கு அனுப்பியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க அபசகுனங்களைக் கண்டு, "பலராமனுடன் நான் இவ்விடம் வந்துவிட்டபடியால் சிசுபாலனைச் சார்ந்தவர்கள் என்னுடைய பட்டணத்தை உபத்திரவிப்பார்கள்" என்று சொல்வது பொருந்துமா? ஆனதால் பகவான் இந்திரப்ரஸ்தத்தில் வசிக்கும்பொழுது ஸால்வன் துவாரகைக்கு வந்தானென்பது உண்மையல்லவென்பது தாத்பர்யம். இந்த விஷயமே 31-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ]

# அத்தியாயம் 78

## தந்தவக்த்திர வதம்

தந்தவக்த்திரன் என்பவன் தன்னுடைய தோழனாகிய சிசு பாலன், சால்வன், தம்புக்கிபுள்ளவனான பௌண்டரகன் ஆகிய இவர்கள் பரலோகஞ் சென்றிருந்தாலும் அவர்களுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி கோப முடையவனாக, பதாதி யாகப் பூமி அதிர்ந்துகொண்டு, கதாயுதத்தைக் கையில் தாங்கி ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்தான். அவனைக் கண்ணுற்ற பகவான் கதாயுதத்தைக் கையிலேந்தி ரதத்தை விட்டிறங்கிக் கரை சமுத்திரத்தைத் தடுப்பதுபோல அவனை மறித்தார். கர்வ மிகுந்த கர்வமான தந்தவக்த்ரனும் கதாயுதத்தை யெடுத்துக்கொண்டு கிருஷ்ணனை நோக்கி, "தெய்வச்செயலால் உன்னைக் கண்டேன். கிருஷ்ணா! எனக்கு பந்துவாகிய என்னுடைய மித்திரர்களை நாசஞ் செய்ததுமின்றி என்னையும் கொல்ல விரும்புகிறாய். அதனால் உன்னை வஜ்ரம் போன்ற கதாயுதத்தால் கொல்லுகின்றேன். சரீரத்தில் உண்டான வியாதியைச் சிகித்ஸை செய்வதுபோல் பந்துவென்றும் உன்னால் சத்ருவான உன்னைக் கொன்று மித்திரர்களுக்குப் பிரியத்தைச் செய்கிறேன்" என்று அங்குசத்தால் யானையை அடிப்பதுபோல் கடுஞ் சொற்களால் கிருஷ்ணன் மனத்திற்கு வருத்தத்தை யுண்டு பண்ணி, கதாயுதத்தால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய தலையில் அடித்து அட்டகாசஞ் செய்தான். அதனால் அடிக்கப்பட்டும் கிருஷ்ணன் அசையாமல் பருத்த கௌமோதகியென்ற கதையால் தந்தவக்த்திரனுடைய மார்பில் அடித்தார். இப்படி அடிக்கப்பட்ட தந்தவக்த்திரன் முகத்திலிருந்து ரத்தத்தைக் கக்கிக்கொண்டு கை, கால், தலைமயிர்களைப் பரப்பிக்கொண்டு

மரணமடைந்து பூமியில் விழுந்தான். முன் சிசுபாலனுடைய சரீரத்திலிருந்து தேஜஸ் கிருஷ்ணனை அடைந்ததுபோல தந்தவக்திரனுடைய சரீரத்திலிருந்து கிளம்பிய மிகவும் சூட்சுமமான தேஜஸ்ஸானது எல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது கிருஷ்ணனை அடைந்தது.

11—16. அதன்பின்பு அவனுடைய சிநேகிதனாகிய விடூரதன் என்பவன் பிராணமித்திரனை இழந்தவனாகிக் கத்தி, கேடகம் இவைகளை எடுத்துக்கொண்டு கிருஷ்ணனைக் கொல்ல வேண்டுமென்ற விருப்பத்துடன் எதிர்த்து வந்தான். ஓ அரசர்களுக்குட் சிறந்தவரே! கிருஷ்ணன் சக்ராயுதத்தைப் பிரயோகித்து ஓடிவருகிற விடூரதனுடைய குண்டலம், கிரீடம் இவைகளுள்ள தலையை வெட்டினார். இம்மாதிரி பகவான் ஸௌபமென்ற விமானத்தையும், ஸால்வனையும், தந்தவக்திரனையும், விடூரதனையும், மற்ற பராக்கிரமசாலிகளையும் கொன்று தேவர்களாலும், மனிதர்களாலும் துதிக்கப் பெற்றுத் துவாரகைக்குள் பிரவேசித்தார். முனிவர்களும், ஸித்தர்களும், கந்தர்வர்களும், வித்யாதரர்களும், மஹோரகர்களும், அப்ஸரஸ்ஸுகளும், பித்ருக்களும, யக்ஷர்களும், கின்னரர்களும் புஷ்பங்களை வர்ஷித்து ஸ்ரீகிருஷ்ணனுடைய விஜயத்தைத் துதித்தார்கள். விருஷ்ணிகளுக்குட் சிறந்தவரும் கிருஷ்ணனைச்சுற்றிக்கொண்டு சென்றார்கள். துவாரகா நகரம் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஜகதீசரும் யோகேசுவரருமான ஸ்ரீகிருஷ்ணன் இம்மாதிரி பிறரால் ஜயிக்கப்பட்டாரென்றும், ஜயித்தாரென்றும் மூடர்கள் நினைக்கிறார்கள்.

17—35. பின்பு கௌரவர்களும் பாண்டவர்களும் யுத்தஞ்செய்வதற்காக முயலுகிறார்கள் என்பதைக் கேள்விப்பட்டுப் பலராமன் தீர்த்தயாத்திரைக்குப் போகிறேனென்ற வியாஜத்தால் ஒருவருடைய பக்ஷத்திலும் சேராமல் யாத்

திசைக்குக் கிளம்பினார். பிரபாஸ தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தேவ தர்ப்பணம், ரிஷி தர்ப்பணம், பித்ரு தர்ப்பணம், மனித தர்ப்பணம் ஆகிய இவைகளைச் செய்து, அநேக பிராம்மணர்களுடன் மேற்கே போகின்ற ஸரஸ்வதீ நதிக்குச் சென்றார். பின்பு ப்ருதூதகம், பிந்துஸரஸ், த்ரிதகூபம், ஸுதர்சனம், விசாலமான ப்ரம்ம தீர்த்தம், சக்ர தீர்த்தம், கிழக்கு முகமாகச் செல்லுகிற ஸரஸ்வதீ, யமுனையின் கரையிலுள்ள தீர்த்தங்கள், கங்கையின் கரையிலுள்ள தீர்த்தங்கள் ஆகிய இவைகளை யடைந்து நைமிசமென்ற ஆரணியத்திற்குச் சென்றார். அவ்விடத்தில் எல்லா மகரிஷிகளும் ஸத்திரத்தைச் செய்துகொண்டிருக்கிறார்கள். வெகுநாளாக ஸத்திரத்தை அநுஷ்டித்தவர்களான மகரிஷிகள் பலராமனை நமஸ்கரித்து, விதிப்படி பூஜித்து அவருடன் வந்தவர்களையும் பூஜித்தார்கள். இப்படி நைமிசாரண்யவாசிகளான மகரிஷிகளால் பூஜிக்கப்பட்டு பலராமன் ஆசனத்தில் உட்கார்ந்தார். ஆனால் வியாஸருடைய சிஷ்யரான ரோமஹர்ஷணர் மாத்திரம் பலராமனைக் கண்டு எழுந்திருக்கவில்லை; வணங்கவுமில்லை; அஞ்சலி செய்யவுமில்லை. மற்ற மகரிஷிகளைவிட உயரமான ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த்துப் பலராமன் கோபங்கொண்டார். மேலுமவர், "தாழ்ந்த குலத்தில் பிறந்த இந்த ரோமஹர்ஷணன் எல்லா மகரிஷிகளுக்கும் மேலாக உட்கார்ந்திருக்கிறான். தர்மத்தைக் காப்பாற்றுபவர்களான நம்மையும் லட்சியஞ்செய்யவில்லை. ஆனதால் இவனைக் கொல்வது யுக்தம். இவன் பகவானாகிய வியாஸ மகரிஷிக்குச் சிஷ்யனாகவிருந்து இதிகாசங்களையும், புராணங்களையும், தர்மசாஸ்திரங்களையும் அவரிடம் அத்தியயனஞ்செய்தும் வணக்கமில்லாதவனாகவும், வீணாகத் தன்னைப் பண்டிதனென்று நினைத்தவனாகவுமிருக்கிறான்.

வேஷதாரிபோல வித்வானென்ற வேஷத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறானேயொழிய வித்தையால் நற்குணங்களை யடையவில்லை. 'தார்மிஷ்டர்கள்போல வேஷந்தரித்தவர்கள் மிக்க பாபிகள்; ஆனதால் இவனைக் கொல்கிறேன். இதற்காகவே (துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்காக) நான் பூமியில் அவதரித்திருக்கிறேன்,'' என்று சொல்லிப் பலராமன் துஷ்டர்களைக் கொல்வதை நிறுத்திக்கொண்டவரானாலும் தமது கையிலிருந்த தர்ப்பத்தின் நுனியால் ரோமஹர்ஷணரை அடித்தார். அதனைக் கண்ணுற்ற மகரிஷிகள் மனத்தில் துக்கத்தை அடைந்து ஹா ஹா என்று சொல்லிப்பலராமனை நோக்கி, "இந்த ரோமஹர்ஷணரைப் புராணஞ் சொல்லும் படி ஏற்படுத்தி இவருக்கு பிரும்மாசனத்தையும், தீர்க்கமான ஆயுளையும் கொடுத்துப் புராணஞ் சொல்வதால் இவருக்குச் சிரமமில்லாமலிருக்கும்படியும் அநுக்கிரகஞ் செய்திருந்தோம். இதை யறியாதவர்போல நீர் இவரைக் கொன்றீரே. இது அதர்மமேயாம். நீர் பிராம்மணனைக் கொன்றதால் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டும். நீர் யோகேசுவரரானதால் வேதத்திற்கும் நீர் கட்டுப்பட்டவரல்ல. ஆனாலும் நீர் அநுஷ்டியாத வரையில் மற்ற ஜனங்களும் தர்மத்தை அநுஷ்டிக்கமாட்டார்கள். ஆனதால் லோகத்தைக் காப்பாற்றுவதற்காகவாவது நீர் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டும்'' என்றார்கள். அதனைக் கேட்ட பலராமன், "இந்த பிரம்மஹத்யா தோஷ நிவர்த்திக்காக என்ன பிராயச்சித்தஞ் செய்யவேண்டும்? முக்கிய பக்ஷமான பிராயச்சித்தத்தை விதியுங்கள்; அதனை லோகத்தை யநுக்கிரகிப்பதற்காக அனுஷ்டிக்கிறேன். தீர்க்கமான ஆயுள், தேக பலம், இந்திரிய பலம் முதலியவைகள் இவருக்கு உண்டாகவேண்டு

மென்று நீங்கள் எப்படி விரும்புகிறீர்களோ, அப்படி யோக மாயையின் மகிமையால் செய்கிறேன்; அதனைச் சொல்லுங்கள்'' என்றார். அதனைக் கேட்ட மகரிஷிகள் பலராமனை நோக்கி, "அஸ்திரம், உம்முடைய வீரியம், மிருத்யு, எங்களுடைய வார்த்தை ஆகிய இவைகள் விபர்த்தமாகாமலிருக்கும்படி செய்யும்'' என்றார்கள்.

36—40. அதனைக் கேட்ட பலராமன் மகரிஷிகளை நோக்கி, "இவருடைய புத்திரரான உக்கிரசிரவஸ் என்பவர் உங்களுக்குப் புராணஞ் சொல்வார். அவருக்கு நீங்கள் விரும்பியபடி தீர்க்கமான ஆயுசும் தேக பலம் முதலியவைகளும் உண்டாகும். பிதாவே புத்திரனாக ஜனிக்கிறான் என்று வேதத்தில் சொல்லியிருப்பதால் ரோமஹர்ஷணருக்கும் உக்கிரசிரவஸுக்கும் பேதமில்லை. இன்னும் என்னால் செய்யப்படவேண்டிய தென்ன? உங்களுடைய இஷ்டத்தைத் தெரிவியுங்கள். அறியாமல் செய்த பிரம்மஹத்தியா தோஷத்திற்கு பிராயசித்தத்தையும் யோசித்துச் சொல்லுங்கள். நீங்கள் வித்வான்களல்லவா?'' என்று கேட்டார். அதனைக் கேட்ட மகரிஷிகள் பலராமனை நோக்கி, "இல்வலனுடைய புத்திரன் பல்வலன் என்று ஒரு அசுரன் இருக்கிறான். அவன் பர்வகாலத்தில் இவ்விடம் வந்து ரக்தம், அமேத்யம், மூத்திரம், மத்யம், மாமிசம், வப்பு ஜலம் ஆகிய இவைகளை வருஷித்து எங்களுடைய யாகத்திற்கு விக்கினஞ் செய்கிறான். அந்தப் பாபியான அசுரனைக் கொல்லும். அதுவே எங்களை ஆராதித்ததாகும். பின்பு நீர் இந்த பாரத வர்ஷம் முழுவதும் ஒரு வருஷ காலம் பிரதட்சிணமாகச் சஞ்சரித்து அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தால் இந்த பிரம்மஹத்தியா தோஷம் நிவர்த்தியாகும்'' என்றார்கள்.

# அத்தியாயம் 79

## பலராமன் தீர்த்த யாத்திரை செய்தது

பின்பு பர்வகாலம் வந்தது. அப்பொழுது பயங்கரமான பெருங்காற்று வீசியது. அதனால் மணல்கள் வருஷிக்கப்பட்டன. நான்கு பக்கங்களிலும் துர்வாசனை வீசியது; பல்வலன் என்ற ராக்ஷஸன் அமேத்யத்தை யாகசாலையில் வருஷித்தான். அவனும் சூலாயுதத்துடன் காணப்பட்டான். அவனுடைய சரீரமானது பருத்தும் உடைந்த மை மலை போலுமிருந்தது (மிக்க கருமை நிறமுள்ளது). அவனுடைய தலைமயிர்களும், மீசையும் காய்ச்சப்பட்ட தாமிர ஊசிகள் போலிருந்தன. அவனுடைய முகமானது சிங்கப் பற்களால் பயங்கரமாக இருந்தது. அவனைக் கண்ணுற்ற பலராமன் சத்துரு சைன்யத்தைக் கொல்லக்கூடிய முசலத்தையும் அசுரர்களை வதஞ்செய்யக்கூடிய கலப்பையையும் நினைந்தார். நினைத்தவுடன் அவைகள் பலராமனுடைய சமீபம் வந்தன. அப்பொழுது பலராமன் மிக்க கோபங்கொண்டு பிராம்மணர்களுக்குத் துரோகம் செய்பவனும், ஆகாயத்தில் சஞ்சரிப்பவனுமான பல்வலனைக் கலப்பையின் நுனியால் இழுத்து முசலத்தால் அவனுடைய தலையில் அடித்தார். அதனால் அடிக்கப்பட்டு நெற்றி உடைந்தது; ரத்தம் பெருகியது; அவன் தீனமாகக் கத்திக்கொண்டு பூமியில் விழுந்தான். அது வஜ்ரத்தால் அடிக்கப்பட்டு மலை விழுந்தது போலிருந்தது. அப்பொழுது விருத்திராசுரனைக் கொன்ற மகேந்திரனைத் தேவர்கள் உபசரித்ததுபோல் மகரிஷிகள் பலராமனை தோத்திரஞ்செய்து ஆசீர்வதித்து அபிஷேகம் செய்தார்கள். மேலுமவர்கள் வாடாத தாமரை மலர்களுள்ளதும், அழகு பொருந்தியதுமான வைஜயந்தியென்ற மாலையையும், திவ்யமான வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் கொடுத்தார்கள்.

8—25. பின்பு பலராமன் மகரிஷிகளிடம் பெற்று, பிராம்மணர்களுடன் கௌசிகீ நதிக்குச் சென்று அதில் ஸ்நானஞ்செய்து ஒரு சிறந்த ஸரசுக்குச் சென்றார். அதிலிருந்து பெருகி வரும் நதிதான் சரயூவென்று சொல்லப்படுகிறது. அந்த சரயூ வழியாகப் பிரயாகை சென்றார். அவ்விடத்தில் ஸ்நானஞ்செய்து தேவ தர்ப்பணம் முதலியவைகளை முடித்து, புலகாச்ரமம் [ஹரிக்ஷேத்திரம] சென்றார். பின்பு கோமதி, கண்டகி, விபாஸா, சோணை என்ற நதிகளில் ஸ்நானஞ் செய்தார். பிறகு கயா க்ஷேத்திரஞ் சென்று சிராத்தஞ்செய்து, கங்கை சமுத்திரம் இரண்டுஞ் சேருமிடம் சேர்ந்தார். அதில் ஸ்நானஞ்செய்து, மகேந்திர மலைக்குச் சென்று அவ்விடத்தில் பரசுராமனைத் தரிசித்து நமஸ்கரித்து ஸப்தகோதவரி, வேணி, பம்பா, பீமரதி ஆகிய நதிகளை அடைந்து அவ்விடத்தில் சுப்பிரமண்யரைப் பூஜித்து, அங்கிருந்து பரமசிவனுக்கு இருப்பிடமான ஸ்ரீபர்வதஞ் சென்றார். அதன்பின் திராவிட தேசத்தில் மிக்க புண்ணியகரமான வேங்கடாசலத்தையும், அதில் வசிக்கும் ஸ்ரீ மகாவிஷ்ணுவையும் தரிசித்துக் காமகோடி என்ற காஞ்சி பட்டணஞ் சென்றார். அவ்விடத்திலிருந்து ஸ்ரீரங்கம் சென்றார். அது மிகவும் புண்ணியஸ்தலம்; அவ்விடத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு எப்பொழுதும் சாந்நித்யம் செய்துகொண்டிருக்கிறார். அவ்விடத்தில் காவேரி நதியும் ஓடுகிறது. அவ்விடத்திலிருந்து ரிஷபாத்ரி, ஹரிக்ஷேத்திரம், தென்மதுரை இவைகள் சென்று ராமேசுவரம் சென்றார். அவ்விடத்தில் சமுத்திரத்தில் ஸ்ரீ ராமனால் கட்டப்பட்டிருக்கும் அணையைத் தரிசித்தார். அது மகா பாபங்களையும் போக்கடிக்கக் கூடியது. அவ்விடத்தில் பலராமன் பிராம்மணர்களுக்கு, லட்சம் பசுக்களைத் தானம் செய்தார். பின்பு கிருதமாலா,

தாமிரபரணீ இந்த நதிகளை யடைந்து மலயம் என்ற குல பர்வதம் சென்றார். அவ்விடத்தில் வசிக்கும் அகஸ்திய மக ரிஷியைத் தரிசித்து நமஸ்கரித்து, அவரால் ஆசீர்வதிக்கப் பெற்று அவரிடம் உத்தரவுபெற்று தெற்குசமுத்திரம் சென் றார். அவ்விடத்திலிருக்கும் கன்னியா என்ற துர்க்கா தேவி யைத் தரிசித்தார். அவ்விடமிருந்து அனந்தபுரம் சென்று பஞ்சாப் ஸரஸம் என்ற தீர்த்தஞ் சென்றார். அதில் விஷ்ணு வின் ஸான்னித்யம் எப்பொழுதும் இருக்கிறது. அதில் ஸ்நானஞ்செய்து லட்சம் பசுக்களைத் தானஞ்செய்தார். பின்பு அவ்விடமிருந்து கேரளம், ஸோமகர்த்தகம் என்ற தேசங்களை அடைந்து, கோகர்ணமென்ற சிவக்ஷேத்திரம் சென்றார். அவ்விடத்தில் பார்வதியைத் தரிசனஞ்செய்து சூர்ப்பாரகமென்ற க்ஷேத்திரஞ் சென்றார். அவ்விடமிருந்து தாபி, பயோஷ்ணி, நிர்விந்தியா என்ற நதிகளில் ஸ்நானஞ் செய்து தண்டகைக்குச் சென்று ரேவாநதியை அடைந்தார். அதன் கரையில் மாஹிஷ்மதி என்ற பட்டணமிருக்கிறது. அவ்விடமிருந்து மனுதீர்த்தஞ்சென்று திரும்பவும் பிரபாஸ க்ஷேத்திரம் வந்தார். அவ்விடத்திலுள்ள பிராம்மணர்கள் "கௌரவர்களும் பாண்டவர்களும் யுத்தம் செய்ததால் எல்லா அரசர்களும் மரணமடைந்தார்கள்" என்று சொல்லிக் கொண்டார்கள். அதனைக் கேட்ட பலராமன் பூமியின் சுமை நிவர்த்தியாயிற்று என்று நினைத்தார். மேலுமவர் பீமன், துரியோதனன் ஆகிய இருவர்களும் கதாயுத்தஞ் செய்து கொண்டிருப்பதைத் தடுக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் குருக்ஷேத்திரஞ் சென்றார். தர்மபுத்திரர், அர்ச்சுனன், நகுல சகாதேவர்கள் ஆகிய இவர்கள் பலராமனைக் கண்டு நமஸ்கரித்து எதைச்சொல்வதற்கு வந்திருக்கிறாரோ என்று நினைத்து மௌனமாக இருந்தார்கள்.

26—29. அந்தச் சமயத்தில் துரியோதனனும் பீமசேனனும் கதாயுதத்தை யெடுத்துக்கொண்டு மிக்க கோபத்துடன் ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் மண்டலம் முதலிய கதி விசேஷங்களைக் காட்டி யுத்தஞ் செய்துகொண்டிருந்தார்கள். பலராமன் அவர்களைப் பார்த்து, "ஓ துரியோதன! ஓ பீமசேன! உங்களில் ஒருவர் மிக்க பலமுள்ளவர்; மற்றொருவர் கதாயுதத்தை நன்றாய் அப்பியசித்தவர்; ஆனதால் நீங்களிருவர்களும் சமமான பராக்கிரமமுள்ளவர்கள். அதனால் ஜயமாவது அபஜயமாவது உண்டாகவில்லை. வீணில் சண்டை செய்வதில் என்ன பிரயோசனம்? யுத்தத்தை நிறுத்திவிடுங்கள்" என்று சொன்னார். அதனைக் கேட்டும் அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் முன் நடந்த கெட்ட நடையையும், துஷ்ட வார்த்தையையும் நினைத்துக்கொண்டு பலராமனுடைய வார்த்தையை அங்கீகரிக்கவில்லை. அப்பொழுது பலராமன், "இவர்களுடைய முன்ஜன்மத்திய கர்மவசத்தால் நம்முடைய வார்த்தையை இவர்கள் கேட்கவில்லை" என்று நினைத்து துவாரகா நகரஞ் சென்று உக்கிரசேனர் முதலிய பந்துக்களுடன் சேர்ந்தார்.

30—34. பின்பு பலராமன் நைமிசாரண்யத்திற்குத் திரும்பவும் வந்தார். அவ்விடத்திலுள்ள மகரிஷிகள் யக்ஞ சுரூபியும் ஒருவரிடத்திலும் விரோத புத்தி இல்லாதவருமான அவருக்கு யாகஞ்செய்வித்தார்கள். அந்த மகரிஷிகளுக்குப் பலராமன் சுத்தமான ஆத்மஞானத்தைக் கொடுத்தார் (உபதேசித்தார்). அந்த ஞானத்தால் சகல ஜகத்தையும் ஆத்மாவிடத்திலும், ஆத்மாவை சகல ஜகத்திலும் இருப்பதாகப் பெரியோர்கள் பார்க்கிறார்கள். இப்படி பலராமன் தமது பத்னியுடனும், பந்துக்களுடனும், சிநே

கிதர்களுடனும் அவபிருத ஸ்நானஞ்செய்து வஸ்திரம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பெற்றுச் சந்திரிகையுடன் சந்திரன் விளங்குவதுபோல் பிரகாசித்தார். மிக்க பலிஷ்டரும், நாசமற்றவரும், அளவற்ற மகிமையுள்ளவரும், மாயையால் மனித வடிவங் கொண்டவருமான பலராமனுடைய சரிதங்கள் இம்மாதிரி அளவற்றவையாக இருக்கின்றன. அப்படிப்பட்ட பலராமனுடைய சரிதங்களைக் காலையிலும் மாலையிலும் எவன் தியானஞ்செய்கிறானோ, அவனிடத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு பிரியப்படுவார்.

---

## அத்தியாயம் 80

### குசேல சரித்திரம்

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! மகாத்மாவாயும் அளவற்ற வீரியமுள்ளவருமான ஸ்ரீகிருஷ்ணன் இன்னும் எவைகளைச் செய்தாரோ, அந்த அற்புதமான சரிதங்களைக் கேட்க விரும்புகிறேன். ஓ பிராம்மண! ஆசையாகிய பாணத்தால் அடிக்கப்பட்டு துக்கத்தை யடைந்தவனும், பகவத் கதையின் சாரத்தை அறிந்தவனுமான எவன் உத்தம சுலோகராகிய பகவானுடைய அற்புதமான சரிதங்களைக் கேட்டுப் போதுமென்ற திருப்தியை அடைவான்? எது பகவானுடைய குணங்களைச் சொல்லுகிறதோ அதுவே வாக்காகும். எவைகள் பகவானைப் பூஜிக்கின்றனவோ, அவைகளே கைகள். தாவரங்களிலும் ஜங்கமங்களிலும் வசிக்கும் பகவானை எது தியானஞ் செய்கிறதோ அதுவே மனம். அவருடைய புண்ணியமான கதைகளை எது கேட்கிறதோ, அதுவே காது. தாவரமாகவும் ஜங்கமமாகவுமிருக்கிற பகவானுடைய பிம்பத்தை எது

நமஸ்கரிக்கிறதோ அதுவே தலை. அந்தந்த பகவத் சுவ ரூபத்தை எது தர்சிக்கிறதோ, அதுவே கண். பகவா னுடையவும் பக்தர்களுடையவும் பாத தீர்த்தத்தை எவை அடைகின்றனவோ, அவைகளே அவயவங்கள். ஆனதால் கிருஷ்ணனுடைய சரிதத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

5—11. அதனைக் கேட்ட சுகர், ஸ்ரீ கிருஷ்ணனை மனத்தில் தியானஞ்செய்து பின்வருமாறு சொல்லலானார். எப்படியெனில்— "ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் குசேலரென்று ஒரு பிராம்மணர் தோழராக இருந்தார். அவர் பிரம்மத்தை அறிந்தவர்களுக்குட் சிறந்தவர்; இந்திரியங்களின் விஷயங் களான ரூபம் முதலியவைகளில் ஆசையற்றவர்; இந்திரியங் களை ஜயித்தவர்; மனதை யடக்கியவர்; தெய்வச்செயலால் கிடைத்ததைக்கொண்டு ஜீவிப்பவர்; அவருடைய பத்னி யாகிய குசேலா என்பவளும் தெய்வச்செயலால் கிடைத்த அன்னத்தைப் பர்த்தாவாகிய குசேலருக்குக் கொடுத்துத் தான் போஜனஞ் செய்யாமல் பசியால் வருத்தப்பட்டவ ளாகவே இருந்தாள். அந்தப் பதிவிரதையான குசேலா என்பவள் ஒரு நாள் பர்த்தாவை நோக்கி பயத்தால் நடுக்க மடைந்து துக்கித்து, "ஓ பிராம்மண! உமக்கு லக்ஷ்மீபதி யாகிய ஸ்ரீ கிருஷ்ணன் தோழரல்லவா? அவர் பிராம்மண பக்தியுள்ளவர்; சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுகிறவர்; ஓ மிகுந்த அதிருஷ்டமுள்ளவரே! சாதுக்களுக்குக் கதியா யுள்ள அந்தப் பகவானிடம் சென்றால் குடும்பியும், ஏழையு மான உமக்கு ஏராளமான பணத்தைக் கொடுப்பார். அந்தப் பகவான் இப்பொழுது போஜர்களுக்கும் விருஷ்ணிகளுக் கும் அதிபதியாகத் துவாரகா நகரத்தில் வசிக்கிறார். அவர் தம்முடைய பாதாரவிந்தத்தைத் தியானிப்பவர்களுக்குத்

தமது ஆத்மாவையும் கொடுக்கிறார். அப்படியிருக்க ஜகத்திற்கு அதிபதியாகிய அந்த பகவான் விஷயசுகத்தைக் கொடுப்பார் என்பதில் என்ன சந்தேகம்?" என்று சொன்னாள்.

12—26. இப்படிப் பத்னியால் பலவாறாகப் பிரார்த்திக்கப்பட்டுக் குசேலர், "உத்தம சுலோகராகிய பகவானைத் தரிசிப்பதே மேலான லாபம்" என்று நினைத்து, துவாரகைக்குப் போக நிச்சயித்தார். பின்னுமவர் பத்தினியை நோக்கி, "ஓ நல்ல சுபாவமுள்ளவளே! நம்முடைய கிருகத்தில் பகவானுக்குக் கொடுக்கக்கூடிய வஸ்து ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டார். அதனைக் கேட்ட அவள் நாலு பிடி அவலரிசியைப் பிறரை யாசித்து வாங்கி, அதனைக் கந்தைத்துணியில் முடிந்து பர்த்தாவிடம் கொடுத்தாள். அந்தப் பிராம்மணசிரேஷ்டர் அதனை வாங்கிக்கொண்டு, "ஸ்ரீ கிருஷ்ணனுடைய தரிசனம் எனக்கு எப்படிக் கிடைக்கும்?" என்று யோசித்துக்கொண்டு துவாரகா நகரஞ் சென்றார். அந்த நகரத்தில் மூன்று குல்மங்களையும் (சைனியங்களிருக்குமிடம்) மூன்று வீதிகளையும் தாண்டிச்சென்றார். அவ்விடத்தில் கிருஷ்ணபக்தர்களான அந்தகர்கள், விருஷ்ணிகள் இவர்களுடைய கிருகங்கள் இருக்கின்றன. அவ்விடத்தில் சாமானிய ஜனங்கள் போகமுடியாது. அதற்கப்புறம் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பதினாறு ஆயிரம் ஸ்திரீகளுடைய அந்தப்புரங்களிருக்கின்றன. அதற்குள் மிக்க அழகு பொருந்திய ஒரு கிருகத்தில் குசேலர் பிரவேசித்தார். அப்பொழுது பிரம்மானந்தத்தை அடைந்தவர்போல இருந்தார். அவ்விடத்தில் ருக்மிணியினுடைய கட்டிலில் உட்கார்ந்திருந்த ஸ்ரீ கிருஷ்ணன் வெகுதூரத்திலேயே குசேலரைக் கண்டு சீக்கிரமாய் எழுந்திருந்து எதிரில் வந்து இரு கைகளாலும் கட்டிக்கொண்டார். இம்மாதிரி தாமரைக் கண்ண

ளுகிய ஸ்ரீ கிருஷ்ணன் தோழராகிய பிராம்மணனை ஆலிங்கனஞ்செய்து அவருடைய சரீர ஸ்பரிசத்தால் அதிக ஆனந்தத்தை யடைந்து ஆனந்தக்கண்ணீரைப் பெருக்கினர். பின்பு குசேலரைத் தம்முடைய கட்டிலில் உட்காரவைத்து, பூஜாத்திரவியங்களைக் கொண்டுவந்து குசேலருடைய பாதங்களை அலம்பி, அந்த ஜலத்தைத் தம்முடைய சிரஸில் புரோக்ஷித்துக்கொண்டார் (சகல லோகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறவராலும்). பின்னும் ஸ்ரீ கிருஷ்ணன் திவ்யமான வாசனையுள்ள குங்குமப்பூ சேர்ந்த சந்தனத்தைத் தமது கையால் பூசி, வாசனையுள்ள தூபங்களாலும், தீபத்தாலும் தோழராகிய குசேலரைப் பூஜித்தார். அதன்பின் தாம்பூலங் கொடுத்து, நல்வரவாவென்று கேட்டார். அப்பொழுது ருக்மிணிதேவி சாமரத்தை யெடுத்து அழுக்கடைந்த வஸ்திரமுள்ளவரும், சரீரம் இளைத்திருப்பதால் வெளியில் தெரிகின்ற நரம்புகள் உள்ளவருமான குசேலரை விசிறினள். இப்படி சுத்தமான கீர்த்தியுள்ள ஸ்ரீகிருஷ்ணனால் பூஜிக்கப்பட்ட குசேலரைக் கண்டு அந்தப்புர ஜனங்கள் மிகவும் ஆச்சரியமடைந்து, பிக்ஷுகனும், பணமில்லாதவனும், அழகில்லாதவனுமான இந்தப் பிராம்மணனல் என்ன புண்ணியம் செய்யப்பட்டதோ? மூன்று லோகத்திற்கும் அதிபதியாகிய லக்ஷ்மீபதியான கிருஷ்ணன் கட்டிலிலிருக்கும் ருக்மிணிதேவியை விட்டுவிட்டுப் பலராமனைப்போல் இந்தப் பிராம்மணரைக் கட்டிக்கொண்டார்" என்று சொல்லிக்கொண்டார்கள்.

27—43. பின்பு ஸ்ரீகிருஷ்ணனும் குசேலரும் ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக்கொண்டு தாங்கள் குருகுலவாசம் செய்யும்பொழுது நடந்த கதைகளைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள். அப்பொழுது கிருஷ்ணன் குசேலரை

நோக்கி, "ஓ பிராம்மணா! ஆசிரியருடைய கிருகத்தில் வசித்து, அவரிடம் விடை பெற்றபின் ஸமாவர்த்தனஞ் செய்துகொண்டு உமக்குத் தகுதியான பெண்ணைக் கல்யாணஞ் செய்துகொண்டீரா, இல்லையா? பெரும்பாலும் உம்முடைய மனது விஷயங்களை விரும்புகிறதில்லை. ஓ வித்வானுகிய தோழனே! பணத்திலும் உமக்கு ஆசை இல்லையென்பது எனக்குத் தெரியும். நான் எப்படி லோகங்களைக் காப்பாற்றுவதற்காக ஒன்றையும் விரும்பாமல் சகல கர்மங்களையும் செய்கிறேனே, அப்படி சிலர் கர்மங்களை அனுஷ்டிப்பார்கள். ஓ பிராம்மணா! நாமிருவரும் ஆசிரியருடைய கிருகத்தில் வசித்து வித்தியாப்பியாசஞ் செய்தோமல்லவா? அந்த ஞாபகம் உமக்கு இருக்கிறதா? பிராம்மணன் தெரிந்துகொள்ளவேண்டியதை (ஆத்ம தத்வத்தை) அறிந்து, ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறன். எவன் இந்தச் சரீரத்தை யுண்டுபண்ணுகிறனே, அந்த பிதா முதலாவது குருவெனப்படுகிறர். எவர் உபநயனஞ் செய்வித்துக் கர்மங்களை யனுஷ்டிக்கும்படி செய்கிறரோ, அவர் இரண்டாவது குருவாகிறர். அவ்விருவர்களையும் என்னைப்போல் பூஜிக்க வேண்டியதுதான். எல்லாருக்கும் ஞானத்தைக் கொடுப்பவர் மூன்றுவது குரு. (நானே அந்த குரு சுரூபியாக இருக்கிறேன் என்று கருத்து.) இந்த மனுஷ்ய ஜன்மத்தில் வர்ணம் (ஜாதி), ஆசிரமம் இவைகளுள்ள மனிதர்களுக்குள் எவர்கள் உண்மையை அறிந்தவர்களோ, அவர்கள் ஆசாரியசுரூபியான என்னுல் உபதேசிக்கப்பெற்று ஸம்ஸார சமுத்திரத்தைத் தாண்டுகிறர்கள். (ஞானேபதேசஞ் செய்யும் குருவைவிட மேலானவர்களில்லையென்று தாத்பரியம்.) ஆசாரியனுக்குச் சிசுருஷை செய்கிறவனிடத்தில் சகல பிராணிகளின் சுரூபியாக இருக்கும் நான் எப்படி சந்தோஷத்தை அடை

கிறேனே, அப்படி யாகஞ் செய்தவனிடத்திலும், நல்ல குலத்தில் பிறந்தவனிடத்திலும், தபஸ்வியினிடத்திலும், மனத்தை அடக்கியவனிடத்திலும் சந்தோஷப்படுகிறதில்லை. ஓ பிராம்மண ! ஆசாரியனுடைய கிருகத்தில் நாமிருவர்களும் வசித்தபொழுது நடந்த விஷயங்கள் ஞாபகமிருக்கிறதா ? ஆசாரியருடைய பத்னி ஒரு நாள் விறகு வெட்டிவரும்படி நம்மிருவர்களையும் ஆஞ்ஞாபித்தாள். நாமிருவர்களும் விறகு கொண்டுவருவதற்காகக் காட்டிற்குச் சென்றோம். அப்பொழுது மழைக்காலமில்லாதிருந்தும் திடீரென்று மிக்க மழை பெய்தது; காற்றும் வீசியது; மேகங்கள் கடுமையாகச் சப்தித்தன ; கடுமையான இடிகள் விழுந்தன; அப்பொழுது சூரியன் அஸ்தமயத்தை அடைந்தான். இருள் திக்குகளில் பரவியது; எங்கும் ஒரே ஜலமாக இருந்ததால் பள்ளம் மேடு இவை தெரியவில்லை. அந்தச் சமயத்தில் நாமிருவர்களும் காற்று மழையால் உபத்திரவிக்கப்பட்டு ஒருவர்க்கொருவர் கைகளைப் பிடித்துக்கொண்டு கிழக்கு முதலிய திக்குகளை அறியாமல் வனத்தில் சுற்றிக்கொண்டிருந்தோம். அதனையறிந்த சாந்தீபினி என்ற நம்முடைய ஆசாரியர் காலையில் சூரியன் உதயமானவுடன் வனம் வந்து கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் நம்மைப் பார்த்து, " ஓ குழந்தைகளே ! எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவிடத்தில் மிக்க பிரியமிருக்கும். அந்த ஆத்மாவையும் லட்சியஞ் செய்யாமல் நீங்கள் என் விஷயத்தில் மிகவும் துக்கத்தை அடைந்திருக்கிறீர்கள். சுத்தமான எண்ணத்துடன் சகல பிரயோசனத்தையும் உண்டுபண்ணக்கூடிய ஆத்மாவைசமர்ப்பிப்பதே ஆசாரியர்களுக்குச் சிஷ்யர்களால் செய்யக்கூடிய உபகாரம். ஓ பிராம்மண சிரேஷ்டர்களே ! உங்களிடத்தில் நான் சந்தோஷமடைந்தேன். உங்களுடைய எண்ணங்கள்

எல்லாம் பலிக்கட்டும். அயாதயாமென்ற வேதங்கள் (என்னிடம் அத்யயனஞ் செய்யப்பட்ட சுக்ல யஜுர்வேதம்) இவ்வுலகத்திற்கும் பரலோகத்திற்கும் உபயோகப்படட்டும்" என்று அனுக்கிரகித்தார். இம்மாதிரி அநேக காரியங்கள் நாம் ஆசாரியருடைய கிருகத்தில் வசிக்கும்பொழுது நடந்தன. ஆசாரியருடைய அனுக்கிரகத்தால்தான் புருஷன் பூர்ணனாகிறான்" என்றார்.

44—45. அதனைக் கேட்ட குசேலர், "ஓ தேவர்களுக்கும் தேவ! ஜகத்திற்குக் குருவே! உம்முடன் சேர்ந்து நான் குருகுலவாசஞ் செய்ததனால் எதுதான் என்னால் அடையப்படவில்லை? [கிருதார்த்தனாக இருக்கிறேன் என்று கருத்து.] ஓ பிரபுவே! உம்முடைய சரீரமானது வேத சுரூபமானது; சகல க்ஷேமங்களையும் கொடுக்கக்கூடியது. அப்படிப்பட்ட நீர் குருகுலவாசஞ் செய்து, வேதாத்தியயனஞ் செய்தது மிகவும் மனித பாவனையை அனுசரித்தேயாம்" என்று சொன்னார்.

## அத்தியாயம் 81

### பகவான் குசேலருக்கு ஐசுவரியத்தைக் கொடுத்தது

இப்படி குசேலருடன் ஸ்ரீ கிருஷ்ணன் பேசிக்கொண்டு சகல பிராணிகளுடைய எண்ணத்தையும் அறிந்தவரான தால் [இவர் கொண்டுவந்திருக்கும் அவலைக் கொடுப்பதற்கு வெட்கப்படுகிறார் என்பதை அறிந்து] சிரித்தார். மேலும், பிராம்மண பக்தி உள்ளவரும், சாதுக்களுக்குக் கதியுமான அந்தப் பகவான் தோழராகிய குசேலரை அன்புடன் கடாட்சித்து, "ஓ பிராம்மண! உம்முடைய கிருகத்திலிருந்து

எனக்குக் கொடுப்பதற்காக எதனைக் கொண்டுவந்தீர்? பக்தர்கள் சொற்பத்தைக் கொடுத்தாலும் அது எனக்கு அதிகமாகவே யாகும். பக்தியில்லாதவர்கள் ஏராளமாக எனக்குக் கொடுத்தாலும் அதனால் எனக்கு சந்தோஷமில்லை. இலையையாவது, புஷ்பத்தையாவது, பழத்தையாவது, ஜலத்தையாவது, சுத்த சுபாவமுள்ள எவன் பக்தியுடன் எனக்கு சமர்ப்பிக்கிறானோ, அதனை நான் புசிப்பேன்" என்றார்.

6—12. அதனைக் கேட்டுக் குசேலர் மிகவும் வெட்கம் அடைந்து லக்ஷ்மீபதியாகிய பகவானிடத்தில் அந்த அவலைக் கொடுக்காமலேயே தலைகுனிந்திருந்தார். அப்பொழுது சகல பிராணிகளின் அந்தக்கரணத்திற்கு சாட்சியாகவிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் குசேலர் தம்மிடம் வந்திருக்கும் காரியத்தைத் தெரிந்துகொண்டு, "இவர் சம்பத்து வேண்டும் என்ற விருப்பத்துடன் என்னை ஆராதிக்கவில்லை. ஆனாலும் பதிவிரதையான பத்தினியால் பிரார்த்திக்கப்பட்டு, அவளுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி என்னிடம் வந்திருக்கிறார். அதனால் மனிதர்களுக்குக் கிடைக்காத சம்பத்துக்களை இவர்களுக்குக் கொடுக்கிறேன்" என்று யோசித்துக் கந்தைத் துணியில் முடிந்து வைத்துக்கொண்டிருக்கும் அவலை இதென்னவென்று தாமாகப் பிடுங்கிக்கொண்டார். பின்னுமவர் அதை எடுத்து, "ஓ தோழ! அவலில் எனக்குப் பிரியமன்றோ? சகல ஜகத் சுரூபியான எனக்கு இந்த அவலால் விசேஷ திருப்தியுண்டாகும்" என்று சொல்லி, ஒரு பிடி அவலை எடுத்துப் புசித்து இரண்டாவது பிடி எடுத்துப்புசிக்க யத்தனித்தார். அதனைக்கண்ணுற்ற ருக்மிணி தேவி, சீக்கிரமாகக் கிருஷ்ணனுடைய கையைப் பிடித்துக் கொண்டாள். மேலுமவள், "ஓ சகல ஜகத் சுரூபியாயிருப்

பவரே! இந்த லோகத்திலும், பரலோகத்திலும், சகல சம்பத்தையும் கொடுப்பதற்கு இதுவே போதுமானது. இதுவே உம்மைச் சந்தோஷப்படுத்தக்கூடியது" என்று சொன்னாள். [இரண்டாவது பிடி அவலையும் நீர் புசித்தால் லக்ஷ்மியாகிய நானும், பிராம்மணனுக்கு சுவாதீனப்பட வேண்டும். முதலில் புசித்த அவலாலேயே என்னுடைய கடாட்சத்தாலுண்டாகும் சம்பத்துக்கள் யாவும் உண்டாயின வென்று கருத்து.]

13—39. குசேலர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கிருகத்தில் அன்றைய ராத்திரி வசித்து, உத்தமமான அன்னத்தைப் புசித்து விசேஷ சுகத்தையடைந்து, தம்மை சுவர்க்கத்தில் இருப்பவராக நினைத்துக்கொண்டார். மறுநாள் காலையில் சகல ஜகத்தையும் காப்பாற்றுகிறவரும், தமது ஆனந்தத்தால் பரிபூர்ணருமான பகவான் குசேலரை நமஸ்கரித்து, கொஞ்ச தூரம் கூடச் சென்று விடை கொடுத்தனுப்பினார். இப்படி பணங்கொடாமல் குசேலரை ஊருக்கு அனுப்பியும், அவர் தோழராகிய கிருஷ்ணனை யாசிக்கவில்லை. மகானுகிய ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்ததால் மிக்க சுகத்தை அடைந்து, வெட்கத்துடன் [தம்முடைய மனத்திற்குண்டான கார்ப்பண்யத்தால்] தம்முடைய வீட்டை நோக்கிப் புறப்பட்டுப் பின்வருமாறு தமக்குள் யோசிக்கலானார். எப்படியெனில், "பிராம்மணர்களைத் தெய்வமாகக்கொண்ட ஸ்ரீ கிருஷ்ணனுக்கு பிராம்மணர்களிடத்திலிருக்கும் பக்தியைப் பார்த்தேன், லக்ஷ்மீதேவியை மார்பில் வைத்துக்கொண்டிருக்கும் பகவான் என்னை ஆலிங்கனஞ் செய்துகொண்டார். தரித்திரனும் பாபியுமான எனக்கும், லக்ஷ்மிக்கு வாசஸ்தலமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் எவ்வளவு தாரதம்யம்

இருக்கிறது? பிராம்மணனென்ற காரணத்தால் என்னைப் பகவான் இருகைகளாலும் ஆலிங்கனஞ் செய்துகொண்டார். மேலுமவர் தம்முடைய சகோதரர்களைப் போல, பத்தினியின் கட்டிலில் உட்காரவைத்தார். ருக்மிணி தேவி சாமரத்தை யெடுத்து விசிறிக் களைப்பை நிவர்த்தித்தாள். பின்னும் ஸ்ரீ கிருஷ்ணன் தேவர்களுக்கு அதிபதியானாலும், என் பாதங்களைப் பிடித்துவிடுவது முதலிய உபசாரங்களைத் தாமே செய்து தேவர்களைப் போல என்னைப் பூஜித்தார். [தேவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜிப்பதுபோல என்னை ஸ்ரீ கிருஷ்ணன் பூஜித்தாரென்றும் தாத்பர்யமுண்டு.] அந்தப் பகவானுடைய பாதத்தைப் பூஜித்தால், சுவர்க்கம், மோக்ஷம் பாதாளத்திலுள்ள சம்பத்து, பூமியிலுள்ள ஐசுவரியம், மற்ற எல்லா சித்திகள் ஆகிய இவை சித்திக்கும். ஆனால் பணத்தை பகவான் நமக்குக் கொடுக்கவில்லை. அதன் காரணமென்னவென்றால் 'தரித்திரனாக இருக்கும் இந்தப் பிராம்மணனுக்குத் தனத்தைக் கொடுத்தால் அதனால் இவர் மதத்தை அடைந்து, என்னை நினைக்கமாட்டார்' என்று என்னிடத்தில் தயையால் சொற்பமான தனத்தையும் கொடுக்கவில்லை'' என்று யோசித்துக்கொண்டே தம்முடைய கிருகத்தின் சமீபம் வந்தார். அந்த வீடானது சூரியன் போலவும், அக்னி போலவும், சந்திரன் போலவும் பிரகாசிக்கும் விமானங்களுள்ளதாக இருந்தது. பலவகையான உத்தியானவனங்களும், விளையாடும் தோட்டங்களும், அவைகளில் சப்தித்துக்கொண்டு பல பறவைகளுமிருந்தன. குமுதம், தாமரை, செங்கழுனீர் முதலிய புஷ்பங்கள் மலர்ந்து, அவற்றின் வாசனையுள்ள ஜலத்தால் பூர்ணமான குளங்களும் இருந்தன. மேலும் புருஷர்களும், ஸ்திரீகளும் சிறந்த வஸ்திரம், ஆபரணம் முதலியவைகளால் அலங்

கரிக்கப் பெற்றிருந்தார்கள். அந்தக் கிருஹத்தைக் கண்ணுற்ற குசேலர், "இது யாருடைய கிருஹம்? நம்முடைய கிருஹம் எப்படி இம்மாதிரி ஆயிற்று?" என்று சந்தேஹித்துக்கொண்டிருக்கும்போது அந்தப் பிராம்மணனைத் தேவர்கள் போன்ற புருஷர்களும், ஸ்திரீகளும் வாத்தியங்களை முழக்கிக்கொண்டும், பாடிக்கொண்டும் எதிரில் சென்று அழைத்தார்கள். அப்பொழுது குசேலருடைய பத்தினியானவள் பர்த்தா வருகிறார் என்பதைக் கேள்விப்பட்டு, பக்தி விசேஷத்தால் மிக்க பரபரப்புள்ளவளாகி, மனித வடிவங்கொண்ட லக்ஷ்மீதேவி போல் கிருஹத்தினின்று வெளியில் வந்தாள். பதிவிரதையான அந்தப் பெண்மணியானவள் பர்த்தாவைப் பார்த்து மிக்க பிரியத்தால் பெருகிய ஆனந்தக் கண்ணீருள்ளவளாகிக் கண்களை மூடிக்கொண்டு நமஸ்கரித்தாள். மனத்தால் ஆலிங்கனஞ் செய்துகொண்டாள். ஸுவர்ண மாலைகளைத் தரித்த வேலைக்காரிகள் அவளைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய நடுவில் தேவஸ்திரீபோலப் பிரகாசிக்கும் பத்தினியைப் பார்த்துக் குசேலர் ஆச்சரியத்தை அடைந்து, பத்தினியுடன் தமது கிருஹத்திற்குட் சென்றார். அந்த கிருஹம் அநேக ரத்தின ஸ்தம்பங்களால் மகேந்திரனுடைய கிருஹம்போல விளங்கிற்று. மேலும், அவ்விடத்தில் பாலின் நுரைபோன்ற படுக்கைகளும், ஸ்வர்ணமயமான ஸாமக்ரிகளுள்ள தந்தக் கட்டில்களும், தங்கப் பிடியுள்ள சாமரங்களும், [illegible] ஆஸனங்களும், மிருதுவான விரிப்புகளும், [illegible] பிரகாசிக்கும் [illegible] [illegible]

களாகவும் இருந்ததனால் ரத்ன தீபங்களும், ஸ்திரீகளும் அவைகளில் பிரதிபலித்தார்கள். இம்மாதிரி சகல சம்பத்து களும் பூர்ணமாக இருப்பதைக் கண்டு குசேலர், 'தமக்கு உண்டான சம்பத்திற்குக் காரணமின்னது' என்று அறியா மல் ஸ்திர சித்தமுள்ளவராகப் பின்வருமாறு யோசிக்கலா னார்: எப்படியெனில் அதிருஷ்டமில்லாதவனும், எப்பொழு தும் தரித்திரனுமாகிய எனக்கு சம்பத்து உண்டாவதற்கு மிகுந்த ஐசுவரியமுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுடைய தரிசனமே காரணமாக இருக்கவேண்டும். அதை விட வேறொன் றும் காரணமாக இருக்க நியாயமில்லை. தாசார்ஹர்களுள் சிறந்தவரும், என்னுடைய தோழருமான ஸ்ரீகிருஷ்ணன் மிக்க ஐசுவரியமுள்ளவர். [ஆப்தகாமன், லக்ஷ்மீபதி] நேரில் சொல்லாமலேயே மேகம்போல பக்தர்களுக்கு [நேரில் யாசியாமலிருப்பவர்களுக்கு] சம்பத்தைக் கொடுக் கிறார். [சமுத்திரத்தைப் பூர்த்தி செய்யும்படி வர்ஷிக்கும் சுபாவமுள்ள மேகமானது, தான் மிக்க மழையைப் பெய் தாலும் அதனைச் சொற்பமென்று நினைத்து வெட்கத்தால் பகலில் வருஷியாமல் ராத்திரியில் ஜனங்கள் தூங்கும் பொழுது வர்ஷித்து எப்படி வயலை நனைக்கிறதோ, அப்படி பகவான் சகல கர்மங்களையும் அடைந்தவரானதால் தம்மு டைய ஐசுவரியத்தை விட பக்தர்களுக்குக் கொடுக்கும் ஐசு வரியம் குறைந்ததென்றும், அவர்களுடைய பக்தி மேலான தென்றும் நினைத்து, நேரில் சொல்லாமலேயே கொடுக் கிறார் என்று கருத்து.] ஸ்ரீ கிருஷ்ணன் தாம் மிக்க ஐசு வரியத்தை பக்தர்களுக்குக் கொடுத்தாலும் அதனை சொற்ப மென்று நினைக்கிறார். பக்தர்கள் அற்பமாகப் பூஜித்தாலும் அதனை அதிகமாக நினைக்கிறார். மிக்க மகிமை பொருந்திய, வரான பகவான் மிக்க பிரீதியுடன் நான் கொண்டுபோன

அவலைப் பெற்றுக்கொண்டார். ஆனதால் ஒவ்வொரு ஜன்மத்திலும் அந்தப் பகவானிடத்தில் எனக்குப் பிரேமையும், அனுகூலத்தைச் செய்யவேண்டுமென்ற விருப்பமும், உபகாரஞ் செய்யவேண்டுமென்ற எண்ணமும் உண்டாகட்டும். மேலும், நான் அவரையே சேவித்துக்கொண்டும் இருக்க வேண்டும். மிக்க மகிமையுள்ளவரும், குணங்களுக்கிருப்பிடமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய சங்கத்தால் பக்தர்களுடைய சேர்க்கை உண்டாகும். மேலும், பகவான் பணக்காரர்கள் தனகர்வத்தை அடைந்து கெட்டுப்போவார்கள் என்று நினைத்து, நல்ல ஞானமில்லாத பக்தனுக்கு ராஜ்யம் முதலிய பலவகையான சம்பத்துக்களைக் கொடுக்கிறதில்லை. [எனக்கு ஸ்திரமான பக்தியில்லாததால் இவ்வளவு சம்பத்துக்கள் உண்டாயின. ஆனதால் ஸ்திரமான பக்தி உண்டாக வேண்டுமென்று தாத்பர்யம்.] இம்மாதிரியான நிச்சயத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவராகி, விஷய ஆசையை விட்டுவிடுவதற்கு உபாயத்தைச் செய்து, சம்பத்தில் அதிக ஆசை வைக்காமலேயே பத்தினியுடன் போகங்களை அனுபவித்துவந்தார்.

40—42. தேவர்களுக்கும் தேவராகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு பிராம்மணர்களைவிட மேலான தெய்வம் வேறொன்றுமில்லை. இப்படிப் பகவானுடைய சிறந்த தோழராகிய அந்தப் பிராம்மணர் ஒருவராலும் ஜயிக்கப்படாத பகவான் பக்தர்களுக்கு வசப்பட்டிருப்பதைப் பார்த்து, அவரையே தியானஞ்செய்து, அதனால் அகங்காரத்தை நிவர்த்தித்துக் கொண்டு, பகவானிடத்தில் நிரந்தரமாகப் பக்திசெய்து, சாதுக்களால் அடையக்கூடிய மேலான பதத்தை அடைந்தார். பிராம்மணர்களையே தெய்வமாகக்கொண்ட பகவான்

பிராம்மணரிடத்தில் பக்தியுடன் அவலைப் புசித்த இந்த உபாக்கியானத்தை எவன் கேட்கிறானோ, அவனுக்குப் பக வானிடத்தில் பக்தியுண்டாகும். அவன் கர்ம பந்தத்தி லிருந்து நிவர்த்தியடைவான்.

---

## அத்தியாயம் 82

### ஸ்ரீ கிருஷ்ணன் முதலியவர்கள் சூரியகிரகணத்திற்காக குருக்ஷேத்திரஞ் சென்றது

**1—21.** ராமகிருஷ்ணர்கள் துவாரகையில் வசிக்கும் பொழுது சூரியகிரகணம் நேர்ந்தது. பிரளய காலத்தில் சூரியனுடைய பிம்பம் முழுவதும் மறைக்கப்படுவதுபோல அந்த கிரகணம் ஸர்வக்ராஸமாக இருந்தது. இம்மாதிரி கிரகணம் வரப்போகிறதென்று ஜோதிஷ சாஸ்திரத்தை அறிந்தவர்கள் மூலமாகத் தெரிந்துகொண்டு தங்களுக்கு க்ஷேமத்தைச் செய்துகொள்ள விரும்பி எல்லாரும் ஸிய மந்த பஞ்சகமென்ற ஸ்தலஞ் சென்றார்கள். ஆயுதத்தைத் தரித்தவர்களுக்குட் சிறந்தவரான பரசுராமன் முன்னொரு கால் பூமியில் க்ஷத்திரிய வம்சமில்லாமல் செய்யவேண்டி, சகல அரசர்களையும் கொன்று, அந்தவிடத்தில் அவர்களு டைய ரத்தத்தால் ஐந்து மடுக்களை யுண்டுபண்ணினார். மேலும், அந்தப் பரசுராமன் வீரர்களைக் கொன்றதாலுண் டான பாபத்தை நிவர்த்திப்பதற்காக அவிவேகிகள்போல் யாகஞ்செய்தார். உண்மையில் அவருக்குக் கர்ம பந்தமில்லை. ஆனாலும், தாம் பிராயசித்தஞ் செய்துகொள்ளாவிட்டால் மற்றவர்களும் அனுஷ்டிக்கமாட்டார்களென்று எண்ணி, வீரர்களைக் கொன்றவர்கள் இம்மாதிரி பிராயசித்தத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்று ஜனங்களுக்குத் தெரிவித்துக்

கொண்டு யாகத்தைச் செய்தார். அந்த மிகுந்த புண்ய காலத்தில், மிக்க புண்ய ஸ்தலமான அந்த க்ஷேத்திரத்திற்கு பாரதவர்ஷத்திலுள்ள பிரஜைகள் எல்லாரும் வந்தார்கள். விருஷ்ணிகளும், அக்ரூரர், வசுதேவர், ஆஹுகர் முதலியவர்களும் தங்கள் தங்கள் பாபத்தை நிவர்த்தித்துக் கொள்வதற்காக அவ்விடஞ் சென்றார்கள். ஆனால் கதன், பிரத்யும்னர், ஸாம்பன், ஸுசந்திரன், சுகன், ஸாரணன், சேனாதிபதியான கிருதவர்மா இவர்களுடன் அனிருத்தர் துவாரகா நகரத்தைக் காப்பாற்றிக்கொண்டு இருந்தார். (அவர்கள் போகவில்லையென்று கருத்து.) மற்ற யாதவர்கள் தேவ விமானம் போன்ற ரதங்களுடனும், பலவ கதி முதலியவைகளைக் காட்டிக்கொண்டு செல்லுகின்ற குதிரைகளுடனும், மேகம் போன்றனவும், கர்ஜிப்பவையுமான யானைகளுடனும், வித்தியாதரர்கள் போலப் பிரகாசிக்கும் காலாட்படையுடனும், அவர்களுடைய மனைவிகளுடனும் திவ்ய மாலை, வஸ்திரம்முதலிய ஸாமக்ரிகளுடனும் குருக்ஷேத்திரஞ் சென்று தேவர்கள்போலப் பிரகாசித்தார்கள். மிக்க அதிருஷ்டமுள்ளவர்களான அவர்கள் அந்தப் புண்ய காலத்தில் உபவாசமிருந்து ஸ்நானஞ்செய்து வஸ்திரங்களாலும், புஷ்ப மாலைகளாலும், சுவர்ண மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட பசுக்களை பிராம்மணர்களுக்குக் கொடுத்தார்கள். பின்னும் அவர்கள் கிரகணம் விட்டபின்பும் பரசுராமனுடைய மடுக்களில் ஸ்நானஞ் செய்து, "ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் எங்களுக்குப்பக்தியுண்டாகட்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்டு சிறந்த பிராம்மணர்களுக்கு சுவர்ணத்தைக் கொடுத்தார்கள். இப்படி கிருஷ்ணனையே தெய்வமாகக்கொண்ட விருஷ்ணிகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய உத்தரவின்மீது போஜனஞ்செய்து,

அடர்ந்த நிழலுள்ள மரங்களுடைய அடியில் உட்கார்ந்தார்கள். அப்பொழுது அந்த யாத்திரைக்காக மத்ஸ்யர்கள், உசீனரர்கள், கோசல தேசத்தார்கள், விதர்ப்பர்கள், கௌரவர்கள், ஸிருஞ்ஜயர்கள், காம்போஜர்கள், மத்திரர்கள், கேகயர்கள், குந்திகள், ஆரட்டர்கள், கேரளர்கள், முதலியவர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் விருஷ்ணிகளுக்கு மித்திரர்களும், சம்பந்திகளும், பந்துக்களுமாக இருந்ததினால் அவர்களைச் சந்தித்தார்கள். மேலும், நந்தன் முதலிய மித்திரர்களையுங் கண்டார்கள். யசோதை முதலிய கோபிகைகளையுங் கண்டார்கள். இம்மாதிரி ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டதனால் விசேஷ சந்தோஷத்தை அடைந்து, முகம் மலர்ந்தவர்களாகி, மயிர்க்கூச்சலடைந்து, ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கிக் கண்களால் ஆலிங்கனஞ் செய்துகொண்டு ஆனந்தத்தை அடைந்தார்கள். ஸ்திரீகள் ஸ்திரீகளைக் கண்டு அன்புள்ள கடைக்கண் பார்வையால் கடாக்ஷித்து, ஸ்தனங்கள் ஸ்தனங்களில் படும்படி ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். அவர்களில் பெரியோர்களைச் சிறியவர்கள் நமஸ்கரித்தார்கள். நல்வரவா? க்ஷேமமா? என்று விசாரித்து ஒருவருக்கொருவர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதையைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். குந்திதேவியானவள் சகோதரர்களையும், சகோதரிகளையும், அவர்களுடைய பெண் பிள்ளைகளையும், தாய் தந்தைகளையும், சகோதர பத்தினிகளையும், ஸ்ரீ கிருஷ்ணனையும் தரிசித்துத் துக்கத்தை விட்டாள். அப்பொழுது குந்தி வசுதேவரை நோக்கி, "அண்ணா! என்னுடைய ஆபத்துக் காலங்களில் என்னை நினைக்காமலும், என் வார்த்தையைப் பேசாமலும் நீங்களிருப்பதால் நான் அதிருஷ்டமில்லாதவளென்று நினைக்கிறேன். எவனுக்குத் தெய்வம் அனுகூலமாக இருக்கவில்லையோ,

அவனை மித்திரர்களும், பந்துக்களும், புத்திரர்களும், தாய் தந்தைகளும் நினைக்கமாட்டார்கள்" என்றாள்.

22—23. அதனைக் கேட்ட வசுதேவர் குந்தியை நோக்கி, "ஓ அம்ம! எங்களிடத்தில் நீ கோபிக்கவேண்டாம். சகல ஜனங்களும் ஈசுவரனுக்கு வசப்பட்டு, எல்லாக் காரியங்களையும் செய்கிறார்கள். சாமானிய ஜனங்களுக்கு பொம்மை முதலியவை எப்படி விளையாட்டுச் சாமானாக இருக்கின்றனவோ, அப்படி ஜனங்கள் பகவானுக்கு விளையாட்டுக் கருவிகளாக இருக்கிறார்கள். நாங்களெல்லாரும் கம்ஸனால் உபத்திரவிக்கப்பட்டு, ஒவ்வொரு திக்குகளிலும் பயந்து சென்றிருந்தோம். இப்பொழுதுதான் தெய்வச்செயலாக இருப்பிடம் வந்தோம்" என்றார்.

24—32. இம்மாதிரி வசுதேவர், உக்ரசேனர் முதலிய யாதவர்களால் கௌரவர்கள் பூஜிக்கப்பெற்று ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்து மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள். பீஷ்மர், துரோணர், திருதராஷ்டிரர், காந்தாரி, அவளுடைய புத்திரர்கள், பாண்டவர்கள், அவர்களுடைய ஸ்திரீகள், குந்திதேவி, சஞ்சயர், விதுரர், கிருபர், குந்திபோஜர், விராடர், பீஷ்மகர், மகானாகிய நக்னஜித், புருஜித், துருபதர், சைப்யர், திருஷ்டகேது, காசிராஜன், அகலமான கண்களுள்ள தமகோஷன், மைதிலன், மத்ரன், கேகயன், யுதாமன்யு, ஸுசர்மா, பாஹ்லிகன் முதலியவர்களும், அவர்களுடைய புத்திரர்களும், தர்மபுத்திரரைச் சார்ந்த மற்ற அரசர்களும், லக்ஷ்மிக்கு வாசஸ்தலமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய திவ்ய சரீரத்தைத் தரிசித்து ஆச்சர்யமடைந்தார்கள். மேலும், அவர்கள் ராமகிருஷ்ணர்களால் பூஜிக்கப்பெற்று, கிருஷ்ணனுடைய அனுக்ரகம்பெற்ற விருஷ்ணிகளைப் பின்

வருமாறு சிலாகித்தார்கள். எப்படியெனில், "ஓ போஜதேசத் தாசனே! எல்லா மனிதர்களுக்குள் உங்களுடைய ஜன்மமே பயனுள்ளது. யோகிகளாலும் பார்க்க முடியாதவரான ஸ்ரீ கிருஷ்ணனை நேரில் எப்பொழுதும் தரிசித்துக்கொண்டிருக்கிறீர்கள். வேதங்களால் துதிக்கப்பெற்ற எந்தப் பகவானுடைய கீர்த்தியானது சகல லோகத்தையும் பரிசுத்தப் படுத்துகிறதோ, எவருடைய பாதத்திலிருந்து உண்டான ஜலமானது (கங்கை) ஜகத்தைச் சுத்தப்படுத்துகிறதோ, எவருடைய வார்த்தையானது (வேதம்) எல்லா லோகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறதோ, காலத்தால் பூமியின் சக்தி கெடுக்கப்பட்டிருந்தாலும் எவருடைய பாதஸ்பரிசத்தால் மிக்க சக்தியுள்ளவளாகிப் பூமி எங்களுக்கு எல்லா வஸ்துக்களையும் உண்டுபண்ணுகிறுளோ, அப்படிப்பட்ட ஸ்ரீமந் நாராயணன், விஷயங்களில் ஆசைகொண்டு ஸம்ஸாரிகளாக இருக்கும் உங்களுடைய கிரகத்தில் தாமாக அவதரித்திருக்கிறார். அதனால் அவருடைய தரிசனம் எப்பொழுதும் உங்களுக்குக் கிடைக்கிறது. அவரை ஆலிங்கனஞ் செய்துகொள்கிறீர்கள்; அவர்பின் செல்லுகிறீர்கள்; அவருடன் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்; அவருடன் படுக்கிறீர்கள்; அவருடன் சேர்ந்து உட்காருகிறீர்கள்; அவருக்கு ஞாதிகளாகவும் (ஸபிண்டர்கள்), மைத்துனன், மணப்பிள்ளை முதலிய சம்பந்தமுள்ளவர்களாகவு மிருக்கிறீர்கள்; அப்படிப்பட்ட உங்களுக்குப் பகவான் சுவர்க்க சுகம், மோக்ஷ சுகம் இவைகளுக்கும் அதிகமான ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கிறார். அதனால் உங்களுடைய பிறப்பே மேலானது" என்று சொன்னார்கள்.

33—40. கிருஷ்ணன் முதலிய யாதவர்கள் வந்திருப்பதை நந்தர் கேள்விப்பட்டு வண்டிகளில் ஸாமக்ரிகளை ஏற்றி

வைத்துக்கொண்டிருக்கும் கோபர்களுடன் அவர்களைப் பார்ப்பதற்காக யாதவர்களிருக்குமிடம் வந்தார். அவரைக் கண்டு விருஷ்ணிகள் மிக்க சந்தோஷத்துடன் எழுந்திருந் தார்கள். அது பிராணனைக் கண்டவுடன் இந்திரியங்கள் சந்தோஷத்தை அடைந்தாற்போலிருந்தது. பின்னுமவர் கள் நந்தரைப் பார்த்து வெகு நாளாகிவிட்டதனால் மிக்க ஆவலுடன் ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். அப் பொழுது வசுதேவர் நந்தரைத் தழுவி, கம்ஸன் செய்த உபத் திரவங்களையும், அதனால் கிருஷ்ணனைக் கோகுலத்தில் வைத்திருந்ததையும் நினைத்து, அப்படிப்பட்ட ஆபத்துக் காலத்தில் தமக்கு நந்தர் மிக்க உபகாரஞ் செய்தாரென்ற பிரியத்தால் ஒன்றுஞ் சொல்லமுடியாதவராக இருந்தார். ராமகிருஷ்ணர்களும் நந்தருக்கும், யசோதைக்கும் நமஸ் காரஞ்செய்து, பிரியத்துடன் அவர்களைத் தழுவி, ஆனந்தத் தால் கண்டமடைத்து மௌனமாக இருந்தார்கள் நந்தரும் யசோதையும் அந்தக் குழந்தைகளை மடியில்வைத்துக் கட்டிக்கொண்டு வெகு நாளாகப் பார்க்காமலிருந்ததாலுண் டான துக்கத்தை நிவர்த்தித்துக்கொண்டார்கள். ரோஹிணி யும், தேவகியும் யசோதையை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, அவளால் செய்யப்பட்ட உபகாரத்தை நினைத்து, "ஓ கோகு லத்திற்கு அதிபதியாக இருப்பவளே! எங்களிடத்தில் நீ வைத்திருந்த பிரியத்தை எவள் மறந்துவிடுவாள்? மஹேந் திரனுடைய ஐசுவரியத்தைக் கொடுத்தாலும் அதற்குப் பதி லாகாது. தாய் தந்தைகள் இன்னாரென்று தெரிந்துகொள் ளக்கூடாத வயதிலேயே இந்த ராமகிருஷ்ணர்களை உன் னிடத்தில் அனுப்பினோம். அப்படிப்பட்ட குழந்தைகளைப் பிரியமாகக் கண்களை இமைபோலக் காப்பாற்றினை யல்லவா?

சாதுக்களுக்குத் தங்களைச் சார்ந்தவர்கள், பிறர் என்ற பேத புத்தி இல்லை. ஆனதால் இந்தக் குழந்தைகள் உன்னுடைய கிருகத்தில் சுகமாக வசித்தார்கள். இப்படிப்பட்ட உபகாரத்திற்குப் பதில் செய்யமுடியாது" என்று சொன்னார்கள்.

41—48. கோபிகைகள் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு வெகு நாளாகிவிட்டதனால் மிக்கப் பிரியத்துடன் தரிசித்துக் கண் கொட்டாமல் நிந்தித்தார்கள். மேலும் அவர்கள் மனத்தில் பகவானைத் தியானஞ்செய்து தன்மயமானார்கள். அது யோகிகளுக்கும் கிடைக்காதது. கிருஷ்ணனும் அப்படிப்பட்ட கோபிகைகளிடம், மற்றவர்கள் இல்லாதவிடத்தில் சென்று, அவர்களைத் தழுவி க்ஷேமம் விசாரித்து, சிரித்துக் கொண்டு " ஓ தோழிகளே ! நாம் சத்துருக்களைக் கொன்று பந்துக்களுக்கு க்ஷேமத்தைச் செய்வதற்காகக் கோகுலத்தை விட்டுச் சென்றோம். அவ்விடத்தில் தாமதித்தோம். அப்படிப்பட்ட எங்களுடைய ஞாபகம் உங்களுக்கு இருக்கிறதா ? எங்களை நன்றி மறந்தவர்களென்று அலட்சியம் செய்யாமலிருக்கிறீர்களா ? காற்று மேகங்களை எப்படி சில காலம் சேர்க்கிறதோ, சில காலம் பிரித்துவிடுகிறதோ, திருணங்களையும், பஞ்சுகளையும், தூளிகளையும் எப்படிக் காற்று சேர்த்துக்கொண்டும் பிரித்துக்கொண்டும் இருக்கிறதோ அப்படி பகவான் பிராணிகளைச் சில காலம் சேர்த்து வைக்கிறார்; சில காலம் பிரித்துவிடுகிறார்; திரும்பவும் சேர்த்து வைக்கிறார். பிராணிகள் என்னிடத்தில் பக்தி செய்தால் அது மோக்ஷத்தைக் கொடுக்கும். நீங்கள் என்னிடத்தில் செய்த பக்தியானது என்னையே உங்களுக்குக் கொடுத்தது. [மோக்ஷத்தைக் காட்டிலும் மேலானதென்று தாத்பரியம்.] இது தெய்வச் செயலேயாம். ஆகாயம், ஜலம், வாயு, தேஜஸ், பூமி இவைகள் எப்படி பூதங்களாலுண்டாகும்

வஸ்துக்களுக்கு ஆதியாகவும், அந்தமாகவும், உள்ளாகவும், வெளியாகவும் இருக்கின்றனவோ, அப்படி எல்லாப் பிராணிகளுக்கும் நான் ஆதியாகவும், அந்தமாகவும், உள்ளாகவும், வெளியாகவும் இருக்கிறேன். இப்படி நான்கு வகையான பிராணிகள் தங்களுக்குக் காரணங்களான ஆகாயம் முதலிய பூதங்களில் இருக்கின்றன. ஆத்மாவானது அந்த பூதங்களில் போக்தாவாக [அனுபவிப்பவனாக] இருக்கிறது. அவைகள் இரண்டும் அக்ஷரனாகிய என்னிடத்தில் தோன்றுகிறதைப் பாருங்கள்" என்று சொன்னார்.

49—50. இப்மாதிரி கிருஷ்ணன் ஆத்ம வித்தையை கோபிகைகளுக்கு உபதேசிக்க, அதனைத் தியானஞ்செய்து அதனால் லிங்க சரீரத்தை நிவர்த்தித்துக்கொண்டு, பகவத் சுரூபத்தை அடைந்தார்கள். மேலும் அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "ஜகத்திற்குக் காரணமான தாமரை மலரைத் தொப்புளில உடையவரே! உம்முடைய பாதாரவிந்தமானது மிக்க ஞானிகளான யோகிகளால் தியானஞ் செய்யக் கூடியது. ஸம்ஸாரமாகிய பாழுங் கிணற்றில் விழுந்தவர்களை மேலே தூக்கிவிடக்கூடியது; அப்படிப்பட்ட பாதமானது ஸம்ஸாரிகளான எங்களுடைய மனதில் எப்பொழுதும் இருக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

---

## அத்தியாயம் 83

### திரௌபதியும் ருக்மிணி முதலியவர்களும் பேசிக்கொண்டது.

1—4. கோபிகைகளுக்கு குருவும், கதியுமான பகவான் அவர்களுக்கு அனுக்கிரகஞ் செய்துவிட்டு, தர்மபுத்திரர்

முதலிய எல்லா பந்துக்களையும் க்ஷேமம் விசாரித்தார். இப்படி லோகநாதனுகிய ஸ்ரீ கிருஷ்ணனால் கேட்கப்பட்டும், பூஜிக்கப்பட்டவர்களுமான அவர்கள் பகவானுடைய பாதங்களைத் தரிசித்து, சுத்தர்களாகி மிக்க சந்தோஷத்துடன் "ஓ பிரபுவே! பெரியோர்கள் மனத்திலிருந்து அவர்கள் முகமாகப் பெருகிவரும் உம்முடைய பாதமாகிய தாமரை மலரின் மதுவை எவர்கள் பானஞ் செய்கிறார்களோ, [உமமுடைய சரித்திரத்தைப் பெரியோர்கள் முகமாகக்கேட்பவர்களென்று கருத்து.] அவர்களுக்கு க்ஷேமங் குறைவு உண்டாகுமா? தேகத்தைக் கொடுக்கக்கூடியதும், உம்மை மறக்கச்செய்யக்கூடியதுமான அவித்தையை அது [உம்முடைய சரித்தைக்கேட்பது] நாசஞ்செய்கிறது; புத்தியின் குணத்தால் ஏற்படும் மூன்று அவஸ்தைகளை நீர் கடந்தவர்; [ஜாக்ரத், ஸ்வப்பனம், சுஷுப்தி என்பது உமக்கில்லை என்று தாத்பர்யம்.] ஆனந்த சுரூபி; காலத்தாலும், தேசத்தாலும் அளவிடக்கூடாதவர்; தடையற்ற ஞானமுள்ளவர்; ஆனால் கால மகிமையால் வேதங்களுக்குக் கெடுதி நேரும்பொழுது தம்முடைய மாயையால் பூமியில் சரீரத்துடன் அவதரிக்கிறீர். பரமஹம்ஸர்களுக்கு நீரே கதி. அப்படிப்பட்ட உம்மை நாங்கள் சரணமடைகிறோம். சரீரம், வீடு இவைகளில் ஆசையை விட்டுவிட்டோம்" என்றார்கள்.

5—14. ஓ பரீக்ஷித்து மகாராசனே! உத்தம சுலோகர்களுக்குட் சிறந்தவரான ஸ்ரீ கிருஷ்ணனை ஜனங்கள் இம்மாதிரி தோத்திரம் செய்யும்பொழுது, கௌரவர்களுடைய ஸ்திரீகள் ஒருவருக்கொருவர் சேர்ந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அது மூவுலகத்திய ஜனங்களாலும் கானஞ் செய்யப்பெற்றது. அதனைச் சொல்லுகிறேன், கேளும். எப்படியெனில், அப்

பொழுது திரௌபதி கிருஷ்ணனுடைய பத்தினிகளை நோக்கி, "ஓ ருக்மிணியே ! ஓ பத்ரையே ! ஓ ஜாம்பவதியே! ஓ கௌசலையே ! ஓ சத்தியபாமையே ! ஓ காளிந்தீ ! ஓ மித்ரவிந்தையே! ஓ லக்ஷ்மணையே! ஓ ரோகிணி! [ரோகிணி என்பவள் பட்டமஹிஷி போன்றவள்] உங்களை ஸ்ரீ கிருஷ்ணன் எப்படி விவாகஞ் செய்துகொண்டார்? அதனைச் சொல்லுங்கள்" என்று கேட்டாள். அதனைக் கேட்ட ருக்மிணி, "என்னைச் சிசுபாலனுக்குக் கல்யாணஞ் செய்விப்பதற்காக அநேக அரசர்கள் வில்லைக் கையில் வைத்துக் கொண்டு தயாராக இருக்கும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய தலையில் காலை வைத்து [அவர்களை ஜயித்து] யுத்த ஸ்தலத்திலிருந்து என்னைக் கொண்டுபோனார். அது சிங்கம் தன்னுடைய பாகத்தை எடுத்துக்கொண்டாற்போல் இருந்தது. லக்ஷ்மிக்கு வாசஸ்தலமாகிய அந்தப் பகவானுடைய பாதத்தையே நான் பூஜிக்கவேண்டும்" என்றாள். பின்பு சத்தியபாமை, "என்னுடைய பிதாவான ஸத்ராஜித் என்பவர் தம்முடைய சகோதரனாகிய பிரஸேனஜித்தை ஸ்ரீ கிருஷ்ணன் கொன்றானென்று சொன்னார். அந்த அபவாதத்தை நிவர்த்தித்துக்கொள்வதற்காக ஸ்ரீ கிருஷ்ணன் வனஞ்சென்று, ஜாம்பவானுடைய குகையில் ஜாம்பவானை ஜயித்து, சியமந்தகமென்ற ரத்தினத்தை என்னுடைய பிதாவிடங் கொடுத்தார். அப்பொழுது என்னுடைய பிதா ஸ்ரீகிருஷ்ணன் மீது வீணாக அபவாதத்தைச் சொன்னோமே, அதனை எப்படி நிவர்த்தித்துக்கொள்ளுகிறது என்று யோசித்து, அக்ரூரர் முதலியவர்களுக்குக் கொடுப்பதாக நிச்சயம்செய்யப்பட்டவளானாலும் என்னை ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தார்" என்றாள். அதன்பின் ஜாம்பவதி

என்பவள், "என்னுடைய பிதாவாகிய ஜாம்பவான் 'இந்த கிருஷ்ணன் ஸீதையின் பர்த்தாவாகிய ஸ்ரீ ராமன், தமக்கு யஜமானன்'என்பதை அறியாமல் இவருடன் இருபத்தேழு நாட்கள் யுத்தஞ்செய்தார். பின்பு இவருடைய பலத்தைப் பரீட்சித்து, பாதங்களில் நமஸ்கரித்து, ரத்தினத்தையும் என்னையும் இவருக்குக் கொடுத்தார். அதனால் நான் இவருக்குத் தாசியாக இருக்கிறேன்" என்றாள். அதன்பிறகு காளிந்தியென்பவள், "ஸ்ரீ கிருஷ்ணனைப் பர்த்தாவாக அடையவேண்டுமென்று நான் தவஞ் செய்துகொண்டிருந்தமையால் இவர் தோழனாகிய அர்ச்சுனருடன் அவ்விடம் வந்து என்னைக் கல்யாணஞ் செய்துகொண்டார். அதனால் நான் அவருடைய வீட்டைப் பெருக்கிச் சுத்தஞ்செய்யும் வேலைக்காரியாக இருக்கிறேன்" என்றாள். அதன்பின் பத்திராவென்பவள், "சிங்கமானது நாய்க்கூட்டங்களை ஜயித்து தன்னுடைய பலியையெடுத்துக்கொண்டாற்போல் ஸ்ரீ கிருஷ்ணன் என்னுடைய சுயம்வரத்தில் வந்து, அரசர்களையும் என் சகோதரர்களையும் ஜயித்து என்னைக் கல்யாணஞ் செய்துகொண்டார். லக்ஷ்மீதேவிக்கு வாசஸ்தலமாகிய அந்தப் பகவானுடைய காலை அவலம்பவதாகிய காரியமே எனக்கு ஒவ்வொரு ஜன்மத்திலும் கிடைக்கவேண்டும்" என்றாள். அதன் பிறகு சத்தியா என்பவள், "என்னுடைய பிதாவின் கிருகத்தில் எழு எருதுகள் இருந்தன. அவைகள் மிக்க பலமுள்ளவை. சூரர்களுடைய மதத்தை அடக்குகிறவை; கூர்மையான கொம்புள்ளவை அவைகளை எவன் ஜயிக்கிறானோ, அவனுக்கு என்னைக் கல்யாணஞ்செய்விக்கிறதென்று அரசர்களுடைய பலத்தைப் பரீட்சிப்பதற்காக என் பிதா நிச்சயம் செய்துகொண்டிருந்தார். அந்த எருதுகளை இந்த ஸ்ரீகிருஷ்ணன் பிடித்து ஆட்டுக்குட்டிகளைப்போல்

கட்டியிழுத்து நிக்கிரகித்தார். அதனால் சந்தோஷித்து என் பிதா, என்னை ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்ததுமின்றி ரதம், யானை, குதிரை, காலாட்படை இவைகளடங்கிய சைனியத்தையும், வேலைக்காரிகளையும் கொடுத்தார். இப்படி என்னை அழைத்துப் பகவான் துவாரகைக்குச் செல்லும்பொழுது வழியில் அநேக அரசர்கள் யுத்தத்திற்கு வந்தார்கள். அவர்களை ஜயித்து என்னைத் துவாரகா நகரத்துக்குக் கொண்டு வந்தார். அப்படிப்பட்ட பகவானுக்கு நான் எப்பொழுதும் கைங்கரியஞ் செய்துகொண்டிருக்கவேண்டும்" என்றாள்.

15—16. மித்திரவிந்தா என்பவள், "நான் கிருஷ்ணனிடத்திலேயே மனமுள்ளவளாக இருந்தமையால் அம்மானுடைய புத்திரனாகிய ஸ்ரீ கிருஷ்ணனை வரவழைத்து என்னுடைய பிதா அக்ஷௌஹிணிக் கணக்கான சைனியத்தையும், தோழிகளையும், என்னையும் கொடுத்தார். அந்தப் பகவானுடைய பாதத்தைத் தொடுவது ஒவ்வொரு ஜன்மத்திலும் எனக்குக் கிடைக்கவேண்டும். கர்மத்தால் ஸம்ஸாரத்தில் சுழன்றுகொண்டிருப்பவர்களுக்கு அந்தப் பாத ஸ்பரிச [தொடுவது] த்தால் க்ஷேமமுண்டாகிறது."

17—27. லக்ஷ்மணை என்பவள், "ஓ திரௌபதி! ஸ்ரீ கிருஷ்ணனுடைய அவதாரம், சரிதம் ஆகிய இவைகளை நாரத முகமாக அடிக்கடி நான் கேட்டதனால் என்னுடைய மனமும் அவரிடத்திலேயே சென்றது. (அவரையே கல்யாணஞ் செய்துகொள்ளவேண்டுமென்று ஆசைப்பட்டேன் என்று தாத்பர்யம்.) மேலும், லக்ஷ்மீதேவி கூட அவரையே பர்த்தாவாக அடைந்திருப்பதால் மற்ற லோகபாலகர்களைவிட இவரே மேலானவர் என்று நினைத்து, மற்றவர்களிடத்தில் ஆசைப்படாமல் கிருஷ்ணனையே விவாகஞ்செய்து

கொள்வதென்ற நிச்சயமுள்ளவளாக இருந்தேன். ஓ பதி விரதையே ! பிருகத்ஸேனனென்ற என்னுடைய பிதா என்னு டைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு அதற்காகச் சுயம்வரம் ஏற்படுத்தினார். உன்னுடைய விவாகத்தில் அர்ச் சுனனை வெளிப்படுத்துவதற்காக மத்ஸிய யந்திரமேற்படுத் தப்பட்டது போல என்னுடைய சுயம்வரத்திலும் மத்ஸிய யந்திரம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் உன்னுடைய சுயம் வரத்தில் ஏற்படுத்திய மத்ஸிய யந்திரம் வெளியில் மாத்திரம் மறைக்கப்பட்டிருந்தது. [ஸ்தம்பத்தை ஒட்டி உயரப் பார்த் தால் அந்த மத்ஸியம் தெரியுமென்று கருத்து.] என்னுடைய சுயம்வரத்தில் ஏற்படுத்தியதோ அப்படியல்ல; ஜலத்தில் மாத் திரந்தான் தெரியும். (ஸ்தம்பத்தையொட்டி மேலே பார்த் தாலும் தெரியாது. ஸ்தம்பத்தின் அடியில் வைக்கப்பட் டிருக்கும் ஜலத்தில் அதன் பிரதிபிம்பம் மாத்திரம் தெரியும். அதனைப் பார்த்துக்கொண்டு மேலிருக்கும் மத்ஸியத்தைப் பேதிக்கவேண்டுமென்று கருத்து.) அதனைக் கேட்டு, சகல அஸ்திர சஸ்திரங்களில் தேர்ந்த அரசர்கள் தங்கள் தங்கள் உபாத்தியாயர்களுடன் என்னுடைய பிதாவின் நகரம் வந்து சேர்ந்தார்கள். என்னுடைய தந்தை, வந்தவர்களான அரசர் களுக்கு அவரவர்களுடைய வயதிற்கும், பராக்கிரமத்திற் கும் தக்கவாறு மரியாதை செய்தார். பின்பு அவர்கள் என்னையே மனத்தில் நினைத்துக்கொண்டு அந்தச் சபையில் வைத்திருக்கும் வில்லையும், பாணத்தையும் எடுத்து லட்சி யத்தை (குறி) அடிக்க முயன்றார்கள். சிலர் வில்லைத் தூக்கிப் பூமியில் வைத்தார்கள். சிலர் நாணேற்ற முடியா மல் சென்றார்கள். சிலர் நாணேற்றி இழுத்து, அதனால் அடிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். மகத தேசத்து அரசர்களும், சேதி தேசத்து அரசர்களுமான சில வீரர்

களும், பீமன், துரியோதனன், கர்ணன் ஆகிய இவர்களும் வில்லையெடுத்து நாணேற்றியும் மேலிருக்கும் லட்சியமிருக்கும் இடத்தை நன்றாகத் தெரிந்துகொள்ள முடியாதவர்கள் ஆனார்கள். அர்ச்சுனர் மத்ஸியத்தின் பிரதிபிம்பத்தை ஜலத்தில் பார்த்து உயர லட்சியத்தின் இருப்பிடத்தை நன்றாகத் தெரிந்துகொண்டு மிக்க முயற்சியுடன் பாணத்தைப் பிரயோகித்தார். அந்தப் பாணமானது லட்சியத்தைத் தொட்டதேயொழிய அதனைப் பேதிக்கவில்லை. இப்படி ராஜகுமாரர்கள் அதனைப் பேதிக்க முடியாமல் திரும்பிச் சென்றார்கள். 'நான் மிக்க வீரன்' என்ற அகங்காரமுள்ளவர்களுடைய அகங்காரம் அடங்கியது. அப்பொழுது கிருஷ்ணன் விளையாட்டாக வில்லையெடுத்து நாணேற்றி, பாணத்தைப் பூட்டி ஒரு தடவை ஜலத்தில் மத்ஸியத்தின் பிரதிபிம்பத்தைப் பார்த்து, பாணத்தைப் பிரயோகித்து லட்சியத்தைப் பேதித்துக் கீழே தள்ளினார். அப்பொழுது அபிஜித் என்ற முகூர்த்தம். ஆகாயத்தில் தேவ துந்துபிகள் முழக்கப்பட்டன. பூமியில் 'ஜய' என்ற சப்தம் உண்டாயிற்று. தேவர்கள் மிக்க சந்தோஷமுள்ளவர்களாகிப் புஷ்பங்களை வருஷித்தார்கள்.

28—39. அப்பொழுது நான் புதிதாகிய பட்டு வஸ்திரம் உடுத்திக்கொண்டும், தலையில் உயர்ந்த புஷ்பங்களை அலங்கரித்துக்கொண்டும், வெட்கச் சிரிப்பினால் அழகிய முகமுள்ளவளாகி, பாதத்தில் அணிந்திருக்கும் ஆபரணங்கள் சப்திக்க, சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பெற்ற ரத்தின மாலையைக் கையில் எடுத்துக்கொண்டு அந்தச் சபைக்கு வந்தேன். மேலும், நான் தலை மயிர்களாலும், குண்டலங்

களாலும், அழகிய கன்னங்களுள்ளதும், சிரிப்பு, கடைக் கண் பார்வை இவைகளுள்ளதுமான முகத்தைக் கொஞ்சம் தூக்கி அரசர்களைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் ஆசை உள்ளவளாகி அவருடைய கழுத்தில் அந்த ரத்தினமாலையைப் போட்டேன். அப்பொழுது மிருதங்கம், படகம், சங்கம், பேரி, ஆனகம் முதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன. நடர்களும், தாசிகளும், நர்த்தனஞ் செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். ஓ திரௌபதி! பகவானை நான் வரித்ததைக் கண்ணுற்ற மற்ற அரசர்கள் பொறாமை கொண்டார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் உத்தமமான நான்கு குதிரை கள் கட்டிய ரதத்தில் என்னை ஏற்றிவைத்து யுத்தத்திற்குத் தயாராக இருந்தார். அப்பொழுது சிங்கம் மற்ற மிருகங் களை அலட்சியம் செய்தாற்போலத் தாருகன் எல்லா அரசர் களையும் லட்சியம் செய்யாமல் ரதத்தை நடத்தினான். அதில் சில அரசர்கள் நாய்கள் சிங்கத்தை எதிர்த்தாற்போலப் பாணம், வில் இவைகளை எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனைத் தடுத்தார்கள். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் சார்ங்கம் என்ற வில்லையெடுத்துப் பாணங்களைப் பூட்டி அடித்தார். அதனால் சிலர் கைகள் வெட்டுண்டும், சிலர் கால்கள் வெட்டப்பட்டும், சிலர் தலை வெட்டுண்டும் கீழே விழுந் தார்கள். சிலர் ஆயுதங்களைக் கீழே கிடத்திவிட்டுப் பயந்து ஓடினார்கள். இப்படிப் பகவான் அரசர்களை ஜயித்து என்னை அபகரித்து, துவாரகா நகரத்தில் பிரவேசித்தார். அப் பொழுது அந்த நகரம் துவஜங்களாலும், தோரணங்களா லும் அலங்கரிக்கப்பட்டு வெயிலில்லாமல் நிழலுள்ளதாக இருந்தது; ஆகாயத்திலுள்ளவர்களாலும், பூமியிலுள்ளவர் களாலும் துதிக்கப்பெற்றிருந்தது. அப்படிப்பட்ட நகரத் தில் கிருஷ்ணன் பிரவேசித்தது சூரியன் தமது கிருகத்தில்

பிரவேசித்தாற்போல் இருந்தது என்னுடைய பிதாவாகிய பிருகத்சேனர் மித்திரர்களையும், கிருஷ்ணனுடைய பந்துக்களையும் வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், சந்தனம் முதலியவைகளாலும், படுக்கைகளாலும் உபசரித்து, யானை, குதிரை, ரதம், காலாட்கள், வேலைக்காரிகள் மற்றும் சகல சம்பத்துக்கள் ஆகிய இவைகளையும் ஸ்திரீ தனமாகக் கொடுத்தார். மேலுமவர் எல்லாவிதத்திலும் பரிபூரணராகிய பகவானுக்கு மேலான ஆயுதங்களையுங் கொடுத்தார். இப்படி நாங்கள் மிக்க தவஞ்செய்து எல்லா ஆசைகளையும் ஒழித்து, ஆத்மாராமராகிய [தம்முடைய ஆத்மலாபத்தால் சந்தோஷிப்பவர்] ஸ்ரீ கிருஷ்ணனுடைய வீட்டு வேலைக்காரிகளாக ஆனோம்" என்றாள்.

40—43. அதனைக் கேட்ட பதினாறாயிரம் ராஜகுமாரிகளும், "நரகாசுரன் திக்விஜயஞ் செய்யும்பொழுது அரசர்களை ஜயித்து எங்களைப் பலாத்காரமாக அபகரித்து வைத்திருந்தான். நாங்கள் சம்சாரத்தை நிவர்த்திக்கக்கூடிய ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ் செய்துகொண்டிருந்தமையால் ஸ்ரீ கிருஷ்ணன் எல்லாக் காமங்களையும் அடைந்தவரானாலும், நரகாசுரனைக் கொன்று எங்களைக் கல்யாணஞ் செய்துகொண்டார். ஓ பதிவிரதையான திரௌபதி! எல்லாப் பூமிக்கும் அதிபதியாக இருப்பதாகிய சாம்ராஜ்யத்தையும் நாங்கள் விரும்பவில்லை. இந்திரபதம் எங்களுக்கு வேண்டாம். மேற்சொல்லிய இருவகையிலுமுள்ள சுகத்தை அனுபவிக்க நாங்கள் இஷ்டப்படவில்லை. அணிமா முதலிய சித்திகளில் எங்களுக்கு ஆசையில்லை. பிரும்ம பதத்தை விரும்பவில்லை. மோக்ஷத்திலும் எங்களுக்கு ஆசையில்லை. சாலோக்யம் முதலியவைகளிலும் விருப்பம்

இல்லை. ஆனால் லக்ஷ்மிதேவியின் ஸ்தனங்களிலுள்ள குங்கு மத்தின் வாசனையுடன் கூடிய இந்தப் பகவானுடைய பாத தூளியைத் தரிக்கவேண்டுமென்று விரும்புகிறோம். கோபி கைகளும், வேட ஸ்திரீகளும், திருணங்களும், கொடிகளும், கோபர்களும் அந்தப் பகவானுடைய பாதஸ்பரிசத்தை (அவருடைய பாதம் தங்கள் மீது படவேண்டுமென்று) விரும்ப வில்லையா? அதுபோல் நாங்களும் பாத தூளியை விரும்பு கிறோம்" என்றார்கள். (அது மற்றவர்களுக்குக் கிடைக் காததாயினும் அவருடைய பக்தர்களுக்குச் சுலபமென்று கருத்து.)

## அத்தியாயம் 84

### வசுதேவர் யாகஞ் செய்தது

அதனைக் கேட்டு குந்தி, காந்தாரி, திரௌபதி, சுபத் திரை, மற்ற ராஜ பத்தினிகள், கிருஷ்ணனிடத்தில் பக்தி யுள்ள கோபிகைகள் ஆகிய எல்லாரும் ஆனந்தக் கண்ணீ ரைப் பெருக்கி ஆச்சரியமடைந்தார்கள். இப்படி ஸ்திரீகள் ஸ்திரீகளுடனும், புருஷர்கள் புருஷர்களுடனும் பேசிக் கொண்டிருக்கும்பொழுது ராமகிருஷ்ணர்களைத் தரிசிப்பதற் காக மகரிஷிகள் வந்தார்கள். எவர்களெனில் வியாஸர், நாரதர், சியவனர், தேவலர், அஸிதர், விசுவாமித்திரர், சதா நந்தர், பரத்வாஜர், கௌதமர், பாசுராமர், அவருடைய சிஷ் யர்கள், பகவானாகிய வசிஷ்டர், காலவர், பிருகு, புலஸ்தியர், புலஹர், அத்திரி, மார்க்கண்டேயர், பிருகஸ்பதி, துவிதர், திரிதர், ஏகதர், பிரம்மதேவருடைய புத்திரராகிய அங்கிரஸ், அகஸ்தியர், யாக்ஞவல்கியர், வாமதேவர் முதலிய மற்ற மக ரிஷிகளும் வந்தார்கள். அவர்களைக் கண்டு அவ்விடம்

கார்ந்திருந்த அரசர்களும், பாண்டு புத்திரர்களும், ராம கிருஷ்ணர்களும் ஆசனத்திலிருந்து எழுந்திருந்து, எல்லா ராலும் நமஸ்கரிக்கப்பெற்றவர்களான மகரிஷிகளுக்கு நமஸ் காரஞ் செய்தார்கள். விதிப்படி அவர்களைப் பூஜித்தார்கள். மேலும், ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடன் நல்வரவா என்று கேட்பது, ஆசனங்கொடுப்பது, அர்க்கியம், பாத்தியம், புஷ்ப மாலை, தூபம், சந்தனம் முதலியவைகளால் அந்த மகரிஷி களை உபசரித்தார். இம்மாதிரி பூஜிக்கப்பெற்று மகரிஷிகள் ஆசனத்தில் சுகமாக உட்கார்ந்தார்கள். பின்னுமவர்கள் பகவானுடைய வார்த்தையைக் கேட்பதில் ஆவலுள்ளவர்க ளாகி மௌனமாக இருந்தார்கள். அப்பொழுது தர்மத்தைக் காப்பாற்றுவதற்காகப் பூமியில் அவதரித்திருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் அந்தச் சபையை நோக்கி, "யோகிகளுக்குட் சிறந்தவர்களான உங்களுடைய தரிசனம் தேவர்களுக்கும் அரிது. அப்படிப்பட்ட தரிசனம் எங்களுக்குக் கிடைத்தது. இதுவே ஜன்மத்தின் பயன். ஆனதால் எங்களுடைய ஜன்மம் பயனுள்ளதாயிற்று. நாங்கள் புண்ணிய தீர்த்தங் களில் ஸ்நானஞ் செய்வது முதலியவைகளையே தவம் என்று நினைத்தவர்கள்; பிரதிமையையே தெய்வமென்று நினைத்த வர்கள்; அப்படிப்பட்ட அற்பர்களான எங்களுக்கு யோகே சர்களான உங்களைத் தொடுவது, கேட்பது, வணங்குவது, பாதங்களில் பூஜிப்பது ஆகிய இவைகள் கிடைப்பதற்கு நியாயமில்லை. ஜலங்களாகிய புண்ணிய தீர்த்தங்களையும், மண், கல் இவைகளால் செய்யப்பட்ட தேவதைகளையும் சேவித்தால் அவைகள் வெகுகாலஞ் சென்றபின் சேவித்தவ னுடைய பாபத்தைப் போக்கிப் பரிசுத்தப்படுத்துகின்றன. சாதுக்களைத்தரிசித்தவுடனேயே அவர்கள் பரிசுத்தப்படுத்து கிறார்கள். மேலும் அக்னி, சூரியன், சந்திரன், நட்சத்

திரங்கள், பூமி, ஜலம், ஆகாயம், வாயு, வாக்கு, மனம் ஆகிய இவைகள் பேதபுத்தியை உண்டுபண்ணுகிறவைகள். ஆன தால் அவைகளை உபாசித்தால் பேதபுத்தியாலுண்டான பாபம் நிவர்த்தியாகிறதில்லை. (அக்னி முதலியவைகளைப் பிரும்மம் என்று உபாசிக்கவேண்டுமென்ற சுருதியின்படி உபாசித்தாலும் பேதபுத்தி நிவர்த்தியாகிறதில்லை என்று தாத்பரியம்.) சாதுக்கள் பேதபுத்தியற்றவர்களானதால் அவர்களைச் சேவித்தால் அந்த முகூர்த்தத்திலேயே அவர்கள் அண்டினவர்களுடைய பேதபுத்தியை நிவர்த்திக்கிறார்கள். வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்று சுபாவமுள்ள சரீரத்தை நான் என்று எவன் நினைக்கிறானோ, களத்திரம், புத்திரன் முதலியவர்களைத் தன்னைச் சார்ந்தவர்களென்று எவன் நினைக்கிறானோ, எவன் மண்ணினாலும், மரத்தாலும் செய்யப்பட்டவைகளையே தேவதையென்று நினைக்கிறானோ, எவன் ஜலத்தைத் தீர்த்தமென்று (சுத்தப்படுத்தக்கூடியது) நினைக்கிறானோ, சாதுக்களை ஆத்மாவென்றும், தன்னைச் சார்ந்தவர்களென்றும், தேவதைகளென்றும், தீர்த்தமென்றும் ஒருபொழுதும் நினைக்கவில்லையோ, அவன் கோவேறு கழுதைக்குச் (கழுதையென்றும் சொல்வதுண்டு) சமானன் என்று சொன்னார்.

14—27. அதனைக் கேட்ட மகரிஷிகள், "இதென்ன தடையற்ற ஞானமுள்ளவராகிய பகவான் இப்படி நம்மைத் தோத்திரஞ் செய்கிறார்" என்று புத்தி மயக்கமடைந்து மௌனமாக இருந்தார்கள். மேலுமவர்கள் பகவான் கர்மத்திற்கு வசப்பட்டவர்போல் இருப்பதைப்பற்றி வெகுநேரம் யோசித்து, கிருஷ்ணன் இப்படி கர்மத்திற்கு வசப்பட்டவர் போல நடப்பது மூடர்களையும் கர்மத்தை யனுஷ்டிக்கும்படி செய்வதற்காகவேயொழிய வேறில்லை என்று ஜகத்குருவா

கிய ஸ்ரீ கிருஷ்ணனைப்பற்றிச் சொல்லிக்கொண்டார்கள். பின்னும் அவர்கள், "நாங்கள் ஆத்மாவின் உண்மையை அறிந்தவர்களுக்குள் சிறந்தவர்களானாலும், பிரஜாபதிகளுக்கும் அதிபதிகளானாலும் எவருடைய மாயையால் மோகித்திருக்கிறோமோ, எவர் தம்முடைய சங்கல்பத்தால் மனிதவேடங்கொண்டு கர்மத்திற்கு வசப்பட்டவன் போல கர்மங்களை அனுஷ்டிக்கிறாரோ, அப்படிப்பட்ட பகவானாகிய உம்முடைய நடை வியக்கத்தக்கது. பூமியானது குடம், மடக்கு என்ற பலவகையான பெயரையும் சுரூபத்தையும் அடைந்தாலும் சுரூபங்களும், பெயரும் எப்படி அநித்யங்களோ, அவைகளுடைய சம்பந்தம் எப்படிப் பூமிக்கு உண்மையில் இல்லையோ, அப்படியே உண்மையில் நீர் கர்ம சம்பந்தமில்லாதவரானாலும் தாமாகத் தமமைப் பலவகையாகப் படைக்கிறீர்; காப்பாற்றுகிறீர்; சங்கரிக்கிறீர்; ஆனாலும் உமக்குக் கர்மத்தின் சம்பந்தமில்லை. பரிபூர்ணராகிய நீர் அவதரித்துக் கர்மங்களை அனுஷ்டிப்பது என்பது லோகத்தை அனுசரிப்பதேயாம் (உண்மையல்லவென்று கருத்து): ஆனாலும், பரம புருஷனாகிய நீர் பக்தர்களைக் காப்பாற்றுவதற்காகவும், துஷ்டர்களைச் சிட்சிப்பதற்காவும், சுத்த ஸத்வ சுரூபத்தைத் தரிக்கிறீர். (அவதரிக்கிறீர்.) மேலும் ஜாதி, ஆச்சிரமம் இவைகளை அடைந்து தாம் அனுஷ்டித்து ஸநாதனமான வேதமார்க்கத்தையும் சமரட்சிக்கிறீர். தவம் வேதாத்தியயனம் ஆகிய இவைகளைச்செய்து காரியம், காரணம் இவைகளுக்கு மேற்பட்ட ஸத்தாமாத்திர பிரும்மம் ஆகிய இவைகளை வேதத்தைக்கொண்டு ஜனங்கள் அடைகிறார்கள். அப்படிப்பட்ட வேதம் உமக்கு சுத்தமான ஹிருதயமாக இருக்கிறது. ஓ பரப்பிரம்மமே! சாஸ்திரத்தால் அறியக்கூடியவரும் சகல சாஸ்திரங்களை உண்டுபண்ணினவருமான உம்

மைப் பிராம்மணர்கள் தெரிந்துகொள்ளுகிறார்கள் (வேதம் உமக்கு ஹிருதயமாக இருப்பதால் வேதத்தைப் பரவச்செய்கிறவர்களான பிராம்மணர்களே உம்மைத் தெரிந்துகொள்ளுகிறார்கள்). அதனாலப்படிப்பட்ட பிராம்மணர்களை நீர் பூஜிக்கிறீர். பிராம்மணர்களைத் தெய்வமாகக் கொண்டவர்களில் நீர் சிறந்தவர். சகல க்ஷேமங்களையும் கொடுப்பவரும், சாதுக்களுக்குக் கதியுமான உம்முடைய சங்கம் கிடைத்ததால் இன்றையதினம் எங்களுடைய ஜன்மம் சபலமாயிற்று. எங்களுடைய வித்தையும், தவமும், கண்களும் பயனுள்ளவை ஆயின. அப்படிப்பட்ட பகவானும், தடையற்ற ஞானம் உள்ளவரும், கிருஷ்ணருமாகிய உமக்கு நமஸ்காரம். மேலும், உம்முடைய மகிமையைத் தம்முடைய யோகமாயையால் மறைத்துக்கொண்டு இருக்கிறீர். அப்படிப்பட்ட பரமாத்மாவுமான உம்மை நமஸ்கரிக்கிறோம். யோகமாயையான திரையால் சுருபத்தை மறைத்துக்கொண்டவரான உம்மை சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய இவைகளுக்குக் காரணமாகிய ஈசுவரனென்று இந்த அரசர்களும் விருஷ்ணிகளும் அறியார்கள். படுத்துத் தூங்கும் புருஷன் ஸ்வப்னத்தை உண்மையென்று நினைத்து, மனத்தால் தோன்றிய சிங்கம் முதலியவைகளாகத் தம்மை எப்படி நினைத்துக்கொள்ளுகிறானோ, அவைகளுக்கு மேலானதாக அறியவில்லையோ, அப்படி உம்முடைய மாயையால் புத்திமயக்கத்தையடைந்து ஸ்வப்னம் போன்ற விஷயங்களில் ஆசைப்பட்டு, விவேகமற்று உம்முடைய சுருபத்தை அறியவில்லை. உம்முடைய இந்தப் பாதமானது சகல பாபங்களைப் போக்கக்கூடிய கங்காதீர்த்தத்தை உண்டுபண்ணியது; வெகுகாலம் யோகாப்பியாசம் செய்தாலும் ஹிருதயத்தில் அது தியானிக்கப்படுகிறதே ஒழிய நேரில் பார்க்கப்படவில்லை. அப்படிப்பட்ட

பாதத்தை நேரில் தரிசித்தோம். எங்களுக்கு உம்முடைய பாதங்களில் பக்தியுண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டும். முன்னோர்களான பெரியோர்கள் உம்மிடத்தில் அதிக பக்தி செய்து அதனால் ஜீவகோசத்தை ஒழித்து (ஆசைகளை) உம்மை அடைந்தார்கள்" என்று ஸ்ரீ கிருஷ்ணனை சிலாகித்து, திருதராஷ்டிரர், தருமபுத்திரர் இவர்களிடமும் விடை பெற்று அந்த மகரிஷிகள் தங்கள் ஆச்சிரமத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

28—33. அதனைக் கண்ணுற்ற மிக்க கீர்த்தியுள்ள வசுதேவர் அவர்கள் பின்சென்று நமஸ்கரித்து மிக்க வணக்கமாக அவர்களை நோக்கி, "ஓ மகரிஷிகளே! சகல தேவ சுரூபிகளாகிய உங்களுக்கு நமஸ்காரம். எந்தக் கர்மத்தை எப்படியனுஷ்டித்தால் கர்மபந்தம் நிவர்த்தியாகும்; அதனைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அதனைக்கேட்டு மகரிஷிகள் 'சமீபத்திலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனை விட்டு நம்மை வசுதேவர் கேட்கிறாரே' யென்று ஆச்சரியப்படுவதைப் பார்த்து, நாரதர், "ஓ மகரிஷிகளே! வசுதேவர் ஸ்ரீ கிருஷ்ணனைச் சிறுவனென்று நினைத்து நம்மைப் பார்த்து க்ஷேமத்தை அடையும் மார்க்கத்தைக் கேட்பது ஆச்சரியமல்ல. கங்கையின் கரையிலே வசிப்பவர்கள் தங்களுடைய பாபத்தைப் போக்கடித்துக் கொள்வதற்காக வேறு நதிக்குச் செல்லுகிறார்களல்லவா? சமீபத்திலிருப்பதே அலட்சியத்தை உண்டுபண்ணும். ஆனதால் ஸ்ரீ கிருஷ்ணன் வசுதேவருக்குப் புத்திரனாக எப்பொழுதும் சமீபத்திலிருப்பதால் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் லட்சிய புத்தியில்லை. வெள்ளரிப்பழம் முதலியவைகள் காலத்தால் எப்படி நசிக்கின்றனவோ, அப்படி எவருடைய ஞானம் காலத்தாலும் ஜகத்தைப் படைப்பது முதலியவையாலும், தடுக்கப்படுகிற

தில்லையோ, மின்னல் முதலியவைகள் எப்படித் தானக நசிக்கின்றனவோ, அப்படிப் போல எவருடைய ஞானம் தானகவும் நாசமடைகிறதில்லையோ, குடம் முதலியவைகள் உலக்கை முதலியவைகளால் அடிக்கப்பட்டு நாசமடைகிறது போல எவருடைய ஞானம் வேறு வஸ்துவால் கெடுக்கப் படுகிறதில்லையோ, பதார்த்தங்களில் முன்னிருந்த நிறம் முதலிய குணங்கள் மாறி வேறு குணங்கள் உண்டாவதால் பதார்த்தம் எப்படி வேருக ஆகிறதோ அப்படி குணங்களா லும் எவருடைய ஞானம் தடைப்படுகிறதில்லையோ, அப் படிப் பட்ட தடையற்ற ஞானமுள்ளவரும், அத்விதீயரு மான [தமக்குச் சமமான இரண்டாவது வஸ்து இல்லாதவர்] ஸ்ரீ கிருஷ்ணனை மூடர்கள் ஆசை முதலியவைகளாலும், கர்மங்களாலும், சுகதுக்கங்களாலும், ஸத்வம் முதலிய குணங்களுடைய தொடர்ச்சியாலும் மறைக்கப்பட்டவர் என்று நினைக்கிருர்கள். மேற்காட்டிய ஆசை முதலியவை கள் பகவானுடைய விபூதிகளேயொழிய வேறில்லை. தம் முடைய விபூதிகளால் தமக்கு மறைவு நேரிடுமா? இப்படி நினைப்பது மேகத்தாலும், பனியாலும், ராகுவாலும், சூரியன் மறைக்கப்பட்டிருப்பதாக ஜனங்கள் நினைப்பது போலிருக்கிறது" என்று சொன்னர்.

34—42. அதனைக் கேட்ட மற்ற மகரிஷிகள் வசு தேவரை அழைத்து, ராமகிருஷ்ணர்களும் மற்ற அரசர் களும் கேட்டுக்கொண்டிருக்க "எந்தக் கர்மத்தை அனுஷ் டித்தால் கர்மபந்தம் விலகுமென்று கேட்டீரல்லவா? சகல யாகங்களுக்கும் அதிபதியான ஸ்ரீ மகாவிஷ்ணுவை சிரத்தை யுடன் பூஜித்தால் கர்மபந்தம் நிவர்த்தியாகும். இது சித்தத் திற்குச் சாந்தியை உண்டுபண்ணக்கூடிய இலகுவான உபா யம் என்று பெரியோர்கள் சாஸ்திரங்களைக்கொண்டு கண்டு

பிடித்திருக்கிறார்கள். இந்த தர்மமானது மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியதாகவும் இருக்கிறது. மேலும் இந்த தர்மம் தனக்கு சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. [கர்மத்தாலும், பிரஜையாலும், தனத்தாலும், மோக்ஷம கிடைக்கிறதில்லை. சகல கர்மங்களையும்விடுவதால் அநேகர்கள் மோக்ஷத்தை அடைந்தார்கள் என்ற சுருதியின்படி கர்மத்தை விடுவது மோக்ஷத்திற்கு உபாயமேயொழிய கர்மத்தைச் செய்வதால் மோட்சம் கிடைக்குமாவென்றால் முதலிலேயே கர்மத்தை விடுவது முடியாத காரியம் என்று அடுத்த சுலோகங்களால் காண்பிக்கப்படுகிறது.] நல்ல மார்க்கமாகச் சம்பாதிக்கப்பட்ட சுத்தமான பணத்தைக்கொண்டு யாகஞ் செய்து, சிரத்தையுடன் பரம புருஷனைப் பூஜிப்பதே கிரகஸ்தர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய மார்க்கம். இப்படி வித்வானாக இருப்பவன் யாகங்களைச் செய்து தானங்களை அனுஷ்டித்து, அதனால் பணத்தைச் செலவிட்டு, பணத்தாசையை விலக்கிக் கொள்ளவும், கிருகத்திலுள்ள போகங்களை அனுபவித்து அதனால் களத்திரம், புத்திரன் இவர்களிடத்திலுள்ள ஆசையை நிவர்த்தித்துக் கொள்ள வேண்டும். சுவர்க்கம் முதலிய லோகங்களுடைய சுகமானது ஸ்திரமில்லாதது என்று யோசித்து, அவைகளில் ஆசையை விலக்கிக்கொள்ளவேண்டும். முன்னோர்களான பெரியோர்கள் கிராமவாசத்தில் ஆசையை ஒழித்து மிக்க தைரியமுள்ளவர்களாகத் தவஞ் செய்வதற்காகக் காட்டிற்குச் சென்றார்கள். ஒவ்வொரு மனிதனும் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதிருக்களுக்கும் கடன் கொடுக்கவேண்டியவனாக இருக்கிறான். யாகஞ் செய்வதால் தேவர்களுடைய கடன் நிவர்த்தியாகும். வேதத்தை அத்தியயனஞ் செய்வதால் ரிஷிகளுடைய கடன் நிவர்த்தியாகும். புத்திரனை உண்டு

பண்ணுவதால் பிதிருக்களுடைய கடன் நிவர்த்தியாகும். அவைகளைச் செய்து மூவகையான கடன்களை நிவர்த்தித்துக் கொள்ளாமல் கர்மத்தை விட்டு மோக்ஷத்தை விரும்புகிறவன் நரகத்தையடைவான். ஆனதால் மிக்க புத்திசாலியான ஓ வசுதேவ! உமக்கு இரண்டு கடன்கள் தீர்ந்துவிட்டன. யாகங்களைச் செய்து தேவர்களுடைய கடனை நிவர்த்தித்துக்கொண்டு வீட்டை விட்டுக் காட்டிற்குப் போகலாம். ஆனால் சித்த சுத்தி இல்லாதவர்கள் இப்பொழுது சொல்லப்பட்ட கிரமத்தை அனுபவிக்கவேண்டும். நீர் மிகவும் மேலானவர். ஏனென்றால், நீர் மிக்க பக்தியுடன் ஜகத்திற்கு அதிபதியான ஸ்ரீமந் நாராயணனை முன் ஜன்மத்தில் பூஜித்தீர். அதனால் உங்களுக்கு அவர் புத்திரனாக அவதரித்திருக்கிறார்" என்று சொன்னார்கள்.

43—60. அதனைக் கேட்ட கம்பீர மனமுள்ள வசுதேவர் அந்த மகரிஷிகளை நமஸ்கரித்து, சந்தோஷப்படுத்தி, தமக்கு ரித்விக்குகளாக இருந்து யாகஞ் செய்விக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இப்படி வசுதேவரால் வரிக்கப்பட்ட மகரிஷிகள் தர்மத்தில் ஆசையுள்ளவரான வசுதேவருக்கு விதிப்படி அந்த க்ஷேத்திரத்தில் யாகம்செய்வித்தார்கள். இப்படி வசுதேவர் யாகத்திற்காகத் தீக்ஷை செய்யும்பொழுது விருஷ்ணிகளும் மற்ற அரசர்களும் ஸ்நானஞ் செய்து நல்ல வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு அலங்கரித்துக்கொண்டார்கள். அந்த வசுதேவருடைய பத்தினிகளும் நல்ல ஆபரணம் வஸ்திரம் இவைகளையணிந்து, குங்குமம் சேர்ந்த சந்தனம் பூசிக்கொண்டு, உத்தம வஸ்துக்களை எடுத்துக்கொண்டு தீக்ஷாசாலைக்கு வந்தார்கள். அப்பொழுது மிருதங்கம், படகம், சங்கம், பேரி, ஆனகம் முதலிய வாத்தியங்கள் கோஷிக்கப்பட்டன. நடர்களும் தாசிகளும் நர்த்

தனஞ் செய்தார்கள். சூதர்களும், மாகதர்களும் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். இனிமையான குரலுள்ள கந்தர்வ ஸ்திரீகளும் கந்தர்வர்களும் பாடினார்கள். அப்பொழுது ரித்விக்குகள் கண்களில் மையிடப்பட்டவரும் வெண்ணெயால் பூசப்பட்டவருமான வசுதேவருக்கு, பதினெட்டு பத்னிகளுடன் தீக்ஷாபிஷேகம் செய்வித்தார்கள். அது நட்சத்திரங்களுடன் கூடிய சோமராஜனுக்கு அபிஷேகஞ்செய்தாற்போலிருந்தது. இப்படி யாகதீக்ஷை பெற்றவரான வசுதேவர் வளை, ஹாரம், பாதசரம், குண்டலம், பட்டு இவைகளால் அலங்கரிக்கப்பெற்ற பத்னிகளால் சூழப்பட்டு மற்ற ஜனங்களுடன் பிரகாசித்தார். அவருடைய ரித்துவிக்குகளும் ஸதஸ்யர்களும் மகேந்திரனுடைய யாகத்திற்போலப் பட்டு முதலியவைகளை அலங்கரித்துக்கொண்டு விளங்கினார்கள். சகல ஜீவர்களுக்கும் அதிபதியான ராமகிருஷ்ணர்களுந் தங்களுடைய புத்திர, மித்திர, களத்திரம் முதலிய பந்துக்களாகிய தம்முடைய விபூதிகளுடன் பிரகாசித்தார்கள். இப்படி வசுதேவர் பிரகிருதி யாகம், விகிருதி யாகம் இவைகளைச் செய்து ஒவ்வொரு யாகத்திலும் விதிப்படி திரவியம் (புரோடாசம் முதலியவை), மந்திரம், கிரியை ஆகிய இவைகளுக்கு அதிபதியாகிய ஸ்ரீமந் நாராயணனைப் பூஜித்தார். மேலும் அவர், சாஸ்திரத்தில் சொல்லியபடி உசிதமான காலத்தில் ரித்துவிக்குகளை அலங்காரஞ் செய்து அவர்களுக்குப் பசுக்கள், பூமி, கன்னிகை முதலிய உத்தம வஸ்துக்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார். பின்பு ரித்துவிக்குகள் பத்னிஸம்யாஜம், அவபிருதம் இவைகளை யனுஷ்டித்து யஜமானனை முன்னிட்டுப் பரசுராமனுடைய மடுவில் ஸ்நானஞ் செய்வித்தார்கள். இப்படி வசுதேவர் அவபிருத ஸ்நானம் செய்து, வந்திகளுக்கும் ஸ்திரீகளுக்கும் ஆபரணம்,வஸ்திரம்

இவைகளைக் கொடுத்து, நாய் வரையிலுள்ள சகலப் பிராணி களுக்கும் அன்னமளித்தார். பின்னுமவர் தம்முடைய பந்துக்களையும், அவர்களுடைய ஸ்திரீகளையும், புத்திரர் களையும் விதர்ப்பம், கோஸலம், குரு, காசி, கேகயம் இந்த தேசத்திலிருந்து வந்தவர்களையும், ஸதஸ்யர்களையும், ரித்து விக்குகளையும், தேவகணங்களையும், பூதகணங்களையும், பிதி ருக்களையும், சாரணர்களையும் அவரவர்களுக்கு இஷ்டமான வஸ்துக்களைக் கொடுத்துப் பூஜித்தார். அவர்களெல்லோரும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் விடை பெற்று யாகத்தைப்பற்றிச் சிலா கித்துக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடஞ் சென்றார்கள். திருதராஷ்டிரர், விதுரர், தர்மபுத்திரர், பீமன், அர்ச்சுனன், நகுல சகதேவர்கள், பீஷ்மர், துரோணர், குந்தி, நாரதர், வியாஸர் ஆகிய இவர்கள் பந்துக்களைத் தழுவி, அவர்களிடத் திலுள்ள பிரீதி விசேஷத்தால் அவர்களை விட்டுப் பிரிய மன மில்லாமல் சிரமப்பட்டுச் சென்றார்கள். கிருஷ்ணன், ராமன், வசுதேவர், உக்கிரசேனர் முதலியவர்கள் நந்தரையும், மற்ற கோபர்களையும் மிக்க அன்புடன் பூஜித்ததால் அவர்களுடைய வேண்டுகோளின்படி அவர்கள் சில காலம் வசித்தார்கள்.

61—69. இப்படி வசுதேவர் மனோரதமாகிய சமுத் திரத்தை எளிதில் தாண்டி, மித்திரர்களால் சூழப்பட்டு மிக்க சந்தோஷத்துடன் நந்தருடைய கையைப் பிடித்துக் கொண்டு, "ஓ சகோதர! சிநேகமென்கிற பாசமானது ஒருவராலும் தள்ளமுடியாதது. வீரர்களாலும் பலத்தால் அதனைப் பேதிக்கமுடியாது. யோகிகளாலும் ஞானத் தால் அதனை நிவர்த்திக்கமுடியாது. ஏனென்றால், மூடர் களான எங்களுக்கு விவேகிகளான நீங்கள் ஒப்பற்ற உபகா ரத்தைச் செய்தீர்கள். அதற்குப் பதிலுபகாரம் செய்ய முடியாவிடினும் சிநேகபாசம் அதிகமாக இருக்கிறது; முன்பு

செய்த உபகாரத்திற்குப் பதிலுபகாரம்

நாங்கள் அசக்தர்களாக இருந்ததனால் அதனைச் செய்யாமல் இருந்தோம்; இப்பொழுது தனகர்வத்தால் குருடர்களாக இருப்பதால் எதிரில் நிற்பவர்களைக்கூடத் தெரிந்துகொள்ளாமலிருக்கிறோம். க்ஷேமத்தை அடையவேண்டுமென்ற விருப்பமுள்ளவனுக்கு ஐசுவரியம் வேண்டாம். ஐசுவரியத்தால் குருடனாகி, சாதுக்களையும் பந்துக்களையும் லட்சியம் செய்கிறதில்லை" என்று சொல்லி, நந்தர் செய்த உபகாரத்தை நினைத்து, பிரீதியால் தழுதழுத்த மனமுள்ளவராகி, கண்ணீரைப் பெருக்கி அழுதார். இப்படி நந்தர் யதுக்களால் பூஜிக்கப்பட்டு ராமகிருஷ்ணர்களுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி, இன்றைய தினம் பிரயாணம், நாளைய தினம் பிரயாணம் என்று சொல்லிக்கொண்டு மூன்று மாதங்கள் அவ்விடத்திலேயே வசித்தார். பின்பு வசுதேவர், உக்கிரசேனர், கிருஷ்ணன், உத்தவர், பலராமன் முதலியவர்கள் விலையுயர்ந்த ஆபரணம், பட்டு இவைகளைக் கொடுத்து நந்தரைப் பிரயாணப்படுத்தினார்கள். நந்தரும், மற்ற கோபர்களும், கோபிகைகளும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களில் அழுந்திய தங்கள் மனத்தை யெடுத்துக் கொள்ள முடியாதவர்களாகவே (பகவானுடைய பாதத்தைத் தியானஞ் செய்துகொண்டு) மதுரா நகரம் சென்றார்கள். பின்பு மிக்க மகிமை பொருந்திய பாண்டு புத்திரர்களும், குந்திதேவியும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் விடைபெற்றுக் கண்ணீரால் கண்டமடைத்து, தழுதழுத்த பேச்சுள்ளவர்களாகித் தங்கள் பரிவாரங்களுடன் இந்திரப்பிரஸ்தஞ் சென்றார்கள். இப்படி பந்துக்கள் அவரவர்களுடைய இருப்பிடஞ் சென்ற பிறகு ஸ்ரீ கிருஷ்ணனையே தெய்வமாகக்கொண்ட விருஷ்ணிகள் மழைக்காலம் வந்துவிட்டதால் துவாரகா நகரஞ் சென்

ஞர்கள். மேலும் அவர்கள் தீர்த்த யாத்திரையில் பந்துக்களைப் பார்த்ததையும், வசுதேவருடைய யாகத்தையும் பட்டணத்து ஜனங்களுக்குச் சொன்னார்கள்.

நோட்டு.

மேலும் அக்கினி— "எவன் வாக்கைப் பிரும்மமென்று உபாசிக்கிறானோ, எவன் மனத்தைப் பிரும்மனென்று உபாசிக்கிறானோ" சுருதி. பேதபுத்தியை— பேதகிருத: என்ற பதத்தை ஆறும் வேற்றுமையாக வைத்துக்கொண்டால் பேதபுத்தியுள்ள புருஷனுடைய பாபத்தைப் போக்கடிக்கிறதில்லையென்று அர்த்தம். கோவேறுகழுதை— ஸாதுக்களை ஆத்மாவாகவும், பந்துக்களாகவும், தெய்வமாகவும், பரிசுத்தப்படுத்துகிறவர்களாகவும் நினைக்கவேண்டும். எவன் ஆத்மாவின் உண்மையை அறிந்த ஸாதுக்களை மேற்காட்டியவண்ணம் நினைக்கவில்லையோ அவன் கோவேறு கழுதை போல் சுமை சுமப்பவனாகிறான். பசுக்களுக்காகப் புல் முதலியவைகளைச் சுமக்கும் கழுதையென்றும் சொல்லலாம். எருதுபோலும் கழுதைபோலும் என்றும் அர்த்தஞ் சொல்வதுமுண்டு. புத்தி மயக்கமடைந்து— பகவானைச் சேவித்து மேலானவர்களாகியிருக்கும் நம்மைப் பகவான் தம்மைக் காட்டிலும் உயர்ந்தவர்களென்று சொல்லுகிறாரே, இதன் அபிப்பிராயமென்னவென்று பிரமித்தார்கள். மூடர்களையும்— நாம் சாதுக்களைப் பூஜித்தால் மற்ற அக்ஞஜனங்களும், கிருஷ்ணனே சாதுக்களை யுபாசிக்கிறார்; ஆனதால் நாமும் சாதுக்களைப் பூஜிக்கவேண்டுமென்று நினைத்து, சாதுக்களைப் பூஜிப்பார்களென்ற அபிப்பிராயத்தால் இப்படிச் சொல்லுகிறார் என்று கருத்து. பிரஜாபதிகளுக்கு— பிரும்மதேவர் முதலியவர்களுக்கும் அதிபதியான ஓ பகவன் நம்மைப் பார்த்து மூடர்களும் ஸத் கர்மங்களை அநுஷ்டிக்கட்டும் என்ற எண்ணத்தால் கர்மங்களைச் செய்கிறீர் என்றதை அறியாமல் மோகிக்கிறோம். ஆத்மாவின் உண்மையை அறிந்தவர்களுக்குட் சிறந்தவர்களானாலும், நாங்கள் மோகத்தை அடைவதும், நீர் எல்லாவற்றிற்கும் ஈசுவரனானாலும் கர்மத்தைச்

செய்வதும்ஆச்சரியமென்று கருத்து- வீரராகவீயம். பூமியானது- "மண் என்பதே ஸத்தியம். அதன் விகாரமும், பெயரும் உண்மையல்ல" என்ற சுருதியின்படி மண்ணால் குடம், மடக்கு முதலிய பல வஸ்துக்கள் செய்யப்பட்டாலும் குடம், மடக்கு என்ற பெயர்களும், அதன் உருவங்களும் அவை உண்டாவதற்கு முந்தியுமில்லை; குடம் முதலியவைகளை உடைத்துவிட்டால் பிந்தியும் அந்த நாம ரூபங்களில்லை. எப்பொழுதும் தொடர்ச்சியாகவிருப்பது மண் என்ற காரணமொன்றேயாம். அப்படிப்போல் காரணமாகிய ஈசுவரன் ஒருவரே ஸத்யவஸ்து. அதன் காரியமாகிய நாம ரூபங்கள், அஸத்யங்கள் என்று கருத்து. கர்ம சம்பந்த— ஜனங்களுடைய நடை எப்படிக் கர்மாதீனமோ அப்படி பகவான் கர்மத்திற்கு வசப்பட்டுச் சேஷ்டிப்பதில்லை. அவருடைய சேஷ்டைக்கு அவருடைய இச்சையே காரணம். காரணமாகவிருக்கும்பொழுது ஒருவராகவும், காரியமாக இருக்கும்பொழுது அநேகராகவு இருக்கிறார். அநேகரென்றால் பல பெயருள்ளவரென்றும், பல உருவங்களுள்ளவரென்றும் அர்த்தம். ஒருவரென்பதால் உபாதான காரணமென்றும், படைக்கிறாரென்பதால் நிமித்த காரணமென்றும் காட்டப்பட்டது, ஆனாலும் காரியத்திலுள்ள தோஷங்கள் பகவானிடத்தில் சம்பந்திக்கிறதில்லை.— வீரராகவீயம்.

---

## அத்தியாயம் 85

### கிருஷ்ணன் தாய் தந்தைகளுக்கு ஞானத்தை உபதேசித்தது.

ஒருகால் ராமகிருஷ்ணர்கள் இருவர்களும் வசுதேவரிடஞ் சென்று அவரை நமஸ்கரித்தார்கள். அப்பொழுது வசுதேவர் ராமகிருஷ்ணர்களுடைய மகிமையைப்பற்றி மகரிஷிகள் சொன்ன வார்த்தையை நினைத்து, அதில் மிக்க சிரத்தையால் ராமகிருஷ்ணர்களைச் சிலாகித்து, அவர்களை

நோக்கி, "ஓ கிருஷ்ண! கிருஷ்ண! மகாயோகியே! ஓ சங்கர்ஷண! இந்த லோகத்திற்குக் காரணர்களாகிய பிரதானம், புருஷன் இவர்களைவிட நீங்கள் இருவர்களும் மேலானவர்கள் என்பது எனக்குத் தெரியும். [அநேக சாதனங்களால் உண்டாகும் ஜகத்திற்குப் பிரதான புருஷர்கள் எப்படிக் காரணமானார்கள்? நாங்கள் அவர்களுக்கு எப்படிக் காரணர்களாக இருக்கக்கூடும் என்றால், அடுத்த சுலோகத்தால் சமாதானஞ் சொல்லப்பட்டிருக்கிறது.] எந்த இடத்தில், எதனால், எதனிடமிருந்து, எதற்கு, எதன்பொருட்டு, எது, எப்படி உண்டாகிறதோ, அப்படிப்பட்ட இந்தப் பிரபஞ்சமானது உம்முடைய சுரூபம்; நீர் பிரதானம் [போக்கியம்], புருஷன் [போக்தா] இவர்களுக்கும் அதிபதியாக இருக்கிறீர். [ஜகத்திற்குப் பகவான் காரணரென்று காட்டப்பட்டது.] ஓ சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாக இருப்பவரே! தம்மால் சிருஷ்டிக்கப்பட்ட பலவகையான ஜகத்தில் தாமே பிரவேசித்துக் கிரியா சக்தியாகவும், ஞான சக்தியாகவும் இருந்து காப்பாற்றுகிறீர். ஜகத்திற்குக் காரணங்களான ஸூத்ராத்மா முதலியவைகளுடைய சக்திகளெல்லாம் பரம புருஷராகிய உம்முடையதேயாம். பாணத்திற்குப் பிறரை அடிக்கக்கூடிய சக்தி இயற்கையல்ல. அது புருஷனுடையதேயாம். அதுபோல் பரம புருஷனுடைய சக்தியால் ஸூத்ராத்மா முதலியவைகள் ஜகத்திற்குக் காரணங்களாகின்றனவே ஒழிய அவைகளுக்கு சுயமாகச் சக்தியில்லை. ஏனென்றால், அவைகள் அசேதனங்கள்; ஆத்மாவோ சேதனன். இவர்களுக்கு ஸாம்யமில்லை. ஆனதால் பரம புருஷனுடைய சேஷ்டையால் அவை சேஷ்டிக்கின்றன. அதுவே அவைகளுக்குச் சேஷ்டையென்று சொல்லப் படுகிறது. (பிராணன் முதலியவை சுயமான சக்தியுள்ளவைகள் அல்ல

என்று அடுத்த மூன்று சுலோகங்களால் காட்டப்படுகிறது.) மேலும், சந்திரனுடைய காந்தியும், அக்னியின் தேஜசும், சூரியனுடைய பிரபையும், நட்சத்திரங்கள், மின்னல் இவைகள் பிரகாசிப்பதும், மலைகள் அசையாமல் இருப்பதும், பூமியின் வாசனையும் உண்மையில் பகவானாகிய உம்முடைய சுரூபமேயாம். [அந்தப் பிரகாசத்தில் சூரியன் பிரகாசிப்பதில்லை. சந்திரனும், நட்சத்திரங்களும், மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை அப்படியிருக்க, அக்னி எப்படிப் பிரகாசிக்கும்? அவர் பிரகாசத்தை அனுசரித்தே எல்லாம் பிரகாசிக்கின்றன. அவருடைய காந்தியால் எல்லாம் பிரகாசிக்கிறது என்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. சூரியனிடத்திலிருக்கும் தேஜஸானது எப்படி சகல ஜகத்தையும் பிரகாசிக்கச் செய்கிறதோ, அந்தத் தேஜசும், சந்திரனிடத்திலும், அக்னியிடத்திலும் இருக்கும் தேஜசும் என்னுடையதென்று தெரிந்துகொள். [பகவத்கீதா] ஓ தேவ! ஜலமும், அவைகளின் ரசமும், பிறரைத் திருப்திசெய்யும் குணமும், ஜீவிக்கச்செய்யும் குணமும் உம்முடைய சுரூபம். பின்னும் வாயுவின் வேகம், பலம், சேஷ்டை, நடை ஆகிய இவைகளும் உம்முடையதேயாம் மேலும், நீர் கிழக்கு முதலிய திக்குகளாகவும், அதன் அவகாசங்களாகவும் (வெளிகள்), ஆகாயமாகவும், அதனை ஆசிரயித்த சப்தமாகவும், நாதமாகவும், ஓங்காரமாகவும், உருவங்களைத் தனித்தனியாகக் காண்பிக்கும் நாமதேயங்களாகவும் இருக்கிறீர். இந்திரியங்கள் தங்கள் தங்கள் விஷயங்களைப் பிரகாசிக்கச் செய்யும் சக்தியும் நீரே. அவைகளுக்கு அதிஷ்டான தேவதைகளும் நீரே. பின்னும் புத்தியின் வியவசாய சக்தியும் (நிச்சயிப்பது), முந்தி நடந்த விஷயங்களை நினைக்கும் சக்தியும் நீரே. பூதங்

களுக்குக் காரணமாகிய தாமஸ அகங்காரமும் நீரே. இந்திரியங்களுக்குக் காரணமாகிய ராஜஸமான அகங்காரமும் நீரே. அதிதெய்வம், அத்யாத்மம் என்று பலவகையாகக் கற்பிக்கப்படும் தேவர்களுக்குக் காரணமான ஸாத்விக அகங்காரமும் நீரே. ஸம்ஸாரிகளான ஜீவர்களுக்கு ஸம்ஸாரத்தை உண்டுபண்ணும் பிரதானமும் நீரே. மண்ணால் செய்யப்பட்ட குடம் முதலியவைகளும், ஸ்வர்ணத்தால் செய்யப்பட்ட வளை முதலிய ஆபரணங்களும் நசித்தாலும், அவைகளுக்குக் காரணமாகிய மண், தங்கம் இவைகள் எப்படி நாசமடையாமல் இருக்கின்றனவோ, அப்படி அழியக்கூடிய ஜகத்திலுள்ள பதார்த்தங்களில் நாசமற்றவராகிய பரமபுருஷன் சேர்ந்திருந்தாலும் அந்த வஸ்துக்கள் அழியும்பொழுது தாம் நாசமடையாமல் அவைகளுக்குக் காரணமாகவும், ஸத்தியமாகவும் இருக்கிறார். மேலும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களும், அவற்றின் விருத்திகளான மஹத்தத்துவம் முதலியவைகளும், பரப்பிரம்மமாகிய உம்மிடத்தில் யோகமாயையால் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆனதால், ஜகத்தில் காணப்படும் வஸ்துக்கள் யாவும் அநித்தியங்களேயாம். அவைகள் உம்மிடத்திலிருப்பதாக எப்பொழுது கற்பிக்கப்படுகின்றனவோ, அப்பொழுது அவைகள் உண்மைபோல் தோற்றுகின்றன. நீரும் அவைகளில் பிரவேசித்தவர் போல் தோன்றுகிறீர். மற்ற காலங்களில், ஒருவராகவும், விகற்பமில்லாதவராகவும் இருக்கிறீர். இப்படிப்பட்ட சகல ஜகத் சுரூபியான உம்முடைய உண்மையை அறியாமல் [பரமாத்மாவிற்குப் பிரபஞ்சத்தின் சம்பந்தமில்லை என்பதை] தேகம் முதலியவைகளில் அபிமானத்தை அடைந்து, அதனுல் கர்மங்களைத் தாங்கள் செய்வதாக அபிமானித்து, ஜீவர்கள் ஸம்ஸாரத்தை அடைகிருர்கள். சகல ஜகத்திற்

கும் அதிபதியான ஓ பகவான்! இப்படி அஞ்ஞானத்தால் ஸம்ஸார சக்கரத்தில் சுழன்றுகொண்டிருக்கும் ஜீவர்களுக்கு மனித ஜன்மம் கிடைப்பது மிக்க அரிது. அதிலும் குருடு, ஊமை இவையில்லாமல் எல்லா இந்திரியங்களுடன் நல்ல சரீரத்தை அடைவது அரிதிலும் அரிது. அப்படிப்பட்ட ஜன்மத்தை அடைந்தும் நான் உம்முடைய மாயையால் மோகித்து உம்மைத் தியானிக்காமல் காலத்தை வீணில் கழித்தேன். க்ஷேமத்தைக் கொடுக்கும் உபாயத்தைச் செய்யத் தவறினேன். மேலும், நீர் தேகத்தை நான் என்றும், புத்திரன், களத்திரம் முதலியவைகளைத் தன்னைச் சார்ந்தவைகளென்றும் நினைப்பதாகிய சிநேக பாசத்தால் இந்த ஜகத்தைக் கட்டுகிறீர். (நான உம்மைச் சேவியாமல் ஸம்ஸாரியாய் இருப்பதற்கும் உம்முடைய மாயையே காரணமென்று தாத்பர்யம்.) ராமகிருஷ்ணர்களான நீங்கள் இருவரும் எங்களுடைய புத்திரர்களில்லை; பூமிக்குச் சுமையாக இருக்கும் அரசர்களைக் கொல்வதற்காக அவதரித்த பிரதான புருஷர்கள். இந்த விஷயம் உம்மாலேயே சொல்லப்பட்டிருக்கிறது. துக்கமடைந்தவர்களைக் காப்பாற்றுபவரான ஓ கிருஷ்ண! இந்திரிய விஷயங்களில் ஆசைகொண்டு, சரீரத்தை ஆத்மாவென்று நினைத்துப் பரமபுருஷராகிய உம்மைப் புத்திரன் என்று நினைத்துத் தவறிப்போனது போதும். உம்முடைய பாதத்தைச் சரணமடைகிறேன். அது பக்தர்களுடைய ஸம்ஸாரத்தை நிவர்த்திக்கக்கூடியது. பெரியோர்களால் கானஞ்செய்யக்கூடியவரே! "நான் ஒவ்வொரு யுகத்திலும் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக அவதாரங்களைச் செய்கிறேன். இப்பொழுது உங்களுக்குப் புத்திரனாக அவதரித்திருக்கிறேன்"

என்று பிரசவ கிருகத்தில் சொன்னீரல்லவா? அப்படிப்பட்ட நீர் ஆகாயம்போல் ஒன்றிலும் சம்பந்திக்காதவராலும் உற்பத்தியற்றவராலும் அவதரிக்கிறீர். ஆனதால் உம்முடைய மகிமையை யாரால் அறியமுடியும்?" என்றார்.

21—25. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் மிக்க வணக்கத்துடன், "ஓ அண்ணா! உம்முடைய புத்திரனாகிய என்னை உத்தேசித்து இப்படிச் சொல்வது பொருந்துமா? ஆனாலும் என்னை நிமித்தமாக வைத்துக்கொண்டு ஆத்மாவின் உண்மையை ஜகத்திற்குத் தெரியும்படி சொன்னீர். மேலும் நான், நீங்கள், இந்த பலராமன், இந்தத் துவாரகாவாசிகளான ஜனங்கள் ஆகிய சராசரங்களடங்கிய ஜகத் முழுவதும் பரப்பிரம்ம சுரூபமென்று நீர் நினைக்கவேண்டும். ஆகாயம் முதலிய பூதங்கள், அதன் காரியமான குடம் முதலியவைகளில் எப்படித் தோன்றுகின்றனவோ, மறைகின்றனவோ, அப்படி இந்த ஆத்மாவும் தம்மால் சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தில் பலவகையாகத் தோன்றுகிறார். ஆனாலும் ஆத்மா ஒருவர்; பிரபஞ்சம் பலவகையானது. ஆத்மா தாமாகப் பிரகாசிப்பவர்; ஜகத் மற்ற பிரகாசத்தால் பிரகாசிக்கக் கூடியது. ஆத்மா நித்ய வஸ்து; ஜகத் அநித்யமானது. ஆத்மா குணசம்பந்தம் இல்லாதது; பிரபஞ்சம் குணமுள்ளது" என்று சொன்னார். அதனைக் கேட்ட வசுதேவர் பேதபுத்தி அற்றவராகி, மிக்க பிரியமடைந்து மௌனமாக இருந்தார்.

26—32. அப்பொழுது சகல தேவதா சுரூபியாகிய தேவகியானவள், "கிருஷ்ணன் ஆசாரியருடைய புத்திரனை யமலோகத்திலிருந்து திருப்பிக் கொண்டுவந்தார்" என்பதைக் கேள்விப்பட்டு, அவ்விடம் வந்து மிக்க ஆச்சரிய

மடைந்து, கம்ஸனால் கொல்லப்பட்ட தமது குழந்தைகளை நினைத்துக் கண்ணீரைப் பெருக்கி, ராமகிருஷ்ணர்களை அழைத்து, "ஓ பலராம! ராம! அளவற்ற மகிமையுள்ளவரே! யோகேசர்களுக்கும் அதிபதியாகிய ஸ்ரீ கிருஷ்ண! உங்களைப் பிரஜாபதிகளுக்கும் அதிபதிகளென்றும், ஆதி புருஷர்களென்றும் அறிவேன். நீங்கள் காலத்தின் மகிமையால சாஸ்திர விரோதமாக நடக்கும் அரசர்களைக் கொன்று, பூமியின் சுமையை நிவர்த்திப்பதற்காக அவதரித்தவர்கள். ஓ ஜகத் சுரூபியே! உமமுடைய அம்சமாகிய புருஷனுடைய அபசம மாயை; அதன் சொற்ப பாகத்தால் ஜகத் படைக்கப் படுகிறது; காப்பாற்றப்படுகிறது; சங்கரிக்கப்படுகிறது; அப்படிப்பட்ட உம்மைச் சரணமடைகிறேன். வெகு காலத்திற்கு முன் மரணமடைந்து, யமலோகத்திலிருந்த குருவின் குழந்தையை ஆசாரியனுக்கு தட்சிணையாகக் கொடுத்தீர்களல்லவா? அதுபோல, கம்ஸனால் கொல்லப்பட்ட என்னுடைய குழந்தைகளைத் திருப்பிக் கொண்டுவரவேண்டும்" என்று கேட்டாள்.

33—46. இப்படி மாதாவினால் தூண்டப்பட்டு, ராம கிருஷ்ணர்கள் யோகமாயையின் மகிமையால் சுதல லோகஞ் சென்றார்கள். அவ்விடத்திலிருந்தச் பலி சக்கரவர்த்தி சகல ஜகத்திற்கும் தெய்வமும், தமக்கு முக்கிய தெய்வமுமான ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டவுடன் ஆசனத்திலிருந்து எழுந்திருந்து, அதிக ஆனந்தத்தால் பூரணமான இருதயமுள்ளவராகி, தம்முடைய பந்துக்களுடன் பகவானை நமஸ்கரித்தார். மேலும் அவர் உத்தமமான ஆசனங் கொடுத்து அவர்களை உட்காரச் செய்தார். பின்னும் அவர் அவர்களுடைய பாதங்களை அலம்பி, அந்த ஜலத்தைத் தம்முடைய

தலையில் புரோக்ஷித்துக்கொண்டதுமின்றி, தம்முடைய பரிவாரங்களுக்கும் புரோக்ஷித்தார். அந்தப் பாதத் தீர்த்தமானது பிரம்மதேவர் வரையிலுள்ள சகல ஜகத்தைப் பரிசுத்தப்படுத்தக்கூடியது. இன்னும் அந்த பலிச் சக்ரவர்த்தி உத்தமமான வஸ்திரம், ஆபரணம், சந்தனம், புஷ்பமாலை, தூபம், தீபம், பட்சணங்கள் ஆகிய இவைகளையும், தம்முடைய பணம், பந்துக்கள், சரீரம் முதலியவைகளையும் சமர்பித்துப் பகவானைப் பூஜித்தார். அதன் பின் பலிச் சக்ரவர்த்தி மிக்க பிரீதியுடன் பகவானுடைய பாதங்களைத் தியானஞ்செய்து, மயிர்க்கூச்சலுள்ளவராகி ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி, தழுதழுத்த வார்த்தையுடன், "அனந்தரும் (ஆதிசேஷன்) "எல்லாவற்றிலும் பருத்தவரும் [தம்முடைய படத்தின் ஒரு பக்கத்தில் சகல பூமியைத் தாங்குவதால்), எப்பொழுதும் ஆனந்த சுரூபியும், ஜகத்தைப் படைப்பவரும், ஸாங்கியம், யோகம், யாகம் இவைகளின் சுரூபியும், பரமாத்மாவும், பரப்பிரம்மமுமான உம்மை நமஸ்ரிக்கிறேன். உங்களுடைய தரிசனம் பிராணிகளுக்குக் கிடைப்பது அரிதானாலும் ரஜஸ், தமஸ் இந்த சுபாவமுள்ளவர்களான எங்களுக்கு உம்முடைய அனுக்கிரகத்தால் கிடைத்தது. நீர் சுத்த சத்திய சுரூபி; சாஸ்திரத்தாலறியக் கூடியவர். அப்படிப்பட்ட உம்மிடத்தில் சில தைத்தியர்களும், தானவர்களும், கந்தர்வர்களும், ஸித்தர்களும், வித்யாதரர்களும், உரகர்களும், யக்ஷர்களும், ராட்சதர்களும், பிசாசர்களும், பூதங்களும், பிரமத கணங்களும், நாகங்களும், மற்றுஞ் சிலரும் விரோத புத்தியை வைத்து ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்ற உத்தமகதியை அடைந்தார்கள். (பகவானிடத்தில் விரோதத்தால் எப்பொழுதும் அவரையே தியானஞ் செய்துகொண்டிருந்தமையால்

பக்தர்களைவிட மேலான கதியை அடைந்தார்கள்' என்று கருத்து.) ஓ தாமரை மலர்போன்ற கண்களுள்ளவரே! எண்ணமே அவரவர்களுடைய க்ஷேமத்திற்குக் காரணமாகிறது. சிலர் (சிசுபாலன் முதலியவர்கள்) விரோத புத்தியால் உண்டான பக்தியால் உம்முடைய சுரூபத்தை அடைந்தார்கள். சிலர் (கோபிகை முதலியவர்கள்) பகவானைப் பர்த்தாவென்று நினைத்து, பக்திசெய்து உத்தம கதியை அடைந்தார்கள். ஸத்வ குணமுள்ள தேவர்களும் அவர்களைப் போல் அந்தரங்க பக்தர்களாக இருக்கவில்லை. ஓ யோகேசர்களுக்கு அதிபதியே! யோகிகளாலும் உம்முடைய யோக மாயையின் சுருபம் இது, இம்மாதிரியென்று கண்டுபிடிக்க முடியவில்லை. அப்படியிருக்க, எங்களால் எப்படித் தெரிந்து கொள்ளமுடியும்? ஒன்றிலும் ஆசைப்படாதவர்களான யோகிகள் உம்முடைய பாதாரவிந்தத்தைத் தேடுகிறார்கள். அதனை விட்டுக் கிருகமாகிய பாழுங் கிணற்றில் நான் விழுந்திருக்கின்றேன். அப்படிப்பட்ட நான் அதிலிருந்து வெளியில வந்து, மரங்களுடைய அடியில் தானுக விழுந்திருக்கும் பழங்களைப் புசித்துச் சாந்த மனமுள்ளவனுகி, ஒருவனுக சஞ்சரிக்கும்படியாவது, பெரியோர்களுடன் சஞ்சரிக்கும் படியாவது அனுக்கிரகிக்கவேண்டும். ஓ சகல ஜீவர்களுக்கும் அதிபதியாக இருப்பவரே! எதனைச் சிரத்தையுடன் அனுஷ்டித்தால், விதி நிஷேதங்களுக்குக் கட்டுப்படாமல் இருப்பானே, அதனைச் சொல்லவேண்டும். என்னைப் பாப மற்றவனுகச் செய்யவேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

47—52. அதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் பலியை நோக்கி, "சுவாயம்புவ மந்வந்தரத்தில் மரீசியென்ற பிரஜாபதிக்கு ஊர்ணு என்பவளிடத்தில் ஆறு புத்திரர்கள் பிறந்

தார்கள். பின்பு ஒரு சமயம் பிரம்மதேவர் தம்முடைய புத்திரியினிடம ஆசைகொண்டு அவளைப் புணருவதற்கு முயற்சித்தார். அதனைக் கண்ணுற்ற மரீசியின புத்திரர்கள் பரிகாசஞ் செய்தார்கள். அந்தப் பாபத்தால் அவர்கள் அசுர ஜன்மத்தை யடைந்து, ஹிரண்யகசிபுவிற்குப் புத்திரர்களாக ஜனித்தார்கள். அவர்களை யோக மாயையால் தேவகியின் கர்ப்பத்தில் ஜனித்து, கம்சனால் கொல்லப்பட்டார்கள். இப்பொழுது தேவகி அந்தக் குழந்தைகளை நினைத்துத் துக்கப் படுகிறாள். அவர்கள் உன்னுடைய சமீபத்தில் இருக்கிறார்கள். மாதாவான தேவகியின் துக்கத்தை நிவர்த்திப்பதற்காக இந்தக் குழந்தைகளை அழைத்துப்போகவேண்டும். ஸ்மரன், உத்கீதன், பரிஷ்வங்கன், பதங்கன், க்ஷுத்ரப்ருத், கிருணி என்ற ஆறு புத்திரர்களும் என்னுடைய அனுக்கிரகத்தால் சாப விடுதலையை அடைந்து, கவலையற்றவர்களாகித் தங்களுடைய லோகத்தை அடைந்து, திரும்பவும் உத்தம கதியை அடைவார்கள்" என்று சொன்னார். அதனைக் கேட்ட பலிச் சக்ரவர்த்தி அவ்விருவர்களையும் பூஜித்தார். அதன் பின் ராமகிருஷ்ணர்கள் அந்தக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு திரும்பவும் துவாரகா நகரம் வந்து, மாதாவிடம் சமர்ப்பித்தார்கள்.

53—56. தேவகி அந்தக் குழந்தைகளைக் கண்டு மிகவும் சந்தோஷத்தை அடைந்து, அடிக்கடி உச்சி முகர்ந்தாள். அவளுடைய ஸ்தனங்களில் பால் பெருகியது. மேலும், அவள் குழந்தைகளைத் தழுவி மடியில் வைத்து, ஸ்தன்யபானஞ் செய்வித்தாள். எதனால் லோகம் சிருஷ்டிக்கப்படுகிறதோ, அப்படிப்பட்ட பகவானுடைய மாயையால் மோகித்து, தேவகி புத்திரர்களிடம் விசேஷ பிரியம் வைத்

திருந்தாள் அந்தக் குழந்தைகள் தேவகியின் ஸ்தன்யத்தைப் பானஞ் செய்தன. அது கிருஷ்ணன் புசித்து எஞ்சிய தாகையால் அமிருதமல்லவா? அதனைப் புசித்ததாலும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய திவ்ய சரீர ஸ்பரிசத்தாலும், "நாம் தேவர்கள் சாபத்தால் பூமியில் ஜனித்தோம்" என்ற ஞானத்தை அடைந்து, ஸ்ரீ கிருஷ்ணன், பலராமன், தேவகி ஆகிய இவர்களை நமஸ்கரித்து, சகல பிராணிகளும் பார்த்திருக்கும் பொழுது ஆகாய மார்க்கமாய்த் தங்கள் உலகஞ் சென்றன. இம்மாதிரியாக மரணம் அடைந்த புத்திரர்கள் திரும்பி வந்தது, ஆகாயஞ்சென்றது இவைகளைக் கண்ணுற்றதேவகி யானவள், 'இது ஸ்ரீ கிருஷ்ணனால் செய்யப்பட்ட மாயை என்று நினைத்து ஆச்சரியம் அடைந்தாள். ஓ பரத வம்சத்திய மகாராஜ! அனந்தராகிய பகவான் இம்மாதிரி அற்புதமான செய்கைகளைச் செய்திருக்கிறார். அவைகள் கணக்கிட முடியாதவை" என்று சுகர் சொன்னார்.

57—59. வியாஸ மகரிஷியின் புத்திரராகிய சுகரால் பரீக்ஷித்துக்கு உபதேசிக்கப்பட்ட இந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரிதம் சகல ஜனங்களுடைய பாபத்தைப் போக்கக் கூடியது; பக்தர்களால் பிரீதியுடன் கேட்கக்கூடியது. அப்படிப்பட்ட அமிருத கீர்த்தியான பகவானுடைய சரித்திரத்தை எவன் படிக்கிறானோ, எவன் பிறருக்குச் சொல்லுகிறானோ அவன் பகவானிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தி, க்ஷேமத்திற்கு இருப்பிடமான [பயமற்ற] பதத்தை அடைவான.

# அத்தியாயம் 86

## அர்ச்சுனன் சுபத்திரையை அபகரித்தது

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பிராமணா! ராமகிருஷ்ணர்களுக்குச் சகோதரியும், எனக்குப் பிதாமகியுமான சுபத்திரையை அர்ச்சுனர் எப்படி அபகரித்தார்? அதனைச் சொல்லவேண்டும்" என்றார்.

2—13. அதனைக்கேட்ட சுகர் அரசனை நோக்கி, "அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை செய்துவரும்பொழுது பூமியில் சஞ்சரித்துப் பிரபாஸ தீர்த்தஞ் சென்றான். அவ்விடத்தில் 'தமக்கு அம்மானுடைய புத்திரியாகிய சுபத்திரை என்பவளைப் பலராமன் துரியோதனனுக்கு விவாகஞ் செய்விக்க முயற்சிப்பதாகவும், மற்ற பந்துக்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை' என்றும் கேள்விப்பட்டு அவளைத் தாம் கல்யாணம் செய்துகொள்ள விரும்பி, சந்நியாசி வேஷம் பூண்டு, திருதண்டத்தை [மூன்று கழிகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி வைத்துக்கொள்ளுஞ் தண்டம்] தரித்து, துவாரகா நகரஞ் சென்றான். அவ்விடத்தில் பட்டணத்து ஜனங்களும் பலராமனும் உண்மையான சந்நியாசியென்று நினைத்துப் பூஜித்தார்கள். இப்படி ஜனங்களால் பூஜிக்கப்பட்டுத் தமது காரியத்துக்காக வர்ஷா காலத்தை அவ்விடத்தில் கழித்து வந்தான். ஒரு நாள் பலராமன் சந்நியாசியைத் தம்முடைய கிருகத்திற்கு அழைத்து வந்து, சிரத்தையுடன் பிக்ஷை செய்து வைத்தார். அதனை அர்ச்சுனன் ஒப்புக்கொண்டு அவருடைய கிருகத்தில் போஜனஞ் செய்தான். அப்பொழுது அந்தச் சந்நியாசி பலராமனுடைய கிருகத்தில் சுபத்திரையென்ற அழகிய பெண்ணைக் கண்டார். அவளைப் பார்த்தவுடன் அவளிடத்திலுள்ள பிரீதியால் கண்கள் மலர்ந்து,

மனங் கலங்கி அவளிடம் ஆசைப்பட்டார். அந்தப் பெண்ணும் ஸ்திரீகளுடைய மனதை அபகரிக்கக்கூடிய அந்தச் சந்நியாசியின் சரீரத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு வெட்கத்துடன் கடாக்ஷித்து அவரையே மனதில் தியானஞ் செய்து, அவரையே பார்த்துக்கொண்டு அவர் மீது காதல் கொண்டாள். அர்ச்சுனன் மிகவும் காமவெறி கொண்டு மனங் கலங்கி, அவளையே நினைத்துத் துக்கப்பட்டுக்கொண்டிருந்ததுமின்றி, அவளை அபகரிப்பதற்கும் சமயத்தை எதிர்பார்த்திருந்தான். இப்படியிருக்கும் சமயத்தில் ஒரு நாள் தேவதா தரிசனஞ் செய்வதற்காக எல்லோரும் வாகனத்தின் மீதேறி வெளியில் செல்ல, சுபத்திரையும் ரதத்தின் மீதேறி வெளியில் வந்தாள். அந்தச் சமயத்தில் வசுதேவர், தேவகி, கிருஷ்ணன் இவர்களுடைய அனுமதியால் அர்ச்சுனன் ரதத்தின்மேல் சுபத்திரையை அபகரித்து, அதற்குத் தடை செய்தவர்களைப் பாணங்களால் அடித்துத் துரத்தித் தனது நகரம் சென்றான். அது சிங்கம் மற்ற மிருகங்களை ஜயித்துத் தன்னுடைய பாகத்தை எடுத்துக்கொண்டாற்போலிருந்தது. பின்பு அதனைக் கேட்ட பலராமன் பருவகாலத்தில் சமுத்திரங் கலங்குவதுபோல மிக்க கோபங்கொண்டார். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் பலராமனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு சமாதானஞ் செய்தார். மற்ற பந்துக்களும் பலராமனுக்கு நல்ல வார்த்தை சொன்னார்கள். அதனால் பலராமனுடைய கோபம் தணிந்தது. பின்பு பலராமன் சந்தோஷத்துடன் யானை, குதிரை, ரதம், வேலைக்காரிகள், ஏராளமான பணம் முதலியவைகளை ஸ்திரீதனமாக அனுப்பினார். அதனால் யாதவர்களும் பாண்டவர்களும் விசேஷப் பிரீதியுள்ளவர்கள் ஆனார்கள்.

14—38. ஸ்ரீ கிருஷ்ணன் பக்தர்களிடத்தில் மிகவும் பிரியத்தைக் காண்பித்த மற்றொரு சரிதத்தைச் சொல்லுகிறேன், கேளும். கிருஷ்ணனுக்கு சுருததேவனென்று ஒரு பிராம்மணர் உண்டு. அவர் கிருஷ்ணனிடத்தில் எப்பொழுதும் பக்திசெய்து, அதனால் விஷயங்களில் ஆசையில்லாமல் சாந்தியை அடைந்தவர்; மிக்க விவேகமுள்ளவர். தெய்வச்செயலாகக் கிடைத்த அன்னத்தைக்கொண்டு தம்முடைய காரியத்தை முடித்துக்கொண்டு, சரீரம் நசிக்காமலிருப்பதற்கு எவ்வளவு அன்னம் வேண்டுமோ அவ்வளவைப் புசித்துக் கொண்டும், அதிகமாக ஆசைப்படாமல் வேதத்திற் சொல்லிய கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டும், மிதிலா நகரத்தில் கிருகஸ்தராக வசித்துவந்தார். அப்படியே அந்தத் தேசத்து அரசனாகிய 'பஹுளாச்வர்' என்பவரும் அகங்காரமற்றவராகிக் கிருஷ்ணபக்தராக இருந்தார். அவ்விருவர்களையும் அனுக்கிரகிப்பதற்காக பகவான் தாருகனால்கொண்டு வரப்பட்ட ரதத்திலேறி மிதிலா நகரஞ் சென்றார். அப்பொழுது நாரதர், வாமதேவர், அத்ரி, வியாசர், பரசுராமர், அஸிதர், அருணர், சுகராகிய நான், பிரகஸ்பதி, கண்வர், மைத்திரேயர், சியவனர் முதலிய மகரிஷிகளும் கிருஷ்ணன் பின் சென்றார்கள். சூரியன் உதயமாகும்பொழுது ஜனங்கள் அர்க்கியத்தைக் கையிலெடுத்துக்கொண்டு எழுந்திருந்து பூஜிப்பதுபோல தேசத்து ஜனங்களும் பூஜாதிரவியங்களைக் கையில் வைத்துக்கொண்டு பூஜித்தார்கள். மேலும் ஆனர்த்தம், குரு, ஜாங்கலம், வங்கம், மத்ஸ்யம், பாஞ்சாலம், குந்தி, மது, கேகயம், கோசலம், அர்ணம் ஆகிய தேசத்துப் புருஷர்களும், ஸ்திரீகளும் மற்றவர்களும் மேலான சிரிப்புள்ளதும், அழகான கண்களுள்ளதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தை மிக்க ஆவலுடன் பார்த்தார்கள். அப்பொழுது

பகவான் தம்மைத் தரிசித்ததால் அஞ்ஞானமற்றவர்களான அந்த ஜனங்களுக்குத் தத்துவ ஞானத்தை உண்டுபண்ணிக் கொண்டும், பாபத்தைப் போக்கக்கூடிய தமது கீர்த்தியைத் தேவர்களும் மனிதர்களும் கானஞ்செய்ய அதனைக் கேட்டுக் கொண்டு மெள்ள மெள்ள விதேகதேசம் சென்றார். இப்படி பகவான் வருகிறதைக் கேள்விப்பட்டு மிதிலா நகரத்தில்வசிக்கும் ஜனங்கள் பூஜைக்குரிய சாமான்களைக் கையிலெடுத்துக் கொண்டு எதிரில் வந்து அழைத்தார்கள். மேலும் அவர்கள் ஸ்ரீகிருஷ்ணனைத் தரிசித்து, தலையில் கைகளைக்கூப்பி நமஸ்கரித்ததுமின்றி முன்பு கேள்விப்பட்ட அந்த மகரிஷிகளுக்கும் நமஸ்காரஞ்செய்தார்கள். அப்பொழுது அந்தத் தேசத்து அரசனாகிய பஹுளாச்வரும், சுருததேவரும் தங்களை அனுக்ரகிப்பதற்காகவே பகவான் வந்திருக்கிறாரென்று நினைத்து அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். மேலும் அவர்கள் அஞ்ஜலி செய்து ஸ்ரீ கிருஷ்ணனையும் மற்ற மகரிஷிகளையும் தங்கள் கிருகத்திற்கு வந்து ஆதித்தியத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து, அவர்களுக்குப்பிரியத்தைச் செய்ய விரும்பி அவ்விருவருடைய கிருகத்திலும இரண்டு சுரூபத்துடன் பிரவேசித்தார். ஆனால் சுருததேவருடைய கிருகத்திற்குப் பகவான் சென்றது பஹுளாச்வருக்குத் தெரியாது; பஹுளாச்வருடைய கிருகத்திற்குச் சென்றது சுருததேவருக்குத் தெரியாது. அப்பொழுது பஹுளாச்வர் தம்முடைய கிருகத்திற்கு வந்த மகரிஷிகளை உத்தமமான ஆசனத்தில் உட்காரவைத்தார். அலைத்துக்களால் அந்த மகரிஷிகளுடைய பெயர்கள்கூடக் கேட்க முடியாதவை. மேலும் அந்த அரசன் மிக்க பக்தியுடன் மனத்தில் சந்தோஷத்தை

அடைந்து, ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி, அவர்களை நமஸ்கரித்து, அவர்களுடைய பாதங்களை அலம்பி, லோகத்தைப் பரிசுத்தப்படுத்தக் கூடிய அந்த ஜலத்தைத் தம் குடும்பத்தின்மீதும், தம் தலையிலும் புரோக்ஷித்துக்கொண்டார். பின்னும், சந்தனம், புஷ்பம், வஸ்திரம், ஆபரணம், தூபம், தீபம், அர்க்கியம், பசுக்கள், விருஷபம் ஆகிய இவைகளால் ஈசுவரனுக்கு ஒப்பான அந்த மகரிஷிகளைப் பூஜித்து, ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களை மடியில வைத்துப் பிடித்துக்கொண்டு சந்தோஷத்துடன், "ஓ பிரபுவே! நீர் சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும், சாட்சியாகவும், தாமாகப் பிரகாசிப்பவராகவும் இருக்கிறீர். அப்படிப்பட்ட உம்முடைய பாதாரவிந்தத்தை ஸ்மரித்துக் கொண்டிருந்த எங்களுக்குத் தரிசனங் கொடுத்தீர். உமக்கு அனந்தன் பந்துவாயிருந்தும், லக்ஷ்மீதேவி பத்தினியாக இருந்தும், பிரும்மதேவர் புத்திரனாக இருந்தும் நீர் உம்முடைய வார்த்தையை மெய்ப்பிக்கச் செய்வதற்காக எங் கண்ணுக்குப் புலப்பட்டீர். ஒரு விஷயத்திலும் ஆசையில்லாமல் சாந்தர்களாக இருக்கும் முனிகளுக்கு நீர் ஆத்மானந்தத்தைக் கொடுப்பவர். அப்படிப்பட்ட உம்முடைய உண்மையை அறிந்த எவன் உம்முடைய பாதத்தைச் சேவிக்காமல் விடுவான்? [ஒருவனும் விடமாட்டனென்று கருத்து.] நீர் ஸம்ஸாரிகளான ஜனங்களை அதிலிருந்து காப்பாற்றுவதற்காக யது வம்சத்தில் அவதரித்து, சகல ஜனங்களுடைய பாபத்தை நிவர்த்திக்கக்கூடிய அற்புதமான செய்கைகளைச் செய்து கீர்த்தியைப் பரவச்செய்தீர். ஸ்ரீ கிருஷ்ணனும், தடையற்ற ஞானமுள்ளவரும், நாராயண மகரிஷியாக அவதரித்துத், தவஞ் செய்பவருமான உமக்கு நமஸ்காரம். ஓ மிக்க மகிமை பொருந்தியவரே! சில நாள் என்னுடைய

கிருகத்தில் இந்த மகரிஷிகளுடன் வசித்து உம்முடைய பாத தூளியால் இந்த நிமி வம்சத்தைப் பரிசுத்தப்படுத்தும்" என்று கேட்டுக்கொண்டார். இப்படி பஹுளாச்வரால் பிரார்த்திக்கப்பெற்றுப் பகவான் மிதிலையிலுள்ள மனிதர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டு அவ்விடம் வசித்தார்.

39—50. சுருததேவரும் தமது கிருகத்திற்கு வந்த ஸ்ரீ கிருஷ்ணனையும், மகரிஷிகளையும் நமஸ்கரித்து மிக்க சந்தோஷத்துடன் வஸ்திரத்தை உயர எறிந்து பிடித்து நர்த்தனஞ் செய்தார். மேலும் அவர் பஹுளாச்வர்போலப் பலகை, தர்ப்பம், திருணம் முதலிய ஆசனங்களில் அவர்களை உட்காரவைத்து, நல்வரவாவென்று கேட்டு, பத்னியுடன் நமஸ்கரித்து அவர்களுடைய பாதங்களை அலம்பினர். அந்தத் தீர்த்தத்தால் தம்முடைய பந்துக்களுக்கு ஸ்நானஞ் செய்வித்ததுமன்றித் தாமும் ஸ்நானம் செய்தார். சகல மனோரதங்களையும் அடைந்தவர்போல் மிக்க ஆனந்தங் கொண்டார். பின்னுமவர் பழங்கள், பூஜா திரவியங்கள், விளாமிச்சம் வேர், வாசனையுள்ள தீர்த்தம், கஸ்தூரி முதலிய வாசனாதிரவியம், துளஸி, தர்ப்பம், தாமரை மலர், ஸத்வ குணத்தை விருத்திசெய்யக்கூடிய அன்னம் ஆகிய இவைகளைக்கொண்டு பூஜித்தார். அவைகள் பிறரை உபத்திரவிக்காமல் சம்பாதிக்கப்பட்டவை. "ஸ்ரீகிருஷ்ணனுடைய சுரூபபூதர்களும், சகல தீர்த்தங்களையும் சுத்தப்படுத்தக்கூடிய பாத தூளியுள்ளவர்களுமான இவர்களின் சேர்க்கை, கிருகமாகிய பாழுங்கிணற்றில் விழுந்து ஸம்ஸாரியாக இருக்கும் எனக்கு எப்படிக் கிடைக்கக்கூடும்" என்று தமக்குள் யோசித்து, சுகமாக உட்கார்ந்திருக்கும் அவர்களிடம் பத்னி,

புத்திரன், பந்துக்கள் இவர்களுடன் சென்று, அவர்களுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு, "எப்பொழுது நீர் இந்த ஜகத்தை ஸத்வம் முதலிய உம்முடைய சக்திகளால் படைத்து அதில் பிரவேசித்தீரோ, அப்பொழுதே நம்முடைய கண்ணுக்குப் புலப்பட்டீர். அப்படிப்பட்ட பரம புருஷனாகிய நீர் இப்பொழுது தரிசனம் கொடுத்தீர். படுத்துத் தூங்கும் புருஷன் மனத்தாலும் தன்னுடைய அவித்யையாலும் ஸ்வப்பன லோகத்தைச் சிருஷ்டித்து அதில் பிரவேசித்தவன்போல் எப்படித் தோன்றுகிறானோ, அது போல் நீரும் மாயையால் ஜகத்தைப் படைத்து, அதில் பிரவேசித்தவர் போலத் தோன்றுகிறீர். எப்பொழுதும் உம்முடைய சரித்திரங்களைக் கேட்போர்களும், சொல்லுகிறவர்களும், உம்மைப் பூஜிப்பவர்களும், நமஸ்கரிப்பவர்களுமான பக்தர்களுடைய சுத்தமான ஹிருதயத்தில் நீர் பிரகாசிக்கிறீர்; [எப்பொழுதும் சிரவணம், கீர்த்தனம் முதலிய பக்தி செய்பவர்களுக்கு இருதயத்தில் பிரகாசிக்கிறீர்; நான் உம்மை நேரில் பார்க்கிறேன். என்னுடைய பாக்கியம் அதிகம் என்று தாத்பரியம்.] ஜனங்களுக்கு நீர் இருதயத்தில் இருப்பவரானாலும் கர்மங்களிலேயே நோக்கமுள்ளவர்களுக்குத் தூரத்திலிருப்பவராக ஆகிறீர்; அகங்காரம் முதலியவைகளால் கிரகிக்க முடியாதவரானாலும் பக்தி செய்பவர்களுக்குச் சமீபத்திலிருப்பவராக ஆகிறீர்; மேலும் தேகம் முதலியவைகளில் அபிமானத்தை விட்டவர்களான பக்தர்களுக்குப் பரமாத்மாவாகப் பிரகாசிப்பவரும், தேகம் முதலியவைகளில் அபிமானமுள்ள சம்ஸாரிகளுக்கு மிருத்யு போன்ற ஸம்ஸாரத்தைக் கொடுப்பவரும், மகத் தத்துவம் முதலிய காரியத்தையும் பிரகிருதியையும் உபாதியாக உடையவரும், தம்முடைய மாயையால் மறைக்கப்படாதவரும், மற்றவர்களுடைய ஞானத்தை மறைப்பவருமான உம்மை

நமஸ்கரிக்கிறேன். உம்மை நேரில் தரிசிக்கும் வரையில் மனிதர்களுக்குக் கஷ்டமே யொழிய அதற்குப் பிறகு கஷ்டமில்லை. ஆனதால் நான் என்ன செய்யவேண்டும்? வேலைக்காரனாகிய என்னை உத்தரவு செய்யும்" என்று கேட்டுக்கொண்டார்.

51-58. அதனைக் கேட்ட பகவான், அண்டினவர்களுடைய துக்கத்தை நிவர்த்திப்பவராகையால், சுருததேவருடைய கையைத் தமது கையால் பிடித்து, சிரித்துக்கொண்டு "ஓ பிராமண! இந்த மகரிஷிகள் உம்மை அனுக்கிரகிப்பதற்காக இவ்விடம் வந்திருக்கிறார்கள். இவர்கள் தங்களுடைய பாத தூளிகளால் லோகங்களைப் பரிசுத்தப்படுத்திக்கொண்டும், என்னை இருதயத்தில் தியானித்துக்கொண்டும் சஞ்சரிக்கிறார்கள். தேவர்களும், புண்ணிய தீர்த்தங்களும், புண்ணிய க்ஷேத்திரங்களும் தரிசனம் கொடுப்பது, பூஜிப்பது இவைகளால் மனிதனைத் தாமதித்துப் பரிசுத்தப்படுத்துகின்றன. அவைகளுக்கு அவ்விதமான யோக்கியதையும் ஸாதுக்களுடைய பார்வையாலேயே கிடைக்கின்றன. பிராம்மணன் ஜன்மத்தாலேயே சகலப் பிராணிகளில் சிறந்தவன்; அதிலும் தபஸ்வியாக இருப்பவன் சிறந்தவன். அதிலும் ஞானம் உள்ளவன் சிறந்தவன். அதிலும் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷிப்பவன் மிகச் சிறந்தவன். அதிலும் என்னை உபாசிப்பவன் சிறந்தவனென்பதில் என்ன ஆட்சேபம்? நான் சகல வேத சுரூபியாக இருக்கிறேன். பிராம்மணன் சகல வேத சுரூபியாயிருக்கிறான். ஆனதால் பிராமணனைக் காட்டிலும் நான்கு கைகளுள்ள இந்த சுரூபம் எனக்கு இஷ்டமானதல்ல. இதை அறியாத ஜனங்கள் பிரதிமையை தேவனென்று நினைத்து, பிராம்மண சுரூபியாக இருக்கும் என்னை அவமதிக்கிறார்கள். அசையும் பொருள், அசையாப் பொருள்

இவைகளடங்கிய ஜகத்தும், அதற்குக் காரணமாகிய மகத் தத்துவம் முதலியவைகளும் பகவானுடைய சங்கற்பத்தால் உண்டானவை. ஆனதால் எல்லாம் பகவத் சுரூபம் என்று பிராம்மணன் தெரிந்துகொள்கிறான். ஆனதால் இந்த மகரிஷிகளைச் சிரத்தையுடன் எப்பொழுதும் நீர் பூஜிக்கவேண்டும். பிராம்மணர்களைப் பூஜித்தால் என்னை நேரில் பூஜித்ததாகும். பிராம்மணர்களை அவமானஞ் செய்து என்னைப் பலவகையான பூஜா திரவியங்களால் பூஜித்தாலும் அது பயனைக் கொடுக்கிறதில்லை" என்று சொன்னார்.

59—60. ஸ்ரீ கிருஷ்ணனால் ஆஞ்ஞாபிக்கப்பட்டு, சுருததேவர் ஸ்ரீ கிருஷ்ணனையும் இந்த மகரிஷிகளையும் ஒன்றாக நினைத்துப் பூஜித்து உத்தம கதியை அடைந்தார். பஹுளாச்வரும் அப்படியே பிராம்மணர்களைப் பூஜித்து உயர்ந்த பதத்தை அடைந்தார். ஓ பரீக்ஷித்து மகாராஜனே! பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ணன் அவ்விடத்தில் சில காலம் வசித்து, சகல வேதங்களும் பரமாத்மாவையே நிரூபிக்கின்றன என்பதைச் சுருததேவருக்கும் பஹுளாச்வருக்கும் உபதேசித்து, த்வாரகா நகரஞ் சென்றார்.

---

## அத்தியாயம் 87

பரீக்ஷித்து மகாராஜன் சுகரை நோக்கி, "ஓ பிராம்மணா! சகல வேதங்களும் குணமுள்ள வஸ்துவைச் சொல்லக்கூடியவைகள். பிரம்மமோ இப்படிப்பட்டதென்று குறிப்பிட முடியாதது; குணங்களற்றது; காரியம், காரணம் இவைகளை விட மேலானது. [ஒன்றிலும் சம்பந்தப்படாதது.] அப்படிப்பட்ட பிரம்மத்தை வேதங்கள் எப்படி நேராக நிரூபிக்கின்றன?" என்று கேட்டார்.

## நோட்டு

முன் அத்தியாயக் கடைசியில் எல்லா வேதங்களும் பிரம்மத்தையே நிரூபிக்கின்றனவென்று பகவான் பக்தர்களுக்கு உபதேசித்து, துவாரகைக்குச் சென்றார் என்று சொன்னதைக் கேட்டு அரசர் சந்தேகித்துக் கேட்கிறார். வேதங்கள் பதக் கூட்டங்கள் அடங்கியவையல்லவா? பதங்கள் நான்கு வகையுள்ளன. 1. ஜாதி சப்தங்கள். 2. குண சப்தங்கள். 3. கிரியா சப்தங்கள். 4. பெயர்ச் சொற்கள். பிராம்மண என்ற சப்தமானது அந்த ஜாதியுள்ளவர்கள் எல்லாரையும் சொல்வதால் அதுபோன்றவை ஜாதி•பிரவர்த்தி நிமித்தங்கள் எனப்படுகின்றன. சுக்ல என்ற சப்தம் வெண்மை என்ற குணமுள்ள வஸ்துக்கள் எல்லாவற்றையும் சொல்லுகிறது. அதனால் இதுபோன்றவை குணப்பிரவிருத்தி நிமித்தங்கள் எனப்படுகின்றன. பாசக என்ற சப்தமானது சமைக்கும் தொழிலுள்ளவர்களைச் சொல்வதால் இதுபோன்றவை கிரியாப் பிரவிருத்தி நிமித்தங்களெனப்படுகின்றன. அர்த்தத்தைக் காண்பதற்கு சப்தத்தில் விருத்தியென்ற ஒரு வியாபாரமிருக்கிறது. அது முக்கியம், லக்ஷணை, கௌணமென்று மூவகை உள்ளது. அவைகளில் முக்கிய விருத்தியென்பது யோகம், ரூடம், யோகரூடமென்று மூவகையுள்ளது. தாசரதி என்றால் தசரதருடைய குமாரனைக் காட்டுகிறது. இது காரணப் பெயராம். தேவதத்தனென்றால் ஒருவனுடைய பெயர். இது ரூடம் (இடுகுறி). பங்கஜம் என்றால் தாமரையைக் குறிக்கிறது. ஆனால் அந்தச்சப்தத்திற்குச் சேற்றில் முளைத்தது என்ற அர்த்தமிருந்தாலும், சேற்றில் முளைக்கும் அல்லி முதலியவைகளை அது குறிக்கிறதில்லை. ஆனதால் அது யோகாரூடம் எனப்படுகிறது (காரண இடுகுறி). லக்ஷணை என்ற இரண்டாவது விருத்தியானது, முக்கிய

விருத்தியால் ஏற்படும் அர்த்தம் அன்வயிக்காத இடத்தில் உபயோகப்படும். 'கங்காயாம் கோஷ' என்ற வாக்கியத்திற்குக் கங்கையில் இடைச்சேரி என்று முக்கிய விருத்தியால் அர்த்தம் ஏற்படுகிறது. ஆனால் கங்கையின் ஜலத்தில் இடைச்சேரி இருக்க முடியாதானதால் அந்த அர்த்தம் பொருந்தவில்லை. இந்த இடத்தில் லக்ஷணா விருத்தியை உபயோகித்து, கங்காயாம் என்பதற்கு கங்கையின் கரை அர்த்தமென்று கொள்ளவேண்டும். இது லக்ஷணா விருத்தி எனப்படுகிறது. 'அக்னிர் மாணவக' என்ற இடத்தில் பிரம்மசாரி அக்னியாக இருக்கிறான் என்று அர்த்தமேற்பட்டாலும், அந்த அர்த்தம் பொருந்தாதானதால் அக்னியின் குணம் உள்ளவனென்று அர்த்தம் கொள்ளவேண்டும். இது கௌண விருத்தி எனப்படுகிறது. இவைகளில் அவாந்திர பேதங்கள் அதிகமிருக்கின்றன. 'அப்படிப்பட்ட சப்தங்களின் கூட்டமாகிய வேதம் பிர்ம்மத்தை எப்படி நிரூபிக்கும்? பிர்ம்மத்திற்கு ஜாதியில்லை. ஆனதால் இன்ன ஜாதியுள்ளதென்று குறிப்பிட முடியாது. குணமில்லாததால் குண சப்தங்களால் நிரூபிக்கமுடியாது. கிரியை இல்லாததால் கிரியா சப்தங்களாலும் காட்டமுடியாது. ஒரு வகையாலும் குறிப்பிட முடியாத வஸ்துவை வேதங்களால் எப்படிக் காட்டமுடியும்? முக்கிய விருத்தியால் சப்தங்கள் பிர்ம்மத்தைக் காட்ட முடியாவிடினும், லக்ஷணா விருத்தியை உபயோகிக்கலாமோ என்றால் அதுவும் பொருந்தாது. அந்த பிர்ம்மம் காரிய காரண சம்பந்தமில்லாததானதால் முக்கிய விருத்தியால் ஏற்படும் காரிய காரணமாகிய அர்த்தத்தின் சம்பந்தமற்றதை லக்ஷணா விருத்தியால் எப்படிக் காட்டக்கூடும்? குண சம்பந்தமற்றதால் கௌணவிருத்தியும் உபயோகப்படாது. அப்படி இருக்க,

சப்தராசியான வேதம் எந்த விருத்தியைக்கொண்டு பிரம்ம மாகிய அர்த்தத்தைக் காட்டுகிறது என்று அரசருடைய கேள்விக்குத் தாத்பரியம்.

வீரராகவீயத்தில்:— பிராம்மணன் சகல வேத சுரூபி; நான் சகல தேவ சுரூபி என்று பகவான் 86-வது அத்தியா யத்தில் சொல்லியிருப்பதால், வேதமாகிய பிரமாணத்தால் பிர்மத்தை அறியவேண்டுமென்று தெரியவருகிறது. 85-வது அத்தியாயத்தில் பலிச் சக்கரவர்த்தி பகவானைத் தோத்திரம் செய்தவிடத்திலும், 84-வது அத்தியாயத்தில் மகரிஷிகளுடைய வார்த்தையாலும் மேற்காட்டிய விஷயம் நன்றாகக் காட்டப்பட்டிருக்கிறது. "எல்லா வேதங்களும் எந்தப் பதத்தைச் சொல்லுகின்றனவோ, சகல தவங்களும் எதனைச் சொல்லுகின்றனவோ" என்ற சுருதியாலும், "சகல வேதங்களால் அறியக்கூடியவன் நானே" என்ற ஸ்மிருதியாலும், பிர்மம் சித்தைக் காட்டிலும், அசித்தைக் காட்டிலும் விலக்ஷணமென்று காட்டப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட பிர்மத்தை "ஸத்யம் ஞானமனந்தம்", "எவன் எல்லாவற்றையும் அறிந்தவனோ" என்ற சுருதிகள் நிரூபித்தாலும், "இந்த ஆத்மா பிர்மம்," "நீ அதாகிறாய்," "இதெல்லாம் பிர்மம்" என்ற சுருதிகளிலுள்ள பதங்கள் சித்தையும் அசித்தையும் சொல்பவைகளானதால் அவைகள் விலக்ஷணமான பிர்மத்தைச் சொல்லுகின்றன என்பது எப்படிப் பொருந்துமென்று சந்தேகித்து அரசர் சுகரைக் கேட்கலானார். வேதங்கள் ஜாதி, குணம், கிரியை இவை களுக்குள் ஒன்றை நிமித்தமாக வைத்துக்கொண்டு, அர்த் தத்தைக் காண்பிக்கும் சுபாவமுள்ளவைகளல்லவா? அப்படிப்பட்ட சப்தங்கள் அவைகளுள்ள சித், அசித் இவையாகிய அர்த்தங்களைச் சொல்லுமே யொழிய, அவை களுக்கு விலக்ஷணமான வஸ்துவை எப்படிச் சொல்லும்?

பொருளை உணர்த்துவதற்குக் காரணமான ஜாதி முதலிய வைகள் பிர்ம்மத்தினிடமில்லையே. லக்ஷணா விருத்தியால் பிர்ம்மமாகிய பொருளை வேதங்கள் உணர்த்துகின்றன என்று சொல்வது சரியல்ல. மேற்காட்டிய சுருதிகளாலும், ஸ்மிருதிகளாலும் முக்கிய விருத்தியைக்கொண்டே வேதங் கள் பரமாத்மாவை உணர்த்துகின்றனவென்று தெரியவரு கிறது. வேத வாக்கியங்களில் சில முக்கிய விருத்தியாலும், சில வாக்கியங்கள் லக்ஷணா விருத்தியாலும் பிர்ம்மத்தைச் சொல்லுகின்றனவென்று சொல்வதும் பொருந்தாது. எல்லா வேதங்களும் என்று சர்வ பதமிருக்கிறது என்பதை மனத்தில் வைத்துக்கொண்டு, வேதங்கள் முக்கிய விருத்தி யால் எப்படிப் பிர்ம்மத்தைச் சொல்லக்கூடுமென்று அரசர் கேட்டார். சேதனம் போன்றதென்றாவது, அசேதனம் போன்றதென்றாவது பிர்ம்மம் குறிப்பிட முடியாதது. ஏனென்றால், சேதனம், அசேதனம் இவைகளைவிட அது விலக்ஷணமானது. (வேறு)

விஜயத்வஜீயத்தில் :— அளவற்ற வேதங்களால் வர்ணிக்கப்படும் குணங்களுள்ளது எந்தப் பிர்ம்மமோ அதுவே ஸ்ரீ கிருஷ்ணனென்ற திவ்ய நாமத்துடன் அவ தரித்திருக்கிறது. அதனால் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் எல்லா ஜனங்களும் பக்தி செய்யவேண்டும். மற்ற விஷயங்களில் வைராக்கியத்தை அடையவேண்டும் என்ற விஷயத்தை இந்த அத்தியாயத்தில் நாரதருக்கும் நாராயண மகரிஷிக் கும் நேர்ந்த சம்வாதமாகிய இதிஹாஸத்தால் காட்டுவதற் காகப் பரீக்ஷித்து சுகரைக் கேட்டார். "சகல வேதங்களும் எந்தப் பதத்தைச் சொல்லுகின்றனவோ," என்று சுருதி யில் சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்கள் பிரம்மத்தை முக்கிய விருத்தியால் (நேராக) சொல்லுகின்றனவா ?

அல்லது லக்ஷணா விருத்தியால் சொல்லுகின்றனவா? எப்படிச் சொல்லுகின்றன? ஏனென்றால், பிர்ம்மம் குறிப்பிடக் கூடியதல்லவே. [முக்கிய விருத்தியால் காட்ட முடியாதென்று தாத்பரியம்.] அதனால் எனக்கு உண்டாயிருக்கும் ஸம்சயத்தை நிவர்த்திக்கவேண்டுமென்று அரசர் ர்.

2. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, ஜீவர்கள் விஷயங்களை அநுபவிப்பதற்காகவும், கர்மங்களை அநுஷ்டிப்பதற்காகவும், லோகாந்திரத்தில் அந்தந்த போகத்தை அநுபவிப்பதற்காகவும், மோக்ஷத்தை அடைவதற்காகவும், ஈசுவரன் புத்தி, இந்திரியங்கள், மனம், பிராணன் ஆகிய இவைகளைச் சிருஷ்டித்தார்.

நோட்டு

மூலத்தில் பிரபுவென்ற பதத்தால் உபாதிகளுக்கு வசப்படாதவர் என்று அர்த்தம் ஏற்படுவதால் நித்தியமுக்தனென்று தெரியவருகிறது. ஜீவர்களுக்காக ஈசுவரன் ஜகத்தைச் சிருஷ்டிக்கிறாரேயொழிய வேறில்லை. ஆனாலும் பகவானுடைய சுரூபத்தை வேதங்கள் நிரூபிக்கவில்லை என்று சொல்லமுடியாது. ஆனதால் ஏதாவது ஒரு விருத்தியால் வேதங்கள் பிர்ம்மத்தைச் சொல்லுகின்றனவென்பது நிச்சயம். அந்த விருத்தி இன்னதென்று விசாரிக்கவேண்டும். "எவன் ஸர்வஞ்ஞனோ," "எவன் எல்லாவற்றிற்கும் அதிபதியோ," "அது பார்த்தது", "அது தேஜஸைச் சிருஷ்டித்தது" என்ற அநேக சுருதிகள் எல்லாவற்றையும் அறிந்தவரென்றும், எல்லாவற்றிற்கும் அதிபதியென்றும், எல்லாவற்றிற்கும் நியந்தாவென்றும், எல்லாராலும் உபாசிக்கக்கூடியவர் என்றும், எல்லாக் கர்மங்களுக்கும் பலத்தைக் கொடுக்கக்கூடியவர் என்றும், ஸமஸ்த குணங்களுக்கும்

இருப்பிடமென்றும், ஸச்சிதாநந்த சுரூபியென்றும் பரமாத்மாவைச் சொல்லுகின்றன. மேலும் "நீ அதாகிறாய்" என்ற மகா வாக்கியம், ஜீவனே அப்படிப்பட்ட பரப் பிர்ம்மமென்று ஐக்கியத்தைச் சொல்லுகிறது. அந்த வாக்கியங்களில் "நீ, அது" என்பதைச் சொல்லும் பதங்கள் இரண்டும் ஒரே அர்த்தத்தை உணர்த்துகின்றன என்று தோற்றுகிறது. அவ்விரண்டு பதங்களுக்கும் பிர்ம்மம அர்த்தம் என்று சொன்னால்தான் பொருந்தும். ஜீவனே சிலவற்றை அறிந்தவன். பிர்ம்மமோ எல்லாவற்றையும் அறிந்தது. இருவர்களிடத்திலுமுள்ள விருத்தமான "சில எல்லாம்" என்பதைத் தள்ளிவிட்டால் இருவர்களிடத்திலும் ஞானம் என்பது தொடர்ந்திருக்கிறது. அப்பொழுது இரண்டு பதமும் ஒரே அர்த்தத்தை உணர்த்துகிறதென்று சொல்லக்கூடும். இதுவே ஐஹதஜஹல்லக்ஷணை எனப்படுகிறது. இப்படிச் சொல்வதால் மேற்காட்டிய சுருதிகள் நிர்க்குணமான பிர்ம்மத்தையே சொல்வதாயிற்று. "ஸ்தூலமல்ல, அணுவல்ல" என்றது முதலிய சுருதிகள் உபாதிகளில்லை என்று சொல்வதால், நிர்க்குண பிர்ம்மத்தையே சொல்லுகின்றன. இந்த சுருதி கீதையின் ஆரம்பத்திலும், முடிவிலும் சொல்லியிருப்பதைப் பார்த்தால் உபாதிகளைத் தடுத்து [நிஷேத முகமாக] வேதங்கள் பிர்ம்மத்தைச் சொல்லுகின்றன என்று ஏற்படுகிறது. உபாஸனையைச் சொல்லும் சுருதி வாக்கியங்கள் பிர்ம்ம ஞானத்திற்கு சாதனங்களாக இருப்பதால் பிர்ம்மத்தைப் பரம்பரையாகச் சொல்லுகின்றன.

வீரராகவீயத்தில்.— "ஜகத்தைச் சிருஷ்டித்து அதில் பிரவேசித்தார். அதில் பிரவேசித்து ஸத்தாகவும், த்யத்தாகவும் [பஞ்சபூதங்கள்] ஆனார்." இது போன்ற சுருதி

களால் பிர்ம்மம் சேதன சரீரமாகவும், அசேதன சரீரமாக வும் இருப்பதால் அந்தந்த சப்தங்கள் சேதனங்களையும், அசேதனங்களையும் சொன்னாலும் பிர்ம்மத்தையே நிரூபித்த தாக ஆகிறது என்ற பதிலை மனத்தில் வைத்துக்கொண்டு முதலில் சிருஷ்டியை மாத்திரம் சொல்லுகிறார். ஈசுவரன் புத்தி முதலியவைகளைச் சிருஷ்டித்தார் என்பதால் தாம் அந்தராத்மாவாகையால் புத்தி முதலிய சப்தங்களுக்கு அர்த்தமாகிய மகாபூதம் வரையிலுள்ள வஸ்துக்களாகத் தம்முடைய ஆத்மாவை மாற்றிக்கொண்டு சேதனம், அசே தனம் இவைகளடங்கிய ஜகத் சுரூபியாகி, அந்தச் சப்தத் திற்கு அர்த்தமாக ஆனார் என்று தாதபரியம். லோகத்தி லுள்ள சேதனம், அசேதனம் ஆகிய பதார்த்தங்கள் எல் லாம் பரமாத்மாவை விட்டு வேறாக இல்லாததால் விசேஷ ணங்களாகிய அந்தந்தப் பதார்த்தங்களை அந்தந்தச் சப்தங் கள் சொல்வதாலும், விசேஷ்யமாகிய பரமாத்மாவையும் முக்கிய விருத்தியாலேயே சொல்லுகின்றன. பரமாத்மா மிக்க கருணையுள்ளவரும், ஸமஸ்த காமங்களை அடைந்த வரும், பிரயோசனத்தை அபேக்ஷிக்காதவருமானதால் ஜகத்தை எதற்காகப் படைத்தார் என்றால், ஜீவர்களுக்கு இந் திரியங்களடங்கிய சரீரத்தைக் கொடுத்து, அதனால் தம்மை உபாஸிக்கும்படி செய்து, அவர்களை அநுக்கிரகிக்கவேண்டு மென்ற விருப்பத்தாலேயே ஜகத்தைச் சிருஷ்டித்தாரென் பது மூலத்திலுள்ள மூன்று பதங்களால் தெரிகிறது: இவை எல்லாவற்றையும் அந்தப் பரமாத்மா தம்முடைய சங்கற்பத்தாலேயே ஏன் செய்யக்கூடாது? இதற்காக ஜகத்தைச் சிருஷ்டிக்கவேண்டுமா என்றால், பரமாத்மா ஜகத்தைச் சிருஷ்டித்தது விளையாட்டேயொழிய வேறில்லை. இது 'கல்பனய' என்ற பதத்தால் காட்டப்படுகிறது.

விஜயத்வஜீயத்தில்:— ஸத்வம் முதலிய குணங்கள் இல்லாததால் நிர்க்குணமும், ஞானம், ஆனந்தம் முதலிய குணங்களுள்ளதுமான பரப்பிரம்மத்தை வேதங்கள் முக்கிய விருத்தியால் நிரூபிக்கின்றன என்று பதில் சொல்வதற்காக இந்த சுலோகம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. புத்தி முதலியவைகளை ஈசுவரன் சப்த பிரவர்த்திக்காகவும், புண்ணியத்திற்காகவும், [அத்தியயன பிரவசனத்தால்] ஆத்மசுரூப ஞானத்திற்காகவும், மோக்ஷத்திற்காகவும் சிருஷ்டித்தார். "முதலில் மனத்தால் நினைக்கிறான். பின்பு வாக்கியத்தினால் வியவகரிக்கிறான்" என்ற சுருதியின்படி சப்த பிரவிர்த்திக்கு புத்தி முதலியவைகள் சாதனங்களாக இருக்கின்றன. "இந்த ஆத்மா சத்தியத்தாலும், தவத்தாலும், நல்ல ஞானத்தாலும், பிரம்மசரியத்தாலும் அடையக்கூடியவர்" என்ற சுருதியின்படி ஞானம் பிரம்மத்தை அடைவதற்குச் சாதனமென்று ஏற்படுகிறது. "அந்தப் பரமாத்மாவை இம்மாதிரியாகத் தெரிந்துகொண்டவன் மரண தர்மமற்றவனாக ஆகிறான். ஞானத்தால் மோக்ஷத்தை அடைகிறான்" என்ற சுருதியின்படி மோக்ஷத்திற்கு ஞானம் சாதனமென்று ஏற்படுகிறது. ஆனதால் புத்தி முதலியவைகள் இருந்தால் தான் மனத்தால் சங்கற்பித்து, வாக்கினால் சப்தங்களை உச்சரிக்க முடியும். அப்படி வைதிக சப்தங்களை உச்சரிப்பதால் புண்ணியம் உண்டாகிறது. அதனால் தத்துவ ஞானம் உண்டாகிறது. அதனால் பகவத் பிரசாதமும், அதனால் ஸாரூப்பியம் முதலிய மோட்சமும் கிடைக்கிறது. ஆதலால் சப்தங்கள் பிரம்மத்தை நேரில் சொல்லுகின்றன என்று ஏற்படுகிறது.

---

3. மேற்காட்டியபடி வேதங்கள் பிரம்மத்தை நிரூபிக்கும் வகையானது மிக்க பெரியோர்களால் ஒப்புக்கொள்

ளப்பட்டது. அதனை எவன் சிரத்தையுடன் தெரிந்து கொள்ளுகிறானோ, அவன் தேகம் முதலியவைகளில் அபிமானத்தை ஒழித்து மோக்ஷத்தை அடைவான்.

---

வீரராகவீயத்தில்:— மேற்காட்டியபடி . வேதங்கள் பரமாத்மாவைச் சொல்லுகின்றன என்பது சாமானிய ஜனங்களுக்குத் தெரியாது. சாமானிய ஜனங்கள் அந்தந்த சப்தம் அந்தந்த அர்த்தத்தைத் தான் சொல்லுகிறதென்று தெரிந்துகொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க, சகல ஜனங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட அர்த்தத்தை விட்டு, எல்லா வேதங்களும் பிரம்மத்தையே முக்கியமாகச் சொல்லுகின்றன என்பது பொருந்துமாவென்றால், மேற்காட்டியபடி சகல வேதங்களுக்கும் பிரம்மமே முக்கியப் பொருளாகிறது என்ற விஷயமானது உபநிஷத்தின் அர்த்தத்தை விசாரித்துத் தெரிந்துகொள்ளவேண்டியதாக இருக்கிறது. வேதாந்த சாஸ்திரத்தைப் படிக்காதவர்கள் வேதத்திலுள்ள சப்தங்களுக்கு இயற்கையான அர்த்தத்தையே பொருளென்று நினைப்பார்கள். வேதாந்தத்தின் அர்த்தத்தையுணர்ந்தவர்கள் பிரம்மமே அந்தச் சப்தங்களுக்குப் பொருளென்று அறிவார்கள். அதனால் அதற்கு என்ன கெடுதி? கடம் என்ற சப்தத்திற்கு இன்னது அர்த்தமென்று ஒருவன் அறியாவிடில், அதனால் அந்தச் சப்தத்திலுள்ள பொருளை உணர்த்தும் வியாபாரம் கெடுக்கப்படுமா? இப்படியிரி பிரம்மமே வேதத்தின் அர்த்தமென்பது வாமதேவர் முதலிய பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இதனைச் சிரத்தையுடன் எவன் தெரிந்துகொள்கிறானோ, அவன் மோக்ஷத்தை அடைவான். அவன் வேறொன்றையும் விரும்பமாட்டான். வாமதேவர், பிரகலாதர் முதலியவர்கள் பரப் பிரம்மம் எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாக இருப்பதையும் எல்லாம்

பரமாத்மாவின் சரீரமாக இருப்பதையும் தெரிந்துகொண்டு, “நான் மனுவாக ஆனேன்; நான் சூரியனானேன்” என்ற வாக்கியத்திலுள்ள “நான்” என்ற பதத்திற்குத் தன்னைச் சரீரமாயுடைய பரமாத்மா பொருளென்றும், சூரியன் மனு என்ற பதத்திற்கு அவர்களைச் சரீரமாயுடைய பரமாத்மா பொருளென்றும் தெரிந்துகொண்டு, எல்லாச் சப்தங்களும் பரமாத்மாவையே நிரூபிக்கின்றன என்று நிச்சயித்திருக்கிறார்கள் என்று தாத்பரியம்.

விஜயத்வஜீயத்தில்:- ஈசுவரனுடைய புத்தியில் இருந்ததான இந்த உபநிஷத்தானது பெரியோர்களுக்கும் பெரியோர்களான பிர்ம்மதேவர் முதலியவர்களால் அத்தியயனம் செய்யப்பட்டது. ஆனதால் பிர்ம்மத்தின் குணத்தை நிரூபிக்கின்ற இந்த வேதத்தை எவன் அத்தியயனம் செய்கிறானோ, அவன் வைராக்கியத்தை அடைந்து மோக்ஷத்தை அடைவான்.

---

4—12. இந்த விஷயத்தில் நாராயண மகரிஷியால் நாரதருக்கு உபதேசிக்கப்பட்ட ஒரு இதிஹாஸத்தை உமக்குச் சொல்லுகிறேன். ஒருகால் பகவத் பக்தரான நாரதர் லோகங்களில் சஞ்சரித்து, நாராயண மகரிஷியைத் தரிசிப்பதற்காகப் பதரிகாசிரமஞ் சென்றார். அவ்விடத்தில் அந்த நாராயண மகரிஷி இந்த பாரத வர்ஷத்தில் ஜனங்களுக்கு ஸம்சாரத்தை நிவர்த்தித்து மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகத் தர்மம், ஞானம், சாந்தி இவைகளுடன் வெகு காலமாகத் தவஞ்செய்துகொண்டிருந்தார். கலாப கிராமவாசிகளான மகரிஷிகளும் அவரைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் நாரதர் அந்த மகரிஷியை நமஸ்கரித்து, இப்பொழுது நீர் எதைக் கேட்டீரோ, அந்த விஷயத்தைப் பற்றியே அந்த மகரிஷியைக் கேட்டார். அதனைக் கேட்ட அந்த மகரிஷி மற்ற மகரிஷிகள் கேட்டுக்கொண்டிருக்கும்

பொழுது நாரதரை நோக்கி, "ஓ நாரதா! நீர் பகவானைத் தரிசிப்பதற்காக சுவேத த்வீபஞ் சென்றபொழுது ஜன லோகத்திலுள்ள பிர்ம்மாவின் மானஸ புத்திரர்களும், இந்திரியங்களை ஜயித்தவர்களுமான ஸனகர் முதலிய மகரிஷிகள் பிர்ம்ம விசாரஞ் செய்தார்கள். அந்த பிர்ம்ம விசாரத்தால் எல்லா வேதங்களும் ஒரே வஸ்துவைச் சொல்லுகின்றன என்று ஏற்படுகிறது. நீர் இப்பொழுது என்னைப் பார்த்து எதனைக்கேட்டீரோ, அதே கேள்வி அப்பொழுதும் ஏற்பட்டது. அந்தக் கேள்விக்கு என்ன பதில் ஏற்பட்டதோ, அதனைச் சொல்லுகிறேன், கேளும். அந்த மகரிஷிகள் எல்லோரும் படிப்பிலும், தவத்திலும், சுபாவத்திலும் சமமானவர்கள். அவர்களுக்குத் தம்மைச் சார்ந்தவன், சத்ரு, உதாசீனன் என்ற பேதபுத்தி இல்லை. அப்படிப்பட்ட மகரிஷிகள் ஸநந்தனர் என்பவரைச் சொல்லும்படி ஏற்படுத்தி, மற்றவர்கள் அவர் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

13—14. அப்பொழுது ஸநந்தனர் சொல்லுகிறார்: எப்படியென்றால், வந்திகள் விடியற்காலத்தில் படுத்திருக்கும் சக்கரவர்த்தியை அவனுடைய பராக்கிரமத்தைக் காட்டும் சுலோகங்களைச் சொல்லி எப்படி எழுப்புவார்களோ, அதுபோலப் பிரளய காலத்தில் இந்த ஜகத் முழுவதையும் சக்திகளுடன் உபசம்ஹாரம்செய்துகொண்டு யோகநித்திரை செய்யும் பரமாத்மாவைச் சிருஷ்டிக்கவேண்டிய சமயத்தில் பரப் பிர்ம்மத்தின் அடையாளமுள்ள வாக்கியங்களைக் கொண்டு வேதங்கள் ஸ்தோத்திரஞ்செய்து எழுப்பின. எப்படியெனில்,

சுருதிகள் சொல்லுகின்றன : ஒருவராலும் ஜயிக்கப் படாதவரே ! ஜய ஜய ! அசையும் பொருள், அசையாப் பொருள் இவைகளடங்கிய ஜகத்திற்குக் கெடுதியைச் செய் வதற்காகக் குணங்களைப் பிரகாசப்படுத்திக்கொண்டிருக்கும் இந்த மாயையை நாசஞ்செய்யும். (விபசாரியானவள் பிறரை வஞ்சிப்பதற்காக நற்குணங்களுள்ளவள் போல் எப்படி அபிநயம் செய்கிறுளோ, அப்படி இந்த மாயையானது நற் குணங்களுள்ளது போலிருந்து, ஜீவர்களுக்குக் கெடுதியை உண்டுபண்ணுகிறதென்று தாத்பரியம்). நீர் சகல ஐசுவரியங் களையும் அடைந்தவரானதால் மாயையைச் சுவாதீனப்படுத் திக்கொண்டவர். மேலும், நீர் எல்லா ஜீவர்களுக்கும் அந் தாயாமியாக இருந்து, சகல சக்திகளையும் பிரகாசிக்கச் செய் கிறீர். [ஆனதால் ஜீவர்களுக்கு சுவாதந்தர்யம் இல்லாத தால் ஞானம் முதலியவைகளைக்கொண்டு மாயையை நிவர்த் தித்துக்கொள்ள அவர்களால் முடியாதென்று தாத்பரியம்.] தடையற்ற ஞானம், ஐசுவரியம் இவைகளுள்ள நீர் ஜீவர் களுக்கு அவித்தையை நிவர்த்திக்கிறீர் என்ற விஷயத்தில் வேதங்களாகிய நாங்களே பிரமாணங்களாக இருக்கிறேம். சில காலம் [சிருஷ்டி முதலிய சமயம்] மாயையுடன் கிரீடிப் பவராகவும், சில சமயம் சத்திய ஞானனந்த சுரூபத்துடன் இருப்பவருமான உம்மை வேதங்கள் சொல்லுகின்றன.

---

## நோட்டு

வேதங்கள்:— "எதனிடமிருந்து இந்தப் பிராணிகள் உண்டாகின்றனவோ, உண்டான பிராணிகள் எதனுல் ஜீவிக் கின்றனவோ, எதனிடத்தில் லயிக்கின்றனவோ", "எவர் முதலில் பிர்ம்மதேவரைப் படைக்கிறுரோ, வேதங்களை அவருக்கு உபதேசிக்கிறுரோ," "ஆத்மா, புத்தி இவைகளைப்

பிரகாசிக்கச் செய்பவரான அந்தத் தேவனை, மோக்ஷத்தை அடையவேண்டுமென்ற விருப்பத்தையுடைய நான் சரணம் அடைகிறேன்," "எவர் ஆத்மாவில் இருக்கிறாரோ"—இது முதலிய சுருதி வாக்கியங்கள்.

வீரராகவீயத்தில்:— "எல்லோரையும் ஜயித்ததான பிரகிருதியையும் ஜயித்தவரே, மேன்மையை அடையும் மேன்மையை யடையும்". நீர் இயற்கையில் ஞானம், வைராக்கியம், பூர்ணமான ஐசுவரியம், வீரியம், கீர்த்தி,காந்தி இவைகளால் நிறைந்தவராகையால் ஜீவர்களுக்கு ஸம்ஸாரத்தை உண்டுபண்ணுகின்ற ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களுள்ள பிரகிருதியை நாசஞ்செய்து [இயற்கையில் நீர் ஒப்புயர் இல்லாதவரானாலும், பிரகிருதியை நாசஞ் செய்து] ஜீவர்களுக்கு உபகரிப்பதால் அதிக மேன்மையுண்டாகும் என்று தாத்பரியம். 'தோஷ கிருபீதகுண' என்ற பாடத்தில், தோஷங்கள் அநேகம் இருந்தாலும் அவைகளைத் தள்ளி குணம் சொற்பமாக இருந்தாலும் அதனை எடுத்துக் கொள்ளும் சுபாவமுள்ள நீர் அபராதிகளான ஜீவர்களிடத்தில் உள்ள அபராதத்தை மனத்தில் வைத்துக்கொள்ளாமல் குணத்தைக் கிரகித்து மாயையை நாசஞ்செய்து அவர்களை அநுக்கிரகிக்கவேண்டுமென்று அர்த்தம்கொள்ளவேண்டும். அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் இவைகளாலாகிய பிரகிருதியின் குணங்களுக்கும், பிரகிருதியை ஆசிரயிக்கிற ஜீவர்களுக்கும் தங்கள் தங்கள் காரியத்தைச் செய்யும் படியான சாமர்த்தியத்தை நீரே கொடுக்கிறீர். [உம்முடைய அனுக்கிரயில்லாவிடில் பிரகிருதி முதலியவைகள் தங்கள் தங்கள் வேலையைச் செய்யச் சக்தி அற்றவைகளாக இருக்கின்றன.] அவைகளுக்கு அப்படிப்பட்ட சக்தியை நீர்

கொடுப்பதால் ஜீவர்களுக்கு ஸம்ஸாரசம்பந்தத்தை உண்டு பண்ணுகிறவரும் நீரே என்று ஏற்படுகிறது. ஆனதால் அந்த மாயையை நாசஞ்செய்யுமென்று கருத்து. நீர் பிரகிருதி, புருஷன் இவர்களுடன் ஜகத் சுரூபமாக இருப்ப தால் உம்மையே வேதஞ் சொல்லுகிறது. (எல்லாவற் றிற்கும் காரணமாகவும், காரிய சுரூபியாகவும் பரமாத்மா இருப்பதால் சேதனம், அசேதனம் இவைகளைச் சொல்லும் சப்தங்கள் யாவும் பரப்பிரம்மத்தையே சொல்லுகின்றன என்று சமாதானம் சொல்லப்பட்டது என்று கருத்து.)

விஜயத்வஜீயத்தில்:— "பிரகிருதியானது ஸ்ரீதேவி, பூதேவி என்ற சுரூபங்களுடன் ஸ்ரீ மகாவிஷ்ணுவினிடம் தூங்குகிறது. வேதமானது பிரளயத்தில் பிரம்மத்தை தோத்திரஞ் செய்கிறது". "ஆதியந்தம் இவைகளில்லாத ஸரஸ்வதியானது ஒன்றானாலும், வெவ்வேறு வாக்கியங்க ளால் பிரபுவாகிய நாராயணனைத் தோத்திரஞ் செய்கிறது" என்றபடி சுருதிகள் நாராயணனை தோத்திரஞ்செய்கின்றன. வேதங்கள் அநேகமானாலும், பகவானுடைய ஆக்ஞையால் துர்க்கையின் சுரூபத்தை எடுத்துக்கொண்டு தோத்திரஞ் செய்கிறது. எப்பொழுதும் விழித்துக்கொண்டிருக்கும் பகவானை வேதங்கள் எழுப்புகின்றன என்பது பொருந் துமா என்றால், எழுப்புவதுபோல என்று அர்த்தங்கொள்ள வேண்டும். வேதங்கள் சொல்லுகின்றன என்பதால் ஸ்திரீ, சூத்திரன் இவர்கள் வேதத்தை அத்தியயனம் பண்ணக் கூடாதாகையால் அதன் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளட் டும் என்ற அபிப்பிராயத்தால் வேதம் தன் பொருளை வெளி யிட்டது என்று தாத்பரியம். ஒருவராலும் ஜயிக்கப்படாத ஸ்ரீமந் நாராயணா! துக்கம், அஞ்ஞானம் முதலிய துர்க்குணங் களால் ஆனந்தம் ஞானம் முதலிய ஜீவகுணங்களை மறைக்

கும் மாயையை நிவர்த்தியும். அப்படிச் செய்வதால் பக்தர்களிடத்தில் உமக்கு இருக்கும் வாத்சல்யமானது வெளிப்படும். (லோகத்திலுள்ள அரசர்கள் சத்துருக்களை ஜயிப்பது போல ஸ்ரீமந் நாராயணனைப் பார்த்துப் பிறரை ஜயித்துவிடுமென்று சொல்வது பொருந்தாது. ஏனென்றால் அவர் எப்பொழுதும் ஜயமுள்ளவர்; எல்லாரையும் ஜயிக்கும் பிரகிருதியையும் ஜயித்தவர். ஆனதால் அவரைப் பார்த்துச் சொல்லும் ஜய என்ற சப்தத்திற்கு மாயையை விலக்கி, பக்தர்களை அனுக்கிரகிக்கவேண்டுமென்று அர்த்தங்கொள்ளவேண்டும். நீர் இயற்கையில் பூர்ணமான ஐசுவரியம் முதலிய குணங்களுள்ளவர். (உம்முடைய பிரதிபிம்பனான ஜீவன் பிரகிருதியால் மறைக்கப்பட்டுத் தன்னுடைய குணத்தை அறியாதவனாக இருக்கிறான்.) ஓ மகாவிஷ்ணுவே! ஜகத்திற்கு ஆசிரயமான பிரம்மா முதலியவர்களுடைய சகல சக்திகளும் உம்மிடமாகவே பிரகாசிக்கின்றன. வேதமானது சிருஷ்டி காலத்தில் ஜீவனுடனும் பிரகிருதியுடனும் சஞ்சரிக்கும் உம்முடைய மனத்தை அனுசரிக்கிறது. பிரளய காலத்தில் ஜீவர்களுக்குச் சரீரமில்லாததால் அவர்கள் விஷயத்தில் வேதம் உபயோகப்படுகிறதில்லை. அப்பொழுது நாராயணனுடைய ஸ்தோத்திரத்தில் உபயோகப்படுகிறது. பிரளயத்தின் 8-வது பாகமாகிய சிருஷ்டி காலத்தில் வேதமானது ஜீவர்களுக்கு உபயோகப்படுகிறது. ஆனதால் அப்பொழுது பரமாத்மாவையே வேதம் சொல்லுகிறது என்று தாத்பரியம்.

16. "தாவரங்களுக்கும் ஜங்கமங்களுக்கும் இந்திரன் அரசனாக இருக்கிறான்", "அக்னியானவர் த்யுலோகத்திற்குட் சிறந்தவர்" என்ற சுருதிகளின்படி இந்திரன், அக்னி முதலியவர்களை வேதம் சொல்லுகிறது. அப்படியிருக்க

பரமாத்மாவைச் சொல்லுகிறதென்று எப்படிச் சொல்லக் கூடும் என்றால் சமாதானம் சொல்லப்படுகிறது. இந்திரன் முதலிய எல்லாப் பதார்த்தங்களும் பிர்ம்மமென்றே பெரியோர்கள் தெரிந்துகொள்ளுகிறார்கள். எல்லாப் பதார்த்தமும் பிர்ம்மத்தினிடமிருந்து உண்டாகின்றன; பிர்ம்மத்தினிடமே லயிக்கின்றன. பிரளய காலத்தில் பாக்கியாயிருக்கும் வஸ்து பிர்ம்மம் ஒன்றே. மண்ணினால் செய்யப்பட்ட குடம், மடக்கு முதலியவைகள் மண்ணிலிருந்து உண்டாகியும், கடைசியில் மண்ணிலேயே எப்படி லயிக்கின்றனவோ, அப்பொழுது குடம், மடக்கு என்ற பெயரும் உருவங்களும் நாசமடைந்து மண் என்ற காரணம் மாத்திரம் எப்படி பாக்கியாகயிருக்கிறதோ, அப்படியே இந்திரன், சந்திரன், அக்கினி முதலியவர்கள் விகாரமில்லாததான பிர்ம்மத்தினிடமிருந்து உண்டாகி, கடைசியில், அதனிடத்திலேயே லயிக்கிறார்கள். அப்பொழுது இந்திரன், சந்திரன், அக்னி யென்ற பெயர்களும், உருவங்களும் நசிக்கின்றன. காரணமாகிய பிர்ம்மம் மாத்திரம் பாக்கியாக இருக்கிறது. ஆனதால் எதை மனத்தால் நினைத்தாலும், எதை வாக்கினால் உச்சரித்தாலும் பரமாத்மாவாகிய உம்மையே நினைத்ததாகவும், உச்சரித்ததாகவும் மகரிஷிகள் நினைக்கிறார்கள். (ஆனதால் வேதங்கள் இந்திரன், அக்னி முதலிய எந்தப் பதார்த்தங்களைச் சொன்னாலும் பரமாத்மாவையே சொல்லுகின்றனவென்பது தாத்பர்யம்.) பூமியில் சஞ்சரிக்கும் ஜனங்கள் எவ்விடத்தில் காலை வைத்தாலும் அவைகள் பூமியில் வைத்ததாக ஆகுமேயொழிய வேறில்லை.

-"இந்த சகல பிராணிஜங்களும் பரமாத்மாவிடத்திலிருந்து உண்டாகின்றன" என்றது, முதலில் சுருதிகளில் சொல்லியபடி சிருஷ்டி காலத்தில் பிரகாசித்த

ஜகத் முழுவதும் பிர்ம்மமென்றே வேதங்கள் சொல்லுகின் றன. மண்ணுண்டையிலிருந்து உண்டான குடம் முதலிய வைகள் அவைகளைவிட எப்படி வேறாக ஆகிறதில்லையோ, அப்படி காரணரூபியான பரப்பிர்ம்மத்தினிடமிருந்து உண் டான சகல ஜகத்தும் பரப்பிர்ம்மத்தைக்காட்டிலும் வேறல்ல. ஆனதால் வேதங்கள் தாத்பர்யத்தாலும், முக்கிய விருத்தியாலும் பரமாத்மாவையே சொல்லுகின்றன. மாடி முதலிய ஸ்தலங்களில் ஜனங்கள் நடந்தால் அது பூமியில் நடந்ததாக ஆகிறதில்லையா? அதுபோல இந்திரன், அக்னி முதலியவர்களைச் சொன்னால் அவர்களுக்கு ஆதாரமாகிய பிர்ம்மத்தையே நிரூபித்ததாக ஆகிறது.

விஜயத்வஜீயத்தில்—

இந்தப் பதினாறாவது சுலோகம் விஜயத்வஜீய மென்னும் வியாக்யானமுள்ள புத்தகத்தில் பின்வருமாறு காணப்படுகிறது.

வ்யூஹந்தமஸ்யெதஉவஸோஷதயாயத உஉமாஸ ஸேஷ்ய விக்ரியெத விகாதஃ।

"விகாரமற்றவராகிய நீர் நித்ய தமஸ்ஸான காலத்தில் மேன்மையை அடைந்தீர். சிருஷ்டிக்குமுன் தமஸ்ஸால் மறைக்கப்பட்டிருந்தது." - (சுருதி, மூலப்பிரகிருதியைவிட மேலானவரென்று தாத்பர்யம்.) மேலும் "இதைவிட இது மேலானது; அதனைவிட இது மேலானது" என்று சொல்லி னும், வேதத்தில் எல்லாவற்றிற்கும் மேலானதென்று உம்மைச் சொல்லியிருப்பதாலும் உம்மைவிட மேலானது இருப்பதாகச் சொல்லாததாலும் நீரே மேலானவரென்று தெரிந்துகொள்ளப்பட்டது. ஆனதால் பிர்ம்மதேவர் முதலிய தேவர்கள் மனத்தால் நினைக்கப்பட்டாலும், வாக்கினால் சொல்லப்பட்டாலும் உம்மை நினைத்ததாகவும், சொன்ன தாகவும் ஏன் ஆகமாட்டாது (பரமாத்மாவைச் சொன்ன

தாகவே ஆகும்.) என்று நினைக்கிறார்கள். பூமியில் காலை வைப்பதாக நினைத்து ஜனங்களால் வைக்கப்பட்ட காலடிகள் பூமியில் வைக்கப்படாமல் போகுமா?

17. மாயைக்கு அதிபதியாகிய ஓ பரப்பிரம்மமே! உம்முடைய கீர்த்தியானது சகல ஜனங்களுடைய பாபங்களை நிவர்த்திக்கிறதானதால் பெரியோர்களான ஞானிகள் அதனை அடைந்து சகல துக்கங்களையும், பாபங்களையும் நிவர்த்தித்துக்கொள்ளுகிறார்கள். அப்படியிருக்க, தன்னுடைய உண்மையான சுரூபத்தை அடைந்து, அதனால் ஆசை, துவேஷம் முதலிய அந்தக்கரண தர்மங்களையும், கிழத்தனம், மரணம் முதலிய காலத்தின் குணங்களையும் நிவர்த்தித்துக் கொண்டிருப்பவர்கள் அகண்டமான ஆனந்த சுரூபத்தை சேவிப்பவர்கள் என்பதில் என்ன சந்தேகம்? "தாமரையிலையில் ஜலம் எப்படி சம்பந்தப்படுகிறதில்லையோ, அப்படி பாபமில்லாதவனான புருஷர்களிடத்தில் கர்மங்கள் சம்பந்திக்கிறதில்லை." "புண்ணியபாபம இரண்டையும் விடுகிறான்" சுருதிகள்.

வீரராகவீயத்தில் :— ஜகத்தைப் படைத்து அதனைக் காப்பாற்றி அதனை ஸம்ஹரிப்பவராகிய ஓ பகவன்! உம்முடைய கதையைச் சொல்லுகிறவர்களுக்கு ஸகல பாபங்களும் நிவர்த்தியாகின்றனவாகையால் விவேகிகள் அந்தக் கதையாகிய அமிருத சமுத்திரத்தில் மூழ்கி ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம், ஆத்யாத்மிகம் என்ற தாபங்களை விட்டு விட்டார்கள். அப்படியிருக்க சுரூப ஞானத்தையடைந்து ஆசை, துவேஷம், ஜரை, மரணம் ஆகிய இவைகளை நிவர்த்தித்துக்கொண்டு நித்தியமான ஞானம், ஆனந்தம் இவைகளின் சுரூபமான பதத்தை சேவிப்பவர்கள் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களை அடைகிறதில்லையென்பதில் என்ன சந்தேகம்?

18. மகத் தத்வம் முதலியவைகள் பரமாத்மாவின் அனுக்கிரகத்தால் சமஷ்டி, வியஷ்டி சுரூபத்தைப்படைத்தன. மேலும், அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களில் பரமாத்மா அனுப்பிரவேசித்து அவைகளைச் சேஷ்டிக்கச்செய்கிறார். மேலுமவர் புருஷனுடையவகைபோலொத்த வகையுள்ளவர்; அன்னமயாதி கோசங்களில் சம்பந்தித்தவர். பின்னுமவர் அன்னமயம் முதலிய கோசங்களுக்குக் கடைசியில் எல்லாவற்றிற்கும் மேலானவராகச் சொல்லப்பட்டவர்; ஸ்தூலம், சூக்ஷ்மம் இவைகளுக்குச் சாட்சியாக இருப்பவர். காலத்தாலும், தேசத்தாலும் பாதிக்கமுடியாத, சத்திய சுரூபி. அப்படிப்பட்ட பரமாத்மாவாகிய உம்மைச் சேவியாமலிருக்கும் மனிதர்களுடைய ஜீவனம் பிரயோஜன மற்றது. அவர்கள் துருத்திபோல் ஜீவிக்கிறார்கள் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

நோட்டு

"எவர்கள் ஆத்மாவினுடைய உண்மையான சுரூபத்தை யறியாமல் ஆத்மாவை கர்த்தாவென்றும், சுகதுக்கமுள்ளவ னென்றும் நினைத்து உண்மையான சுரூபத்தை மறைத்து விடுகிறார்களோ, அப்படிப்பட்ட சரீர அபிமானமுள்ளவர்கள் தேவ சரீரம், மனித சரீரம், பசு பட்சி சரீரம் முதலியவை களை அவரவர்களுடைய கர்மத்திற்குத் தக்கபடி அடைந்து அஞ்ஞானமுள்ளவர்களாகி சம்சாரத்தை அடைகிறார்கள்" —சுருதி. "இந்த மனுஷ்ய ஜன்மத்தில் மனிதன் ஆத்மா வின் உண்மையை அறியாவிட்டால் மிக்க கெடுதியை விளை விக்கும் சம்சாரத்தை அடைகிறான்"—சுருதி. இவைகள் பகவத் பக்தி இல்லாதவனை நிந்திக்கின்றன.

வீரராகவீயத்தில்:— ஓ பரப்பிரம்மமே! எந்த ஜனங்கள் உம்மை சேவிக்கத் தகுதியான மனுஷ்ய ஜன்மத்தையடைந்திருந்தும், பிராணன், இந்திரியம் இவைகளைத் திருப்தி செய்துகொண்டும், உம்மைச் சேவியாமலிருக்கிறார்களோ, அவர்கள் துருத்திபோல் மூச்சுவிடுகிறவர்களேயாம். (அவர்களுடைய ஜீவனம் பிரயோசனமற்றது என்று தாத்பரியம்.) மகத் தத்வம், அகங்காரம் முதலியவைகள் உம்முடைய அனுக்கிரகத்தால் ஜகத்தைப் படைத்தன. மகத் தத்வம், பிரதானம் முதலியவைகள் ஜகத்திற்குக் காரணங்களானாலும், "அது அனேக வஸ்துக்களாக ஆவோம் என்று சங்கற்பித்தது" என்ற சுருதியின்படி அசேதனங்களாகிய பிரதானம் முதலியவைகளுக்கு மேற்சொல்லிய சங்கற்பம் பொருந்தாதாகையால் பரமாத்மாவே ஜகத் காரணம் என்று கொள்ளவேண்டும். அதனால்தான் பரமாத்மாவின் அனுக்கிரகத்தால் மகத் தத்வம் முதலியவைகள் ஜகத்தைப் படைத்தனவென்று சொல்லப்பட்டது. "சம்பாப் பயிர்கள் மழையை எதிர்பார்த்திருக்கின்றன" என்ற வாக்கியத்தில் மழை பயிர்களை அனுக்கிரகித்ததென்றால், அவ்விடத்தில் அனுக்கிரகம் என்ற சப்தத்திற்கு எப்படிக்கௌணமாக அர்த்தம் வைத்துக்கொள்ளுகிறோமோ அப்படி இவ்விடத்திலும் கௌணமான அனுக்கிரகமென்றே அர்த்தம் வைத்துக்கொண்டு பிரதானம் முதலியவைகளை ஜகத் காரணங்களென்று ஏன் சொல்லக்கூடாது என்று பூர்வபக்ஷம் ஏற்படலாம். ஆனாலும், "இது எல்லாம் அதுவே, அது சத்தியமானது; அதுவே ஆத்மா" என்ற சுருதியின்படி காரணமே ஆத்மாவென்று ஏற்படுவதால், மேற்சொல்லிய பூர்வபட்சம் பொருந்தாது. அசேதனங்களாகிய பிரதானம் முதலியவைகள் காரணங்களென்று சொல்லாவிடினும், சேதனனாகிய ஜீவனே காரணனென்று

சொல்லலாம் என்று பூர்வபட்சம் ஏற்படலாம். ஆனாலும், அன்னமயம் முதலிய ஐந்து கோசங்களைச் சொல்லி, கடைசியான ஆனந்தமயனுக்குத் தலை முதலியவைகளையும் சொல்லியிருப்பதால் ஜீவனென்று சொல்வதும் பொருந்தாது. புருஷனைப்போலச் சுருதியில் சொல்லப்பட்டவர் பரமாத்மாவாகிய நீரே. சேதனம், அசேதனம் இவைகளைவிட நீர் வேறானவர். அன்னமயம் முதலிய நான்கு கோசங்கள் அழியும்பொழுதும் பாக்கியாகவும் சத்தியமாகவும் இருப்பவர் நீர் ஒருவரே.

விஜயத்வஜீயத்தில்—

த்ருதய இவ ஶ்வஸந்த்யஸுப்ருதோ யதி தே மஹத³
ஹமாத³யோ(அ)ண்ட³மஸ்ருஜந் யத³நுக்³ரஹத꞉ । புருஷ
விதோ⁴(அ)ந்வயோ(அ)த்ர சரமோ(அ)ந்நமயாதி³ஷு ய꞉ ஸத³
ஸத꞉ பரம் த்வமத² யதே³ஷ்வவஶேஷம்ருதம் ॥ ॥ கஅ ॥

மகத் தத்வம், அகங்காரம் முதலியவைகள் உம்முடைய அனுப்பிரவேசமாகிய அனுக்கிரகத்தால் பிர்ம்மாண்டத்தைப் படைத்தன. அப்படிப்பட்ட மிக்க உபகாரியான உம்மிடத்தில் பிரீதியில்லாமல் எல்லாவற்றையும் பொய்யென்று எவர்கள் சொல்லுகிறார்களோ, அவர்கள் துருத்திபோல் மூச்சு விடுகின்றவர்களேயாம். மேலும் மனிதர்களில் சிறந்தவர்கள், இந்திரன் முதலிய தேவர்கள், மகரிஷிகள், கந்தர்வர்கள், பிர்ம்மதேவர் ஆகிய இவர்களுக்குள் எவர்கள் நித்தியமும் அளவற்ற ஆனந்தமுள்ளதும், காரிய காரணங்களைவிட மேலானதுமான உம்முடைய சுரூபத்தை யறிந்து சிஷ்யர்களுக்கு அம்மாதிரி உபதேசித்து, ஜகத்தில் உம்முடைய சுரூபத்தைப் பரவச் செய்கிறார்களோ, அவர்கள் புருஷோத்தமராகிய உம்மை அடைகிறார்கள்.

19. முன் சுலோகங்களில் சகல சுருதிகளும் சகல ஜகத் சுரூபியான பரமாத்வாவைச் சொல்லுகின்றன ஆனதாலும், அவரிடம் பக்தி செய்யாதவர்களுக்குக் கெடுதியுண்டாவதாலும் ஈசுவரனை உபாசிக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் பகவானுடைய உபாசனையைப் பற்றிச் சொல்லப்படுகிறது. மகரிஷிகளுடைய சம்பிரதாயத்தை அனுஷ்டித்திருக்கும் ஸ்தூல திருஷ்டிகள் மணிபூரகமென்ற ஸ்தானத்தில் பிரம்மத்தைத் தியானஞ்செய்கிறார்கள். மூலத்தில் கூர்ப்ப திருச என்று இருப்பதால் கூர்ப்ப என்றால் மணல் என்று அர்த்தம். அதனால் மறைக்கப்பட்ட கண்களுள்ளவர்கள். அதாவது ஸ்தூல திருஷ்டியுள்ளவர்கள் என்று ஏற்படுகிறது. அல்லது கூர்பபம் என்றால் சூட்சுமமென்று அர்த்தம். அதனால் சூட்சும திருஷ்டிகள் என்றும் அர்த்தம் சொல்லாம். இப்படி அர்ததம் கொண்டால் சூட்சும திருஷ்டியுள்ள மகரிஷிகள் இருதயதிலிருக்கும் பரப்பிரம்மத்தைப் பார்த்து அதில் பிரவேசிப்தற்காக மணிபூரகத்திலிருப்பதாக உபாசிக்கிறார்கள் என்று அர்த்தம் கொள்ளவேண்டும். ஆருணிகளோவென்றால் நாடிகளுடைய பிரிவுக்கு மார்க்கமான இருதயத்தில் சூட்சுமமாகவிருக்கும் பரபிர்மமத்தை உபாசிக்கிறார்கள். ஓ அனந்தரே! அந்த இருதயத்திலிருந்து சுஷும்னுவென்ற நாடியானது தலைவரையில் போகின்றது. அதில் உம்முடைய ஸாந்நித்தியமிருக்கிறது. அது நாடிகளுக்குட் சிறந்தது. அதனையடைந்தவன் தரும்பவும் ஸம்ஸாரத்தை யடைகிற

நோட்டு.

"புருஷனுடைய இருதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் போகின்றன. அவைகளுக்குள் ஒரு நாடி மூர்த்

தாவைப் பிளந்துகொண்டு போகிறது. மரண காலத்தில் அந்த வழியாக வெளியில் போகிறவன் மோக்ஷத்தை யடைகிறான். பலவகையான சக்தியுள்ள மற்ற நாடிகள் வெளியில் போவதற்குக் காரணங்களாக ஆகின்றன."— சுருதி.

வீரராகவீயத்தில்—பரமாத்மா ஜகத் காரணமானதால் அவர் உபாஸிக்கப்படவேண்டியவரானாலும், அநேகர் பலவகையாகப் பலவிடங்களில் அவரை உபாஸிக்கிறார்களென்பதும், எல்லா உபாஸனைகளுக்கும் மோக்ஷமே பலனென்பதும் இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

வேதாந்தத்தில் சொல்லிய உபாஸனா மார்க்கத்தை அறிந்த சூட்சும புத்தியுள்ள அருண வம்சத்தில் பிறந்த சில மகரிஷிகள் இருதயத்திலிருக்கும் சூட்சும சுரூபியான உம்மை உபாஸிக்கிறார்கள். மற்றும் சில மகரிஷிகள் வயிற்றில் இருக்கும் ஜாடராக்னி சுரூபியான உம்மை உபாசிக்கிறார்கள். மற்றுஞ் சிலர் சுஷும்னா என்ற நாடிமார்க்கத்திலிருக்கும் உம்மை உபாஸிக்கிறார்கள். ஓ அனந்தரே! உம்முடைய ஸான்னித்தியத்திற்கு முக்கிய ஸ்தலமாகிய புருவங்களின் மத்தியம் வரையில அந்த சுஷும்னா நாடி செல்லுகிறது. அந்த நாடியை அடைந்த எல்லா உபாஸகர்களும் திரும்பவும் ஸம்ஸாரத்தை அடைகிறதில்லை.

20. அக்கினி இயற்கையில் தாரதம்மியமில்லாதவராலும் கட்டைக்குத் தக்கபடி தாரதம்மியமுள்ளவராகத் தோன்றுவதுபோல நீர் உண்மையில் ஒரே வகையுள்ளவராலும் தம்மாற் செய்யப்பட்ட பல்வகையான சரீரங்களில் பிரவேசித்தவர் போலிருந்து, உயர்ந்தவர்போலும் தாழ்ந்தவர்போலும் பிரகாசிக்கிறீர். எப்பொழுதும் ஜகத்திற்குக் காரணராக இருப்பதால் இப்பொழுது ஜகத்தில் பிரவேசித்தீ

றென்பதில்லை. (மிக்க பிரகாசமுள்ள சூரியன் ஆகாசம் முழுவதையும் ஒரே வகையாகப் பிரகாசிக்கச் செய்பவரானாலும், மழைக்காலத்தில் பிரகாசக்குறைவுள்ளவர்போலும், சரத்காலத்தில் அதிகப் பிரகாசமுள்ளவர்போலும் தோன்று வதுபோல, பரமாத்மா சரீரம் முதலிய உபாதிகளின் சம்பந்தத்தால் தாழ்ந்தவர்போலவும் மேலானவர்போலவும் தோன்றுகிறாரேயொழிய, உண்மையில் தாரதம்மியமில்லை யென்பது கருத்து.) ஆனதால் கர்மங்களின் பயனில் ஆசையில்லாதவர்கள் பொய்யாகிய இந்தச் சரீரங்களில் சத்தியமாகிய உம்முடைய சுரூபத்தைத் தாரதம்மியமில்லாம லிருப்பதாகவே தெரிந்துகொள்ளுகிறார்கள். (ஈசுவரனை வயிறு, இருதயம் முதலிய ஸ்தானங்களில் உபாஸிக்கிறார்கள் என்று சொன்னதால், ஜீவனைப்போல் பரமாத்மாவுக்கும் தாரதம்மியம் ஏற்படுகிறது. அவர் எல்லாராலும் எப்படி உபாஸிக்கக்கூடியவராவார்? என்ற பூர்வபட்சம் இந்த சுலோகத்தால் நிவர்த்திக்கப்பட்டது). "ஒரு தேவனே சகலப் பிராணிகளிடத்திலும் மறைந்திருக்கிறார். மேலுமவர் எங்கு மிருப்பவர்; சகலப் பிராணிகளுக்கும் அந்தராத்மாவாக இருப்பவர்; கர்மங்களுக்கு அதிபதி; சகலப்பிராணிகளுக்கும் இருப்பிடம்; எல்லாவற்றிற்கும் சாட்சி; கேவலம் சைதன்னிய சுரூபி; குணமற்றவர்"—சுருதி.

வீரராகவீயத்தில்—பரமாத்மா காரியமாகிய ஜகத்தில் பிரவேசித்திருப்பதாலும், தோஷ சம்பந்தமற்றவரானதாலும் அவர் உபாஸிக்கத் தகுந்தவர் என்று இந்த சுலோகத்தால் காட்டப்படுகிறது. ஓ பகவன்! அக்னியானது உண்மையில் தாரதம்மியமில்லாததனாலும், கட்டைக்குத் தக்கபடி உயர்வு தாழ்வு உள்ளதாக எப்படித் தோன்றுகிறதோ, அப்படி நீர் எல்லாவற்றிற்கும் முக்கிய காரணராக இருந்து செய்யப்பட்ட பலவகையான சரீரங்களில் அந்தராத்மாவாக

இருந்து உயர்வு தாழ்வை அனுசரிக்கிறீர். மேலும், பலவகையான உம்முடைய குணங்களைத் தோத்திரஞ் செய்யும் சுத்த சித்தர்களான யோகிகள் இந்தச் சரீரங்கள் நாசமடைந்தபொழுதும், உம்மை நாசமடையாதவரென்றும், காரியங்களில் பிரவேசித்தவரானாலும் அவைகளின் தோஷ சம்பந்தமற்றவரென்றும், அகண்டமான ஆனந்தமென்றும் உபாஸிக்கிறார்கள்.

விஜயத்வஜீயத்தில்—

ஸ்வக்ருதவிசித்ரயோநிஷு விஶந்நிவ ஹேதுதயா
தரதமதஶ்சகாஸ்ஸ்யநலவத்ஸ்வக்ருதாநுக்ருதி: | அத
விததாஸ்வமூஷ்வவிதத தவ தாம ஸமம் விரஜதியோ
நுயந்த்யபிவிபண்யவ || ௨௰ ||

அக்னி கட்டைகளைக் கொண்டுபோனால் தான் போவது போலும், திரும்பவும் கொண்டுவந்தால் தான் வருவது போலும் எப்படித் தோற்றுகிறதோ, அப்படி உம்மால் செய்யப்பட்ட பலவகையான சரீரங்களில் பிரவேசித்திருக்கும் ஜீவனைப்போல உம்மையும் அஞ்ஞானிகள் நினைக்கிறார்கள். ஞானிகளாகிய பெரியோர்கள் அநித்தியங்களான இந்தச் சரீரங்களில் நித்தியரான நீர் பலவகையாக வசிக்கிறீர் என்று சுத்தமான மனத்தால் தியானஞ்செய்கிறார்கள். "ஈசுவரன் எல்லாவற்றுக்கும் காரணமென்று பிராம்மணன் தெரிந்துகொள்ளுகிறான். அதனால் அவன் மேலானவனாகி அவனுக்கும் மேலான ஸ்ரீமந் நாராயணனை அடைகிறான். கட்டையைக் கொண்டுவந்தால், அதிலிருக்கும் அக்னியும் எப்படிக் கொண்டுவரப்படுகிறதோ அப்படி தேகத்திலிருக்கும் மகாவிஷ்ணு தேகத்துடன் வருகிறார். அதற்கு அவருடைய இச்சையே காரணம்; பெரியோர்கள் அநித்திய

மான சரீரங்களில் நித்தியராகிய பகவான் பலவகையாக வசிக்கிறார் என்று தெரிந்துகொள்ளுகிறார்கள்" — தந்திர பாகவதம்.

21. தன்னுடைய கர்மத்தால் கிடைத்த இந்த மனித சரீரம் முதலியவைகளில் போக்தாவாக இருக்கும் புருஷனைச் சகல சக்திகளால் பூர்ணமாகிய உம்முடைய அம்சமென்று சொல்லுகிறார்கள். உம்முடைய சுரூபமானது வெளியிலும் உள்ளேயும் ஆவரணமற்றது. ஆனதால் ஜீவனுடைய உண்மையை அறிந்த வித்வான்கள் வேதத்திற் சொல்லிய கர்மங்களை அனுஷ்டித்து சமர்ப்பிப்பதற்கு இடமாயுள்ளதும், ஸம்ஸாரத்தை நிவர்த்திப்பதுமான உம்முடைய பாதாரவிந்தத்தை மிக்க சிரத்தையுடன் உபாஸிக்கிறார்கள்.

வீரராகவீயத்தில்—உம்மால் செய்யப்பட்ட தேவ மனுஷ்ய சரீரங்களில் இருக்கும் புருஷனைச் சகல சக்திகளுள்ளவரான உம்முடைய சங்கற்பத்தால் ஏற்படுத்தப் பட்டவரென்றும், உள் வெளி யென்ற பேதமில்லாமல் எங்கும் வியாபித்திருக்கக்கூடியவரென்றும், மறைவற்ற புருஷனென்றும் வேதங்கள் நிரூபிக்கின்றன. ஆனதால் விவேகிகள் இந்த மனித ஜன்மத்தை உம்மையாராதிப்பதற்கு உபயோகமென்று நினைத்து, வேதங்களால் நிரூபிக்கப்பட்டதும், ஸம்ஸாரத்தை நிவர்த்திப்பதுமான உம்முடைய பாதாரவிந்தத்தை மிகுந்த பக்தியுடன் உபாஸிக்கிறார்கள்.

விஜயத்வஜீயத்தில்—

[illegible] ॥ உக ॥

சகல புருஷர்களிடத்திலும், எல்லா புத்திகளும், லக்ஷ்மீ பிர்மா முதலியவர்களிடத்திலும் இருந்து மேலான செய்கைகளைச் செய்பவரும் நீர்தானென்று சொல்லுகிறார்கள். அண்டத்திற்கு உள்ளும் வெளியிலும் கெட்ட காரியம் செய்பவனிடத்திலுமிருந்து பாபத்தைச் செய்கிறவரும் நீரே என்று சொல்லுகிறார்கள். நீர் சகல புருஷர்களின் இந்திரியங்களுடைய சக்தியை அவைகளுக்குத் தக்கபடி விஷயங்களில் பிரவர்த்திக்கச் செய்கிறீர். ஆனதால் எல்லாம் பிறரை அபேக்ஷியாமல் உம்மாலேயே செய்யப்படுகிறது. "லக்ஷ்மீ தேவி, பிர்மா, ருத்திரன் முதலியவர்களிடத்தில் ஸ்ரீ மஹா விஷ்ணு வசித்து, தம்மையே பூஜித்துக்கொள்ளுகிறார். அசத்துக்களிடத்தில் காணப்படும் கெட்ட நடை அவனுக்குக் கெடுதியைக் கொடுக்கிறதானாலும், ஈசுவரனைப் பூஜித்ததாகவே ஆகிறது."—சுருதி.

22. ஓ ஈசுவர! உம்முடைய சுரூபத்தின் உண்மையைத் தெரிந்துகொள்வது கஷ்டமானதால் அதனைப் பிரகாசிக்கச் செய்வதற்காகவே பூமியில் நீர் அவதரித்திருக்கிறீர். அப்படிப்பட்ட சரிதமாகிய பெரிய சமுத்திரத்தில் மூழ்கி, சில பெரியோர்கள் தாபமற்றவர்களாகி மோக்ஷத்தைக்கூட விரும்புகிறார்களில்லை. இப்படிப்பட்ட பக்தர்கள் அரிதிலும் அரிதே. மேலுமவர்கள் உம்முடைய பாதாரவிந்தத்தில் ஹம்ஸங்கள்போல் ரமித்துக்கொண்டிருக்கும் பக்தர்களுடைய சேர்க்கையால் வீடு முதலிய ஆசைகளையொழித்து விடுகிறார்கள். "சகல தேவர்களும் முமுக்ஷுக்களும் பிர்மத்தை அறிந்தவர்களும் எதனை நமஸ்கரிக்கிறார்களோ" —சுருதி.

ஹயத்வஜீயத்தில்—

ஊதி விசூரஷி கவயொஙிமரோவவநமயஜஜ உவா
வஸெத ஹவசஹ்விநிஷஷிதாஃ । ஓ ராவமா தகூ நிம
ரோயத வாஜ நவஸ்ரிதஸறாஸ்ிவரிவத வரிஸ்ரணாஃ॥
॥ உஉ ॥

அறியமுடியாத சுரூபமுள்ளவரே! வேதமாகிய பெரிய சமுத்திரத்தில் அலேந்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டுச் சில பெரியோர்கள், வேதங்களால் நிரூபிக்கப்படும் உம்மை யாகம் முதலிய கர்மங்களைச் செய்து உபாஸிக்கிறார்கள். "வேதமாகிற சமுத்திரத்தைக் கடந்து மிகவும் கஷ்டப் பட்டு, பரமேசுவரனுகிய உம்மைக் கண்டுபிடித்து மகரிஷிகள் மோக்ஷத்தையடைந்தார்கள். வேதத்திற் சொல்லிய கர்மங் களுக்குப் பலனைக் கொடுப்பவரான உம்மைத் தியானஞ் செய்கிறார்கள்; யாகத்தால் உபாஸிக்கிறார்கள்."—குசிக சுருதி.

23. பரமாத்மாவாகிய உம்மை உபாஸிப்பதற்கு உப யோகமான இந்தச் சரீரமானது ஆத்மாபோலவும், சிநேகிதன் போலவும், பிரியன் போலவுமிருக்கிறது. அப்படியிருந்தும் ரட்சிப்பதில் நோக்கமுள்ளவரும், அனுகூலரும், பிரியமுள் ளவருமான உம்மைச் சேவிக்காமல் தேகம் முதலியவைகளைக் காப்பாற்றிக்கொண்டு ஆத்ம சுரூபத்தை அறியாமல், மிக்க பயத்தைக் கொடுக்கக்கூடிய ஸம்ஸாரத்தில் ஜனங்கள் சுழன்றுகொண்டிருக்கிறார்கள். அதனால் அவர்கள் ஆத்ம காதியென்று சொல்லப்படுகிறார்கள்.

வீரராகவீயத்தில்—21-வது சுலோகத்தில் இந்த தேகம் பரமாத்மாவைச் சேவிப்பதற்கு உபயோகமானது என்று சொல்லப்பட்டது. அப்படியே அந்த விஷயத்தில் அந்தச் சரீரத்தை உபயோகப்படுத்தாவிடில் சரீரம் வீணாய்ப் போய்

விடுமென்றும், அநர்த்தத்தைக் கொடுக்குமென்றும் இந்த சுலோகத்தில் காட்டப்பட்டது. இந்த மனித சரீரமானது உம்முடைய சேவையில் உபயோகப்படுமானால் ஆத்மா போலவும், மித்திரன் போலவும், பிரியன் போலவுமிருக்கும். ஜனங்கள் சப்தம் முதலிய விஷயங்களில் ஆசைகொண்டு உம்மைச் சேவிக்கிறதில்லை. நீர் ஜனங்களுக்கு க்ஷேமத்தைச் செய்வதில் நோக்கமுள்ளவராகவும், பிரியராகவும், ஆத்மாவாகவும் இருக்கிறீர். ஜனங்களோ முந்திய கர்ம வாசனையுள்ளவர்களாகி, அற்பமான தேகத்தை யடைந்து, மிக்க பயங்கரமான ஸம்ஸாரத்தில் அலைகிறார்கள். ஆனதால் அவர்கள் ஆத்மகாதிகள் எனப்படுகிறார்கள்.

விஜயத்வஜீயத்தில்—

𑌨 𑌪𑌰𑌿𑌲𑌷𑌨𑍍𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌦𑌪𑌵𑌰𑍍𑌗𑌮𑌪𑍀𑌶𑍍𑌵𑌰 𑌤𑍇 𑌚𑌰𑌣
𑌸𑌰𑍋𑌜𑌹𑌂 𑌸𑌕𑍁𑌲 𑌸𑌙𑍍𑌗𑌵𑌿𑌸𑍃𑌷𑍍𑌟 𑌗𑍃𑌹𑌾𑌃 । 𑌤𑍍𑌵𑌦𑌨𑍁
𑌪𑌥𑌂 𑌕𑍁𑌲𑌾𑌯𑌮𑌿𑌦𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 𑌪𑍍𑌰𑌿𑌯𑌵𑌚𑍍𑌚𑌰𑌤𑌿 𑌤𑌥𑍋
𑌨𑍍𑌮𑍁𑌖𑍇 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌹𑌿𑌤𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌚 ॥ ௨௧

சில யோகிகள் உம்முடைய பாதாரவிந்தத்தில் ஹம்ஸங்கள்போல் ரமித்துக்கொண்டிருக்கும் ஸந்நியாஸிகளுடைய சேர்க்கையால் வீடு முதலியவைகளில் ஆசையை யொழித்து, உம்மை யடைவதற்குச் சாதனமான இந்தச் சரீரத்தை ஆத்மாவாகவும், பிரியனுகவும் நினைக்கிறார்கள். மேலும், அவர்கள் அநுகூலத்தைச் செய்பவரும், பிரியரும், ஆத்மாவுமாகிய உம்மிடத்தில் பக்தியுள்ளவர்களாகி மோக்ஷத்தையும் விரும்புகிறதில்லை.

24. யோகிகள் பிராணன், இந்திரியங்கள் ஆகிய இவைகளை அடக்கி, ஸ்திரமான யோகஞ்செய்து ஹிருதயத்தில் எதை யுபாஸிக்கிறார்களோ, அந்த ஆத்ம தத்வத்தைச்

சத்ருக்களான சிசுபாலன் முதலியவர்களும் எப்பொழுதும் தியானஞ் செய்ததால் அடைந்தார்கள். கோபிகை முதலிய ஸ்திரீகள் ஆதிசேஷனுடைய உடல்போன்ற கையில் மனத்தை வைத்து அந்த ஆத்மாவை அடைந்தார்கள். சம புத்தியுள்ள நாங்களும் உம்முடைய பாதமாகிய தாமரை மலரின் மதுவைப் பானஞ் செய்கிறோம். ஆனதால் எல்லாரும் சமமாக இருக்கிறோம்.

வீர ராகவீயத்தில்—'ஸமத்ருச' என்பதைப் பகவானுக்கு விசேஷணமாகச் செய்து, நீர் சம திருஷ்டியுள்ளவரானதால் உமக்கு எல்லாரும் ஸமானர்களேயாம் என்று சொல்லப் பட்ட

விஜயத்வஜீயத்தில்—

ந வ்ரதேஜ்யாதி ஸமஞ்சயாவரோபஸாதநைர் ந வேதாத்யயநாதிநா வா | ந ச ஜந்மநா வா கர்மணா வா ஸ்த்ரிய: ஸமம் | ஸ்த்ரீணாம் ... ஸ்தாநம் ...
[Grantha verse; best reading uncertain] || உச ||

பரமாத்மாவை யுபாஸியாமல், 'நான் பிர்ம்ம தேவன்' என்று வேறு வகையாக உபாஸிப்பவர்கள் ஆத்மகாதிகளெனப்படுகிறார்கள். அவர்கள் பகவானிடத்தில் பக்தி செய்கிறதில்லை. நித்யம் துக்கத்தைக் கொடுக்கும் அற்ப சரீரத்தை அடைந்து, ஸம்ஸாரத்தில் கஷ்டப்படுவார்கள். எவர்கள் மோட்சத்திற்காகப் பகவானைச் சேவிக்கிறார்களோ, அந்தப் பக்தர்களான மகரிஷிகளைத் துவேஷிப்பவர்களும் மகாவிஷ்ணுவைத் துவேஷித்தவர்போலக் கெடுதியை அடைகிறார்கள்.

25. ஓ பகவன்! நீர் நித்ய ஸித்தமான வஸ்து. மற்றவையெல்லாம் உமக்குப் பின் உண்டானவை. ஆனதால்

உம்முடைய சுரூபத்தை யாரால் அறியமுடியும்? உம்மிட மிருந்து பிரும்மதேவர் உண்டானார். அதன்பின் ஆதியாத் மிக, ஆதிதெய்விக தேவகணங்கள் உண்டாயின. மற்றவை யெல்லாம் அவர்களுக்குக் கீழ்ப்பட்டவை. எப்பொழுது நீர் எல்லாவற்றையும் உபஸம்ஹரித்து யோக நித்திரை செய்கிறீரோ, அப்பொழுது ஆகாயம் முதலிய ஸ்தூலமும், மகத் தத்வம் முதலிய சூட்சுமமும், ஸ்தூல சூட்சுமங்களா லேற்பட்ட சரீரமும், காலத்தின் வேகமும், இந்திரியங்களும், பிராணனும், சாஸ்திரம் முதலியவைகளும் ஒன்றுமில்லை. (ஞானசாதனமே யில்லையென்று கருத்து).

வீரராகவீயத்தில்— எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கும் உம்முடைய சுவரூபத்தை உமக்குப்பின் ஜனித்து, நாசமடைகின்ற எவன் தெரிந்துகொள்வான்? சாஸ்திரத்தால் தான் உம்முடைய சுவரூபத்தைத் தெரிந்துகொள்ளவேண் டும். முதலில் உம்மிடத்திலிருந்து பிர்ம்மதேவர் உண்டா னார். அதன்பின் நிவிருத்தி மார்க்கமுள்ள சனகர் முதலிய வர்களும், பிரவிருத்தி மார்க்கமுள்ள மரீசி முதலிய பிரஜா பதிகளு முண்டானார்கள். அதன்பிறகு தேவர்களுண்டா னார்கள். நீர் எப்பொழுது சங்கிரத்தை ஹிருதயத்தில் உபஸம்ஹரித்து நித்திரை செய்கிறீரோ, அப்பொழுது சேதன வஸ்துக்களாவது, அசேதன வஸ்துக்களாவது அவ் விரண்டுள்ள காரியங்களாவது, காலத்தின் வேகமாவது ஒன்றுமில்லை.

விஜயத்வஜீயத்தில்—

𑌤𑌰𑍍𑌹𑌿 𑌨 𑌸𑌨𑍍𑌨 𑌚𑌾𑌸𑌦𑍁𑌭𑌯𑌂 𑌨 𑌚 𑌕𑌾𑌲𑌜𑌵𑌃
𑌕𑌿𑌮𑌪𑌿 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌵𑌕𑍃𑌷𑍍𑌯 𑌶𑌯𑍀𑌤 𑌯𑌦𑌾 ।
𑌕 𑌇𑌹 𑌨𑍁 𑌵𑍇𑌦 𑌬𑌤𑌾𑌵𑌰𑌜𑌨𑍍𑌮𑌲𑌯𑍋
𑌽𑌗𑍍𑌰𑌸𑌰𑌂 𑌯𑌤 𑌉𑌦𑌗𑌾𑌦𑍃𑌷𑌿𑌰𑍍𑌯𑌮𑌨𑍁 𑌦𑍇𑌵𑌗𑌣𑌾 𑌉𑌭𑌯𑍇 ॥ ॥ ௨௫ ॥

" ஆதிசேஷனுடைய உடலில் படுத்துக்கொண்டிருப்ப வரான உம்முடைய சுரூபம் உம்மால்தான் அறியமுடியும். ஸத்யலோகத்திற்கு அதிபதியான பிரம்மதேவரால் அறிய முடியாது. மற்ற தேவர்களாலும் அறியமுடியாது. அவர்கள் உற்பத்தியுள்ளவர்கள் " என்ற ஸாங்கிருக சுருதியின் அர்த்தம், இந்த சுலோகத்தால் காட்டப்படுகிறது. ஸ்மரிப் பவர்களிடத்தில் பிரியமுள்ள பகவன் ! ஆதிசேஷனுடைய உடலில் படுத்திருக்கும் உம்முடைய சுரூபத்தை நீர்தான் அறியவேண்டும். மற்றவர்களால் அறியமுடியாது. உம்மு டைய எல்லா மகிமையையும் நாங்கள் வர்ணிக்கச் சக்தியற்ற வர்களாக இருக்கிறோம். உற்பத்தி நாசமில்லாத உம்முடைய சுரூபத்தை எவன் தெரிந்துகொள்ளப்போகிறான் ? உம்மி டத்திலிருந்து பிரம்மதேவரும், அதன்பின் அதிகாரத்தை அடையப்போகின்ற தேவகணங்களும் உண்டானார்கள்.

26. சிலர், இல்லாத திரவியம் உண்டாகிறதென்றும், ஸத்தான திரவியம் நசிக்கிறதென்றும் சொல்லுகிறார்கள். (தார்க்கிகர்கள் என்று தாத்பர்யம்.) மற்றுஞ் சிலர் ஆத்மாவை வெவ்வேறு என்று சொல்லுகிறார்கள். (தேகத்தை ஆத்மா வென்று நினைத்த சார்வாகர்கள் ஆத்மா பருத்திருப்பதாக வும், இளைத்திருப்பதாகவும், மனுஷ்யனாக இருப்பதாகவும், மிருகமாக இருப்பதாகவும் சொல்லுகிறார்கள் என்று கருத்து) இன்னுஞ் சிலர் தேவர்களும், மனுஷ்யர்களும் ஒருவருக் கொருவர் உபகாரம் செய்துகொள்வதால் கர்ம பலம் வியாபா ரத்திற்குச் சமமானது என்று சொல்லுகிறார்கள் (மீமாம்ஸ கர்கள்). புருஷனை ஸத்வம் முதலிய மூக் குணங்களுள்ளவர் என்று மற்றுஞ் சிலர் சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்லுகிறவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் மதத்தை ஆபாச யுக்திகளால் ஸ்தாபிக்கிறார்கள். இம்மாதிரியான மத பேதங்கள் உம்முடைய உண்மையை யறியாததால்

ஏற்பட்டிருக்கின்றன. ஆனதால் பிரகிருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணரும், ஞானசுரூபியுமான உம்முடைய உண்மையைத் தெரிந்துகொண்டால் மேற்காட்டிய பேதங்கள் ஏற்படமாட்டா.

விஜயத்வஜீயத்தில்—

ததா ந ஸ்தூலரூபாணி அண்டமுக்யானி ஸூக்ஷ்மாணி மஹதாதீனி தத்ஸங்கதானி அக்னிபூர்வாணி ச ந ஸந்தி । காலமஹிமா ச ந । தத்வ்யதிரிக்தவஸ்து ந । ஸ்தூலப்ரபஞ்சஸ்ய உத்பத்திலயாதிகம் ச ப்ரதிபாதயந்தி ॥

ஓ பகவன்! நீர் எப்பொழுது வேதத்தை உபஸம்ஹரித்துக்கொண்டு (அத்தியயனம் செய்பவர்கள் இல்லாததால்) யோக நித்திரை செய்கிறீரோ, அப்பொழுது ஸ்தூலமாகிய அண்டம் முதலியவைகளும் சூட்சுமமாகிய மகத் தத்வம் முதலியவைகளும், இரண்டும் சேர்ந்த அக்னி முதலியவைகளும் இல்லை. காலத்தினுடைய மகிமையும் அப்பொழுது இல்லை. அப்பொழுது வேறு ஒரு வஸ்துவுமில்லை. ஓ உற்பத்தியற்றவரே! சூட்சுமரூபியான உம்மிடத்திலிருந்து ஸ்தூலமாகிய ஜகத் உண்டாயிற்றென்பதையும், அதனிடத்தில் லயிக்கிறதென்பதையும், எல்லாவற்றிற்கும் மேலான பரமாத்மாவிடத்தில் பேதபுத்தி வைப்பதையும் வியவகாரம் என்று எவர்கள் நினைக்கிறார்களோ அவர்கள் வேதம் முதலியவைகளைக்கொண்டு உம்மைத் தோத்திரஞ் செய்யும் வாயுவின் அனுக்கிரகத்தால் அப்படிச் சொல்லுகிறார்கள்.

நோட்டு

விவகாரம் — உம்மைச் சேவிப்பதாகிற புணத்தைக் கொடுப்பவனுக்குச் சுகமாகிய வஸ்துவைக் கொடுக்கிறதென்ற சங்கற்பம்.

27. ஸத்வம் முதலிய முக்குண சுருபமான இந்த ஜகத்தானது உண்மையில் இல்லாததானாலும், உம்மிடத்தில் இருப்பதுபோல் தோற்றுகிறது. அது மனத்தின் விளையாட்டேயாம். (அதிஷ்டானமாகிய பிர்ம்மம் இருப்பதால் ஜகத்தும் இருப்பதாகத் தோன்றுகிறது என்று தாத்பரியம்) அப்படியே ஜகத்தில் தனியாகப் புருஷன் ஒருவன் இருப்பதாகத் தோன்றுவதும் பொய்யேயாம். ஆத்மாவின் உண்மையை யறிந்தவர்கள் போக்தாவாகிய புருஷன், போக்யமாகிய ஜகத் இவைகளெல்லாம் பிர்ம்மமென்று தெரிந்து கொள்ளுகிறார்கள். (எல்லாம் பிர்ம்மத்தினுடைய காரியமானதால் எந்தக் காரியம் எதை முக்கிய காரணமாக உடையதோ அது அந்த சுருபமாக இருக்குமென்பது கருத்து.) தங்கத்தில் அபேட்சையுள்ளவன் அதனால் செய்யப்பட்ட வளை முதலியவைகளை விட்டுவிடுவானா? அவைகளும் சுவர்ணமல்லவா? அதுபோல, தம்மால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தும், அதில் பிரவேசித்த புருஷ சுருபமும் பிர்ம்மமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

வீரராகவீயத்தில்:—மனுஷ்யர்கள் வரையிலுள்ள பிராணிகளுக்கு மனமானது சகல காரியங்களையுஞ் செய்வதுபோல் தோன்றினாலும் ஜகத்சுருபியான உம்மைக் காண்பிக்கிறதில்லை. உம்மை யுபாஸித்து, சுத்தமான சித்தமுள்ளவர்கள் இந்த ஜகத் முழுவதும் பரமாத்ம சுருபமென்று தெரிந்து கொள்ளுகிறார்கள். சூட்சுமமான சேதனம், அசேதனம் இவைகளடங்கிய காரணமான பிர்ம்மமே காரியமாகிய ஜகத்தைவிட வேறு அல்லவாதலால் ஜகத்தும் உபாதேய (அங்கீகரிக்கக்கூடியது) மாகிறது. சுவர்ணத்தின் காரியமான வளை முதலியவைகள் சுவர்ணமானதால் அவைகளை எடுத்துக் கொள்ளுகிறார்களேயொழிய விட்டுவிடுகிறதில்லை. ஆனதால் பரமாத்மாவினால் செய்யப்பட்டதும், பரமாத்மாவினால்

பிரவேசிக்கப்பட்டதுமான ஜகத் பரமாத்ம சுரூபமென்று நிச்சயிக்கப்பெற்றது.

விஜயத்வஜீயத்தில்—

𑌤𑍍𑌰𑌿𑌗𑍁𑌣𑌮𑌯𑌃 𑌪𑍁𑌮𑌾𑌨𑌿𑌤𑌿 𑌯𑌦𑌬𑍋𑌧𑌕𑍃𑌤𑌾 𑌤𑍍𑌵𑌯𑌿
𑌨 𑌤𑌤𑌃 𑌸𑌭𑌵𑍇𑌦𑌵𑌬𑍋𑌧𑌰𑌸𑍇 । 𑌸𑌦𑌿𑌵 𑌮𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑌿
𑌵𑌿𑌭𑌾𑌤𑍍𑌯𑌸𑌦𑌾𑌮𑌨𑍁𑌜𑌾𑌤𑍍𑌸𑌦𑌭𑌿𑌮𑍃𑌶𑌨𑍍𑌤𑍍𑌯𑌶𑍇𑌷𑌮𑌿𑌦𑌮𑌾𑌤𑍍𑌮-
𑌤𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌃 ॥　　　　॥ ௨௮ ॥

ஜீவன், ஸத்வம் முதலிய குணங்களுடைய சுரூபி (குணங்களுக்குக் கட்டுப்பட்டவன்) என்று சொல்வதும் அஞ்ஞானத்தால் ஏற்பட்டதேயாம். ஞான சுரூபியாகிய உம்மிடத்தில் அந்தக் குணங்களுடைய சம்பந்தமில்லை. முக்குண சுரூபமாகிய மனமானது உம்மிடத்திலும் இருப்பதுபோல் இருக்கிறது. இப்படிச் சொல்வது அஸத்துக்களுடைய மதம். ஆத்ம தத்துவத்தை யறிந்த மனிதர் முதலியவர்கள் உம்மை உண்மையில் சகல ஜீவசுரூபியென்று அறிகிறார்கள். "அசுர சுபாவமுள்ள ஜனங்கள் ஸ்ரீ மகாவிஷ்ணுவை ஸதவம் முதலிய குணங்கள, தேகம், இந்திரியம் ஆகிய இவைகளுள்ளவரென்று சொல்லுகிறார்கள். தேவர்கள் (தேவ சுபாவமுள்ளவர்கள்) ஸ்ரீ மகாவிஷ்ணுவை முக்குணங்களுக்கு மேற்பட்டவரென்றும், சுகத்தால் நிறைந்தவரென்றும் சொல்லுகிறார்கள். ஜீவர்கள் குணங்களுக்கு வசப்பட்டவர்களானதால் உபத்திரவத்தை அடைகிறார்கள். உபத்திரவமற்றவரான பகவானுடைய அனுக்கிரகத்தை அடைகிறார்கள்" — சைதன்ய விவேகம்.

28. ஓ பகவன்! எவர்கள் உம்மை சகல பிராணிகளுக்கும் இருப்பிடமென்று நினைத்து உபாஸிக்கிறார்களோ, அவர்கள் மிருத்யுவை அலட்சியம் செய்து மிருத்யுவின் தலையில்

காலை வைப்பார்கள். எவர்கள் உம்மை உபாஸிக்கவில்லையோ, அவர்கள் வித்வான்களானாலும் அவர்களைப் பசுக்களைப்போல நீர் வாக்கினால் கட்டுகிறீர். உம்முடைய பக்தர்கள் தங்களையும், மற்றவர்களையும் பரிசுத்தப்படுத்துகிறார்கள். மற்றவர்கள் அப்படிப் பரிசுத்தப்படுத்துகிறதில்லை.

வீரராகவீயத்தில்— எவர்கள் சகல பிராணிகளுக்கும் ஆதாரமாக இருப்பவரென்று உம்மை உபாஸிக்கிறார்களோ, அவர்கள் மிருத்யுவை லட்சியஞ்செய்யாமல் மிருத்யுவின் தலையில் காலை வைக்கிறார்கள். எவர்கள் மேற்காட்டியபடி உம்மை உபாஸிக்கவில்லையோ, அவர்களுக்கு சாஸ்திரங்களை உபதேசித்து, முரட்டு மாடுகளை மூக்குக் கயிறுகள் முதலியவைகளால் அடக்குவதுபோல நல்ல மார்க்கத்திற்குக் கொண்டுவருகிறீர். எவர்கள் சாஸ்திரம் படிப்பதற்கு அதிகாரமில்லாமலிருக்கிறார்களோ, அவர்களை உம்முடைய பக்தர்கள் பரிசுத்தப்படுத்துகிறார்கள். (எவர்கள் சாதுக்களிடத்திலும் பிரியப்படுகிறதில்லையோ, அவர்களுக்கு ஒரு பொழுதும் நல்ல கதியில்லையென்று தாத்பரியம்.)

விஜயத்வஜீயத்தில்—

நஹி விக்ருதிம் த்யஜந்தி கநகஸ்ய ததாத்மதயா ஸ்வக்ருத
மநுப்ரவிஷ்டமிதமாத்மதயாவஸிதம் । தவ யே பரி
சரந்த்யகிலஸத்வநிகேததயா தத உத பதாக்ரமந்த்ய
விகணய்ய ஶிரோ நிர்ருதே: ॥ ॥ ௨௬ ॥

தங்கத்தால் செய்யப்பட்ட வளை முதலிய ஆபரணங்கள் எப்படித் தங்கமாகவே இருக்குமோ, அதுபோல உம்மால் சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தில் பிரவேசித்த நீர் ஜகத் சுரூபியேயாம் (எல்லாவற்றிலும் மகாவிஷ்ணு வியாபித்திருக்கிறார் என்று தாத்பரியம்). எவர்கள் உம்மைச் சகல பிராணிகளுக்கும் அதிஷ்டானமென்று உபாஸிக்கிறார்களோ, அவர்கள்

பிர்ம்மத்தை யடைவதற்குத் தடையாயுள்ள ஸம்ஸாரத்தை லட்சியஞ் செய்யாமல் அதிலிருந்து விடப்படுவார்கள். "தங்கத்தால் செய்யப்பட்ட வளையிலுள்ள தங்கத்தை, வளையைத் தள்ளி எப்படி வேறாக எடுக்கமுடியாதோ அது போலத் தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் ஆகிய இவர்களிடத்திலிருக்கும் பகவத் சுரூபத்தைப் பிரித்தெடுக்க முடியாது. ஜீவர்கள் வெவ்வேறானாலும், பகவானை ஒருவரென்றும், சகல சுரூபியென்றும் நினைக்கவேண்டும். இம் மாதிரி, பகவானுடைய சுரூபத்தைத் தெரிந்துகொண்ட மகரிஷிகள் பிர்ம்மத்தை யடைவதற்கு விரோதமான ஸம்ஸாரத்தை லட்சியஞ்செய்யாமல் விஷ்ணுபதத்தை அடைகிறார்கள்."—கருட புராணம்.

29. ஓ பகவன்! உமக்கு இந்திரியங்களில்லை. ஆனாலும், சகல பிராணிகளுடைய இந்திரியங்களுக்குச் சக்தியை உண்டு பண்ணுகிறீர்; தாமாகவே பிரகாசிக்கிறீர். (இயற்கையான ஞானசக்தியுள்ளவருக்கு இந்திரியங்களுடைய அபேக்ஷை இல்லை என்று தாத்பரியம்) சிற்றரசர்கள் தங்கள் ராஜ்ஜியத்திலுள்ள ஜனங்களால் கொடுக்கப்பட்ட வஸ்துக்களைத் தாங்கள் புசித்து, சக்கரவர்த்திக்குக் கப்பங் கட்டி, அவருடைய உத்தரவின்படி நடப்பதுபோல மனிதர்களால் கொடுக்கப்படும் ஹவ்யம், கவ்யம் முதலியவைகளைப் புசிக்கும் அவித்தையுள்ள தேவர்கள் உம்மைப் பூஜிக்கிறார்கள். உம்மிடம் பயந்து, அவரவர்களுடைய வேலையைச் சரியாக நடத்திவருகிறார்கள். "அவருக்குக் காரியமாவது, இந்திரியமாவது இல்லை. அவருக்கு ஒப்புயர்வுமில்லை." "இவருடைய சக்தி மேலானது, பலவகையானது; ஞானசக்தியும் கிரியா சக்தியும் இயற்கையானது." "இவருக்குக் கைகால்களில்லை. ஆனால் வேகமாய் நடப்பவர்; பதார்த்தங்களை எடுப்பவர். இவருக்குக் கண்களில்லை; ஆனாலும் பார்க்கிறார். இவருக்குக்

காதுகளில்லை; ஆனாலும் எல்லாவற்றையுங் கேட்டுத் தெரிந்துகொள்ளுகிறார். இவரால் அறியப்படவேண்டிய வஸ்து ஒன்றுமில்லை; இவரை ஒருவனும் தெரிந்துகொள்ள வில்லை"—சுருதிகள். "இவரிடமிருந்து பயந்து காற்று வீசுகிறது; 'இவருடைய பயத்தால் சூரியன் உதயமாகிறான். அக்னி, இந்திரன், மிருத்யு முதலியவர்களும் இவரிடமிருந்து பயந்தே தங்கள் தங்கள் வேலையைச் செய்கிறார்கள்.—சுருதி.

வீரராகவீயத்தில்— தேவர்கள் உம்மால் கொடுக்கப்பட்ட போகங்களை அனுபவிக்கிறார்கள்.

விஜயத்வஜீயத்தில்—

வரீயயஸ வஶூந்வ ஶ்ரா விஷ்யாநவி
தாம்ஸ்யிதா்யஸௌஸாநநவந்தி நதே விசே
வா: । கூஶேகை: ஸூராஸவிஸ்காரக ஶக்த்யாஸ்வ பலி
சேஹந்தி ஸசேஷந்தி ச யேநிஷிதா: ॥ ॥ உகூ ॥

எந்த வித்வான்கள் உம்மையே சேவிக்கிறார்களோ, அவர்களைப் பசுக்களைப்போல் வேதத்தில் சொல்லிய கர்மங்களை அனுஷ்டிக்கும்படி செய்கிறீர். உம்மிடத்தில் அதிகமான பிரீதி செய்த பக்தர்கள் ஜகத்தைப் பரிசுத்தப்படுத்துகிறார்கள். உம்மிடத்தில் பக்தி செய்யாதவர்கள் பரிசுத்தப் படுத்தப்படுகிறதில்லை. சகல சக்திகளையும் தரிப்பவர் நீர் ஒருவரே. வேதங்களாகிய எங்களுக்குச் சக்கரவர்த்தியாக இருப்பவர் நீர் ஒருவரேயாம். தேவர்கள் எல்லோரும் மனிதர்களால் கொடுக்கப்பட்டதைப் புசித்து உம்முடைய உத்தரவைச் சிரசால் தரிக்கிறார்கள்.

30. ஓ நித்ய முக்தரே! மாயையுடன் எப்பொழுது நீர் விளையாடுகிறீரோ, அப்பொழுது உம்முடைய சங்கற்பத்

தால் கர்மங்கள் பிரகாசிக்கின்றன. அவைகளால் உண்டான சரீரங்களுடன் தாவர ஜங்கமங்கள் உண்டாகின்றன. ஆகாயம்போல் ஸமரும், மிக்க கருணையுள்ளவரும், வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதவரும், சூன்யம போன்றவருமான உமக்குத் தம்மைச் சார்ந்தவன், பிறன் என்ற, பேதபுத்தியில்லை. (முன் சுலோகத்தில் சகல ஜனங்களுடைய இந்திரியங்களையும் விஷயங்களில் பிரவிருத்திக்கும்படி செய்பவரான பகவானை இந்திரியங்களுக்கு வசப்பட்டவர்கள் சேவிக்கிறார்களென்று சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் பரமாத்மாவிடமிருந்து எல்லாம் உண்டானதால் அவர்கள் பரமாத்மாவை உபாஸிக்கிறார்களென்று காட்டப்பட்டது.)

வீரராகவீயத்தில்— விரகமென்ற பாடத்தில் தாவரம், ஜங்கமம் ஆகிய பிராணிகள் பிரகிருதியால் ஏற்பட்ட சரீரமுள்ளவர்கள் (எல்லா ஜனங்களுக்கும் பிரகிருதி சம்பந்தம் தள்ளமுடியாதது). இப்படிப்பட்ட ஜனங்களில் சிலருக்குப் பிரகிருதி சம்பந்தம நிவர்த்தியடையுமானால அவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கிறது. அதுவும் பரமாத்மாவாகிய உம்முடைய கருணையினால்தான் உண்டாகிறது. ஓ துஷ்ட குணமில்லாதவரே ! உம்மைவிடக் கருணையுள்ளவன் ஒருவனுமில்லை. ஆனதால் உமக்குக் காப்பாற்றக்கூடாதவன் என்பதுமில்லை. சகல பிராணிகளுக்கும் சரீரமாக இருப்பதால் எல்லாம் உம்மால் ரட்சிக்கக்கூடியதேயாம். ஆகாயம் எங்கும் வியாபித்திருந்தாலும், தோஷ சம்பந்தமில்லாமல் இருப்பதுபோல் நீர் எங்கும் வியாபித்திருந்தாலும் கெட்ட குணங்களுடைய சம்பந்தமற்றவராக இருக்கிறீர். அதனால் சூனியம்போல் இருக்கிறீர். (அப்படிப்பட்ட உமக்குப் பேதபுத்தியில்லையென்று தாத்பரியம்.)

விஜயத்வஜீயம்—

𑌵𑌰𑍍𑌷𑌭𑍁𑌜𑍋𑌽𑌖𑌿𑌲𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌪𑌤𑍇𑌰𑌿𑌵 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍃𑌜𑍋
𑌵𑌿𑌦𑌧𑌤𑌿 𑌯𑌤𑍍𑌰 𑌯𑍇 𑌤𑍍𑌵𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌭𑌵𑌤𑌶𑍍𑌚𑌕𑌿𑌤𑌾𑌃 ।
𑌸𑍍𑌥𑌿𑌰𑌚𑌰𑌜𑌾𑌤𑌯𑌸𑍍𑌯𑍁𑌰𑌜𑌯𑍋𑌤𑍍𑌥𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌯𑍁𑌜𑍋
𑌵𑌿𑌹𑌰 𑌉𑌦𑍀𑌕𑍍𑌷𑌯𑌾 𑌯𑌦𑌿 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌤𑌃 ॥ ௩௦ ॥

*சிற்றரசர்கள் சக்கரவர்த்தியின் உத்தரவைத் தலையால் சுமப்பதுபோலப் பிரஜாபதிகள் எந்த எந்த வேலையில் நியமிக்கப்பட்டிருக்கிறார்களோ, அவர்கள் உம்மிடம் பயந்து, தங்கள் தங்கள் வேலையை நடத்துகிறார்கள். ஆனதால் எல்லா ஜனங்களுக்கும் பரமாத்மாவிடமிருந்தே முக்தி கிடைக்கிறதென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஓ உற்பத்தியில்லாதவரே! தாவர, ஜங்கமப் பிராணிகளெல்லாம் பரமாத்மாவிடமிருந்தே ஸம்ஸாரத்தை அடைகின்றன. (மோட்சம் பரமாத்மாவிற்கு அதீனமானதால், ஸம்ஸாரமும் பரமாத்மாவுக்கு அதீனமென்று கருத்து.)*

31. *இயற்கையில் ஜீவர்கள் அநேகர்களென்றும், எங்குமிருப்பவர்கள் எனறும் இருக்குமானால் உம்மால் அவர்கள் சிட்சிக்கப்படுகிறார்கள் என்று சொல்லமுடியாது. (அவர்கள் ஒருவருக்கொருவர் ஸமர்களானதால் நியந்தா நியம்யன் என்றது ஏற்படாது. அப்படிச் சொல்லாவிடில் (ஜீவர்கள் சுதந்திரர்களென்று) உம்மால் நியம்யர்கள் அவர்களுக்கு நீர் நியந்தாவென்று சொல்வது பொருந்தும். எப்படியென்றால்—ஜீவர்கள் உபாதி சம்பந்தத்தால் உம்முடைய காரியங்களேயொழிய வேறில்லை. அவர்களுக்கு நீர் காரணராக இருப்பதால் நீர் அவர்களுக்கு நியந்தாவாக (அதிபதி) ஆகிறீர். உம்முடைய சுரூபம் எல்லாவற்றிலும தொடர்ந்திருக்கிறது. அறியப்பட்ட வஸ்துக்கள் தோஷமுள்ளவையாதலால், என்னால் அறியப்பட்டதென்று சொல்லக்கூடாது.*

(அவித்தையாகிய உபாதியுள்ள பரமாத்மாவின் அம்சங்களே ஜீவர்களென்று தாத்பரியம்).

வீரராகவீயத்தில்— "ஜீவர்கள் அநேகர்கள், நித்யர்கள்; எங்கும் இருப்பவர்கள். ஆனதால் அவர்கள் ஒருவனுக்குள் அடங்கியவர்களல்லர்" என்ற நியமமானது பொருந்தாது. ஜீவன் அணுவென்றால்தான் பொருந்தும். "வியாபகமான எந்தப் பிர்ம்மத்தினால் ஜகத் படைக்கப்பட்டதோ, அந்தப் பிர்ம்மமானது அந்த ஜகத்தில் அந்தர்யாமியாக இருந்து நியந்தாவாக இருக்கிறது. ஆனதால் சகல ஜகத்திற்கும் பரமாத்மாவே நியந்தா" என்று எவர்கள் அறியவில்லையோ, அவர்களுடைய மதம் பிரமாண விருதவமானதால் ஒப்புக் கொள்ளத்தக்கதல்ல.

விஜயத்வஜீயம்—

நஹி ப்ராணஸ்ய கஶ்சித³பரோ நாபரஸ்ய ஹ்யேவ
அத்⁴யத இவாந்யஸ்ய ச ஸர்வஜ்ஞஸ்யாப்யத꞉ । ஸ்வாமி
நிதா ப்ராணா ஹ்யநந்தத்வாத் யதி³ ஸர்வாந்தேதா நஹி
நாநாஸ்யேதி நியமோऽப்⁴யுபக³ந்தவ்யஸ்ததா² ॥ ॥ ௯௧ ॥

ஓ ஒப்பற்றவரே! ஜீவர்களுக்குள் எல்லாவற்றையும் அறிந்தவனை (ஸர்வக்ஞன்) பிராணனைக் காட்டிலும் மேலானவன் இல்லாததுபோலப் பிராணனைவிட மேலானவரான உம்மைக் காட்டிலும் மேலானவன் ஒருவனுமில்லை. (நீரே எல்லாவற்றிற்கும் அதிபதி. பிராணன், ஸ்ரீதேவி முதலியவர்களும் உமக்குத் தாழ்ந்தவர்கள்.) ஓ எங்கும் நிறைந்திருப்பவரே! ஜீவர்கள் பிராணனுக்குச் சுவாதீனப்பட்டவர்கள். அநேகர்கள், ஆனால் "பிர்ம்மம் ஒன்று" என்ற சுருதி வாக்கியத்திற்கு விரோதம் வருமே என்றால் அந்த சுருதி ஜீவர்கள் ஒன்று என்று சொல்லவில்லை. பிர்ம்மம் ஒன்று என்று சொல்,

32. பரமாத்மாவினிடத்திலிருந்து ஜீவர்கள் உண்டாகிறார்கள். அதனால் பரமாத்மா அவர்களுக்கு நியந்தாவாக இருக்கிறார் என்று சொல்வதானால் ஜீவர்கள் அநித்யர்களென்று ஏற்படும். ஒவ்வொரு நாளும் சில ஜீவர்கள் நசிக்கிறார்கள், சிலர் ஜனிக்கிறார்கள் என்றும் ஏற்படும். ஜீவர்கள் நாசத்தை அடைவதே மோட்சமென்றும் ஏற்படுமேயென்றால், உபாதிகளின் ஜனனத்தை ஜீவர்களுக்கு ஜன்மமென்று சொல்லுகிறோம், உண்மையில் ஜீவர்களுக்கு உற்பத்தியில்லையென்று இந்த சுலோகத்தில காட்டப்படுகிறது.— பிரகிருதி, புருஷன் ஆகிய இவர்கள் உற்பத்தியற்றவர்களானதால் பிரகிருதி ஜீவரூபியாக ஆயிற்று என்பதும், புருஷன் என்பதும், புருஷன் ஜீவரூபியானான் என்பதும் பொருந்தாது. (சுருதியில் புருஷனை அஜன் என்றும், பிரகிருதியை அஜா என்றும் சொல்லியிருக்கிறது.) ஆனதால் பிரகிருதி, புருஷன் இவ்விருவர்களுடைய சம்பந்தத்தால் பிராணன் முதலிய உபாதிகளுள்ள ஜீவர்கள் உண்டாகிறார்கள். ஜலத்தில் குமிழி உண்டாகவேண்டுமானால் ஜலத்தால் மாத்திரம் உண்டாகிறதில்லை. காற்றினால் மாத்திரம் உண்டாகிறதில்லை. இரண்டும் சேர்ந்தால்தான் குமிழி உண்டாகிறது. ஜலம் நிமித்த காரணம், காற்று உபாதான காரணம்(முக்கிய காரணம்). அதுபோல பிரகிருதி நிமித்த காரணம்; புருஷன் உபாதான காரணம். “அடி மைத்ரேயி! இந்த ஆத்மா நாசமற்றவர்” என்ற சுருதியின்படி, ஜீவன் நித்யனென்று ஏற்படுவதால் உபாதியின் ஜன்மத்தை ஜீவனுடைய ஜனனமாகச் சொல்லுகிறோமேயொழிய, உண்மையில் ஜீவனுக்கு ஜனனமில்லை. அதுபோல உபாதி நாசம் ஜீவனுடைய நாசமாகச் சொல்லப்படுகிறதேயொழிய, உண்மையில் ஜீவனுக்கு நாசமில்லை. எப்படி, தேனில் மற்ற புஷ்ப ரசங்கள் சேர்ந்து புஷ்பத்தின் ரசமென்று பிரித்தெடுக்க முடியாமல்

தேனுக லயிக்கின்றனவோ, எப்படி நதியின் ஜலம் சமுத்திர ஜலத்தில் சேர்ந்து நாம ரூபங்களை விட்டு ஒரே ஜலமாக ஆகின்றனவோ, அப்படி ஜீவன் உண்மையில் ஜனனமில்லாதவனுனதால் பலவகையான பெயர், குணங்கள் ஆகிய இவைகளுடன் காரணமாகிய உம்மிடத்தில் லயத்தை யடைகிறுன். (உபாதி நாசமடைந்தால் ஜீவத்வம் போய்விடுகிறது. சுரூபமாக இருக்கிறுனென்று தாத்பரியம். ஜீவன் பிரகிருதிக்கு வசப்பட்டவன் ; பிரகிருதி ஈசுவரனுக்கு வசப்பட்டது.)

வீரராகவீயம்— பிரகிருதி, புருஷன் ஆகிய இருவர்களுக்கும் உற்பத்தியில்லை. ஆனாலும் ஜலம், வாயு இவ்விரண்டும் சேர்ந்து ஜலத்தில் குமிழியை உண்டாக்குவது போல் பிரகிருதி, புருஷன் இவ்விருவர்களின் சேர்க்கையாலேயே ஆதாரமாக இருக்கும் உம்மிடத்தில் பலவகையான நாம ரூபங்களுள்ள பிராணிகள் உண்டாகிறுர்கள். நதிகள் சமுத்திரத்தில் விழுவதுபோலும், தேனில் மற்ற புஷ்ப ரசங்கள் சேருவதுபோலும், பிரளய காலத்தில் அந்தப் பிராணிகள் உம்மிடத்தில் லயத்தை அடைகிறுர்கள். (பதார்த்தங்களுக்கு அநேக அவஸ்தைகள் நேர்ந்தாலும் அந்த அவஸ்தைகள் அநித்யங்களேயொழிய, பதார்த்தம் நித்யம். முன் அவஸ்தையை விடுவது நாசமென்றும், பிந்திய அவஸ்தையை அடைவது ஜனனமென்றும் சொல்லப்படுகிறது).

விஜயத்வஜீயம்—

[illegible]

[illegible] ॥ ॥ ௩௨ ॥

ஓ உற்பத்தியற்றவரே! ஒருவகையாக எங்குமிருப்பவரும், தோஷமற்றவரும், நாசமற்றவருமான பரமாத்மாவையறிந்த ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட புருஷன் அஞ்ஞானத்தால் கற்பிக்கப்பட்ட ஸம்ஸாரத்திலிருந்து விடப்படுவான். பிரகிருதி, புருஷன் இவர்கள் உற்பத்தியற்றவர்கள். (அவர்கள் நித்ய முக்தர்களென்று கருத்து.) எவ்விடத்தில் பரமாத்மாவோ, அவ்விடத்தில் பிரகிருதி; எவ்விடத்தில் பிரகிருதியோ, அவ்விடத்தில் பரமாத்மா என்று தேசத்தாலும், காலத்தாலும் சேர்ந்திருக்கும் அவ்விருவர்களிடமிருந்து ஜலத்தில் குமிழிபோல ஜீவர்களுண்டாகிறார்கள் என்று தெரிந்துகொண்ட ஆசாரியனிடம் உபதேசம் பெற்றவர்கள் மோட்சத்தை அடைவார்கள். “பரன், பிரகிருதி இவ்விருவர்கள் இயற்கையில் முக்தர்கள்” என்ற ஞானமுள்ள ஆசாரியனுடைய உபதேசத்தால் ஸம்ஸார பந்தத்தை நிவர்த்தித்துக்கொள்ளுகிறான்.”—கலாப சுருதி. “பரனும், பிரகிருதியும் தேசத்தாலும் எங்கும் சமமாக வியாபித்திருக்கின்றன. அவ்விருவர்களுடைய சேர்க்கையால் புருஷர்கள் உண்டாகிறார்கள்.”—கௌடரவ்ய சுருதி.

33. புத்திசாலிகள் மேற்காட்டியபடியுள்ள உம்முடைய மாயையை அறிந்து ஸம்ஸாரத்தை நிவர்த்திப்பவரான உம்மிடத்தில் மனத்தைச் செலுத்துகிறார்கள். உம்மை உபாஸிக்கிறவர்களுக்கு ஸம்ஸார பயம் எப்படி உண்டாகும்? (உண்டாகாதென்று தாத்பரியம்) குளிர்காலம், மழைக்காலம், கோடைக்காலமென்ற மூன்று அவயவங்களுள்ள உம்முடைய புருவ நெறித்தலாகிய காலமானது உம்மைச் சரணமடையாதவர்களுக்கு இறப்புப் பிறப்பாகிய ஸம்ஸாரத்தை உண்டுபண்ணுகிறது.

விஜயத்வஜீயம்—

த்வயி தத ஓ ததோ'திவிசேஷ்ய நாமரூபாணாம் ஸுரசே-
ஶாதிமுகாபி தைச்வர்ய குணா மதுநிதாவிவ புஷ்பரஸா: | ந்ரு-
ஷு தவ மாயயா ப்ரமமமீஷ்வவகத்ய ப்ருசம் த்வயி ஸுதியோ'ப
வே ததி பாவமநுப்ரபவம் | கதமநுவர்ததாம் பவ
பயம் தவ யத்ப்ருகுடி: ஸ்ருஜதி முஹுஸ்த்ரிணேமிரபவச்சரணேஷு பயம் || || ௩௩ ||

ஓ சகல ஜகத்திற்கும் பிதாவாக இருப்பவரே! ஆனந்தத்தால் நிறைந்தவரே! எல்லாவற்றிலும் மேலானவரே! (மூலத்திலிருக்கும் த.தோ. என்ற பதத்தை 'தத' ஓ என்று பிரித்துக்கொள்ளவும். அ உ இரண்டும் சேர்ந்தால் ஓ என்று ஆகிறது. அதனால் மேற்காட்டிய அர்த்தம் ஏற்பட்டது) இந்திரன் முதலிய தேவர்களுடைய பெயருக்குப் பொருளாயுள்ள ஐசுவரியம் முதலிய குணங்கள் யாவும் மதுவின் ஸமுத்திரத்தில் புஷ்ப ரசங்கள்போல உம்மிடத்தில் லயித்திருக்கின்றனவென்றும், எல்லாவற்றையும் காட்டிலும் பரமாத்மா மேலான குணமுள்ளவரென்றும் மனிதர்களில் புத்திசாலிகளான ஜனங்கள் தெரிந்துகொள்ளுகிறார்கள். "பரனுக்கும் ஜீவனுக்குமுள்ள பேதம் ஆதியற்றது, அந்தமற்றது. இது சுயமாகவும் நசிக்கிறதில்லை; பிறராலும் நசிக்கிறதில்லை. இப்படித் தெரிந்துகொண்டவர்களுக்கு ஸ்ரீ மகாவிஷ்ணு அதிக ஜன்மங்களைக் கொடுக்கிறதில்லை." ஸ்மிருதி. ஆனதால் உம்மை ஆசிரயித்தவர்களுக்கு உம்முடைய புருவமானது பயத்தை உண்டுபண்ணுகிறதில்லை. (பயத்தை நிவர்த்திக்கிறதென்று தாத்பரியம்)

34. எவர்கள் ஆசாரியனுடைய பாதத்தை உபாஸியாமல், இந்திரியங்களையும் பிராணனையும் ஜயித்து அடக்க

முடியாத மனமாகிய குதிரையை அடக்க முயற்சிக்கிறார்களோ, அவர்கள் ஓடக்காரனில்லாமல் சமுத்திரத்தில் கஷ்டப்படும் கப்பல் வியாபாரிகள் போல இந்த ஸம்ஸார சமுத்திரத்தில் கஷ்டப்படுவார்கள். (முன் சுலோகத்தில் காட்டியபடி மனதைப் பகவானிடத்தில் செலுத்தவேண்டுமானால் மனம் அலையாமல் ஒருவகைப்படவேண்டும். அது குருவை உபாஸித்தால்தான கிடைக்குமென்று இந்த சுலோகத்தில் காட்டப்பட்டது.)

விஜயத்வஜீயத்தில்-

ஜ.ஊஹவஜ்ரணைஷாஸ ஜ_த ஹாவொஜி_த ஹரூவஷீ
கஸர யாஹிராஷா_த்த ஊஹ_த்தாரபெளஃ। யஊஹய_தஜ்ரு_ந
தி்ஶொம ஊவாயவிஷொவ்யஸநஶ_தாஸ்தி_தார ஊவஹாய
ஹரொரஸ்தரணிழ ॥ ॥ ௩௪ ॥

எந்த விவேகிகள் உம்மைப் பூஜிக்கத்தக்க யோக்கியதை உள்ளவர்களோ, அவர்கள் இந்திரியம், பிராணன் ஆகிய ஸாரதி, குதிரை இவைகளால் மிக்க சபல சுபாவமுள்ள புத்தியை, பயனை விரும்பாமலிருக்கச் செய்ய முயற்சித்து மேலாக ஜீவிக்கிறார்கள். அவர்கள் அநேக துக்க சமுத்திரத்தைத் தாண்டுவிப்பதான குருவின் பாதத்தை ஆசிரயித்தே அப்படிப்பட்ட பயனையடைகிறார்கள்.

35. பரமானந்த சுரூபியான நீர் இருக்கும்பொழுது பந்துக்கள், புத்திரன், தேகம், களத்திரம், பணம், வீடு, பூமி இவைகளில் ஆசை வைத்து சொற்பசுகத்தை விரும்பும் மனிதர்களுக்கு என்ன சுகம் கிடைக்கப்போகிறது? ஒரு வித சுகமுமில்லை. ஆனதால் உம்மையே உபாஸிக்கவேண்டும் என்பதை அறியாமல், ஸ்திரீ சுகத்தில் ஆசைப்பட்டு, அநித்யமும் ஸாரமற்றதுமான ஸம்ஸாரத்தில் மூழ்கியிருப்பவர்களை எதுதான் சுகப்படுத்தும்?

விஜயத்வஜீயம்—

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

எவனுக்குத தேவரிடத்தில் மிக்க பக்தியும், அதுபோல குருவினிடத்திலும் முக்கிய பக்தியிருக்கிறதோ, அந்த மகாத்மாவிற்கு விஷயங்கள் பிரகாசிக்கின்றன. அடைவதற்கு ஆசாரியனுடைய வேறு சாதனம் ஒன்றுமில்லை. ஆசாரியனுடைய உபதேசத்தால் ஸ்ரீ மகாவிஷ்ணுவை அடைவான். சம்சயமில்லை" என்ற சுருதி ஸ்மிருதியின் அர்த்தங் காட்டப்பட்டது.

36. மகரிஷிகள் உம்முடைய பாதாரவிந்தத்தை ஹிருதயத்தில் தியானஞ்செய்து, அகங்காரமற்றவர்களாகி, பாபத்தை நிவர்த்திக்கும் பாத ஜலமுள்ளவர்களாலும், பூமியிலுள்ள பல புண்ணிய தீர்த்தங்களுக்கும் க்ஷேத்திரங்களுக்கும் செல்லுகிறார்கள் (பெரியோர்களுடைய சேர்க்கை உண்டாகுமென்று).புருஷர்களுடைய விவேகத்தை மாற்றும் கிருகம் முதலிய சுகத்தை விரும்புகிறதில்லை. ஒரு தடவை உம்மைத் தியானிப்பவர்களும் விஷயத்தில் ஆசையை யொழித்துவிடுகிறார்கள். அப்படியிருக்க, மகரிஷிகள் ஒழிக்கிறார்களென்பதில் என்ன சந்தேகம்?

வீரராகவீயம்— தீர்த்தங்களையும் பரிசுத்தப்படுத்துவதற்காகச் சஞ்சரிக்கிறார்கள்.

விஜயத்வஜீயம்—

[illegible]
[illegible]

புண்யதீர்த்தஸதநாந்ருஷயோ நிவிஶந்த்யத ஸ்வாந்த
பவத: பதாம்புஜம் ஹ்ருதாவஹிதந்யதி । ஸக்ருந்ந
ஸ்மயிவிஷாத்ருநி நித்யஸுகே ந புநருபாஸதே பு
ருஷஸார ஹராவஸதாந் ॥ । ॥ ௩௫ ॥

*பிர்மத்தை அறியாமல் ஸ்திரீசுகத்தில் ஆசை கொண்டு சஞ்சரிப்பவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுத்து யார் சுகப் படுத்துவான்? ஆனதால் பரிசுத்தியை யுண்டுபண்ணும் சாஸ்திரங்களை ஆசிரயித்த தேவர் முதலியவர்கள் பாபத்தை நிவர்த்திக்கும் உம்முடைய பாதத்தை ஹிருதயத்தில் ஸ்தாபிக்கிறார்கள். நித்யசுரூபியும், சித்சுரூபியுமான உம்மிடத்தில் மனதைச் செலுத்துகிறார்கள். ஓ புருஷோத்தம! அகங்காரத்தை அடைகிறதில்லை.*

37. *ஸத்தாகிய பிர்மத்தினிடமிருந்து உண்டான ஜகத்தும் ஸத்தாகவே இருக்கவேண்டும். (எதனிடத்தி லிருந்து எது உண்டாயிற்றோ, அது அதன் சுரூபமேயாம். சுவர்ணத்திலிருந்து உண்டான வளை முதலியவை சுவர்ண மாகக் காணப்படுகின்றன) என்றால் காரணம் விருத்தமாக இருக்கிறது. (இரண்டும் ஒன்று என்று அபேதத்தைச் சொல்லவில்லை. பேதமில்லை யென்பதைச் சொல்லுகிறோ மென்றால், அதுவும் அபேதமென்றுதான் ஏற்படுகிறது.) சில இடத்தில் மாறுதலாகவும் காணப்படுகிறது. (பிதாவி னிடத்திலிருந்து உண்டான புத்திரன் பிதாவைவிட வேறாக இருக்கிறான், உலக்கையால் குடத்தை உடைத்தால் அதன் அபாவமும் உலக்கையும் ஒன்றாக ஆகுமா?) அதிலிருந்து உண்டானதென்றால் அதை உபாதான காரணமாகக் கொண் டது என்று அர்த்தங் கொள்ளவேண்டும். புத்திரனுக்குப் பிதா நிமித்த காரணமேயொழிய உபாதான காரணமல்ல வென்றாலும் சிலவிடத்தில் மித்யையாக இருக்கிறது,*

(கயிற்றை சர்ப்பம் என்று நினைக்குமிடத்தில் அசைவது, கோணல் முதலிய குணங்களை உபாதான காரணமாகக் கொண்ட குணமாக இருக்கவில்லை.) அவித்தையுடன் கூடிய உபாதான காரணமென்று சொல்வதும் பொருந்தாது. அப்படிப்பட்டது வஸ்துவல்ல ஆனதால் ஜகத் உண்மையில் ஸத்திய வஸ்துவல்ல. ஆனாலும் வியவகாரத்துக்காகப் பிர்ம்மமானது உபயோகப்படுகிறது. (ஒரு இடத்திலிருக்கும் வஸ்துவை மற்றொரு இடத்தில் ஆரோபித்தால் அது பிர்ம்ம மென்று லோகப்பிரஸித்தம். இல்லாததான வஸ்துவைப் பிர்ம்மமென்று எப்படிச் சொல்லக்கூடும் என்றால்) அந்த பரம்பரா நியாயத்தால் இந்தப் பிர்ம்மம் ஏற்பட்டிருக்கிறது. (வஸ்து இருப்பதுபோல் தோன்றும் ஸம்ஸ்காரத்தால் பிர்ம்மம் உண்டாகலாம். உண்மையில் வஸ்து இருக்க வேண்டுமென்ற நியமமில்லை. ஆனதால் பிர்ம்மமானது அநாதி. அதனால அந்தப் பரம்பரா நியாயத்தை அனுசரித்து ஜகத் இருப்பதாக வியவகாரம் உண்டாகிறது. ஜகத்தானது வேதத்தால் சொல்லப்பட்டதாகையால் அதனை இல்லை என்று எப்படிச் சொல்லலாம் என்றால் ஓ பகவன்! உம் முடைய வாக்காகிய வேதமானது கர்மத்தில் சிரத்தையுள்ள மந்த புத்திகளான ஜனங்களைக் கௌண விருத்தி, லக்ஷணா விருத்தி முதலிய விருத்திகளால் பிரமிக்கச் செய்கிறது. (சாதுர்மாஸ்ய யாகம் செய்தவனுக்கு அதனுடைய பயன் குறையாதது என்று ஒரு சுருதியில் சொல்லப்பட்டிருந் தாலும், கர்மத்தால் சம்பாதிக்கப்பட்ட பலமானது குன்று கிறதென்று மற்றொரு சுருதி சொல்லுகிறபடியால் முன் காட்டிய சுருதி அதன் மேன்மையைச் சொல்லிற்று என்று தாத்பரியம்.)

வீரராகவீயத்தில்— 'ஸத்தாயிருக்கிற பரப்பிர்ம்மத்தி னிடத்திலிருந்து உண்டான இந்த ஜகத்தும் ஸத்தியமாகத்

தானிருக்கவேண்டும் என்று சொல்வது யுக்தி விரோதமாகை யால் பொருந்ாது' என்று சொல்வது சரியல்ல. அது ஒரு இடத்திலும் விபசாரதை அடைகிறதில்லை. ஒரு இடத்திலும் பொய்யாக ஆகிறதில்லை. ஸத்வ விலக்ஷண மாகிய இரண்டு தர்மங்களுள்ள திரவியமாகவும் இல்லை. பிரம்மமானது வியவகாரத்திற்கு உபயோகப்படுகிறது. கர்மங்களில் சிரத்தையுள்ளவர்களை உம்முடைய வாக்காகிய வேதமானது பிரமிக்கச் செய்கிறது.

விஜயத்வஜீயம்—

[illegible] || [illegible] ||

இந்த ஜகத்திற்கு விஷ்ணு அதிபதியேயொழிய ஜீவன் அதிபதியல்ல. "இதற்கு என்னைக் காட்டிலும் வேறொரு வனும் அதிபதியல்ல. சேதனனாக இருப்பதால்" என்ற தர்க்கம் சிலவிடத்தில் வியபிசரிக்கிறது; சிலவிடத்தில் பொய்யாக இருக்கிறது. (ஜீவனும் ஈசுவரனும், வெயிலும் நிழலும் போல விருத்த தர்மங்களுள்ளவர்கள். அதனால் அவ்விருவர்களும் வேறு என்று தாத்பரியம்,) எல்லாச் சரீரங்களிலும் சுக துக்கங்களை அனுபவிப்பதால் சரீரத்தின் பரிணாமமே ஜீவன்" என்ற க்ஷபணக மதத்தில் சொல்லப் பட்ட யுக்தியும் பொய்யாக இருக்கிறது அணுவாகிய சரீரத்திலிருந்த ஜீவன் கர்ம வசத்தால் யானைச் சரீரத்தை அடைந்ததால் விகாரமுள்ளவனாகி விடுவான். ஆனதால் மேற்காட்டிய யுக்தி பொய்யாக ஆகிறது, தர்க்கங்கள் தோஷமுள்ளவையாக இருப்பதால் அவைகள் மூடர் களுடைய புத்திக்குப் பிரமத்தை உண்டுபண்ணுகின்றன.

இப்படி வேதத்திற்கு விரோதமாய்ச் சொல்வது அந்தப் பரம்பரையாக வந்திருக்கிறது. உம்முடைய பலவித குணங்களையும் கர்மங்களையும் நிரூபிப்பதில் வேகமுள்ள வேதம் பலவிதமாகச் சொல்லி வேதத்தின் உண்மையான தாத்பரியத்தை அறியாத மூடர்களை பிரமிக்கச்செய்கிறது.

38. முன் சுலோகத்தில் ஜகத் ஸத்யமென்பதற்கு ஸாதகமான யுக்தியில்லையென்று சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் ஜகத் ஸத்யமென்பதற்குப் பாதகமான யுக்திகள் காட்டப்படுகின்றன. சிருஷ்டிக்குமுன் இந்த ஜகத் இல்லை. "சிருஷ்டிக்குமுன் ஸத்தாகிய பிரம்மமே இருந்தது." சிருஷ்டிக்கு முன் இந்த ஜகத் ஆத்மாவாகவே இருந்தது."— சுருதிகள். பிரளயத்திற்குப் பின் இருக்கப்போகிறதில்லை. ஆனதால் கேவல ஆத்மாவாகிய உம்மிடத்தில் தோன்றும் இந்த ஜகத்தானது மித்யையேயாம். (முற்காலத்திலும், பிற்காலத்திலும் எது இல்லையோ, அது மத்திய காலத்திலும் இல்லையென்று தாத்பரியம்) அதனால் வேதங்கள் திரவியங்களுடைய பேதங்களுள்ள மார்க்கத்துடன் உம்மைச் சமமாக நிரூபிக்கின்றன. (மண் முதலிய திரவியங்களின் விகாரங்கள் குடம் முதலியவை. அவைகளின் குடமென்ற பெயர், அதன் உருவம் ஆகிய இவை ஸத்தியமல்ல. காரணமாகிய மண் எனபதே ஸத்யம். அதுபோல் பிரஹ்மமே ஸத்ய வஸ்து; ஆகாயம் முதலியவை அநித்யமென்று வேதங்கள் சொல்லுகின்றனவென்று தாத்பரியம்.) ஆனதால் பொய்யான ஜகத்தை ஸத்யமென்று நினைப்பவர்கள் மூடர்கள்.

வீரராகவீயம்:—"சிருஷ்டிக்கு முற்காலத்தில் இந்த ஜகத்தில்லை; பிரளயத்திற்குப் பிற்காலத்திலும் இல்லை. ஆனதால் மத்திய காலத்தில் உம்மிடத்தில் தோன்றுவது மித்யை. ஆனதால் மண் முதலிய திரவியங்களுடைய விகாரங்களாகிய குடம் முதலியவைகளுடைய பெயர், உரு

வங்கள் எப்படி அநித்யமோ (வியவகாரத்திற்கு மாத்திரம் உபயோகமோ), காரணமாகிய மண் என்பது மாத்திரம் நித்யமோ, அப்படியே காரணமாகிய பிரம்மம் நித்தியம். ஜகத் அநித்யமென்று வேதங்கள் உம்மைப்பற்றிச் சொல்லுகின்றன" என்று சொல்வது பொருந்தாது. அந்த வேதத்தின் உண்மையான அர்த்தத்தை அறியாத மூடர்கள் மேற்காட்டிய வண்ணம் ஜகத் பொய் என்று சொல்லுகிறார்கள், ('அந்த வேத வாக்கியத்தால் காரியம் பொய்யென்றும்' காரணம் ஸத்யமென்றும் சொல்லப்படவில்லை. காரியம் காரணத்தைவிட வேறல்ல என்று மாத்திரம் சொல்லப்படுகிறது என்று தாத்பரியம்.)

விஜயத்வஜீயத்தில்—

ந யதிதமக்ர ஆஸ ந பவிஷ்யததோ நிதநாத் அநுமிதமந்தரா த்வயி விபாதி ம்ருஷைகரஸே । அத உபமீயதே த்ரவிணஜாதி விகல்பபதைர் விததமநோவிலாஸம்ருதமித்யவயந்த்யபுதா: ॥ ॥ ௫௮ ॥

ஜீவனை ஈசுவரனுகச் சொல்வதற்குப் பாதகமான யுக்திகள் காட்டப்படுகின்றன. ஜீவர்கள் கர்ப்பத்திலிருக்கும் பொழுது (உண்டாவதற்குமுன்) ஈசுவரனுக இருந்ததில்லை. பிந்திய காலத்திலும் ஈசுவரனுக இருக்கப்போகிறதில்லை. ஆனதால் மத்தியிலும் (ஜனன மரணத்திற்கு) ஜீவனை ஈசுவரனென்று சொல்லமுடியாது. ஜீவன் உத்தமனென்றும், பணக்காரனென்றும், நல்ல குலத்தில் பிறந்தவனென்றும் மூடர்கள் பிரமித்துச் சொல்லுகிறார்களே யொழிய உண்மையில் வித்வான்கள் மேற்காட்டிய உத்தம குணங்கள் ஈசுவரனுகிய உம்முடையவைகளென்றும் ஔபசாரிகமாக ஜீவனிடத்தில் சொல்லப்படுகின்றன. அப்படிச் சொல்வுதற்கும் நீரே காரணமென்றும் தெரிந்துகொள்கிறார்கள்.

39. ஜகத் உண்மையில்லாவிடில் சேதனனுக்கு அதன் சம்பந்தம் ஏற்பட நியாயமில்லை. ஆனதால் ஜீவன் ஸம்ஸாரி யென்றும், ஈசுவரன் நித்யமுக்தனென்றும் சொல்வது எப்படிப் பொருந்தும்? கர்ம காண்டத்தின் அர்த்தமென்ன வென்றால், அந்த ஜீவன் எப்பொழுது மாயையுடன் அவித்தையை ஆசிரயிக்கிறானே அப்பொழுது தேகம் இந்திரியம் முதலியவைகளை ஆத்மாவென்று நினைத்து அதனுடைய தர்மங்களையும் அடைந்து, இயற்கையான ஆனந்தம் முதலிய குணங்களை மறந்து ஸம்ஸாரத்தை அடைகிறான். (கர்ம காண்டம் அதைச் சொல்லுகிறதென்று கருத்து) ஸர்ப்பமானது தோலை விட்டுவிடுவதுபோல நீர் அந்த மாயையை விட்டுவிடுகிறீர். மேலும் நீர் சகல ஐசுவரியங்களையும் எப்பொழுதும் அடைந்தவர்; எட்டு மகா விபூதி களிலிருந்து பிரகாசிக்கிறீர்.

வீரராகவவீயம்—அந்த ஜீவன் உம்முடைய மாயையால் மோகித்து, பிரகிருதிபரிணாமசுரூபமான தேவ சரீரம் முதலிய விஷயங்களை அநுபவித்துக்கொண்டு தேகத்தில் அபிமானத்தை அடைகிறான். அதனால் ஜனன மரணம் முதலிய ஸம்ஸாரத்தை அடைகிறான். ஞானம், ஐசுவரியம் இவைகள் மறைக்கப்படுகின்றன. நீர் இயற்கையில் சகல ஐசுவரியங்களை அடைந்தவர்; அணிமா முதலிய விபூதி களுள்ளவர்; அதனால் மாயைக்கு வசப்படுகிறதில்லை. (ஜீவன் மாயைக்கு வசப்பட்டவன்; பரமாத்மா மாயைக்கு சுவாதீனனல்ல. இதுவே இவ்விருவர்களுக்குமுள்ள பேதமென்று கருத்து.)

விஜயத்வஜீயம்—

ஸ யத³ஜயா த்வஜாமநுஶயீத கு³ணாம்ஶ்ச ஜுஷந்
ப⁴ஜதி ஸரூபதாம் தத³நு ம்ருத்யுமபேதப⁴க³꞉ ।
த்வமுத ஜஹாஸி தாமஹிரிவ த்வசமாத்தப⁴கோ³
மஹஸி மஹீயஸே(அ)ஷ்டகு³ணிதே(அ)பரிமேயப⁴க³꞉ ॥௩௯

புருஷன் சுருதியில் சொல்லப்பட்ட உம்முடைய குணங்களை ஸ்மரிக்கிறான். அதன் பின் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறான். அதன் பின் ஸாயுஜ்யம், ஸாரூப்யம், ஸாலோக்யம் என்ற முக்தியை அடைகிறான். பரமனாகிய உம்மால் அபகரிக்கப்பெற்ற சக்தியுள்ள மாயையை விடுவது மன்னியில நாசஞ்செய்கிறான். அதுவும் உம்முடைய சக்தியேயாம். மேலும், அசுரர்களை மோகிக்கச் செய்வதற்குப் பரமசிவன் முதலியவர்களைப் பூஜிக்கிறீர். மற்ற தேவர்களால் பூஜிக்கப்படுகிறீர்.

40. வெளியிலிருக்கும் விஷயங்களில் ஆசையையொழித்து, பகவானை உபாஸிப்பவர்களானாலும் எவர்கள் ஹிருதயத்திலிருக்கும் அஞ்ஞான வாஸனையின் மூலத்தை நாசஞ்செய்ய வில்லையோ, அவர்களுடைய ஹிருதயத்தில் நீர் இருந்தாலும் அவர்களால் உம்மை அடைய முடியாது. கழுத்தில் ரத்ன ஹாரமிருந்தாலும் அதனை மறந்தவனுக்கு அவன் சமானனாவான். யோகிகளென்ற பெயர் வைத்துக்கொண்டு இந்திரியங்களைத் திருப்திசெய்து வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு ஸம்ஸாரம் நிவர்த்தியடையாததால் இவ்வுலகத்தில் சுகமில்லை. ஈசுவர பதத்தை அடையாததால் மேலுலகத்திலும் சுகமில்லை.

விஜயத்வஜீயத்தில் :—

யதி நவைராக்யவந்தி யதயோ விஷ்ணுப்ரஸாதஜா
ஜ்ஞாநயோகோஸதாம் ஹ்ருதி ஸம்ஸ்த்ருதகண்டமணி:।
த்வந்த்வயோகிநாமேயோ ஸ்மரண
நமதாநுகா நதியோவராந்வத: ॥ ॥ சய ॥

யதிகளானாலும், எவர்கள் விஷயங்களில் ஆசைகொண்டு ஸம்ஸாரத்தில் நிவர்த்தியடையவில்லையோ, அவர்களால்

உம்மை அறியமுடியாது. கழுத்தில் ஹாரமிருப்பதான ஞாபகமில்லாத புருஷன் கழுத்தில் ஹாரமிருந்தாலும் அதனை எப்படி அறியமாட்டானோ, அதுபோல மேற்காட்டியவர்கள் ஈசுவரனை அடைகிறதில்லை. நிவிருத்தி மார்க்கத்தை அடைந்த யோகிகளுக்கு அபயத்தைக் கொடுத்து, காலம் முதலியவைகளிடமிருந்துக் காப்பாற்றுகிறீர்.

41. ஆறு வகையான குணங்களுள்ளவரே! உம்முடைய சுரூப ஞானமுள்ளவன் உம்மிடமிருந்து உண்டான புண்ணிய பாபங்களின் பயனாகிய சுக துக்கங்களில் சம்பந்தப்படுகிறதில்லை. அப்பொழுது தேகாபிமானிகளைக் கட்டுப்படுத்தக்கூடிய விதி நிஷேதங்கள் அவனிடத்தில் சம்பந்திக்கிறதில்லை. ஒவ்வொரு யுகத்திலும் ஏற்படுத்தப்பட்ட சம்பிரதாயப்படி உம்முடைய சரிதங்களைச் சிரவணஞ்செய்து, உம்மை மனத்தில் தியானஞ் செய்வதால் அவனுக்கு மோக்ஷமாகிய கதியாக இருக்கிறீர்.

வீரராகவீயம்— இந்த ஸம்ஸாரத்தில் பகவானாகிய உம்மையறிந்தவன் பயனைக் கொடுக்க சித்தமாக இருக்கும் புண்ய பாபங்களுடைய பயனாகிய சுகதுக்கங்களில் சம்பந்தப்படமாட்டான். அந்த அவஸ்தையில் பிறருடைய நிந்தைகளையாவது, ஸ்தோத்திரத்தையாவது அவன் கவனிக்கமாட்டான். அப்படிப்பட்டவனுக்கு நீர் மோக்ஷத்தைக் கொடுக்கிறீர். (பரலோகத்தில் சுகத்தை அடைகிறானென்று சொல்லப்பட்டது.) இவ்வுலகத்திலும் உம்முடைய பக்தர்களுடன் அளவற்ற கல்யாண குணங்களுள்ள உம்முடைய கதாமிருதத்தைக் கேட்டு சுகத்தை அடைகிறான்.

விஜயத்வஜீயம்—

[illegible]
[illegible] ॥ ௪௧ ॥

சகல பிராணிகளுடைய வாக்கு முதலிய இந்திரியங்கள் நித்யமுக்தரான மஹாவிஷ்ணு, அவருக்கு சுவாதீனப்பட்டவளான ஸ்ரீதேவி ஆகிய இவர்களை அடையவில்லை. இந்த யோகிகளால் எவர்களுக்கு ஞானம் உபதேசிக்கப்படுகிறதோ, அவர்களுடைய இந்திரியங்கள் விஷ்ணுவை அடையும். உமிக்குள் இருக்கும் அரிசி தூசியை அடையாததுபோல் ரஜோகுணமுள்ள மனிதர்கள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை அடையார்கள்.

42. ஓ பகவன்! பிர்ம்மா முதலியவர்களும் உம்முடைய மகாத்மியம் முழுவதையும் அறியவில்லை. நீர் அனந்தரானதால் உம்முடைய மகிமையை நீரும் அறியவில்லை. ஏழு ஆவரணங்களுள்ள அண்டங்கள் ஒரேகாலத்தில் காலத்தால் உமக்குள் சுற்றுகின்றன. அது ஆகாயத்தில் தூளி சுற்றுவதுபோலிருக்கிறது. அதனால் சகல வேதங்களும் அனாத்மாவை நிஷேதித்து, உம்மையே சொல்லுகின்றன. (வேதம் பரமாத்மாவை விதி முகமாகச் சொல்லவில்லை; நிஷேத முகமாகச் சொல்லுகிறதென்று காட்டப்பட்டது.)

வீரராகவீயம்— இப்படி வேதங்கள் பகவானை ஸ்தோத்திரஞ் செய்து, உம்முடைய மகிமை அளவற்றதானதால் முழுவதையும் எங்களால் சொல்லமுடியாதென்று முடிக்கின்றன. பிர்ம்மா முதலிய தேவர்களும் உம்முடைய மகிமையின் கோடியை அடையவில்லை. (மனிதர்களால் அறிய

முடியுமாவென்று கருத்து.) உம்முடைய சுரூபம் மகிமை இவைகள் காலத்தாலும், தேசத்தாலும் அளவிடக்கூடா தானதால் உம்மாலேயே அறியமுடியாது. உம்முடைய ஒவ்வொரு மயிர்க்காலிலும் ஏழு ஆவரணங்களுள்ள அநேக பிர்மாண்டங்கள், ஆகாயத்தில் தூளிகள் பட்சிகளுடன் சஞ்சரிப்பதுபோலச் சஞ்சரிக்கின்றன. ஆனதால் உமக்கு ஸஜாதீயமான வஸ்து ஒன்றுமில்லையென்று வேதங்கள் சொல்லி, உம்மைத் தாத்பரியவிருத்தியால் சொல்லுகின்றன.

43—50. இப்படி ஆத்ம தத்வத்தை ஸனந்தனர் முகமாக பிர்ம்மதேவருடைய புத்திரர்களான ஸித்தர்கள் கேட்டுத் தெரிந்துகொண்டு ஸனந்தனரைப் பூஜித்தார்கள். ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களும், மகாத்மாக்களுமான ஸனகர் முதலியவர்களால் சகல சுருதி, ஸ்மிருதி, புராணம், இதிஹாஸம் இவைகளின் ரகஸ்யமானது எடுக்கப்பட்டது. பிர்ம்மதேவருடைய புத்திரராகிய நீரும் சகல காமங்களையும் நிவர்த்திக்கும் இதனை சிரத்தையுடன் மனத்தில் வைத்துக் கொண்டு, லோகங்களில் சஞ்சரியும். (பிர்ம்மதாயாத என்பதற்கு எளிதில் பிர்ம்மத்தை அடைந்தவர்) கேட்ட விஷயத்தை மனதில் தரிக்கும் சாமர்த்தியமுள்ளவரும், கிருதகிருத்தியரும், இந்திரியத்தை ஜயித்தவர்களின் விரதம் போன்ற விரதமுள்ளவருமான நாரதர், குருவாகிய நாராயண மகரிஷியால் சொல்லப்பட்டதைக் கேட்டு, அவரை நோக்கி "சுத்தமான கீர்த்தியுள்ள பகவானாகிய அந்தக் கிருஷ்ணனை நமஸ்கரிக்கிறேன். அந்தப் பகவான் சகல பிராணிகளுக்கும் அபயத்தைக் கொடுப்பதற்காக அம்சாவதாரத்தை அடைகிறார். சகல பிராணிகளுக்கும் மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகச் சுத்தமான வித்தைகளைத் தரிப்பவரும், அவைகளை அபேக்ஷித்தவர்களுக்கு உபதேசித்து சுகப்படுத்துகிறவருமான உம்மை நமஸ்கரிக்கிறேன்" என்று அவரிடத்திலும்,

சுத்த சித்தர்களான அவருடைய சிஷ்யர்களிடத்திலும் விடைபெற்று, என்னுடைய பிதாவாகிய வியாஸருடைய ஆசிரமஞ் சென்றார். அவ்விடத்தில் பகவானாகிய வியாஸர் ஆசனங்கொடுத்து நாரதரைப் பூஜித்தார். நாரதர் ஆசனத்தில் உட்கார்ந்து நாராயண மகரிஷியின்முகமாகக் கேட்டபடி சொன்னார். ஓ அரசனே ! நீர் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லப்பட்டது. இதனைத் தெரிந்துகொண்டால பிர்ம்மம் குறிப்பிட முடியாததாலும், குணங்களற்றதாலும் அதை வேதங்கள் நிரூபிக்கின்றனவென்று ஸம்சயமில்லாமல் தாள்வான்.

51. எவர் இந்த சகல லோகங்களுக்கும் சிருஷ்டி பரிபாலனம், ஸம்ஹாரம் இவைகளைப்பற்றி ஆலோசிப்பவரோ, (ஜகத்திற்கு நிமித்த காரணமென்று காட்டப்பட்டது) எவர் இந்த ஜகத்தைப் படைப்பது, பரிபாலிப்பது, ஸம்ஹரிப்பது இவைகளைச் செய்கிறாரோ(உபாதான காரணமென்று காட்டப்பட்டது) எவர் பிரகிருதி புருஷர்களுக்கும் காரணமோ, இந்த ஜகத்தைப் படைத்து அதில் ஜீவனுடன் பிரவேசித்து அந்தச் சரீரத்தை அவனுக்கு உபயோகஸ்தானமாகச் செய்து அவனைக் காப்பாற்றுகிறாரோ, எவரை அடைந்த ஜீவன் காரியம், காரணம் என்ற பேதமாகிய அவித்தையை விட்டுவிடுகிறானோ, தூங்குகிறவன் சரீரத்தை விட்டுவிடுகிறானல்லவா (தூங்குகிறவனுக்குத் தேகமிருப்பதாக மற்றவர்கள் பார்க்கிறார்களேயொழிய அவன் தான் சரீரமுள்ளவனென்று எப்படி நினைக்கவில்லையோ, அப்படி ஜீவன் முக்தனுக்குச் சரீரமிருந்தாலும் அவனுக்கு அதில் அபிமானமில்லையென்று கருத்து) அப்படிப்பட்ட ஈசுவரனும் சுரூபமாக இருப்பதால் மாயையைத் திரஸ்கரித்தவரும், சகல பயத்தையும் நிவர்த்திப்பவருமான ஸ்ரீ ஹரியை எப்பொழுதும் தியானஞ் செய்யவேண்டும்.